# துளியும் கடலும்

அம்ரித்லால் நாகர்
தமிழாக்கம்
துளசி ஜெயராமன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
புதுடில்லி

1976 (1898)



விலை ரூ. 20-00

*Original Title*: BOOND AUR SAMUDRA (Hindi)
*Tamil Title*: THULIYUM KADALUM

விநியோகிப்பாளர்
பாரி நிலையம்
*59, பிராட்வே, சென்னை-600 001*

PUBLISHED BY THE DIRECTOR, NATIONAL BOOK TRUST, INDIA
A-5, GREEN PARK, NEW DELHI-110016 AND PRINTED AT
BHAGAT PRINTERS, 55, STATION ROAD, ALANDUR, MADRAS-600016

# முன்னுரை

கடந்த நூறு, நூற்றிருபத்தைந்து ஆண்டுகளுக்கிடையில் ஹிந்தி நாவல் இலக்கியம் பெரிதும் வளர்ச்சி அடைந்திருக்கிறது. இந்த வளர்ச்சி பலமுறையில் மிகவும் கவர்ச்சியுள்ளதாகவும், சிக்கல்கள் நிறைந்ததாகவும் அமைந்துள்ளது. துவக்ககாலத்து நாவல்களில் சமுதாயக் குறைபாடுகளைப் போக்குவதற்கான முயற்சிகளும், சமுதாயப் பெருமை உணர்வும் சித்திரிக்கப்பட்டன. ஸ்ரீநிவாச தாஸின், 'பரீக்ஷா குரு', கிசோரீலால் கோஸ்வாமியின் 'திரிவேணி' 'ஸ்வரக்கீய குசும்' என்ற நாவல்கள், ராதாகிருஷ்ணதாஸின் 'நிஸ்ஸஹாய ஹிந்து' முதலிய நாவல்களில் இந்தப்போக்குகளே, காணப்படுகின்றன. இவற்றோடு கூட, தேவகீநந்தன கத்ரி எழுதிய சில நாவல்களில் கற்பனை நிகழ்ச்சிகளும் மனிதசக்திக்கு அப்பாற் பட்ட நிகழ்ச்சிகளுமே காணப்பட்டன. ஹிந்தி நாவலின் வளர்ச்சிப் பாதையின் மூன்றாவது படியில் வீரம், காதல் என்ற இடைக் காலத்து உணர்வு தோய்ந்த மராட்டி, வங்காளி நாவல்களின் மொழிபெயர்ப்பு நாவல்களைச் சேர்க்கலாம். இவ்வாறான மொழி பெயர்ப்பு நாவல்களில் ராஜசிம்ஹன், சுவர்ணலதா, சுவர்ணபாயி, யுகலாங்குரீய, கபாலகுண்டலா போன்றவை முதலிடம் பெரு கின்றன.

பிரேம்சந்த் ஹிந்தி நாவலை மாயமந்திர உலகத்திலிருந்தும் காதல், வீரம் நிறைந்த அரசவாழ்வுச் சூழ்நிலையிலிருந்தும் அகற்றி இந்தியக் குடியானவர்களின் வயல்களையும், தானியக் கிடங்குகளை யும் சித்தரிக்கக்கூடிய முறையில் அமைத்தார். பிரேம்சந்த் ஹிந்தி நாவலுக்குச் சமுதாய அடிப்படையை அளித்தார். அதில் இன்னல் கள் நிறைந்த நிகழ்கால இந்திய வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் படிச் செய்தார். பிரேம் சந்த் ஒருவரே ஹிந்தி நாவலுக்கு இலக்கிய வடிவு அளித்தார் என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

மேலை நாட்டுப் பண்பாடு, நாகரீகம் முதலியவற்றோடு ஏற்பட்ட தொடர்பால் நமது அடிப்படை வாழ்க்கை பெரிதும் பாதிக்கப்பட லாயிற்று. மேலை நாட்டில் உள்ள உணர்வின் அடிப்படையில் அமைந்த நாவல்கள் வளர்ந்தன. ஹிந்தியிலும் ஜைனேந்திர 'அக்ஞேய' இருவரும் மனித உள்ளச்சிக்கல்களைச் சித்திரிக்க முயன் றனர். ஜைனேந்திரர், காந்தியின் கொள்கையிலிருந்து தனக்குள் ளேயே துன்பத்தை உணரும் கொள்கையை ஏற்றுக் கொண்டார்.

அவர் மேலே நாட்டிலிருந்து உணர்வுகளைச் சித்திரிக்கும் முறையைப் பின் பற்றினர். அதோடு தம் கருத்துப் போக்கை இணைத்து அவர் 'பரக்', 'தியாகபத்ர' என்ற நாவல்களை இயற்றினர். அக்ஞேயரின் நாவல் 'சேகர் ஏக்ஜீவனி' கடந்தகால நிகழ்ச்சிகளை இன்று நடப்பதுபோல் காட்டும் போக்கில் இயற்றப்படுவதும், ஆழ்ந்த உள்ள உணர்வுகளை உருக்கமாக வெளியிடும் நடையில் எழுதப் படுவதுமான நாவலுக்கு ஒரு சான்றாகும். இலாசந்திரஜோஷியின் நாவல்களில் உளநூலியலுக்குப் பெரிதும் இடம் கிடைத்தது. அவருடைய நாவல்களில், உள்ளச்சிக்கல்களையும் சிறப்பான உள்ள உணர்வுகளைச் சித்திரிக்கும் முறையையும் காணலாம்.

1936க்குப்பிறகு, முன்னேற்றப்போக்கு நிறைந்த எழுத்தாளர் களின் மாநாடு லக்னோவில் நடைபெற்ற பிறகு ஹிந்தி இலக்கியத் தில் முன்னேற்றப்போக்குக் காணப்படலாயிற்று. இந்தப் பாதையில் சிறந்த நாவலாசிரியராக அமைந்தவர் யஷ்பால். அவர் மார்க்ஸியக் கொள்கைகளால் தூண்டப்பட்டுச் சமுதாய வேற்று மைகளையும், பழமையான பரம்பரைகளையும் எதிர்க்கும் முறையில் பல நாவல்களை இயற்றினர். ராங்கேய ராகவ், அம்ருத்ராய் முதலியவர்களும் இந்தப் பாதையில் சிறந்த இடம் பெற்றார்கள்.

ஹிந்தியில் இந்தப் போக்குகளைத் தவிர, பல உயர்ந்த சரித்திர நாவல்களும் இயற்றப்பட்டன. பிருந்தாவன்லால் வர்மாவின் நாவல்கள் சரித்திரக் கதையுடனும், இடைக்காலத்து இந்தியாவின் கிராமியச் சூழ்நிலையுடனும் கலந்து வரலாற்றுப் புகழ்பெற்ற காதல் வாழ்வின் சிறந்த சான்றாக அமைந்தன. 'விராடாகீபத் மினி', 'கட்குண்டார்', 'மிருக நயனீ', 'ராணி லக்ஷ்மீபாயி' முதலிய நாவல்களால் ஹிந்தி உலகில் பிருந்தாவன்லால் வர்மா அவர் களுக்கு, குஜராத்தியில் முன்ஷிக்கும், தூமகேதுவுக்கும் கிடைத்த பெருமை கிடைத்தது, ராகுல் சாங்கிருத்யாயன் மார்க்ஸியக் கொள்கைகளைப்பின்பற்றி 'ஜய் யௌதேய', 'சிம்ஹசேனபதி' என்ற நாவல்களில் கடந்தகால வாழ்க்கையைச் சரித்திர வளர்ச்சி யின் கண்கொண்டு பார்க்க முயன்றார். பகவதீசரண் வர்மாவின் நாவல் 'சித்திரலேகா' தூய காதலுக்குச்சான்று என்றால், யஷ் பாலின் நாவல் 'திவ்யா' சரித்திரப்பார்வைக்கு எடுத்துக் காட்டாகும்.

1950-க்குப் பிறகு ஹிந்தி எழுத்துலகில் புதிய போக்குத் தோன்ற லாயிற்று. அப்பொழுது ஹிந்தியில் நாகார்ஜுன், பணீச்வரநாத் ரேணு, இருவரின் கிராமியப் போக்கு நாவல்கள் பெரிதும் புகழ் பெற்றன. உண்மையில் 1950 முதல் 1955 வரை ஹிந்திக் கதை இலக்கியத்தின் அடிப்படைப் போக்கே கிராமியத்தத்துவமாக அமைந்திருந்தது. நாகார்ஜுனின் 'பலசனமா'வும், ரேணுவின்

'மைலா ஆஞ்சலும்' மிதிலேயின் கிராமாந்திர வாழ்வை உளமுருக்கும் முறையில் சித்திரித்துள்ளன. கிராமிய நாவல்களின் போக்கு விரைவிலேயே மறைந்தது. ஏனென்றால், கிராமியத்தின் பெயரால் வாழ்வின் மேற்போக்கான விசித்திரமான போக்குகள் சித்தரிக்கப் படலாயின. இந்த நேரத்தில் மூன்று சிறந்த நாவல்கள் நமக்குக் கிடைத்தன. அவை யஷ்பாலின் 'ஜூடா ஸச்', நரேஷ் மேஹ்தாவின் 'வஹ் பத் பந்து தா', அக்ஞேயின் 'அப்னே அப்னே அஜ்நபீ' யாகும். தர்மவீர் பாரதியின் 'சூரஜ்கா சாத்வாங் கோடா'வின் நடைப்புதுமை, சிறப்பாகக் கருதப்படும். சென்ற ஐந்தாறு ஆண்டுகளில் ஹிந்தி நாவலிலக்கியத்தில் ஒரு புதுமாற்றம் தோன்றியுள்ளது. 'ஆதா கான்வ்', 'அலக் அலக் வைதரணீ', 'ராக் தர்பாரீ'—இவை பெரிதும் போற்றப்பட்டுள்ளன.

திரு அமிருத்லால் நாகர் புகழ்பெற்ற ஹிந்தி நாவலாசிரியர். அவர் தலைசிறந்த நாவலாசிரியர் மட்டுமன்றி மக்களால் பெரிதும் விரும்பப்படுபவருமாவார் என்பது அவருடைய பெருஞ்சிறப்பாகும். சாதாரண மக்களின் விருப்பத்துக்கு மதிப்புக் கொடுக்கப்படும் இந்த நாளில் கவர்ச்சி வாய்ந்த பிரசாரக் கருவிகள் கலையின் பெருமையை அழித்துவிடுகின்றன. ஆனால் நாகர் அவர்கள் துவக்கத்திலிருந்தே தம் நாவல்களில் கலைச்சிறப்பை அழியாமற்காக்கவும், முடிந்தவரையில் அவை அதிகமான எண்ணிக்கையில் படிப்போரைக் கவரக்கூடிய முறையிலும் அமைக்க முயன்று வந்திருக்கிறார். இவ்வாறு இரு கோட்பாடுகளை இணைத்துக் கொண்டு செல்வது மிகவும் ஆபத்தான போக்காகும். ஆனால் நாகர் அந்தப் போக்கை மேற்கொண்டார். அதில் அவர் பலமுறை வெற்றியும் அடைந்திருக்கிறார் எனலாம். நாகர் மனித வாழ்வின் உண்மை உருவத்திற்கு மதிப்பளித்து அந்த வாழ்விலுள்ள பல இன்ப துன்ப உணர்வுகளை அழகாக அமைத்து, அவற்றிற்கு நாவலின் உருவம் அளிப்பது அவருடைய இந்த வெற்றிக்குக் காரணம் என்று கூறலாம். அதனால் அவர் உள்ளதை உள்ளபடி கூறும் நாவலாசிரியர் என்றோ, அல்லது அவருடைய நாவல்களின் அடிப்படை உருவம் புகைப்படங்களின் சேர்க்கை போன்றது என்றோ கூறமுடியாது. நாகர், மனிதப் போக்குகளை நன்கு ஆராய்ந்து, மனிதர்களின் தனித்தன்மைக்கு உருவம் கொடுப்பதில் கைதேர்ந்தவர். அவருடைய நாவல்களில் மாந்தரின் பலவிதமான மனப்போக்குகள் உயிரோவியமாகச் சித்திரிக்கப் பெறாத பாத்திரத்தைக் காண முடியாது. அவருடைய சில பாத்திரங்கள் உயிரோவியங்களாக அமைந்து படிப்போரின் உள்ளங்களில் அழியாத இடம் பெற்றுவிடுகின்றன. அந்தப் பாத்திரங்கள் தற்காலத்திய வாழ்க்கையிலிருந்து மட்டும் எடுக்கப்பட்டன என்பதன்று; இந்த நாட்டின்

பரந்த வரலாற்றிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டனவாகும். அந்தப் பாத்திரங்களில் நாம் இனிமையான கதைகள் கூறி எல்லோரையும் மகிழச் செய்யும் பாத்திரமான சேட் பாங்கேமலை பார்க்கலாம். அதுமட்டுமன்றித் தமிழ் மகாகாவியமான 'சிலப்பதிகார'க் கதையின் அடிப்படையில் இயற்றப்பட்ட 'சுஹாக்கேநூரபுர்' என்ற நாவலின் பாத்திரங்களான கோவலன், கண்ணகி, மாதவி மூவரும் இரண்டு வேறுபட்ட காதல் தோய்ந்த விசித்திரமான வாழ்க்கைக்கு எடுத்துக் காட்டாக அமைந்துள்ளார்கள். பழைய வரலாற்றின் அடிப்படையில் அமைந்த 'ஏகதா நைமிஷாரண்யே' என்ற நாவல், கதை இலக்கியத்தின் பல உருவங்களை நம் கண் முன் கொணர்ந்து நிறுத்துகிறது. அங்கே நாம் சோமாஹூதி பார்கவ், இஜ்யா, சரயூவாசிஷ்டி என்ற பாத்திரங்களைப் பார்க்கிறோம். அந்தப் பாத்திரங்களின் போக்கில் வேள்விக் காலத்துப் பண்பின் ஒளி நிறைந்திருந்த போதிலும், பல வேறுபட்ட கோட்பாடுகளாலும், மதப் பிரிவுகளாலும் வேறுபட்ட இந்தியப் பண்பாட்டின் புதுமையான ஒருமைப்பாட்டை எடுத்துக் காட்ட முயலுவதாக நாம் அந்தப் பாத்திரங்களைக் காண்கிறோம். 'மானஸ் கா ஹன்ஸ்' என்ற நாவலில் அவர் துளசிதாசரின் வாழ்க்கைக்கு ஒரு புதுப் பொருளைக் கொடுத்திருக்கிறார். 'அம்ருத் அவுர் விஷ்' இரு கதைகளைக் கொண்ட நடையில் இயற்றப்பட்ட ஒரு நாவலாகும். அதில் லக்னோ நகரத்தின் வேறுபட்ட சமுதாயங்கள் நுணுக்கமாக ஆராயப்பட்டிருக்கின்றன. ஆனால் அதோடு ஆத்மாராம், ரத்தூசிங் புத்தோ குரு, மற்றும் வழி தவறிய இந்திய இளைஞர்களுக்கு எடுத்துக்காட்டான லச்சூ போன்ற பாத்திரங்களும் படைக்கப்பட்டிருக்கிறார்கள். அந்தப் பாத்திரங்கள் ஒருபுறம் தங்கள் சிறப்புகளாலும் குறைபாடுகளாலும் நம்முடன் ஒன்றி விடுகிறார்கள்; மறுபுறம் தனிப் பிரிவைச் சார்ந்த பாத்திரங்களாகவும் காணப்படுகிறார்கள். ஆகையால் அந்தப் பாத்திரங்கள் நமது இன்றையச் சூழ்நிலையில் பரந்துகிடக்கும் பலவிதத்துன்பங்களுக்கும், போராட்டங்களுக்கும், தோல்விகளுக்கும் எடுத்துக் காட்டாக அமைந்து விடுகிறார்கள்,

'பூந்த் அவுர் சமுத்ர' (துளியும் கடலும்) என்ற நாவல் நாகரின் தலைசிறந்த நாவலாகக் கருதப்படலாம். அவருடைய 'அம்ருத் அவுர் விஷ்' என்ற நாவல் பரிசுகள் பெற்றதால் பெரிதும் புகழ் பெற்றதாக இருந்த போதிலும், 'பூந்த் அவுர் சமுத்ர' (துளியும் கடலும்) என்ற நாவலில் வாழ்வில் ஒன்றுக்கொன்று முரணைக் காணப்படும் உள்ளத்துடிப்புகளை உணர்ந்து, ஆராய்ந்து எழுத்து வடிவத்தில் கொணர்ந்து நம்முன்னால் நிறுத்தும் உருக்கம் நிறைந்த சிறப்பு அமைந்துள்ளது போல் 'அம்ருத் அவுர் விஷ்' என்ற

நாவலில் காண முடியாது.

ஆய்வாளர்கள் 'துளியும் கடலும்' என்ற நாவலை, கலை இலக்கியப் போக்கில் அமைந்த நாவலெனக் கூறியுள்ளார்கள். நான் ஓரளவிற்கு இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்கிறேன். இந்த நாவலில் கலை இலக்கியத்தின் பெருமை செறிந்து காணப்படுகிறது. ஆனல் நாகர் ஒரே நடையில் தம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டு போகக் கூடியவரல்லர், பார்க்கப் போனல் இந்த நாவலில் லக்னோவின் நாற்சந்தி (சௌக்)க்கு அப்பாற்பட்ட பகுதியையும் காணலாம். கோமதிநதியின் கரையிலுள்ள பைத்தியக்கார விடுதியும் இதில் அடங்கியுள்ளது. சஜ்ஜனும் வனகன்யாவும் மதுராவையும் பிருந்தாவனத்தையும் சுற்றி வருகிறுர்கள்; கோவர்த்தன மலையில் காதலுரையாடவும் செய்கிறுர்கள். ஆனுலும் உண்மையைப் பார்க்கப்போனல் நாகர் நாவலுக்கு அடிப்படைக்களமாக சௌக்கையே ஏற்க வேண்டியவராக இருக்கிறுர். ஏனென்றல், ஒருபுறம் லக்னோவிலுள்ள சௌக்கின் வாழ்க்கையை அவர் நுணுக்கமாகக் கவனித்திருக்கிறுர்; மறுபுறம் நாவலில் நல்ல கட்டுப்பாட்டைக் கொண்டுவரப் பரப்பைக் குறைப்பதும் தேவையாகவே இருக்கிறது. சஜ்ஜனுக்கு நகர வாழ்வைச் சித்திரிப்பதற்குத் தாயியின் மாளிகையில் வாடகைக்கு அறை கொடுக்கச் செய்வதற்கு அடிப்படைக்காரணமும் இதுவேயாகும். ''நாவலின் களமாக லக்னோவை, அதிலும் சிறப்பாக 'சௌக்'கை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். நகரத்தின் பண்பாட்டு மரபை நோக்குவதற்கும், அங்கேயுள்ள பழக்கவழக்கங்களைச் சித்திரிப்பதற்கும் அதுவே எனக்கு அதிக வசதியுள்ளதாக இருக்க முடியும்'' என்று நாகரே ஏற்றுக் கொண்டிருக்கிறுர். நாகரின் இந்த நாவலின் அடிப்படைக்களம் 'சௌக்'தான். 'சௌக்'கில் காணப்படும் சிறப்புகளும், காட்சிகளும், சிறு சிறு பாத்திரங்களும், அவர்களுக்கே உரிய சிறப்புகளும் சேர்ந்து இந்த நாவலில் 'சௌக்'கிற்கு உயிரளிக்கின்றன.

'தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்குமிடையில் எவ்வாறன தொடர்பு இருக்கிறது? எப்படிப்பட்ட தொடர்பு இருக்க வேண்டும்' என்பதுவே இந்த நாவலின் அடிப்படைப் பொருளாகும். தனி மனிதனைத் துளியும், சமுதாயத்தைக் கடலும் குறிக்கின்றன. தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையில் உள்ள தொடர்பு அறுந்துவிட்டது. சமுதாயம் தனி மனிதனுக்கு வெறும் கும்பலாகத் தோன்றுகிறது. தனி மனிதச் சிறப்பைச் சமுதாயம் ஏற்கத் தயாராக இல்லை. இந்தச் சச்சரவு தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையில் தோன்றிய பிரிவுப் போக்கினல் (alienation) ஏற்பட்டிருக்கிறது. இரண்டிற்கும் இடையே ஏற்பட்ட

அவநம்பிக்கை இதற்கு அடிப்படைக் காரணமாகும். நாகர் அவர்களின் கருத்துப்படி சிறியதோ, பெரியதோ, எல்லாவிதமான நீர்த்துளிகளிலும் உண்மையில் முழு ஈடுபாடு இருக்குமானுல் இசைவான முழு ஒற்றுமை தோன்றக்கூடும். ''மனித வாழ்க்கையை ஒரு பெருங்கடலுடன் ஒப்பிடக்கூடியதும், மனிதத்தன்மை அழிக்கப்பட முடியாதது என்றும் கருதுவதுமான சமுதாயத்தில் இப்படிப்பட்ட குடும்பங்கள் எவ்வாறு இருக்க முடியும்? லட்சியம் சிறப்புடையதானுல் அதை எல்லோரும் ஒன்று போல் மதிக்க வேண்டும். ஆனுல் அவ்வாறு ஏன் இருப்பதில்லை? துளி பெரிதாகவோ, சிறிதாகவோ, மிகச் சிறியதாகவோ இருக்கலாம். ஆனுல் இந்தச் சிறுமையும் பெருமையும் லட்சியக் கோட்பாடுகளைப் பார்க்கும் பொழுது எவ்விதமான மதிப்பையும் பெறுவதில்லை. துளியோ அணுவோ, எதுவானுலும் உண்மையின்பால் அதன் நம்பிக்கை எத்துணை தீவிரமாக இருக்கிறது! ஒவ்வோர் அணுவும் இந்த நம்பிக்கையைத் தனது செயல் முறையால் எவ்விதம் வளர்த்துப் புது லட்சியத்தைக் கொண்டுவரும் திறமை பெற்றதாக இருக்கிறது என்பதையே ஒவ்வொருவரும் கவனிக்கிருர்கள்.''

உண்மையின்பால் உள்ள நம்பிக்கையால் இந்த நாவலின் மூன்று முக்கியமான பாத்திரங்கள் சஜ்ஜன், மஹிபால், கர்னல் ஆகியோர், வனகன்யாவின் தந்தை அவளுடைய அண்ணியின்மீது புரிந்த அநியாயத்திற்குப் பழிவாங்குவதில் வனகன்யாவிற்கு உதவிபுரிகிருர்கள். வனகன்யா ஒரு விசித்திரமான பாத்திரம். அவளிடம் புது யுகப் பெண்ணின் வேகத்தைக் காண்கிருேம். அவள் உண்மைக்காக, பெண் வர்க்கத்திற்கு இழைக்கப்படும் அநியாயத்தைப் போக்கும் குறிக்கோளுடன் தன் தந்தைக்கு எதிராக நடவடிக்கைகள் எடுப்பதில் தயங்குவதில்லை. வனகன்யா என்ற பெயரைப் பார்த்தால் அவள் பட்டண நாகரிகத்திற்கு அப்பாற்பட்டவள்போல் தோன்றுகிறுள். அவள் நகரங்களில் பரவியிருக்கும் அக்கிரமம், பொய், வஞ்சனை, கட்சி மனப்பான்மை, கபடம், ஆடம்பரம் முதலியவற்றை அழித்து முன் சொன்ன மூன்று பாத்திரங்களையும் எப்படியாவது மாறும்படிச் செய்கிருள். மக்களுடைய அறியாமை காரணமாகத் தோன்றியுள்ள வெறுப்பு, பிரிவு மனப்பான்மை, தீண்டாமை முதலியவற்றை உடைத்தெறிகிருள்; தன்னுடன் நெருங்கிப் பழகியஒவ்வொருவருக்கும் கடைசி நொடிவரை தன் உண்மையான நடத்தை வாயிலாக அவள் நெருங்கியவளாக ஆகிவிடுகிருள் என்று கூறுவது இன்னும் அதிகப் பொருத்தமாக இருக்கும். தன் நெருக்கத்தால் பிறருடைய போக்கை மாற்றிவிடக்கூடிய பல குணங்கள் நிரம்பியிருக்கும் இப்படிப்பட்ட ஒரு பாத்திரம் இயற்கையானதா என்ற கேள்வி

தோன்றக்கூடும். நாகர் அவர்கள் உண்மையின் அடிப்படையைக் காக்க எத்துணை இயற்கைத் தன்மை தேவையோ அத்துணையையே போற்றுகிறார். அப்படிச் செய்வதென்பது இயலாமற்போனால், நடக்கக்கூடியதை இயற்கையாக அமைக்கவோ அல்லது கருதவோ தயங்குவதில்லை.

வனகன்யாவுக்கு எதிராகத் தோன்றும் பாத்திரம் தாயி. வனகன்யா தற்காலத்தவள். உண்மை எது, பொய் எது என்று அவளால் நிர்ணயிக்க முடியும். அவள், தான் உறுதி கொண்ட உண்மைப் பாதையிலிருந்து சிறிதும் பிறழ்வதில்லை. அவள் சமுதாயத்தின் எதிர்ப்புக்களை ஏற்றுக்கொண்டபோதிலும் சமுதாயத்தை விரும்புகிறாள். மேலும், அதை ஒன்றுபடுத்தவும் முயலுகிறாள். அநியாயத்தை எதிர்க்கும் பொழுது அவள் சிறிதும் கருணைக்கு இடம் கொடுப்பதில்லை. ஆனால், தாயி தன்னைப் புறக்கணித்த கணவனைப் பழிவாங்க அந்த வமிசத்தையே அழித்துவிட மாய மந்திரம் செய்கிறாள். அவள் பரம்பரைப் பழக்கங்களையும் வெளி ஆசாரங்களையும் காப்பதில் பெருமையை உணருகிறாள். அழிக்கும் மந்திரத்திறமையால் அவள் தன் ஒவ்வோர் எதிரியையும் அழிக்கத் துடிக்கிறாள். அவள் புது யுகத்தைக் கண்டு அஞ்சுகிறாள். புதுமையை அவள் எதிர்க்கிறாள். அவள் பூனைக்குட்டிகளின்மீது அன்பைப்பொழியக் கூடியவள்; ஆனால் மனிதனை மன்னிப்பது என்பதே அவளுக்குத் தெரியாது. அவள் பலவிதமான சிறப்புகளும், குறைபாடுகளும் சேர்ந்து எதிரும் புதிருமான போக்குகளின் கூட்டமாக அமைந்து ஒரு பாத்திரம் என்ற நிலையில் இல்லாது ஒரு புதுப்படைப்பாகவே ஆகிவிடுகிறாள். வனகன்யாவுக்குச் சஜ்ஜன் தாயியை 'இவள் இந்தியத் தாய்' என்று அறிமுகப்படுத்துகிறான். தாயி இந்த நாவலின் அடிப்படைப் பாத்திரமாவாள். அவள் ஒருபுறம் தன் கணவரான ராஜாசாஹேப் துவாரகாதாஸுடன் தொடர்பு கொண்டவளாக இருப்பதால் உயர்ந்த வகுப்பின் சிறப்புகளுடனும் ஆடம்பரங்களுடனும் சித்திரிக்கப்பட்டிருக்கிறாள்; மறுபுறம் சஜ்ஜன், அவனுடைய நண்பர்கள், கலப்பு மணம் செய்து கொண்டுள்ள மிஸ்டர் வர்மா, ஸ்ரீமதி வர்மா முதலியோருடன் தொடர்பு கொண்டவளாகவும் இருக்கிறாள். நந்தோவுக்குத் தனது மந்திரக்கலையைக் கற்பிக்கும் முறையில் அவள் தனது பக்கத்து வீட்டிலுள்ள பபூதித் தட்டான், அவனுடைய வீட்டில் சினிமாவின் காரணமாக ஏற்பட்ட சூழ்நிலையால் குடும்பப் பெண்ணை வீட்டு வாயிலைத் தாண்டிப் போகவும், கடைசியில் அவளைச் சமுதாயத்தைவிட்டே அகற்றி விடும்படியாகவும் ஏற்பட்ட நிலை முதலியவற்றுடன் சம்பந்தப்பட்டிருக்கிறாள். தாயி அக்கம் பக்கத்துச் சிறுவர்களுக்கு

வேடிக்கைப் பொருளாகவும் இருக்கிறுள்: கண்ணன் கோவிலின் காரணமாக அவள் சசீ சம்பிரதாயத்தைச் சேர்ந்த தலைவர், ஜல்தடியா, பிதரியா, பிதர்னியா முதலியவர்களுடனும், கோவில் விவகாரங்கள், அங்கே நடக்கும் 'ரகசியங்கள்' முதலியவற்றுடனும் தொடர்பு கொண்டிருக்கிறுள். அரசியல் காரணமாக நடத்தப்படும் கண்காட்சி,பிரசாரம், கட்சி மனப்பான்மை முதலியவற்றுடனும்தாயி எதிர்பாராமல் சம்பந்தப்பட்டுவிடுகிறுள். கடைசியில் தன் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள ராதைக்கும் கண்ணனுக்கும் மணம் செய்துவைக்க ஏற்பாடுகள் செய்யும் முறையில், அவள் பைத்தியக்கார விடுதியின் பாபாராமுக்குச் சம்பந்தியாகவும் ஆகிவிடுகிறுள். நாகர் அவர்கள் தாயி என்ற பாத்திரத்தை பல வேறுபட்ட விசித்திரமான போக்குகளுடன் சித்திரித்திருப்பது போல் வேறு எங்கும் பார்க்கமுடியாது.

சஜ்ஜன், கர்னல், மஹிபால் மூவரும் கல்வியறிவு பெற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாவார்கள். ஆனால் நாகர், அவர்களை ஒரு குறிப்பிட்ட இனமாக ஆக்கவில்லை. நகர மக்களுக்குச் சஜ்ஜன் ஒரு கலைஞனுவான். ஆனால் சித்திராவிற்கெதிரில் அவன் சிற்றின்பப் போக்குக் கொண்ட வெறும் ஆடவன்தான். சீலா ஸ்விங் அவனை துர்ஜன் என்று அன்புடன் கேலி செய்கிறுள். வனகன்யாவைப் பொறுத்தவரையில் அவன் ஊடல் கொண்ட ஆண்மகன். அவள் தன் அன்பால் அவனை கட்டுப்படுத்தி அவன்தன் சொத்து முழுவதையும் கூட்டுறவு வங்கிக்கும், பாபாராம் கூறிய மற்ற மக்கள் தொண்டுக்கான செயல்களுக்கும் தானம் செய்யும்படி மாற்றிவிடுகிறுள்.

கர்னல் தெளிவாகப் பேசக்கூடிய தூய்மையான உள்ளம் கொண்ட ஒரு பாத்திரம். அவன் தூய நட்பிற்கிடையே ஏற்படும் எந்தத்தடையையும் நீக்குவதில் கெட்டிக்காரன். அவன் சஜ்ஜனுக்கும் மஹிபாலுக்குமிடையில் பாலம்போல் அமைந்திருக்கிறுன். ஆனால் இருவருடைய பலவீனங்களையும் மன்னித்து அவர்களுடைய செயல்களிலெல்லாம் உதவியளிக்க எப்பொழுதும் தயாராக இருக்கிறுன். சஜ்ஜனையும் மஹிபாலையும் அறிவாளிகள் என்று கொண்டாலும், உலகியல் அறிவில் கர்னல் இருவருடைய நண்பன் மட்டுமல்ல, நல்லாசிரியனுகவும் அமைந்திருக்கிறுன். அவன் சஜ்ஜன், கன்யா இருவருடைய தொடர்பையும், மஹிபால், சீலா, கல்யாணி இவர்களுக்கிடையிலுள்ள முக்கோணச் சிக்கல்களையும் தீர்த்து வைப்பதில் நல்ல முறையில் வெற்றியடைகிறுன். மஹிபாலின் அகந்தைநிறைந்த உள்ளம் சமுதாய வேறுபாடுகளில்சிக்குண்டு தனது போக்கையே கெடுத்துக்கொண்டு விடுகிறது. கடைசியில் அவன் வேறு வழியின்றி தற்கொலை செய்து கொண்டுவிட்ட

பொழுது கர்னல் தன் முழுச் சக்தியுடனும் தனது காலமான நண்பனின் கடமைகளனைத்தையும் காப்பாற்றுகிறன்; சஜ்ஜனும், வனகன்யாவும் இந்தப் பணியில் அவனுக்கு உதவியாக இருக்கிறார்கள்.

'துளியும் கடலும்' என்ற இந்த நாவலில் இங்குமங்கும் பரவியிருக்கும் அடிப்படைக் கதையுடன், பல சிறுசிறு காட்சிகளும் இணைந்திருக்கின்றன. தொடர்புள்ள கதைக் கோவையை எதிர் பார்க்கும் வாசகருக்கு இவை தேவையற்றவையாகத் தோன்றலாம். ஆனால் இது நாகர் அவர்களது எழுத்து நடைமுறையின் ஒரு போக்காகும். இதில் சில நூலிழைகள் இங்குமங்கும் பிரிந்திருப்பனவாகவும் தோற்றம் அளிக்கின்றன.

இந்தச் சுருக்கமான ஆய்விலிருந்து 'துளியும் கடலும்' என்ற நாவலின் ஆசிரியர் எவ்வளவு பரந்த சூழ்நிலையைக் கைக்கொண்டுள்ளார் என்பது நன்ருக விளங்கும். பிரேம்சந்தின் 'ரங்க்பூமி'க்குப்பிறகு இவ்வளவு பரந்த சூழ்நிலையை வேறு எந்த எழுத்தாளரும் கைக்கொள்ளவில்லை என்று ஆய்வாளர்கள் கூறுவது மிகவும் பொருத்தமாகும். ஆனல் பரந்த சூழ்நிலையை ஏற்றுக்கொள்வதால் மட்டும் ஒரு நாவல் பெரியதாகிவிட முடியுமா? சூழ்நிலை பலவிதப் பட்ட வாழ்க்கையைக் கொண்டு வந்து நிறுத்தக் கூடும். ஆனல், அதில் ஆழத்தைக் கொண்டுவரும் சூழ்நிலை மட்டும் முக்கியமன்று. சிறிய—பெரிய பாத்திரங்களின் உயிர்த்தன்மையும், நம்பகமான நிலையும் தேவையாகும். 'துளியும் கடலும்' என்ற நாவலின் பெரும்பான்மையான பாத்திரங்கள் உயிர்ப்புள்ளனவாகவும் நம்பக் கூடியனவாகவும் தோன்றுகின்றன. சஜ்ஜனைப்பற்றி அவனுடைய போக்கில், துவக்கத்தில் காணப்படும் வேகம் கடைசியில் காணப் படவில்லை என்று குறைகூறக்கூடும். அவன் பாபாராமின் கடமையுணர்வு நிறைந்த லட்சியமயமான போக்குக்கு எதிரில் திறனிழந்தவனுகத் தோன்றுகிறன் என்பது உண்மைதான். இந்த இடத்தில் அடிப்படைத்திட்டம் ஒன்றையும் காணலாம். நாகர் அவர்கள் அறிந்தோ, அறியாமலோ சஜ்ஜன் என்ற பாத்திரத்தை வனகன்யாவுக்கும் பாபாராமுக்கும் இடையில் கொண்டு வந்து நிறுத்தி, அவன் முற்றும் மாறுபட்டுவிடுவதாகக் காட்டியுள்ளார். பாபாராமின் லட்சியக் கொள்கைகளையும், பண்பையும் நாவலின் தத்துவப்படிச் சித்தரிக்க நாகர் விரும்புகிறரா என்பது மற்றொரு பிரச்சினையாக இருக்கலாம். நாகர் அவர்கள் பெரும்பாலும் உள்ளதை உள்ளவாறு சித்திரிக்கும் நாவலாசிரியர்களின் வரிசையில் எண்ணப் படுவதில்லை. ஆனல் அவர் எந்த அரசியல் கொள்கையிலும் பிடிப்புக் கொண்டவருமில்லை; அவர் சமுதாயத்தில் ஒரு மாற்றத்தை விரும்பக் கூடியவர்; சமுதாயத்தை அழுக்கு, நாற்றம்,

தீய போக்குகள், சோம்பல் முதலியவற்றிலிருந்து அகற்றி நல்ல முறையில் வளரச் செய்ய விரும்புபவர் என்பதற்கு அவருடைய எல்லா நாவல்களும் எடுத்துக் காட்டாகும். ஆனால், இவ்வாறு செய்ய ஒரு பரம்பரையான முறையோ உறுதியான திட்டமோ அவருக்குக் கிடைக்கவில்லை. நாகர் அவர்கள் சென்ற தலைமுறையைச் சேர்ந்த புகழ்வாய்ந்த எழுத்தாளராக இருப்பதால் ஓர் எழுத்தாளனின் பணி, சமுதாயத்தின் உண்மையான வாழ்விற்கு எடுத்துக் காட்டுகளைக் கொணர்ந்து நிறுத்துவதுதான் என்று மட்டும் கருதி அவர் மகிழக்கூடியவரல்லர். அவர் ஏதாவதொரு பரிகாரம் தேடிக் கொள்ள விரும்புகிறார். இந்த நாவலில் அவர் பாபாராமினால் தூண்டிவிடப்பட்ட மக்கள் பணி இயக்கத்தை ஒரு பரிகாரமாகக் கொணர்ந்து நிறுத்துகிறார். அவர் கூறுகிறார்: "தாங்கள் குடிசைத் தொழில்களை வளர்த்து நகரத்து ஆடவர்களை உயிரோடு தூக்குமேடை ஏறுவதிலிருந்தும், ஒழுங்கீனத்திலிருந்தும் காப்பாற்றக்கூடுமானாலும், பெண்களை அவர்களது பொருளாதார நிலையைச் சீர்படுத்துவதற்காகப் பெண்கள் இல்லம் முதலியவற்றை நிறுவிக் காப்பதோடுகூட அவர்களுடைய ஒழுக்கத்தை உயரச் செய்ய முடியுமானாலும் அதுவே பெரும்பணியாகும் ராம்ஜீ!"

இவ்வாறு திரு. அம்ருதலால் நாகர் தம் 'துளியும் கடலும்' என்ற நாவலில் தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்குமிடையில் தோன்றக்கூடிய தினசரி சச்சரவுகளைப் பெரிதும் உயிர்த்துடிப்புடனும் பரந்த முறையிலும் சித்திரித்திருப்பதைக் காண்கிறோம். உள்ளதை உள்ளபடிக் காணும் பார்வை, காட்சிகளை உயிருள்ளனவாகச் சித்திரிக்கும் கலை, பாத்திரங்களை யதார்த்த முறையில் கொணர்ந்து நிறுத்தும் திறன் ஆகிய சிறப்புகளால் 'துளியும் கடலும்' என்ற இந்த நாவல் ஹிந்தி நாவல் இலக்கியத்தில் எடுத்துக்காட்டான படைப்பின் இடத்தைப் பெற்றுள்ளது.

—டாக்டர் சிவப்பிரசாத்சிங்

# 1

பகல் நேரத்து வெயில் குளிர் காலத்தில் அரசு செலுத்தியபடி நாற்புறமும் வீசிக் கொண்டிருந்தது. பெண்டிர் தையல் வேலையில் ஈடுபட்டிருந்தனர். சிலர் கோதுமையை முறத்தில் போட்டுக் கொழித்துக் கொண்டிருந்தனர். மற்றுஞ் சிலர் பருப்பைப் பொறுக்கிக் கொண்டிருந்தனர். காய்கறிகளை ஆய்ந்து வைப்பதில் சிலர் கவனம் செலுத்தினர். சிலர் ஓய்வும் எடுத்துக் கொண்டிருந் தனர். பள்ளி செல்லாத சிறுவர்களின் கொம்மாளம் ஒருபுறம். மறுபுறம் பட்டங்கள் பறந்து கொண்டிருந்தன. பதவிசாகச் சம்பாதித்துப் போடும் பிள்ளைகளைப் பாராட்டுவதுபோல் ஓய்வு பெற்ற முதியோர் தங்கள் இருப்பிடத்தின் நிம்மதியளிக்கும் தன்மையை மனமாரப் புகழ்ந்து கொண்டிருந்தனர். அவர்கள் தங்கள் கம்பளிப் போர்வையைக் கழற்றிப் போட்டுவிட்டுக் கவலையின்றி முழங்கால்களைத் தடவிக் கொண்டிருந்தனர். நேரங் கழித்துச் சாப்பிடும் வழக்கமுள்ளவர் சிலர், ''கங்காமாதா'' என்றபடியே தலையில் தண்ணீரை ஊற்றிக் கொண்டிருந்தனர். விழித்திருப்போர் எழுப்பும் ஒலிகள்—டண்டண், கட்கட், தம்தம், ஏறுதல் - இறங்குதல், சினம் – பாசம் – சிடுசிடுப்பு – கேலி–பரிகாசம் இவ்வாறு ஏழு சுவரங்கள் சேர்ந்து ஒலிக்கின்றன. இந்த உலகையே அதிரச் செய்ய ஏதாவது ஓர் ஒலி போதும்!

லக்னோவைச் சேர்ந்த ஒரு பேட்டை. பபூதி எனப்படும் தட்டானின் இரண்டு இளம் மருமகப் பெண்டிர் தங்கள் வீட்டுக் கைப்பிடிச் சுவரில் சாய்ந்து கொண்டிருக்கும் அடுத்த வீட்டுக்காரி தாராவுடன் பேசிக் கொண்டிருக்கின்றனர். தன் வீட்டில் வைக்கப்பட்டிருந்த இரண்டு மரப் பெட்டிகளின்மீது ஏறிக் கொண்டு, தாரா அண்டை வீட்டுத் தோழிகளின் மாடிச் சுவரருகே வந்துவிட்டாள். குழந்தைகளின் ஸ்வெட்டரில், அவளது பார்வை விழுந்தது. புருவங்களை நெளித்துக் கொண்டு அவள் பேசினாள்: ''என்னைத் 'தாரா, தாரா' என்று கூப்பிட்டால் எனக்குப் பிடிக்காது. அவர் மட்டுந்தான் என்னைத் தாரா என்றழைத்தால் எனக்குப் பிடிக்கும்.'' மூத்தவளின் இடது காதில் தொங்கிய ஜிமிக்கியின்மீது வெயில் வீசிற்று. தலையை

அசைத்ததால் வைரத்தோடு பளிச்சென்று மின்னிற்று. சிவந்த கன்னத்தின்மீது கையை ஊன்றிக்கொண்டு அவள் பேசினுள் :

''சரிதான் போ ! பின்னே என்ன பெயரிட்டு அழைப்பதாம் உன்னை ?''

''மிஸஸ் வர்மா என்று கூப்பிடு. நானும் உன்னை அப்படியே அழைக்கிறேன் !''

இளையவளின் பருத்த உதடு நெளிந்தது; புருவங்கள் நெரிந்தன. கழுத்தை ஓர் அசைப்பு அசைத்துக்கொண்டு அவள் பேசினுள் :

''எங்களை மிஸஸ் தட்டான் என்ரு கூப்பிடப் போகிருய் ! எங்களுக்கு அது பிடிக்காது, ஆமாம் !''

மூத்தவள் கூறினுள் : ''இதில் தவருக எண்ணிக் கொள்ள என்ன இருக்கிறது ? அவரவர்கள் சாதியைப்பற்றிக் குறிப்பிட்டால் இதில் குற்றம் என்ன ? நாம் தாழ்ந்த தொழில் புரியவில்லையே ! நாம் தாசிகளா என்ன வருத்தப்படுவதற்கு ?''

தாரா இண்டர்மீடியட்வரை படித்தவள். காதல் செய்து அவள் கலப்பு மணம் புரிந்துகொண்டவள். கணவனுடன் ஹஸரத்கஞ்ஜ், க்வாலிடி, சில்வர்ஸ்ஞே ரெஸ்டொரன்ட், காபி ஹவுஸ் போன்ற இடங்களுக்குச் சென்றிருக்கிருள். தன்னைவிடப் படிப்பில் குறைந்து காணப்படும் சுதந்தரமற்ற அந்தப் பெண்களைப் பார்த்து அன்புகனிந்த குரலில் தாரா மொழிந்தாள் : ''உயர்வாவது தாழ்வாவது; இதெல்லாம் பற்றி யார் இந்தக் காலத்தில் பேசுகிருர்கள் ? நான் சாதியை ஒப்புக் கொள்வதே கிடையாது !''

மூத்தவள் தாராவைக் கதா நாயகிபோல் எண்ணினுள். தாராவின் பெருமையைத் தன்னுடையதாகக் கருதிப் பெருமிதமடைந்த அவள், நாத் தழுதழுக்கக் கூறினுள் : ''நீ ஒப்புக் கொள்ளாதது ஒருபுறமிருக்கட்டும். நீதான் செயலிலேயே காண்பித்துவிட்டாயே ! காதலனுடன் வெளிப்படையாகவல்லவா குலாவினுய் ?''

அவள் சிரித்தாள். இருவருங்கூடச் சிரித்தனர். இளையவளும் தாராவைக் கதாநாயகியெனவே கருதினுள். தாராவே தன்னை அவ்விதந்தான் எண்ணி வந்தாள்.

தாராவின் கவர்ச்சியளிக்கும் கருமேனியைப் போதை தரும் பார்வையுடன் பார்த்தப்படியே காதல் கனிந்த குரலில் பேசினுள் மூத்தவள் : ''நீ என்னதான் சொல்லேன், 'லவ் மாரேஜ்' என்ருல் அதில் மகிழ்ச்சி அதிகந்தான் ! ஒரு முறை படித்துக்கொண்டிருந்த போது எனக்கும் ஒருவனுடன் காதல் வந்துவிட்டது''.

ஒரு கணம் மூத்தவளின் போதை நிறைந்த கண்கள் கடந்த காலத்துக் காட்சிகளில் ஒன்றிவிட்டன. இளையவள் 'அட தெய்வமே' என்பதுபோல் அவளைப் பார்த்தாள். சாயம் பூசப்

பட்ட விரல்களில் இரண்டு, சிரித்தபடியே திறந்த வாயில் ஜன்னலைப்போல் அடைத்துக்கொண்டன. படிப்பில் முதலில் வரும் மாணவியைக் கண்டு ஆசிரியை மகிழ்வதுபோல் தாரா சிரித்தாள்.

கீழே தொட்டிலில் விடப்பட்டிருந்த (மூத்தவளின்) மூன்று மாதக் குழந்தை அழ ஆரம்பித்தது. அவளுடைய நான்கு வயது மகன் காய்ச்சலில் படுத்தபடியிருந்தான். அருகில் அமர்ந்து சூர்ணம் தயார் செய்து கொண்டிருந்த மாமி குரல் கொடுத்தாள்: ''அடியே! குழந்தை அழுகிறது பார்!''

இங்கே தாரா ஆர்வத்துடன் மூத்தவளைக் கேட்டாள்: ''உன் 'லவர்' யார்?''

குழந்தை கை—கால்களை உதறிக்கொண்டு அழுதுகொண்டிருக்க, அதன் பாட்டி சூர்ணம் தயார் செய்வதில் ஈடுபட்டிருந்தாள். அதன் அத்தை கரையில்லாத சேலையணிந்தவளாய் வாயிலும் கையிலும் வெற்றிலையுடன் குளிரில் நடுங்கியபடியே மேலே வந்தாள். ஒரு நிமிடம் நந்தோ தாயருகே பேசாமல் நின்றுவிட்டுப் பிறகு கூறினாள்: ''நான் தாயியுடைய வீட்டுக்குப் போகிறேன்.''

தாய் சொன்னாள்: ''அங்கிருந்து அந்த மூத்தவளை அனுப்பி விட்டுப்போ. குழந்தை அழுவதுகூடத் தெரியாமல் பேசும் வம்பு அவளுக்கு வெல்லமாய் இனிக்கிறது!''

இருபத்தேழு வயது நிரம்பிய நந்தோ மாயை மோகத்தைத் துறந்தவள். இன்றையச் சிறுவர் சிறுமியர், தன் வயதுடையோர், இல்லற வாழ்க்கையில் களிப்புறும் பெண்டிர், பச்சிளங் குழந்தைகள்—இவர்களைக் கண்டால் வெறுப்பவள். விரதம், உபவாசம் என்று ஈடுபட்டு வற்றிக் களையிழந்து காணப்படும் நந்தோ பிறரை நிந்தனை செய்வதையே சுவர்க்கமாகக் கருதும் கிழவியருடன் நட்புப் பூணுபவள்.

தாயியுடைய வீட்டுக்குச் செல்ல நந்தோ மாடிப்படிகளைக் கடந்து மேலே வந்தாள். அங்கே தன் அண்ணிமார் இருவரையும் கண்டாள். பைய அடிவைத்து நடந்த அவள் இரைத்தேடிச் செல்லும் தன் பூனைபோல் காணப்பட்டாள்.

பிறரை நிந்திக்க நந்தோவுக்கு நல்ல வாய்ப்புக் கிடைத்து விட்டது! போதாததற்குத் தாயும் உரத்த குரலில் கத்தினாள்: ''அடியே அம்மா!''

இருவரும் திரும்பிப் பார்த்தனர். கள்ளிபோல நின்றுகொண்டிருந்த நாத்தியைக் கண்டு இருவருமே திடுக்கிட்டனர். நந்தோவும் அதிர்வுற்றாள். எப்படியோ தன்னைச் சமாளித்துக்கொண்டு நந்தோ தாயியுடைய வீட்டை நோக்கி விரைந்தாள்.

# 2

தாயி, ராஜ்பகாதுர் சர் துவாரகாதாஸ் அகர்வாலின் மூத்த மனைவி. ராஜ்பகாதுர் லக்னேவை சேர்ந்த செல்வந்தரில் முதல்வர். வெள்ளையர் காலத்தில் டிபுடி கமிஷனரிலிருந்து சீஃப் செக்ரடரி, ஹோம் மெம்பர் வரையில், ஐக்கிய மாகாணத்துக் கவர்னரிலிருந்து வைசிராய் வரையில்—எங்கும் இவருக்குச் செல்வாக்கு உண்டு. சுதந்தரம் பெற்றபின்பு துவாரகாதாஸ் ராஷ்டரபதி, பிரதமர் போன்றவர்களை அணுகமுடியாவிட்டாலும், அவருடைய பெருமைக்குக் குறைவு ஏற்படவில்லை. புது டில்லியைச் சேர்ந்த உயர்ந்த அதிகாரிகளும், உத்தரப்பிரதேசத்து மந்திரிகளும் அவரை ராஜாசாஹேப் என்றுதான் அழைத்து வருகிறார்கள். அவருடைய அரசாங்க வேலைகள் சட்டத்தின் படிகளைத் தாண்டாமல், பட்ச பாதம் என்னும் லிஃப்டைத்தான் எட்டிப் பிடிக்கின்றன. ராஜ் பகாதுரின் கொடை, தருமசிந்தனைபற்றிச் சங்கராச்சாரியர்வரை தெய்விக விருதுகள் வழங்கியுள்ளனர். சாதுக்கள் ஒவ்வோர் ஆண்டும் அவருடைய இருப்பிடத்தில் ஒன்று சேருவது வழக்கம். இலட்சக்கணக்கில் செலவிட்டு அவர் லக்ஷ்மி நாராயணரின் கோயிலை நிறுவியுள்ளார். அது தெய்வத்தின் பெயராலல்ல; அகர் வால்—கோயில் என்ற பெயரால் புகழடைந்துள்ளது. அவருடைய பூஜையறையில் எரியும் விளக்கிலிருந்து கறுப்பாகக் கரி படருவ தில்லையாம்; சிவப்பாகத்தான் படருகிறதாம்! இப்படிப்பட்ட கணவரின் மனைவி, மக்களின் வெறுப்புக்குக் காரணமாகி, அவமதிப் புக்கு ஆளாவதைப் பார்த்தால் விதியின் விளையாட்டைத்தான் எண்ண நேரிடுகிறது.

தாயி திருமணமாகி வந்தபோது துவாரகாதாசின் வீட்டில் சாப்பிடுவதற்குக்கூடப் போதாமல்தான் இருந்தது. பிதுரார்ஜிதம் முழுவதும் நடனப் பெண்களின் சதங்கையொலியோடு போய் விட்டது. எஞ்சியிருந்தது தந்தையோடு மறைந்துவிட்டது. கடன் அதிகமாகிவிடவே, அவர் கோமதி நதியில் மூழ்கித் தம் மானத்தைக் காத்துக்கொண்டார். முன்னோர்களின் வீடு (அது இப்போது துவாரகாதாஸின் சொத்தாகித் தாயியுடைய கைவசம் வந்திருக்கிறது) அவர்கள் விட்டுச் சென்ற கடனைக் கட்ட ஏலமிடப் பட்டது. துவாரகாதாசின் தாய் அவரையும் தன் இரண்டு கன்னிப் பெண்களையும் அழைத்துக்கொண்டு அந்தப் பெரிய வீட்டுடன் இணைந்த சிறு வீடு ஒன்றில் வசிக்கலானாள். துவாரகா தாசுக்கு அப்போது பதினான்கு வயது. அவர் தம் உறவினர் ஒருவருடன் சேர்ந்து ஒரு நகைக் கடையில் வேலை பார்த்துவந்தார். அங்கிருந்து கொண்டு தரகும் கற்று வந்தார். எப்படியோ

அவருடைய அக்காளின் திருமணம் நடந்தேறியது. அவருடைய திருமணமும் நடந்தது. தாயி இடிந்துபோன வைபவத்தின் குல லட்சுமியாக வீட்டில் அடிவைத்தாள்.

தாயியின் பிறந்த வீடு 'ஹாத்ரஸ்' என்ற இடத்தில் இருந்தது. எல்லாவற்றையும் இழந்திருந்தபோதிலும் அவர்கள் பெரிய மனிதர்கள். தாயியின் பெற்ருேர் அவளுடைய இளமையிலேயே இறந்துவிட்டனர். அதுவரை தன் பெரிய குடும்பத்தில் அவள் ஒருத்திதான் குழந்தை. ஆதலால் எல்லோருக்கும் செல்லம் அதிகம். தாத்தா பாட்டி கொடுத்த சலுகையினுல் அவள் பிடிவாதக்காரியாகி விட்டாள். மற்றச் சிறிய தந்தைமாருக்கும் குழந்தைகள் பிறக்க ஆரம்பிக்கவே தாயி முகம் சுளிக்க ஆரம்பித் தாள். செல்லமாக வளர்க்கப்பட்டதால் இப்போது அவள் சிடுமூஞ்சியாகிவிட்டாள். தாத்தா பாட்டி உயிருடன் இருந்த வரை, அவளை யாரும் ஏதும் சொன்னதில்லை. அதன் பிறகு அவள் தன் வாய்த்துடுக்கின் காரணமாகக் குடும்பத்தோரின் வெறுப்புக்கு ஆளாகிவிட்டாள். அவளை எல்லாரும் புறக்கணிக்கவே உள்ளம் வெறுப்புணர்ச்சியால் நிரம்பிவிட்டது. மனித வாடையின்றித் தனிமையில் அவள் நாட்டங்கொள்ளலாஞள். சிறிய தந்தைமார் அவளுக்குச் சீர்வரிசை ஏதும் அளிக்காமல், வரதட்சிணையின்றித் துவாரகாதாஸ் போன்ற பரதேசிக்குத் திருமணம் செய்து, 'தொலைந்தது சனியன்' என்று இருந்துவிட்டார்கள். அதன் பிறகு வீட்டுக்கு அழைத்தல் என்ற பேச்சையே எடுக்கவில்லை.

திருமணத்துக்குப் பிறகு துவாரகாதாசின் அதிருஷ்டமே திருப்பங்கண்டுவிட்டது. இழந்த சொத்து, வீடு வாசல் எல்லாம் அவரைத்திரும்ப வந்தடைந்துவிட்டன. அவர் சிறு நகைக்கடை ஒன்றை வைத்தார். நல்ல காலம் திரும்பியதற்குத் தம் மனைவியின் அதிருஷ்டந்தான் காரணம் என்பார் அவர். அதனுல்தான் அவளுடைய பேச்சென்னும் ஆலகால நஞ்சைச் சிவபிரானைப்போல் விழுங்கிவந்தார்!

முதல் உலகப் போரில் பாக்கியதேவதை ஆயிரமாயிரம் கரங் களுடன் அவருக்கு வழங்கினுள். பழைய வீடு ஒன்றை விலைக்கு வாங்கிய அவர் அதில் ஒரு புதையலையும் கண்டெடுத்தார். அதன் பிறகு துவாரகாதாசின் புகழ் எண்டிசையும் பரவத் துவங்கியது. செல்வத்தில் கொழித்த அவர், நம்மை மதிக்கும் மனைவி வந்து வாய்த்திருக்கக் கூடாதா, ஒரு குலக் கொழுந்தை நமக்கு அளிக்கும் இல்லாளாய் அவள் இருக்கக் கூடாதா? என ஏங்கினுர்.

திருமணமாகிய சில ஆண்டுகளுக்குப் பிறகு தாயியின் காலமும் மாற்றங்கண்டது. அவளை வெறுத்த மாமியும் அவளிடம் அன்பு செலுத்தத் துவங்கிவிட்டாள். ஆனுல் தாயி ஒரு மகளுக்குத்

தாயானவுடனேயே வீட்டோர் எல்லோரும் உற்சாகம் இழந்து போயினர். பிரசவ அறையில் இருக்கும்போதே மாமியின் வசைகள் அவளுடைய செவிகளில் விழுந்தன. வீட்டோர் எல்லோரும்சேர்ந்து குழந்தையைக் கொன்றுவிடப் போகிறார்களே என்ற அச்சம் அவளைக் கவ்விக்கொண்டது. இந்தக் காரணத்தால் அவளுக்குத் தன் கணவன், மாமி, நாத்தி, பணியாள்—எல்லோர் பேரிலும் ஆழ்ந்த வெறுப்புத் தோன்றியது. பெரும்பாலும் இருபத்து நான்கு மணி நேரமும் கதவைத் தாழிட்டுக்கொண்டு தன் அறையில் அமர்ந்தபடி தன் மகளை அவள் கொஞ்சிக் குலாவிக் கொண்டிருந்தாள். கணவன் என்ன சொன்னாலும் புரிந்து கொண்டு, அவருக்கு இணங்கி நடக்க அவள் தயாராக இல்லை. எட்டுமாதங்கள்வரை வளர்ந்த குழந்தை இறந்து போயிற்று. தாயியின் வருத்தம் வீட்டின் அமைதியைக் குலைத்தது. ஆயிரம் ஐசுவரியங்கள் இருந்தபோதிலும் குலவிளக்கு ஒன்று இல்லாமல் துவாரகாதாசின் உள்ளத்தில் இருள் கவிந்துகொண்டது. இந்த இருள், நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே சென்றது. துவாரகாதாஸ் வேறுவழியின்றி மறுமணம் செய்துகொள்ள நிச்சயித்தார். ஊர்வலம் வாசலில்வர ஆரம்பித்ததுமே தாயி அதே இரவு வீட்டைவிட்டு வெளியே சென்றுவிட்டாள்.

புரோகிதருக்குக் கொட்டிக் கொடுக்கவேண்டியதையெல்லாம் கொடுத்துத் தம்மை விடுவித்துக்கொண்ட பிறகு எட்டுத் தினங்கள் கழிந்ததும்—தம் முன்னோர்களின் வீடு ஒன்றிலேயே தாயி வசிக்க ஏற்பாடு செய்தார் துவாரகாதாஸ். தாயியின் வாழ்நாள் முழுதும் அவர்தாம் அவளுக்கு உரியவர் என்றும், அதனால் அவளுடைய வாழ்க்கைச் செலவுக்கென்றும் மாதம் இருநூறு ரூபாய் அளிக்க ஏற்பாடும் செய்யப்பட்டது.

முப்பத்துமூன்று ஆண்டுகளாக இது இடைவிடாமல் நடந்து கொண்டு வருகிறது. இத்தனை ஆண்டுகளுக்குள் தருமத்தைக் காப்பவர், பசுவையும் பார்ப்பனரையும் பாவிப்பவர், கொடை வள்ளல் என்றெல்லாம் புகழ்பெற்ற ராஜ்பகாதுர் சர் துவாரகா தாஸ் அகர்வால் கே. சி. ஐ. ஈ. அவர்களின் முதல் மனைவி தாயி சிடுமூஞ்சி, சண்டைக்காரி எனப் பலவித விருதுகளை மக்களிட மிருந்து பெற்றுவிட்டாள். மந்திரம் போடுவதில் அவள் பெயர் பெற்றவள் என்றும் வதந்தி பரவிவிட்டது. இதுபற்றி நூற்றுக் கணக்கான கதைகள் உலவிவந்தன. ஒரு வேலையாளிடம் சில தினங்கள்வரை இரவு பன்னிரண்டு மணிக்குத் தினசரி சென்று இந்தக் கலையைத் தாயி கற்றதாகக் கூறப்படுகிறது. கறுப்புக் கயிற்றை இடுப்பில் கட்டிக்கொண்டு அதில் ஒரு கத்தியையும் தொங்கவிட்டுக்கொண்டு அவள் தன் சுற்றத்தாரின் வீடுகளில் பல

மாயங்கள் செய்ததாகவும் வதந்தி பரவி வந்தது. சிலருடைய கட்டிலில் குங்குமத்தைப் பூசிவிட்டு வருவாள்; மற்றும் சிலருடைய தலையணையில் ஒன்றேகால் கஜம் கறுப்பு நூலை ஊசியுடன் சுற்றி வைத்துவிட்டு வந்திடுவாள்; மை பூசிய குச்சியை மற்று மோரிடத்தில் செருகி விடுவாள்; யாருடைய திருமணத்துக்காக வாவது நல்ல ரவிக்கைத் துணிகள் வாங்கி வைக்கப்பட்டிருந்தால் அவற்றை நான்கு துண்டுகளாக வெட்டி வைத்திருப்பாள். சில இடங்களில் குழந்தையின் பால் கிண்ணத்தில் எண்ணெய்ச் சொட்டை விட்டு, மரண மந்திரத்தை ஜபித்திருப்பாள்; சில பெண்களின் வகிட்டிலுள்ள முடியை வெட்டிவிட்டு அவளை மலடி யாக இருக்கச் செய்வாள்; சில வீடுகளில் நாற்பது நாட்கள்வரை வாயிற்படியில் தீபம் ஏற்றிவைத்திருப்பாள்; சிலருக்காகத் திருஷ்டி கழித்து நாற்சந்தியில் மிளகாயைப் போட்டிருப்பாள். தாயி இவ்விதம் மந்திர மாயங்கள் செய்யும்போது பல தடவைகள் பிடிபட்டிருக்கிறாள்; சண்டை சச்சரவுகளும், கைகலப்புங்கூட நேர்ந்திருக்கின்றன. எந்த வீடும் இவளுக்காகத் திறந்திருக்காது. எல்லோருடைய சகுனத்தடையின் சுமை முழுவதும் தாயியின் பேரில்தான் !

இப்போது வெயிலில் தலையை ஆற்றிக்கொண்டிருந்த தாயிக்கு மாடியில் நடந்துவரும் பேச்சு தொந்தரவளித்தது. தன் முடியில் விரல்களைக் கொடுத்து வேகமாகக் கோதியபடியே அவள் முணு முணுத்தாள். "இதுங்களுக்குச் சாவுதான் வராதோ! எங்கே போய் உட்கார்ந்தாலும் வந்து விடுகிறதுங்கள் சனியன்கள்!"

தாயி இவ்விதம் இதுவரை மொழிந்த வசைகளைக் கணக் கெடுத்துப் பார்த்தால், அனுமனுடைய வால்கூட வெட்கிப்போக வேண்டியதுதான் ! தாயிக்கு உலகத்தோர் பேரில் எப்போதும் குறைதான், குற்றம்தான்! அப்படியிருக்க அவளுடைய முணு முணுப்புக்கு முடிவேது ? ஜம்மன் பஜாஜின் வீட்டில் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருக்கும் பெண்கள் தாயியின் ஏழேழு பிறவிகளிலும் பகைவராக இருந்திருக்கின்றனர் போலும்! 'சனியன்களுக்கு மண்வாயோ, மரவாயோ! எப்போது பார்த் தாலும் இி இி இி என்று இளித்துக்கொண்டே இருக்கிறதுகள் !' போதாதற்குக் காகம் வேறு காவல் காப்பதுபோல் உட்கார்ந்து கொண்டு கத்திற்று. ரேடியோ வேறு, "உன் அழகைக் காண இரு கண்கள் போதாதே" என்று பாடத் துவங்கியது. குன்னுவின் வீட்டில் மாமியும் மருமகளும் பேசிக் கொண்டி ருந்ததில் தாயியின் காதுகள் கொப்புளித்துப் போயின.—"சீ ! இந்தக் கிழப்பருவத்தில்கூட வாயடைக்கவில்லையே!"—லாலாவின் வீட்டிலிருந்து சிறுவன் கத்தியது கேட்டது : "சோப்பு கொண்டு

வா ! வெந்நீர் ஆறிப்போகிறது!" தாயிக்கு ஈயத்தைக் காய்ச்சிச் செவிகளில் விட்டாற்போல் இருந்தது. "பிசாசு ! என்ன கத்தல் இது ! நாசமாய்ப் போக ! பன்னிரண்டு மணிக்கா குளிக்கும்? பீடை ! இந்தப் பபூதி வீட்டுப் பேய்கள் என் கண்ணெதிரேயே நின்றுகொண்டிருக்கின்றன. ஒரு நாழிகைகூடச் சும்மா உட்கார விடமாட்டேன் என்கிறதுகள்! என்னைப் படுத்தறபாட்டுக்கு இதுங்கள் நன்ருக அனுபவிக்கும் ! புழுத்துச் சாகத்தான் போகிற துங்கள். வேறென்ன ! நாதியற்ற பிணமாகப் போகப்போகுதுங்க! மூடக்கூடத் துணி இருக்காது."

செத்த எலியொன்றை வாயில் கவ்விக்கொண்டு பூனை கீழே இறங்கியது. தாயி முணுமுணுப்பதை விட்டுவிட்டு அலறினாள். ஒரு மூங்கிலை எடுத்துக்கொண்டு தாயி அதன்மீது பாய்ந்தாள். பூனை அவளைத் தாண்டிக்கொண்டு பபூதியின் வீட்டை நோக்கி ஓடிற்று. அதே நேரத்தில் நந்தோவும் திடுக்கிட்டுக் குதித்தாள். அவளுக்கு மிகவும் அருகே வந்த பூனை பாய்ந்து பறந்தது.

தாயி அவளைப் பார்த்துக் கேட்டாள்—"நந்தோ! அதைத் தொட்டுவிட்டாயே, சனியனே! போய்க் குளி!"

"இல்லை தாயி! சாமிபேரில் ஆணையிட்டுச் சொல்கிறேன். அதை நான் தொடவேயில்லை. எவ்வளவு தொலைவில் அது ஓடியிருக் கிறது. அதைப் பார்த்ததுமே நான் நடுங்கிவிட்டேன். வாயிலே எலியை வைத்துக்கொண்டிருந்தது. உன் வீட்டிலிருந்தா கொண்டு வந்திருக்கிறது?" தாயியின் அருகே வந்த நந்தோ வெற்றிலைப் பெட்டியை அவள் முன்பு நீட்டியபடி கூறினாள் :— "இந்தா வெற்றிலை போட்டுக்கொள் !"

வெற்றிலையைப் பார்த்ததும் தாயியின் புயலடித்த முகத்தில் சற்றே அமைதி நிலவியது. மூங்கிலைச் சுவரோடு சார்த்திவிட்டு அருகே இருந்த குடத்து நீரில் கையைக் கழுவிக்கொண்டாள். மறுபடியும் நந்தோவைக் கேட்டாள் :—"உண்மையாகச் சொல், பூனை உன்னைத் தொடவில்லையே ?"

"இல்லை தாயி. இவ்வளவு பெரிய சாமிபேரில் சத்தியம் செய்திருக் கிறேன்! நான் ரொம்பவும் மடியாகத்தான் இருப்பேன். நான் சாப்பிடுவதெல்லாம் பூஜையறையில்தான் !"

தலைப்பால் கையைத் துடைத்துக்கொண்டு தாயி அதிலேயே வெற்றிலையை ஏந்தியபடி அன்புகனிந்த குரலில் பேசினாள் : "ஹரே கிருஷ்ணா! "

"ஜய் கிருஷ்ணா" என்றபடியே நந்தோ இடுப்பில் செருகியிருந்த புகையிலையை எடுத்தாள்.

இருவரும் சூரியனுக்கு முதுகைக் காண்பித்தபடி சற்றே தள்ளி அமர்ந்தனர். நந்தோ வெற்றிலைப் பெட்டியிலிருந்து இரண்டு

பாக்குத் துண்டுகளையும் ஒரு துண்டுப் புகையிலையையும் போட்டுக் கொண்டு வெற்றிலைக்குப் புதுமணம் கொடுத்தாள். வெற்றிலைப் பெட்டியை இடுப்பில் வைத்துக்கொண்டு கால்களை நீட்டியபடி பேசினுள் : ''உங்கள் எல்லோருடைய புண்ணியத்தால் இன்னும் நான் பழைய காலத்தவளாகத்தான் இருக்கிறேன். காலையில் கோமதியில் ஸ்நானம் செய்துவிட்டு நேராகப் பூஜையறைக்குச் சென்றுவிடுவேன். எனக்கு எந்தக் குடும்பத்தினருடனும் தொடர்பு கிடையாது. பூஜையிலேயே மூன்றரை மணி நேரத்தைக்கழித்து விடுவேன்.''

"உன் வீட்டில் எத்தனை சாமிபடங்கள் இருக்கின்றன;'' தலையைக் கோதியபடி தாயி கேட்டாள்.

''எங்கள் வீட்டிலா? ராதாகிருஷ்ணன் இருக்கிறது. லக்ஷ்மி இருக்கிறது. பாலகிருஷ்ணன் விக்கிரமும் இருக்கிறது. கணேசர், லட்டுக்கண்ணன், விஷ்ணு, பத்திரிநாதர், ஜகந்நாதர், மகாதேவர் சாளிக்கிராமம்—இத்தனைதான் விக்கிரகங்கள். பாக்கியெல்லாம் படங்கள்.''

"என்னிடம் கணேசர் விக்கிரகம் இல்லை. முதலில் இருந்தது, எலிச்சனியன் எடுத்துக்கொண்டு போய்விட்டது." சேலைத் தலைப்பைத் தலையின்மீது போட்டுக்கொண்டு தாயி கூறினுள்.

"மற்றொரு விக்கிரகம் வாங்கிக் கொள்வதுதானே, தாயி. பூஜையில் முதல் முதலாகக் கணேசர்தான் இருக்கவேண்டும். அவர் தானே வெற்றியைக் கொடுக்கிறவர்!''

'' எனக்கு என்ன வெற்றி வேண்டிக் கிடக்கிறது. 'கடவுளிடம் அசையாத பக்தி இருந்தால், அதற்கெதிரே முக்திகூட பெரிதில்லை' என்று பாகவதத்தில் சொல்லியிருக்கிறதே!''

'' ஆமாம், தாயி! அப்படிப்பட்ட பக்தி இருந்தால் போதும், ஏழேழுபிறவிகளிலும் கடைத்தேறிவிடலாம். அன்று கதையில் கேட்டேன்...''

''கதையா? அதெங்கே சொல்கிறுர்கள்?'' தாயி இடையே கேட்டுவைத்தாள். அவள் கதை கேட்கவோ, கோமதி—கங்கை நதிகளில் ஸ்நானம் செய்யவோ செல்வதில்லை. கோகுலரின் கோவிலுக்குச் சென்று காலையில் பகவானைத் தரிசித்துவிட்டுத் திரும்புவாள். ஏழேழுபிறவிகளில் அவளுடைய பகைவராக இருக்கும் மக்கள், சிறுவர்—சிறுமியர், இளைஞர்கள், கிழவர்கள் எல்லோரும் அவளைச் சுற்றிக்கொண்டு ''தாயி! இன்னும் உனக்குச் சாவு வரவில்லையா?'' என்று கேட்டுவைப்பார்கள். பாதை யெல்லாம் இப்படி அவர்கள் சீண்ட, தாயி மூச்சுத் திணறியபடி அவர்களைத் திட்டிக்கொண்டே நடப்பாள். அவளுக்கு உலகத்தைக் கண்டாலே வெறுப்பு! அகில பிரம்மாண்டத்தில்

அவளுக்குப் பிடித்தவள் நந்தோ ஒருத்திதான். உலகத்துக் கதைகளையெல்லாம் அவளுக்குச் சொல்ல நந்தோவே அவளிடம் செல்வது வழக்கம்.

நந்தோ கூறினாள்: ''அடுத்த தெருவில் காசியிலிருந்து ஒரு பௌராணிகர் வந்திருக்கிறார். அவர் கதை சொல்லும் அழகை என்னவென்று சொல்வேன்? அவரவர் செய்த நல்வினைப்பயன் மனிதப்பிறவியை மேன்மையடைச் செய்கிறது என்று அவர் சொன்னார்.''

''அவரவர்களுக்குத் தக்கபடிதானே அது இருக்கும்! இப்போதெல்லாம் உலகத்துப் போக்கே கெட்டுப் போய்விட்டது. சனியன், பன்னாவின் பெண்களைப் பார்! பி. ஏ., எம். ஏ., படித்துவிட்டு ஆபீசில் வேலை பார்க்கிறதுகள். சைக்கிள் வேறு விட ஆரம்பித்து விட்டதுகள்!''

"நாலுகாலையும் பரப்பிக்கொண்டு கலியுகம் நிற்கிறது, தாயி! யார் யாரைச் சொல்வது? நம் வீட்டில்மட்டும் அட்டகாசத்துக்குக் குறைவா என்ன? சங்கரும் அவனுடைய மனைவியும் படுக்கையை விட்டு எழுந்திருக்க எட்டு மணியாகிறது. 'ஸ்டவ்' வாங்கியிருக்கிறான் அவன். அதைப் பற்றவைத்து முட்டை, மீன் என்று என்னவெல்லாம் அவள் தயார் செய்கிறாளோ தெரியாது. இருவரும் ஒன்றுசேர்ந்து சாப்பிடுகிறார்கள். இப்படியிருக்கிறது அவர் செய்த நல்வினைப்பயன்! மனியாவின் மனைவி இருக்கிறாளே, சின்னவளுடன் சேர்ந்து உட்கார்ந்துகொண்டு சாப்பிடுகிறாள். இவர்களுக்குக் குரு யார் தெரியுமா? உன் வீட்டில் புதுசாகக் குடித்தனம் வந்திருக்கிறாளே, அவள்தான். அதை ஏன் கேட்கிறாய் போ! போதும் போதும்!''

''பாவமுட்டை! புழுத்துச் சாகட்டும். என்னால் சாபமிடாமல் இருக்க முடியாது!''

தன் வீட்டில் குடியிருக்கும் வர்மா, மிஸஸ் வர்மாவிடம் தாயிக்கு விசேஷமான வெறுப்பு. வர்மா கலப்பு மணம் புரிந்துகொண்டு ஆரியசமாஜ மாளிகையிலிருந்து திரும்பியதும் அவர்களிருவரின் வீட்டாரும் கதவை இறுகத் தாழிட்டுக்கொண்டனர். மிஸ்டர் வர்மா ரேடியோ ரிப்பேர் செய்வதில் நிபுணர். உடனே ஒரு சிறு கடைக்கு அவர் சொந்தக்காரரானார். அவர் தந்தையிடமிருந்து சொத்தைப் பிரித்து வாங்கிக்கொண்டு ஒட்டலில் தங்கினார். வீடு தேடித்தரும் கமிட்டியின் அங்கத்தினரை நாடி அலைந்தார். வீட்டைக் கண்டுபிடித்துக் கூறினால், நாங்கள் 'அலாட்' செய்கிறோம் என்று அன்பர் ஒருவர் கூறினார். வீடு தேடிக்கொண்டிருந்த வர்மாவிற்குத் துவாரகாதாஸ் அகர்வாலின் பழைய வீடு கிடைத்தது. இருபது ஆண்டுகளுக்கும் அதிகமாக மூடிக்கிடந்த

அந்த வீட்டின் ஒரு பகுதியில் ராஜ்பகாதுரின் முதல் மனைவி தாயி இருந்து வந்தாள். பேய் வாழும் வீடு என்று கருதப்பட்டு வந்தது அது. அந்த வீட்டுடன் ராஜ்பகாதுருக்கு ஒரு சம்பந்தமும் கிடையாது. அது தாயிக்குச் சொந்தமாகியிருந்தது. வெளி அறைகள், மாட்டுக்கொட்டகை முதலியவற்றை வாடகைக்கு விட்டிருந்தபோதிலும் வீட்டிற்குள் யாரையும் தாயி குடித்தனம் வைக்கச் சம்மதிக்கவில்லை. மிஸ்டர் வர்மா 'அலாட்மென்ட் கமிட்டி'யிடம் அறிவித்து அதன் வற்புறுத்தலின் பேரில் அந்தப் பகுதியைத் தாம் குடியிருக்க வாங்கிக் கொண்டுவிட்டார். தாயி உட்கார்ந்தால்—எழுந்தால் வர்மா தம்பதிகளைச் சபித்துக் கொண்டேயிருந்தாள்.

நந்தோ கூறினாள் : "இப்போது குரு தம்பதிகள் இங்கே வந்து விட்டார்கள். இனிமேல் இங்கும் வசந்தந்தான்! க்ஷத்திரியன்—பார்ப்பான்—செட்டி—கோமுட்டி எல்லோரையும் ஒன்றாக்கி விட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்கள். இப்படிப்பட்ட கடையர்களுடன் சங்கர்—மனியாவின் மனைவிமார்கள் ஒன்றாய் உட்கார்ந்து கொண்டு சாப்பிடுவார்கள்போல் இருக்கிறது! வேறு வினையே வேண்டாம் போ!''

யாரோ தாயியின் வீட்டுக் கதவைத் தட்டும் ஓசை கேட்டது.

தாயி நந்தோவிடம் கூறினாள் :—"நாசமாய்ப் போக! யார் வந்திருக்கிறார்கள் என்று பார், போ!''

"அகதி இருக்கிறானே, நம் வீட்டில் குடியிருப்பவன், அவன் மாட்டுக்கொட்டகையின் மாடி அறைக்குப் புதிய ஆசாமி ஒருத்தனை அழைத்து வந்திருக்கிறான்'' என்று நந்தோ கூறினாள்.

## 3

ராஜ்பகாதுரின் மாட்டுக்கொட்டகை வீட்டு மாடியில் ஓவியக் கலைஞன் சஜ்ஜன் குடிவந்துவிட்டான். உணர்ச்சிவசப்பட்டு இங்கே குடிவந்தது எவ்வளவு பெரிய தவறு என்பதை அவன் வெகு விரைவில் புரிந்து கொண்டுவிட்டான். தெருக்களில் நடக்கும் நிகழ்ச்சிகளைப் புரிந்துகொண்டு மக்களின் வாழ்க்கையை ஓவியத்தில் வடிக்கலாம் என்று கருதி அவன் இங்கே குடிவந்தான். ஷாஹநஜப் சாலையில் அவனுக்கு ஓர் அறை இருந்தது. அமீனாபாத், கேசர்பாக் இந்த இரண்டு இடங்களிலும் இவனுக்குச் சொந்த வீடுகள் இருந்தன. அவற்றிலிருந்து அவனுக்கு மாதந்தோறும் ஆயிரம் ரூபாய் வாடகையே கிடைக்கிறது. முன்னோரின் சொத்து, சீனத்தின் சரித்திரப் புகழ்பெற்ற நெடுஞ்சுவரைப்போல்,

இல்லாமை என்னும் பகைவரை அடியோடு ஒழித்துவிட்டது. அந்த இல்லாமைதானே கலை வழிக்கு முட்டுக்கட்டை போடுகிறது! இயற்கை எழில், உருவப்படம் இவற்றைத் தீட்டுவதில் சஜ்ஜன் நிபுணன். அமர்நாத்திலிருந்து கன்யாகுமரிவரை, துவாரகை யிலிருந்து மணிப்பூர், ஆஸாம்வரை தன் தாயகத்து நாற்றிசை களையும் அவன் சுற்றியிருக்கிறான். பாரதத்துப் புராதனப் பெருமைகள்—இலக்கியம், சிற்பம், ஓவியம், நடனம், இசை என்று எல்லாவற்றையும்-கண்டு பரவசப்பட்ட சஜ்ஜன், இன்று அதன் சமூகவாழ்வில் பண்பற்றுக்கிடக்கும் அவல நிலைக்குக் காரணம் கண்டுபிடிக்கத் துடித்தான். இன்று எங்குமே புதிய படைப்புக் கான அறிகுறியே தென்படவில்லையே! வாழ்க்கை நாற்புறங் களிலும் தடைப்பட்டு நிற்கிறது. ஓவியம் தீட்டப் புதிய விஷயம் தேடினாலும் சஜ்ஜனுக்குக் கிடைக்கவில்லை! இதே சிக்கலில் தத்தளித்துக் கொண்டிருந்த அவனுக்கு, 'சமுதாயத்தின் அவல நிலைக்குரிய காரணத்தை அதற்கிடையே இருந்துகொண்டுதான் கண்டுபிடிக்கப்படவேண்டும்' என்று தோன்றிற்று. ஒரு நாள் பேசிக்கொண்டிருந்தபோது, நண்பன் சர்தார்ஜி தன் வீட்டிற்கருகே ஓர் அறை தேடித்தருவதாக சஜ்ஜனுக்கு வாக்களித்தான். சர்தார்ஜி சஜ்ஜனுடைய சித்திரங்களுக்குச் சட்டம் போட்டுக் கொடுக்கும் நண்பனாதலால் அவன் கூறியதைக்கேட்டு சஜ்ஜன் பெரிதும் மகிழ்வடைந்தான். தன் வீட்டிற்குப் பக்கத்தில் இருக்கும் ஒருவனைப் பழிவாங்கவே தன்னைப் பயன்படுத்திக் கொண்டிருக் கிறான் என்பது பிறகுதான் சஜ்ஜனுக்குத் தெரியவந்தது.

மாடுகள் நிற்கும் அந்தச் சிறு வீட்டின் மாடியில் அறை ஒன்று காலியாக இருந்தது. கீழே இரண்டு பெரிய அறைகளும், இரண்டு சிறிய அறைகளும் இருந்தன. கீழே உள்ள பகுதிகளில் இரண்டு அகதிக் குடும்பங்கள் குடியிருந்தன. ஒருவன் சர்தார்ஜி மரவேலை செய்பவன்; மற்றவன் தள்ளுவண்டியில் சாமான்களை விற்பவன். வண்டிக்காரனுக்கு ஒரு வாலிப மைத்துனன் இருந்தான். அவன் அந்த வீட்டு மாடி அறையில் இருந்து வந்தான். மரவேலை செய்யும் சர்தார்ஜியின் குடும்பத்தைவிட வண்டிக்காரனின் குடும் பத்தோருக்குத் தாராளமாக இடம் கிடைக்கவே சுகமாக வாழ்ந்து வந்தனர். காதல் நோயினால் பீடிக்கப்பட்ட வாலிபன் ஒரு நாள் அந்த அறையைவிட்டு வெளியே சென்றுவிட்டான். அவனுடைய வரும்படியின் பெரும்பகுதியை அனுபவித்துவந்த வண்டிக்காரனின் குடும்பத்திற்கு இது மாபெரும் நஷ்டமாகிவிட்டது. மாடி அறையை வண்டிக்காரன் அன்றிலிருந்து தன் உரிமையாக்கிக் கொண்டு வாழலானான். இதைக் கண்டு இயற்கையாகச் சர்தார் ஜிக்குப் பொறாமை வந்தது. இருவருக்குமிடையே ஓரிருமுறை

சச்சரவும் ஏற்பட்டுவிட்டது. வேறு யாராவது குடியிருக்க வந்தால் தான் அந்த அறையை விட்டுவிடுவதாக வண்டிக்காரன் கூறினன். செப்பிடுவித்தை செய்தோ, மந்திரம் செய்தோ தெரியாது, வண்டிக்காரன் தாயியைச் சர்தார்ஜிக்கு எதிராகத் தன் வசப் படுத்தி வைத்திருந்தான். எந்த மனிதன் வீடு வேண்டும் என்று வந்தாலும் அவனைத் தான் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்ற பிடிவாதத்துடன் தாயி வெளியே அனுப்பிவந்தாள்.

சர்தார்ஜி தன் அண்டைப் பகுதிக்காரனுடைய சூழ்ச்சிமிக்க வெற்றியினல் தாக்குண்டு அவனைப் பழிக்குப்பழி வாங்கத் திட்ட மிட்டிருந்தான். சஜ்ஜன் வீடு வேண்டும் என்று குறிப்பிடவே அந்த அறையைக் காண்பித்துவிட்டான். தாயி, சஜ்ஜன் இருவருக்கும் நல்லவனுக இருந்துகொண்டு தன் குறிக்கோளை நிறை வேற்றிக்கொள்ளச் சர்தார்ஜிக்கு இது நல்ல வாய்ப்பாயிற்று. ஏழு ரூபாய் வாடகை பெறும்படியான அறைக்கு, இருபத்தைந்து ரூபாய் என்று கூறி, சஜ்ஜனை ஒப்புக்கொள்ளச் செய்துவிட்டான். சர்தார்ஜி கூறியதை மகிழ்வுடன் தாயி வரவேற்ருள். மறுநாள் சஜ்ஜனுக்கு இடத்தைக் காண்பித்தான் சர்தார்ஜி. அப்போது வண்டிக்காரன் சாமான்களை விற்க வெளியே சென்றிருந்தான். அவனுடைய மனைவியின் மறுப்பு வார்த்தையைப் புறக்கணித்து விட்டு சஜ்ஜனுக்கு சர்தார்ஜி அந்த அறையைக் காண்பித்தான். அப்போதே தாயியை அறிமுகப்படுத்தி ஒரு மாதத்து வாடகை யையும் முன் பணமாகக் கொடுத்துவிட்டான்.

மறு நாள் தன் இரு நண்பர்களையும் அழைத்துக்கொண்டு தன் அறையைக் காண்பிக்க சஜ்ஜன் வந்தான். வண்டிக்காரன் மாடியறையைத் திறக்க மறுத்துவிட்டான். குடியும் குடித்தனமு மாக இருப்போருக்குத்தான் அந்த அறை அளிக்கப்படும் என்று அவன் கூறினன். சஜ்ஜன் துணுக்குற்ருன். அவனுடைய நண்பர் கர்னல் சாஹேப், மஹிபால் இருவருங்கூடக் கோபமடைந்தனர். சர்தார்ஜி தாயியிடம் செய்தியைத் தெரிவித்து அவளுக்கு ஆத்திர மூட்டினன். விஷ்ணு சஹஸ்ர நாமம் படித்துக்கொண்டிருந்த தாயி, அதைவிட்டுவிட்டு வண்டிக்காரனை ஆயிரம் வசைகளால் திட்டிக்கொண்டு வெளியே வந்தாள். வேறுவழியின்றி வண்டிக் காரன் இடத்தைக் காலிசெய்து விட்டான்.

இப்படிப்பட்ட சாதாரணமான அறையில் இத்துணைச் சிறந்தவர் குடியிருப்பது என்ருல், அக்கம்பக்கத்தோர் கூடிப் பேசிக்கொள்வது இயற்கைதானே? சஜ்ஜனின் புகழுக்கும் பிரசித்திக்கும் காரணம் அறிந்த மக்களும் அங்கிருக்கத்தான் செய்தனர். தட்டான் பபூதியின் இளைய மகன் சங்கர்லால் அந்தப் பேட்டையைச் சேர்ந்த ஓரிரு இளைஞர்களுடன் சஜ்ஜனைக் காண வந்தான். மக்கள்

வாழ்க்கையைச் சித்திரத்தில் தீட்டும் மாபெரும் இலட்சியத்தைப் பாராட்டி அவர்கள் பிரசாரம் செய்தனர். வதந்திகளைப் பரப்பும் மக்களிடையே அந்த இலட்சியம் புதிய அர்த்தத்துடன் பரவ ஆரம்பித்தது. பேட்டையிலுள்ள இளம் பெண்களை ஓவியத்தில் தீட்டித் தருவதாக ஆசை காண்பித்துத் தன் சுயநலத்தைப் பூர்த்திசெய்து கொள்வதுதான் இந்த ஓவியன் அவனுடைய நண்பர்கள், இவர்களது குறிக்கோள் என்று வண்டிக்காரனும் மற்றும் சிலரும் கூறினர். வண்டிக்காரன், நகரத்து ஓரிரு பிரமுகர்கள் ஆகியோரின் கையொப்பத்துடன் இரண்டு பத்திரிகைகளில் புகார் கடிதமும் எழுதிப் பிரசுரித்துவிட்டனர். ''நல்ல குடித்தனக்காரர்களுக்கிடையே தனவந்தர் வீட்டு இளைஞர்கள் செய்யும் இந்த அநீதத்தை எதிர்த்து நாங்கள் உண்ணுவிரதம் இருப்போம்'' என்று பயமுறுத்தியும் இருந்தார்கள்.

சஜ்ஜன் இதைப் பார்த்துத் திடுக்கிட்டான். அவன் தன் நிலைமையை விளக்கிப் பத்திரிகையில் ஓர் அறிக்கையும் விட்டிருந்தான். அக்கம்பக்கம் வாழும் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகும் வழியைப்பற்றியும் சிந்தித்தவண்ணம் இருந்தான். காரணமின்றி எழுந்துள்ள விரோதத்திற்குப் பயந்து அவன் பின்வாங்க விரும்பவில்லை. அது அவனது சுபாவமுமில்லை. உறுதியுடன் நின்று பேட்டை மக்களின் மனத்தை வெல்ல அவன் நிச்சயித்தான்.

மாலை நேரம் ஆகிவிட்டது. சஜ்ஜனிடம் இருந்த சிகரெட்டுகள் தீர்ந்துவிட்டன. கடைக்குச் சென்று வாங்கிவரக் கிளம்பினான். எதிரே ராஜ்பகாதுர் நின்றுகொண்டிருந்தார். தாயிக்கும் அவருக்குமுள்ள நெருங்கிய உறவை அவன் அறிந்திருந்தபோதிலும் வண்ணங்களுடன் விளையாடும் அவனுக்கு—போசீதா சந்து, தனவந்தர் ராஜ்பகாதுர்—இந்த இரண்டு எதிர்மாறான தத்துவங்களைக்கண்டு திக்பிரமை பிடித்துவிட்டது.

''நீங்களா?'' உடனே சஜ்ஜன் கேட்டான். ராஜ்பகாதுர் ஷாநஜப் சாலையில் அவனுடைய வீட்டுக்கு அடுத்த வீட்டில் இருப்பவர். இரு வீட்டோரிடமும் இன்றும் அன்புப் பிணைப்பு இருந்துவந்தது. சஜ்ஜன் அவரைச் ''சித்தப்பா'' என்று அழைப்பது வழக்கம். காலஞ்சென்ற அவனுடைய தாத்தாவும் அவரும் நெருங்கிப் பழகி வந்தவர்கள்.

துவாரகாதாஸ் அவனைக் கண்டு சற்று சங்கோசம் அடைந்தார். அவர் தம் மனைவியிடம் தன் பேரனுக்கு உயிர்ப்பிச்சை கொடு என்று கேட்க வந்திருந்தார். இளைய மனைவிக்குப் பிறந்த பேரனுக்குத் திருமணம் நிச்சயமாகியிருந்தது. காலையில் அந்தச் செய்தியைத் தெரிவிக்க இனிப்புப் பண்டங்களுடன் வேலையாளை அவர் தாயியிடம் அனுப்பியிருந்தார். அவள் பேரனைச் சபித்து

விட்டுத் தின்பண்டத்தையும் திருப்பியனுப்பிவிட்டாள். சிறிது நேரத்தில் பேரனுக்குக் கடுமையான காய்ச்சல் கண்டுவிட்டது. 'தாயிதான் ஏதோ மந்திரம் போட்டிருக்கவேண்டும்' என்று எல்லோரும் சந்தேகித்தனர். நெஞ்சடைக்க, ராஜ்பகாதுரால் ஒன்றுமே பேச முடியவில்லை. அவர் அவனுடைய தோளின்மீது அன்புடன் தன் கையை வைத்தார். பாசம் எனும் சுமையைப் போட்டுக் கையும் களவுமாகப் பிடிபடும் குற்றவாளியைப்போல் அவர் அவனுடைய அனுதாபத்தையும் இரக்கத்தையும் கெஞ்சிக் கேட்பதுபோன்று இருந்தது அவரது செய்கை. உடனே தம்மைச் சமாளித்துக்கொண்டு அவர் கேட்டார்: "இங்கே எப்படி நீ வந்தாய்?"

"நான் இப்போது இந்த வீட்டின் மாடியில் இருக்கிறேன். பேட்டையில் வாழும் மக்களை 'ஸ்டடி' செய்து கொண்டிருக்கிறேன்."

"இந்த வீடு என் முன்னோர்களுடையது. தெரியுமா உனக்கு?"

"ஆமாம் சார், தெரியும். இங்கே வந்த பிறகுதான் தெரியும். நானே உங்கள் உதவியை நாடிவர இருந்தேன். சரியாக என்னைப் புரிந்துகொள்ளாததால் இந்தப் பேட்டை மக்கள் என்னை அடிக்கடி துன்புறுத்துகிறார்கள்!"

உதவியை நாடும் யாசகனை ஆதாரமாகக்கொண்டு சலிப்படைந்த தம் அகந்தையைத் தட்டி எழுப்பி மனைவியின் வீட்டுக் கதவைத் துணிந்து தட்டினார் ராஜ்பகாதுர்.

"யாரது? சனியன்! கதவை எவனவன் உடைப்பவன்?" எரிச்சலுடன் உள்ளிருந்து தாயி சீறினாள்.

"கதவைத் திற" சுபாவமாகக் கம்பீரமாக எழும் குரல் இன்று மிகவும் முயற்சி செய்ததன் பேரில்தான் தன் இயற்கையான அதிகாரக்குரலைப் பெற்றது.

படபடவென்று தாயி வெளியே வந்தாள். கதவைத் திறந்தாள். கணவனைப் பார்த்து மௌனமாகி விட்டாள் தாயி. சுமார் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு கணவன்—மனைவி இருவரும் ஒருவரையொருவர் இவ்வளவு அருகில் பார்த்துக் கொள்கின்றனர். மனைவியைக் கண்டு துவாரகாதாசின் உள்ளத்தில் மோகம் எழவில்லை; பயமே மூண்டது. பேசுவதற்கு ஆயத்தம் செய்பவராய் அவர் ஆரம்பித்தார்: "இந்த இளைஞன் யார் தெரியுமா? கன்னோ மல்ஜியின் பேரன்."

"இருக்கட்டுமே! எனக்கென்ன?" என்றபடியே தாயி உள்ளே சென்றாள். துவாரகாதாஸ் பின்தொடர்ந்து சென்றார். ஒரு காரணமும், குறிக்கோளுமின்றிச் சஜ்ஜனின் கால்களும் அவரைத் தொடர்ந்து சென்றன.

ஈரமான வாயிற்படி; சிறு தாழ்வாரம்; முற்றத்தில் ஒரு லாந்தர் விளக்கும் சில பொருள்களும் வைக்கப்பட்டிருந்தன. தாழ்வாரத்தின் இடது பக்கத்தில் அடுப்பு எரியும் ஒலி எல்லோரையும் அந்தப் பக்கம் ஈர்த்தது.

ஒரு தட்டில் மாவால் செய்த ஒருருவத்தைப் பார்த்த துவாரகா தாஸ் நாகத்தைக் கண்டதுபோல் நடுங்கினார். தாயி தட்டை எடுத்துத் தாழ்வாரத்திலிருந்த தூணருகே வைத்தாள். முற்றத்தில் இருந்த லாந்தரை எடுத்துக்கொண்டு தாழ்வாரத்திற்கு வந்தாள். ராஜ்பகாதுர் ஊஞ்சல்போல் இருந்த கட்டிலின்மீது விரித்திருந்த அழுக்கு விரிப்பில் பயபக்தியுடன் உட்கார்ந்துகொண்டார். சஜ்ஜன் நகர்ந்து கால்பக்கமாக அமர்ந்தான். தாயி தரையில் அமர்ந்தபடி கணவனுடன் பேசினாள்: "எதற்காக வந்திருக்கிறீர்கள்?"

துவாரகாதாஸ் சிரிக்க முயன்றபடி பதிலளித்தார்: "உன்னைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன் ஜானகீசரண்..."

தட்டில் வைத்திருந்த மாவுப் பொம்மை சஜ்ஜனின் கவனத்தை ஈர்த்தது. 'தாயிகூடக் கலையில் வல்லவள்தான்' பாராட்டிய படியே அவன் அந்தப் பொம்மையை எடுத்துப் பார்க்க விரும்பினான்.

தாயி கோபத்தால் சிவந்து போனாள். துவாரகாதாசின் பேச்சு அப்படியே நின்றுவிட்டது. சஜ்ஜன் அந்த மாதிரியான கெட்ட வசைகளைக் கேட்டதே கிடையாது. அப்படிப்பட்ட வசைகளை அவன் கேட்க நேர்ந்தது. துவாரகாதாஸ் அவளைச் சமாதானப் படுத்த முயன்று, பிறகு மௌனமாகிவிட்டார்.

கடுமையான மனைவி, மென்மையான கணவன்—இருவரின் குரல் ஜாலத்தினின்றும் தப்பி உடனே அவன் வெளியே வந்துவிட்டான்.

துவாரகாதாஸ் தங்கிவிட்டார். அவர் மனைவியிடம் தம் குடும்பம், பேரன் எல்லோருக்கும் உயிர்ப்பிச்சையளிக்கும்படி வேண்டிக்கொண்டார். மாவுப் பொம்மை, அவளை அரக்கத் தன்மைமிக்க கொலைகாரியாய்க் காட்சியளிக்கவைத்து, கவர்னர், மந்திரிகள், தனவந்தர்கள் எல்லோருடைய மதிப்பிற்குமுரிய மனிதரைக் கெஞ்சிக் கேட்கவைத்தது.

* * * *

கடைத் தெருவிலிருந்து சிகரெட் வாங்கிவிட்டுச் சஜ்ஜன் வீடு திரும்பினான். கர்னல் சாஹேப், மஹிபால் இருவரும் அறையில் உட்கார்ந்திருந்தனர்.

கர்னல் சாஹேப் நகீன்சந்த் பெயர் பெற்ற மனிதன். லக்னோவிலுள்ள மிகப்புராதனமான மருந்துக் கடைக்குச் சொந்தக் காரனுங்கூட. சமூகவேலைகளுக்காக உள்ளம் கனிந்து கொடை

யளிக்கும் வள்ளல்களில் ஒருவன் ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பு மஹிபால்தான் அவனைச் சஜ்ஜனுக்கு அறிமுகம் செய்து வைத்தான். அந்த அறிமுகம் இப்போது நெருங்கிய நட்பாகி விட்டது. சஜ்ஜன், மஹிபால், கர்னல் மூவரும் இணைபிரியா நண்பர்கள். எழுத்தாளன் மஹிபால் இவ்விருவரைக் காட்டிலும் பணவசதி குறைவாக உள்ளவன். ஆனால் உழைப்பாளி, நேர்மையானவன்; நட்பைக் காப்பவன்.

சஜ்ஜன் அறையில் நுழைந்ததுமே கர்னல் கேட்டான். "மகா கவி போர் உன்னைச் சந்தித்தாரா?"

"இல்லையே, இங்கே வந்திருந்தாரா?"

"ஆமாம். நான் அவரை ஒரு வழியாக அனுப்பி வைத்தேன்."

"இங்கேயும் போரடிக்க வந்துவிட்டாரா?"

மஹிபால் கூறினான் :—"இந்தப் பேட்டையைச் சேர்ந்த சனியன்கள் உன்னைப்பற்றிப் பத்திரிகைகளில் புகார் செய்ததுமன்றி இந்த இடத்தைப்பற்றியும் உலகம் முழுதும் பறை சாற்றியிருக்கிறார்களே! கவிஞரை அனுப்புவதற்குள் நாங்கள் அரும்பாடுபட்டு விட்டோம்!"

சிகரெட்டைக் கொளுத்தி வாயில் வைத்தபடியே, சஜ்ஜன் சால்வையால் நன்றாகப் போர்த்திக் கொண்டு அமைதியாகச் சிந்தனையில் ஆழ்ந்தான். கர்னல் அவனை உற்றுப் பார்த்துக் கேட்டான்:— "ஏன், இன்று ஏதாவது புதிய நிகழ்ச்சி நடந்ததா?"

"இல்லை, அப்படியொன்றும் நடக்கவில்லை. துவாரகாதாஸ்ஜி இங்கே வந்திருக்கிறார்."

"ராஜ்பகாதுரா?"

"ஆமாம். தம் பட்டமகிஷியின் அரண்மனையில் இருக்கிறார். அந்தப் பெண்மணி பலே சாமர்த்தியக்காரியப்பா; மந்திரப் பொம்மைகள் செய்கிறாள்."

சற்று நேரத்திற்கு முன்பு தனக்கு நேர்ந்த அனுபவத்தை சஜ்ஜன் விவரித்துக் கூறினான். கர்னல் கவலையுற்றான்:— "நீ அந்தப் பொம்மையைத் தொட்டிருக்கக் கூடாது."

"எனக்கென்ன தெரியும்! தாயி பொழுதுபோக்காக இந்தக் கலையில் ஈடுபட்டிருக்கிறாள் என்று நினைத்தேன். உண்மையில் மஹிபால், நான் அந்தப் பொம்மையைப் பார்த்து மட்டற்ற மகிழ்ச்சியடைந்தேன். ஆனால்.." சஜ்ஜன் சிரித்தான். அவன் 'ஆஷ்ட்ரே'யில் சாம்பலை உதறியபடி கூறினான் :— "ட்ரெடிஷனல் இண்டியன் ஸ்டைலில் (இந்திய மரபுப்படி) நான் கேட்ட வசைகளுக்கு அளவே இல்லை."

யாரோ மாடிப்படி ஏறிவருவது தெரிந்தது. சஜ்ஜன் திரும்பிப்

பார்த்தான். ராஜ்பகாதுர் வாசற்படியில் நின்று கொண்டிருந்தார்.

சஜ்ஜன் மிகவும் மரியாதையுடன் எழுந்து நின்றான். கர்னல் சாஹேபின் முகத்தில் பணிவின் கிரணங்கள் பளிச்சிட்டன. அவன் சிரம் பணிந்து கரங்குவித்தான். மஹிபால் அப்படியே உட்கார்ந்திருந்தான்.

ராஜ்பகாதுர் யாரையும் கவனிக்கவில்லை. கையால் சமிக்ஞை செய்து சஜ்ஜனை அழைத்தார் :—"மகனே, சற்று இங்கே வா!''

சஜ்ஜன் உடனே எழுந்து வெளியே சென்றான். அவனுடைய தோளில் கை போட்டுக்கொண்டு இறங்கியபடியே "இன்றைய நிகழ்ச்சிபற்றி யாரிடமும் சொல்லாதே'' என்று கேட்டுக் கொண்டார்.

"ஒரு போதும் சொல்ல மாட்டேன். என்னை நீங்கள் நம்பலாம்.''

"அவளுக்கு அறிவு பிசகிவிட்டது.''

''எனக்குத் தெரியும், சித்தப்பா?''

''என்ன செய்வது? எல்லாம் தலைவிதி. சரி, நீ யாரிடமும் சொல்லாதே. உன் ஆருயிர் நண்பர்களிடம் கூடத்தான். நான் லாலா ஜானகிசரணிடம் சொல்லிவிட்டுப் போகிறேன். உனக்கு இங்கே ஒருவிதமான கஷ்டமும் நேராது!''

சஜ்ஜன் அவரைத் தெரு முனை வரை விட்டுவிட்டு வந்தான். பெருமிதமுள்ள துவாரகாதாசின் முகத்தில் கவலையும் சோர்வும் நிழலாய்ப்படிந்திருந்தன. திரும்பிய சஜ்ஜன், ''இவர் வாழ்வதும் சுகவாழ்வா ?'' என்று தன்னுள்ளேயே சொல்லிக் கொண்டான்.

## 4

நந்தோ லாலாவையும் அவனுடைய மனைவியையும் அடிக்கத் தாயிக்கு மந்திராலோசனை அளித்தாள். ஆறு ஆண்டுகளுக்கு முன்பு மனியாவின் திருமணத்திற்காக ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தபோது பபூதியின் வீட்டில் நகைகள் களவு போயின. தங்கச் சாவிக்கொத்து, காசுமாலை, கங்கணம், வளையல்கள் இவற்றைச் செப்பனிட்டு மெருகு போடுவதற்காகத் தாயி ஒரு டப்பியில் வைத்திருந்தாள். இரவில் அந்த டப்பியே காணுமற் போய்விட்டது. மறுநாள் காலையிலிருந்து வீட்டு வேலையாளைக் காணோம்; வாசற்கதவு திறந்திருந்தது. அவன்மீது முழுப் பழியும் சுமத்தப்பட்டது. தொழிலுக்கு இடையூறு நேரப் போகிறதே என்று அஞ்சி, பபூதி போலீசில் புகார் செய்யவில்லை. தாயி தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்துவிட்டாள். திருட்டுப்போன ஒட்டியாணம்

வேலையாளுடன் ஆளுக்குப் பாதி என்ற உடன்படிக்கையின் பேரில் நந்தோவை வந்தடைந்தது. அந்த நாட்களில் லாலாவின் மனைவியுடன் நந்தோ சுமுகமாக இருந்து வந்தாள். நந்தோ அவளுடைய வீட்டிலேயே அதை விற்க ஏற்பாடு செய்தாள். சாக்குபோக்கிலேயே ஆண்டுகள் பல கழிந்தனவே தவிர நந்தோவிடம் ஒரு செல்லாத காசுகூட வந்து சேரவில்லை. வாய்விட்டு அவர்களிடம் நந்தோவினுல் சண்டையிட முடியவில்லை. நான்கைந்து நாட்களுக்கு முன்பு கோமதி நதிக்கரையில் லாலாவின் மனைவியுடன் நந்தோ பலத்த சண்டைபோட ஆரம்பித்தாள். படித்துறையில் இருந்த ஆடவர் பெண்டிர் கூட்டத்திற்கு முன்னிலையில் நந்தோவைத் திருடி என்றதோடு இல்லாமல் அவளுடைய வீட்டில் முன்பு களவு போனவற்றைப்பற்றியும் லாலாவின் மனைவி குறிப்பிட்டாள். ஆனுல் நந்தோவினுல் பதிலுக்கு அவள்மீது பழிசுமத்த முடியவில்லை. நந்தோவின் வற்புறுத்தலின் பேரில் தாயி அவர்களைக் கொல்வதற்காகப் பொம்மைகள் செய்து கொண்டிருந்தாள். அப்போதுதான் துவாரகாதாசும் சஜ்ஜனும் அவளுடைய வீட்டிற்கு வந்தனர்.

துவாரகாதாஸ் சென்றபிறகு தாயி பொம்மை செய்வதில் முனைந்தாள். நந்தோ தாயியின் வீட்டு மாடிப்படியில் மறைந்து உட்கார்ந்துகொண்டு தம்பதிகளின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். துவாரகாதாஸ் கிளம்பியவுடன் ஒன்றுமே அறியாதவளைப்போல் உள்ளே நுழைந்தாள். துவாரகாதாஸ் அவளிடம் பேசிய புகழ்ச் சொற்களால் அப்போது தாயி உள்ளம் பூரித்திருந்தாள். தன் வெற்றியை நினைந்து பெருமிதங் கொண்டிருந்தாள். மகிழ்ச்சி என்னும் துருத்தி அவளது குரூரம் என்னும் தணலை ஊதிவிட்டது. தாயி உணர்ச்சி வேகத்துடன் நந்தோவின் விருப்பத்தை நிறைவேற்றச் சித்தமானுள். லாலா அவனுடைய மனைவி இருவரும் மரணமடைய வேண்டிய ஏற்பாட்டைச் செய்துவிட்டாள். வர்மா தம்பதிகளிடையே கலகத்தை மூட்ட மசி தோய்த்த முள்ளை எடுத்தாள். அன்று மாலை லாலா ஜானகிசரணின் வீட்டிற்குத் துவாரகாதாஸ் சென்ற ஒரே குற்றத்திற்காக அவருடைய வீட்டில் நோய்கள் நடமாட ஆவன செய்தாள். கறுப்பு எள்ளை ஒரு பொட்டலத்தில் கட்டிக் கொண்டாள். மாலையில் நடந்த நிகழ்ச்சிக்காகச் சஜ்ஜனுக்குத் தண்டனையளிக்க ஒரு பொம்மை செய்தாள். கொலையையே தொழிலாகக் கொண்டிருப்போரைப்போல் ஒவ்வொருவருடைய வீழ்ச்சிக்கும் வழிவகுக்கும் அவள் அந்தத் தொழிலில் மகிழ்ச்சியுற்ருள்.

எல்லாவற்றையும் செய்து முடித்து, நந்தோவிடம் கொடுத்தனுப்பிய பிறகு, ஸ்நானம் செய்தாள்; துணியை உலர்த்தினுள்,

தூங்கச் செல்லும்போது காவலரின் கடிகாரத்தில் டாண் டாண் என்று பன்னிரண்டு மணி அடித்தது.

ஒரு மணி நேரங்கூட நிம்மதியாகத் தூங்கியிருக்க மாட்டாள். அதற்குள் இரண்டு பூனைகளின் காரணமாகத் தாயி விழித்துக் கொண்டுவிட்டாள். நான்கு கண்கள் இருளில் நெருப்பைப்போல் மின்ன, தாயி பயந்துவிட்டாள். பூனைகள் ஒன்றையொன்று சீறிக் கொண்டிருந்தன. பழிவாங்கும் ஆத்திரம் ஆக்கிரமிப்பு என்னும் நெருப்பாய் மாறி இரண்டு நெருப்புப் பந்தங்களைப்போல் ஒன்றன் மீது மற்றொன்று பாய்ந்தது. செப்பிடுவித்தை செய்யும் தாயியைப் பயம்வந்து கவ்விக் கொண்டது. பயத்தின் வேகத்தில் பூனைகளின் உருவமே பெரிதாவதுபோல் தோன்றிற்று. சண்டையிட்டுக் கொண்டிருந்த பூனைகளின் பார்வை ஒரு கணம் அவள்மீது பட்டது. அப்போது மந்திரம் செய்து ஏவிவிட்ட ஊசிபோல் அது அவளது நெஞ்சத்தைத் துளைத்தது. கிழவியின் தோய்ந்த ரத்தம் பய மிகுதியால் இன்னும் உறைந்துபோயிற்று. உயிர் போய்விடுமோ என்ற நடுக்கம் விக்கலாய் வந்து நெஞ்சை அடைத்தது. ஆத்திரம் அடைந்த பூனைகள் மறுபடியும் பாய்ந்து ஒன்றையொன்று தாக்கிக் கொண்டன.

சின்னஞ்சிறு பூனைகள் தாயிக்கு மாபெரும் விலங்குகளாகக் காட்சியளித்தன. அவை முழுத் தாழ்வாரத்தையும் அடைத்துக் கொண்டு நிற்பதுபோல் அவளுக்குத் தோன்றிற்று. சண்டையில் தீவிர வேகத்துடன் பூனைகள் தாயியின் கட்டிலருகே வந்தன. 'உர்ர்—உர்ர்' என்று பூனைகள் உறும, தாயியின் தொண்டையி லிருந்து கிளம்பிய 'ஹிஹிஹி' என்ற ஒலியும் சேர்ந்து கொண்டது. தற்காப்பின் காரணமாக வன்முறை தலையோங்கியது. சிலையின் கரங்கள் உயிர் பெற்றாற்போல் தாயி தன் கையில் தலையணையை எடுத்தாள். ஒரு வீசுவீசி அவள் பூனைகளைக் கொல்ல முயன்றாள். பூனையைக் கொன்றால் பிரயாசித்தமாகத் தங்கப் பூனையைத் தானம் அளித்தாக வேண்டும் என்பதைக் கூட அவள் மறந்து விட்டாள்!

தாயியின் தாக்குதல் பூனைகளின் போர் ஆயத்தத்தைத் தடுத்து நிறுத்தியது. அவை முற்றத்தை நோக்கி ஓடின. இப்போதுதான் தாயி சுய நினைவுக்கு வந்தாள். கட்டிலின் மறுபுறம் வைத்திருந்த கோலை எடுத்தாள். வசைமாரிகளுடன் முற்றத்தை நோக்கி மூன்றாம் பூனை போன்று விரைந்தாள். ஒரு பூனை முற்றத்திலிருந்து பாய, மற்றொன்று தாழ்வாரத்திலிருந்தும் மாடிப்படியை நோக்கிப் பாய்ந்தது. ஆத்திரத்தில் தாயி மாடிப்பக்கம் ஓடினாள். பூனைகள் ஓட, அவள் துரத்த, நள்ளிரவில் பயங்கரக் கனவைப்போல் தாயி எல்லோரையும் கலக்கமுறச் செய்தாள். குளிரில் போர்வையைச்

சுகமாக போர்த்திக் கொண்டிருப்பவரின் கம்பளியைத் திடீரென்று உருவிக் கொண்டால் எப்படி இருக்கும்? தாயியின் கூப்பாடு நள்ளிரவில் எல்லோருக்கும் அப்படி இருந்தது!

முணுமுணுத்துக்கொண்டே தாயி கீழே இறங்கினாள். கதவைத் தாழிட்டாள். தன் படுக்கையைத் தேடி வந்த அவள் திடீரென்று மழுமழுப்பாக ஏதோ இடறவே திடுக்கிட்டாள். வாயிலிருந்து வார்த்தை கூடக் கிளம்பவில்லை. அருகேயிருந்த விளக்கை எடுத்துப்பார்த்தாள். அப்போது பிறந்த பூனைக்குட்டி ஒன்று செத்துக் கிடந்தது. அதன் தலையைக் காணவில்லை. வீட்டைச் சுற்றிவந்த பூனையொன்று குட்டிபோடும் தருணத்திலிருந்தது, அவளுடைய நினைவிற்கு வந்தது. ''சனி, தொலையட்டும்!'' என்று வசையைப் பொழிந்தாள் அவள். கடுவன் அதைக் கடித்திருக்கிறது. அதனால் தான் இரண்டிற்கும் போர் மூண்டது என்பதை அவள் ஊகித்துக் கொண்டாள்.

நொண்டிக்கொண்டு ஸ்நானம் செய்யும் அறையில் வந்து தாயி காலைக் கழுவி கொண்டாள். விளக்கை எடுத்துக்கொண்டு பூஜையறைக்குள் நுழைந்தாள். பரணிலிருந்து ஒரு விசிறியை எடுத்து அதில் பூனைக்குட்டியைப் போட்டு வெளியே எறிய நினைத்தவளுக்கு திடீரென இயற்கையான குரூர புத்தி வந்துவிட்டது. ஒரு சிறு கூடையில் பூனைக்குட்டியைப் போட்டு அதோடு ஒரு மாவுப் பொம்மை, குங்குமம், எள் முதலியவற்றையும் போட்டுத் தாராவின் வீட்டுவாசலில் வைத்துவிட்டு வந்தாள்: ''சிறுக்கி! இந்தப் பூனையைப் போலத்தான் வயிற்றைச் சுமந்துகொண்டு திரிகிறாள். இப்படியே நாசமாய்ப் போகட்டும்!'' என்று சாபமும் கொடுத்தாள்.

இவ்விதம் செத்த பூனையும் ஒரு விதத்தில் 'நற்பணி'க்குப் பயன்பட்டது என்று தாயி கருதினாள். தன் தாழ்வாரத்தைக் கழுவ முற்பட்ட தாயி, மூன்று பூனைக்குட்டிகள் ஒன்றன் மீது மற்றொன்றாகப் படுத்திருப்பதைக் கண்டாள். எரிமலைபோல் ஆத்திரத்தில் வெடித்தாள் அவள்.

''சனியன்கள்! எல்லாம் என் வயிற்றெரிச்சலையே ஏன் கொட்டிக் கொள்கின்றன! தெருச் சுற்றும் பூனைக்குக் குட்டிபோட இந்த இடமா கிடைத்தது? இந்தக் குளிரில் அலையச் செய்கிறதுங்கள் சனிகள்?'' தாயி துடைப்பத்துடன் கட்டிலருகே உட்கார்ந்தாள். வசைகளுக்கிடையே, இவற்றை எதில் போட்டுக் கொண்டு போய் எறிவது என்ற எண்ணம் வேறு. சிறு கூடை ஒன்று நினைவிற்கு வந்தது. எப்படியும் ஸ்நானம் செய்தாக வேண்டும். சேலையிலேயே அந்தப் பூனைக் குட்டிகளை எடுத்துப் போட்டுக் கொண்டாள். ஈரக் கையால் அவற்றைத் தொடவே, அவை

நடுங்கின. தாயி அவை நடுங்கியதைக் கண்டாள். கண் விழிக்காத குட்டிகளை மூட்டையாகச் சேலையில் கட்டிக்கொண்ட அவளுடைய வயிற்றுடன் அவை உராய்ந்தன. மூன்று உயிர்களின் துடிப்பை அவளது வயிறு உணர்ந்தது. வாசல் வரை வந்தவள் திடீரெனத் தன் வயிற்றில் சுமந்து பெற்ற பெண்ணை நினைத்துக் கொண்டாள். கால்கள் நின்றன. ஆனால் பிடிவாதத்தின் வேகம் அவளை உறுதியுடன் செய்யச் செய்தது. ஆனால் மூடிய கதவருகே அவள் நின்றுவிட்டாள். மகளின் நினைவு இன்னும் அதிகமாகிவிட்டது!

பூனைக் குட்டிகள் வெளியே எறியப்படவில்லை!

* * * *

அதிகாலை ஐந்தரை மணிக்குப் பூஜைச் சாமான்களுடன் லாலா தலாவின் மனைவி கோமதி நதிக்குச் செல்லக் கிளம்பினாள். கதவைத் திறந்ததும் வாசற்படியில் வைத்திருந்த பொட்டலத்தைக் கண்டு திடுக்கிட்டாள். விளக்கைப் போட்டுப் பார்த்தாள். தன் வீடு நசிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் செய்யப்பட்டிருந்த தீயவினைகண்டு அவளுடைய மார்பு வேகமாக அடித்துக் கொண்டது. உரத்த குரலில் அவள் கத்தினாள் : ''ஐயோ! எந்தப் பாவி செய்த வேலை இது! அடியே அம்மா!''

உள்ளிருந்து இருமலுடன் வயதுமுதிர்ந்த ஒரு குரல் ஒலித்தது: ''என்ன நடந்துவிட்டது?''

''இங்கே சீக்கிரம் வாயேன்! ஆபத்து வந்துவிட்டது!'' என்று கூறிய லாலாவின் மனைவி தன் நான்கு மணங்கு உடலைச் சமாளித்துக்கொண்டு இறைவனைப் பிரார்த்தித்தாள் : ''சாமி சத்திய நாராயணா! உன் கதையே கேட்கிறேன்; உன்னைப்பற்றியே பேசுகிறேன் ! ஆஞ்சனேயா ! உனக்குச் சுண்டல் படைத்தேனே ! எங்களைக் காப்பாற்றப்பா!''

''என்ன ஆகிவிட்டது!'' பஹுவா ஓடோடியும் வந்தாள்.

''இதோ பார்! எந்தப் பாவியோ தீவினை செய்து இந்தப் பொட்டலத்தை நம் வீட்டில் வைத்துப் போயிருக்கிறாள். அந்தப் பாவி மகள் நந்தோ தான் அந்தக் கிழவியுடன் சேர்ந்துகொண்டு இப்படிச் செய்திருக்க வேண்டும்! அவள் நாசமாய்ப் போக!''

''அவளுடைய குடும்பத்தில் இடி விழட்டும் ! இப்படியே வாழ்க்கை முழுவதையும் கழித்துவிட்டாளே பாவி தாயி!''

கதவில் சாய்ந்துகொண்டு வாயை மூடியபடி பஹு கூறினாள்.

''பஹுவா! இதைக் கொண்டு வாசலில் எறிந்துவிட்டு வாயேன். எனக்குக் கோமதிக்குப் போக நேரமாகிவிட்டது.''

குளிர், முதுமை இவற்றால் நடுங்கியபடியே பஹுவா பயத்தினா

லும் நடுங்கிக் கொண்டு ''இதைக் குப்பைக்காரன் வந்து எடுக்கட்டும். அதற்குள் ஏதாவது மாடு—கீடு வந்து தின்றுவிட்டு போனால் இன்னும் நல்லதாய்ப் போச்சு'' என்று கூறியபடியே உள்ளே சென்று விட்டாள்.

லாலாவின் மனைவிக்கு ஆத்திரம் பொங்கியது:—''காடு வா வ என்கிறது. இன்று செத்தால் நாளைக்கு இரண்டாம் நாள்!''

பஹுவா சற்றுத் தயங்கி நின்றாள். மறுபடியும் லாலாவின் மனைவி அவளிடம் அப்பீல் செய்தாள்:—''இந்த வயதில் எந்த மந்திரமும் ஏதும் செய்யாது. இதைக் கொஞ்சம் வெளியே போட்டுவிடேன்—எனக்கு நதிக்குச் செல்ல நாழியாகிவிட்டது.''

நந்தோ வாசற்படியருகே வந்து கேட்டாள்—''அம்மா, நானும் வரட்டுமா?''

''நீயும் வந்து என்ன செய்யப் போகிறாய்? இந்தச் சனியன் நந்தோ நம்மை இப்படிப் படுத்துகிறாள். இவளுடைய அப்பன் நடு இரவில் செத்து வைக்க வேண்டும். வீட்டில் மனிதர்களைக் குடி வைப்பது எதற்காக? ஏதோ ஆபத்து என்றால் ஓர் உதவி கிடைக்குமே என்பதற்காகத்தானே? சல்லிக் காசுக்கு உதவாத மனிதர்களால் யாருக்கு என்ன பயன்? பஹுவா! போதும் இன்றே என் வீட்டைக் காலி செய்துவிட்டு வெளியே போ! இப்படிப்பட்டவர்கள் என் வீட்டில் குடியிருக்க வேண்டியதில்லை.''

அவள் போட்ட கத்தலில் அக்கம்பக்கத்தார் யாவரும் ''என்ன? என்ன? என்று கேட்க ஆரம்பித்தனர். மூன்றும் மாடி, இரண்டாம் மாடி இவற்றில் குடியிருந்தவர் யாவரும் ''நாங்கள் வரட்டுமா?'' என்று கேட்டனர். ஆனால் ஒருவரும் இறங்கி வரவில்லை. லாலாவின் மனைவி 'தம் தம்' என்று அடிவைத்துக் கொண்டு வாசற்படியருகே வந்தாள்.

தங்கமயமான வெயில் வந்தது. தெருவெல்லாம் தகதகவென்று மிளிர்ந்தது. எல்லா வீட்டுக் கதவுகளும் திறக்கப்பட்டன. அக்கம் பக்கத்து வீடுகளிலிருந்த பெண்டிர் லாலாவின் மனைவியைப்பற்றி வம்பளக்க ஆரம்பித்தனர். பிறரை நிந்திக்கும் படலத்தைத் துவங்கினர். மாடியிலிருந்து லாலா, சந்தோ, சிம்பூ முதலியவரும் இறங்கிவந்தினர். இங்குமங்கும் நின்று கொண்டிருந்த ஆடவரும் இந்தப் பேச்சில் பங்கு கொண்டனர். காலத்தின் அவல நிலையைப் பற்றிப் பேசினர். தெருவில் ''சூடான பிஸ்கட்'' என்று ராம்லோடன் விற்கும் குரல் ஒலித்தது. ஷாஜியின் குரல் ''சம்போ மகாதேவ! சம்போ!'' என்று காற்றோடு கலந்து வந்தது. அருகே, ''தள்ளிப் போ'' என்று தாயி குரல் கொடுத்ததும் கேட்டது. ஆனால் தள்ளிப் போக வேண்டியவர் ஒருவரையும் காணவில்லை. குப்பையள்ளுபவனை வழியில் பார்த்தால் அவனை இங்கே அனுப்பு

என்று சிம்பு எதிர்வீட்டுப் போலாவிடம் சொல்ல, போலா கிஷ ணிடம் கூறினுன். வழியில் செல்பவர்களெல்லோரும் லாலாவின் வீட்டில் ஏதோ மந்திரம் போட்ட பொட்டலம் வைக்கப்பட் டிருந்தது என்று சொல்லிக் கொண்டனர். பேச்சும் பரவி விட் டது. கொலையுண்ட உடல்களைப் பார்ப்பதுபோல் மக்கள் கூட்டங் கூட்டமாக அந்தப் பொட்டலத்துப் பொம்மைகளைப் பார்த்தனர். மிகப் பெரிய சர்ச்சைகளுக்குப் பிறகு அந்தப் பொட்டலத்தை எடுத்தெறியக் குப்பைக்காரன் வந்தான்.

பொட்டலத்தை எடுத்தவுடனேயே லாலாவின் மனைவி அங்கு ஒரு வாளி தண்ணீரைக் கொட்டி அலம்பினுள். பிறகு, பீரங்கி யிலிருந்து குண்டு கிளம்புவதுபோல் அவள் வீட்டிலிருந்து விரைந்து வெளியே சென்ருள்.

நந்தோவின் வீட்டில் தந்தை பபூதி குழாயடியில் உட்கார்ந்து கொண்டு மண்ணுல் கைகளைக் கழுவிக் கொண்டிருந்தார். மனியா வின் மூத்த மகன் ஜிலேபி வேண்டும் என்று பாட்டியின் சேலைத் தலைப்பைப் பிடித்துக்கொண்டு பிடிவாதம் செய்தான். ''காய்ச்சல் குறையட்டும், பிறகு ஜிலேபி சாப்பிடலாம்'' என்று அவள் குழந் தையைச் சமாதானம் செய்தாள். படுத்துக்கொண்டால்தான் காய்ச்சல் குறையும் என்று பாட்டி அவனுக்குச் சொல்லி அறிவுறுத் திஞள். மூத்தவள் கைக் குழந்தையைக் காலில் உட்கார வைத்துக் கொண்டிருந்தாள். கம்பளி போர்த்துக் கொண்டே சிகரெட்டுப் புகையை உள்ளே இழுத்தபடி மனியா குழந்தைக்குச் சிரிப்புக் காட்டிக் கொண்டிருந்தான். குழந்தை சிரித்த சிரிப்பில் கழுத்து நேராக இல்லாமல் ஆடியது. கால்களில் போடப்பட்டிருந்த சதங் கையும், கைகளில் அணிவிக்கப்பட்டிருந்த மணிகளும் குழந்தையின் அசைவில் ஓசைப்பட்டன. தாய் அதைக் கண்டு மகிழ்வுற்ருள். கோமதியிலிருந்து நந்தோ ஸ்நானம் செய்து திரும்பும் நேரமாகி விட்டது. வேலையாள் வீட்டைப் பெருக்கிச் சுத்தம் செய்து விட்டான்.

திடீரென்று லாலாவின் மனைவி அணுக்குண்டைப்போல் வெடித்துப் பபூதியின் வீட்டை ஹிரோஷிமாவாக்கி விட்டாள்! குழாயடியில் உட்கார்ந்திருந்த பபூதியைப் பார்த்து லாலாவின் மனைவி கூக்குரலிட்டாள் :—''உன் ஆருயிர் மகள் எங்கே? எங்கள் வீட்டுக்கு அழிவைத் தேடுகிருள். அவளே நாசமாய்ப் போகிருளா இல்லையா என்று பார். நாங்கள் ஒருவருக்கும் ஒரு தீங்கும் இழைக் காதவர்கள். எங்கள் வீட்டில் தாயி செய்து தந்த பொம்மையை வைத்துவிட்டுப் போயிருக்கிருளே, பாவி? உறவு கொண்டாடிக் கொண்டு இங்கே வந்தாள். களவாடினுள். இப்போது மந்திரம் போட வந்துவிட்டாள், இவளுடைய தங்க ஒட்டியாணத்தை

விற்றுக் கொடுக்க நான் பட்டபாடு கொஞ்சநஞ்சமில்லை. பிற ருடைய பொருளைத் திருடித் தின்பவர்களுடைய வீட்டிலே பெண் வாழவா வாழும்? கணவனை விட்டுவிட்டுத் தெருத் தெருவாகச் சுற்றத்தான் சுற்றும்! பெரிய பக்திபண்ண வந்துவிட்டாள்! போலி மனுஷி !''

அணுகுண்டிற்கெதிரே அம்மாவின் டப்டப் என்று வெடிக்கும் மெஷின் எம்மாத்திரம்? பபூதி செவிடனைப்போல் உட்கார்ந்து கொண்டு பல்விளக்கிக் கொண்டிருந்தான். மனியாவும் அவனு டைய மனைவியும் மூன்றும் மாடியிலிருந்து கீழே குனிந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். நந்தோ போர்க்களத்திற்கு வந்து காண்டீபத்தை ஒலிக்கச் செய்தவுடனேயே சங்கரும் அவனுடைய மனைவியும் அறையைவிட்டு வெளியே வந்து வேடிக்கை பார்த் தனர். நந்தோ பெரிய பிரம்மாஸ்திரங்களை விட்டாள். தாயும் இடையிடையே குண்டுவீசினாள். விஞ்ஞானயுகம் போல் லாலா வின் மனைவி காண்டீபத்தையும், பிரம்மாஸ்திரத்தையும் விளையாட்டுப் பொம்மைகள் என்று நிரூபித்துக் காண்பித்து விட்டாள். குற்றம் என்னும் பிடியில் சிக்குண்ட நந்தோ ஆத்திரத்துடன் கத்திய போதிலும் அதில் உண்மையின் வலிமை இல்லை. மனிதரிடம் குடிகொண்டிருந்த வேற்று மனப்பான்மை யும், வெறுப்புணர்ச்சியும், நாம்தாம் நியாயமாக நடந்து கொள் கிறோம் என்ற எண்ணத்தில் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தன. மனியாவும் லாலாவை நாணயமற்றவன் என்று நிரூபிக்க முயன் றான். சங்கரும் சட்டைப் பைக்குள் கையைப் போட்டுக் கொண்டு வேடிக்கை பார்க்க இறங்கினான். மருமகளிர் இருவரும் மாடியில் ஒன்றுகூடினர். கீழே நிகழ்ந்த சம்பவம் பற்றிப் பேச்சு நடைபெற்றது.

இளையவள் கூறினாள்: ''இந்தச் சந்தோவின் அம்மாவைத் தான் பாரேன்! சண்டை போடுவதில் எவ்வளவு தெம்பு இருக்கிறது!''

மூத்தவள் பதில் அளித்தாள் : "பின்னே என்ன? நமக்கு யாராவது தீங்கிழைத்தால் நமக்குக் கோபம் வராதா? இந்த நந்தோ ஏன்தான் இப்படி எல்லோரிடமும் பகை கொள்கிறாளோ? பொறாமை, பிறருக்குத் தீமை செய்தல் இதுவே இவளுடைய தொழிலாகி விட்டது. பீடை!''

மாடிப்பிடிச் சுவரைப் பிடித்துக்கொண்டு மெள்ள மெள்ளக் கள்ளனைப்போல் தாரா பபூதியின் வீட்டிற்கு வந்தாள். மருமகள்மார் இருவரையும் கையை ஆட்டி வா என்று அழைத்தாள் சண்டையின் காரணத்தை அறிந்த தாரா கூறினாள்: "எங்கள் வீட்டு வாசலிலும் வைத்து விட்டு வந்திருக்கிறாள். பால் வாங்கக்

கதவைத்திறந்தேன். பொட்டலத்தை வாசற்படியில் பார்த்து நடுங்கிப் போனேன். பால்காரன் என்னவெல்லாமோ சொல்லி என்னைப் பயமுறுத்தினன்.''.

''பயம் எதற்கு? இது உனக்கு எட்டாம் மாதம்தானே?..'' மூத்தவள் முடிப்பதற்குள் தாரா கூறினள்; ''என் கணவர் இதெல்லாம் சூபர்ஸ்டிஷன்தான். இதைக் கண்டு பயப்படாதே என்று சொன்னர். இந்தக் காலத்தில் போயும் போயும்—''

கீழே நடக்கும் கூப்பாட்டில் மற்றக் கூக்குரலின் ரிகார்டு தகர்த்தெறியப்பட்டு விட்டது. மருமகள்மார் இருவரும் கீழே எட்டிப் பார்த்தனர். தாரா மாடியில் இருந்தபடியே இரு மருமகள்மாரின் முகத்தையும் ஆவலுடன் பார்த்தாள்.

கீழே லாலாவின் மனைவி நந்தோவின் கழுத்தைப் பிடித்துக் கொண்டாள். தொண்டை அடைக்கக் கத்தியபடியே இரண்டு கரங்களையும் கொண்டு நந்தோ அவளைத் தள்ள முற்பட்டாள். பபூதி, அம்மா, மனியா, சங்கர் எல்லோருடைய அறைகூவலும் ஒன்று சேர்ந்து ஒரு பயங்கர ஒலியைக் கிளப்பியது. மனியா எப்படியோ முன்னே வந்து தன் சகோதரியை விடுவித்தான். லாலாவின் மனைவி மனியாவுடன் சண்டையிட ஆரம்பித்து விட்டாள். மனியா அவளை அடிக்கக் கையை ஓங்கினன். பபூதி உடனே தன் மகனைத் தடுத்து நிறுத்தினன். தன் மகனது கையைப் பிடித்துப் பின்புறம் தள்ளியபடி லாலாவின் மனைவியிடம் கேட்டுக் கொண்டான்: ''நீங்கள் மன்னிக்கவேண்டும் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன் . . . நந்தோ! போய் விடு மனியா, இவளைப் பிடித்து மேலே அழைத்துச்செல். சனியன் பேசாமல் இருக்கமாட்டேன் என்கிருள். தொண தொண வென்று எப்போது பார்த்தாலும் பேச்சுத்தான்.''

தீமை விளைவிக்கும் கிரஹத்தைப்போல் லாலாவின் மனைவி எப்படியோ ஒருவாறு அமைதியாக நின்ருள்.

இதுபற்றி 'ரிபோர்டிங்' செய்ய இரு மருமகள்மாரும் மேலே வந்து விட்டனர்.

இளையவள் கூறினள் ''அவள் கழுத்தைப் பிடித்ததில் நந்தோ செத்திருந்தால் எனக்கு மகிழ்ச்சியாக இருந்திருக்கும். பார்க்கப்போனல் சகோதரிதான். ஆனலும் எங்களவருக்கு இவளைக் கண்டாலே வெறுப்பு! மூத்தவருக்கும் இப்போதெல்லாம் இவளைக் கண்டாலே ஆவதில்லை.''

''ஒட்டியாணம் களவு போனதுபற்றி ஏதோ சொன்னயே, அது என்ன?'' என்று தாராகேட்டாள். மூத்தவள் கூறினள் ; ''எங்கள் திருமணத்திற்கு முன்பு இங்கே ஒரு பெரிய திருட்டு நடந்தது. வேலையாள்தான் திருடிக்கொண்டு ஓடிவிட்டான்

என்று அம்மா சொன்னாள். இத்தனை வருடங்களுக்குப் பிறகு தான் உண்மை தெரியவந்தது. திருடியவர் வேறு யாருமில்லை நந்தோ தான்.''

''வேலையாளுடன் இவளுக்கு ஏதாவது?'' தாராவின் ரகசியம் நிறைந்த வார்த்தையைத் தந்திபோல் கருதி இளையவள் உடனே பதிலளித்தாள்.

''எல்லாம் நடக்கும். தன் கணவனை விட்டு வருபவள், வீட்டிலேயே கன்னம் வைப்பவள் என்னதான் செய்யமாட்டாள்?''

மூத்தவள் தலையசைத்தபடி பேசினாள் ''ஒன்றுமே புரியவில்லை போ! ஆடவரைக் கண்டால் வெறுக்கும் பெண்களின் பிரிவைச் சேர்ந்தவள் இவள்! என் பள்ளிக்கூடத்தில் ஓர் ஆசிரியை இருந்தாள் அவளும் இப்படியேதான்!''

இரண்டாவது மாடியில் இரண்டாம் போர் மூண்டு விட்டது. ஆறு ஆண்டுகளுக்கு முன்பு நடந்த களவு பற்றிய விஷயம் அது. அதனால் ஏற்பட்ட நஷ்டம்! அம்மாவைத் தாய்ப்பாசத்தைவிட அதிகமாகத் துன்புறுத்தியது. மனியாவிற்கு அவமானம், பண நஷ்டம்! இதை எண்ணி அவள் துடித்துக் கொண்டிருந்தாள். சங்கரும் நந்தோவுடன் சேர்ந்து பேசவில்லை. தன்னந் தனியே இருந்துகொண்டு நந்தோ குடும்பத்தோர் எல்லோருடனும் போராட நேர்ந்தது.

மாடியில் வர்மா தென்பட்டார். மெள்ளத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு தாரா வந்துவிட்டாள். மாடியில் காணப்பட்ட சஜ்ஜனின் அறையைக் காண்பித்து இளையவள் கூறினாள்: ''அக்கா! பார்த்தீர்களா? இவர்களுடைய வீட்டிலும் பொம்மையை வைத்திருக்கிறாள்.''

மோவாய்க்கட்டில் விரலைவைத்தபடி மூத்தவள் கூறினாள்: ''அடதெய்வமே! இந்தச் சனியன் பிடித்த தாயி எல்லோரையும் விழுங்கி விடுவாள் போல் இருக்கிறதே!''

## 5

அறுந்து தொங்கும் பட்டங்கள், சிலந்திக் கூடுகள், பறவைகள், அணில்கள் முதலியவற்றால் நிரம்பியுள்ள அரசமரம் எண்ணற்ற மக்களின் சஞ்சலமான உள்ளங்களைப் போன்று ஆடி அசைந்து கொண்டு பல நூற்றாண்டுகளாக அந்தப் பேட்டையின் தோழனாக இருந்து வருகிறது. பொரிகடலை விற்பவனின் அடுப்பு உள்ள மரம் என்றும் முன்னோர்களால் புகழ் பெற்ற இந்த மரத்தருகே உள்ள சுவர் இன்று சேதாலால் இன்ஷூரன்ஸ் ஏஜன்டின் உடைமை

யாகி விட்டது. முனிசிபாலிடியின் ரெஜிஸ்டிரார் அந்த வீட்டிற்கு 420 என்று எண்ணும் கொடுத்து விட்டார். இதனுல் பாபு சேதாலாலின் புகழ் இன்னும் அதிகரித்து விட்டது. இந்த மரத்தின் மூன்று பக்கங்களேச் சுற்றிலும் அரச குடும்பத்தவர் எவரோ ஒரு மண்டபத்தை எழுப்பி ஆஞ்சனேயரின் உருவம் ஒன்றை நிறுவியிருந்தார். உற்சாகம் மிக்க பக்தர்கள் இன்றும் அங்கே செய்து வரும் அலங்காரத்தைக் கண்படைத்தவர் கண்டு ரசிக்காமல் இருக்க முடியாது. கண்ணற்றவர், தடியின் உதவியால் தட்டியபடியே வரும்போது அந்தத் திண்ணை அவருக்கு வழி காட்ட உதவியாக இருக்கும்.

மண்டபத்தின் வலது பக்கத்தில் இன்றும் மக்கள் வந்து உட்காரும் இடமாகத்தான் இருக்கிறது. அதற்கெதிரே ஒரு சிறு திண்ணை உண்டு. அங்கே பருவ காலத்திற்கேற்றபடி சில சாமான்கள் விற்பனைக்கு வரும். பல் துலக்கக் குச்சிகள், தினசரிச் செய்தித்தாள், பீடி, சிகரெட்டு, பழங்கள், காய்கள், தின்பண்டங்கள் முதலியவை விற்கப்படுவதுண்டு.

மண்டபத்தின் இடது புறத்தில் உள்ளே நுழைந்ததும் ஒரு குடை தென்படும்: அதற்கருகே ஒரு கொட்டகை உண்டு. அங்கே ஒரு ஸ்படிகக் கல், குழியில் பதிந்து கிடக்கும் கண்போல் பளிச்சிடும். இந்தப் பகுதி உள்ளே தள்ளியிருப்பதால் செவ்வாய்க் கிழமை தவிர மற்ற நாட்களில் மக்களின் நடமாட்டமின்றிக் காணப்படும். செவ்வாய்க் கிழமையன்று தோட்டக்காரன் வசந்து மலர்மாலை, லட்டுகள், பேடாக்கள் முதலியவற்றுடன் உட்கார்ந்து விடுவான். சில ஆண்டுகளாக ஒரு கிழவன் சாமான்களைப் பரப்பிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். கதாயுதத்தையும் மலையையும் கையில் கொண்டு ஆஞ்சனேயர் வீற்றிருப்பார். அவர் புரியும் லீலைகளை 'பாக்ஸ் ஆபீஸ் ஹிட்' என்றுதான் சொல்ல வேண்டும்!

காலை ஒன்பதரைமணி வெயில் திண்ணையிலிருந்து இறங்கித் தெருவில் ஒளிக்கற்றையை வீச ஆரம்பிக்கிறது. அனுமனின் ஒளிமிகு மண்டபத்திலிருந்து சற்று விலகிச் சூரியபகவான் சுடர் வீசத்தொடங்குகிறுர். திண்ணையில் கடையைப் பரப்பிக் கொண்டிருக்கிறுர் முகுந்தீமல். குடுகுடு வென்று உக்கா பிடிக்கும் ஒலி, தங்கப்ரேம் போட்ட கண்ணுடி, நீலக்கல் பதித்த வெள்ளிமோதிரம், குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்ள மப்ளரைப் போர்த்திக் கொண்டு இருமிக்கொண்டிருக்கிறுர். சுவரோடு ஒட்டியபடி தெருவில் செக்ரெடேரியட்டின் சூப்பிரண்டு குலாப் சந்த் உட்கார்ந்திருக்கிறுர். அவரருகே செய்தித்தாள் படித்த படியே ராம் சரூப் அமர்ந்திருக்கிறுர். மகாவீர அனு

மனின் மண்டபத்தருகே உட்கார்ந்திருக்கும் வெண்ணெய்க்காரன் பகவான்தீன் முகுந்தீமல்லின் வீட்டிலிருந்து வந்த பெரிய தட்டில் ஏழுகிண்ணங்களை வெண்ணெயால் நிரப்பி வைக்கிறன். எட்டாவது கிண்ணம் தராசில் இருக்கிறது.

சேட் முகுந்தீமல்லின் பார்வை பகவான்தீனின் தராசில் இருந்தது. ஒரு கரண்டி வெண்ணெயைக் கிண்ணத்திலிருந்து எடுத்து பகவான் தீன் தன் பாத்திரத்தில் போட்டான். சேட் பகவான் தீன் கூறினர்.

''ஒரு கரண்டி வெண்ணெயில் லாபம் சம்பாதிக்கப் பார்க்கிறன் திருடன், போடடா, கிண்ணத்தில்!''

பகவான்தீன் புன்சிரிப்புடன் கரண்டி வெண்ணெயை எடுத்துக் கிண்ணத்தில் போட்டபடி கூறினன்—''சேட்ஜி! எங்களுக்கு ஒரு கரண்டி வெண்ணெயில்தான் லாபம் சம்பாதிக்கத் தெரியும். ஆனல் உங்களைப் போன்ற பெரியவர்கள் சம்பாதிக்கும் லாபமும் பெரிய...''

''பார்த்தாயா? வாக்குவாதம் செய்ய ஆரம்பித்துவிட்டான்! காந்திஜி சுதந்திரம் வாங்கித் தந்துவிட்டுப் போனலும் போனர்; யாரைப் பார்த்தாலும் வாய் பெருத்துப் போச்சு! இதிலே லாபத்தைத் தேடாதே. சாமான் வாங்குகிறவர்களை மகிழ்விப்பதில் தான் லாபம் இருக்கிறது.''

லாலா தலால் துப்பட்டாவைப் போர்த்திக் கொண்டு வந்தார். திண்ணையில் உட்கார்ந்திருந்த மும்மூர்த்திகளுக்கும் வணக்கம் தெரிவித்தார். பாபு குலாப்சந்த் கேட்டார்:—''உன் வீட்டில் காலையில் என்ன நடந்தது?''

''ஆமாம், அந்தத் தாயி ஏதோ சூனியம் வைத்து விட்டாள் போல் இருக்கிறதே!''—அவருடைய கேள்வியுடன் ராம்சரூப் தம் கேள்வியையும் இணைத்தார்.

''என்னத்தைச் சொல்வேன் போங்க! சின்னப்பசங்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளாதீர்கள் என்று சொன்னல் கேட்டால்தானே! நான்கு காசு சம்பாதித்து விட்டால் பெரிய மனிதனுகி விட முடியுமா, லாலாஜி! .. நான் பொய்யா சொல்கிறேன்?''

''குலாப்சந்த்! நீங்கள் ஒரு விஷயம் கேட்டீர்களா!'' வெளியிலிருந்து வந்தபடி திடீரென்று சேதாலால் கேட்டார்.

எல்லோருடைய கவனமும் சேதாலாலின் மீது சென்றது. சேதாலால், குலாப்சந்தின் நாற்காலியில் கைவத்து ஊன்றிக் கொண்டு நின்றர். அவர் கூறினர்:—''இன்று காலையில் கம்பெனித் தோட்டத்திலே அந்தக் குழந்தையின் சடலம் இருந்ததே...''

''சடலமா?'' முகுந்தீமல்லின் இந்தக் கேள்வியில் எல்லோருடைய ஆர்வமும் சேர்ந்திருந்தது. எல்லோருடைய முகத்துக் கேள்வியை

யும் கண்ணோட்டம் விட்டபடி சேதாலால் கூறினார்:—''ஒரே கூட்டம் தெரியுமா! பச்சிளங் குழந்தையின் சடலம் அது சுவாமி! ஜகதம்பா சஹாய் மாஸ்டரும் அவருடைய அண்ணன் மகனின் விதவை மனைவியும் பிடிபட்டிருக்கிறாள்!''

''ஜகதம்பா சஹாய் ?''

''அவன்தான், பைரோஜி தெருவில் இருப்பவன். அவனுடைய மகள் ஒரு கம்யூனிஸ்ட் இல்லையா? அந்த மடையன்தான் அந்தப் பெண்ணுடன் போதும் போதும்...'' குலாப்சந்தின் கேள்விக்குப் பதிலளித்தபடியே சேதாலால் திண்ணையில் அமர்ந்து கொண்டார். குலாப்சந்த் உடனே நாற்காலியை அவருக்கு நேராக இழுத்துப் போட்டுக் கொண்டார்.

லாலா முகுந்தீமல் கொட்டாவி விட்டபடி கூறினார்:—''இனி மேல் இந்த உலகத்தில் நீதிக்கும் நேர்மைக்கும் இடமேது?''

''காலையில்தான் இந்த நிகழ்ச்சி நடந்திருக்கிறது. உடனே போலீஸ் பிடித்துவிட்டதே ..''

''சாளிக்ராம்தாம் பிடித்துக் கொடுத்தவர்''—சேதாலால் கூறினார்.

''அப்படியா!'' ராம்சரூப் தலையை அசைத்தார்—''எல்லாம் தலைவனுடைய பித்தலாட்டந்தான். இவன்மட்டும் வாழ்ந்தானா என்ன? இரண்டு தடவை அகதிகளிடம் செருப்படி வாங்கியிருக்கிறானே!''

''அது சரி: அந்தப் பெண்ணின் நிலைமை என்ன?'' குலாப்சந்த் கேட்டார்.

தலையில் தொப்பி, நெற்றியில் சந்தனம், வெள்ளி ஃப்ரேம் போட்ட நீலக் கண்ணாடி; நரைத்த மீசை; கரிய முகம்—கம்பளி போர்த்திக் கொண்டு புது பாலிஷ் போட்ட பம்ப்ஷூ அணிந்த படி பண்டித் சிவநாத் சாஸ்திரி வந்துகொண்டிருந்தார். வெள்ளிப் பிடி போட்ட தடியுடன் தெருவில் நுழைவதை எல்லோரும் கண்டனர்.

''நமஸ்காரம், வரவேண்டும்!'' லாலா முகுந்தீமல் தொலைவில் அவரைப் பார்த்தவுடனே கூவினார். திண்ணையில் இருந்த எல்லா மக்களும் கரங்கூப்பி அவரை வணங்கினர்.

''நன்றாக இருங்கள்!'' எல்லோருடைய வணக்கத்திற்கும் சாஸ்திரி பதிலளித்தார்.

''ராஜாசாஹேபின் வீட்டிலிருந்து வருகிறீர்கள், இல்லையா?''

''ஆமாம்!''

''இப்போது அவருடைய பேரனின் உடல் நிலை எப்படி இருக்கிறது? நேற்று மோசமாயிருந்ததாமே.''

''இல்லை, அப்படி ஒன்றும் அதிகக் கவலைக்கிடமில்லை. காய்ச்சல்

இருந்தது, அவ்வளவுதான்!'' என்று கூறியபடியே தன் வீடு செல்ல முற்பட்டார் சாஸ்திரி.

லாலா முகுந்தீமல் மறுபடியும் கேட்டார்: "இப்போது ராஜா சாஹேப் எந்தக் கட்சியில் இருக்கிறார்? காங்கிரசா, ஜனசங்மா?''

சாஸ்திரி திரும்பியபடி பேசினார்:—முகுந்தீமல், தங்கள் சுயநலம் பூர்த்தியாக வேண்டும் என்று தனவந்தரும் தாசிகளும் அரசியல் கட்சியினருக்கு பணிவிடை செய்கிறார்கள்.''

எல்லோரும் சிரித்தனர். குலாப்சந்த் நாற்காலியிலிருந்து எழுந்து, "பண்டித்ஜி! உட்காருங்களேன்'' என்று கேட்டுக் கொண்டார்.

நீலக் கண்ணாடியின் வழியாக நாற்காலியைப் பார்த்துவிட்டு "இப்போது வீட்டிற்குப் போக வேண்டும்'' என்று சாஸ்திரி பதிலளித்தார்.

"சும்மா உட்காருங்கள்'' என்று வற்புறுத்தினார் முகுந்தீமல். சாஸ்திரி தம் வீட்டை நோக்கி உரக்கக் கூவினார்: "பகவதி, கை கழுவிக்கொண்டு பத்து வெற்றிலை எடுத்துவா. கொஞ்சம் புகையிலையும் வேண்டும்.'' நாற்காலியில் அமர்ந்து கொண்டு சாஸ்திரி கூறினார்: "நீங்கள் சொன்ன சொல் கோடி பெறும், சாஸ்திரிஜி. செல்வமுடையவர் மட்டுமா என்ன, எல்லோருந்தான் சுயநலப் பேய்களாக இருக்கிறார்கள்!''

"யோகி, ஞானி எல்லோரிடமுந்தான் சுயநலம் இருக்கிறது. ஆனால் சுயநலத்தினால் அனர்த்தம் செய்பவர்கள் மற்ற எல்லா மக்களும்...''

தன் அறையை நோக்கிச் சென்று கொண்டிருந்த சஜ்ஜனைப் பாபு ராம்சரூப் மிகவும் ஆர்வத்துடன் அழைத்தார்: "வாருங்கள் சஜ்ஜன்!''

திண்ணையில் அமர்ந்திருந்த எல்லோரையும் சஜ்ஜன் பார்த்திருக்கிறான். ஆனால் யாருடனும் பழகியதில்லை. பாபு ராம்சரூப் அழைத்தவுடன் கூச்சமும் மகிழ்ச்சியும் ஒன்று சேர்ந்து அவனை ஆட்கொண்டுவிட்டன. பணிவுடன் கரங் குவித்தபடியே அவன் வந்தான். எல்லோரும் அவனையே உற்று நோக்கினர். பெருமிதத்துடன் ராம்சரூப் கூறினார்:—"இன்று உங்களைப்பற்றிச் செய்தித்தாளில் ஒரு கட்டுரை வந்திருக்கிறதே!''

பாபு ராம்சரூப் தன்னை அழைத்தவுடன் ராஜா சாஹேப் தன்னைப்பற்றி நேற்று மாலை இவர்களிடம் ஏதாவது கூறியிருக்க வேண்டும் என்று சஜ்ஜன் நினைத்தான். ஆனால் தன் புகழின் காரணமாகத்தான் பிறரின் மதிப்பிற்குப் பாத்திரமாகின்றோம் என்று கருதி அவன் பெருமகிழ்ச்சியடைந்தான். பிறகு பதிலளித்தான்:—"ஆமாம்''.

லாலா ஆர்வத்துடனும், குலாப்சந்த் மிகவும் பணிவுடனும், சேதாலால் கடைக்கண் பார்வை கொண்டும் அவனைப் பார்க்க ஆரம்பித்தனர். சாஸ்திரியின் நீலக் கண்ணாடி சஜ்ஜனின் முகத்தைச் சுற்றி வந்தது. அவருடைய முகம் ஆத்மாவுடன் ஒன்றி விட்டது. முகுந்தீமல்லின் கட்டையான கண்ணாடி சஜ்ஜனின் முகத்தை விட்டு விலகவேயில்லை.

வெள்ளிப் பெட்டியில் வெற்றிலை வந்தது.

ராம்சரூப் வெற்றிலைப் பெட்டியின் மீது பார்வையைச் செலுத்தியபடியே கூறினார்:—"சாஸ்திரிஜி! இவர் நம் நாட்டின் தலைசிறந்த ஓவியக் கலைஞர், ஸ்ரீமான் சஜ்ஜன்வர்மா. இப்போது இவர் நம் பேட்டையில்தான்..."

ஒரேயடியாகப் பார்த்துக் கொண்டிருந்த முகுந்தீமல்லின் கழுத்திலிருந்து ஸ்பிரிங் சற்று வளைந்து கொடுத்தது. அவர் கூறினார்:— "அப்படியா? கன்னோமல்லின் பேரன்தானே நீ? ஜானசிசரணின் வீட்டில் நேற்று ராஜாசாஹேப் உன்னைப்பற்றிச் சொல்லிக் கொண்டுருந்தார்."

சாஸ்திரிஜியின் நிஷ்டை கன்னோமல் என்ற பெயரைக் கேட்டதும் கலைந்துவிட்டது. நீலக் கண்ணாடி மறுபடியும் சஜ்ஜனின் முகத்தில் ஒன்றிவிட்டது. அவர் கூறினார்:—"கன்னோமல் என் நண்பர்."

முகுந்தீமல் ஆவேசத்துடன் பேசினார்:—"எனக்கும் அவருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. பாவம், இள வயதிலேயே இறந்துவிட்டார். அவர் போய் ஐம்பது வருடங்களாகியிருக்கும் இல்லையா, சாஸ்திரிஜி?"

"ஆமாம். 1902-ஆம் ஆண்டு அவர் இறந்துவிட்டார்"—சஜ்ஜன் பதிலளித்தான். முகுந்தீமல் கூறினார்:—"இளம் பருவம் பாவம், அவருடைய மகனுக்கும் ஆயுள் குறைவுதான். அவரை இந்தப் பாழும் மதுபானம் கொன்றுவிட்டது!"

தன் தந்தையைப்பற்றி இப்படிக் கூறியதைக் கேட்டுச் சஜ்ஜன் சற்றே சங்கோசம் அடைந்தான்.

சாஸ்திரிஜி கூறினார்: "கன்னோமல் தன்னுடன் பள்ளியில் படித்தவர். என்னைவிட ஒன்றரை வயது பெரியவர். அவருடைய தந்தை இந்தத் தெருவில்தான் இருந்தார். அவர் மகாராஜாவைப் போல் வாழ்ந்து வந்தவர்!"

"பெரிய மனிதராச்சே அவர்! எங்கள் காலத்திலேயே சீமைக்கு முதல் முதலாகப் போனவர் அவர்தாம். எத்தனை வெள்ளையர்கள் அவருடைய வீட்டுக்கு வருவார்கள் தெரியுமா? துரைகளின் வீட்டில் அவர் சரிசமமாகப் போய் உட்காருவார். நல்ல பெயர் பெற்றவராயிற்றே!"

இந்த இரண்டு கிழவர்களுமே அட்டகாசம் செய்துகொண்டிருப்

பதை ராம்சரூப் பார்த்தார். உடனே ஒரு பாய்ச்சல் பாய்ந்து பேசினார்; — ''இவர் தம் முன்னோரையும் மிஞ்சிவிட்டார் தெரியுமா? செய்தித்தாள்களில் இவரைப்பற்றிக் கட்டுரை வருகிறது. 'இல்லஸ்ட்ரேடட் வீக்லி'யில் இவருடைய படங்கள் வந்திருக்கின்றன.''

லாலா பேசினார்: ''நீங்கள் புகைப்படம் எடுப்பவரா, இல்லை வண்ணத்தில் ஓவியம் தீட்டுபவரா?''

தன் கலையைப்பற்றி இப்படி ஒரு கேள்வியைக்கேட்டதும் சஜ்ஜன் பதில் சொல்ல முடியாமல் திகைத்தான்.

முகுந்தீமல்லின் உக்காவுக்குப் புதிய புகையிலை வந்துவிட்டது. லாலா உக்காவை எடுப்பது பற்றிப் பணியாளுக்குக் கட்டளை விடுத்துக் கொண்டிருந்தார். இதற்கிடையே மெதுவான குரலில் சஜ்ஜன் பதில் அளித்தான்—"நான் வர்ணச் சித்திரம் எழுதுபவன்."

உக்காவின் புதிய சுவையை ரசித்தபடியே முகுந்தீமல் கூறினார்:— "நம் பண்டித் ராம் நாத் கோசாயி கூடத்தான் சித்திரம் வரைகிறார். தந்தத்தின்மீது அவர் தீட்டியிருந்த வர்ணச்சித்திரம் எவ்வளவு அழகாக இருக்கிறது தெரியுமா?''

பழக்கமில்லாத இந்தக் கூட்டத்துடன் இன்று அறிமுகமானதே போதும் என்று பெருமிதம் அடைந்த சஜ்ஜன் எழுந்து செல்ல விரும்பினான். லாலா மௌனமாகிவிட்டார். அவருடைய உக்கா பேச ஆரம்பித்தது. இனி அங்கிருந்தால் சஜ்ஜன் மூச்சுத்திணறு வான் போல் இருந்தது. சாஸ்திரிஜியை வணங்கி "அநுமதி தாருங்கள், மறுபடியும் சந்திக்கலாம்'' என்றான்.

சஜ்ஜனிடம் சாஸ்திரி, ''நிச்சயமாக வரவேண்டும். எனக்கு மிக்க மகிழ்ச்சி. 'நீண்ட ஆயுசோடு வாழப்பா!' என ஆசி கூறி அனுப்பினார்.''

சாஸ்திரியின் சொற்களில் பாசம் ஒலித்தது. செல்ல முற்பட்ட சஜ்ஜன் சாஸ்திரியின் கால்களைத் தொட்டுக் கும்பிட்டு விட்டு நடந்தான். தாயைத்தவிர இதுவரை ஒருவருடைய கால்களையும் அவன் தொட்டுக் கும்பிட்டதில்லை.

மாடிப்பக்கம் சஜ்ஜன் செல்வதைச் சாஸ்திரியின் நீலக் கண்ணாடி பார்த்துவிட்டது. ''இந்தப் பையன் இங்கே ஏன் போகிறான்?'' என்று அவர் கேட்டு வைத்தார்.

குலாப் சந்த் பதில்அளித்தார்: ''தெரியவில்லை! அகதிகள் இவனைப்பற்றிக் குற்றச் சாட்டுகளாக ஏதோ கூறினார்கள். அப்போது, 'நான் மக்களின் வாழ்க்கையைச் சித்திரத்தில் வடித்துக் காண்பிக்க வந்தேன்' என்று சொன்னான். பழைய இந்திய பழக்க வழக்கங்களை ஆராய வந்திருக்கிறான். தாயின் வீட்டிலே தான் குடியிருக்கிறான்.''

வாலா எழுந்து நின்றார். சிரித்தபடி கேட்டார்; ''இன்னும் தாயியின் படத்தை வரைந்தாறு இல்லையா?''

சேதாலாலும் சிரித்தபடி எழுந்தார். "தாயியின் படத்தை இவர் வரைந்து முடிக்கட்டும். நம் பேட்டையில் வாழும் மக்களின் சார்பில் இவருக்கு ஒரு மெடல் பரிசளிக்கப் போகிறேன்''

''சரிதான், எங்கே எழுந்தீர்! உட்காரும் ஐயா! உமக்காகச் சாஸ்திரிஜியையும் பிடித்து உட்கார வைத்திருக்கிறேன்... உம் ஓட்டு யாருக்கு, அதைச் சொல்லும்?''

தேர்தல் விவாதம் சூடு பிடித்து விட்டது. சற்று நேரங் கழித்து ஒரு பொம்மையை எடுத்துக் கொண்டு சஜ்ஜன் இறங்கினான். லாலா சிரித்தபடி கூறினார்: ''சரிதான் அவள் இவனுடைய வீட்டிலும் பரிசம் வைத்து விட்டாளா? எங்கள் வீட்டில் என்ன நடந்தது தெரியுமா?''

எல்லோருடைய பார்வையும் சஜ்ஜனின் மீது விழுந்தது. முகுந்தீமல் சிரித்தபடி கேட்டார். "வீட்டுக் காரியின் அட்டகாசம் உன்னையும் விடவில்லையா? எங்கே எடுத்துக் கொண்டு போகிறாய்?''

சஜ்ஜன் சிரித்துக் கொண்டே கூறினான்: ''அதை ஏன் கேட்கிறீர்கள்? நான் போனேன். காக்கைகளின் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. அகதிப் பெண்கள் காக்கை போட்ட எச்சிலை நீங்களே எடுத்து வெளியே போட்டுவிடுங்கள் என்று கேட்டுக் கொண்டார்கள். 'சரி' என்று சொல்லி எடுத்து வந்தேன்.''

''நீங்கள் நாத்திகர் போல் இருக்கிறது. அதனால்தான் உங்களுக்குப் பயமே இல்லை. இன்று எங்கள் வீட்டில் அதிகாலையில்''

"ஏன் சேதாலால்ஜி, இதுதான் இந்தியப் பண்பாட்டைக் காப்பாற்றும் விதமா?''

குலாப் சந்தின் வார்த்தைகளைக்கேட்டு ராம் சரூப் 'இ...இ' என்று சிரித்தபடியே பரிகசிக்கும் பாணியில் சோதலாலைப் பார்த்தார். சஜ்ஜனும் தன்கையில் இருந்த பாதி பொம்மையைப் பார்த்துச் சிரித்துக் கொண்டான். சேதலால் அழுத்தமாகக் கூறினார். ''நம் மதத்துக்குள் வந்து நுழைந்துள்ள குறைகளை நம்மால் நீக்க முடியாது என்று நான் கூறவில்லை. ஆனால் நம் உண்மையான மதத்தைக் காப்பாற்றியாக வேண்டும்.''

''அது சரிதான்'' லாலாவின் முகத்தில் மதத்தின் ஆவேசம் வந்துவிட்டது. அவர் கூறினார்: "மதத்தைக் காப்பாற்ற வேண்டும். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். இப்படி மந்திரம் செய்து போட்ட பொம்மையை எடுக்க நம்மிடம் துணிவு கிடையாது!''

"சேதாலால்ஜி! கேட்டீர்களா?'' என்று குலாப்சந்த் ஒரு

கனைப்புக் கனைத்தார்: ''சாஸ்திரிஜியே இருக்கிறாரே! சொல்லுங்கள் சுவாமி! இந்த மதம் எந்தச் சாஸ்திரத்தில் எழுதப்பட்டிருக்கிறது?''

சாஸ்திரி நீலக்கண்ணாடியை நிமிர்த்திக்கொண்டு பதிலளித்தார்: ''இவர் சாத்திரத்தின் விஷயத்தையா கேட்டார்? சாத்து அரம் இதைப்பற்றித்தானே கேட்டார்?'' என்றார் எல்லோரும் 'கொல்' என்று சிரித்தனர்.

பழுப்பு நிறம் அடைந்த பொய்ப்பற்களை வெளியே காட்டி முகுந்தீமல் சிரித்தார். அவருடைய 'தொந்தி' ஹ ஹ ஹ என்ற சப்தத்துடன் அசைந்தது. 'பிரமாதம் போங்க' என்றார் அவர்.

லாலா சற்றுப்பிரமித்துப்போய் நின்று கொண்டிருந்தார். சேதாலால் முழங்கால்களைக் கைகளால் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். வெற்றி தோல்வி என்னும் வைர வெட்டுக்கள் அவருடைய பார்வையில் பளிச்சிட்டன. தம் பக்கம் சற்று வெற்றிகரமாக இருப்பதை எண்ணிக் குலாப்சந்த், ராம்சரூப் இருவரின் முகங்களும் பிரகாசித்தன. சாஸ்திரிஜி லாலாவைப் பார்த்துக் கூறினார்: ''உங்களை நான் கேலி செய்யவில்லை சுவாமி. தவறாக நினைக்க வேண்டாம். இந்த நாட்டில் மதம் என்று சொல்ல ஒன்றா இருக்கிறது: எண்ணற்ற மதங்களல்லவா இருக்கின்றன! எத்தனை மாமிமார்கள் இருக்கிறார்களோ, அத்தனை மதங்களும் இருக்கின்றன. மருமகளின் கூட்டம் அதிகரிக்க அதிகரிக்க மாமிமார்களின் மதப்பிரசாரம் அதிகமாகி விட்டது! நீங்கள் 'சாத்து அரம்' என்றோ சாஸூதரம் என்றோ சொன்னதிலும் ஒரு அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது (சாஸூ = மாமியார்) எல்லோருக்கும் சிரிப்பு வந்தது. ஆயினும் சாஸ்திரிஜியின் பேச்சு வெள்ளத்தில் கட்டுப்பாட்டை மீறி அவர்கள் சிரிக்காமல் முகத்தில்மட்டும் மலர்ச்சியைக் காட்டினார்கள். சாஸ்திரிஜி கூறினார்:— ''தரத்தைப்பற்றி என்ன சொல்ல? இந்துவுக்குத் தனித்தரம், முஸ்லிமுக்குத் தனித்தரம். சமீபத்தில் ஒரு புத்தகம் படித்தேன். பம்பாயில் ஒரு கிறிஸ்தவப் பெண்மணியாம், மவுன்ட் மேரி என்று பெயராம். அங்கே வாழும் இந்துக்கள் அவளை மௌத்மாவலி என்று சொல்லி அழைக்கின்றனராம், பூசிக்கின்றனராம். முஸ்லிம்கள் அரசு செலுத்தியதால் இங்கே அல்லோப நிஷதங்கூட எழுதப்பட்டது. மந்திரங்களில் அநேகம் இஸ்லாமிய மதத்தினால் ஆட்கொள்ளப்பட்டுள்ளன தெரியுமா? சேத்ராமி என்ற சம்பிரதாயம் ஒன்று இருந்தது. அது நான் முகனுக்குப் பதிலாக ஒரே முகமுடைய அல்லாவையும், மூன்று முகங்கள் கொண்ட தத்தாத்ரேயரையும் சிருஷ்டித்து விட்டது. பரமேச்வரன் என்றால் அதில் விஷ்ணு என்று

பொருள் கூறப்பட்டது. சிவபிரான் அல்லாவிடம் அழிக்கும்' பொறுப்பையளித்துவிட்டு 'பங்கி' (போதைப்பொருள்) அடிக்கச் சென்று விட்டாராம்.''

நான்கு பக்கங்களிலும் சிரிப்பொலி கிளம்பியது. சிரித்துக் களைத்த சஜ்ஜன் பொம்மையைத் திண்ணையின் மீது வைத்தான். அவன் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தான்.

லாலாவின் பார்வை பொம்மையின் மீது விழுந்தது. உடனே, ''மன்னிக்கவேண்டும். இது ஆஞ்சனேயர் இருக்குமிடம்!'' என்றார்

''மன்னித்துவிடுங்கள், தவறு செய்துவிட்டேன்'' என்று கூறிச் சஜ்ஜன் உடனே பொட்டலத்தை எடுத்தான்: ''இதைத் தெருவில் கொண்டுபோய்ப்போட்டு விடுகிறேன்'' என்றான்.

''ஆமாம், போட்டுவிட்டுக்கையைக் கழுவிக் கொள்ளுங்கள்!''

கையில் பொம்மையை எடுத்த சஜ்ஜன் சங்கோசத்துடன் நடந்து சென்றான். தன்னைப் பார்த்தால் அவனுக்கே வேடிக்கை யாக இருந்தது. தெருப்பக்கம் நடந்து கொண்டிருந்தவர்கள், வீட்டுச் சன்னல்களின் வழியாக எட்டிப் பார்ப்பவர்கள் இவர் களால் அவனுக்குத் தொல்லையாக இருந்தது. ''இங்கும் ஒரு வேலையாள் நம்முடன் இருந்தால் நன்றாக இருக்குமே'' என்று அவன் எண்ணினான். ''இந்தப் பேட்டையில் வாழும் மக்கள் எவ்வளவு விசித்திரமானவர்கள்! நம் நாட்டுச் சமூகத்தில் வாழும் மக்கள் பொருட்காட்சிச்சாலையின் பொருள்களைப்போலத்தான் எனக்குத் தோன்றுகிறார்கள் என்று மஹிபால் கூறியது எவ்வளவு உண்மை!' என்றும் அவன் நினைத்தான். ''இந்த மக்களிடம் பாசத்துடன் நடந்து கொள்ள வழிகிடையாது'' என்று அவன் குறைப்பட்டான். ஆனால் இது ஒரே நாளில் ஏற்பட்டுவிடாது. இந்தச் சமுதாயத்துடன் அவன் இரண்டறக் கலக்கவும் விரும்ப வில்லை. ஆனால் அநாகரிகத்துடன், கெட்ட பழக்க வழக்கங்களு டன் போராடத்தயாராக இருக்கவேண்டும். அவர்களைப் புரிந்து கொண்டு சீர்திருத்த முற்படவேண்டும். 'இந்தச் சமுதாயத்தையே நாம் மாற்றியமைத்தாக வேண்டும்' பிறகு சாஸ்திரிஜியின் நினைவு வந்தது: சாஸ்திரிஜியின் எண்ணங்கள்தாம் எவ்வளவு சிறந்தவை! அவருடைய கால்களைத் தொட்டுக் கும்பிட்டான். இதென்ன இப்படித் திடீரென உணர்ச்சி வசப்பட்டுவிட்டோமே! ஆனால் இதற்கு அவர் தகுதியுள்ளவர்தாம். அவரை இன்னும் அடிக்கடி கண்டு பேச வேண்டும். மஹிபால் கூறியது தவறு. மெள்ள மெள்ள நான் எல்லோருடனும் பழகப்போகிறேன்.''

இவ்விதம் எண்ணியபடியே சஜ்ஜன் தெருவை நோக்கிக் கிளம்பினான்.

# 6

தேர்தல், தாய்மகளைப்பற்றிய சச்சரவுகள், யாருடனே யாருக்கோ உள்ள காதல் தொடர்பு பற்றிய ரசமானபேச்சு, பீடி அகண்டபஜனை, திரைப்படம், கோடைவெப்பத்தைத் தணிக்கும் மருந்துகளைப்பற்றிய விளம்பரம், வெற்றிலைபாக்கு போன்ற மக்கள் வாழ்க்கையின் பலதரப்பட்ட எண்ணங்களின் ஓட்டங்கள் முடிவடைந்தன. கையில் பொட்டலத்துடன் சஜ்ஜன் அருகேயிருந்த கால்வாய்ப்பக்கம் சென்றான்.

எதிரே நான்கு போலீஸ்காரர்கள் வருவதைப் பார்த்தான். அவர்களுடன் ஒரு சிறு கூட்டமும் தொடர்ந்து வந்துகொண்டிருந்து. திருமண விழாக் கூட்டங்களில், மைதானத்துப் பரேட்களில் போலீஸ்காரர்களைக் கண்டால் வியப்பதற்கு ஒன்றுமில்லை. ஆனால் இந்தச் சின்னஞ்சிறு கூட்டத்துடன் இந்தப் போலீஸ்காரர்கள் ஏன் வர வேண்டும்? அவர்கள் அரசாட்சியின் பிரதிநிதிகள் மனிதனிடம் செயல்படும் அறிவுத்திறன் இதனைச் சிருஷ்டித்துள்ளது என்பதை சஜ்ஜன் அப்போதுதான் புரிந்து கொண்டான். வலது புறத்துத் தெருவிற்குள் அந்தக் கூட்டம் நுழைந்துவிட்டது. அங்கேதான் லாலா, ஜானகிசரண், வர்மா, பபூதி முதலியவர் இருக்கின்றனர்.

கையிலிருந்த பொட்டலத்தை மறந்து சஜ்ஜன் போலீஸ்காரருடன் ஒன்றிவிட்டான். அதே சமயத்தில் அந்தத் தெருவிலிருந்து மிஸ்டர் வர்மாவும் ராதேச்யாமும் வந்தனர். ராதேச்யாம் இந்த ஆண்டுதான் பி.ஏ., பரீட்சையில் தேர்ச்சி பெற்றார். சமீபத்தில்தான் அரசாங்கக் குமாஸ்தாவாக வேலைக்கு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பரீட்சையும் எழுதினார். தம்மைச் சோஷலிஸ்ட் என்றும் மிகவும் உயர்ந்த எண்ணங்களை உடையவர் என்றும் அவர் கருதி வந்தார். ஒரு முறை ராதேச்யாம் சஜ்ஜனைச் சந்தித்திருந்தார். அவனை எதிரே பார்த்த ராதேச்யாம் 'நமஸ்தே? என்று கூறினார். மிஸ்டர் வர்மாவும் பணிவுடன் கரங்குவித்து வணங்கினார்.

சஜ்ஜன் திடீரென்று சுய நினைவிற்கு வந்தான். சங்கோசத்துடன் புன்சிரிப்புச் சிரித்தான்:—"இந்தப் பேட்டையில் கிடைத்த முதல் சப்ஜெக்ட் இது. அது சரி அங்கு என்ன கூட்டம்?" என்று கேட்டான்,

ராதேச்யாம் உடனே பதிலுரைத்தார்:—"சார், அதுவா? ஒரு மாஸ்டர் இருக்கிறார். ஜகதம்பா சஹாய் என்று பெயர். பெர்வர்ட் மனிதன். சரியான காலி!"

கையிலிருந்த பொட்டலம் சஜ்ஜனுடைய நினைவிற்கு வந்தது; உடனே கூறினான்:—"மன்னிக்க வேண்டும். இதை நான் நான்கு

தெருக்களும் கூடும் இடத்தில் போட்டுவிட்டு வந்துவிடுகிறேன்!''

மிஸ்டர் வர்மா கூறினர்:—''சரியாய்ப் போச்சு! இந்த மான் ஹோலில் போடுங்களேன்!''

கால்வாயில் துணி துவைத்துக் கொண்டிருந்த ஒரு மனிதனைப் பார்த்தபடியே சஜ்ஜன் கேட்டான்:—''யாருக்கும் ஆட்சேபம் இராதே!''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. சும்மா போடுங்கள், சார்!''

சஜ்ஜன் மான்ஹோலில் போட்டுவிட்டுக் கையைக் கழுவிக் கொண்டான். அருகே வந்து கேட்டான்:—''என்ன விஷயம்?''

''அவனுடைய அண்ணனின் மருமகள், பாவம். கைம்பெண். இளம் வயது வேறு. திருமணமாகி நான்கு ஆண்டுகள் ஆகி விட்டன. மணமான ஒரு வருடத்திற்குள் அவன் இறந்துவிட்டான். ஜகதம்பா சஹாயின் வீட்டில் இருக்கிருள். அவள் பேரில் வேண்டாத உரிமை கொண்டாட ஆரம்பித்து விட்டான் அவன். இது தானே நம் சமுதாயத்தில் நடக்கும் ட்ரேஜடி!''

கோபமும் இரக்கமும் கலந்த ஆவேச உணர்ச்சியுடன் ராதேச்யாம் பேசினர்.

''பிறகு என்ன நடந்தது?'' சஜ்ஜன் கேட்டான்.

மிஸ்டர் வர்மா ஆரம்பித்தார்:—''வேறென்ன? நேற்றிரவு அவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்துவிட்டது. அதன் கழுத்தைத் திருகி இந்த ஆசாமி கால்வாயில் எறிந்து விட்டார். அடுத்த நாள் காலை போலீசுக்குத் தகவல் தெரிந்து விட்டது. அது 'ரெயிட்' செய்துவிட்டது.''

''போலீசுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று சஜ்ஜன் கேட்டான்.

அரசியல் உணர்ச்சி வேகத்தில் ராதேச்யாம் விரைந்து பதில் அளித்தார்:—''இது அந்தச் சாளிக்ராமின் வேலை. ஜகதம்பா சஹாயின் மகள் கம்யூனிஸ்டு. அவர்களுடைய வீட்டில் அந்தக் கட்சி சம்பந்தமான நாடகத்தின் ஒத்திகை நடப்பது வழக்கம். இந்த வட்டாரத்தில் மக்கள் மூச்சு விட்டால்கூட அந்தச் செய்தி சாளிக்ராமிடம் போய்ச் சேர்ந்துவிடும். பகைவரின் வீட்டு ரகசியத்தைச் சும்மா விடுவாஞ அவன்! இதுதானே காங்கிரஸ் நடத்தும் 'ஷோ!' இந்த வலையைத் தகர்த்தெறிய இந்த எலெக்ஷனில் மக்கள் முயற்சிகளை விட்டால், பிறகு என்ன நடக்கும் தெரியுமா?''

சற்று நேரம் வரை கால்வாய்க்கு ஓய்வு கிடைத்தது. வந்து கொண்டிருந்த வர்மாவின் நண்பர் ஒருவர் கூறினர்:—''வர்மாஜி! அவள் தான் வைத்துக்கொண்ட நெருப்புக்கு இரையாஞள்''

''ஹா! யார்?'' சஜ்ஜன், வர்மா, ராதேச்யாம் எல்லோரும் கலங்கிப் போயினர்.

''அந்தப் பெண்தான்! வைத்தியரை வரவழைத்தபோது, ஏதோ காரணத்தால் அவள் உள்ளே சென்ருள். சமையலறையில் ஸ்பிரிட், மண்ணெண்ணெய் எது கிடைத்ததோ... இதைக் கேட்டு என்ன செய்யப் போகிறீர்கள்? அந்த மடையன் ஜகதம்பா சஹாய் தூக்கு மேடையில் ஏற்றத் தகுந்தவன். அவனுடைய மனைவி, தமையனின் விதவை—அதாவது இந்தப் பெண்ணின் மாமியார்...?''

''அந்தப் பெண்ணின் நிலைமை?'' கவலையுற்று சஜ்ஜன் கேட்டான்.

'போலீஸ் உள்ளே நுழைவதற்குள் அவள் எரிந்து போய்விட்டாள். அவளுடைய துணி முழுவதும் சாம்பலாகிவிட்டது.''

''நீங்கள் பார்த்தீர்களா?'' சஜ்ஜன் கேட்டான்.

''நான் பார்க்கவில்லை'' என்று இழுத்தார் வக்கீல் நந்தன். அந்த மனிதர் அந்தப் பெண்ணைப்பற்றிப் பேசுவதில் ஒரு தனிப்பட்ட சுவையை அநுபவித்துக் கொண்டிருப்பதைச் சஜ்ஜன் தெரிந்து கொண்டான். அவனுக்கு அது பிடிக்கவில்லை. அவன் ராதேச்யாமிடம் கேட்டான்:—''என்னை ஒரு முறை அங்கே அழைத்துச் செல்வீர்களா?''

''உம்'' என்ருர் வர்மா. ராதேச்யாம் பதில் அளிப்பதற்கு முன்பு ராதேச்யாமும் ஒப்புக்கொண்டார்.

சென்றுகொண்டே ராதேச்யாம் கூறினுர்:—''ரொம்பக் கூட்டமாக இருக்கும். உங்களால் என்ன பார்க்க முடியப்போகிறது?''

''ஒன்றும் இல்லாவிட்டாலும் மக்களின் போக்கைக் கண்டு தெரிந்துகொள்ளலாம்'' என்று பதிலளித்தான் சஜ்ஜன்.

சூரியனின் கிரணங்கள் உள்ளே செல்லாத தெருக்களின் அசுத்தங்களையும் அங்கே காணப்பட்ட நெரிசலான வாழ்க்கை முறைகளையும்பற்றி ராதேச்யாமின் குத்தலான பேச்சுக்களைக் கேட்டபடியே கோயிலையும், தெருக்களில் கோலி விளையாடிக் கொண்டிருந்த நாட்டின் ஆயிரங்காலத்துப் பயிர்களையும் கண்டபடியே, மாடுகளையும், வழியே வந்து போய்க் கொண்டிருந்தவர்களையும் தாண்டிக்கொண்டு சஜ்ஜனுடைய குழுவினர் கூட்டம் இருந்த இடத்தை வந்து சேர்ந்தனர்.

எதிரே ஒரு பெரிய வீடு. வாசலில் இரண்டு காவலர் உள்ளே வர முயலும் கூட்டத்தைத் தடுத்துக் கொண்டிருந்தனர். இடது பக்கம் திறந்த வெளி. தெருவில் போலீஸ் வண்டி நின்று கொண்டிருந்தது. மைதானத்தில் மக்கள் கூட்டங் கூட்டமாக நின்று கொண்டிருந்தனர்.

இதற்குள் வாசலருகே ஒரு போலீஸ் அதிகாரி நின்று கொண்டிருந்தார். அவர் ஒரு ஜவானிடம் ஏதோ கூறினுர். உடனே அவன் ஓடோடியும் 'பிக் அப்' நடக்குமிடத்திற்குச் சென்ருன். அதிகாரி சற்றுக் கடுமையாக மக்களிடம் பேசினுர்: ''இங்கு லட்டு

விநியோகம் செய்கிறார்களா என்ன? போங்கள்... அட நீங்களுமா வந்திருக்கிறீர்கள்?'' என்று சஜ்ஜனைப் பார்த்துக் கேட்டார்.

சஜ்ஜன் அவரருகே சென்று கை குலுக்கினான். ராதேச்யாமும் வர்மாவுங்கூடப் பிறது அங்கே வந்து நின்றனர்.

''என்ன விஷயம்?'' என்று சஜ்ஜன் கேட்டான்.

''ஆஸ்பத்திரியில் கொண்டு சேர்த்துவிடுவோம். ஆனால் பிழைப் பது கடினம்'' என்றார் போலீஸ் அதிகாரி.

''அதிகமாக எரிந்து போய்க் காயமோ?''

''எரிந்தது மட்டுமில்லை! ஆனால் 'ஷாக்' வேறு அதிகமாகியிருக் கிறது. இஞ்செக்ஷன் கொடுத்திருக்கிறோம். ஆனால் 'ஸிங்க்' ஆகிக் கொண்டிருப்பது போலத்தான் தோன்றுகிறது'' என்று கூறியபடியே அதிகாரி உள்ளே சென்றார். சஜ்ஜன் அதிர்ச்சி யடைந்தான். அவன் கேட்டான் ''நான்...''

''வாருங்களேன்!'' என்று கூறி அவனது கையைப் பிடித்தழைத் துச் சென்றார் அதிகாரி. அந்த இடத்தில் மூன்று வீடுகள் கட்டப் பட்டிருந்தன. ஜகதம்பா சஹாயின் முன்னோர்களது புகழ் இப் போது மங்கிக் கொண்டிருந்தது. செங்கற்கள் வெளியே தெரிய, வீடுகள் பழையனவாகி விட்டன. எதிரேயுள்ள வீட்டில் வீட்டுச் சொந்தக்காரர் இருந்தார். உள்ளே நுழைந்ததும் வராண்டா, பிறகு ஒரு பெரிய ஹால்—அதையடுத்து ஓர் அறை இருந்தது.

எங்கே பார்த்தாலும் காவலர் நின்று கொண்டிருந்தனர். மகள் கம்யூனிஸ்டு என்ற சந்தேகத்தால் வீட்டைப் போலீசார் பரி சோதனை செய்தனர். ஆனால் குறிப்பிடும்படியாக ஒன்றும் கிடைக்கவில்லை.

இவர்கள் சென்றவுடன் காவலர் நுழைந்தனர். அதிகாரியைக் கண்டதும் அவர்கள் வராண்டாவிலேயே நின்று கொண்டனர். கான்ஸ்டேபிள் அருகே சென்று 'சலூயூட்' செய்தான். ''அதி காரிக்கு வைர்லஸ் செய்துவிட்டேன், சார். மிர்ஜாஜி ஆஸ்பத்திரி யிலிருந்து வண்டி அனுப்பும்படி மெஸேஜ் கொடுத்திருக் கிறார்கள்!'' என்றான் அவன்.

''சரி, எங்கிருந்தாவது இரண்டு நாற்காலிகள் கொண்டுவா. வெயிலில் போடு'' என்றார் அதிகாரி.

ஜவான் உடனே விரைந்தான். அதிகாரி சஜ்ஜனிடம் கூறினார். ''இன்று காலையிலிருந்து தேநீர் கூடக் குடிக்கவில்லை. இது போலீசாரின் தொல்லை. காலையில் எழுந்து பேப்பரைப் பார்த்துக் கொண்டிருந்தேன். உங்களைப்பற்றிய கட்டுரையைப் பார்த்தேன்; அவ்வளவுதான். சாளிகிராம் வந்து விட்டார். எலெக்ஷனைப் பற்றி ஏதோ முக்கியமாகப் பேச வந்தார். பிறகு இந்தச் சடலத்தைப் பற்றிய ரிபோர்ட் வந்து விட்டது. ஜகதம்பா சஹாயின் வீட்டைப் பரிசோதியுங்கள் என்றார் சாளிகிராம்.

கம்யூனிஸ்ட் பிரசார ஏடுகள் அங்கே கிடைக்கும் என்பது அவருடைய எண்ணம். பிறகு என்ன? தேநீராவது, நாஷ்தா வாவது!''

நாற்காலிகள் வந்து விட்டன. சஜ்ஜன் உட்கார்ந்தபடியே சட்டைப்பையிலிருந்து சிகெரெட்கேசை எடுத்தான். கோபுரத் தைப் போன்றவடிவில் தந்தத்தில் செய்திருந்த சிகெரெட்–கேஸ். விசேஷமாக ஆர்டர் கொடுத்து மைசூரிலிருந்து தருவித்தது. நடுவில் நடராசரின் உருவம் செதுக்கியிருந்தது. அந்தக் கேசை உடனே சுக்லா தம்கையில் எடுத்துக் கொண்டார். சற்று நேரம் பார்த்தார். பிறகு சிகரெட் கேசைத் திறந்து சஜ்ஜனிடம் நீட்டிய படி கேட்டார்: ''அந்த வரி நினைவிற்கு வரவில்லையே. மைதிலீ சரண் எழுதிய கவிதை அது. பள்ளிக் கூடத்தில் படித்த நினைவு 'உன் பொருளையே உனக்கு நான் எப்படித் தருவேன்?' என்பது.''

சஜ்ஜன் சிகரெட்டை எடுத்துக் கொண்டான். சட்டைப் பைக்குள்ளிருந்து சிகரெட் லைட்டரை எடுத்தான். சுக்லா தமக்காக ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டு கேசை மூடினார். அதில் செய்திருந்த வேலைப்பாட்டை ரசித்தபடியே கூறினார்: ''இந்தக் கலைஞர்கள் அழகிய பொருள்களை எங்கிருந்தெல்லாம் திரட்டு கிறார்கள்!''

''யாருக்கு எதில் நாட்டமோ, அது அவருக்குக் கிடைக்கிறது'' சிகரெட்டைக் கொளுத்திய படி சஜ்ஜன் கூறினான்.

சுக்லா வாசலில் நின்று கொண்டிருந்த கானிஸ்டேபிளைக் கூப்பிட்டார்: ''ஷேர் அலி!''

''சார்!'' ஷேர் அலி அருகே வந்தான்.

''உள்ளே போய்ச் சற்றுப் பார்த்துவா. அந்தச் சனியன் செத்ததா இல்லையா என்று?''.

ஷேர் அலி சென்று விட்டான்: சஜ்ஜன் கூறினான்: ''போலீஸ் தொழிலில் மனித இரக்கமே மாண்டு விடும் போலிருக்கிறது.''

''பின்னே என்ன சார் செய்வது? தினசரி இதேவேலைதான். இந்தவேலையில் இருந்தால் போதும். மனிதத்தன்மையின் பேரில் நம்பிக்கையே போய்விடும். போலீசின் தினசரி அலுவல்களைக் காண்பிக்கும் நோட்டைப் பாருங்கள். அப்போது நான் சொல்வது உண்மையா இல்லையா என்பது புரியும். கோயில், மசூதி, மதம், சம்பிரதாயம் இவையாவும் வீண்தான். உங்கள் ஆர்ட், கல்ச்சர் எல்லாம் வெளிப்பகட்டுத்தான். ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக இவற்றால் மனிதனை மாற்ற முடியவில்லையே!''

அதிகாரி பேசிக்கொண்டிருப்பதைக் கண்ட ஷேர் அலி வாசற் படியருகே வந்து மௌனமாக நின்று கொண்டான். அதிகாரி

கேட்ட பிறகு கூறினான்:'' இன்னும் நிச்சயமாகச் சொல்ல முடியாது என்று டாக்டர் சொல்கிறார், சார்!''

''நாசமாய்ப் போனாள், இன்று பட்டினிதான்''

''உங்களுக்குத் திட்டும் உரிமையை யார் அளித்தார்கள்?'' ஹாலில் நின்றுகொண்டிருந்த பெண்மணி கேட்டாள்.

சுக்லா புருவங்களை நெரித்துக் கொண்டு திரும்பினார் அவருடைய உரிமையைப்பற்றிய கேள்வி அது. சஜ்ஜன் அந்தச் சிவந்த நிறமுள்ள பெண்மணியைக் கண்டான். சஜ்ஜன் ஓரிருமுறை அவளைப் பலருடன் இருக்கக் கண்டிருக்கிறான். அவளுடன் பேசியது கூட அவனுடைய நினைவிற்கு வந்தது. ஆனால் அவளை அவனுக்குத் தெரியாது. அந்தப் பெண்மணியின் கண்களில் ஆத்திரம் பளிச்சிட்டது.

அதிகாரி சிரித்தபடி பதிலளித்தார்: ''என்னம்மா செய்வது? எங்கள் முதல் அதிகாரிகள் வெள்ளையர். அவர்கள் எங்களைத் திட்டி வந்தனர். இப்போது புதிய காங்கிரஸ் தலைவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களும் எங்களைத் திட்டுகிறார்கள். நீங்கள் கம்யூனிஸ்டுகள் அரசை ஏற்றால் இப் பழக்கம் மாறிவிடும்!''

பழக்கமானவள் போல் பெண்மணி சஜ்ஜனைப் பார்த்தாள். பிறகு அதிகாரியை முறைத்துப் பார்த்துவிட்டு, ''உதை கொடுத்து அந்தப் பழக்கத்தை விரட்டுவோம்'' என்று கூறி உள்ளே சென்றாள்.

வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு அதிகாரி புன்முறுவலுடன் சஜ்ஜனிடம் கூறினார்:'' ''அதனால்தான் நாம் கம்யூனிஸ்ட் ஆட்சி வரக்கூடாது என்கிறோம். என்ன சார்?''

சஜ்ஜன் மெள்ளக் கூறினான்: '' மன்னிக்க வேண்டும். இந்தத் திட்டும் பழக்கம் எனக்குக் கூடப் பிடிக்காது.''

''வாஸ்தவம்தான், ஆனால் என்ன சார் செய்வது? இந்தப் போலீஸ் தொழில் திட்டாமல் நடக்காதே!''

வெளியிலிருந்து கான்ஸ்டேபிள் வந்து கூறினான்: ஆஸ்பத்திரியிலிருந்து வண்டி வந்து விட்டது சார்!

அதிகாரி கூறினார்: ''வந்து விட்டது என்றால் நான் என்ன செய்யட்டும்! போய் டாக்டரிடம் சொல். நோயாளியை அழைத்துச் செல்லலாமா என்று கேள்... சரி, இரு, நானே வந்து கேட்கிறேன். நீங்கள் சற்று இருங்கள், சஜ்ஜன் சார்!''

''நான் கிளம்பட்டுமா?''

'சற்று இருங்கள், வந்துவிடுகிறேன்''

அதிகாரி உள்ளே சென்றார். கான்ஸ்டேபிளும் அவரைத் தொடர்ந்து சென்றான்.

சஜ்ஜன் சட்டைப்பையிலிருந்து சிகரெட் கேஸை எடுத்தான்.

தேவையில்லாத வேலையில் வந்து அகப்பட்டுக் கொண்டோமே என அவன் நினைத்தான். பாவம். நோயாளி எப்படி இருக்கிருளோ? தன்மீது நெருப்பை வைத்துக்கொள்வதற்கு முன்பு தயக்கம் ஏற்பட்டிருக்காதா என்ன?''

உஸ், எவ்வளவு பயங்கரமான சாவு! எண்ணிப் பார்த்தவுடனேயே சஜ்ஜனுக்கு ரோமம் சிலிர்த்தது.

அந்தப் பெண்மணி மறுபடியும் வந்தாள். வந்து காலியாக இருந்த நாற்காலியருகே நின்றுகொண்டாள். மிகவும் பண்புடன், ''சஜ்ஜன்! வாருங்கள்'' என்ருள்.

''நீங்கள் இங்கு என்ன செய்ய வந்தீர்கள்?'' ஆங்கிலத்தில் கேட்கப்பட்ட இந்த வறண்ட கேள்வியைச் செவியுற்ற சஜ்ஜன் திடுக்கிட்டான். அவனிடமிருந்து பதில் வருவதற்குள் அந்தப் பெண்மணி கேட்டாள்: ''எப்போதிலிருந்து உங்களுக்குப் போலீசாருடன் தொடர்பு இருக்கிறது? 'ப்ளண்ட்' கேள்விகேட்கிறேன். மன்னித்து விடுங்கள்.''

கம்பீரமான குரலில் சஜ்ஜன் பதிலுரைத்தான்: ''மற்ற எல்லோரையும் போல் செய்தி கேட்டு இங்கே வந்தேன். மிஸ்டர் சுக்லா எனக்குத் தெரிந்தவர். அவர் உள்ளே வாருங்கள் எனக் கூறி என்னை அழைத்துச் சென்ருர்.''

''போலீசார் அறிமுகமானதால் நீங்களும் அவதிப் படும் மக்களைப் பயன்படுத்திக் கொள்ளப் பார்க்கிறீர்களா?'' அவளது குரல் சற்று அதிகக் கடுமையாக இருந்தது.

சஜ்ஜன் தலைகுனிந்து கொண்டு கூறினன் ''என்னை மன்னியுங்கள். தவறு செய்துவிட்டேன். நான் சென்றுவிடுகிறேன்.''

''நான் உங்களைப் போகச் சொல்லவில்லை'' பெண்மணியின் குரல் சற்றே பணிவுடன் ஒலித்தது. நீங்கள் வேறு நேரத்தில் வந்திருந்தால், அதை என் அதிருஷ்டமாகக் கருதியிருப்பேன். என் தந்தையும், அண்ணியும் குற்றவாளிகள் என்பது உங்களுக்குத் தெரியுமா?''

''எனக்குத் தெரியாது. நீங்கள் தவருக எண்ணுமலிருந்தால் ஒன்று சொல்கிறேன்; எனக்கு உங்களையும் தெரியாது; பலதடவைகள் பார்த்திருக்கிறேன், அவ்வளவுதான். கம்யூனிஸ்டுக் கட்சியில் நீங்கள் வேலை செய்வதுபோல் தோன்றுகிறது.''

''இல்லை. நான் கம்யூனிஸ்ட் இல்லை. ஆனுல் அந்தப் பார்ட்டிக்காரர்களுடன் எனக்குத் தொடர்பு உண்டு'' என்று பெண்மணி பதிலளித்தாள்.

''உங்களால்தான் இந்த வீட்டிற்கு இம்மாதிரி ஆபத்து வந்திருக்கிறது என்பது ஒருவேளை உங்களுக்குத் தெரியவில்லை போலும்!'' என்ருன் சஜ்ஜன்.

அவள் அவனை உற்று நோக்கினாள். சஜ்ஜன் கூறினான்? "உங்கள் வீட்டிற்குக் கம்யூனிஸ்ட் பார்ட்டியின் மக்கள் வருகின்றனர் என்பதால்தான் உங்கள் வீட்டைக் காவலர் கண்காணிக்க ஆரம்பித்தனர். அதன் விளைவாக உங்கள் வீட்டுக்குற்றமும்......."

"குற்றம் யாருடையது? என் தந்தையுடையதா, அன்றி அண்ணியுடையதா?"

அவளது கேள்வியைக் கேட்ட சஜ்ஜன் கணநேரம் தயங்கிப் பிறகு கூறினான்: "குற்றம் இவருடையதும்தான். ஆனால் உங்கள் அண்ணி இப்போது..."

"என் தந்தை புரிந்த குற்றத்திற்கு அவள் இப்போது தண்டனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறாள்" என்று கூறியபடியே சென்ற பெண்மணி மறுபடியும் ஒரு கேள்வி கேட்டாள்: "அண்ணியின் குற்றம் என்ன? நல்ல பருவத்தில் கைம்பெண்ணானதா அல்லது தாயானதா?"

பெண்மணி உணர்ச்சி வசப்பட்டிருப்பதை சஜ்ஜன் அறிந்து கொண்டான். எப்படியோ அவள் ஆவேசத்தை வெளிப்படுத்த விரும்புகிறாள் எனக் கருதி அவளுக்கு ஆறுதலாகப் பதிலளிக்க சஜ்ஜன் முயன்றான்.

"அவர்களை நான் குற்றவாளி என்று கருதமாட்டேன். ஆனால் குழந்தையைக் கொன்றது"

"அது என் தந்தையின் வேலை. என் அண்ணியை ஒவ்வொரு கணமும் வற்புறுத்தி தம் போக்குப்படி நடந்துகொண்டவர் என் தந்தை!"

பெண்மணியின் சிவந்த முகம் மறுபடியும் உணர்ச்சி வசப்பட்டது, செல்ல முயன்ற அவள் மறுபடியும் நின்று தனக்குத் தானே கூறிக் கொண்டாள்: "அண்ணி ஒரு பெண்: இகனுமிகலிஃப்ரீ இல்லை. (பொருளாதார நிலைமை போதுமான அளவு இல்லை) இதுதான் என் அண்ணியின் குற்றம்!"

நிலத்தைப் பார்த்தபடி பெண்மணி நின்றாள். சஜ்ஜன் மௌனமாக அவளைப் பார்த்துக்கொண்டே இருந்தான். அந்தப் பார்க்காத குற்றவாளிக்காகவும் அவன் வருந்தினான். கூறிக் கொண்டிருக்கும் பெண்மணிக்குப் பதைக்கும் தன் உள்ளத்தையே அர்ப்பணித்து விட்டான். கலைந்து பறந்து கொண்டிருந்த அவளுடைய சுருண்ட கேசம், வேதனையினால் தவிக்கும் கண்கள், உணர்ச்சி வசப்பட்ட சிவந்த முகம், இவற்றை இரக்கத்துடன் பார்த்த சஜ்ஜன் தன் அன்பை அவளிடம் பொழிய விழைந்தான். அடுத்த கணமே அவன் வெட்கித் தலை குனிந்தான். தன் பேரிலேயே அவனுக்குக் கோபம் வந்தது.

"நீங்கள் உதவி செய்வீர்களா ? போலீஸ்காரர்களைச் சீக்கிரம்

இங்கிருந்து போகச் சொல்லுங்களேன். மனம்விட்டு நாங்கள் அழக்கூட முடியாத நிலைமையில் இருக்கிறோம்.''

அந்தப் பெரிய கண்களில் நீர் நிரம்பிவிட்டது. உதடுகளும் மூக்குத்துவாரங்களும் துடித்தன. சஜ்ஜன் ஒரு கணம் பார்த்தான்; பிறகு தலையைத் தாழ்த்திக் கொண்டான். 'சீ! பெண் வெறும் போகப் பொருள்தானா என்ன?'' தன்னையே அவன் கேட்டுக்கொண்டான். பெண்மணி விரைந்து ஹாலுக்குள் சென்றுவிட்டாள்.

## 7

''ஆல் இண்டியா ரேடியோ, லக்னோ, அலகாபாத், பட்னா நிலையங்கள். 'உங்கள் விருப்பம்' நிகழ்ச்சி இத்துடன் முடிவடைகிறது ..''

தாரா எழுந்திருந்து ரேடியோவை லாகூர்ஸ்டேஷனுக்குத் திருப்பினாள். 'சம் சம் சம் பாஜே பாயல் மோரி...' பாரதத்துடன் பிரிந்த உறவை ரேடியோ திரைப்பட இசை சேர்த்து வைத்தது. கேட்பவர் உற்சாகம் அடைந்தனர்.

தாரா மறுபடியும் பெஞ்சின் மீது சாய்ந்து உட்கார்ந்துகொண்டாள். இளையவள் தலையணையில் சாய்ந்து படுத்திருந்தாள். மூத்தவள் கார்பெட் சாய்வு நாற்காலியைப் பெஞ்சுடன் சேர்த்துப் போட்டுவிட்டு அதன்மீது உட்கார்ந்துகொண்டாள். தாரா உட்கார்ந்தவுடன் இளையவள் பேச்சைத் தொடர்ந்து ஆரம்பித்தாள்: ''நான் நந்தோவின் கணவரைப் பார்த்திருக்கிறேன். என் சித்தியின் ஒரகத்தியுடைய அண்ணன் மகனைத்தான் அவர் இரண்டாம் திருமணம் செய்து கொண்டிருக்கிறார். சற்றுப் பழைய சம்பிரதாயப்படி நடப்பவர். ஆனால் மிகவும் நல்லவர், பார்க்கவும் நன்றாக இருப்பார்.''

''அவளுக்குக் காமதேவனே வந்தாலும் லட்சியம் கிடையாது. பேய் ஜன்மம்! நீ ஒரு விஷயம் கேட்டாயா?'' மின் வேகத்தில் சாய்வு நாற்காலியைவிட்டு மூத்தவள் பெஞ்சில் உட்கார்ந்தாள். மூத்தவளின் குரலாலும் சுறுசுப்பாலும் ஆட்கொள்ளப்பட்ட இளையவள் எழுந்து பரபரப்புடன் உட்கார்ந்து கொண்டாள்.

பெண்ணின் அழகைக் குலைத்துப் படைப்பின் அழகினால் அவளுடைய உள்ளத்தை உவகையடையச் செய்யும் எட்டு மாதச் சிசு தாராவின் உயிருக்குள் அடங்கியிருந்தது. அந்த நிலையில் அவள் தன்னால் இயன்றவரை கால்களை மடித்துக்கொண்டு பரபரப்புடன் உட்கார்ந்தாள்.

மூத்தவள் கால்மேல் காலைப் போட்டுக்கொண்டு கைகளை அவற்றுடன் பிணைத்தபடி கூறினாள் :- ''நந்தோவின் பெட்டியில் ஒரு டஜன் போட்டோக்கள் இருந்தன.''

'' அடே ! என்ன போட்டோ ?'' இளையவளின் பரபரப்பு முகத்தில் பிரதிபலித்தது. தாராவின் கண்களும் ஒளிவிட்டன.

அதே குரலில் மூத்தவள் கூறினாள் : ''கடைத் தெருவில் சகிக்க முடியாத போட்டோக்கள் விற்பதில்லையா. அவற்றைத்தான் பார்த்தேன் ! என்னால் தாங்க முடியவில்லை !'' மூத்தவள் பேச்சை மிகவும் ரசித்தாள். கண்களில் போதையே ஏறிவிட்டாற்போல் இருந்தது.

தாரா கேட்டாள் : ''நீ அந்தப் படங்களைப் பார்த்தாயா?''

''பின்னே என்ன? நம் பொருள்கள் இன்னும் என்னவெல்லாம் களவு போயிருக்கின்றனவோ என்று தேடியதன் பேரில் இவை தென்பட்டன. அவருடைய கோபாவந்தான் உனக்குத் தெரியுமே ! கோபம் வந்ததோ அவ்வளவுதான், அவரை மன்னனாலும் சாந்தப் படுத்த முடியாது!''

மூத்தவளின் கணவன் மனியா தன் போக்கில் இருப்பவன். ரசிகனுங்கூட. முதல் முதலில் தன் மனைவியிடம் மிகுந்த ஆசையுடன் இருந்தான். இதெல்லாம் சில நாட்கள்வரைதான். மூத்தவள் மனியாவிடம் நடுங்கினாள். திருமணம் ஆகாத மைத்துனன் சங்கர்லால் என்றால் அவளுக்குப் பிரியம். நாத்தி நந்தோவோ விஷக்கொடுக்குத்தான். பொய்யெல்லாம் பேசித் தன் அண்ணனிடம் கோள் சொல்லித் தன் அண்ணியை அவள் படாதபாடு படுத்தி வந்தாள். அடிமுதற்கொண்டு வாங்கித்தருவாள். மனியாவைத் திருத்தி அடக்குவதற்காகவே அவளை நந்தோ சந்தோவின் மனைவியுடன் பிணைத்துவிட்டாள். நந்தோ அடி வாங்குவதைக் கண்டு அவள் பெரிதும் மகிழ்ந்தாள்.

பேச்சு நடந்து கொண்டிருந்தது. அறைக்கு வெளியே தாராவும் மிஸ்டர் வர்மாவும் தன் கணவனுடன் பேசும் குரல் கேட்டு இளையவள் திடுக்கிட்டாள். கூடவே மகிழ்ச்சியும் அடைந்தாள். சாய்வு நாற்காலியைவிட்டு அறைப்பக்கம் விரைந்த அவள் கரங்கூப்பி மிஸ்டர் வர்மாவுக்கு வணக்கம் செலுத்தினாள். தன் கணவனிடம் ஏதோ கேட்க நினைப்பதற்குள் மிஸ்டர் வர்மா கூறினார் : ''பாருங்கள், உங்கள் கைதியைக் கைது செய்து விட்டோம் !''

இளையவள் நாணத்துடன் புன்முறுவல் பூத்தாள். தாரா கேலியாக அவளைப் பார்த்துச் சிரித்தாள்; பிறகு சங்கர்லால் வர்மாவிடம் கூறினாள் : ''ஒருவரையொருவர் கைது செய்து

கொண்டு தத்தம் தலைவரிடம் வந்திருக்கிறீர்கள் என்று சொல்லுங்கள்.''

நால்வரும் ஒரே மாதிரியாகச் சிரித்தனர்.

அறையில் உட்கார்ந்து கொண்டு வெளியே செவிகளைச் செலுத்திக்கொண்டிருந்த மூத்தவளின் உள்ளமும் பரபரப்படைந்தது. தாரா, இளையவள்—ஒரகத்தி இளையவளிடம் பொறுமை கொண்டிருந்தபோதிலும் வயிற்றெரிச்சல் படமாட்டாள். இளையவளும், தாராவும் தம்மை மறந்து மூத்தவளுடன் சல்லாபமாக நடந்து கொள்கிறார்களே என்று அவள் வியந்தாள்.

மைத்துனனின் குரல் கேட்டது: ''சரூப், கிளம்பு, வீட்டிற்குச் சென்று நொடியில் தயாராகிவிடு. பிறகு...''

''சற்று இருங்கள், தேநீர் அருந்திவிட்டுச் செல்லுங்கள்'' தாராவின் குரல் வெளி வந்தது.

''வேண்டாம், வீண்சிரமம்'' மிஸ்டர் வர்மா கூறினார்.

''சும்மா உட்காருங்கள் உங்களைச் சாக்கிட்டுக் கொண்டு நானும் ஒரு கோப்பை தேநீர் அருந்த முடியும். இல்லாவிட்டால் எனக்குக் கிடைக்காது.''

''மிஸஸ் வர்மா, கேட்டீர்களா கதையை? உங்களைப் பற்றிப் புகார் நடக்கிறது.''

''நன்றி கெட்டவர்களைப் பற்றி என்ன சொல்வது! நீங்களே கேட்டுக்கொள்ளுங்கள்!''

தாராவின் குரல் தொலைவில் சென்று மறைந்தது. மெல்லிய சிரிப்புடன் மிஸ்டர் வர்மா தன் தம்பியுடன் பேசுவது கேட்டது ''பிக்சர் போக ஏற்பாடு நடந்திருக்கிறதா, என்ன?''

''ஆமாம், அவர்கள் என் நண்பர்கள். 'விரஹேஷ்,' என்ற பெயரை நீங்கள் கேட்டிருப்பீர்கள். அவர் 'வந்தது வசந்தம்' எனும் படத்துக்குப் பாடல்கள் எழுதியிருக்கிறார்.''

''படம் எப்படி?'' என்று வர்மா கேட்டார்.

''இதோ பாருங்கள்!'' தாராவின் குரல் தொலைவிலிருந்து ஒலித்தது. தாரா சமையலறையில் இருக்கிறாள் என்று மூத்தவள் ஊகித்துக் கொண்டாள்.

தொலைவிலிருந்து மிஸ்டர் வர்மாவின் குரல் ஒலித்தது,

''சங்கர் பாபு! இதோ வத்துவிட்டேன்.''

''இதோ பாருங்கள். நான் சொல்வதைக் கேட்கவேண்டும். வீண் சிரமம் எதற்கு?'' சங்கர்லால் கேட்டுக் கொண்டார்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை சார்!'' என்றார் மிஸ்டர் வர்மா.

''சரிதான்! ஏதோ வழி தவறினாற்போல் நம் வீட்டுக்கு நீங்கள் வருகிறீர்கள். மோஹினியைக் கூப்பிடு. கோஷாப் பெண்ணைப் போல் ஒளிந்து கொண்டிருக்கிறாள்!''

''அண்ணி எங்கே?''—சங்கர்லால் குரல் கொடுத்தார். குரலுடன் செய்தித்தாளும் படபடத்தது.

மூத்தவள் சங்கோசத்துடன் எழுந்தாள். அறையின் வாயிலில் வந்து நின்று கொண்டாள். வராண்டாவிலிருந்த சோபாவில் சங்கர்லால் அமர்ந்திருந்தார். அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கூறினார்: ''உள்ளத்தில் யாராவது மறைந்து கொள்வார்களே, அப்படியிருக்கிறது நீ பதுங்கிக் கொண்டிருப்பது. நான் வீடு முழுதும் தேடித் தேடி அலுத்துப்போனேன்.''

''யஹ் ரேடியோ பாகிஸ்தான் ஹை—'' இப்படி ஒரு அலறல்.

''மோஹினி! கொஞ்சம் ரேடியோவை நிறுத்தேன்.'' சமயலறைக்கு அருகே இருக்கும் தாழ்வாரத்துத் தூணைப் பிடித்துக் கொண்டு தாரா கூறினாள். இளையவள் ஸ்டவ்விலிருந்த தேநீர்க் கெட்டிலை இறக்கிவிட்டுப் பாலை வைத்தாள். மூத்தவள் தன் மைத்துனனின் வார்த்தைக்குப் பதிலளித்தபடியே ரேடியோவை மூடச் சென்றாள்: ''உள்ளத்தில் ஒளிந்திருப்பவளைத் தேடித்தானே இங்கே வந்திருக்கிறீர்கள்? என் பேரில் உங்களுக்கு இரக்கம் ஏன் வரப் போகிறது?''

ரேடியோ மூடப்பட்டுவிட்டது. தாழ்வாரத்திலிருந்து சங்கரின் பதில் வந்தது; ''சரியாய் போச்சு! யாரது உள்ளத்தில் இருப்பது? இவள் வெளியே மின்னுபவளாயிற்றே! உள்ளத்தில் நீதானே இருக்கிறாய், ஒளிந்துகொண்டு.''

மூத்தவள் புன்முறுவலுடன் வெளியே வந்தாள். சங்கர்லால் தம் வாக்கியத்தை முடித்தார். ''நான் என்ன, அண்ணன் என்ன? இருவரின் விஷயமும் ஒன்றுதானே!''

தாராவும் இளையவளும் சிரிப்பதை மூத்தவள் பார்த்தாள். சற்றுக் கிண்டலாக அவள் தாராவிடம் கூறினாள்: ''கேட்டாயா இவரது பேச்சை? பொய் பேசுவதிலும் எங்கள் ஐயா எம். ஏ., பாஸ் செய்திருக்கிறார். ''அண்ணி, வாருங்கள் சினிமாவுக்கு அழைத்துச் செல்கிறேன்.'' என்பதை விட்டுவிட்டு உள்ளத்தைப் பற்றி பேச ஆரம்பித்துவிட்டார்!''

மூத்தவள் இவ்விதம் பேசிக்கொண்டே தாழ்வாரத்தை நோக்கி வந்தாள். சங்கர் பதிலளித்தார்: ''அண்ணிகளுக்கு விருந்தளிப்பது கிடையாது, அவர்களே வற்புறுத்தித்தான் விருந்தைப் பெற்றுக் கொள்ளவேண்டும். என்ன மிஸஸ் வர்மா, நான் கூறுவது சரிதானே?''

மிஸ்டர் வர்மா கையில் தொன்னைகளுடன் உள்ளே நுழைந்தார். தாரா அவற்றை வாங்கிக் கொள்ளத் தாழ்வாரத்துக்கு வந்தாள். இளையவள் 'ட்ரே'யில் தேநீர்ப் பாத்திரங்களைச் சீராக வைத்துக் கொண்டிருந்தாள். முகத்திரையைச் சரியாகப் போட்டுக்கொண்டு

மூத்தவள் அருகே உட்கார்ந்திருந்தாள். இனிப்பு, காரவகைகள் நிறைந்த தொன்னையைக் கொடுத்தபடியே வர்மா கேட்டார்: "எதைச் சரியா என்று கேட்கிறீர்கள்?"

"ஒன்றுமில்லை. ஒரு அண்ணியின் குற்றத்துக்குத் தீர்ப்புக் கூறும்படி மற்றொரு அண்ணியிடம் கேட்டுக் கொண்டிருந்தேன்." சங்கர் புன்முறுவலுடன் கூறினார்.

வர்மா சோபாவில் அமர்ந்துகொண்டு சமையலறைப்பக்கம் பார்த்தபடி கூறினார்: "உங்கள் அண்ணியும் இங்கே வந்துவிடுவார்கள். முதலில் தீர்ப்புக் கூறுபவரின் தகுதிபற்றிச் சிந்திக்க வேண்டாமா?"

"மிஸ்டர் வர்மா, பெண்களைத் தகுதியற்றவர் என்று சொல்லக் கூடாது. நம் கான்ஸ்டிட்யூஷனில் (அரசியல் விதிகளில்) அவர்களுக்குச் சம உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது."

தாரா தேநீர் 'ட்ரே'யுடன் வந்தாள். வட்ட மேஜைமீது வைத்துவிட்டுப் பேசினாள்: "இதையெல்லாம் கல்சர்ட் மனிதர்களால்தான் புரிந்துகொள்ள முடியும். பட்டிக்காடுகளிடம் கூறினால் என்ன பயன் மிஸ்டர் லால்?" என்று சொல்லியபடியே? தன் கணவனை விஷமத்துடன் பார்த்தாள். வர்மாவும் சங்கரும் புன்முறுவல் செய்தனர். சங்கர் கூறினார்: "மிஸஸ் வர்மா! இதற்கு என்னிடம் பதில் கிடையாது!"

இளையவள் இனிப்பு—காரவகைகளுடன் வந்தாள். அவளைப் பார்த்தவுடன் சங்கரின் பேச்சில் உற்சாகம் வந்தது. "சரூப்கூட என்னைப் பட்டிக்காடு என்று நினைத்துவிட்டால்"

"உள்ளதை உள்ளபடிதானே சொல்ல முடியும்!" இளையவளின் பதிலைக்கேட்டுத் தாராவும் வர்மாவும் உரக்கச் சிரித்தனர். சங்கர் லாலின் சிரிப்பும் சேர்ந்துகொண்டது.

சமையலறையிலிருந்த மூத்தவள் ஒரு நீண்ட மூச்சுவிட்டாள். வேடிக்கையாகக்கூட அவளால் தன் கணவனைப் பட்டிக்காட்டான் என்று சொல்ல முடியாது. எதிரே இருந்த தாரா அவளைக் கூப்பிட்டாள். கண்களால் சாடை செய்தபடியே மூத்தவள் பதிலளித்தாள்: "முடியாது, எனக்கு வெட்கமாக இருக்கிறது!"

சங்கர்லால் எழுந்து தாராவிடம் கூறினார்; "வாருங்கள் உட்காருங்கள்."

"உங்கள் அண்ணியைக் கூப்பிடுங்கள். அவர்களுக்கு வெட்கமாக இருக்கிறதாம்!" என்று கூறியபடியே தாரா மூத்தவளைப் பார்த்துச் சிரித்தாள்.

மூத்தவள் கோபத்துடன் தாராவை நோக்கினாள். சங்கர் பதிலளித்தார்: "அண்ணி!" தாரா சங்கரிடமிருந்த சோபாவில்

அமர்ந்துகொண்டாள். இளையவள் கோப்பைகளில் தேநீரை நிரப்பிக் கொண்டிருந்தாள்.

சங்கர் எழுந்து எதிரே வந்தார். சங்கோசத்துடன் அவரைப் பார்த்துக்கொண்டே முகத்திரையைச் சரிப்படுத்தியவளாய்த் தாழ்வாரத்திற்கு வந்தாள். சங்கர் அவளைப் பார்த்துக் கூறினார்: ''எங்கள் அண்ணியின் சுபாவம் உங்களுக்குத் தெரியாது. அவர்களை அண்ணன் பெரிய தோத்திரப் பிரியையாக்கிவிட்டார்!''

மூத்தவள் தாழ்வாரத்திற்கு வந்ததும் மிஸ்டர் வர்மா கரங் குவித்து வணங்கினார். அவள் புன்முறுவலுடன் கரங்குவித்தாள். பிறகு தாராவிடம் சென்று அமர்ந்துகொண்டாள். இனிப்புப் பண்டம் வைத்திருந்த பிளேட்டைத் தாரா சங்கர்லாலிடம் நீட்டினாள். இளையவள் வர்மாவிற்குத் தேநீரில் முதற்கோப்பையை அளித்தாள்.

ஆடவரும் பெண்டிரும் சேர்ந்து தேநீர் அருந்தும்போது அதில் கலந்துகொள்ளும் வாய்ப்பு மூத்தவளுக்கு இரண்டாம் முறையாகக் கிடைத்தது. பள்ளியில் படிக்கும்போது ஒரு கிறிஸ்தவப் பெண்ணின் உறவினரது இல்லத்தில் அவள் தேநீர் அருந்தியிருக் கிறாள். ஆனால் அப்போது அவள் கன்னிப்பெண்—இத்தனை தளை களால் அவள் கட்டுப்படவில்லை. அப்போது மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. இப்போதும் மகிழ்ச்சிக்குக் குறைவு கிடையாது. ஆனால் பல கட்டுப்பாடுகள் நிறைந்தது இந்த மகிழ்ச்சி. தாராவும் இளைய வளும் சரிசமமாகப் பழகுவதைக்கண்ட அவள் தன்னைத் தாழ்மை யாகக் கருதினாள். எல்லோருக்கும் தேநீர் அளித்த பிறகு தன் கோப்பைத் தேநீரை எடுத்துக்கொண்டு இளையவள் இவளருகே வந்து உட்கார்ந்து கொண்டாள்.

வர்மா தம்பதிகளின் தேநீர் முடிந்தது. லால் தம்பதிகள் அவர் களைத் தங்களுடன் 'பிக்சர்' பார்க்க அழைத்தனர். வர்மாகூறினார்: ''உங்களுக்கு ஸாங்ரைட்டர்பாஸ் கொடுத்து ..''

வர்மாவின் மற்றொரு சங்கோசத்தைத் தகர்த்தபடி சங்கர் கூறினார்: ''அப்படியொன்றும் இல்லை. அவர் படத்தைப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அவ்வளவுதான். இன்று ஞாயிற்றுக்கிழமை சென்று வரலாமே என்றுதான்...மிஸஸ் வர்மா! கிளம்புங்கள்!''

மிஸ்டர் வர்மா, மிஸஸ் வர்மா இருவருடைய கண்களும் பரஸ் பரம் அநுமதி பெற்றுக்கொண்டன. இருவரும் ஒப்புக் கொண்டனர்.

சங்கர் அண்ணியிடம் கூறினார்: ''கிளம்புங்கள், அண்ணி! இன்று உங்களையும் அழைத்துச் செல்கிறேன், பயப்படவேண்டாம். அண்ணனிடம் அநுமதி எழுதிக்கேட்டு விடுகிறேன்.''

அநுமதி பெறுவதைப் பற்றிக் கேட்டதும் மூத்தவள் நாணித் தலை குனிந்தாள். இரண்டு தம்பதிகளும் அநுதாபத்துடன் தன்னைப் பார்ப்பதுபோல் அவளுக்குத் தோன்றிற்று: "நான் என்ன செய்வேன். பெரிய சொசைடியில் வாழ்பவர்களுக்கிடையே நான் எப்படித் தாழ்ந்து கிடக்கிறேன்—அதுவும் என் கணவனின் காரண மாகத்தான்!''

மூத்தவளின் பார்வை மேலே செல்லவில்லை. எல்லோரும் செல்ல, அவள் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றாள்.

## 8

மேட்னி ஷோ முடிவடைந்ததும் குழாயிலிருந்து நீர் வேகமாக வெளிக் கிளம்புவது போல் கூட்டம் வெளியே வந்துகொண் டிருந்தது. அதே சமயத்தில் சங்கர்—வர்மா குடும்பத்தோரின் வண்டி நின்றது. சங்கர் வண்டியிலிருந்து இறங்கிக் காசு கொடுக்கத் தம் பர்சைத் திறந்தார். அடுத்த வண்டியிலிருந்து தம் மனைவி, அண்ணியுடன் இறங்கிய மிஸ்டர் வர்மா கூறினார்: ''இரண்டு பேருக்கும் சேர்த்து நான் கொடுத்து விட்டேன். மிஸ்டர் லால்!'' பிறகு சங்கரின் வண்டிக்காரனிடம் கூறினார்: ''இவனிட மிருந்து வாங்கிக் கொள், அப்பா!''

''சங்கர் பர்சை மூடியபடி சிரித்தார்: ''நீங்கள் அவசரக் குடுக்கைதான். சரி, நான் டிக்கட்டு வாங்கி வருகிறேன்.''

''நான் செல்கிறேன்'' என்று கூறிய வர்மா முன்னே சென்றார். அவரைத் தடுத்து நிறுத்திய சங்கர், ''மிஸ்டர் வர்மா! ப்ளீஸ்!'' என்றபடி விரைந்து சென்றார்.

மூன்று பெண்களையும் அழைத்துக் கொண்டு வர்மா மெள்ள நடந்தார். தாரா, மூத்தவள், இளையவள் மூவரும் உற்று நோக்கும் ஆடவரின் பார்வையிலிருந்து தங்களை மறைத்துக் கொண்டு பெண்கள் செய்து கொண்டிருந்த நாகரிக அலங்காரங் களைக் கண்டு ரசித்தபடியே நடந்தனர்.

நீண்டு சுருண்ட கேசம், கண்ணாடி போடப்பட்ட சிறு கண்கள், கம்பளிச் சட்டை, சூடிதார் பைஜாமா, இடது பக்கம் செஸ்டர், வலது கையில் 555 சிகரெட் டின் இவற்றோடு ஓர் இளைஞன் சங்கருடன் வந்தான். உணர்ச்சியுடன் அறிமுகப் படுத்தினார் சங்கர்: 'புகழ்பெற்ற கவிஞர் விரஹேஷ்ஜி இவர்தாம் மிஸ்டர்வர்மா! இந்தப் படத்துக்கும் பாடல்கள் இவர்தாம் எழுதியிருக்கிறார். இவர் மிஸ்டர் த்ரிபுவன் நாத் வர்மா - கேசர் பாகில் அஜந்தா ரேடியோ இஞ்ஜினியரிங் வொர்க்ஸ் இருக்கிறதே,

அதன் உரிமையாளர் இவர். மிஸஸ் தாரா வர்மா! இவர்கள் என் அண்ணி மிஸஸ் மோஹினிலால்!... இவர்தாம் உங்களைப் போன்ற கவிஞர் உற்சாகத்தில் எப்படி அழைப்பார்களோ என் மனைவி மிஸஸ் சரூப் குமாரிலால்.''

தாரா மிகவும் உற்சாகத்துடனும், இளையவள் மலர்ச்சியுடனும், மூத்தவள் நாணிக்கொண்டும் தன் உணர்ச்சியை உள்ளத்துடிப் புடன் மறைத்துக் கொண்டும் விரஹேஷ்ஜிக்கு வணக்கம் தெரிவித் தனர். எல்லா ஆசிரியரும், கலைஞரும், தலைவர்களும் அளிக்கும் வணக்கத்தைப் போன்று மூடிய வாயில் புன் சிரிப்புடன் மென்மை யாகக் கரங்குவித்து விரஹேஷ் வணக்கம் தெரிவித்தார்.

மிஸ்டர் வர்மாவும் விரஹேஷ்ஜியைப் பார்த்துத் தம் அதிருஷ் டத்தைப் பாராட்டிக் கொண்டிருந்தார். எண்பது சதவிகித மக்கள் விரஹேஷைக் காணத் துடித்துக் கொண்டிருந்தனர். பெண்களும், பாவம் அந்த ரசிகர்களின் மனைவி மக்கள் தாமே! காலையில் எழுந்தவுடனே,—''பல்மாஜா, பல்மாஜா'' என்று பாடப் படும் பாடலை முணுமுணுக்கவே அவர்கள் விரும்புகின்றனர். சினிமா நட்சத்திரங்களின் தந்தை பாட்டனார் இவர்களைப்பற்றி அந்தப் பெண்களைக் கேளுங்கள்; எந்த ஸ்டார் எத்தனை ரூபாய் காண்ட்ராக்டில் வேலை பார்க்கிறார், எந்தப் படத்தில் நடிக்கிறார், எந்த ஸ்டார் காதலில் ஈடுபட்டிருக்கிறார் என்ற விவரங்களெல் லாம் 'அப்டுடேட்' டாக அவர்களிடமிருந்து கிடைத்துவிடும். திரைப்பட உலகில் தொடர்பு கொண்டுள்ள பல ப்ரொட்யூசர்கள் டைரக்டர்கள், பின்னணிப்பாடகர்கள் சங்கீத டைரக்டர்கள் காமராக்காரர்கள், ஆசிரியர், பாடல் எழுதுபவர் இவர்களுக்குத் தம்மை எப்போதும் இந்தப் பெண்கள் நினைவு கொள்கிறார்களே என்பது பெருமையாக இருக்கும். நகரத்து மக்கள் தொகையில் எண்பது சதவிகித இளைஞர்களின் பரம லக்ஷ்யமும், கவர்ச்சிப் பொருளும் சினிமாதான். தாரா, இளையவள், மூத்தவள் மூவருமே விரஹேஷைச் சந்தித்துப் பெருமிதமடைந்து பூரித்துப் போயினர்.

சங்கர் கூறினார்: ''எனக்காகத்தான் இவர் இங்கே வந்து நின்று கொண்டிருந்தார்.''

''ஆமாம், நான்கைந்து ஆபீஸர் நண்பர்கள் என்னை வற்புறுத்திக் காரில் உட்காரவைத்து மேட்னி ஷோவுக்கு அழைத்து வந்திருக் கிறார்கள். என்னுடன் சேர்ந்து உட்கார்ந்து கொண்டு என் பெயரைப் பார்க்க வேண்டுமாம். வேறு வழியின்றி வர நேர்ந்தது. பிறகு, நான் அவர்களிடம், 'என் நண்பர் சங்கர்லால் வருவார். அவருடன் படம் பார்ப்பதாக ப்ராமிஸ் செய்திருக்கிறேன்.' என்று

கூறவே, அவர்கள் என்னை விட்டுச் சென்றார்கள். இல்லாவிட்டால் அதே காரில் ஏறிக்கொண்டு போயிருப்பேன்''

இப்படிப் பிரவசனம் செய்து தம் பக்தர்களுக்குத் தரிசனம் அளித்துப் புனிதமாக்கிக் கொண்டிருந்தார் விரஹேஷ். சங்கர்லால் அவரது கரத்தைப்பற்றி, 'வாருங்கள், போகலாம்' என்று அழைத்தார்.

கோபாலர் கோபியர் சூழ்ந்த விரஹேஷ் மேலே நடந்தார்.

கர்னல் காரை வரிசையில் நிறுத்தினான். அவனும் சஜ்ஜனும் காரின் கண்ணாடியை மேலே ஏற்றிக் கதவை மூடிவிட்டு வெளியே வந்து நின்றுகொண்டனர். காரைப் பூட்டுவதற்காகச் சாவிக் கொத்திலிருந்து கர்னல் சாவியைத் தேடினான். எங்கே பார்த்தாலும் கூட்டங் கூட்டமாக மக்கள் நின்று கொண்டிருந்ததைச் சஜ்ஜன் காரின் மேற்புறத்திலிருந்து பார்த்தான். 'மகாகவி' போர் (விரஹேஷ்) நின்று கொண்டிருந்ததைக் கண்ட அவனுடைய சோர்வுற்றகண்கள் விழிப்படைந்தன. ''கர்னல்! கிளம்பு! இன்று நாம் சினிமா பார்க்க வேண்டாம்.'' என்றான். அவனுடைய முகத்தில் வருத்தமும், சொல்லும் முறையில் சலிப்பும் தோன்றின.

''ஏன்?'' புருவத்தை நெரித்துக் கொண்டு கர்னல் கேட்டான்.

''வேண்டாமப்பா, டபிள் போரடிக்கும்!''

குழந்தைபோல் சஜ்ஜன் பிடிவாதம் பிடித்தான். கர்னல் காரைப் பூட்டிவிட்டுச் சாவிக் கொத்தைச் சட்டைப்பையில் போட்டுக்கொண்டு மேலே நடந்தான். அதே சிடுசிடுப்புடன் சஜ்ஜன் பேசினான்: ''முதலில் இது பம்பாய்ப்படம். ஈஸ்தடிக் டேஸ்டில் (கலைச் சுவையில்) அழுகிய பழம் போலிருக்கும்; இரண்டாவதாக உன் டேஸ்ட்; மூன்றாவதாக 'மகாகவி போர்' வேறு வந்திருக்கிறார்!''

'போர்' என்ற பெயரைக் கேட்டதும் கர்னல் சிரித்தான். எதிரே போர் தென்படவில்லை. அவன் கேட்டான்: ''எங்கே?''

''அதோ படியில் ஏறுகிறானே! பெரிய தொல்லைதான் கோமதியின் கரையில் உட்கார்ந்து நாம் பேசிக்கொண்டிருக்கலாம், வா.'' சஜ்ஜனின் குரலில் களைப்புத் தொனித்தது.

''நீயே பெரிய போராகி விட்டாய் போ! எனக்குப் படம் பார்க்க வேண்டும் போல் இருக்கிறது. போர் வந்தால் என்ன? அருகே அண்டவிடாமல் இருந்தால் போகிறது. நீ பார்த்துக் கொண்டே இரு. உம், வா.''

சஜ்ஜனும் கர்னலும் வாசற்படியருகே வந்தனர். டிக்கட் பரிசோதகர் டிக்கட்டினால் தம் கழுத்தைச் சொறிந்து கொண்டிருந்தான். அப்போது போரின் பார்வை சஜ்ஜனைப் பிடித்து நிறுத்திவிட்டது.

விரஹேஷ் ரசிகர் அனைவரும் புதிய கவர்ச்சியான சஜ்ஜனைக் காண ஆரம்பித்தனர். கட்டுறுதியுள்ள உடல், செக்கச் செவே லென்ற முகம், அழகான ஷெர்வானி, பைஜாமா, கையில் ஓவர் கோட் இந்த எழிலுடன் சஜ்ஜன் வாசலில் நின்றுகொண்டிருந் தான். எல்லோரும் கரங்குவித்தனர். சஜ்ஜன் முகத்தில் அலட்சியம் பிரதிபலிக்கக் கைகளைக் குவித்தான். போர் விரைந்து வந்தார். சங்கரும் வர்மாவும் கூடச் சென்றனர். தாரா 'கேக்' தின்று விட்டுக் கையை உதறிக் கொண்டு காப்பியை விரைவில் விழுங்கினாள். இளையவள் தன் தலைத்துணியைச் சீர்ப்படுத்திக் கொண்டு ஓர் இருமல் இருமியபடி முத்துக்களும் கற்களும் பதித்திருந்த மோதிரமணிந்த விரல்களை மெல்ல அசைத்துக் கைக்குட்டையை முகம் வரை கொண்டு சென்றாள். 'லிப்ஸ்டிக்' நிறம் உதடுகளில் சரிவர ஒட்டப்பட்டது. மூத்தவள் கரங்குவித்த பிறகு இளையவளைப் பார்த்தாள். விரைந்து கேக்கை விழுங்கினாள். மூத்தவளைப் பொறுத்தவரையில் இன்று மாலை நேரம் சுவர்க்க லோகத்தில் கழிந்து கொண்டிருந்தது. நர்கிஸ், சுரையா, ராஜ்கபூர், திலீப்குமார், தேவானந்த், நிம்மி, ப்ரேம்நாத் போன்ற புகழ் பெற்ற நட்சத்திரங்களின் நண்பரான விரஹேஷ்ஜியுடன் அமர்ந்து கொண்டு திரைப்படம்பற்றிப் பேசுவதும் அவருடைய பாடல்களைக் கேட்பதும் எவ்வளவு பெரிய அதிருஷ்டம் என்று எண்ணி அவள் பூரித்துப் போனாள், உற்சாகத்தின் மிகுதியால் அவளது முகம் வெளிறிப் போயிருந்தது.

போர் கூறினார்: "அடே நீயா?... நீங்களா மிஸ்டர் சஜ்ஜன்!.. கர்னல் சாஹப்! உங்களைப் பார்த்து மிக்க மகிழ்ச்சி."

சங்கர் கர்னலிடம் கூறினார்: "சஜ்ஜன் சார், எங்கள் குடும்பத் தார் உங்களைக் காண மிகவும் ஆவலாக இருக்கிறார்கள்."

சங்கர் எல்லோரையும் வரச்சொன்னார். சஜ்ஜன் எப்போதும் போல் "மிக்க மகிழ்ச்சி" என்று கூறிவிட்டுத் திரும்பினான்.

வர்மா கூறினார்: "மிஸஸ் வர்மா, மிஸஸ்லால் எல்லோரும் உங்கள் பெயின்டிங்ஸைப் பார்க்க ஆசைப்படுகிறார்கள் இன்று காலையில்தான் உங்கள் கட்டுரையை"

"எப்போது வேண்டுமானாலும் சொல்லுங்கள். நான் எடுத்துக் காண்பிக்கிறேன்." தம் சுருண்ட கேசத்தை ஓர் ஆட்டு ஆட்டிக் கொண்டு விரஹேஷ் கூறினார். இதற்குள் சஜ்ஜனுடைய முகத்தைப் பார்த்த கர்னல் சற்றுவேகமாக, "போரேஷ்" என்று ஆரம்பித்தான்.

அந்தப் பெயரைக் கேட்டதுமே விரஹேஷ் குன்றிப்போய் விட்டார். சஜ்ஜன் மிஸ்டர் வர்மாவிடம் மென்மையான குரலில் கூறினான்: எல்லோரையும் ஒரு நாள் வீட்டிற்கு அழைத்து

வாருங்கள். தயை செய்து முதலில் எனக்குத் தெரிவித்துவிட்டு வரவேண்டும்.. கர்னல் வா!''

இருவரும் உள்ளே சென்றனர்.

சங்கர், விரஹேஷ் இருவரும் சஜ்ஜனும் கர்னலும் 'பாக்ஸ்' சீட்டில் உட்கார்ந் திருப்பதைக்கண்டனர்.

விரஹேஷ் பால்கனியில் உட்கார விரும்பவில்லை. ஆயினும் நண்பரின் பக்திக் கெதிரே அவரால் என்ன செய்ய முடியும்? மூத்தவள், தாரா, இளையவள் இம் மூவரும் அமர்ந்தனர். அருகே ஓர் அன்னத்தை மட்டும் விட்டு வைத்தபிறகு சங்கரும் வர்மாவும் உட்கார்ந்து கொண்டனர். இளையவள் இடத்தை மாற்றிக் கொண்டு தன் கணவனருகே அமர்ந்தாள். தாராவிற்கருகே இருந்த இடம் கவிஞருக்காக வைக்கப்பட்டது. ஆனால் கவிஞர்—வந்தவர் நின்றுவிட்டார்.

''இதோ வருகிறேன்'' என்று கூறிவிட்டு அவர் சஜ்ஜன் இருந்த இடத்திற்குச் சென்றார்.

போர் வந்தவுடன் கர்னலும் சஜ்ஜனும் பிரமித்து போயினர்.

விரஹேஷ் கூறினார்:...'ஹி...ஹீ'', நீங்கள் வந்தது எனக்கு...''

சஜ்ஜன் கர்னலின் துடையைக் கிள்ளி விட்டான். கர்னல் கோபத்துடன் கூறினான்: "போரேஷ், இங்கிருந்து போய்விடு. எங்களை டிஸ்டர்ப் செய்யாதே, ஆமாம்!''

''இதோ சென்று விடுகிறேன்'' என்றபடியே அவர் பின் இடத்தில் உட்கார்ந்துகொண்டார். மறுபடியும் சிரித்துவிட்டுப் பேசினார்: ''சஜ்ஜன்! இந்தப் பிக்சரில் என் ஸாங் ..''

"ஓஹோ! இந்தப் பிக்சரில்தானு?'' என்று அவரைப் பார்க்காமலேயே சஜ்ஜன் கேட்டு வைத்தான்.

கர்னல் கூறினான்: ''இது தெரிந்திருந்தால் நாங்கள் இங்கே வந்திருக்கமாட்டோம். நீங்கள் இங்கிருந்து கிளம்பப் போகிறீர்களா இல்லையா?''

"இதோ போய் விடுகிறேன். இதில் மியூசிக் டைரக்டர் என் ட்யூனை...''

''போரேஷ்!'' கர்னல் மறுபடியும் கோபத்துடன் விழித்துப் பார்த்தான்.

விரஹேஷ் கரங்குவித்தபடி பேசினார்: ''எல்லோருடைய முன்னிலையிலும் அந்த மாதிரி அழைக்காதீர்கள், கர்னல் சாஹேப்! தனிமையில் செருப்பால் அடித்தாலும் சரி ..''

"சரி! வேகமாக ஓடு!''

''இதோ போய் விடுகிறேன்.''

''போ...''

போரேஷ் எழுந்து சென்றுவிட்டார். மூன்ருவது மணி அடித்தது. ரிகார்ட் ஒலி நிறுத்தப்பட்டது. விரஹேஷ் தம் வரிசையில் வந்து நின்ருர். நால்வரையும் தாண்டிக் கொண்டு, "சாரி, தாங்க் யூ" என்றபடி மூத்தவளருகே வந்து நின்றுவிட்டார். காலி நாற்காலியைக் காண்பித்துத் தாராவிடம் கவிஞர் கேட்டார்: "நான் இங்கே உட்காரட்டுமா? ப்ளீஸ், மிஸஸ்...ஸ்கிரீனிலிருந்து இங்கே நல்ல ஆங்கிள் இருக்கிறது. உங்களுக்குச் சிரமமில்லையே?... உங்களுக்கு?"

விரஹேஷ் உட்கார்ந்தபடியே தாராவையும் மூத்தவளையும் பணிவு கலந்த மொழியில் கேட்டார். பிறகு மடியில் 'ஓவர்கோட்'டையும், 'சிகரெட் டின்'னையும் வைத்துக்கொண்டு சங்கரைப் பார்த்துக் கூறினர்: "நீங்கள் தள்ளிப் போய் விட்டீர்கள், பரவாயில்லை!"

தொலைவு இளையவளுக்கு மிகவும் வருத்தமளித்தது. விரஹேஷ் தாராவிடம் பேச ஆரம்பித்தார்: "பிக்சரில் ஓரிடத்தில் நான் நடித்திருக்கிறேன். கண்டுபிடியுங்கள்."

"உண்மையாகவா?" தாரா மகிழ்ச்சியில் மிளிர்ந்தபடி கேட்டாள்.

"என்ன?" இளையவள் தாராவைத் தட்டிக் கேட்டாள். தாரா அவளுக்குப் பதிலளித்தாள் "மிஸ்டர் விரஹேஷ் இதில் 'ஆக்ட்' கூடச் செய்திருக்கிருர்."

"அப்படியா?" இளையவள் ஒரு துள்ளுத்துள்ளி அந்தச் செய்தியைத் தன் கணவனுக்குக் கூறினள். அவர் வர்மாவுக்குத் தெரிவித்தார். எல்லோருக்கும் தம் அதிருஷ்டத்தின் பேரில் பெருமிதம் உண்டாயிற்று. இதுவரை குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்த மூத்தவள் இப்போது நிமிர்ந்து விரஹேஷ் உட்கார்ந்ததும் அவரைக் கேட்டு வைத்தாள்: "அவர்களிடம் நீங்கள் என்ன சொன்னீர்கள்?"

விரஹேஷ் தம் தலையை அவளது பக்கம் தாழ்த்தியபடி புன்முறுவலுடன் கூறினர்: "ஓரிடத்தில் சிறிது நடித்தும் இருக்கிறேன். டைரக்டரும் மற்ற எல்லோரும் மிகவும் வற்புறுத்தவே ஒரு சிறு 'பீஸ்' செய்திருக்கிறேன்."

மூத்தவள் சற்று அழுத்தமாகக் கூறினள்: "இதோ பாருங்கள், உங்கள் ஆக்டிங் வரும் இடத்தில் எங்களுக்குச் சொல்ல வேண்டும்."

"உங்களால் கண்டுபிடிக்க முடியாதா என்ன?" என்று கேட்டபடியே விரஹேஷ் அவளைப் பார்த்தார்.

இருளில் மிக அருகே அமர்ந்திருந்த 'பெரிய மனிதரை' மூத்தவள் மிகவும் உற்று நோக்கினள். பிறகு கேட்டாள்: "இப்படியேதான் படத்திலும் இருப்பீர்களா?"

''சாக்ஷாத் இப்படியேதான்—ஹ... ஹ... ஹ...'' மூத்தவளின் வெகுளியான இக் கேள்வியைக் கேட்டு விரஹேஷ் அன்புடன் சிரித்தார். மூத்தவள் சங்கோஜம் அடைந்தாள்.

ந்யூஸ் ரீலில் பண்டித ஜவாஹர்லால் நேரு விளையாட்டு மைதானத்தைத் திறந்து வைத்துக் கொண்டிருந்தார்.

'வந்தது வசந்தம்' படத்தின் சென்ஸர் சர்டிபிகேட் வந்ததும், அர்ஜுனனின் பார்வை பறவையின் கழுத்தில் குறிபார்த்து ஒன்றியதுபோல் விரஹேஷின் பார்வை, தம் பெயரை அதில் படிக்க ஸ்கிரீனுடன் ஒன்றிவிட்டது.

ஸ்கிரினில் விரஹேஷின் பெயர் வந்தது. அதைப் பாராட்டுபவர் 'ஆஹா' என்று மகிழ்ந்தனர். விரஹேஷ் உடனே ஒரு சிகரெட்டைப் பிடித்துவிட்டுக் கீழே போட்டார். சிகரெட் மூத்தவளின் கை மீது பட்டுவிட்டது. இருவரும் சட்டென்று தத்தம் கைகளை இழுத்துக் கொண்டார். விரஹேஷ் குனிந்தபடி "சுட்டு விட்டதா?'' என்று கேட்டார்.

''இல்லை'' மகிழ்ச்சியில் எக்களித்தபடி மூத்தவள் கூறினாள். உண்மையில் சுட்டிருந்தால்கூட அந்த வேளையில் அவள் ''இல்லை'' என்றுதான் பதிலளித்திருப்பாள்.

தன் சீன் வருவதற்கு முன்பு விரஹேஷ் தாராவிற்கு எச்சரிக்கை விடுத்தார். பிறகு தலையைத் தாழ்த்தி மூத்தவளுக்கு அறிவித்தார். தாரா எல்லோருக்கும் அறிவித்தாள். தமக்கு எதிரே உலகின் எட்டாம் அதிசயம் தென்படப்போவது போல் எல்லோரும் மூச்சு விடாமல் காத்துக் கொண்டிருந்தனர்.

ஹீரோயின் திருமணம் நிச்சயமாகிறது. அந்தப் பார்ட்டியில் எண்ணற்ற விருந்தினருடன் விரஹேஷ் கூட வருகிறார். ஹீரோயினுக்கு வாழ்த்துக் கூறிவிட்டு ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொள்கிறார். அதன்பிறகு ஓரிரு முறை அவருடைய உருவம் தெரிகிறது.

தன் சீன் வந்ததுமே விரஹேஷ் மூத்தவளிடம் மெள்ளக் கூறினார்: ''தங்கள் அடிமையை இப்போது கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்!''

இடைவேளை வந்ததும் மூத்தவளுடன் தம் பார்வைச் சந்தித்த கணமே தம் வாழ்க்கையை வெற்றிகரமானது என்று விரஹேஷ் கருதினார்.

## 9

சஜ்ஜனும் கர்னலும் சினிமா தியேட்டரிலிருந்து கிளம்பி ஹஜரத் கஞ்ஜை அடைந்தனர். பெரிய பெரிய மாளிகைகள் இருக்கும்

பாதையை விட்டுவிட்டுக் கர்னலின் கார் ஒரு தெருவை நோக்கிச் சென்றது. மோட்டார்கள் வரிசை வரிசையாக நான்கு தெருக்கள் கூடும் இடத்தில் நின்று கொண்டிருந்தன. வெளிச்சம், நாகரிக மோஸ்தர், இளமையின் பரபரப்பு, அழகு, வாசனையின் கமகமப்பு இவற்ருல் மிளிரும் ஹஜரத்கஞ்ஜின் எழில், குளிர் காலத்தின் இரவில் அஸ்தமித்துக் காணப்பட்டது. ஆபரணங்கள் கழற்றப் பட்டுச் சூனியமாக நிற்கும் கைம்பெண் போல் ஒளியிழந்து ஸஃபையர் தியேட்டர் காட்சியளித்தது. லால்பாக் பக்கம் வண்டியைச் செலுத்தியபடி கர்னல் கூறினன்: "என் கோட்டை வாங்கிக்கொள்கிறேன்... ட்ரை வாஷுக்குக் கொடுத்திருந்தேன். உன் வீட்டிலிருந்து திரும்பி வருவதற்குள் கடை..."

"என்னை இங்கேயே விட்டுவிடேன்"—திடீரெனச் சஜ்ஜன் கூறினன்.

"ஏன் – ஏன்?"

"நான் சற்று உலாவியபடி போகிறேன். நிறுத்தப்பா!" வண்டி நின்றது: "உன்னை நான் கொண்டு விட்டுவிட்டு வருகிறேன். கோட்டு நாளைக்கு வரும்."

"வேண்டாம். இப்போது நடந்துதான் செல்வேன்." காரிலிருந்து இறங்கிய சஜ்ஜனின் பார்வை நடைபாதையின் பேரில் விழுந்தது.

வருத்தமுற்ற அவனுடைய முகத்தைப் பார்த்துக் கர்னல் கூறினன்: "இதோ பார், இன்று முழுவதும் உன் முகம் வாடியிருக்கிறதே, ஏதாவது நடந்ததா?"

"அப்படியொன்றுமில்லை. பிறகு சொல்கிறேன்..."

சஜ்ஜன் வேகமாக நடைபாதையை நோக்கிப் புறப்பட்டான்.

இன்று காலையிலிருந்தே சஜ்ஜனின் மனம் ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. கலைஞனின் உணர்ச்சிமிக்க உள்ளத்திற்கு நாள் முழுதும் வருத்தமே அளிக்கப்பட்டது. சஜ்ஜனைப்பற்றி வெளிவந்த கட்டுரையைப் படித்துப் பொருமை கொண்ட மஹிபால் அதிகாலையில் கசப்பாக ஏதோ கூறி வைத்தான். பிறகு அறையிலிருந்து அந்தப் பொம்மையை எடுத்து வெளியே போடுவதற்குள் ஆயிரம் குழப்பங்கள்! பிறகு ஜகதம்பா சஹாயின் படித்த மகள் கடுமையாக நான்கு வார்த்தைகள் சொல்லி வைத்தாள். அந்தப் பெண்மணியின் காரணமாக உள்ளத்தில் காம உணர்ச்சி தோன்ற, அவனது ஆத்மாவே அவனைச் சம்மட்டியால் அடித்தது. இப்போது தன் சுபாவத்தின் இரண்டு கோணங்களையும் விவரித்துக் காண்பிப்பது போல் சித்ரா அவனையே சித்தரித்துக் காண்பித்துவிட்டாள்.

முப்பத்திரண்டு ஆண்டுகள் வரை திருமணமின்றி வாழ்ந்து வந்ததால் அவனுடை காம வாழ்க்கை சீர்ப்பட்டு இருக்கவில்லை. பெண்

ணின் அந்தரங்க உறவு சிற்சில சமயங்களில் இரண்டு—மூன்று மாதங்கள் வரை கிடைக்காது. வாய்ப்புக் கிடைக்கும்போது அவன் எல்லையை மீறி விடுவான். அவனுடைய வாழ்க்கையில் மூன்று வகையான பெண்டிர் வருகின்றனர். ஒருத்திக்குப் பணம் கொடுத்துத் திருப்தியடைகிறான்; மற்றொருத்திக்கு அன்புப் பரிசுகளை வழங்கி ஆனந்தத்தைப் பெறுகிறான். மூன்றாவது வகைப் பெண்டிர் யாவரும் நண்பர்கள் போன்று பழகும் உறவோடு சரி. அன்னைமட்டும்தான் அவனுடைய ஆழ்ந்த சிரத்தைக்குப் பாத்திரமாக இருக்கும் ஒரே பெண். தாயிடம் உள்ள அதே சிரத்தைதான் இன்று அவனைச் சம்மட்டி கொண்டு அடிக்கிறது. அவன் அமைதியிழந்து காணப்பட்டான். அவனுக்குத் தாயின் நினைவு வந்தது.

சஜ்ஜனின் தாய் இறந்து பதினோராண்டுகள் ஆகிவிட்டன. தந்தை சியாம் மனோஹர் வர்மா சிற்றின்பத்தில் திளைப்பவர். சீமையிலிருந்து பாரிஸ்டர் பட்டம் பெற்றுத் திரும்பியவர். ஆனால் ஒருநாள்கூட வேலை பார்க்கவில்லை. ஆட்டம், பாட்டம், மது, போதை, மங்கை என்று சுமார் எட்டு லட்சம் ரூபாயைப் பறக்க விட்டு விட்டார். வீட்டில் மனைவியைத் தேடி எப்போதாவதுதான் வருவார். வந்தால் வேலையாள், வேலைக்காரி மட்டுமல்ல, சஜ்ஜனின் தாய் கூட நடுங்குவாள். சஜ்ஜன் தன் தந்தையை வெறுத்தான். காரணமின்றித் தாயுடன் அவர் சண்டையிடுவார். கெட்ட வசைகளைப் பொழிவார். சிற்சில சமயங்களில் அடிக்கவும் ஆரம்பித்து விடுவார். சஜ்ஜனின் தாய் மிகவும் சாந்தமான சுபாவமுள்ளவள். வாயை மூடிக் கொண்டு விரதம், உபவாசம் என்று அவள் காலத்தைக் கழித்து வந்தாள். வீட்டை விட்டுத் தாய் வெளியே சென்றதைச் சஜ்ஜன் பார்த்ததே இல்லை. ஒருமுறை அவனுடைய தாய் கூறினாள்: ''சாவதற்கு முன்பு என் மாமியார் என்னிடம், 'வீட்டைப் பார்த்துக் கொள்: உக்கிராண அறைச் சாவியைக் கழுத்தை விட்டுக் கழற்றாதே!' என்று சொன்னாள்'' சஜ்ஜனின் தாய் அந்த மூன்று கட்டளைகளையும் உயிர் பிரியும் வரை நிறைவேற்றினாள்.

சஜ்ஜனின் பாட்டனார் ராய் பகாதுர் கன்னோமல் 1902-ஆம் ஆண்டில் தமது முப்பத்திரண்டாம் வயதிலேயே இறந்து விட்டார். ச்யாம் மனோஹர் அப்போது ஒரு வயதுக் குழந்தை. அவர் மேஜராவதற்குள் சுற்றத்தார் லட்சக் கணக்கில் சொத்தைச் சாப்பிட்டு விட்டனர். வீடு கொள்ளை போவதையும், சொத்து சூறையாடப்படுவதையும் கண்டு சஜ்ஜனின் பாட்டி இராப்பகலாக அழுதுகொண்டிருந்தாள். மகன் தந்தையைப் போலவே அறிவாளியாகப் பிறந்திருக்கிறான் என்று அவள் மகிழ்வுற்றாள். ச்யாம் மனோஹர் பிடிவாதமாக, பாரிஸ்டர்

பட்டம் பெறச் சீமைக்குச் சென்று விட்டார். அதன் பிறகு பாட்டி இறந்து விட்டாள். சஜ்ஜனுக்கு இன்னும் பாட்டியின் நினைவு இருந்தது.

சீமையிலிருந்து திரும்பிய ச்யாம் மனோஹர் ஆளே மாறி விட்டார், பாரிஸ் 'நைட் கிளப்' அவரது உள்ளத்தை ஆட் கொண்டு விட்டது. பணத்திற்குக் குறைவில்லை. மனக் குதிரை கடிவாளமின்றிப் பறக்கத் தொடங்கியது.

எதிர்பாராத விதமாகத் தம் தந்தையைப் போலவே ச்யாம் மனோஹரும் தம் முப்பத்திரண்டாம் வயதிலேயே மரணமடைந் தார். சஜ்ஜன் அப்போது ஜுனியர் கேம்பிரிட்ஜ் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். பதின்மூன்று வயதில் புதுமையாக எழுச்சியுறும் உள்ளம் சஜ்ஜனையும் துன்புறுத்தியது. வாழ்வு—மரணம், கடவுள்—மதம், சுதந்திரம்—அடிமை, அரசியல்—பாரதம் என்று என்னவெல்லாமோ அவனுடைய உள்ளத்தில் கேள்விகளாகத் தோன்றின. அதோடு கூட வாலிபத்தின் பொருளை அறிய ஆவல் அவனுடைய உள்ளத்தில் எழுந்தது.

தந்தை மரணமடைந்ததும் சஜ்ஜனுக்குத் திருமணம் செய்யத் தாய் பரபரப்படைந்தாள். 'முடியாது' என்று அவன் பிடிவாதம் பிடித்தான். பெரியவனான பின்பு மனத்துக்குப் பிடித்தபடி மணக்க அவன் விரும்பினான். தாய் நிச்சயித்த திருமணத்தை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்று தெளிவாக அவன் கூற வில்லை. மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு முகத்தோற்றத்தில் மாற்றம் கண்டதும், தாய் தேர்ந்தெடுத்த அழகிய பெண்ணைக் கூட அவனால் வாழ்க்கைத் துணையாக ஏற்க முடியாது என்று நினைத்தான். அழகுடன் அவன் மனங்கவர் மணமும் வேண்டும் எனக் கருதினான். மணத்தின் இலக்கணம் அவனாக வகுத்தது. விரதம்—பூஜை—உபவாசம் என்று வீட்டோடு கிடக்கும் பெண்ணை அவனுக்கு நிச்சயமாகப் பிடிக்காது. எழுதப் படிக்கத் தெரிந்த, புதிய கருத்துக்கள் கொண்ட, புத்திசாலியான அழகி இன்னோரன்ன எத்தனையோ சிறப்புக்கள் கொண்ட பெண் தனக்கு வேண்டும் என்று அவன் விரும்பினான். அதுமட்டுமல்ல; திருமணத் திற்கு முன்பு ரோமான்ஸ் இருக்க வேண்டும் என்பது அவனது ஆசை.

ஒரு நாள், திடீரெனத் தாய் அவனுடைய கால்களைப் பிடித்துக் கொண்டாள். கண்களில் நீர்மல்கக் கூறினாள்: ''மகனே! ஒரு பிச்சை கேட்கிறேன்—உன் தந்தை போன போக்கில் சென்று விடாதே. வாழ்நாள் முழுதும் என் ஆத்மா துடித்துக் கொண்டேயிருக்கிறது. நீ என்னைத் துன்புறுத்தாதே!''

சஜ்ஜன் தாயிடம் மிகவும் அன்புள்ளவன். எந்தக் குணங்கள்

தனக்கு மனைவியாக வரப் போகிறவளிடம் இருக்கக் கூடாது எனக் கருதினானே, அதே குணங்களுக்காக அவன் தன் தாயைப் பெரிதும் மதித்து வந்தான். சீலமற்ற தன் தந்தைக்கு மாறாக இருந்த தாயின் சீலம், அவளை மிகுந்த சக்தியுடையவளாக்கிற்று. தந்தை ஆயிரம் கொடுமைகள் இழைத்த போதிலும் வாய் திறவாமல் பொறுமையே உருவெடுத்தாற் போல் இருந்த தாயை நினைந்தால், தந்தை ஒளியிழந்து காணப்பட்டார்; வெறுப்பிற்குரியவராகத் தோன்றினார். தந்தையைத் தவிர வேறு யாருடனும் அவன் மிகுந்த மரியாதையுடன் பழகி வந்தான். அவனுடைய தாய் எல்லோருடைய சுகதுக்கங்களையும் பகிர்ந்து கொண்டாள். அவள் அத்வைதத்தை வாழ்க்கையில் கடைப்பிடிப்பவள். ஒரு க்ஷய ரோக வேலைக்காரியின் எச்சிலைக் கூட எடுத்துச் சுத்தம் செய்திருக்கிறாள்.

சஜ்ஜனுடைய மனத்தில் தன் தாயைப்பற்றிய ஒரு முத்திரை விலகாமல் பதிந்திருந்தது. தந்தை வழி செல்ல மாட்டேன் என்று தாய்க்கு வாக்குக் கொடுத்த சஜ்ஜன் ஓர் உள்ளப் போராட்டத்தையே விலை கொடுத்து வாங்கிக் கொண்டான். இதே நிலையில் வளர்ந்து வந்த அவன் ஓவியக் கலையில் மனம் ஒன்றி விட்டான்.

சீனியர் கேம்பிரிட்ஜ் தேறியதும் ஓவியக் கலைக்கல்லூரியில் தன் பெயரைப் பதிவு செய்து கொண்டான்.

தந்தை இறந்து ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு தாயும் இறந்து விட்டாள்.

சஜ்ஜனின் உள்ளம் சூனியமாகிவிட்டது. இந்த வேதனையிலிருந்து விடுபடுவதற்காகவே ஓவியக் கலையைச் சாக்கிட்டு எங்கும் பயணம் செய்ய முற்பட்டான்.

தன் தாய்க்கு அளித்த வாக்குடன் அவளுடைய வாழ் நாளிலேயே ரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டு விட்டான். தன் தந்தையைப் போல் வீண் செலவு செய்வதில்லை என்று உறுதியான முடிவு செய்து கொண்டான். தன் தந்தையைப் போலன்றிச் சொத்தைப்பற்றி ஆராய்ந்தறிதல், நிலம்—புலன்களைச் சீர் பார்த்தல், கணக்கெழுதுதல் போன்ற வழக்கங்கள் அவனிடம் இருந்தன. வேலையாட்கள், குமாஸ்தாக்கள் இவர்களைக் கண்காணித்து வீட்டுக் குழப்பங்களைச் சரிப்படுத்துவதில் அவன் திறமை பெற்றிருந்தான். சொத்தை அதிகப்படுத்தும் நோக்கம் இல்லாவிட்டாலும், இருந்த சொத்துப் பறி போகாமல் பார்த்துக் கொள்ளும் விழிப்புணர்ச்சி அவனிடம் எப்போதும் இருந்தது. இவ்வளவு தன்னடக்கம் இருந்த போதிலும் பெண்கள் விஷயத்தில் அவன் அடக்கமின்றி இருந்தான்.

கலைக்கல்லூரியில் தேறிய பிறகு சுற்றித் திரிந்து, களிப்புடன்

அநுபவமும் பெற்ற அவனுடைய உள்ளத்தில், திருமணம் (தன்னைப் பொறுத்தவரையில்) தேவையில்லை, அப்படியே தேவைப் பட்டாலும் மனிதன் முப்பது வயதிற்குப் பிறகுதான் மணம் செய்து கொள்ள வேண்டும் என்னும் கொள்கை வேரூன்றி விட்டது. அப்போது தனக்குத் தக்க வாழ்க்கைத் துணையை அமைத்துக் கொள்ளும் பக்குவ நிலை வந்து விடுகிறது. ஓவியத்தின் வாயிலாக வெற்றியும் புகழும் வரவே அவனுடைய கலையுள்ளம் தன் சுயநலத்தையும் பூர்த்தி செய்து கொள்ள விழைந்தது. இந்தச் சுயநல நோக்குப்படி பெண்ணைத் தனக்குப் பயன் படும் களிப்புப் பொருள், உடலுக்கு உவகையூட்டும் சாதனம் என்று கருத ஆரம்பித்தான். பாரதம், அயல்நாடு இவற்றின் லட்சியங்களைப் பாராட்டும் அவன்கூடப் பெண்ணைப் பெரிய பெரிய உவமைகளால் அலங்கரிக்க முற்பட்டான். இன்று மேலே மிதந்து கொண்டிருந்த பண்பாடென்னும் பாசி அகன்று விட்டது! கொடுமைக்கு ஆளாகிய ஒரு பெண் இறந்து போனதைக் கண்ட சஜ்ஜனின் உணர்ச்சி, நாணயத்துடன் வெளியே வந்தது. அதே உண்மையின் ஒளியில் ஜகதம்பா சஹாயின் மகளைக் கண்டதும் காம உணர்ச்சி கொண்ட அவன் தன்னை எண்ணியே வெட்கமடைந்தான்.

மனிதனின் ஓடும் உள்ளமும் ஒரு விசித்திரமான தொல்லைப் பொருள்தான். தன்னிடமிருந்தே தப்பும் மனிதன் முதலில் தன் அறிவைப் பற்றி எண்ணிப் பெருமிதம் அடைகிறான். பிறகு அந்தச் சாமார்த்தியமே பயத்திற்குக் காரணமாகிறது. அப்போது அதிலிருந்து அவன் தப்பி ஓடுகிறான். பயம் மருளும் காளை போல் அவனை முட்ட ஓடி வருகிறது. வேகமாக ஓடும் அவன் சிதறி விடுகிறான். பயத்தால் பீடிக்கப்பட்டுக் குடல் தெறிக்க ஓடும் அவன் வழி தெரியாமல் இங்கும் அங்கும் மோதிக் கொண்டு பித்தனாகி விடுகிறான். இந்தப் பித்த நிலையை அழுத்தி வைக்கும் முயற்சியில் சஜ்ஜனின் உணர்ச்சி ஜடமாகிக் கொண்டு வந்தது. உடலைப் பொறுத்தவரை இயங்கிய போதிலும் உள்ளம் ஓரிடத்தில் போய் அழுந்தி விட்டது. நிலை தடுமாற்றம் என்னும் முனையில் கட்டப்பட்டுப் புதிதாக மூக்கணாங்கயிறு போடப்பட்ட காட்டெருமை போல் அவனது மனம் சுதந்திரம் அடையத் தத்தளித்தது. சமய நினைவின்றிச் சந்தையும் பொந்தையும் கடந்து சென்ற போதிலும் தன் லட்சியத்தில் கட்டுண்ட அவன் சரியான பாதையில்தான் நடந்து கொண்டிருந்தான். உள்ளம் சில்லிட்டுக் கிடந்தது; உடலில் 'செஸ்டர்' இருந்தது. ஷாஜேப் சாலை வழியே அவன் சென்று கொண்டிருந்தான். இருபுறங்களிலும் மாளிகைகளின் நிசப்தமான வரிசை சூனியமான தெருவில் நடந்து

கொண்டிருந்த சஜ்ஜனைச் சற்றும் லட்சியம் செய்யவில்லை. அவனும் அக்கம் பக்கத்தை அலட்சியப்படுத்திக் கொண்டு நடந்தான்.

எதிரே வந்து கொண்டிருந்த காரின் விளக்கொளி நேரே அவன் மீது பட்டது. திடுக்கிட்ட சஜ்ஜன் ஏதோ நினைவாக அந்தக் காரைப் பார்த்துவிட்டுத் தன் போக்கில் ஓரமாகச் சென்று விட்டான்.

கார் வேகமாக அவனருகே வந்து நின்றது சஜ்ஜனின் உள்ளத்துச் சூனிய மாளிகை புற உலகினுல் மோதப்பட்டு சரிந்தது. அவனுல் சமாளித்துக் கொள்ள முடியவில்லை. இதற்குள் ஒரு பெண் குரல் 'களுக்'கென்று காருக்குள்ளிருந்து சிரித்தது.

''ஒகோ, சீலாவா?''—அப்பாடா! உயிர் வந்தது—பார்வை நேராயிற்று. வண்டியில் மஹிபாலும் டாக்டர் சீலா ஸ்விங்கும் தென்பட்டனர். உள்ளத்திற்குத் தேவைப்பட்ட இந்த மாறுதல் சஜ்ஜனுக்குப் பிடித்தது. அவன் மகிழ்ச்சியடைந்தான்.

''எங்கிருந்து வருகிறுப்போலே?'' அவனுடைய ஓவர்கோட்டின் காலரைப் பிடித்து இழுத்தபடி போதையுணர்ச்சியுடன் கேட்டாள் சீலா.

தன் நினைவிழந்த தன்மையிலிருந்து சஜ்ஜன் சுய நினைவிற்கு வந்து விட்டான்.

அதே கேள்வியை மகிழ்ச்சியுடன் சஜ்ஜன் திரும்பக் கேட்டான்: ''நீங்கள் எங்கிருந்து வருகிறுப்போலே?''

''பிசாசு வாழும் சுவர்க்கத்திலிருந்து!'' மஹிபால் புன்முறுவலுடன் கூறினுன்.

டா சீலாஸ்விங் மஹிபாலின் தோளைக்குத்தியபடி, புன்சிரிப்புடன் கூறினுள்: ''உங்கள் சீக்ரட் (ரகசிய) சுவர்க்கத்தைப் பற்றி உலகிற்குச் சொல்லிவிடாதீர்கள்! இல்லாவிட்டால் இந்த 'பூல்ஸ்' (மூடர்கள்) அங்கும் வந்து கடவுளின் தோட்டத்து ஆப்பிளைப் பயிர் செய்துவிடுவார்கள்.''

கடவுளின் தோட்டத்து ஆப்பிள் இப்போது சஜ்ஜனின் தொண்டையில் சிக்கிக்கொண்டிருந்தது. கேலி என்னும் கத்திரிக் கோலால் அவனுடைய வருந்தும் நரம்பு துண்டிக்கப்பட்டது. பேச்சை மேலாக ஒரு சிரிப்புச் சிரித்துப் பறக்கவிட்ட அவன் அவர்களிடம் கூறினுன்: ''வாருங்கள்! சிறிது நேரம் என் வீட்டில் உட்கார்ந்து காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம். உங்கள் வாயின் மணத்தை இரட்டிப்பாக்கிக்கொண்டு செல்லலாம்!''

''நேரமாகிவிடும்! டாக்டர், டயம் என்ன?''

''டயம்—டு பி எக்ஸாக்ட்—(சரியாகச் சொல்லும்பட்சத்தில்) பதினென்றடித்து இருபது நிமிடங்கள். அப்படியொன்றும்

நேரமாகிவிடவில்லை. கிளம்பு, துர்ஜன், உனக்கு நாங்கள் 'ஒப்ளைஜ்' செய்கிறோம். வீட்டில் விட்டுவிடுகிறோம்!''

''வேண்டாம்ப்பா! மறுபடியும் எப்போதாவது பார்த்துக் கொள்ளலாம். சீலாவுக்கு ஒருவரும் இல்லை 'எக்ஸ்பிளனேஷன்' கொடுக்க. எனக்கு மனைவி இருக்கிறாளே. யக்ஷிணிபோல் வழி மேல் விழிவைத்துக் காத்துக்கிடப்பாள்.''

சஜ்ஜன் வண்டியில் உட்கார்ந்துவிட்டான். மஹிபாலின் பேச்சைக் கேட்காமல் சீலா தன் ஸ்டுடியோக் காரைப் பின்பக்க மாகத் திருப்பினாள்.

சஜ்ஜன் மஹிபாலிடம் கூறினான்: ''ஒரு நாள் உன்னை நிச்சய மாகப் பெயின்ட் செய்யப்போகிறேன், மஹிபால். நெருப்பு—நீர் இந்த இரண்டு கடல்களுக்குமிடையே எரிந்தும் கரைந்தும் போய் நின்று கொண்டிருக்கும் மனிதனைப்போல் நீ இருக்கிறாய்!''

''நௌ-நௌ சீலாவின் லெக்—புல்லிங் இருக்கட்டும், சஜ்ஜன்! இவர்கள் ஆயிரக்கணக்கான சென்டிக்ரேட்வரை ஏறும் வெப்பமு மில்லை—ஃப்ரீசிங் பாயின்ட் (உறைந்து போகும்) வரை செல்லும் குளிர்ச்சியுமில்லை.''

''போதும். தயவு செய்து நிறுத்துங்கள். என்னைப் புகழத் தேவையில்லை. இவர் என்னைப்பற்றிக் குறிப்பிடவில்லை. இஸ் இட் நாட் (இல்லையா) துர்ஜன்?''

''சர்ட்டன்லி நாட்! (இல்லவேயில்லை) நான் ஃபெயர் செக்ஸ் என்றால் எவ்வளவு மரியாதையாக நடந்துகொள்வேன் என்பது உனக்குத் தெரியும்'' என்று கூறிய சஜ்ஜனின் நினைவிற்கு ஜகதம்பா சஹாயின் மகளும், சித்ராவும் வந்தனர். அவனுடைய இதயம் படபடத்தது.

சஜ்ஜனின் வீட்டு வாசலில் கார் ஹாரன் அடித்தது. மஹிபால் கூறினான்: ''இன் ஆல்ஃபெயர்னஸ் (நியாயமாகச் சொல்லப் போனால்) சீலாவைப் பற்றி நான் சொல்ல விரும்புகிறேன். கேள்: அவளுடைய உள்ளம் கலைஞர்களின் உள்ளத்தைப் போன்று உஷ்ண மானது. அறிவு விஞ்ஞானிகளைப் போன்று சில்லென்றிருக்கும்.''

மஹிபாலின் பேச்சு சீலாவிற்குப் பிடித்திருந்தது. அவள் கூறினாள்: ''நான் விரும்புவதும் அப்படிப்பட்ட தொழில்தான். ஆர்ட் ப்ளஸ் சயின்ஸ்—(கலையும் விஞ்ஞானமும்)''

''நீ என்னை உற்சாகப்படுத்துகிறாய், சீலா! இன்றைய வைத்தி யர்களில் தொண்ணூறு சதவிகிதம்பேர் இதயமற்ற அரக்கர்கள். நியாயமாகச் சொல்லப்போனால்— ஆல் தோ அன் கான்ஷஸ்லி ஐ நோ—நீயும்தான்.''

காவற்காரன் ஓடிவந்து கதவைத் திறந்தான்.

* * * *

நள்ளிரவு நேரத்தில் சஜ்ஜன் ஜகதம்பா சஹாயின் களங்கக் கதை பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தான். இடையிலே 'ஸ்காச் விஸ்கி' அவனுடைய பேச்சிலும், சீலா மஹிபால் இருவரின் உள்ளத்திலும், இரக்கமெனும் வெள்ளம் பெருகியோடச் செய்தது. மஹிபாலின் கண்கள் பெரிய நீர்த்துளிகளைப் பொழிந்தன.

சஜ்ஜன் கூறினான் : "அதற்காகக் கண்ணீர்விடத் தேவையில்லை, மஹிபால்! எறிந்து போன அவளுக்குச் சிறிதும் கஷ்டம் இருந்திருக்காது என்று நான் நிச்சயமாக நம்புவேன். அவள் அப்போது செல்ப் பொஸெஸ்ட்—ஆவேசத்தில்—"

"தற்கொலை செய்துகொள்ளும் ஆவேச உணர்ச்சிக்குத் தெம்பு கண்ணீரிலிருந்துதான் கிடைக்கிறது, சஜ்ஜன்! ஏன் இப்படி மனிதன் சாகவேண்டும்? அப்படிப்பட்ட நிலைமை ஏன் வர வேண்டும்? மனிதன் பிறந்தவுடனேயே இந்த அரக்க நிலை காரணமாக மூச்சுத் திணறி இறக்கத்தான் போகிறான். நானும் நீயும் இதைப் பார்த்துச் சகித்துக்கொண்டிருப்பதா?" சலவைக் கல் வட்டமேஜைமீது ஓங்கி ஓர் அறை அறைந்த மஹிபால் எழுந்து அந்த விசாலமான அறையில் உலாவ ஆரம்பித்தான். அவனுடைய கோபம் இயற்கையானதுதான். போதை மின்னொளிபோல் நரம்புகளில் பாய்ந்துவிட்டது. அடிக்கடி நடுங்கிக் கொண்டே அவன் கூறினான் : "ஒரு சிறு முள் குத்தினால் தாங்க முடிவதில்லை. அந்த உடலைத் தன்னிச்சையாக மனிதன் தீக்கிரையாக்குவதா? எரிந்து சாம்பலாக்குவதா?...(மஹிபால் விம்மி விம்மி அழ ஆரம்பித்தான்.) இறைவா! இப்படிப்பட்ட மரணம் யாருக்கும் வேண்டாம் வேண்டாம்...வேண்டாம்!"

எரிந்து கொண்டிருப்பவர்களின் துடிப்பு இப்போது மஹிபாலின் உள்ளத்தில் புரண்டு கொண்டிருந்தது. குழந்தையின் கழுத்தைத் திருகிய அந்தக் கொடிய கை கண்ணீர் நிரம்பிய கண்களுக்கெதிரே சித்திரமாக வந்து நின்றது. மஹிபாலின் வருத்தம் நியாயமான கோபத்தின் ஆவேசமாக மாறிவிட்டது!

மஹிபாலின் பேச்சு சஜ்ஜனையும் ஆட்கொண்டு விட்டது. காலையில் செய்தி கேட்டதுமே வந்த கோபமும் ஆவேசமும் இப்போது அவனிடம் மீண்டும் வந்துவிட்டன. முழுநாளையும் கழித்த அவன் பிறருக்காக வருந்தும் நிலையை இப்போதுதான் அடைந்தான். இந்த நிலையால் அவனுக்குத் தன் பண்புள்ள மனத்தின் சுமை சற்றுக் குறைந்தாற்போல் இருந்தது. இந்த இரக்க உணர்ச்சியால் அவனுடைய உள்ளம் புரிந்து வந்த குற்றம் சற்றே குறைந்து விடுமோ என்றுகூட அவன் நினைத்தான். இந்த இரக்க உணர்ச்சியை மூலதனமாகக் கொண்டு அவன் கணக்குப் போட்டான் : 'நான் அவ்வளவு கெட்டவனில்லை.'

மஹிபால் மேஜையருகிலிருந்து எழுந்ததுமே சீலா ஸ்விங்கின் பார்வை அவன்மீது சென்றது. அவளுடைய உள்ளத்தில் சொற்களுக்குள் அடங்காதபடி அத்தனை கேள்விகள் அலை மோதிக் கொண்டிருந்தன. வாழ்வு-சாவு இரண்டிற்குமிடையே போராடிக் கொண்டு தவித்த பல கேசுகள் அவளெதிரே விரைந்து வந்தன. 'எப்படியும் உயிர்வாழ வேண்டும்' என்பது அவள் ஆய்ந்து வந்த முடிவு. இப்போது இரக்கத்தால் அவள் ஆட்கொள்ளப் பட்டாள்.

ஆவேசத்துடன் மஹிபால் சன்னலருகே நின்று கொண்டு இருளில் அமைதியாக இருந்த தோட்டத்தைப் பார்த்தான். அவனுடைய உணர்ச்சிகளனைத்தும் ஏதாவது எண்ணம் வராதா என்று எதிர் நோக்கிக்கொண்டிருந்தன. தன் இடத்தில் அமர்ந்திருந்த சீலா கூறினாள்: இம்மாதிரி ட்ராஜடீஸ் (துன்பங்கள்) நூற்றுக்கணக்காக நடக்கின்றன. ஆனால் என்ன செய்வது, எப்படித் தடுப்பது என்பதுதான் புரியவில்லை.''

சஜ்ஜன் சிந்தியாமலேயே சிந்தனையாளனைப்போல் முகத்தை வைத்துக்கொண்டு பேசினான்: ''இதெல்லாம் கல்வி குறைந்திருப்பதால்தான் நம் மக்கள் மிகவும் பேக்வாரிடில் (பிற்போக்கான நிலையில்) இருக்கிறார்கள்.''

''கல்வியா, வாட்? (என்ன?) எப்படிப்பட்ட கல்வி வேண்டும்? க்ரைம்ஸ் ஒரேயடியாக நின்றுவிட வேண்டும். அப்படிப்பட்ட கல்வியை அளித்தாக வேண்டும். என்ன கல்வியை அளிப்பது?'' டாக்டர் சீலா இவ்விதம் கூறிச் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டாள்.

''கவர்மென்ட்தான் எஜுகேஷன் (சர்க்கார்தான் கல்வி வசதி) தரவேண்டும். ஹ்யூமன் வால்யூஸ் (சிறந்த மானிட லட்சியம்) என்பது என்ன என்று மக்களுக்கு அறிவுறுத்த வேண்டும்.''

''ஆனால் அவர்களுக்கு எப்படி எடுத்துச் சொல்வது? அதற்கு வேண்டிய சாதனம் எங்கே?'' சன்னல் பக்கத்திலிருந்து வந்த மஹிபால் சஜ்ஜனை ஒரு குறுக்குக் கேள்வி போட்டான்.

''ஏன்? கவர்மென்ட் டீச்சர்சை அப்பாயின்ட் (சர்க்கார் ஆசிரியர்களை நியமனம்) செய்யட்டும். ஆர்ட்—கல்ச்சர் பங்க்ஷன்ஸை (கலை-பண்பாட்டு நிகழ்ச்சிகளை) நடத்தட்டும். வீடுதோறும் சென்று துப்புரவாக இருப்பதற்கு மக்களுக்குக் கற்றுக் கொடுக்கத் தக்க ஆண்களையும் பெண்களையும் நியமிக்கட்டும். அவர்களுடைய அறிவைச் சற்று மலரச் செய்யட்டும்.''

''வெற்று உபதேசங்களில் எனக்கு நம்பிக்கை கிடையாது சஜ்ஜன்!''—சஜ்ஜனுடைய பேச்சை ஹோப்லெஸ் கேஸ் (உபயோகமற்றது) என்று தள்ளும் முறையில் டா. சீலா கூறினாள்:

"இதோ பாருங்கள் ! நீங்கள்தான் என்னிடத்துக்கு வருகிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் நண்பர் கூறியபடி நான் இதயமற்ற அரக்கி. உலகில் மக்களின் உயிரைக் காப்பாற்றுவதை விடச் சிறந்த சேவை கிடையாது என்பது எனக்குத் தெரியும். ஆனால் இதே வேலை என் தினசரி வாழ்க்கைச் சாதனமுங்கூட. எந்தத் தொழிலைக் கற்க நான் அரும்பாடுபட்டேனே, ஏராளமான பணம் செலவழித்தேனே, அந்தத் தொழிலால் ஏன் லாபம் சம்பாதிக்கக் கூடாது என்று நான் கருதலாமல்லவா ? எப்படியாவது உயிர்தப்ப வேண்டுபவர், அதற்காக ஏன் பணம் செலவழிக்கக் கூடாது ? நான் சுகமான வாழ்க்கையை விரும்புபவள். உங்கள் கிறிஸ்டியன்—காந்தியன்—ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த மக்களைப்போல் துறவியாக இருந்து கொண்டு மக்களின் உயிரைக் காப்பாற்றும் கொள்கையில் எனக்கு நம்பிக்கை கிடையாது" என்று கூறிச் சீலா மௌனமாகிவிட்டாள். மஹிபாலை அவள் கேள்விக் குறியுடன் பார்த்தாள்; அவனுடைய முகபாவத்தை அறிய முயன்றாள். மஹிபால் தலை குனிந்து ஏதோ எண்ணத்தில் மூழ்கியிருந்தான்.

சஜ்ஜன் கூடச் சிந்தனையில் இறங்கிவிட்டான் : "இது மிகவும் சிக்கலான பிரச்னைதான். நம் சுயநலத்தைக் கவனிப்பது இயற்கை. இது ஹ்யூமன் நேச்சர் (மனித இயல்பு) எங்கோ ஒரிருவர் 'அப் நார் மலா'க (அசாதாரணமாக)த் தோன்றிவிடுகின்றனர். அவர்கள் மகாத்மாக்கள். ஆனால் பொதுவாக மக்களிடம் காணப்படுவது இதுதான். முதலில் சுயநலம், பிறகுதான் பரோபகார சிந்தனை... மற்றொரு கோணத்தில் பார்த்தால் இந்தச் சுபாவம் மக்களிடமிருந்து மாறினால் வந்தது ஆபத்து ! பிறகு மனிதப் பண்பு ஆகியவற்றைப் பற்றி நாம் இடும் கூக்குரலுக்குப் பொருளே இல்லாமற் போய்விடும். மக்களின் உள்ளம் எப்படித்தான் மாறுமோ புரியவில்லை" என்று கூறிய சஜ்ஜனின் குரலில் நடுக்கம் ஏற்பட்டது. சித்ரா, ஜகதம்பா சஹாயின் மகள் இவர்களுடன் இவனுடைய குற்றவாளியான ஆத்மா திடீரென்று வெளிப்பட்டது. சஜ்ஜன் படபடத்துப் போனான்.

"மாறலாம்" மஹிபால் சஜ்ஜனைப் பார்த்தான். "கொடுமை பிறரை ஏமாற்றிப் பிழைக்கும் தொழிலை நிறுத்து. இதை எளிதில் செய்ய முடியாவிட்டால் அடித்து உதைத்துத்தான் நிறுத்த வேண்டும்".

"நான்தான் கொடுமைக்காரன் என்பது போலல்லவா நீ பேசுகிறாய்!" மஹிபாலின் எச்சரிக்கை சஜ்ஜனுடைய காயத்தில் பட்டுவிட்டது. தன் துடிப்பை மேலாகச் சிரித்து சமாளித்துக் கொண்டு அவன் மஹிபாலுக்குப் பதிலளித்தான். சீலாவிற்கும்

சிரிப்பு வந்தது. சிரிப்பு மஹிபாலை ஒன்றும் செய்யவில்லை. அவன் கூறினான்: ''நீ, நான் எல்லோரும் கொடுமைக்காரர்கள்தாம். நண்பனே! ஒரு வார்த்தை என்பது ஒருவரைக் குறித்துச் சொல்லப்பட்டதல்ல; முழுச் சமுதாயத்தையும் அது குறிக்கும். குனிந்துகொண்டே சிலர் இருப்பதும், தலையில் குட்டிக்கொண்டே சிலர் வாழ்வதும் நம் கொள்கையாகிவிட்டது. ஆனால் காலம் மாறினால் குட்டுப்பட்டவன் எழுந்து குட்டினவனை ஒரு கை பார்த்து விடுவான். பார்த்துக் கொண்டே இரு. அந்தக் காலம் வெகு தொலைவில் இல்லையப்பா!''

''அப்படியானால் பாரதத்தில் கம்யூனிஸ்டுகள் வலுத்து விடுவார்கள் என்று சொல்கிறீர்களா? அவர்கள் கொலைக்கும் அஞ்ச மாட்டார்களே?'' என்று கையைக் கூப்பிய வண்ணம் கால்களை ஆட்டிக் கொண்டே சீலா கேட்டாள்.

''எந்தக் கட்சி வலுக்குமோ எனக்குத் தெரியாது. நான் அரசியலில் திறமை பெற்ற மாணவனல்லன். ஆனால் ஒன்று நிச்சயம். மார்க்ஸ் கொள்கைகளால் ருஷ்யா, சமீபத்தில் சீனத்தின் புதிய ஆக்க முயற்சி இவற்றால் உலகத்து மக்கள் யாவருடைய எண்ணத்திலும் புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. பாதிக்கப்பட்ட மக்கள் அடிபட்ட நாகம் போல் சீறி எழுந்து விட்டார்கள். இந்தத் தடவை இவர்களை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது... நம் சமுதாயத்துப் பெண்களும் பலவிதத் துன்பங்களுக்காளாகியிருக்கிறார்கள். எல்லை மீறி அவதிப்பட்டு விட்டார்கள். ஆமாம்.''

சஜ்ஜனுக்குத் தன் தாயின் நினைவு வந்தது: ''பாவம், அவள் எத்தனை இன்னல்களைச் சகித்தவள்!''

சீலா கூறினாள்: ''மஹிபால்! பெண்களைப்பற்றி நீங்கள் ரொமான்டிக்காக நினைக்கிறீர்கள். இப்போது பெண்கள் படித்து விட்டார்கள். கல்ச்சர்ட் ஆக சுதந்திரமாக இருக்கிறார்கள். பெண்களின் கல்வி இப்போதெல்லாம் ..''

பொங்கி வழிந்த கோபத்தை அடக்க முடிந்த மஹிபாலுக்கு நாவை அடக்க வரவில்லை. அவன் கடுமையாகப் பேசினான்: ''விரல் விட்டு எண்ணும் அளவுக்குத்தான் பெண்கள் சுதந்தரமாக இருக்கிறார்கள். அவர்களில் நீ ஒருத்தி; நான்கு காசுகள் சம்பாதிக்கிறாய். பெரும்பாலானவர்கள் எரிந்து சாம்பலாவதற்குத்தான் பிறந்திருக்கிறார்கள்!''

''நீங்கள் ஒரே பிடிவாதமாகப் பேசுகிறீர்கள் மஹிபால்'' சீலா இனிமையாகப் பேசினாள். ''இந்த மாதிரி பத்துக் கேசுகள் இருக்கலாம். அது வேறு விஷயம்!'

''வேறு விஷயமாவது, அதுதான் முக்கியமான விஷயம்! பாரத நாடு முழுவதிலும் ஐந்தாறு வீடுகளைத் தவிர மற்ற எல்லா வீடுகளும் பெண்களுக்குக் கசாப்புக் கடை போலத்தான்.''

“உன் வீடுமா?”—சஜ்ஜன் குத்தலாகக் கேட்டான்.

மஹிபாலுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவனுடைய முகம் வெளுத்துப் போயிற்று. பிறகு சமாளித்துக் கொண்டு கூறினான்: “ஆமாம், நானும் ஒரு கசாப்புக் கடைக்காரன்தான்!”

“ஏன்?” குற்றவாளியை நீதிபதி கேட்பது போல் அதிகாரத்துடன் சஜ்ஜன் கேட்டான். பிறருடைய குற்றத்தில் மறைந்து கொண்டு அவனுடைய இதயம் இப்படிப் பேசத் தூண்டியது.

மஹிபால் கூறினான்: “பெற்றோர் நிச்சயிக்கும் திருமணங்கள் பெரும்பாலும் வெற்றி ஆவது போல் என் திருமணமும் வெற்றிகரமானதன்று. வாழ்நாள் முழுதும் அடைபடாத கடனைப் போல் நம் நாட்டின் எண்பது சதவிகித வீடுகளில் திருமணங்கள் ஆகி விடுகின்றன. அதன் பயனாகக் கணவன் எங்கோ, மனைவி எங்கோ, இருவரும் ஒருவரையொருவர் ஏமாற்றிக் கொண்டு கெட்ட நடத்தையில் இறங்கி விடுகின்றனர்!”

“அந்த மாதிரி திருமணங்களில் மட்டுந்தானா, லவ் மாரேஜஸ்லே (காதல் மணங்களிலும்) கூடத்தான் இப்படி நடக்கிறது. இளமையில் இருக்கும் வரை ரோமியோ—ஜூலியட்தான். பிறகு ரத்து செய்வது, இல்லாவிட்டால் ஒருவரையொருவர் ஏமாற்றுவது—அதுதான் வழி! திருமணம் என்பது மக்களை ஏமாற்று, சூது, வாது, பொய், நேர்மையற்ற வழி இவற்றுக்கு அடி கோலுகிறது என்னும் முடிவுக்கு நானும் வந்து விட்டேன். இதை ஒழியுங்கள்! பொருளாதார நிலையில் பெண்களைச் சுதந்திரமாக வாழ விடுங்கள். பிறகு பாருங்கள். ஆண்—பெண்களின் உறவு எவ்வளவு சாதாரண நிலைக்கு வந்து விடுகிறது என்று!”—சீலா இதைக் கூறினாள்.

“அதற்குப் பிறகு ஆண்—பெண்களுக்கிடையே என்ன உறவு இருக்கப் போகிறது? உடலின்பம்தான்!” மஹிபால் வெடுக்கென்று பேசினான்.

“இன்று நிலைமை என்ன? நைன்டிநைன் பாயின்ட் நைன் ரெக்கரிங் (99.999 .) கேசுகளில் ஆடவரும் பெண்டிரும் ஒருவரையொருவர் எப்படிப் பார்க்கிறார்கள்? பயன்படும் பொருளைப் போலத்தானே பார்க்கிறார்கள்?” சஜ்ஜன் மேஜையிலிருந்து சிகரெட் கேசை எடுத்தபடி கூறினான்.

“என் அநுபவத்திலிருந்து கூறுவேனே, எத்தனை வீடுகளின் குட்டு வெளிப்பட்டு விட்டது தெரியுமா? இதற்கு முன்பு நான் அபார்ஷன் (கருச்சிதைவுக்) கேசுகளைப் பார்ப்பதே கிடையாது. பிறகு, இதில் என்ன வந்து விட்டது என்று நினைக்க ஆரம்பித்து விட்டேன். எந்தச் செயலை மனிதன் மட்டுமல்ல, விலங்கினங்களும், புள்ளினங்களுங்கூட இயற்கையாகச் செய்து வருகின்றனவோ, அதே செயலை ஆதம்-ஈவின் குழந்தைகளான மனிதர் திருமணம், அதன் ‘மாரல்

கோட்' (நீதிமுறைகள்) இவை காரணமாகப் பாவச் செயல் என்று கருதிப் புரிகின்றனரோ, அவர்களது முட்டாள்தனத்தை நான் ஏன் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது என்று நினைத்தேன்'' சீலா டம்ளரை உதட்டருகே கொண்டு சென்றாள். ஒரு சாத்துவிக உணர்ச்சியின் தூண்டுதலினால் அவள் அப்படிச் செய்தாள்.

சஜ்ஜனுக்கு ஊக்கம் பிறந்தது. தன் டம்ளரருகே கை செல்ல, அவன் பேசினான் : "நீ சொல்வது முற்றும் சரி. திருமணமும் அதன் மாரல் கோடும் (நீதி முறையும்) சமுதாயத்தை உயர்த்து வதற்குப் பதிலாகப் படுகுழியில் வீழ்த்துகின்றன. இவற்றைத் தீர்த்துக் கட்டியாக வேண்டும்!''

"சரி, இனி யக்ஷ தேவரே, ப்ளீஸ் கெட் அப்! (தயை செய்து எழுந்திரும்)'' சீலா மஹிபாலிடம் புன்முறுவலுடன் கூறினாள் "மணியைப் பாருங்கள். உங்கள் பிரிவால் வாடும் பெண் வழிமேல் விழி வைத்துக் காத்துக் கிடப்பாள்.''

இரண்டு ஜோடிக் கண்கள் மௌனமாகச் சிரித்தன. மஹிபால் சட்டென்று கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஒன்றடித்து நாற்பது நிமிடங்கள் ஆகியிருந்தன.

## 10

சீலாவின் வண்டி நடைபாதையருகே நின்று கொண்டது. கதவைத் திறந்ததும் மஹிபாலிடம் சீலா கூறினாள் : ''அண்ட் பீ நைஸ் டு யுவர் மிஸஸ், டாலிங்! (உங்கள் மனைவியிடம் மிருதுவாக நடந்து கொள்ளுங்கள் அன்பே) இன்று மிகவும் அதிக நேரமாகி விட்டது.''

''ஆமாம். ஆனால் ஒன்ஸ் இன் எ ப்ளு மூன் (எப்போதாவது ஒரு சமயம் என்றால்) இது பரவாயில்லை.'' அலட்சியமாகப் பேசுவது போல் நடித்த மஹிபால் சிரித்தான். ''நான் ஓவியனாக இருந்தால் என்னை மங்கிய வண்ணங்களில் தீட்டிக் காண்பித்திருப் பேன். உள்ளத் துடிப்புகள் ஒளி மிகுந்தவை. அறிவு? அதுவும் ஒளி மிக்கதுதான். ஆனால் சிக்கல்களில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கிறது. நீ என் களைப்பைப் போக்கும் காதலி; கல்யாணி என் வாழ்வின் தவப்பயன். உங்கள் இருவரின் உதவியையும் என்னால் மறக்க முடியாது. அதற்குப் பிரதியாக ஒன்றும் செய்ய வும் முடியாது, நான் உண்மையாகச் சொல்கிறேன்?''

களைத்துப் போன நோயாளியைப் போல் மஹிபால் சீலாவைப் பார்த்தான். சீலா அன்புடன் அவனது கன்னத்தை வருடியபடி கூறினாள் : ''எவ்வளவு சாமிங் (பிரமாதம்) நௌ டேக் கேர்

யுவர் ஹெல்த், டியர்? (இனி உடம்பைக் கவனித்துக் கொள் ளுங்கள், அன்பே) ஆத்மாவின் வேதனையை இலக்கிய வடிவில் அளியுங்கள். மற்றதை எல்லாம் மறந்து விடுங்கள்!''

சீலாவின் தோள் எனும் சூதாட்டப் பகடையிலிருந்து இரண்டு கழுத்துக்கள் குனிந்தன. இருளில் குனிந்த நான்கு கண்களில் ஒரு சக்தி ஒளிவிட்டது. சீலாவின் பார்வையில் வைரமாக மின்னியது. மஹிபாலின் கண்கள் வாடிய ரோஜா மலரைப்போல் காட்சி அளித்தன. உணர்ச்சிமிக்க உஷ்ணம் சீலாவின் உதடுகளில் இருந் தது. மஹிபாலின் உதடுகளில் பாவங்களின் பரிசம் இருந்தது; ஆனால் உணர்ச்சி இருக்கவில்லை.

''நாளைக்குச் சந்திப்பீர்களா?'' சீலா கேட்டாள்.

''எழுதும் வேலை இருக்கிறதே!'' என்றான் மஹிபால்.

''என் வீட்டில் எழுதலாமே! பகலுணவுக்குப் பிறகு—''

''சமாதி நிலைக்குப் பிறகு யோகி தன் ஆசனத்தை விட்டு எழுந் திருப்பதில்லை. மாலைக்குள் வரத் தோன்றினால் உனக்குப் போன் செய்துவிட்டு வருகிறேன்''

''இல்லை, நாளைக்கு நிச்சயமாக வரவேண்டும். கிறிஸ்துமஸ் ஈவ் (சமயம்) இல்லையா?''

''ஓகோ! நான் மறந்துவிட்டேன்... வருகிறேன்... சுமார் ஏழு மணிக்கு வந்துவிடுகிறேன்.'' 'பை... பை!' 'பை—பை' என்றதும் கார் விர் என்று கிளம்பியது. காரின் சிவந்த விளக்கொளியும் மறைந்துவிட்டது. மஹிபால் வேறு வழியின்றி வீட்டுத் தெருப் பக்கம் வந்தான். நடைபாதையிலிருந்து செங்கற்கள் வெளிவந்து நிற்கும் நான்கு படிகளில் இறங்கி ஒரு குறுகிய சந்தில் மஹிபால் நுழைந்தான். தெருவின் சூனியமும் அவனது உள்ளத்துச் சூனிய மும் ஒன்று கலந்தன.

மூடிய கதவுகளுக்குள் அடங்கிக் கிடக்கும் மக்களைப்பற்றி நினைத்தஅவன் திடீரென்று வேகமாகச் சிந்தனையைப் பறக்க விட் டான். வேதனை பெருமூச்சாகக் கிளம்பியது. கண்கள் தாமாகவே வானை நோக்கின. தை மாதத்து இரவு நிலவொளியில் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

'உலகம் எவ்வளவு பரந்து இருக்கிறது!' மஹிபால் எண்ணினான். 'இந்த நட்சத்திரங்கள் எத்தனை வீடுகளை, எத்தனை மக்களை, எத்தனை நாடுகளைத் தம் ஒளியினால் ஒன்றாய்ப் பிணைக்கின்றன!'

பாதித் தெருவை அடைத்துக் கொண்டு ஒரு பசு படுத்திருந்தது. அருகேயிருந்த தெரு ஒன்றில் நாய்களின் சண்டை ஒலித்துக் கொண்டிருந்தது. அந்த ஒலியும், இரவின் நிசப்தத்தின் ஓர் அம்சமாகவே மஹிபாலுக்குத் தோன்றியது. அதே நேரத்தில் சுமார் இருபது அடி தூரத்தில் ஏதோ ஒரு வீட்டின் மாடியிலிருந்து

'தொப்' என்று ஒரு பொருள் கீழே விழுந்தது. மஹிபால் திடுக்கிட்டான். இந்த வேளையில் யார் விழித்திருப்பார்கள்? என்ன விழுந்திருக்கும்? தெருவின் வெளிச்சத்தில் அந்தப் பொட்டலம் வெண்மையாகத் தெரிந்தது. ஏதாவது குற்றமோ—அவனுடைய மனம் தவறுகப் பிறந்து விட்ட சூழந்தையைப்பற்றி எண்ணத் துவங்கியது. இதயத் துடிப்புடன் நடையும் வேகமாயிற்று. அருகே சென்று பார்த்ததால் அது ஒரு கிழிந்த தலையணை என்று தெரிய வந்தது. அதன் பஞ்சு இங்கும் அங்கும் பறந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்து அவன் பயம் தெளிந்தான். ஆயினும் இந்த நள்ளிரவில் ஏன் எறிய வேண்டும் என்று நினைத்தான். மக்கள் பலவிதம். இரவு வந்தால் வாழ்வின் இயக்கமே நின்றுவிட வேண்டுமா என்ன? மூடிய வீடுகளில் உள்ள எத்தனை உள்ளங்களின் கதைகள் விழித்துக் கொண்டிருக்கின்றனவோ, எத்தனை உறங்கிக் கொண்டிருக்கின்றனவோ என்று அவன் எண்ணினன்.

மஹிபாலின் கற்பனை, மூடியிருந்த வீடுகளில் எல்லாக் கதவுகளையும் திறந்து விட்டது. கிழிந்த திரையிலும், பட்டுத் திரையிலும், உடைந்த தட்டிகளின் மறைவிலும், நல்ல மஞ்சத்திலும், படுத்துறங்கும் மக்கள் அவனுடைய கற்பனைக்குள் வந்து விட்டனர். எத்தனையோ பேர் பிரிவினுல் விழித்துக் கொண்டிருப்பர். சிலர் சேர்ந்திருக்கும் மகிழ்ச்சியினுல் விழித்திருப்பர். பலர் உலகமாயையில் ஒன்றியிருப்பர். இந்த வீடுகளில் எத்தனை ஜகதம்பா சஹாய் இருக்கின்றனரோ, வேறு வழியின்றி இன்று உடலை விற்று நாளைக்கு அதற்குப் பதிலாக அதையே தீ வைக்கும் நிலையில் எத்தனை பெண் மணிகள் இருக்கின்றனரோ!

மஹிபாலுக்கு ரோமாஞ்சலி உண்டாயிற்று! அவனுக்குத் குளிரெடுத்தது. வாழ்க்கையே விசித்திரமான பிரச்னைதான். இந்தப் பேட்டைகள் அந்தப் பிரச்னைகளைக் கொண்டு தெருக்களிலும், கடைகளிலும், சந்துகளிலும் கட்டுண்டு கிடக்கின்றன. இங்கு மனிதர், அரக்கர் என்ற பாகுபாடின்றி எல்லோருக்கும் எப்போதும் புகல் கிடைத்திருக்கிறது. தனவந்தரின் மாளிகையிலிருந்து எலிவளைகளைப் போன்ற வீடுகளில் வாழும் ஏழைகள்வரை எல்லோரும் தம் பெயருடன் இந்தப் பேட்டையை முகவரியாகக் கொள்ளச் சம உரிமை படைத்திருக்கின்றனர். நாணயமுள்ளவர்களின் நாணயமும், நான்கு மக்களிடையே வெளிப்படுகிறது; கொள்ளைக்காரனின் போக்கிரித்தனமும் இதே தெருக்களில்தான் அடங்கி இருக்கிறது.

நூற்றுண்டுகள் கழிகின்றன; பிரச்னைகள் மாற்றங் கண்டு விடுகின்றன; வீடுகள் மேடாய்ப் போய்விடுகின்றன; புதிய வீடுகள் கட்டப்படுகின்றன. பேட்டை அழிவிலும் புதிய தெம்புடன் வாழ்

கிறது. இது மனிதனின் முடியாக் கதை; இதன் உள்ளத்தில்தானே மனிதனின் வீடு இருக்கிறது!

* * * *

வீட்டையடைந்த மஹிபால் கதவைத் தட்டச் சற்றுத் தயங்கினான். வாயில் மதுவின் வாடை நிச்சயமாய் வரும். 'ஆனால் நேரமாகிவிட்டது, வராமல் இருக்கலாம்' என்று எண்ணினான்.

புகை ஊதுவதில் ஒரு நிமிடம் கழிந்தது; முடிவில் அவன் கதவைத் தட்டினான்.

சற்று நேரத்திற்குப் பிறகு கல்யாணியின் குரல் கேட்டது: "யாரது?"

"நான்தான்" என்று மஹிபால் கூறியதுமே கதவு திறக்கப் பட்டது. வாசற்படியிலிருந்து விளக்கொளி இருவருடைய முகங்களிலும் வீசியது. இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். கணவன் தன் பார்வையை மறுபக்கம் திருப்பிக் கொண்டான். உள்ளே சென்று வாயை மூடிக் கொண்டு அறைக் கதவைத் திறந்தான். 'ஸ்விச்' இருக்குமிடம் சென்றான்.

வாசற் கதவைத் தாழிட்டுவிட்டுக் கல்யாணி வறண்ட குரலில் கேட்டாள்:—"படிக்கப் போகிறீர்களா?" "இல்லை, எழுதப் போகிறேன்" கனத்த குரலில் பதிலுரைத்த மஹிபால் மேஜை விளக்கை எரிய வைத்தான். மேஜையில் சிதறிக் கிடந்த காகிதங்களை ஏதோ தேடுபவன் போல் இப்படியும், அப்படியுமாகப் போட்டான்: வேலை அதிகம் போல் பாசாங்கு செய்யும் அவன் திரும்பாமலேயே, "வெற்றிலை கொண்டு வா" என்றான்.

"இதோ பெட்டியில்" என்றாள் கல்யாணி. உடனே மஹிபால் வெற்றிலைப் பெட்டியை எடுத்து நான்கு வெற்றிலைகளைமென்ற பிறகு, களவுப் பொருளை எடுத்துக்கொண்டு ஓடும் கள்வன் நிம்மதியான இடத்தை அடைந்து மன அமைதி அடைவது போல் நிம்மதி அடைந்தான்.

மனைவி அந்த இடத்தை விட்டு நகர்ந்துவிட்டாள். கவலையை விட்டு மஹிபால் பெருமூச்செறிந்தான். வாயில் புகையிலைத் துகளைப் போட்டுக்கொண்டான்.

இரண்டு நாட்களாகக் கணவன்—மனைவி இருவருக்குமிடையே மனத்தாங்கல். நேற்று மத்தியானம் சற்று உரத்த குரலில் சர்ச்சை நடந்தது; இன்றும் குருக்ஷேத்திரத்துடன்தான் பொழுது விடிந்தது. சாப்பாடு முடிந்ததும் மஹிபால் தட்டைப் போட்டுவிட்டு எழுந்துவிட்டான். செலவைப்பற்றி விவாதம் நடந்தது. ஒன்றரை மாதமாக அவனுடைய வரும்படி தாறுமாறாகச் செலவாகிறது. செப்டம்பர் மாதம் மஹிபாலின் மூத்த மகள் டபிள்நிமோனியா

வில் படுத்துவிட்டாள். உயிர் பிழைப்பதே துர்லபமாகிவிட்டது. சீலா—கர்னல் இவர்களின் உதவியால் வைத்தியச் செலவு கொஞ்சம் குறைந்தது என்றே சொல்ல வேண்டும். ஆனால் மன நிம்மதி இழந்திருந்ததால் அவனால் அப்போது ஒன்றுமே எழுத முடியவில்லை. தினமும் கிணறு வெட்டித்தான் தண்ணீர் குடிக்க வேண்டும் என்றிருப்பவனால் ஒரு நாள் உழைக்காமல் உட்கார முடியாது.

மஹிபாலுக்கு நவம்பர் மாதத்திலிருந்தே கஷ்டம் ஆரம்பித்து விட்டது. புத்தகங்களின் ராயல்டி தொகை சுமார் இரண்டாயிரம் ரூபாய் டிசம்பரில் வரும் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் விற்பனை சரிவர ஆகாததால் பிப்ரவரி அல்லது மார்ச்சு மாதத்தில் பணம் அனுப்புவதாகப் பதிப்பாளரிடமிருந்து கடிதம் வந்து விட்டது.

வெறும் ரொட்டியும், தண்ணீரும் போதும் என்று இருந்தால் கூட ஒன்பது பேர்களுக்கு மாதம் குறைந்தது நானூறு ரூபாயாவது வேண்டும். மஹிபாலின் இரண்டு பிள்ளைகள் ஹர்ஷவர்த்தன், ஸ்ரீ வர்த்தன், சகோதரியின் மகள் சகுந்தலா இம்மூவரும் இண்டர் மீடியட் இரண்டாம் ஆண்டு வகுப்பில் படித்துக் கொண்டிருந்தனர். பதினைந்து வயது மகள் ராஜ்யஸ்ரீ ஒன்பதாவது வகுப்பிலும், சித்தார்த் ஏழாம் வகுப்பிலும் படித்துக் கொண்டிருந்தனர். ஏழு வயது தபோதன் இரண்டாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். அநாமிகா ஒரு வயது கைக் குழந்தை.

ரேடியோவிற்கு நாடகம்—பேச்சு, மாதப்பத்திரிகைகளுக்குக் கதைகள், கட்டுரைகள் ஆகியவை எழுதி வரும் மஹிபால் ஒரு தினசரியில் தினமும் நகைச்சுவை நிறைந்த கட்டுரையும் எழுதி வந்தான். அந்தக் 'காலம்' எழுதுவதால் கிடைக்கும் நூற்றைம்பது ரூபாய்தான் அவனுடைய நிரந்தரமான வரும்படி. மற்றவை எல்லாம் நிச்சயமானவை அல்ல. கடைகளில் அவனுடைய புத்தகங்கள் பதினொன்றும் விற்பனையில் வைக்கப்பட்டிருந்தன. ஆனால் வரும்படி அதிகம் கிடைப்பதில்லை.

மஹிபாலின் நாவல்களில் 'ரோமான்ஸ்' இருப்பதில்லை. ஆனால் இப்போது (பதிப்பாளரின் கருத்துப்படி) மனத்தைக் கிளுகிளுக்கச் செய்யும் புத்தகங்களைத்தான் மக்கள் அதிகமாக விரும்புகின்றனர். முற்போக்குள்ள, சமுதாயத்தைப் பற்றிய சிந்தனையைக் கிளறி விடும் நாவல்கள் விற்பனையாகின்றன. ஆனால் இந்த ஆனாலுடன் மற்றும் ஓர் 'ஆனால்' சேர்ந்து விடுகிறது.

எலும்புகளையே நடுங்கச் செய்யும் விமரிசனங்கள்! ஒரு சிந்தனை; இரண்டு கோணங்கள், பத்து நோக்குகள் என்றெல்லாம் வெளி வந்து மாதந்தவறாமல் இலக்கியம் படிப்பவரை—பெரிய கோயில்களில் சேரும் பிச்சைக்காரக் கூட்டங்களைப் போல் சூழ்ந்துகொள்

ளாத வரையில் அந்த எழுத்தாளர்களின் வரும்படியும் குறைந்து விடுகிறது.

மஹிபாலின் படைப்புக்களுக்கும் இந்த வாய்ப்பு மிகவும் குறைவு தான். அரசியல் அல்லது இலக்கியக் கட்சியுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளும் இலக்கிய கர்த்தாக்களின் படைப்புகளைப் பற்றித்தான் அதிகக் கூக்குரல் கேட்கிறது என்பது மஹிபாலின் புகார். அந்தக் கட்சி எவ்வளவுக்கெவ்வளவு பலமுள்ளதோ அதே அளவுக்கு அந்த எழுத்தாளர்களுக்கும் விளம்பரம் கிடைக் கிறது. அவ்வளவுக்கவ்வளவு அவர்களுக்கு வரும்படியும் அதிகம் கிடைக்கிறது. மஹிபாலினால் தன்னை எந்தக் கட்சியுடனும் இணைத்துக் கொள்ள முடியவில்லை.

இவ்விதம் அவன் யாருடனும் சேராமல் தனித்து இருந்தான். இந்தத் தனிமை காரணமாகத் தினமும் அவன் மனக் குழப்பத்தில் சிக்கிக் கொண்டு தத்தளித்தான். இல்லாமை என்னும் தேள் கடியைத் தாங்கிக் கொண்டு லட்சக் கணக்கான ரூபாயையும் எல்லாச் சுகங்களையும் பற்றிக் கற்பனை செய்து கொண்டு மகிழ் வான். இல்லாவிட்டால் இந்தப் பொய்க் கற்பனையை உதறிவிட்டு ராமன், புத்தன், மகாவீரன், ஏசு, காந்தி போன்ற மகான்களின் தியாகத்தையும், தவத்தையும் நினைந்து ஊக்கமடைந்து எழுதப் படிக்கத் தொடங்கி விடுவான். பகலும் இரவும் மாறி மாறி வருவது போல் அவனுடைய வேலையும் வீணுகக் கழிக்கும் பச்சாத் தாப நிலையும் இடை விடாமல் வந்து கொண்டிருந்தன. தாகம் தீராத ஒருவன் கை நீட்டிய வண்ணம் இருப்பது போல் அவனது காலம் கழிந்து வந்தது.

மனைவி அறையிலிருந்து சென்றவுடனே மஹிபாலுக்கு பச்சா தாபம் வந்துவிட்டது. முப்பத்திரண்டு வயதிலேயே கல்யாணியின் தலையில் வெண்முடி பளிச்சிட்டது. அவனது நினைவிற்கு வந்தது. முகத்தில் ஆழ்ந்த சுருக்கங்கள் விழுந்து விட்டன. தன் வயதை விட ஐந்து ஆண்டுகள் மூத்தவளாக அவள் காட்சி அளித்தாள். கல்யாணி அந்நிலையை அடைய அவன்தான் காரணம். கலை, இலக்கியம், என்று அவளுக்கு ஒன்றுமே தெரியாது. பேச்சே அசல் பட்டிக்காட்டுப் பெண்போலத்தான் பேசுவாள். எப்போது பார்த்தாலும் காசு—பணம், உற்றூர்—உறவினர், கொடுக்கல்—வாங்கல் இவை பற்றிய பேச்சுத்தான். ஆயினும் அவளது வாழ்க்கை நிம்மதியாகத்தான் கழிந்து வந்தது. பிறருக்குச் சுகமளிக்க அவள் மாடாய் உழைப்பாள். உயிரையும் தியாகம் செய்து விடுவாள். இந்தக் குணத்தை மஹிபால் மற்றப் பெண் களிடம் குறைவாகத்தான் கண்டிருக்கிறுன். மஹிபால் உண்மை யில் அவளைச் சிரத்தைக்குப் பாத்திரமாகத்தான் கருதினுன்.

கல்யாணி ஒரு கையில் தண்ணீருடன், டம்ளரையும் மறு கையில் ஒரு கிண்ணத்தையும், தட்டையும் எடுத்துக் கொண்டு அறைக்குள் வந்தாள். மஹிபால் திடுக்கிட்டான். முதலிலேயே ஓசை சற்று கேட்டிருந்தால் படிப்பது போலவோ, எழுதுவது போலவோ பாசாங்கு செய்திருப்பான். ஆனால் காகிதத்தை விட்டு விட்டுத் தலையணைமேல் சாய்ந்துகொண்டு இப்போது அவன் 'பிராயச் சித்தம்' அல்லவா செய்துகொண்டிருந்தான். ஆனால் இதை அவளிடம் அவனால் சொல்லிக் கொள்ள முடியாது. ''பார்த்தாயா உன் மறைவில் கூட உன் நல்ல குணங்களையே நினைந்து நான் மகிழ்கிறேன்'' என்று அவன் எப்படிச் சொல்வான்? ஆதலால் திடீரென்று கல்யாணி வந்தது அவனைப் பிரமிக்கச் செய்தது.

கல்யாணி மேஜைமீது டம்ளரை வைத்துவிட்டு மூலையிலிருந்த ஸ்டூலிலிருந்து ஒரு பழைய செய்தித் தாளை எடுத்துக்கொண்டு ''இதைப் போடலாமா? உங்களுக்குத் தேவையா?'' என்று கேட்டாள்.

''போடு, என்ன அல்வாவுடன் வந்திருக்கிறாயே?'' என்று கேட்டான். வாயிலிருந்த வெற்றிலையை அருகே இருந்த பாத்திரத்தில் உமிழ்ந்து விட்டுத் தண்ணீரால் வாயைக் கொப்பளித்தான். அல்வாவைப் பார்த்ததும் அவனுக்குப் பசி உண்டாயிற்று.

அல்வாத்தட்டையும், தயிர்வடைக் கிண்ணத்தையும் வைத்து விட்டுக் கல்யாணி கூறினாள்: ''அல்வா செய்யம்மா, செய்யம்மா என்று குழந்தைகள் தினமும் தொந்தரவு செய்துகொண்டிருக் கிறார்கள். சரி, தயிர்வடையும் சேர்த்துப் பண்ணலாமே என்று நினைத்தேன்.''

ஆகா! பிரமாதம்! சூடாக இருக்கிறதே! ஜோர்!''—ஏலக்காய் பிஸ்தா, பாதாம், கலந்த அல்வா மஹிபாலுக்கு மிகவும் பிடிக்கும்.

''கல்யாணி கூறினாள் : ''எலெக்ட்ரிக் அடுப்பில் சூடு செய்து கொண்டு வந்தேன். காலையில் தட்டை விட்டு எழுந்தவர்தான், நாங்கள் எப்படி நாளைக் கழித்தோம் என்று உங்களுக்கு எங்கே கவலை?''—வாக்கியம் முடிவதற்குள் கல்யாணியின் கண்களில் நீர் மல்கியது; உதடுகள் துடித்தன.

மஹிபால் இரக்கங் கொண்டான். ஆயினும், அதை வெளிக் காண்பிக்காமல் கூறினான்—''சரிதான்'' என்னைக் காக்காய் பிடிக்கவா இந்த அல்வா? குழந்தையின் சாக்கு வேறு!''

கல்யாணியின் வாடிய முகத்தில் சிரிப்பின் பசுமை படர்ந்தது. மஹிபால்–''சரி எனக்கு ரொம்பவும், பிடித்திருக்கிறது இந்தா...''

மஹிபால்—ஒரு ஸ்பூன் அல்வா எடுத்து அவளிடம் நீட்டினான். ''வேண்டாம்'' என்றாள் கல்யாணி.

''அடே எச்சிலாகி விட்டதாக்கும்! இந்தா!'' என்றான் மஹிபால் அன்புடன் மறுபடியும்.

மன்னிப்புக் கோரும் வகையில் ''வேண்டாம், வேண்டாம்''. என்று உதட்டருகே கொண்டு வந்த ஸ்பூனை விட்டு அகன்று வந்தாள் கல்யாணி.

கோபத்தை அடக்கிக்கொண்டு மஹிபால் கூறினான். ''சுவாமி விவேகானந்தர் கூறுகிறார் உனக்கு அவர் யார் என்று தெரியுமா?''

''தெரியும், படத்தில் பார்த்திருக்கிறேன்.''

''நம் மதம் சமையலறைக்குள் அடங்கி விட்டது. நம் கடவுள் பிராம்மணர்களுக்குள் மட்டும் ஒடுங்கி விட்டார்! என்கிறார் அவர்.''

கல்யாணி பதில் கூறாமல் கேள்வி கேட்கும் பாணியில் பார்த்துக் கொண்டு இருந்தாள்.

''நம் சநாதன தர்மம் பேடியைப் போல் ஆகிவிட்டதாம். தன் மதத்தாரிடமே அது, 'என்னைத் தொடாதே! நான் சுத்தமானவன் என்று கூறுகிறதாம்!''

மதத்தை இப்படிப் பரிகசிப்பது கல்யாணிக்கு பிடிக்கவில்லை. அவள் நடுங்கினாள். படபடவென்று பேசிய மஹிபால் மௌன மாகிவிட்டான். அல்வாத் தட்டை வைத்துவிட்டு வடைக் கிண்ணத்தை எடுத்தபடியே தன் வார்த்தைக்கு ஏதாவது பதில் உண்டா என்று மஹிபால் எதிர்பார்த்தான். நடுங்கிய குரலுடன் கல்யாணி பேசினாள். ''இதோ பாருங்கள் குழந்தை குட்டிகளைப் பெற்றவள் நான். கடவுளையும் மதத்தையும் இப்படி அவதூறாகப் பேசக் கேட்டால் கூடப் பாவம்!''

''பாவமாவது, புண்ணியமாவது! இதைத் தொட்டால் எச்சில், அதைத் தொட்டால் தீட்டு! போதும் போதும் போ!... உன் பலகையில் உட்கார்ந்துகொண்டு ஏன் நீ அல்வா செய்கிறாய்! அதில் உட்கார்ந்து கொண்டே சாப்பிடவும் செய்கிறாயே! அது மட்டும் எச்சில் இல்லையா?''

''என்ன?'' கல்யாணி வியந்து கேட்டாள். ''என்னவா? நெருப்பு என்றால் வாய் வெந்து விடுமா என்ன? அரபு நாட்டிலிருந்து சாமான் வந்தால் நாம் முஸ்லிம் ஆகி விடுவோமா என்ன?''

''முஸ்லிம்கள் அவர்களுடைய வீட்டில் சமையல் செய்வார்கள். நான் என் வீட்டில் செய்து கொள்கிறேன்!''

''எதற்கெடுத்தாலும் இது எச்சில், இது அசுத்தம் என்று ஏன் பிதற்றுகிறாய்!''

''சரிதான் போங்கள்'' கல்யாணியால் பதில் பேசவும் முடிய வில்லை. எதையோ உளறி வைத்தாள். மறுபடியும் மஹிபால் ஆரம்பித்து விட்டான். ''நீ சொற்களைக் கூடப் புனிதமற்றவை

என்று பேசுகிருயே. பயறு இருக்கிறது 'பசு' என்னும் சொல்லின் முதல் எழுத்துப் 'ப' அதிலும் இருக்கிறது. புனிதமற்றது என்று பயறைச் சாப்பிடாமல் இருப்பதுதானே?'' ஆவேசத்தில் பாதி வடையை மஹிபால் எடுத்து வாயில் போட்டுக்கொண்டான். "பெரியவர்களைக்குறிக்க 'கா' என்னும் எழுத்து முதலில் வருகிறது."

''எங்கே?'' என்று பெரியவர்களை நினைத்து மகிழ்வுடன் கேட்டாள் கல்யாணி.

''தெலுங்கில் 'காரு' என்று பெரியவர்களுக்கு உபயோகிக்கிரேம். அதற்காக 'கா' என்ற எழுத்தில் ஆரம்பிக்கும் பொருளையே தொடாமலிருந்து விடுவதுதானே!''

கல்யாணி சிரித்து விட்டுக் கூறினுள் ''போதும், இந்த நேரத்தில் அதிகமாகச் சாப்பிடக் கூடாது. மனம் கேட்கவில்லை கொண்டு வந்தேன். காலையில் சாப்பிடலாம்.''

''ஓ-கே-சீப்'' என்றபடி தட்டைக் கீழே வைத்தான், மஹிபால் தன் மனைவியைச் சீண்டுவதற்காகக் கூறிய வார்த்தைகள் திடீரென அவனது சிந்தனையைக் கிளறி விட்டன—''அல்வா அயல் நாட்டுப் பண்டம். ஆன போதிலும் இன்று நம் நாட்டில் முக்கியமான தின்பண்டமாகி விட்டது. இதே போல் உணவுப் பொருட்கள், உடைகள், சொற்கள், பழக்க வழக்கங்கள் இவற்றில் பல எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டு மக்களின் வாழ்வுடன் கலந்துவிடுகின்றன. வடையை யார், எப்போது முதலில் செய்ய ஆரம்பித்தார்களோ—ஒவ்வோர் இடத்தில் இதே வடை வெவ்வேறு விதமாகத் தயார் செய்யப்பட்டும் இருக்கலாம். இன்று பெரும்பாலும் நாடு முழுவதிலும் காணப்படுகிறது. ஒரு பொருள் ஒருவரிடமிருந்து மற்றவரிடம் எப்படிச் செல்கிறது? பண்பாடு எப்படிப் பரவுகிறது? நாடு, காலம் எனும் பரப்பில் பொருளும், கருத்தும் எப்படிப் பண்பாடாக மாறுகின்றன? ஆகா! என்னே மனித வாழ்வு! எவ்வளவு சிக்கலானது, எவ்வளவு எளிமையானது''

கல்யாணி பேச ஆரம்பித்ததும் சிந்தனையில் ஒன்றிய மனம் புற உலகிற்கு வந்தது. அவள் கூறினுள்: ''இன்று மாலை பார்வதியின் அம்மா வந்திருந்தாள். அவர்களுடைய வீட்டு நிலைமையைக் கேட்டு நான் நடுங்கிப் போனேன்...''

"என்ன நடந்தது?'' என்று கேட்டபடியே மஹிபால் அல்வாத் தட்டை எடுத்தான்.

"என்னத்தைச் சொல்வது! பார்வதியின் அப்பா மிகவும் மோசமான வேலையை செய்துவிட்டார். தம் குழந்தைகளைப் பட்டினியால் தவிக்க வைத்துவிட்டுத் தாம் மட்டும் போக வாழ்க்கை வாழ்கிருர். ராமராமா! ஏழேழு பிறவிகளுக்கும் நரகந்தான் கிடைக்கும்.

பார்வதி அண்டையில் வசிக்கும் ஒரு குமாஸ்தாவின் மகள். பதினெட்டு வயதாகி விட்டது; திருமணமும் ஆகவில்லை, படிக்க வைக்கவும் முடியவில்லை. அவளுக்கு ஐந்து பேர் உடன் பிறந்தவர்கள். வீட்டில் இளைய தாயார் இருக்கிறாள். ஐந்தாண்டுகளாகச் சிற்றப்பா 'டிரான்ஸ்ஃபர் வேலை (மாற்றல்) காரணமாக ஜலந்தர் போயிருக்கிறார். அங்கிருந்து செலவுக்குப் பணம் அனுப்புகிறார். பார்வதியின் தந்தை சம்பாதிக்கும் சிறு தொகையின் பெரும் பாகம் சித்தியின் பெட்டிக்குள்தான் அடக்கம். தன் தங்கையின் காரணமாகப் பார்வதியின் தாய், குழந்தைகளுடன் பணக் கஷ்டத்தில் நாதியற்ற கைம் பெண்ணைப் போலவும், அடியும் உதையும் பெற்றுக் கொண்டு கணவனுடன் வாழும் காரிகை போலவும் நாட்களைக் கழித்து வந்தாள். பேட்டை முழுவதும் மைத்துனி அத்திம்பேரின் கதை பறக்கத் தொடங்கியது.

மஹிபால் காலியான தட்டைத் தினசரித் தாளின் மீது வைத்து விட்டு டம்ளரை எடுத்தபடி கூறினான். "இது என்ன புதிய விஷயமா?"

"சம்பளத்தின் அதிகப் பகுதியை வீட்டிற்குக் கொடுப்பது கிடையாது. பாவம், பார்வதியின் அம்மா பிழியப் பிழிய அழுகிறாள். 'எதையும் பொறுத்துக் கொள்வேன், குழந்தைகள் பசியால் வாடுவதை எப்படிப் பார்த்துக் கொண்டிருப்பேன்?' என்று வருந்தினாள்"

மஹிபாலின் மனம் உடலைச் சடமாக்கி விட்ட பிறகு தனக்குள் லயித்து விட்டது.

கல்யாணி நடுக்கத்துடன் கூறினாள்: 'பண்டித்ஜிக்கு எத்தனையோ பேரைத் தெரியுமே. என் இரண்டு பையன்களை எங்காவது வேலைக்கு விட்டால் இரண்டு வேளை சாப்பாடாவது கிடைக்குமே, அம்மா!' என்று என்னிடம் முறையிட்டாள்."

கண்களிலிருந்து கங்கையும், யமுனையும் பெருகின. ஒரு கணம் கல்யாணியின் குரல் கண்ணீரின் பாதாளத்தில் மூழ்கிவிட்டது. மஹிபால் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தான். உணர்ச்சியை ஒருவாறு அடக்கிக் கொண்டு, சேலைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு கல்யாணி கூறலானாள்: "என் நெஞ்சு வெடித்து விடும்போல் ஆகிவிட்டது. யார்தான் தன் குழந்தைகளை வேலைக்கு அனுப்ப மனம் கொள்வார்கள்!"

அவள் மறுபடியும் அழ ஆரம்பித்து விட்டாள். பெருமூச்சுடன் மஹிபால் கூறினான்: "இந்தப் பாழும் வயிறு இருக்கிறதே! அதனால்தான் தாயும் கல்லாக நேரிடுகிறது .. அந்தத் தீப் நாராயணை நையப் புடைத்தால் என்ன என்று தோன்றுகிறது. எலும்புகளை நொறுக்கி விட்டால்..."

உலகத்தின்மீது கொண்ட இரக்கத்தைக் கிழித்துக்கொண்டு இல்லாளின் கட்டளை நிரம்பிய குரல் அம்பைப் போல் வெளி வந்தது. ''போதும் நிறுத்துங்கள்—உங்களுக்கேன் வம்பு! நம்மால் நல்லதைச் செய்வோம். ஏன் வலுவில் சென்று பகையை விலைக்கு வாங்க வேண்டும்?'' என்று கூறியபடி கல்யாணி எழுந்திருந்து உள்ளே சென்று விட்டாள்.

மஹிபால் சிந்திக்கலானான்: ''நான் தீப்நாராயணைப் போல் கடையனில்லையா! என் மனைவியைத் துன்புறுத்துகிறேன்; ஏமாற்று கிறேன். வீண் செலவு செய்ய மாட்டேன், அது உண்மைதான். ஆயினும் என் குழந்தைகளுக்கு வேண்டிய உணவும், உடையும் அளிக்கிறேனா? அடே நாளைக்குக் கிறிஸ்துமஸ் ஈவ், சீலாவின் வீட்டிற்குப் போக வேண்டுமே. அவளுக்கு ஏதாவது 'ப்ரெசன்ட்' கொடுக்கப் போக வேண்டுமே. வீட்டில் ஐந்து ரூபாய்தான் இருக் கிறது. முதல் தேதி வந்து விடுகிறதே என்று மகிழவும் வழி கிடை யாது. 'லோசத்தா' அலுவலகத்திலிருந்து பத்துத்தேதிக்குத் தான் பணம் வரும். இத்தனை நாட்கள் எப்படிக் கழியும்?'' ..

கல்யாணி ஒரு லோட்டா தண்ணீருடன் வந்தாள். பாத்திரத் தைப் பிடித்துக் கொண்டு கணவனைக் கை கால்களைக் கழுவிக் கொள்ளச் செய்தாள். அருகில் இருந்ததால் கணவனின் வாயி லிருந்து லேசாக வாடை அடித்தது. கல்யாணி முகத்தைச் சுளித் துக் கொண்டாள். மனைவியின் சேலைத் தலைப்பில் கையைத் துடைத்துக்கொண்ட மஹிபாலுக்கு அவள் முகம் சுளித்தது தெரிந்துவிட்டது. களவு கண்டுபிடிக்கப்பட்ட ஆத்திரம்; வெட்கம் வேறு; தானாகவே, கூறி விட்டான். ''மேடம், இன்று கொஞ்சம் குடித்துவிட்டேன். சஜ்ஜனுடைய வீட்டில்தான். அவன் வற் புறுத்தினான்.''

கை கழுவும் பாத்திரத்தை மூலையில் வைத்துவிட்டு இடது கையில் தண்ணீரை விட்டுக் கொண்டே மனைவி கூறினாள்: ''அவர் பெரிய மனிதர்; குடிப்பார். நீங்கள் குடிக்க வேண்டுமா?''

''நான் தினமுமா குடிக்கிறேன்..? நாளைக்கும் நாளை மறுநாளும் குடிப்பேன்; கிறிஸ்துமஸ் வருவதற்கு முன்புவரை... தவறாக நினைக்காதே!''

மேஜையிலிருந்து வெற்றிலைப் பெட்டியை எடுத்துக் கொடுத்த படியே கல்யாணி கூறினாள்: ''கோபித்துக் கொள்ளாமலிருந்தால் ஒன்று சொல்வேன்.''

''சொல்''

''போகட்டும், சொல்ல மாட்டேன். இரண்டு தினங்களுக்குப் பிறகு இன்றுதான் நம் கிரஹ நட்சத்திரங்கள் சரியாக அமைந் திருக்கின்றன.'' சிரித்தபடியே இரண்டு வெற்றிலையை வாயில்

போட்டுக் கொண்டு பெட்டியை மூடினாள். மஹிபால் புகையிலை டப்பியை அவளிடம் நீட்டியபடி கூறினான்: ''தயங்காதே, மகாராணி, சொல். நான்தான் அபயதானம் அளித்து விட்டேனே.''

''சகுந்தலாவின் கழுத்தில் மாங்கலியம் ஏற வேண்டுமே என்ற கவலைதான். நல்லது ஒருவருடைய பார்வையிலும் படாது, கெட்டது எங்கிருந்தாலும் மோப்பம் பிடித்துக் கண்டுபிடித்து விடுகின்றனர்!'' எதிரே போடப்பட்டிருந்த நாற்காலியில் கால் மேல் கால் போட்டு உட்கார்ந்தபடி கல்யாணி கூறினாள்.

தலையணை மீது சாய்ந்து கொண்டு மஹிபால் மிடுக்குடன் கூறினான்: ''நான் அப்படித்தான் குடிப்பேன், என்னை யார் கேட்பவர்கள்!''

கல்யாணி சிரித்தாள். ''நம்மிடமும் லட்ச ரூபாய் இருந்தால் நம்மை யாரும் ஒன்றும் சொல்ல மாட்டார்கள். கட்டு பெரிய மனிதராகிவிட்டார், அவர் என்ன செய்தாலும் நல்லவர். முல்லரின் அம்மா எல்லோர் எதிரிலும் உங்களைப்பற்றிப் பேசினாள். பெரிய மனிதர் தான்; ஆனால் இந்தக் குடிப்பழக்கம் ஒன்று தான் அவரை அழிக்கிறது. தன்னுடைய அக்காளின் மகளைத் திருமணம் செய்துக்கொடுக்க இவர்களிடம் என்ன இருக்கிறது, என்று அவள் கேட்டாள்.''

முல்லரின் தாய், மற்றும் சமுதாயம் முழுவதன் பேரிலும் மஹிபாலுக்கு வெறுப்புத்தட்டியது. கட்டு (அவனுடைய தம்பி லக்னோவில் புகழ் பெற்ற தனவந்தர் டாக்டர் ஜய்பால் சுக்லா)வின் வெற்றிகரமான வாழ்க்கையுடன் ஒப்பிட்டதால் தன்னுடைய தோல்வியுற்ற வாழ்க்கை நாகம் போல் அவனைத் தீண்டியது. பொருளாதார நெருக்கடி என்னும் சிங்கத்தின் அடி தாங்காமல் அவனுடைய இலக்கியப் புகழின் தோலே கழன்றுவிட்டது. அவன் துடியாய்த் துடித்தான், ஆயினும் தைரியமிழக்காமல் நிமிர்ந்து உட்கார்ந்தான். கர்ஜனை செய்யும் குரலில் பேசினான்: ''பத்து ஆண்டுகள் கழியட்டும். யார் பெரிய மனிதன் என்று மதிக்கப் படுகிறான் என்பதை நானும் பார்த்துவிடுகிறேன். கட்டுவா, நானா என்பது தெரியும். காசுக்காக மதிக்கும் உலகம் நிரந்தரமானதல்ல. இப்போது சமுதாயத்தின் தலைவர்களே கொள்ளை அடிப்பவர்கள், நாணயமற்றவர்கள், அவர்களது கையில் தான் ஆட்சியே இருக்கிறது. அவர்கள் இட்டதுதான் சட்டமாக இருக்கிறது. தன் செல்லாத காசைச் செல்லும்படி செய்து கொண்டு, சுயநலக்காரர்கள் அவர்களுக்குத் தாளம் போட்டு கொண்டு அலைகின்றனர். இவர்களது அட்டகாசத்தால் பசித்து வாடும் மக்கள் ஆவேசத்துடன் பொங்கிக் கொண்டிருப்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள்.

அந்தச் சிறு கூட்டத்தை இந்த ஆவேசக்காரர்கள் சுட்டுப் பொசுக்கி விடுவார்கள். அப்போது என் பெண்களுக்கு அறிவுதான் வரதட்சணையாகும். அதற்குத்தான் மதிப்பு வரும்... ..திருடர்கள்! என் வறுமையைப் பரிகசிக்கவா செய்கிறார்கள்!''

ஆவேசத்துடன் கர்ஜித்தபடி மஹிபால் எழுந்து அறையில் உலாவ ஆரம்பித்தான்.

கல்யாணி அவனுடைய பேச்சைப் புரிந்து கொள்ளவில்லை. ஆயினும், அவனுடைய ஆவேசத்தைக் கண்டு நடுங்கிப் போனாள். இல்லாமையால் போராடிக் கொண்டிருக்கும் அவளுக்குப் பணக்காரர் பேரில் வெறுப்புத்தான் உண்டாயிற்று. நேர்மையாகவும், நாணயமாகவும் வாழ்பவர் அவதியுறுவதையும் நாணயமற்ற போக்கிரிகள் செல்வத்தால் செழிப்பதையும் அவள் தினந்தோறும் பார்த்துக்கொண்டு தானே இருக்கிறாள்!

ஆனால் இது எப்படி மாறும்? உலகில் எப்போதும் இப்படித்தான் நடந்து வருகிறது. இறைவனின் திருவுள்ளமே இதுதான் போலும்!

பிறகு அவளுக்குத் தன் கணவன்பேரில் இரக்கம் உண்டாயிற்று. ''பாவம், வருந்துகிறார். இவ்வளவு உழைத்தும் இவருக்குச் சுகம் என்பது கிடையாது! அறிவைப் பயன்படுத்தி உழைக்கிறார். ஒரு ஸ்பூன் நெய் சாப்பிட வழி இல்லை!...''

பயங்கரமான மனநிலையில் ஒரு நிமிடம், பிரம்மாவின் ஒரு கல்பத்திற்குச் சமமாகி விடுகிறது. இதிலும் இரண்டு மடங்கு நேரம் வரை அறையில் மௌனம் நிலவியது. கம்பீரமான மௌனத்தின் ஓர் அம்சமாக மஹிபால் நடக்கும் ஓசை மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது.

திடீரென்று கல்யாணியின் எதிரே நின்று மஹிபால் கூறினான்: ''நான் முடிவு செய்துவிட்டேன்—சிவசரண் துபேயின் மகன் இருக்கிறானே, அவனை வரனாக நிச்சயம் செய்துவிடப் போகிறேன். அவருடைய எண்ணங்களும் செயல்களும் நல்லவை. அவருடைய மகனும் சீலமானவன். இஞ்சினியரிங் தேறியிருக்கிறான். என்ன?''

மஹிபாலின் பேச்சு வேகத்தால் திடுக்கிட்ட போதிலும்கல்யாணி பதிலுரைத்தாள்—''சிவசரண் வீட்டிலா,' 'தாகர்'* குலத்தைச் சேர்ந்தவர்களுடன் நாம் சம்பந்தம் வைத்துகொள்ளக் கூடாது.''

மஹிபால் துடித்துப் போனான்: ''சரி போய் லக்னோவிலுள்ள வாஜ்பேயின் மகனைத் தேடிக்கொண்டுவா. சத்யவானாக இருக்க வேண்டும். வரதட்சிணையும் கேட்கக்கூடாது.''

---

* கான்ய குப்ஜ அந்தணரின் குலத்தில் பல பிரிவுகள் உண்டு. முக்கியமான பிரிவுகள் மூன்று—ஷட்குலம், மத்யமம், தாகர், ஷட்குலத்தவர் மிகச் சிறந்தவரெனக் கருதப்படுவர். 'தாகர்' குலத்தவர் மிகவும் தாழ்ந்தவரென மதிக்கப்படுவர். சிறந்த குலத்தை முன்னோராகக் கொண்ட மஹிபால் ஷட் குலத்தைச் சேர்ந்தவன். அவனுடைய சகோதரியின் கணவருடைய குலமும் சிறந்தது.

''சிவசரண் வரதட்சிணை கேட்கமாட்டாரா என்ன?''

''மாட்டார்; அவர் பெருந்தன்மை உள்ளவர். எனக்கு அவருடைய எண்ணங்களையும் செயல்களையும்பற்றி நன்கு தெரியும்?''

நீண்ட மூச்செறிந்தபடி கல்யாணி கூறினாள்: ''உலகம் என்ன சொல்லும் சகுந்தலாவின் தந்தை உயிருடனிருந்தால் இந்த மாதிரி குலத்தவரிடம் சம்பந்தம் வைத்துக்கொண்டிருப்பாரா என்று தானே சொல்லும்?''

''சரி; அப்படியானால் இருபதாயிரம் ரூபாயை எடு. இப்படி, இவர்கள் பெண்டு பிள்ளைகளுக்குத் திருமணமா செய்கிறார்கள். லக்ஷ்மிக்கும், அகந்தைக்கும் முடிச்சு போடுகிறார்கள். நீசர்கள். இன்ஹ்யூமன். (மனிதத் தன்மையற்றவர்கள்!)பெரிய எழுத்தாளர், சிந்தனையாளர், கல்லூரியின் பிரின்சிபாலாக இருக்கிறாரே திவாரி, அவரிடம் போய் மகனின் சாதகத்தைக் கேட்டுப்பார். ரொக்கமாக இருபத்தைந்தாயிரம் கேட்பார்...இவர்களெல்லோரும் படித்தவர்களா? நாகரிகமுள்ளவர்களா? சீ!''

மஹிபாலின் கால்களில் மறுபடியும் வேகம் வந்து விட்டது. சிறிய இடத்திலும் இயன்ற வரை அவன் வேகமாக உலாவினான். பிறகு திடீரென்று கல்யாணியின் அருகே சென்று அவளது தோளை அழுத்தியபடி கோபத்துடன் கூறினான்: ''காது கொடுத்துக் கேட்டுக் கொள். சிவசரண் துபேயின் மகனுக்குத் தான் சகுந்தலாவை மணம் செய்து கொடுக்கப் போகிறேன். சாதகத்தைப் பார்க்கப் போவதில்லை. இன்னும் ஏதாவது மீனமேஷம் பார்த்தாயோ, அவ்வளவுதான் வேறு சாதிப் பையனுடன் அவளுடைய திருமணத்தை முடித்து விடுவேன். நான் சாதி மதத்தைப் பார்ப்பது கிடையாது. எனக்கு இந்த எண்ணத்தின் மீதே வெறுப்பு—மிகுந்த வெறுப்பு, கேட்டுக்கொண்டாயா?–என்ன கேட்டதா, இல்லையா?''

கல்யாணி பதில் கூறவே நடுங்கினாள். அவளுடைய முகத்தில் மாறுதல் தெரிந்தது. கணவன் வற்புறுத்திக் கேட்கவே அவள் உடனே தன் கருத்தைத் தெரிவித்தாள்: ''உங்கள் குழந்தைகளை யாருக்கு வேண்டுமானாலும் திருமணம் செய்து கொடுங்கள். ஆனால் சகுந்தலா அயல் வீட்டுச் சொத்து. அவளுடைய அப்பா உயிருடன் இருந்தால் அவருடைய கருத்துப்படி எங்கே வேண்டுமானாலும்—''

''மறுபடியும் நீ உயர்வு, தாழ்வு என்று பேச வந்து விட்டாயே! இங்கே யாரும் உயர்ந்தவரில்லை, எவரும் தாழ்ந்தவரில்லை.''

''திருமணம் ஆகாவிட்டால் போகிறது. நான் விஷத்தைத் தின்று உயிரை விட்டு விடுகிறேன். பிறகு சகுந்தலாவை யாருக்கோ திருமணம் செய்து கொடுங்கள்?''

''ஆனால் பணத்திற்கு எங்கே போவேன்?''

''நீங்கள் ஒருத்தர்தான் ஷட்குலத்திலேயே ஏழையா என்ன? எத்தனையோ பேர் 'இல்லை—இல்லை' என்று மூக்கால் அழுகிறார்கள். அதற்காக உலகத்தில் நடக்க வேண்டிய வேலைகள் நின்று விடவில்லையே! ஏழையாக இருந்தால் இருக்கிறோம்—''

''இதோ பார், மூக்கால் அழுகிறார்களே, அவர்கள் தான் உலகில் நிறையப்பேர் இருக்கிறார்கள். மக்கள் திருமணத்தை எப்படி நடத்துகிறார்கள் என்று உனக்குத் தெரியுமா? கடன் வாங்கித் தங்களைக் கவலை, அவமதிப்பு, கண்ணீர் இவற்றில் மூழ்கடித்து! ஆயிரங்கவலைகள் இருக்கையில் வட்டிக்குக் கடன் வாங்கிக் கடன்காரனின் கொடுமைகளைச் சகித்துக்கொள்ள என்னிடம் தெம்பு கிடையாது. அதை நான் ஒருபோதும் செய்ய மாட்டேன்!''

கல்யாணி கணவனின் மனவேதனையை உணர்ந்து தானும் வேதனையுற்றாள். கூடவே அவனுடைய நாஸ்திக மனப்பான்மையைக் கண்டு வருந்தினாள். கணவன் அவளைத் தூக்கி எறிந்து பேசுவதோ, அவளிடம் கோபம் கொள்வதோ அவளுக்குப் புதிதல்ல. உலகில் எங்கே பார்த்தாலும் இதேதான் நடக்கிறது. கணவன் தான் மனைவியின் பேரில் அரசு செலுத்துகிறான். சமுதாயத்தின் விபரீதமான சூழ்நிலையிலும் பணக்காரர் ஏழை, நடுத்தரக் குடும்பத்தார் எங்குமே இது இயற்கை. மஹிபால் நடத்தையில் சீர்மை குலைந்தவன் என்பதும் கல்யாணிக்குத் தெரியும். மிகவும் தார்மிகமாக வாழும் குடும்பத்தில் ஆடவர் மது அருந்துவதையும், கெட்ட நடத்தையுடன் இருப்பதையும், அவள் கண்டிருக்கிறாள்; கேட்டுமிருக்கிறாள். ஆனால் மஹிபால் பேசும் பேச்சைத்தான் அவளால் ஒரு போதும் பொறுத்துக்கொள்ள முடிவதில்லை. திருமணமான இந்த இருபத்துநான்கு ஆண்டுகளிலும் அவனுடைய வாழ்க்கைக் கோட்பாடுகளை அவளால் ஒரு சிறிதும் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவளுடைய உள்ளத்தில் பல ஆண்டுகளாக ஒரு சந்தேகம் இருந்து வந்தது: ''இந்த நாஸ்திக எண்ணத்தைக் கொண்ட இவரா உலகில் இவ்வளவு கௌரவத்தைப் பெறுகிறார்? இம்மாதிரி விஷயங்களை எழுதுவதால்தானா இவர் பெரிய எழுத்தாளராக மதிக்கப்படுகிறார்? இத்தனை ஆண்டுகளாக இம்மாதிரியான கருத்துக்களையா, இவர் எழுதி, பேசி வெளியிட்ட வருகிறார்? இவற்றிற்காகவா உலகம் இவ்வளவு மதிப்பை இவருக்கு அளிக்கிறது? அப்படி இருந்தும் உலகம் தன் புராதனமான கருத்தை விட்டு விலகவேயில்லையே! இவருடைய வார்த்தைகளைக் கலியுகத்துக் கொள்கையாளர் மதிக்கலாம். ஆனால் அவற்றில் ஒருவித உண்மையும் கிடையாது. உலகில் குலம், ஒழுக்கம், சம்பிரதாயம், மதம், பழக்க வழக்கங்கள் என்று கடவுள் படைத்த இவை

யாவும் மறைந்துவிடுமா என்ன? உலகம் இதுவரை இயங்கி வந்தாற்போல் இன்னமும் இயங்கத்தான் போகிறது. எல்லோருமே கடன் வாங்கி, ஆயிரம் உபாயங்கள் செய்து தம் பெண்டு பிள்ளைகளுக்குத் திருமணம் செய்கின்றனர். இவர் ஒருவர்தான் அதிசயமாக செய்யப் போகிறாரா என்ன?''

கல்யாணி காலில் கையை ஊன்றிக் கொண்டு கூறினாள்: "கடன் வாங்குங்கள், இல்லாவிட்டால் வேறு எந்த உபாயமாயினும் செய்யுங்கள். ஆனால் சகுந்தலாவுக்கு ஷட்குலத்தில் தான் திருமணம் நடக்கும். உங்கள் பெண்டு, பிள்ளைகளைக் குப்பைக்காரருக்கோ, செருப்புத்தைப்பவர் குலத்திலோ கொடுங்கள். நான் வாய் திறக்க மாட்டேன். கங்கைக் கரையில் போய் உட்கார்ந்து விடுகிறேன். ஆனால் அயலாரின் சொத்து சகுந்தலா. நல்ல முறைப்படி அவளை மணம் செய்து கொடுத்தாக வேண்டும். கேட்டால் கேளுங்கள்; இல்லாவிட்டால் போங்கள்'' கல்யாணி படபடவென்று பேசி விட்டுச் செல்ல ஆயத்தமானாள்.

சகுந்தலாவின் திருமணம், வரதட்சிணை, மனைவியின் சீற்றம், மனக்கசப்பு எல்லாவற்றையும்பற்றி மஹிபால் சிந்தனையில் ஆழ்ந்து விட்டான்: "இந்தப் பெண்தான் ஒரு விசித்திரமான பிறவி. தொன்றுதொட்டுப் பெண்தான் மனிதனின் தீராத பிரச்னையாக இருக்கிறாள். தற்போதைய சமுதாயத்தில் பெண்ணின் நிலை விசித்திரமாகத்தானிருக்கிறது. இந்த விசித்திரம் நம் நாட்டில் இன்றும் தெளிவாகத் தெரிகிறது. ஏதாவது ஒரு விதத்தில் பெண் மக்களின் அவமதிப்புக்குள்ளாகித்தானிருக்கிறாள். சிறியவரென்ன, பெரிய மனிதரென்ன, அறிஞர்களின் வீடுகளிலும் பெண்டிர் அடிமைகளாக நசுக்கப்படுகின்றனர்.''

பொதுவாக வீட்டு வேலைகளைச் செய்துகொண்டு ஆடவரின் போகப் பொருளாக இருப்பதற்குத்தான் பெண் பிறந்திருக்கிறாள் என்று எல்லோரும் கருதுகின்றனர். அவள் குழந்தைகளைப் பிறப்பிக்கும் இயந்திரங்கூட. மனித வாழ்க்கையை இயங்கச் செய்யக் குழந்தைகள் தேவையாயிற்றே! ஆதலால் அவற்றை உற்பத்தி செய்யும் 'ஆலை'க்கு மகத்துவம் உண்டுதான். இவ்வளவு அலட்சியத்திற்கும், அவமதிப்பிற்கும் ஆளானபோதிலும் ஆடவருக்குப் பெண்ணைப்போல் மதிப்புக்குரியவர் வேறொருவரும் இல்லை. பெண் சமுதாயத்தின் மதிப்புக்குரியவள் என்று இன்றும் உலகம் கருதுகிறது. பெண் இல்லையென்றால் அவன் முற்றுப்பெறாதவன் என்பதை ஆடவர் உலகம் நன்கு அறிந்துகொண்டிருக்கிறது!

எதிர்மாறான இந்த நிலை நம் சமுதாயத்தில் அஸ்திவாரக்கல் போல் ஆரம்பத்திலேயே கோணலாக நடப்பட்டிருக்கிறது. இந்தத் தவறான அஸ்திவாரத்தின்மீதுதான் மனிதரின் இல்லம்

அமைந்திருக்கிறது. பழக்கவழக்கங்கள் தோன்றியுள்ளன. மதம், பண்பாடு என்று உலக நடவடிக்கைகள் யாவும் தோன்றியுள்ளன. பின் ஏன் கோணலாக எல்லாம் இருக்காது ?

கல்யாணி எழுந்தாள். மஹிபாலின் சிந்தனைக்குத் தடை வந்தது. அவன் ''ஏன் போகிறாய் ?'' என்றான். இந்த எளிய கேள்வியைச் செவியுற்றதும், மனக்கசப்பையும் மறந்து கல்யாணி அன்புடன் சிரித்தாள். அவளால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. அவள், ''ஆமாம், போகிறேன்; உங்களுக்கு ஒரு கணத்தில் கோபம் வந்து விட்டது. கத்த ஆரம்பித்துவிட்டீர்கள், தூங்கும் பேட்டையே எழுந்துவிடும்போல் ஆகிவிட்டது!'' என்றாள்.

மஹிபாலுக்குச் சிரிப்பு வந்தது. கல்யாணி சற்று ரோசத்தோடு, ''உங்களுக்கென்ன கூப்பாடு போட்டுவிட்டுப் போய்விடுவீர்கள். என்னைத்தானே அண்டை, அயலார் பார்த்துச் சிரிப்பார்கள். பதினைந்து நாட்களுக்கு ஒரு தடவை எந்தப் பிசாசு வந்து அவரைப் பிடித்துக் கொள்கிறதோ என்று கேட்பார்கள்.''

மஹிபால் சிரித்துக்கொண்டு கேட்டான்: ''உன் தோழிகள் என்னையும் கேலி செய்வார்களா ?''

கல்யாணி கலகலவென்று சிரித்தாள். சேலைத்தலைப்பால் வாயை மூடிக்கொண்டாள். பிறகு கூறினாள் : ''என் தோழிகள் என்ன, உங்கள் குழந்தைகள்கூடத்தான் சிரிக்கிறார்கள்; 'அம்மா, நீ பேசாமல் இரு...இல்லாவிட்டால் அப்பா ஆட்டம் பாம் போட ஆரம்பித்துவிடுவார்' என்று என்னிடம் சொல்கிறார்கள்.''

மஹிபாலும் உரக்கச் சிரித்தான். பிறகு, ''உண்மையில் உன்னை நான் மிகவும் துன்புறுத்துகிறேன். ஆனால், கல்யாணி, உன்னைத் துன்புறுத்துவதில் என்னை, நானே துன்புறுத்திக் கொள்கிறேன் என்பது கடவுளுக்குத் தெரியும். நீயின்றி எனக்கு ஏதும் ஓடவில்லை. கல்யாணி இல்லாவிட்டால் மஹிபால் மஹிபாலில்லை'' என்றான்.

கல்யாணி அமைதியாக நின்றாள். மாடியிலிருந்து குழந்தை அழும் குரல் கேட்டது. பாத்திரங்களை உடனே எடுத்துக்கொண்டு கல்யாணி, ''வேலை ஒன்றும் இல்லை என்றால் நீங்களும் மாடிக்கு வாருங்கள். மணி மூன்று இருக்கும்'' என்றாள்.

மஹிபால் கூறினான் : '' எனக்குத் தூக்கம் வரவில்லை, நீயோ...''

## 11

அதிகாலை நேரம் கிறிஸ்துமஸ் பண்டிகை நாள். சஜ்ஜன் கர்னலுடன் பண்டித விசுவநாத சாஸ்திரியின் வீட்டிற்குச் சென்றிருந்தான். இருவரும் அங்கிருந்து திரும்பி வந்துகொண்டி

ருந்தனர். காலே ஒன்பது மணி வெயில் பொன் நிறமாகக் காய்ந்து கொண்டிருந்தது. ஆனுல் தெருவில் சகதி இன்னும் அப்படியே இருந்தது.

கர்னல் கூறினுன் : "இன்று ரொம்பவும் அதிகக் குளிர். அக்கம் பக்கத்தில் பனிக்கட்டியே விழுகிறதோ என்று தோன்றுகிறது."

வானிலே பற்றிய பேச்சில் சஜ்ஜனின் கவனம் ஈர்க்கப்படவில்லே. உடனே கர்னல் 'இன்டெலக்சுவல்' பேச்சை ஆரம்பித்தான்.

"நீ என்னதான் சொல், சோதிடம் மிகவும் உண்மையான சாஸ்திரம். ஆனுல் சரியாகச் சொல்பவர்கள் வேண்டும். நாம் இப்போதெல்லாம் சாஸ்திரிஜியின் பக்தர்களாகிவிட்டோம்."

"இதில் என்ன சந்தேகம். மனிதர் பெருந்தன்மை உள்ளவர். நல்ல அறிவாளிகூட"—சஜ்ஜன் கூறினுன். "மஹரிஷி வியாசரின் பாவம், புண்ணியம் பற்றிய விளக்கத்தைக்கேட்டு என் மனக் குழப்பமெல்லாம் தீர்ந்துவிட்டது. பரோபகாரம், புண்ணியமாம்; பிறரைத் துன்புறுத்துதல் பாவமாம். எவ்வளவு எளிய வார்த்தை பார் ! இது எவ்வளவு உண்மையான சீரிய நோக்கு!"

"கடையில் களவு போனது, லப்புவுடன் என் தொடர்பு, மனேவியின் உருவம்—எல்லாவற்றையும் கூறிவிட்டாரே! இப்போது சோதிடத்தை எப்படி நம்பாமல் இருப்பது?" கர்னல் தன் போக்குப்படி சாஸ்திரிஜியின் மகிமையை எடுத்துரைத்துக் கொண்டிருந்தான்.

சிரித்துக்கொண்டே சஜ்ஜன் மெதுவாகக் கூறினுன் : "என்னேப் பற்றி விசித்திரமான சோதிடம் கூறி இருக்கிருர்."

தன் தோளால் சஜ்ஜனுடைய தோளேத் தட்டிவிட்டுக் கர்னல் சிரித்தான்: "உனக்குக் கெட்ட பெயர் மட்டுமா வரும்! படுகுழியில் தான் விழப்போகிருய். நீ மட்டுமா, மஹிபாலுந்தான்!"

"எனக்குக் கெட்ட பெயர் வந்தால் நீங்கள் மகிழ்ச்சி அடை வீர்கள்போல் இருக்கிறது. அப்போது நீங்கள் எப்படி எனக்கு ஆருயிர் நண்பர்கள் ஆவீர்கள்?"

"நண்பன் என்ருல் கெட்ட செயலிலும் கை கொடுத்து உதவ வேண்டுமா ?" கர்னல் கேட்டான்.

"ஆனுல் கெட்ட செயல் காரணமாக நான் கெட்ட பெயரை அடைவேன். என்று அவர் வெளிப்படையாகக் கூறவில்லே!"

"கெட்ட பெயருக்குப் பிறகு நீ நல்ல புகழை அடைவாய் என்றும் சொன்னுரே !"

ஒரு பெருமூச்சுடன் சட்டைப் பையிலிருந்து சிகரெட் கேஸை எடுத்தபடி சஜ்ஜன் கூறினுன்: "கவிஞர் நரேந்திரர் கூறினுரே—'நீ திறக்காவிட்டால் உன் ரகசியம் மொட்டுப்போல் மூடி இருக்கும்!' என்ருரே."

சிகரெட் கேஸைக் கர்னலிடம் நீட்டியபடி சஜ்ஜன் சிகரெட்டை வாயில் வைத்துக்கொண்டு கூறினான்: "அதனால்தான் ஜாதகத்தை நான் யாரிடமும் காட்டவிரும்புவதில்லை. எதிர்காலத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளாமலிருப்பது நல்லது. நாளையக் கவலையில் இன்றைய மகிழ்ச்சி மண்ணோடு கலந்துவிடுகிறது."

இருவரும் சிகரெட்டைப் பற்ற வைக்க ஓரிடத்தில் நின்றனர். சிகரெட் லைட்டரைப் பையில் போட்டுக்கொண்டு சஜ்ஜன் கர்னலுடன் நடந்தான். ஒரு வேலையாள் வந்து, "சாமி, டாக்டர் ஐயாவின் கடை இந்தத் தெருவில்தான் இருக்குதுங்களா?" என்று கேட்டான்.

"எந்த டாக்டர்?" கர்னல் கேட்டான்.

"தயிர் விற்கிறவருங்க!"

சஜ்ஜனும், கர்னலும் வியந்தனர்; இந்தச் சாதாரணமான ஆளுக்கு இவ்வளவு திமிரா என்றுகூடக் கர்னல் நினைத்தான். "மடையன், கேலி செய்கிறான்" என்றான்.

"இல்லே, சாமி" தன் இரு காதுகளையும் பிடித்துவிட்டுக் கரங் கூப்பியபடி ஆள் கூறினான்: "என் எசமானருதானுங்க அப்படிச் சொல்லி அனுப்பினாரு."

"உன் எசமான் பெரிய முட்டாள். டாக்டரின் கடையில் தயிர் விற்குமா?" என்று கூறி மேலே கர்னல் நடந்தான்.

ஒரு லாலாஜி இதைக் கேட்டு, "டாக்டர் அல்வாக்காரரைக் கேட்கிறாயா? இதோ பார். இடது பக்கம் கடை இருக்கிறது" என்றார்.

வேலையாள் ஒன்றும் புரியாமல் விழித்தான். உடனே லாலாஜி, "ரேஷன் கடைக்குப் பக்கத்தில் பார்!" என்றார்.

கர்னலும், சஜ்ஜனும் முன்னே சென்றார்கள். கர்னல் கூறினான்: "சரியான வேடிக்கைதான்! அல்வாக் கடைக்காரனுக்கு டாக்டர் என்று பெயரா!"

சஜ்ஜன் கூறினான்: "மருந்து விற்பவன் கர்னலாகும்போது?"

"நீ சொல்வாய் என்று எனக்குத் தெரியும்." சங்கோசத்துடன் சிரித்தபடியே கர்னல் கூறினான்.

டாக்டர் என்ற பெயருடைய அல்வாக் கடைக்காரனைப் பார்க்க விரும்பிய சஜ்ஜன் விஷமத்தனமாகத் தெருவின் இரு பக்கங்களையும் பார்த்தான். நாய்கள், மாடுகள், சிறு கூட்டம் இவை நிறைந்த தெருவில்கூட சைக்கிள் விடுவதில் தம் திறனைக்காட்டும் மனிதர்கள் பலவிதமாகப் பேசிக்கொண்டு சென்றனர். சாஸ்திரிஜி வீட்டுத் தெருவைவிட இங்கு வெயில் சற்று அதிகமாக வீசிற்று. மாவு இயந்திரத்தினால் மாவு படிந்த வேலையாட்களின் நிறத்தைப் பார்த்துச் சஜ்ஜனுக்குச் சிரிப்பு வந்தது. வலது பக்கம் குறுகிய

தெரு மூன்று இருந்தது. பிறகு தையற்காரனின் கடை. கடகட வென்று தையல் இயந்திரம் ஓடும் ஓசை. மருதாணியைத் தடவித் தாடியை சிவக்கச் செய்துகொண்டு கலீஃபாக்கள் ஊசியால் தைத்துக்கொண்டிருந்தனர். அவர்களுக்கு எதிரே மண்ணுல் செய்த உக்கா இருந்தது. கூட இருந்த ஆட்கள் துணியைக் கத்தரித்துத் தைத்துக் கொண்டிருந்தனர். தையற்கடைக்குப் பிறகு ஒரு வீடு. பிறகு காய்கறிக்கடை, வளையற்கடை, வைத்தியசாலை, பிறகு வீடு என்றிருந்தன. இடது பக்கம் மாவுமில், அடுத்துப் பலசரக்கு மளிகைக்கடை இருந்தது. "தாமோதர்! ஒரு ஆழாக்குக்கடலை மாவு! இரண்டணுவுக்குத் திராட்சை, நான் சொன்ன சாமான் எடு! படிக்காரம், உள்ளேயிருந்து கொண்டு வா..." இப்படிக் கத்திக்கொண்டு ராஜவைத்தியப் பதவியிலிருக்கும் தலைப்பாகை வைத்தியர், நோயாளியின்றியே கடையில் அமர்ந்திருந்தார்! பிறகு கறிகாய்க்கடையில் தாடி மீசையுடன் சேலை அணிந்து கொண்டு அலி உட்கார்ந்திருந்தான். அதற்கடுத்து அல்வாக்காரச் சிரோமணி டாக்டரின் கடை இருந்தது. கடை பெரியதுதான. திண்டில் கணபதியைவிடச் சற்றுப் பருமனுக, நீக்ரோவைவிடச் சற்றுக் கரிய நிறத்துடன், பனிக்குல்லாவினுல் முகத்தை மூடிக் கொண்டு டாக்டர் சாஹேப் அல்வாவை நிறுத்திக் கொண்டிருந் தார்! அவரைப் பார்த்துச் சஜ்ஜன் மிக்க மகிழ்ச்சி அடைந்தான். கர்னலிடம் கூறினுன்: "இவனிடம் ஏதாவது வாங்கலாமா? ஆசாமியைப் பார், ஜப்பான் பீரங்கி போலல்லவோ இருக்கிறுன்!"

கடையில் பித்தளைக் கம்பிகள் போட்டுத் தின்பண்டங்களைத் தட்டுகளில் அடுக்கி வைத்திருந்தார். டாக்டர் சாஹேப்! சிவன், அனுமான், காந்தி, நேரு, நேதாஜி, சிவாஜி, ராணுபிரதாப் முதலியவர்களின் படங்களை மாட்டி இருந்தார். சிவபிரானுக்கு மட்டும் மலர் மாலை போடப்பட்டிருந்தது. வெளியே பித்தளைச் சங்கிலியில் மணிகள் தொங்கிக்கொண்டிருந்தன. அப்போது கடையில் சாதாரணமான கூட்டம் இருந்தது. கர்னல், "ஜிலேபி கொடு!" என்றுன்.

பனிக்குல்லாவின் துவாரத்திலிருந்து உருண்டையான மூக்கும், புளியங்கொட்டை போன்ற கண்களும், வெள்ளிப் பிரேம் போட்ட கண்ணுடியும், வெற்றிலையைக் கடைவாய்ப்பக்கம் ஒழுக விட்டுக் கொண்டிருக்கும் உதடுகளும் தெரிந்தன. வாங்க வந்தவர்கள் ஐந்தாறு பேர்தாம். ஆனுல் ஒரே அமர்க்களம். ஒன்பது தினங் களுக்கு ஒரு மைல் தொலைவுவீதம் டாக்டர் சாஹேபின் வேகம் இருந்தது. ஆனுல் நாக்கோ தபால் வண்டி போல் இருந்தது. சஜ்ஜன் ஜிலேபி, உருளைக் கிழங்கு போண்டோ, வறுத்த பீன்ஸ் விதைகள் முதலியவற்றிற்கு 'ஆர்டர்' கொடுத்தான்.

பின்புறம் தெருவின் மறு பக்கத்தில் ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து வெயிலை அநுபவித்துக் கொண்டிருந்த ஒரு கிழவர் யாரிடமோ கூறினர் : ''அடே, வாலிபப் பருவத்தை எல்லோரும் மகிழ்வுடன் கழித்துவிடுகிறார்கள். ஆனால் கிழப்பருவத்தைக் கழிப்பதுதான் உண்மையான வீரத்தனம். பற்கள் கிடையாது; காது கேட்காது; கண் தெரியாது; உடலில் ஒவ்வோர் எலும்பும் வலிக்கும் வலியில் நம் முன்னோர்கள் எல்லாரும் நினைவுக்கு வந்து விடுவார்கள். தவிக்கும் வாய்க்குத் தண்ணீர் வேண்டுமா என்றுகூட யாரும் கேட்க மாட்டார்கள். அப்பா! முதுமையைக் கழிப்பது பெரிய சூரத்தனந்தான்! எல்லோராலும் முடியாத காரியம். எனக்குத் தொண்ணூற்று மூன்று வயதாகி விட்டது. என் சீட்டுப் பகவானிடமே காணுதபடி தொலைந்து விட்டதோ என்னவோ!''

சஜ்ஜன் இதைக் கேட்டுக் கொண்டு நின்றான். அவனது உள்ளத்தை அந்த வார்த்தைகள் கவர்ந்து விட்டன. 'ஒரு நாள் நாமும் இவ்விதம் கிழப்பருவத்தை அடைந்து விடுவோம்.' இவரைவிட முதுமையை அடைந்து விட்டால்? இந்தப் பெரியவர் கூறுவது உண்மைதான். முதுமையைக் கழிப்பதற்குப் பெரிய சூரத்தனம் வேண்டும்!

''பாபு! அன்னிக்கு ஆறணுவுக்குத் திரட்டுப் பால் வாங்கிட்டுப் போனியே காசு எங்கே!''

''இவரையா கேட்கிறாய்?'' என்று சஜ்ஜனைக் காண்பித்துக் கர்னல் கேட்டான். சஜ்ஜன் திடுக்கிட்டான்.

''நானா? இதுதான் முதல் தடவை உன் கடைக்கு நான் வந்திருக் கிறேன்.''

''சபாஷ்! நீதானேயா வாங்கிட்டுப் போனே; டாக்டருக்கு மறந் திடுமின்னு நெனச்சிக்காதே! ஆமாம்.''

இந்த எதிர்பாராத மிரட்டலைக் கேட்டுச் சஜ்ஜனுடைய முகம் கோபத்தால் சிவந்தது. அருகிலேயே வெற்றிலை போட்டுக் கொண்டு ஒரு சிவந்த லாலா உட்கார்ந்திருந்தான். பெரிய மனிதனைப் போல் காட்சி தரும் சஜ்ஜனின் நிலைமையைப் புரிந்து கொண்டு அவன் டாக்டரைத் திட்டினான். ''டாக்டர்! உனக்கு ஆள் மாறாட்டம் போல் இருக்கிறது. அபினி போதையிலே உளறுதே!''

சஜ்ஜன் லாலாஜியைப் பார்த்துத் தன்னை நிரபராதி என்று நிரூபித்தான். ''இங்கே நான் ஏதோ வாங்கலாம் என்று முதல் தடவையாக இப்போதுதான் வந்திருக்கிறேன்.''

''முதல் தடவையா? சரிதான்! தினமும் வந்து கடன்வாங்கிட்டுப் போறே!''

கர்னல் சிரித்தபடி கூறினன் : "உங்களுக்கு வேறு யார் மீதோ சந்தேகம் தோன்றியிருக்கிறது. இவருக்குத் திரட்டுப் பாலல்ல, புட்டிங்தான் பிடிக்கும் புரிந்ததா?"

வேலையாள் சுடச்சுட ஜிலேபித் தட்டை டாக்டரிடம் கொண்டு வந்து வைத்துவிட்டுக் கூறினன்: "லாலா சும்மா ஏதாச்சும் சொல்லாதே! இவரில்லே அந்த ஆசாமி."

கையை உதறிக் கொண்டு டாக்டர் வேலையாள் பேரில் 'வள்' என்று விழுந்தான்: "என்னை முட்டாள் என்று நினைத்தாய்! இவர் விமல் வர்மாவின்மகன்தானே?"

லாலாஜி சிரித்துக்கொண்டே சொன்னன். "டாக்டர்! இனிச் செங்கல்லைத்தான் கண்ணிலே கண்ணாடியாய்ப் போட்டுக்க வேண்டும். உன்னைப் போன்ற அபினி போதைக்காரர்களுக்கு இந்தக் கண்ணாடி போதாது!"

சஜ்ஜன் சிரித்தபடி கர்னலிடம் கூறினன் : "இது பழைய வழக்கம் போல் இருக்கிறது. அபினி போதையில் இரவு வேளை களில் யாருக்காவது சாமான்களைக் குறைவாகவும், அதிகமாகவும் கொடுத்து விடுவார். காலை வேளையில் வேறு யாரையாவது பார்த்துக் காசு கேட்பார். இதே ரகளை தினமும் நடக்கும்போல் இருக்கிறது டாக்டர் சாஹேப்! உங்களுக்கு ஈடு இணையே இந்த நகரத்தில் யாரும் இல்லை."

நடந்துகொண்டே சஜ்ஜன் கர்னலிடம் மறுபடியும் கூறினன்: "உண்மையில் வாழ்க்கையின் இத்தனை ஆண்டுகளையும் தவரான உலகில் தான் கழித்துவிட்டேன். எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறதப்பா! உண்மையில் 'காரக்டர்ஸ்' (மனிதரகம்) இங்கே தான் கிடைக்கும். தெருக்களிலும், பேட்டையிலும் வாழ்வின் பலவேறு கோணங்கள் இங்கே காணக் கிடைக்கின்றன."

கர்னல் சிரித்துக்கொண்டே கூறினன் : "கலை ரசிகத்தனத்தை என்னிடம் காண்பிக்காதே! வாழ்வின் ரசாபாசங்கள் எல்லாம் இங்கேதான் வளர்ச்சி அடைகின்றன."

சஜ்ஜனுக்குக் கர்னல் கூறியது பிடிக்கவில்லை. ஆனல் அதில் உண்மையும் இருந்ததால் அதை அவனல் மறுக்கவும் முடியவில்லை.

இருவரும் சென்றுகொண்டே இருந்தனர். கர்னல் கூறினன்: "என்ன நேற்றிலிருந்து நம் ஆசாமி மஹிபால் எங்கே என்றே தெரியவில்லையே! நேற்ருவது, முந்தின நாளையிலிருந்து நான் பார்க்கவில்லையே!"

"நேற்றைக்கு முந்திய நாள் என் வீட்டுக்கு வந்திருந்தான்."

"கிறிஸ்துமஸ் பண்டிகை கொண்டாடியிருப்பார், சுக்லாஜி! அதனல்தான் காலையில் வெகு நேரம் வரை தூக்கம்!"

“அடே, தூங்கட்டுமே; தவிக்கும் உள்ளம் தூக்கத்தில் சிறிது நிம்மதி அடையட்டுமே; அதற்குள் உலகத்து மக்களுக்கு என்ன பரபரப்பு! பாவம், மிகுந்த கவலை!'' சஜ்ஜன் கூறினன்.

துன் தெருவிற்கு வந்ததும் திண்ணையில் கூட்டம் இருந்தது. செவ்வாய்க் கிழமையாதலால் தோட்டக்காரன் வசந்த், பிரசாத மான மலரை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அங்கேயே மஹிபாலும் உட்கார்ந்திருந்தான், பாபு சேதலால் இருவரும் வருவதைப் பார்த்துக் குரல் கொடுத்தார்: “வாருங்கள், வாருங்கள், நீங்கள் வராத குறைதான் இருந்தது.''

சஜ்ஜன் எல்லோரையும் கரங்குவித்து வணங்கினன். கர்னல் சிரித்தபடி குலாப் சந்தின் நாற்காலிக்குப் பின்புறமாக நின்று கொண்டு முதுகில் ஒரு தட்டுத் தட்டியபடி கூறினன்: “சூப்ரெண்ட் சார்! என்ன நடந்து கொண்டிருக்கிறது? உங்களுக்குத் தெரியுமா? சஜ்ஜன் சாஹேப் குலாப் சந்த் எனக்கு உறவு—''

“குலாப்சந்த் பதில் அளிப்பதற்கு முன்பு, முகுந்தீமல் உக்காவைப் பிடித்துக்கொண்டு ''நகீன் சந்த்'' என்றார்.

''என்ன லாலாஜி'' கர்னல் கேட்டார். இதற்கிடையே ராதேச் யாம் சேதலாலிடம் இரண்டு நாற்காலிகள் கொண்டுவரச் சொன்னர். சேதலால் தம் வீட்டிற்குக் குரல் கொடுத்தார்.

லாலா கர்னலிடம் கேட்டார்: “நீ காங்கிரஸ் கட்சியைச் சேர்ந் தவனுயிற்றே. இன்று விஜயலக்ஷ்மி பண்டித்தை வரவேற்க ஸ்டேஷன் செல்லவில்லையா''

“போகலாம் என்றுதான் முதலில் நினைத்தேன். ஜனசங்கின் சார்பில் புகழ்பெற்ற வேறு ஒரு பெண்மணியும் வரமாட்டாள். நாம் மட்டும் போனல் உங்களுக்குப் பிடிக்குமோ, பிடிக்காதோ என்று எண்ணிச் சும்மா இருந்து விட்டேன்''

சஜ்ஜன் மஹிபாலின் அருகே அமர்ந்துகொண்டான். மஹிபால் அவனது காதருகே சென்று கேட்டான் “கையில் என்ன?''

''ஜிலேபி. நேற்றுச் சீலாவின் வீட்டில் இருந்தாயா?'' சஜ்ஜன் அதே போல் மெதுவாகக் கேட்டான்.

மஹிபால் புன்சிரிப்புடன் தலையை அசைத்தான் சஜ்ஜனும் புன்முறுவல் பூத்தான். அப்போது முகுந்தீமல் கர்னலின் பரிகாசத் திற்குப் பதிலளித்துக் கொண்டிருந்தார்.

''எனக்கேனப்பா பிடிக்காது! ஜனசங்கில் இல்லாவிட்டால் என்ன, எங்கள் வார்டில் கம்யூனிஸ்ட் கட்சியினரில் புகழ்பெற்ற பெண்மணி வரப்போகிறுள். வீட்டையே ஆட்டி வைத்தவ ளாயிற்றே!''

சஜ்ஜனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. முகுந்தீமல் சேதா லாலைப் பார்த்துக் கேட்டார்: ''அந்த ரகசியத்தை அம்பலப் படுத்திய பிரசுரம் எங்கே?''

''கம்யூனிஸ்டுக் கட்சியினர் வெளியிட்டிருக்கின்றனரா?'' கர்னல் ஆர்வத்துடன் சேதாலாலைக் கேட்டான்.

சேதாலால் சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்தான். ராதேச்யாம் கூறினார் ''எல்லாம் சாளிக்ராமின் போக்கிரித்தனம்? எலெக்ஷன் நேரத்தில் குற்றவாளியை விட்டு விட்டான். குற்றமே புரியாத அப்பாவியை—''

''அதெப்படி நீங்கள் சொல்லலாம்? இறப்பதற்கு முன்பு அந்தப் பெண்மணியே ஸ்டேட்மெண்டைக் கொடுத்திருக்கிறாளே!'' என்று காகிதத்தைப் பிரித்தபடி சேதலால் கூறினார்.

''ஸ்டேட்மென்டாவது மண்ணாங்கட்டி!'' சேதலாலின் வேலையாள் இரண்டு மடக்கு நாற்காலிகளைக் கொண்டு வந்தான். முகுந்தீமல் இடையில் கூறினார். ''முதலில் கேட்கவிடு. குலாப் சந்த்! நீ படியப்பா! நன்றாகப் படிப்பாய்!''

குலாப்சந்த் கூறினார்: ''பண்டித்ஜிடம் கொடு. இவ்வளவு பெரிய ஆசிரியர் இருக்க, நான் படிக்கிறதாவது!''

''மஹிபால், நீயே படி, நீயே படி'' நாற்காலியில் அமர்ந்த படியே கர்னல் ஆர்வத்துடன் கூறினான்.

முகுந்தீமல் தம் வீட்டை நோக்கியபடி கத்தினார் ''பகவதி! வெற்றிலை கொண்டு வா, சீக்கிரம் வா... பண்டித்ஜி, படியுங்கள்.''

மஹிபால் படிக்க ஆரம்பித்தான்: ''ரகசியம் அம்பலமாகிறது! ருஷ்ய ஏஜென்டுகளின் அட்டகாசச் செயல். மக்கள் கம்யூனிஸ் டிடம் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். கடந்த ஞாயிற்றுக் கிழமை டிசம்பர் 23 ஆம் தேதி கம்பெனித் தோட்டத்தருகே கால்வாயில் பிறந்த குழந்தையின் சடலம் ஒன்று நாய்களால் கொந்தப்பட்டுக் கிடந்தது. இந்தச் செய்தி மக்கள் எல்லோருக்கும் இப்போது நன்கு தெரியும். நம் அரசாங்கப் போலீசார் தம் கடமை உணர்ச்சியை எடுத்துக் காட்டும் வகையில் இந்த அரக்கச் செயலைக் கண்டுபிடித்த விதமும் எல்லோருக்கும் தெரிந்ததே. நம் வார்டைச் சேர்ந்த நாணயம் மிக்க, புகழ் பெற்ற ஆசிரியர் ஜகதம்பா சஹாயின் அண்ணனுடைய மருமகள் யசோதா தேவி (தன் களங்கத்தை மறைக்கத் துரதிருஷ்டவசமாக அவர்கள் தற்கொலை புரிந்து கொண்டார்) இந்தப் பாவத்திற்குக் காரணம் என்பதும் மக்கள் அறிந்ததே. இந்தக் களங்கக் கதையுடன் மக்கள் அறிவின்மை காரணமாக மதிப்பிற்குரிய மாஸ்டர் ஜகதம் சஹாயின் பெயரை இணைத்துவிட்டனர். வீணாக நம் பெருமதிப் புக்குரிய ஆசிரியர் களங்கப்படுத்தப்படுகிறார் என்று மக்களுக்கு அறிவுறுத்துவதை நம் கடமை என நாம் கருதுகிறோம்.

''நடமாடும் தெய்வமாகிய ஜகதம்பா சஹாய் அவர்களுடன் இந்தக் களங்கம் மறையாமல் சேர்ந்திருக்கும். இதில் சந்தேக

மில்லை. ஆனால் நல்லவருக்குக் கடவுள் நல்லவராகத்தான் இருப்பார். நம் நகரத்துப் பெரிய தலைவர், நம் வார்டிடுன் ரத்தினம், மக்கட் பணியே தம் மூச்செனக் கொண்ட சாளிக்ராம் அவர்களின் நுண்ணறிவினாலும், நம் அரசாங்கக் காவலரின் செயல் திறனின் காரணமாகவும், உண்மையான குற்றவாளி யார் என்று தெரிந்துவிட்டது. இந்த இரட்டிப்புக் குற்றம் புரிந்த பாதகன் யார்? நன்னெறியில் நம்பிக்கை கொண்டிருந்த மக்களைப் பாவச் செயலால் மனம் பதைக்கச் செய்த கொடியன் யார்? இதுபற்றி நாம் ஒன்றும் கூறாமல் காலஞ்சென்ற யசோதா தேவி கூறிய வார்த்தைகளைப் பிரசிரித்துள்ளோம். இறப்பதற்கு முன்பு அவர் காவலர் முன்னிலையில் இந்த வாக்கு மூலத்தை அளித்தார்கள். பாவக் கனலில் எரிந்து சாம்பாகிக் கொண்டிருந்த அந்தப். பாரதப் பெண்மணி இறக்கும் தருவாயில் தடுமாறும் சொற்களில் கூறினார். 'பல்லே பாபு என் நாத்தியின் நண்பர். இருவரும் ஒரே கட்சியில் (அதாவது நாட்டின் போக்கிரிக் கூட்டமான கம்யூனிஸ்டுக் கட்சியில்) வேலை செய்து வந்தனர். பல்லே பாபு இங்கு அடிக்கடி வருவது வழக்கம். அவரும் என் நாத்தி குமாரி வனகன்யாவுந்தான் என்னை இப்படி இக்கட்டுக்கு ஆளாக்கி விட்டார்கள். பல்லே பாபு என்னைப் பலவிதமாகப் பயமுறுத்தித் தம் வசப்படுத்தி வைத்திருந்தார். நான் தாயாகி விட்டேன். என் வீட்டோருக்கும் இது தெரிந்து விட்டது; ஆனால் எல்லோரும் தமக்கு அவமானம் நேரிடுமே என்று அஞ்சினார்கள். என் பாவச் செயல் நேற்று மாலை வெளிப்பட்டது. தெய்வம் போன்ற என் இளைய மாமனார் பல்லே பாபுவிடம் குழந்தையைக் கொடுத்து 'உன் குழந்தையை எடுத்துச் செல்' என்றார். என் குழந்தையைப் பல்லே பாபு கொன்று எறிந்துவிட்டார். நான் வெட்கத்தால் என்னையே எரித்துக் கொண்டேன்.

''இந்த வார்த்தைகளை திக்கற்ற பெண்மணியின் கருணைக்குரலை நல்ல மனத்துடன் சிந்தித்துப் பார்த்தால் மக்கள் என்ன நினைப்பார்கள்? அயல்நாட்டுக் கோட்பாட்டால்தான் பிழைத்து வரும் கடவுளையும் பாவ, புண்ணியத்தையும் அறியாத அந்த விவேகமற்ற கம்யூனிஸ்டுக்கட்சி தன் சுயநலத்திற்காக எத்தகைய ஈனச் செயலையும் புரியும் என்று தெரிந்து கொள்வார்கள். இது எலெக்ஷன் சம்பந்தப்பட்ட காகிதமல்ல என்பதை மக்கள் தெளிவுற அறிந்துகொள்ளட்டும். நம் தலைவர் சாளிக்ராமின் இளகிய உள்ளத்தைப்பற்றி அறிவிக்கவே இது பிரசுரிக்கப்பட்டுள்ளது. நம் வார்டில் இத்தகைய நிகழ்ச்சி நடந்ததிலிருந்து அவருடைய உள்ளம் நலிவுற்று இருக்கிறது. 1942 ஆம் ஆண்டைச் சேர்ந்த போக்கிரிகளைத் தம் வார்டில் நுழையக் கூடச் சம்மதிக்க மாட்

டேன் என்று அவர் உறுதி பூண்டிருக்கிறார். உங்கள் ஆருயிர்த் தலைவரின் உறுதி நிறைவேற முழு ஒத்துழைப்பையும் நல்குங்கள் என்றுமக்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம்.''

படித்துவிட்டு மஹிபால் காகிதத்தை மடித்தான். அவ்வளவு விஷயத்திலும் சஜ்ஜனை ஈர்த்தது ஒரே ஒரு பொருள்தான். ஜகதம்பா சஹாயின் மகளது பெயர் வனகன்யா என்பதுதான் அது. அன்று மிஸ் வனகன்யா கூறினளே; ''என் தந்தைதான் கொலை புரிந்தவர். எனக்குத் தெரியும் பெண்ணாய்ப் பிறந்து விட்டதும் பொருளாதார நிலையில் சுதந்தரமாக இல்லாததுமே என் அண்ணி செய்த குற்றம்' என்று சஜ்ஜனின் எதிரே வனகன் யாவின் ஆவேசம் நிரம்பிய சிவந்த முகம் வந்து நின்றது. மிகவும் வெறுக்கத்தக்க வகையில் அந்தக் காகிதத்தில் அவள்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. இது முழுப் பொய்!

''இது அவ்வளவும் முழுப் பொய்!'' பிறர் கூறுவதற்கு முன்னமேயே சஜ்ஜன் கூறினன். மஹிபாலிடமிருந்து காகிதத்தை வாங்கிவைத்துக்கொண்டசேதாலாலின் பார்வை சஜ்ஜனை உற்றுக் கவனித்தது. லாலா முகுந்தீமல்லின் உக்கா இயங்காமல் இருந்தது. குலாப்சந்த் கூறினார்: ''இதில் சந்தேகமில்லை.''

''நானே ஜகதம்பா சஹாயின் வீட்டிற்குச் சென்றிருந்தேன். சப்-இன்ஸ்பெக்டர் சுக்லா என்னிடம் முழு விவரமும் கூறினார். மற்றொரு விஷயம் சுமார் பன்னிரண்டு மணி வரையில் அந்தப் பெண்மணி—என்ன பெயர்—யசோதாதேவி சுய நினைவிற்கு வரவில்லை. அவளுக்குச் சுய உணர்வு வரும் என்ற நம்பிக்கை டாக்டருக்கு ஏற்படவில்லை. டையிங் டிக்லரேஷன் (மரணமடையும் போது தரும் வாக்குமூலம்) கிடைக்காதோ என்று சுக்லா மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்.''

''இதில் சில விஷயங்கள் பொய்யாக இருக்கலாம்'' லாலா முகுந்தீமல் கூறினார். எலெக்ஷன் சமயத்தில் பிரசாரம் செய்யும்போது பொய்யும் கலந்து வரத்தான் செய்யும். ஆனால் இது கம்யூனிஸ்டுகளின் வேலை இல்லை என்பதற்கு என்ன அத்தாட்சி இருக்கிறது?''

விறுக்கென்று பாபு ராதேச்யோம் பேச ஆரம்பித்தார்: 'நீங்கள் ஏன் சார் கம்யூனிஸ்டுகளைத் தூற்றுகிறீர்கள்? அந்த ஆசாமி ஜகதம்பா சஹாயை எல்லோருக்கும் தெரியும். ஜகப் போக்கிரியாயிற்றே அவன். அவனை இதில் நடமாடும் தெய்வம் என்று குறிப்பிடுகிறார்கள். சாளிக்ராமைப்பற்றி ஒரு புகழ் பாடப்பட்டிருப்கிறது. நீங்கள் என்னவென்றால்—''

''இதில் என்ன கொள்கை இருக்கிறது என்று நீங்கள் புரிந்து கொள்ளவில்லை—'' கர்னல் அமைதியாகப் பேசினான்: ''பல்லே

பாபுவிடம் வேலையாட்கள், கூலியாட்கள், ரிக்ஷா யூனியன் இவர்களின் மொத்த வோட்டுகள் இரண்டாயிரம் இருக்கின்றன.' சாளிக்ராம் போன்ற போக்கிரி இந்தச் சமயத்தை நழுவ விடுவானா? ஒரு காகிதத்தில் கம்யூனிஸ்டுகளை நிந்தித்து அந்த வோட்டுகளை வேறு பக்கம் திருப்பப் பார்க்கிறான்.''

''உங்கள் பாயின்ட் முற்றிலும் உண்மையானது, கர்னல் சாஹேப்! ஆனால் இந்த வோட்டுகள் இப்போது கம்யூனிஸ்டுகளுக்கும் கிடைக்காது, காங்கிரசுக்கும் கிடைக்கப் போவதில்லை! பார்த்துக்கொண்டே இருங்கள்: ''என்று கூறியபடியே விரலால் சிகரெட்டின் சாம்பலைத்தட்டி விட்டார் சேதாலால்.

முகுந்தீமல் எதிர்காலத்தைப் பார்ப்பவர் போல் கழுத்தை ஆட்டிக் கொண்டு பேசினார்: ''நீ சொல்வது சரி, சேதாலால், இந்த வோட்டுகளனைத்தும் இப்போது ஜனசங்கத்துக்குத்தான் கிடைக்கும்.''

''சரியாய்ப்போச்சு, லாலாஜி, கூலியாட்கள், வேலையாட்கள் இவர்களில் முஸ்லிம்கள் இருக்கிறார்கள். அவர்களா ஜனசங்கத்துக்குப் போடுவார்கள்? அவற்றைக் கம்யூனிஸ்டுகள் தட்டிக் கொண்டு போய்விடுவார்கள்; இல்லாவிட்டால் காங்கிரஸ்காரர்களுக்குக் கிடைக்கும். இதுதான் உண்மை! தருணம் பார்த்துச் சாளிக்ராம் இந்தக் காகிதத்தைப் பறக்க விட்டு விட்டான். நீங்கள் என்னதான் சொல்லுங்களேன், அவன் சுயநலத்தை பூர்த்தி செய்துகொண்டுவிட்டான்.'' கர்னல் தன் கருத்தைத் தெரிவித்தான்.

''இப்போது''

குலாப் சந்தின் பேச்சிற்கிடையே மஹிபால் கூறினான்: ''நானும் என் கருத்தைக் கூறுகிறேன். குலாப்சந்த்! இந்த எலெக்ஷன் நான்கு நாள் கூத்து, ஆனால் இந்தக் கூத்தில் சமுதாயத்தின் இவ்வளவு பெரிய பாவம் ஒளிந்துகொண்டு இருக்க விடுவதா? இதை நீங்கள் எப்படிச் சகிப்பீர்கள்!''

''பண்டித்ஜி! என்ன இப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று முகுந்தீமல் ஆரம்பித்தார். இதே சமயத்தில் அவருடைய வீட்டிலிருந்து வெற்றிலைத் தட்டும் வந்தது. வேலையாள் தட்டை முன்னால் உட்கார்ந்திருந்த கர்னலிடம் நீட்டினான். முகுந்தீமல் தம்போக்கில் ஆரம்பித்தார்: ''இது உலகமப்பா, அசைந்துகொண்டே, சென்றுகொண்டே இருக்கும். இதில் புதுமை என்ன இருக்கிறது? இதை எல்லாம் பார்த்தும், கேட்டுமே நான் கிழவனாகிவிட்டேன்.''

''இன்னும் எத்தனை நாள்தான் இதையே கேட்கப் போகிறீர்கள்? சமுதாயத்தில் இப்படிப்பட்ட கெட்ட செயல்கள் இருக்கும் வரை உங்கள் எலெக்ஷனும், கட்சிகளும் வீண்தான்.''

''வீண் என்றுதான் நாங்களும் சொல்கிறேம். தடி எடுத்தவன் தண்டல்காரன் என்றாகிவிட்டது. எந்தக் கட்சி வந்தால் என்ன, ஆட்சி முறை இப்படியேதான் இருக்கும்; மக்களும் இப்படியே தான் இருப்பார்கள்!

பாவச் செயலும், புண்ணியச் செயலும் நடந்துகொண்டேதான் இருக்கும். இது கடவுள் படைத்த விதம். இதை யாரால் மாற்றி அமைக்க முடியும்? பெரிய பெரிய ரிஷிகளும் முனிவர்களும் தோன்றிஞர்கள். ராமபிரான், கண்ணபிரான் போன்ற தெய் வங்கள் அவதரித்தார்கள். அப்படியும் உலகம் மாறவில்லை—இப் போதா மாறப்போகிறது?

''சிவந்த பட்டுடுத்திய தெய்வத்திற்கு ஜே! ஆஞ்சனேயா! நீ தான் எங்களுக்கு துணை.'' நடுங்கும் குளிரில் மேலே ஒன்றும் போர்த்திக் கொள்ளாமல் பூணூலில் தொங்க விடப்பட்ட சாவிக்கொத்துடன் பக்தர் கூவிக்கொண்டு வந்தார்.

முறுக்கிய மீசையுடன் நிமிர்ந்த நடை போட்டுக்கொண்டு தெய் வத்திடம் பக்தி உணர்ச்சியையும், தட்டிலிருந்து பீடாவையும் ஏற்றவராய் ராதேச்யாம் கூறிஞர்: ''மாறும், லாலா! இப் போது கம்யூனிஸ்டுகள் வந்து மாற்றுவார்கள். முதலாளித்து வத்தின் ஆட்டம் அதிக நாட்கள் வரை நடக்காது!''

குலாப்சந்த் சிரித்தபடி கூறிஞர்: ''நாளுக்கு நாள் நானும் பார்க்கிறேன். நீ காம்ரேட் ஸ்டாலிஞகிக் கொண்டு வருகிறுய். குழந்தை குட்டிகள், வேலை இவற்றைப் பற்றியும் சிறிது கவலை யிருக்கட்டும் அப்பா! இது காங்கிரஸ் அரசாங்கம்!''

''எந்த அரசாங்கமாஞல் தான் என்ன, குலாப்சந்த்? அல்லலுறு பவனின் வயிற்றெரிச்சலை யாரால் தணிக்க முடியும்?'' மஹிபால் கூறிஞன்: ''நான் கம்யூனிஸ்ட் இல்லை., நம்புங்கள். ஆஞல் ருஷ்யாவில் வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை. ஒவ்வொரு வனும் வேலையும், சாப்பிட உணவும் பெறுகிறுன் என்று கேட்கும் போது பாரத நாட்டிலும், கம்யூனிஸம் ஏன் வரக்கூடாது என்று தான் நினைக்கத் தோன்றுகிறது.''

இதே சமயத்தில் பின் தெருவிலிருந்து ஒரு பெண்மணி ஓடி வந்தாள். அவளுக்கு இருபத்தெட்டு அல்லது முப்பது வயதிருக் கும். முகத்திலும், கண்களிலும் கோடுகள் விழுந்திருந்த போதி லும் அழகாக இருந்ததால் எல்லோருடைய கவனத்தையும் அவள் கவர்ந்தாள். கூட்டமாக அவர்கள் உட்கார்ந்திருந்ததைப் பார்த் துப் பெண்மணி நின்று விட்டாள்.

அவளைப் பின் தொடர்ந்து ஒரு குரல்: ''பிடி, பிடி'' என்று கேட்டது. பெண்மணி முகுந்தீமல்லின் அருகில் வந்து நின்று கொண்டாள். லாலாஜி தம் பனிக்குல்லாவைச் சீர்படுத்திக்

கொண்டார். மூக்குக் கண்ணாடியைச் சரியாய் போட்டுக் கொண்டார். பெண்மணி திடீரென்று அவரது முகத்தைப்பார்த்து உமிழ்ந்தாள். மற்றவர்களைப் பார்த்துக்கொண்டு நின்றாள். அதற்குள் அமர்க்களமாகி விட்டது. திண்ணையிலிருந்து சஜ்ஜன் எழுந்து அவளருகே சென்றான். எழுபத்தொன்பது வயது நிரம்பிய தனபத்ர் லாலா சினத்தால் வசமிழந்தார். துடித்தபடி மப்ளரால் முகத்தைத் துடைத்துக்கொண்டு எழுந்தார். வீரத்தியாகி தரையில் சாய்வது போல் அவருடைய உக்கா கீழே விழுந்தது.

சஜ்ஜன் அருகே வந்ததும் அவளுடைய கண்கள் சஜ்ஜனின் முகத்தில் ஒன்றின. தெருவிலிருந்து கத்திக்கொண்டு வரும் குரல்கள் அருகே ஒலித்தன. பெண்மணி திரும்பிப்பார்த்தாள். சஜ்ஜனும் பார்த்தான். சுமார் அறுபத்தெட்டு அல்லது எழுபது வயது 'அரிஸ்ட்ராக்ரேட்' பெரிய மனிதர் ஓடோடியும் வந்து கொண்டிருந்தார். "பிடி மை டியர், பிடி தாங்க்யூ, தாங்க்யூ!"

'மை டியர்' என்று கூறியபடி பெண்மணி சஜ்ஜனைத் தழுவிக்கொண்டாள். சஜ்ஜன் ஜாக்கிரதையாக இருந்தான். அவளுடைய இரண்டு கைகளையும் பிடித்து "ஜாக்கிரதை!" என்றான்.

"நான் துப்ப மாட்டேன். ப்ளீஸ், என்னை விட்டு விடுங்கள் அடிக்காதீர்கள்!"

வயோதிகர் வந்து விட்டார். அவருக்கு மூச்சுத் திணறிற்று. கர்னல், குலாப்சந்த் இருவரும் மண்டபத்தருகே நின்றுகொண்டிருந்தனர். சேதாலால் திண்ணைமீது தம் வீட்டுச்சுவரில் சாய்ந்தபடி நின்றுகொண்டிருந்தார். ராதேச்யாமும் அவரருகே இருந்தார். மஹிபால் தன் இடத்தில் உட்கார்ந்திருந்தான். பிரசாதத் தட்டையும், பூக்கூடையையும் இருகைகளால் மூடிக்கொண்டு தோட்டக்காரன் வசந்து பயத்துடன் தவளையைப் போல் குனிந்து உட்கார்ந்திருந்தான்.

வயோதிகரைப் பார்த்து முகுந்தீமல் கேட்டார். "வக்கீல் சார்! உங்கள் மருமகளா? சித்தசுவாதீனமில்லாதவளா?"

"ஜென்டில் மேன், யூ ஆர் மை பாதர். மை ப்ரதர், மை எவரிதிங்!" (கனவானே நீங்கள் என் தந்தை, சகோதரர் எல்லாம்) சஜ்ஜனிடம் கட்டுண்ட பெண் கண்களில் நீர் துளும்ப, நடுங்கும் குரலில் கூறினாள்: "என்னை என் ராஜேஷிடம் கொண்டு விடேன். ராஜேஷ் மை டார்லிங் ப்ளவர் ஆப் மை ஹார்ட்! (என் கண்ணே! இதயமலரே) என் உள்ளம் எரிகிறது. பாருங்கள். இங்கே! இங்கே!, என் கையை விட்டுவிடுங்கள். எங்கே எரிகிறது என்று காண்பிக்கிறேன். தக தக வென்று மயானம் எரிகிறது."

''அம்மா! வீட்டிற்குப் போகலாம் வா!'' மாமனூர் கூறினூர். ''உன் துணிகளை எடுத்துவைத்துக் கொள். அப்போதுதானே ராஜேஷிடம் போகலாம்.''

''முடியாது. நான் வரமாட்டேன். மை டியர் ஹஸ்பெண்ட் இஸ் (என் அருமைக் கணவர்) காப்டன். அவர் எனக்குச் சேலைகள் தருவார். மோட்டாரில் ஏற்றிக் கொண்டு சுற்றுவார். நான் போய் என் ராஜேஷைக் கட்டிக்கொள்வேன்'' பெண்மணி சஜ்ஜனை நெருங்க மறுபடியும் முயன்ருள். சஜ்ஜன் அவளுடைய கைகளை விட்டுவிட்டான். ''வீட்டுக்குச் செல்லுங்கள்.'' என்று கூறினன்.

''வேண்டாம், என்னை அங்கே அழைத்துச் செல்லாதீர்கள். யூ ஆர் ஜெண்டில் மேன், ஹெல்ப் மி. (நீங்கள் கனவான், எனக்கு உதவுங்கள்) அங்கே கோபு இருக்கிருன். அவன் அவனுடைய பெண்டாட்டியைக் 'கிஸ்' பண்ணுகிருன், முத்தம் இடுகிருன். அணைத்துக் கொள்கிருன். என்னைப் பாத்ரூமில் விட்டுக் கதவைச் சாத்தி விடுகிருர்கள். என் மாமனூர் இந்தக் கிழவர் என்னை மகளே, மகளே என்று கூப்பிடுகிருர். அம்மாவும் ஆசையாக மகளே என்கிருர்கள். அவர்களுக்கும் என் மீது இரக்கமில்லை. இரவு நேரத்தில் இருவரும்''

சஜ்ஜன் முகத்தில் ஓர் அடி கொடுத்தான். பெண்மணி பயந்து போனுள். பிறகு தன் ஆவேசத்தை அடக்கிக்கொண்டு சஜ்ஜன் சங்கோசத்துடன்: ''வக்கீல் சார், என்னை மன்னித்து விடுங்கள்.'' என்ருன்.

''பரவாயில்லை, மகனே! நோ—நோ'' என்று நன்றியுடன் வக்கீல் கூறினூர்.

''வீட்டிற்குச் செல்லுங்கள்'' என்று கூறியதுமே, விசித்துக் கொண்டே பெண்மணி வீட்டை நோக்கிச் சென்ருள். வக்கீல் யாருக்கும் வணக்கம் தெரிவிக்காமல், தலை குனிந்த வண்ணம், களைப்புடன் முன்னே சென்ருர்.

கர்னல் கேட்டான்: ''சஜ்ஜன், உன்னுடன் நானும் வரட்டுமா?''

''வேண்டாம், இதோ வந்து விடுகிறேன்'' என்று திரும்பிப் பார்க்காமலே சஜ்ஜன் பதிலளித்துவிட்டுச் சென்ருன்.

## 12

திரும்பிய சஜ்ஜன் திண்ணை காலியாக இருந்ததைக் கண்டு தன் வீட்டிற்குச் சென்றுவிட்டான். அங்கு வாசற்கதவு திறந்திருந்தது.

உள்ளே சென்றான் வனகன்யா உட்கார்ந்து கொண்டு தாமஸ் க்ரேவன் எழுதிய 'ஓவியத்தின் வரலாறு' என்ற நூலைப் படித்துக் கொண்டிருந்தாள். அவளைக் கண்டு சஜ்ஜனின் உள்ளம் துள்ளிக் குதித்தது. அங்கே கர்னல், மஹிபால், ஒருவருமில்லை. ஜிலேபியும் காரத்தின் பண்டங்களும், பொட்டலங்களில் கட்டியபடி எதிரே வைக்கப்பட்டிருந்தன.

சஜ்ஜன் மகிழ்ச்சி தாங்க முடியாமல் தன்னையும் மறந்து கரங் குவித்தான். புன்முறுவலுடன் அவளும் கரங்குவித்துக் கூறினாள்: "அன்று நீங்கள் திடீரென்று வீட்டிற்கு வந்தீர்கள்—"

"பதிலுக்கு நீங்கள் திடுக்கிடச் செய்துவிட்டீர்கள். அப்படித் தானே?"—சஜ்ஜன் அறையின் நடுவில் போய் நின்றுகொண்டான்: "என் உதவாக்கரை நண்பர்கள் இருவரும் எங்கே போய் விட்டார்கள்? நீங்கள் அவர்களைப் பார்த்திருப்பீர்கள்?"

"பிடித்தவரைப் பார்த்தால் உற்சாகம் மடை திறந்து விடுகிறது. ஏதேதோ வார்த்தையைப் போட்டு நண்பர்களைப் பற்றி இப்படிக் கூறிவிட்டான், சஜ்ஜன் உதவியில்லாவிட்டாலும் நண்பர்களாக இருப்பதற்கு மட்டும் அதிருஷ்டம் செய்திருக்க வேண்டாமா!"

"ஆம். அவர்களில் மஹிபாலை எனக்குத் தெரியும். இன்னொரு வரும் கூட இருந்தார்."

"எங்கே போய்விட்டார்கள்? உங்களிடம் ஏதாவது கூறினார் களா? சொல்லிவிட்டுப் போனார்களா!"

மேஜையைச் சுட்டிக்காட்டி வனகன்யா கூறினாள்: "மேஜை மீது ஏதோ எழுதி வைத்திருக்கிறார்கள்."

சஜ்ஜன் எழுந்து பார்த்தான், பாம்பே ஆர்ட் சொசைடியி லிருந்து வந்த பழைய அழைப்பிதழ் வைத்திருந்த புக்போஸ்ட் கவரின் மீது மஹிபால் எழுதி இருந்தான் "மெனி ஹாப்பி ரிடர்ன்ஸ் ஆப் தி டே (மனங்கனிந்த வாழ்த்துக்கள்.)"

சஜ்ஜன் புன்முறுவல் பூத்தான். நரம்பெல்லாம் மகிழ்ச்சி பாய்ந்து கொண்டிருந்தது. சிரிப்பில் அது அடக்கி வைக்கப்பட்டது— "போக்கிரிப் பசங்கள்!"

சஜ்ஜன் கவரைத் திறந்தான், பழைய அழைப்பிதழின் பின் புறத்தில் மஹிபால் எழுதியிருந்தான். "ஜிலேபியின் மீது ஆணை, இன்று உன்னைப் பிரிந்து வாடும் மனத்துடன் நான் செல்கிறேன். இன்று என் ஜிலேபி தியாகத்தை 'டைரி'யில் பொன்னெழுத்தில் எழுதிக் கொள். கர்னலும் சுவைக்கும் புலனை அடக்கி அதன் பேரில் வெற்றி கண்டுவிட்டான். தான் உண்மையான சமணன் என்று நிரூபித்து விட்டான். இந்த விசித்திரமான தன்மை— தனிமை கிறிஸ்துமஸ் பரிசாக இருக்கட்டும் என்று உனக்கு விட்டுச்

செல்கிறோம். பேச்சுக்களில் மகிழ்வுறு, பணிவுடன் நடந்துகொள் தற்போதைக்கு இதுதான் உனக்கு எங்கள் வாழ்த்து.''

அதற்கும் கர்னல் கீழே கிறுக்கியிருந்தான்: ''மகனே, கம்யூனிஸ்ட் ஆகிவிடாதே.''

சஜ்ஜன் மனக்களிப்பை முகச் சுளிப்பில் மறைத்துக் கொண்டு கடிதத்தைச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டான். பிறகு வனகன்யாவைப் பார்த்தான். அதிகம் என்று சொல்லும்படியான சிவப்பு நிறம். அவளுடைய தோற்றம் அவனுடைய கண்களை ஆட்கொண்டுவிட்டது. சற்றுச் சிடுசிடுத்த குரலில் கூறினான்: ''இந்த இரு நண்பர்களும் ஒண்ணும் நம்பர் முட்டாள்கள்! அவசர வேலையாகப் போகிறோம் என்று எழுதியிருக்கிறார்கள். ஆனால் நான் எங்கே போய்ச் சந்திக்கவேண்டும் என்று எழுதவேயில்லை. என் கிறிஸ்துமஸ் நாள் முழுவதையும் வீணாக்கி விட்டார்கள்!''

இப்படிக் கூறிவிட்டு சஜ்ஜன் கன்யாவிற்கருகேயே பஞ்சு திண்டு தைத்த ஒரு சிறு நாற்காலியைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். ''மற்றவர்தாம் மஹிபாலை அழைத்துக்கொண்டு போனார். மஹிபால் இங்கேயே இருக்கத்தான் விரும்பினார் என்று எனக்குத் தோன்றிற்று'' என்றாள் அவள்.

காதலனின் நெஞ்சு வெண்கலப் பாத்திரத்தைப் போல் டண் டண் என்று அடித்துக்கொண்டது. சஜ்ஜன் கேட்டான்: ''மஹிபாலிடம் ஏதாவது முக்கியமான வேலை இருக்கிறதா உங்களுக்கு.''

''இல்லையே! அவருடைய புத்தகங்களை நிறையப் படித்திருக்கிறேன். அவர் எனக்குப் பிடித்த ஆசிரியர்.''

சஜ்ஜனுக்கு இது விரும்பத்தக்கதாக இருந்தது. அவன் மிகுந்த மன நிறைவுடன் கேட்டுக் கொண்டிருந்தான்.

கன்யா மறுபடியும் புன்முறுவலுடன் கூறினாள்: ''பல தடவைகள் அவரைச் சந்திக்க நினைத்தேன். ஆனால் 'இப்போது பழக்கமில்லாத மக்கள் அடிக்கடி வந்து பார்ப்பதால் இந்த ஆசிரியர்களுக்கும், கலைஞர்களுக்கும் செருக்கு வந்து விடுகிறது' என்று நினைத்து நான் அவர்களிடம் செல்லவில்லை. இன்று எதிர் பாராமல் அவரை இங்கே பார்த்தேன்.''

''அதனால் என்ன? நீங்கள் விரும்பும்போது சொல்லுங்கள். நான் அவனைக் காதைப் பிடித்து இழுத்துக் கொண்டு வருகிறேன். கிளம்புங்கள், இப்போதே அவனுடைய வீட்டிற்குச் செல்லலாம். இருவரும் அங்கேதான் போயிருப்பார்கள்.''

வனகன்யா அடக்கமான குரலில் கூறினாள்: ''இப்போது நான் ஒரு வேலையாக வந்திருக்கிறேன்—உங்களிடம்.''

இதைக் கேட்டதும், சஜ்ஜனின் 'மூட்' மனநிலை தடைப்பட்டது. விஷயத்தைப் புரிந்துகொண்டு உடனே அவன் ஆழ்ந்த கருத்துடன்

"எபௌட் தட் பாம்பிளட்" (அந்தப் பிரசுரத்தைப் பற்றியா?) என்று கேட்டான்.

"ஆமாம்"

"இப்போதுதான் மற்ற நண்பர்களுடன் கேட்டேன்: அதைப் பத்திரமாக வைத்திருக்க வேண்டும். அதைப் படித்துவிட்டு வருங் காலச் சந்ததிகள் நம் தலைமுறையினரைக் காறித் துப்பும்."

"வரப்போகிற விஷயத்தை விடுங்கள், எனக்கு இப்போதைய பிரச்னைபற்றிக் கவலை!" கன்யா கவலையுடன் குனிந்து கொண்டாள். இரண்டு கால் கட்டை விரல்களும், மற்ற விரல்களும் கத்தரிக்கோலைப் போல் அசைந்துகொண்டிருந்தன. சஜ்ஜன் விழிகளை அகல விழித்து அவளைப் பார்க்கும் வாய்ப்பைப் பெற்றான்; சற்றே செம்பட்டையான நிறமுடைய கூந்தல் காதுகளிடையே சுருண்டு பறந்துகொண்டிருந்தது; "ரொம்பவும் அழகாக இருக்கிறாள்—பாவம்! எவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாள்; என்னுடன் தன் கஷ்டங்களைப் பகிர்ந்துகொள்ள வந்திருக்கிறாள்; எவ்வளவு நம்பிக்கை இருந்தால் இங்கே வரவேண்டும்!" என்று எண்ணினான்.

சற்றே உணர்ச்சி வசப்பட்ட சஜ்ஜன் கூறினான்: "நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்கள்? நான் என்னால் இயன்ற உதவியை உங்களுக்குச் செய்கிறேன்."

சாஸ்திரிஜியின் குரல் எங்கிருந்தோ கேட்டது; "பரோபகார புண்யாய, பாபாய பரபீடனம்."

வனகன்யா நிமிர்ந்து கண்ணோடு கண் சேர்த்துப் பார்த்தாள். பரீட்சிப்பவள்போல் பார்த்த பிறகு கூறினாள்: "எனக்குக் கெட்ட பெயர் வந்துவிட்டதே என்று கவலைப்படவில்லை. இறந்து போன அண்ணிக்கு நியாயம் அளிக்க விரும்புகிறேன்."

"பாம்ப்ளட்டில் (பிரசுரத்தில்) தரப்பட்ட டையிங் டிக்லரேஷன் (மரணமாகுன் வாக்குமூலம்) கன்யா வறண்ட சிரிப்புச் சிரித்தாள், பிறகு கூறினாள்: "சாளிக்ராம் காற்றுள்ளபோதே தூற்றிக் கொண்டுவிட்டார்! இது என் தந்தைக்கு ஏன் பிடிக்காது? கொலை செய்தும் ஒன்றுமே அறியாதவரைப் போல் தப்பித்துக் கொண்டார்? இது சுயராஜ்யத்தின்தீர்ப்பு!"

சஜ்ஜன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

கன்யா மறுபடியும் கூறினாள்; "இறந்து கொண்டிருந்த அண்ணியின் உடலை வற்புறுத்தி மற்றும் ஒரு சேவையை வாங்கிக்கொண்டார்கள். ஸ்டேட்மெண்ட் (வாக்குமூலம்) எழுதப்பட்ட காகிதத்தில் அவர்களது கையைப் பிடித்துக் கையெழுத்துப் போடச் செய்தார்கள்!"

"அன்று எனக்குத் தோன்றிய எண்ணத்தை என்றும் மறக்க மாட்டேன். ஒரு மாஜிஸ்டிரேட், போலீஸ்காரன், சப்-இன்ஸ் பெக்டர், ஒரு டாக்டர் மற்றும் ஓர் அரசியல் தலைவர் இவர்கள் எல்லோரும் நியாயத்தின் பிரதிநிதிகளாக இருந்துகொண்டு நீதி யின் கழுத்தைத் திருகினார்கள். பிரிந்து கொண்டிருந்த உயிர் உலகத்திலிருந்து எத்தகைய கசப்பான அநுபவத்துடன் சென்றி ருக்கும்! இறுதிக் கணம் வரை அந்த உயிரை நீதமற்றபடி பயன் படுத்திக் கொண்டார்கள்!''

''ஸ்கௌண்ட்ரல்ஸ்! (அயோக்கியர்கள்)'' ''எலெக்ஷன் தந்தி ரத்துக்காக மனிதத் தன்மைக்கு மாருக இவ்வளவு பெரிய சூழ்ச்சி செய்திருக்கிருர்கள், இது நம் நாகரிகத்தின் நவீன முறை!''

ஒரு நிமிடம் அறையில் நிசப்தம் நிலவியது. கன்யா மறுபடியும் ஆரம்பித்தாள்: ''இவர்களுடைய நீசத்தனந்தான் எல்லாரும் அறிந்ததாயிற்றே! ஆனல் இன்று கட்சிச் சார்பாளர்களின் போக் கைப் பார்த்தால் எனக்குச் சொல்லொணுத் துயரம் உண்டா கிறது!''

கேள்வி கேட்பதுபோல சஜ்ஜன் பார்த்தான்.

கன்யா கூறினுள்: ''இந்தக் காகிதத்துடன் சாலையில் பல்லே பாபுவும், மற்ற மூன்று நண்பர்களும் என்னிடம் வந்தார்கள். அதிலும் அநீதத்தை விடக் கட்சி பல்லே பாபு இருவரின் கௌரவத் தையும் காப்பாற்றக் கவலை தெரிவிக்கப்பட்டிருந்தது. நான் அதில் கையொப்பமிட வேண்டும் என்று விரும்பினுர்கள். நான் மறுத்து விட்டேன்—இந்தப் பெண் மணியின் மானம், எந்தக் கட்சியாயி னும் சரி, அதனுடைய அல்லது நாட்டின் மானத்தைவிடக் குறைந்ததா என்ன? நான் கேட்கிறேன். இந்த அநீதம் முழுச் சமுதாயத்திற்கும் இழைத்த அநீதமில்லையா?''

சஜ்ஜன் தன் உள்ளத்தைப் பரிசோதித்தான்.

''எல்லோருக்கும் தத்தம் சுயநலந்தான்! எனக்கு மனித வர்க்கத் திடமிருந்தே நம்பிக்கை போய்விட்டது.''

சஜ்ஜன் ஒன்றும் பேசவில்லை. மௌனம் ஆமோதிப்பதற்கு அடையாளம். கன்யா தன் பர்சைத் திறந்து ஒரு காகிதத்தை எடுத்தபடியே கூறினுள்: ''நான் ஒரு சிறு கட்டுரை எழுதியிருக் கிறேன். இதை ஏதாவது பத்திரிகையில் தயைசெய்து உங்களால் பிரசுரிக்க முடியுமா?''

சஜ்ஜன் அந்தப் புல்ஸ்கேப் சைஸ் காகிதத்தின் நான்கு பக்கங் களைப் படிப்பதில் ஈடுபட்டான். வனகன்யாவின் பார்வை அறையில் இங்குமங்கும் சென்றுவிட்டுச் சஜ்ஜனின் முகபாவத்தில் ஒன்றியது.

படித்து விட்டுச் சஜ்ஜன் பெருமூச்செறிந்தான், ''நீங்கள் ரொம்பவும் அழகாக எழுதியிருக்கிறீர்கள்... ஆனல் என் கருத்து

இதைச் செய்தித் தாளில் பிரசுரிக்க வேண்டாம் என்பதுதான். எலெக்ஷன் அமர்க்களத்தில் இந்தக் கட்டுரை இருக்கிற இடம் தெரியாமற் போய்விடும். இது துண்டுக் காகிதங்களைப் பிரசாரம் செய்யும் நேரமாயிற்றே!''

''இதை விட்டால் என்னிடம் வேறு சாதனம் கிடையாதே!''

''நான் கர்னலிடம் குறிப்பிடுகிறேன். மஹிபாலுடன் இங்கு வந்திருந்தானே அவன்தான்...... அமீனுபாதில் விக்டோரியா மெடிகல் ஸ்டோர்ஸ் இருக்கிறதே அதற்குச் சொந்தக்காரன் அவன். எலெக்ஷன் தந்திரங்கள் அவனுக்கு நன்ருகத் தெரியும். இப்போது நாம் கிளம்பலாம். நான், நீங்கள், கர்னல், மஹிபால் எல்லாருமாக உட்கார்ந்து கொண்டு இதற்கு ஒரு வழி தேடலாம். இந்தக் கட்டுரை எலெக்ஷன் சூழ்ச்சிகளையும் மீறிக்கொண்டு மக்களைக் கவர வேண்டும். அப்போதுதான் இதனுல் பொதுமக்கள் ஏதாவது பயன் அடையக் கூடும் என்பது என் கருத்து!''

''நான் வாழ்நாள் முழுதும் இந்த உதவியை மறக்கமாட்டேன்!''

சஜ்ஜனுக்கு அவளது பேச்சு மிகவும் பிடித்திருந்தது. இந்த விருப்பத்தில் அவனது மறைந்திருந்த சுயநலத்தின் சாயை இருந்ததால் அவன் சற்றுக் கூச்சத்துடன் பேசினுன்: ''என்னை அப்படி நீங்கள் கருதக்கூடாது. இது உங்களுடையது போலவே என்னுடையதும்—நியாயத்தை விரும்பும் ஒவ்வொரு மனிதனுக்கும் இது சொந்தமானது. அப்படியிருக்க யார் உதவி செய்வது, யார் அதை நன்றியுடன் மறக்காமல் இருப்பது?''

வனகன்யாவின் பார்வை சந்தேகம் மரியாதை இரண்டும் கலந்த உணர்ச்சியுடன் கீழே தாழ்ந்தது.

தின்பண்டத்தின்மீது சஜ்ஜனின் பார்வை விழுந்தது. பொட்டலத்தைத் திறந்தபடி அவன் கூறினுன்: ''வாருங்கள், கொஞ்சம் சாப்பிடலாம். ஜிலேபி ஆறிவிட்டது.'' பொட்டலத்தைத் திறந்த போது செய்தித் தாள் படபடவென்று ஒலித்தது. சஜ்ஜன் மறுபடியும் கேட்டான்: ''தேநீர் கூட இதோடு அருந்தலாமில்லையா?''

''நான் தயார் செய்கிறேன்'' என்று கன்யா எழுந்தாள். மூலையில் மேஜைமீது தேநீருக்கு வேண்டிய சாதனங்கள் இருந்தன.

சஜ்ஜன் பால் வாங்கக் கடைத் தெருவுக்குச் சென்றிருந்தான்; கர்னலின் வீட்டிலிருந்து சாஸ்திரிஜியின் வீட்டிற்குச் சென்றுவிட்டதால் அவனுல் பால் புட்டியைத் தன்னுடன் எடுத்து வர முடியவில்லை.

* * * *

தேநீர் அருந்திக் கொண்டே சஜ்ஜன் ஆரம்பித்தான். ''நீங்கள் இங்கே வருவதற்குச் சற்று முன்பு 'சோஷல் சர்வீஸ்' (சமூகத்

தொண்டு) செய்தால் என்ன என்று எனக்குத் தோன்றிற்று. இங்கே தெருக்கோடியில் ஒரு வக்கீல் இருக்கிறார். வயதானவர். இன்ட்ரஸ்டிங் (கருத்தைக் கவரும்) மனிதராகத் தோற்றமளிக்கிறார். அவருடைய இளைய மகனின் மனைவிக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது. இன்று திடீரென்று அவள் வெளியே வந்து விட்டாள். பெரிய அமர்க்களம் செய்துவிட்டாள். கன்ட்ரோலில் கொண்டு வர அவளை நான் ஓர் அடி அடித்துவிட்டேன். எனக்கு நினைவு தெரிந்தது முதல் இதுதான் முதல் முறை—நான் ஒரு பெண்ணின் பேரில் இப்படிக் கை வைத்துவிட்டேன் . வெகு நேரம் வரை அவளை அடித்ததால் என் உள்ளங்கை துடித்துக் கொண்டிருந்தது.''

''ஏன் அவளுக்குப் பைத்தியம் பிடித்தது?''

''உங்கள் அண்ணி ஒருவிதக் கொடுமையை அநுபவித்தாள். இந்தப் பெண் வேறுவிதக் கொடுமைக்கு இரையாகி விட்டாள். முடிவும் ஒரே மாதிரி. ஆனால் இரு விதங்களில் அவ்வளவுதான் வேற்றுமை.'' சஜ்ஜனின் குரலில் வேதனையும், சிந்தனையும் கலந்திருந்தன. கன்யா மனம் ஒன்றி அவன் கூறுவதைக் கேட்டுக் கொண்டும், அவனைப் பார்த்துக் கொண்டும் இருந்தாள்.

சஜ்ஜன் சற்றுத் தயங்கிவிட்டு மறுபடியும் கூறினான். ''வக்கீலின் மூன்று பிள்ளைகளும் மிகுந்த அதிருஷ்டசாலிகள். பெற்றோரை விட்டுத் தொலைவில் வாழ ஆரம்பித்துவிட்டார்கள். மூத்தவன் வைத்தியப் படிப்புக்காக இங்கிலாந்து சென்றான். அங்கேயே 'ப்ராக்டிஸ்' செய்துகொண்டு தங்கிவிட்டான். தன் மனைவியையும், குழந்தைகளையும் தன்னிடம் அழைத்துக்கொண்டு விட்டான். அவனைப்பற்றி ஒரு கவலையும் கிடையாது. ஆறு மாதங்களுக்கொருமுறை ஓரிரு கடிதம் வந்து விடுகிறது. இரண்டாம் சத்புத்திரன் ஐ.சி.எஸ். பட்டம் பெற்றவன் இந்தக் குறுகிய சந்தில் வசிக்கும் பழைய காலத்தைச் சேர்ந்த பெற்றோருடன் எப்படி அவன் இருப்பான்? பணம் கொடுத்து உதவுகிறான். அவ்வளவுதான். மூன்றும் மகன் மிலிட்டரியில் இருக்கிறான். பீரங்கி துப்பாக்கிகளுக்குத் தலைவன், காப்டன் ஸோ—அண்ட்—ஸோ (இன்ன பெயருடையவன்) தன் சிற்றப்பன் மகளுடன் அவனுக்கு ரோமியோ—ஜூலியட் உறவாகிவிட்டது. ப்ரோக்ரஸ் செய்து அதைத் திருமணமாக முடித்துக்கொண்டு விட்டான். பாவம், இந்தப் பெண் ஏழெட்டு வருடங்களாகக் கண்டெம்ட் (ஒதுக்கப்பட்ட) பொருளைப்போல் கிடக்கிறாள். வக்கீல் தம் மகன் செய்த தீச்செயலை நினைத்தாலே நடுங்குபவர், அவரும் அவருடைய மனைவியும் பெரிய நர்வஸ் டென்ஷனுடன் (பரபரப்பும்) கவலையுமாகத் தம் மருமகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆசைகள் நிறைவேருமல்—ப்ரஸ்ட்ரேட் ஆனதால்—இன்று அவள் இந்த நிலையை அடைந்து விட்டாள்.''

இவ்விதம் கூறிய சஜ்ஜன் இரண்டு நிமிடங்கள் சிந்தனையுடன் கன்யாவைப் பார்த்தான். பிறகு குளிர்ந்த தேநீரின் பாதிக் கோப்பையை மடமடவென்று குடித்துவிட்டுக் கீழே வைத்தான்.

கன்யா பேதை மனத்துடனும் கவலையுடனும் கேட்டாள்: ''ஆனால் என்ன செய்வது? இதற்கு முடிவில்லையா?''

''உண்டு, நிச்சயமாக உண்டு!''

''எப்படி?—அதுதான் எனக்கும் புரியவில்லை. இன்று காலையிலிருந்து ஒரு புதிய கவலை என்னை வருத்துகிறது. உங்கள் பொலிடிகல் வ்யூஸ் (அரசியல் பற்றிய கருத்துக்கள்) என்ன என்பது எனக்குத் தெரியாது. ஆனால் எனக்குக் கம்யூனிஸத்துடன் இண்டலக்சுவல் (அறிவு அளவில்) தொடர்பு உண்டு என்பது உங்களுக்கும் தெரியும்?''

''இருக்கலாம். ஆனால் மனிதர்களை நான் 'இஸம்' என்ற நோக்குடன் பார்ப்பது கிடையாது—''

''அதனால்தான் கம்யூனிஸ்ட் என்று இந்தக் காலத்தில் சொல்லிக் கொள்வது பெரிய ஆபத்து என்று சொல்கிறேன். இத்தனைக்கும் நம் போன்ற ஆயிரக்கணக்கான மக்கள் அதில் இருக்கிறார்கள். பல்லே பாபுவைச் சுமார் நான்கு ஆண்டுகளாக எனக்கு நன்றாகத் தெரியும். ரொம்பவும் அதிகமாகப் படிப்பவர். சிந்திப்பவர் என்றில்லாவிட்டாலும் சாதாரணமாகப் படிக்கும் மனிதர், சிந்திக்கவும் செய்பவர். அவர் ப்ராக்டிகல் வர்க்கர். (செயலில் ஈடுபாடு உடையவர்) உண்மையில், நான் சொல்கிறேன். மக்கள் அவரை என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். ஆனால் அவர் மிகவும் நல்ல மனிதர். நான் அவரை மதிக்கிறேன்... ஆனால் இன்று அவருடைய பேச்சைக் கேட்டபோது ஏதோ புது மனிதருடைய பேச்சைக் கேட்டது போலத்தான் எனக்குத் தோன்றிற்று!''

சஜ்ஜன் அறிவாளிபோல் சிரித்துவிட்டுக் கூறினான்; ''நான் உங்கள் பொலிடிகல் வ்யூஸ் (அரசியல் கருத்துப்) பற்றியவரை ஏதும் கூறி உங்களை வருத்தமடையச் செய்யமாட்டேன். ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். கம்யூனிஸ்டுகள் பொறுப்புள்ள மனிதர்களாக நடந்து கொள்வது கிடையாது.''

''உங்கள் லாஜிக் (தர்க்க வாதம்) தவறானது.'' இப்படி வனகன்யா பட்டென்று கூறியது சஜ்ஜனின் உள்ளத்திற்கு அதிர்ச்சியாக இருந்தது. அவன் சமாளித்துக்கொண்டு உட்கார்ந்தான்.

வனகன்யா பேச ஆரம்பித்தாள்: ''வெகு நாட்களாக என் உள்ளத்தைக் குடைந்து கொண்டிருந்த ஒரு விஷயம், இன்றைய

நிகழ்ச்சி காரணமாக என் பிரச்னைக்குத் தீர்வாக மாறிவிட்டது. 'புட்பால் மாச்' (கால் பந்தாட்டம்) போன்றதுதான். அரசியல் கட்சிகளின் போராட்டமும் என்று இன்று திடீரென எனக்குத் தோன்ற ஆரம்பித்து விட்டது. மக்கள்தான் 'ஃபுட்பால்!' மாச் அவர்களைச் சாக்கிட்டுக் கொண்டு நடைபெறுகிறது. அரசியல் கட்சிகளின் விளையாட்டு உதைகளும் மக்கள்மீது தான் விழுகின்றன. இந்த எலெக்ஷன் ஜனதந்திர சமுதாய முறையின் இந்த உருவத்தைத்தான் நம் முன் கொண்டு நிறுத்துகிறது.''

சஜ்ஜன் மிகுந்த கவனத்துடன் கேட்டிக்கொண்டிருந்தான்.

கன்யா கூறிக்கொண்டே சென்றாள்: ''பல்லே பாபு தயார் செய்துகொண்டு வந்த வாக்கு மூலத்தில் என் தந்தையின் பாவச் செயலும், அண்ணியின் முடிவும் பிரசார வடிவில்தான் வெளிப் பட்டன. அதில் கம்யூனிஸ்ட் கட்சி எலெக்ஷன் இவற்றுக்குத் தான் மகத்துவம் அளிக்கப்பட்டிருந்தது. அதற்கு மாறாக ஏன் பொய்ப் பிரசாரம் செய்கிறார்கள் என்பதன் குட்டும் வெகு ஆவேசத்துடன் உடைபட்டுவிட்டது. 'இதே ஆவேச உணர்ச்சி ஒரு பெண்ணின்பேரில் இழைக்கப்பட்ட கொடுமைகள் காரண மாக ஏன் வெளிப்படக்கூடாது?' என்று நான் கேட்டேன். அதற்கு அவர் கூறிய பதில் இதுதான்: 'கட்சி இந்த லட்சியங் களைக் கொண்டுதான் இயங்குகிறது. பார்ட்டி வெற்றி பெற்றால் சமுதாயமும் மாறும்!' உண்மையில் இது எனக்குத் திருப்தி அளிக்கக் கூடிய பதிலாக இல்லை. இவர்கள் சமுதாயத்தை பொதுப் படையில் பார்க்கின்றனர் என்று எனக்குத் தோன் றிற்று. தனிப்பட்டவரின் இன்னல்களைச் சமுதாய மக்களுக்கு நேரும் இன்னல்களாகப் பார்த்து அதன்படி அரசியல் கொள் கைகள் நிறுவப்பட்டன. அந்த உணர்ச்சி, அந்தத் துடிப்பு, இப்போது நம் உள்ளத்திலிருப்பது மறைந்துவிட்டது. நம் நோக்கு இப்போது வெறும் அரசியலாகிவிட்டது. வெறும் அரசியல் செக்குமாட்டைப் போல் பழக்கப்பட்டதால் சுற்றிக் கொண்டு வருகிறோம். பயனுள்ள வேலை ஏதும் நடைபெறுவதில்லை.

''நீங்கள் கூறுவது உண்மை. என் உள்ளத்து எண்ணங்களையே நீங்களும் வெளியிடுகிறீர்கள். நான் அரசியலையே வெறுக்கிறேன்'' என்று கூறியபடியே சஜ்ஜன் கெட்டிலை எடுத்தான். ''பேச்சில் தேநீர் ஜில்லென்றாகிவிட்டது. மறுபடியும் தயார் செய்யட்டுமா.'' என்றாள்.

''உங்களுக்கு நான் செய்து தருகிறேன்—இப்போது நான்''

''ஆமாம், என் மனமும் வேறு எங்கோ சென்றுவிட்டது ..இந்தக் காப்பி, தேநீர், சிகரெட் எல்லாம் ஓய்வு நேரத்துப் பிரியப் பொருள்கள். மூளை வேறு எந்த வேலையிலாவது, எண்ணத்தி

லாவது ஈடுபட்டிருக்கும்போது இந்தப் பொருள்களனைத்தும் பொய்யாகிவிடுகின்றன'' என்று கூறியபடியே சட்டைப்பையி லிருந்து சஜ்ஜன் சிகரெட் கேசை எடுக்க முற்பட்டான்.

கன்யா உடனே தடுத்தாள்: ''கையைக் கழுவிக்கொள்ளுங்கள்; ஜிலேபியினுல் பிசு பிசு என்று இருக்கிறது.''

சங்கோசத்துடன் முறுவல் செய்து சஜ்ஜன் இடது கையிலி ருந்து சிகரெட் கேசை எடுத்தான். பிறகு கன்யாவிடம் கூறினன்: ''இவற்றை முதலில் தீர்த்து விடுங்கள். இப் யூ டோண்ட் மைன்ட், தேநீர் மறுபடியும் தயார் செய்யலாம்...அடேடே, முதலில் இதைச் சாப்பிடுங்கள், பிறகு பார்த்துக் கொள்ளலாம்.''

''போதும், சாப்பிட்டாகிவிட்டது!''

''அது முடியாது. அநீதத்தை அழிக்க விரும்பினுல் நீங்களே அநீதம் செய்யக்கூடாது. ஆடவருடன் சரிசமமாக இருக்க விரும் பினுல் சரி பாதி சாப்பிட வேண்டும்!'' சஜ்ஜன் சற்று மருட்டு பவனைப்போல் நடித்தான்.

கன்யா சிரித்துவிட்டுக் கூறினுள்: ''சமயம் பார்த்து நீதி வழங்கச் சொல்கிறீர்கள்; நான் இப்படிக் கேட்டால் முடியாது என்று மறுத்து விடுவீர்கள்.'' அவளுடைய குரலில் பெண்ணின் பெருமை ஒலித்தது. கண்கள் செவ்வறியோடின; நாணத்தால் அவை தாமாகவே காதுவரை நீண்டுவிட்டன.

சஜ்ஜன் மறுபடியும் மகிழ்ந்தான்; நேர்க்கோடுகளும் புள்ளிகளும் சேருவதுபோல் கன்யாவின் எண்ணங்கள் முகத்திலும் கண்களிலும் வெளிப்படுவதை அவன் உணர்ந்தான்; அவள் சாதாரணமாக இருந்தபோதிலும், உயிர்ப்புடன் இருந்தாள்.

சஜ்ஜன் புன்முறுவலுடன் பதிலளித்தான்: ''நீங்கள் தீர ஆலோசியாமல் எனக்கு மாருக ஒரு பக்கத்து''

தான் ஒரு கணம் மெய்ம்மறந்து விட்டதைச் சமாளித்துக் கொண்டு கன்யா கூறினுள். ''உங்களைக் குறிப்பிட்டுச் சொல்ல வில்லை, ஆண்கள் எல்லோரையுமேதான் குறிப்பிட்டேன்.''

''இதோ பாருங்கள், நீங்கள் ஆண்—பெண் என்று பிரிவினை செய்தால் நான் உங்களுடன் சண்டை போடுவேன். பெண்மட்டும் கொலை செய்வதில் குறைந்தவளா என்ன? பெண் தம் கணவனை ஜோடுகளால் 'பூஜை' செய்வதை நான் பார்த்திருக்கிறேன்—''

கன்யா சிரித்தாள்.

"சில நாட்களுக்கு முன்பு 'உம் ராவ ஜான் அதா' என்ற உருது நாவலைப் படித்துக் கொண்டிருந்தேன். அதில் வயது முதிர்ந்த ஒருவரைப்பற்றி வருணிக்கப்பட்டிருந்தது. அவருடைய காதலி, ஒரு வேசி. அவள் தன் மற்றக் காதலர்களை மகிழ்விப்பதற்காக

இந்தக் கிழவனை, அடிக்கடி மரத்தில் ஏறும்படியும், இறங்கும்படியும் கட்டளை பிறப்பித்துக் கொண்டிருந்தாள்.''

கன்யா சிரித்தாள் : ''அவன் அதற்குத் தகுந்தவன்தான். சரி, நீங்கள் கூறுவதை ஒப்புக்கொள்கிறேன். பெண்களும் சில சமயங்களில் கொடியவர்கள்தாம்?''

தின்பண்டத்தைத் தின்று முடித்தாகிவிட்டது. காகிதத்தையும், இலையையும் சுருட்டி வெளியே இருந்த குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டுக் கெட்டிலைச் சுத்தம் செய்து இருவரும் தேநீர் தயாரிக்க ஆரம்பித்தனர்.

சஜ்ஜன் மெத்தையின்மீது நிம்மதியாக உட்கார்ந்துகொண்டு சிகரெட்டைக் கொளுத்தினான். புகையை ஓர் இழுப்பு இழுத்தவுடன் உலகின் அரசாட்சியே தன் நெஞ்சிற்குள் அடங்கி விட்டது போல் கருதினான். அப்போது சஜ்ஜன் வியப்புக்குரிய உற்சாகத்தில் ஆழ்ந்திருந்தான். வனகன்யா ஒருத்தி அறையில் இருந்தது, அவனுடைய உலகமே நிரம்பிவிட்டாற்போல் தோன்றிற்று. முற்றுப் பெறாத சித்திரம் பலகையில் தொங்கிக் கொண்டிருந்ததை அவள் பார்த்துக் கொண்டிருந்தாள்.

திடீரென்று அவன் கேட்டான்: ''உங்களுக்கு வனகன்யா என்ற பெயரைப் பெற்றோர் சூட்டினார்களா, அல்லது நீங்களே வைத்துக் கொண்டீர்களா?''

கன்யா புன்முறுவலுடன் கேட்டாள்: ''ஏன்?''

சஜ்ஜன் வாயில் சிகரெட்டை வைத்துக்கொண்டு அலட்சியமாகப் பதிலளித்தான்: ''இம் மாதிரிப் பெயர்களை நம் குடும்பங்களில் சாதாரணமாக வைப்பதில்லை. எப்போது உங்கள் பெயரை மாற்றிக்கொண்டீர்கள்? பள்ளிக்கூடத்தில் பாரம் பூர்த்தி செய்யும் போதா?

''நீங்கள் சோதிடராகி விட்டீர்களே?''

''உங்களுக்கே தோன்றிற்றா, இல்லை யாராவது''

''நானேதான் யோசித்து வைத்துக்கொண்டேன் எப்படி இருக்கிறது?''

''உம்—உம் நன்றாக இருக்கிறது. சாதாரணமாகப் பேச்சு மொழியில் அதற்குக் காட்டுப் பெண் என்று பொருள்!'' இருவரும் சிரித்தனர்.

படத்தைப் பார்த்தபடி கன்யா கேட்டாள்: ''இது சத்யநாரயணரின் கதைதானே!... மிகவும் அழகாகத் தீட்டியிருக்கிறீர்கள். இது மராட்டியச் சூழ்நிலை. எங்கிருந்து 'ஸ்கெச்' செய்தீர்கள்?''

''கோல்ஹாபுரில்,''

''உங்களுக்கு இந்த 'சோ—கால்ட்' ஏழைகளுடன் ஏழைகள் என்கிருர்களே அவர்களுடன் உட்கார்ந்திருப்பதில் தயக்கமில்லை. இதைப் பார்த்து எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது!''

''மன்னிக்க வேண்டும்! உங்கள் மகிழ்ச்சியைப் பாதிக்கப் போகிறேன்—எனக்குத் தயக்கம் ஏற்படுவதுண்டு.''

''அப்படியாளுல்?''

''ஆளுல் மனம் வைத்தால் தயக்கத்தையும் தகர்த்தெறிந்து விடுவேன்!''

''இந்தத் தயக்கத்தை ஒரேயடியாகத் தகர்த்தெறிய நீங்கள் தயாராக இருந்தால் என்னுடன் வாருங்கள் அஜந்தா, எல்லோரா எத்தனையோ தீட்டிவிட்டீர்கள். இனி உயிருடன் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் குகைகளைத் தீட்டிவிடுங்கள். உலகைச் சுதந்திரமாக்கி விட்டோம் என்று பெரிய பெரிய தலைவர்கள் பெருமையடித்துக்கொள்கிருர்களே அவர்களுக்குத் தங்கள் மக்களின் உண்மை நிலைமை என்ன என்பதைத் தீட்டிக் காண்பியுங்கள்!'' கன்யாவின் முகத்தில் ஆவேசம் நிறைந்த ரோசம் தென்பட்டது.

அவளுடைய பேச்சைக் கேட்டுச் சஜ்ஜன் மகிழ்வடைந்தான். அவன் கூறிஞன்: ''நீங்கள் எனக்கு ஊக்கம் கொடுக்கிறீர்கள், கன்யா! நான் இந்த லட்சியத்துடன்தான் இங்கு வந்திருக்கிறேன். ஆளுல் அஜந்தா—எல்லோரா சித்திரங்கள் உபயோகமற்றவை என நீங்கள் கருதுவதை நான் ஆமோதிக்கமாட்டேன்.''

''நான் அப்படிச் சொல்லவில்லையே?''

''அஜந்தா, எல்லோராவைப் பார்த்துச் சரியான முறையில் ஊக்கம் பெற்ருல் மனிதனின் முழுவாழ்வையும், அழகாகவும் பயனுள்ளதாகவும் அமைத்துக்கொள்ள அந்தச் சித்திரங்களே போதுமானவை.''

''நான்''

''உண்மையாகச் சொல்கிறேன்! இந்தக் குகைகளைப் பார்த்துக் கொண்டிருந்தபோது திடீரென்று என் முன் எகிப்து நாட்டின் 'பிரமிட்கள்' வந்து நின்றன. இந்த இரண்டையும் தனித்தனியே ஒப்பிட்டுப் பாருங்கள். ஒரு புறம் நம் எகிப்து நாட்டு முன்னேர் மலைமலையாக நிறுவியிருக்கின்றனர். அவற்றைப் பார்த்தால் இன்றும் நம் பார்வையும் அறிவும் பிரமித்து நிற்கும்...ஆளுல் இந்தச் செயற்கை மலைகள் எதற்குப் பயன்பட்டன? சடலங்களுக்காக!—இப்போது மறுபுறம் பாருங்கள்; நம் பாரத நாட்டு முன்னேர்கள் மலைகளைக் குடைந்து அழகால் நிரப்பியிருக்கிருர்கள். இவற்றை அறிவு மலர்ச்சிக்குப் பயன்படுத்தியிருக்கிருர்கள். மன்னர்களுடைய சிற்றின்பத்தின் இருப்பிடமாகவோ சடலங்களைப்

புதைக்கும் இடமாகவோ பயன்படுத்தவில்லை. இந்த இரண்டு பண்பாட்டு நோக்கிலும் எவ்வளவு வேற்றுமை! நாம் கலையை நம் வாழ்க்கையுடன் இணைந்ததாகக் காண்கிறோம். நம் கலையில் திறமை நிச்சயமாக இருக்கிறது. ஆனால் அது நம்மைப் பிரமித்து விடச் செய்வதில்லை; மனசுக்கு ஒளியூட்டுகிறது! அந்த அழகு நம் உள்ளங்களைத் தனக்கருகே ஈர்க்கிறது; அந்த உள்ளங்களையும் அதேபோல் அழகுறச் செய்கிறது.''

சஜ்ஜனின் பேச்சு கன்யாவைக் கவர்ந்து விட்டது. சித்திரம் போன்ற அவளுடைய முகத்தில் இது தெளிவாகத் தெரிந்தது. சஜ்ஜனும் தானே பேச்சில் மெய்மறந்து மௌனமாகிவிட்டான்.

சற்று நேரங்கழித்துக் கன்யா கூறினாள்: ''நீங்கள் சொல்வது உண்மை. உங்கள் அநுபவத்தைக்கூறி எனக்கு மிகச் சிறந்த உரை கல்லை அளித்துவிட்டீர்கள். ஐ ஷல் நெவர் பர்கெட் இட்! (இதை நான் மறக்கவே மாட்டேன்) ஆனால் ஒன்றுமட்டும் எனக்குப் புரிய வில்லை: இந்த நாட்டில் ஒரு பக்கம் சிறந்த தத்துவங்கள், இலக்கியம், சிற்பக்கலை முதலியன இருந்து கொண்டே வருகின்றன. மறுபடியும் நம் வீட்டுச் சத்யநாராயண பூஜை, குருட்டுப் பழக்க வழக்கங்கள், என் அண்ணி, பித்து பிடித்த அந்தப் பெண்மணி, என் தந்தை, தமையன்—''

''உங்கள் தமையனா அவர் என்ன செய்தார்?

சஜ்ஜனின் கேள்வியினால் கன்யாவின் பேச்சு வேகம் சட்டென்று தடைப்பட்டு நின்றது. கூறவிரும்பாதவளாய் வறண்ட சிரிப்புடன் மெல்லிய குரலில் அவள் பேச ஆரம்பித்தாள்:

''என் வீடு எனக்கு ஒரு 'யுனிவர்சிடி'தான்—என்னத்தைச் சொல்வேன்! என் தமையன் ஒரு விசித்திரமான சிக்கலில் மாட்டிக்கொண்டிருக்கிறார்...உங்களிடம் எப்படிச் சொல்வேன்?... (முகத்தில் நாணத்தின் சிவப்புப்படர, கண்கள் தரையை நோக்கின. பிறகு தைரியத்தை வரவழைத்துக்கொண்டு) ஆனால் நீங்கள் சமுதாயத்தை அறிந்துகொள்ளக் கிளம்பியிருக்கிறீர்கள். ஆகையால் அப்படி ஒரு நிகழ்ச்சி என்று வைத்துக் கொண்டு எண்ணிச் சங்கோசமில்லாமல் சொல்லி விடுகிறேன்.

''என் அண்ணி 'பயீ' என்று சொல்ல வந்தேன்.''

கன்யாவின் முகபாவத்தைப் பார்த்த சஜ்ஜன் அவள் ஏதோ சொல்லப்போகிறாள் என்று நினைத்தான். அதற்கு மாறாக அண்ணியைப்பற்றி, அதுவும் விசித்திரமான வார்த்தையைக் கேட்டுத் திடுக்கிட்டான்: '' 'பயி' என்றால்?'' என்று கேட்டான்.

கன்யா மிகவும் ஜாக்கிரதையாகப் பேசினாள்: ''அதாவது இயற்கையின் கோளாறு. வேறென்ன? பார்ப்பதற்குப் பெண் போல் இருந்தாலும் அவளிடம் பெண்மை இல்லை.''

''ஒகோ......பேடி—''

''ஆமாம்—அதாவது புற அவயங்கள் சாதாரணப் பெண்களைப் போல் வளர்ச்சி பெற்றிருக்கும். ஆனல்—''

''அப்படியிருக்க ஏன் திருமணம் செய்துகொண்டார்கள்?''

''எத்தனையோ ஏமாற்றங்களைப் போல் இதுவும் ஒன்று. அம்மா, அப்பாவுக்குப் பதினைந்தாயிரம் ரூபாய் வரதட்சிணை கிடைத்தது. தாத்தா அண்ணியை வறுத்து வாயில் போட்டுக்கொள்கிருர். நான் உங்களிடம் எப்படிச் சொல்வேன்? அண்ணி படும் அவதியை, ஆம், அவதியை என்ருல் பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை .. தாத்தாவுக்கு உண்மையில் அதிர்ச்சி ஏற்பட்டுவிட்டது, என்பது உண்மைதான். அவர் மிகவும் நல்லவர்தாம். அவருக்கு அடிக்கடி 'வலிப்பு' வருவது வழக்கம். அப்போது அவர் அரக்கராக மாறி விடுவார். ஒரு நாள் இரவு நேரம். அண்ணி தூங்கிக்கொண்டு இருந்தார். அவளுடைய பின்னலில் அவர் நெருப்பு வைத்து விட்டார். ஒரு நாள் அதிகாலையில் எழுப்பி அவளைக் கோமதி நதிக்கு அழைத்துச் சென்ருர். அங்கே சென்றதும், ''நீயும் தலையை மொட்டை அடித்துக் கொள், நானும் அடித்துக்கொள்கிறேன். இருவரும் சேர்ந்து கோமதியில் மூழ்கி இறந்து விடலாம்'' என்ருர்.

''அடே!''—

''அங்கு ஒரு 'சீன்' 'கிரியேட்' செய்ய ஆரம்பித்தார். (ஒரே அமர்க்களம் பண்ணிவிட்டார்!) அண்ணி மறுத்ததால் கோபித்துக்கொண்டார். அவள் தருணம் பார்த்து: 'நீங்கள் முதலில் மொட்டையடித்துக் கொள்ளுங்கள். பிறகு நான் செய்து கொள்கிறேன்' என்ருள். தாத்தா 'சரி' என்று கூறி உட்காந்தார். அவர் தலையைக் குனிந்த நேரம் பார்த்து ஒரு ரிக்ஷாவில் வீட்டுக்கு வந்துவிட்டாள் அண்ணி! பாவம்.''

''சு—சு—சு!''

''எப்படிச் சொல்வேன்? அவரால் வீட்டில் எத்தனை கலகங்கள் நேரிடுகின்றன தெரியுமா? வெட்கக் கேடு! வீடே ஒரு விஷஸ் சர்க்கிள் போல் (விஷ வட்டம் போல்) ஆகிவிட்டது. என் பெரியம்மாவுக்கும் அம்மாவுக்கும். தினமும் பொழுது விடிந்தால் சக்களத்திப் போராட்டந்தான். தாத்தாவுக்கு நல்லது செய் பவளைப் போல் பெரியம்மா அவருக்கும் அண்ணிக்கும் இடையே தவருன தொடர்பைப் பிணைக்க ஆரம்பித்தாள். என் தமையன் மிகுந்த தெய்வ பக்தி உள்ளவர். திருமணத்தால் படும் அவதி போதாதென்று மறுமணத்துக்கு அலைய ஆரம்பித்தார். ஒரு வேளை இதில் என் அண்ணியின் சம்மதமும் இருக்கும்போல் இருக்கிறது. இன் தி மீன் டைம், (இதற்குள்) என் அம்மாவுக்குப் பெரியம் மாவின் சூழ்ச்சி புரிந்துவிட்டது. அவள் நல்லவளாக இருந்தாலும்

அதிகாரம் என்றால் ஒரே ஆசை. அவள்தான் என் தகப்பனரை வற்புறுத்தி இதற்கு ஒப்புக்கொள்ளச் செய்தாள். எல்லாம் என் பெரியம்மாவுக்குப் பாடம் கற்பிக்கத்தான்—அவளைப் பழிக்குப் பழி வாங்க!''

பெருமூச்சு செறிந்தபடி சஜ்ஜன் கூறினன்: ''மிஸ் கன்யா, ஐ சிம்பதைஸ் வித்யு! (உங்கள் நிலைமையை எண்ணி அனுதாபப் படுகிறேன்).''

''மிக்க நன்றி! ஆனல் எனக்கு அநுதாபம் காட்டத் தேவை இல்லை. என் போராட்டத்தை நானே சமாளித்துக்கொள்வேன்... நான் இதை எல்லாம் ஏன் சொல்லவந்தேன் என்றால், ஒரு பக்கம் நம் பண்பாடு அஜந்தா—எல்லோரா போன்ற ஜடமான மலைகளில் உயிரை அளித்திருக்கிறது; மறுபுறம் உயிர்ப்புள்ள மனிதனைச் உணர்வற்ற கல்லாக்கியிருக்கிறது. நம் மிகச் சிறந்த லட்சியங்கள் சமுதாயத்தில் ஒரு புறம் சமுதாயத்தை ஆட்கொண்ட போதிலும் புதிய சக்தியாகத் திகழவில்லை. காரணம் என்ன? தனி மனிதன் சிரத்தையே வடிவாக இருந்தபோதிலும் நம் 'நாஷனல் காரக்டர்' (தேசத்துக்குரிய பண்பு என்று) ஒன்றுமில்லாமல் போய்விட்டதே!''

சஜ்ஜனுக்கு இது பிடிக்கவில்லை. அவன் கூறினன்: ''நம் 'நாஷனல் காரக்டர்' (தேசத்துக்குரிய பண்பு என்று) ஒன்றுமே யில்லை என்று நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். நேர்மையின் பலம் இல்லை என்றால், அந்த நாட்டில் வியாசர், வால்மீகி, காளிதாசன் போன்ற கவிஞர்கள் தோன்ற மாட்டார்கள். நம் சரித்திரத்தில் அசோகனைப் போன்ற மன்னவரும், புத்தர், காந்தி அடிகள், மகாவீரர் போன்ற பெரியவர்களும் தோன்றியிருக் கிறார்கள்...உங்கள் வீட்டுச் சூழ்நிலை காரணமாக உலகமே உங்களுக்குக் கெட்டதாகத் தோன்றுகிறதோ என்னவோ! நான் அதை ஒப்புக்கொள்ளமாட்டேன். என் முன் என் தாயின் உதாரணம் இருக்கிறது: இன்னும் எத்தனையோ மக்கள் உலகில் இருக்கிறார்கள். இன்று காலையில் தான், குன்னேமல்லின் வீட்டருகே பண்டித் சிவநாத் சாஸ்திரி இருக்கிறார் நல்ல படிப்பாளி—அவரைப் பார்க்கப் போயிருந்தேன். அவரிட மிருந்து நம் 'ட்ரெடிஷன்ஸ்' (மரபுகள்) பற்றிச் சில விஷயங்களை அறிந்துகொண்டேன். ஒரே வியப்பாக இருந்தது. உங்கள் வார்த்தைகளை உண்மை என்று எப்படி ஒப்புக்கொள்வது என்பது தான் புரியவில்லை.''

தேநீர் கோப்பையை நீட்டியபடி கன்யா கூறினள்: ''நான் இதை மறுக்கவில்லை. இந்த இயற்கையான நேர்மை, சீலம் இவற்றின் அழகைக் குலைக்கும்படி நம் சமுதாயத்தில் எங்கோ ஓர் இழுக்கு இருக்கத்தான் செய்கிறது...சர்க்கரை குறைச்சலா?''

''நோ, தாங்க்ஸ்? சற்று அதிகமாகவே இருக்கிறது. இரண்டு ஸ்பூன் போட்டுவிட்டீர்கள் போல் இருக்கிறது! சரி இனிப்பை எஞ்ஜாய் செய்கிறேன். (சுவைக்கிறேன்)''

கேலியைப் புரிந்துகொண்டும், புரியாதவள் போல் கன்யா இருந்துவிட்டாள். அவள் கூறினள்:—''பாருங்கள், சத்ய நாராயணரின் கதை நடக்கிறதே, இதில் என்ன இருக்கிறது? கோடிக்கணக்கான வீடுகளில் இதைச் சிரத்தையுடன் படிக்கிருர்கள். இதில் என்ன 'மாரல்' (நீதி) காணப்படுகிறது. நான் கதையைப் படித்துப்பார்த்தேன். அதில் சத்தியமும் இல்லே, நாராயணனும் இல்லே!''

சஜ்ஜன் சலிப்படைந்தவனைப் போல் காண்பித்துக்கொண்டு கூறினன்: ''இந்தக் கம்யூனிசம் நமக்குப் பிடிக்காது! (திடீரென்று எதையோ நினேத்துக்கொண்டு) ஓ! நீங்கள் ஒன்றுமே சாப்பிடவில்லேயோ?''

''ஏன், தின்பண்டங்களேத் தின்றேமே!''

''அது போதுமா? இப்போது மணி இரண்டடிக்கப்போகிறது. இன்னும் சாப்பிடாவிட்டால் உங்கள் வீட்டில் யாரும் கோபித்துக் கொள்ள மாட்டார்களா?''

தேநீர் அருந்தும் சாக்கில் கன்யா பேசாமல் இருந்தாள். பிறகு சற்று ரோசத்துடன் கூறினள்: ''முதலில் கோபித்துக் கொள்வது வழக்கம். நேற்றைக்கு முந்திய நாளிலிருந்து வீட்டுடன் எனக்கு உறவு கிடையாது!''

கேள்விக் குறியுடன் சஜ்ஜன் அவளேப் பார்த்தான்.

''வீட்டிலிருந்து என்னே வெளியேற்றிவிட்டார்கள்!'' என்றுள் கன்யா.

''அது எப்போது?''

''நேற்றுக்கு முந்திய தினத்திலிருந்து!''

''ஏதாவது முக்கியமான காரணமா?''

''ஆமாம். முக்கியமான விஷயந்தான். சாளிக்ராமின் கஸ் துப்படி என் வீட்டோர் எல்லோரும் என் தகப்பனரின் நடன் தையை நேர்மை மிக்கது என்று கூறினர்கள். எல்லோரும் பல்ரல்- அண்ணி இருவரையுமே தூற்றினர்கள். நான் போலீசாருக்கு அப்படி வாக்கு மூலம் அளிக்க மறுத்துவிட்டேன்!''

''ஸ்கவுண்ட்ரல்ஸ் (அயோக்கியர்கள்)! இப்போது நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள்? கம்யூனிஸ்ட் கட்சி.''

''இல்லே. நேற்றுக்கு முந்திய நாள் இரவிலிருந்து நேற்றுப் பகல் நேரம்வரையில் என் நண்பர் ஒருவருடைய வீட்டில் இருந்தேன். நான் இருப்பது அவருடைய வீட்டவர்களுக்குப் பிடிக்கவில்லே. உடனே 'இண்டியன் பீப்பிள்ஸ் தியேட்டர்' காம்ரேடின் தோழரின்

வீட்டுக்குச் சென்றேன். அவளுடைய வீட்டிலிருந்து பிறகு எங்கே செல்ல வேண்டுமோ, பார்க்கலாம். இப்போது எங்கும் இருள் சூழ்ந்தாற்போல் இருக்கிறது, ஒன்றும் புரியவில்லை''. அடக்கிக் கொண்டபோதிலும் பீறிட்டுக் கொண்டு பெருமூச்சு வந்தது.

சஜ்ஜன் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான்: ''வேண்டாம், நீங்கள் ஏன் இப்படிக் கஷ்டப்பட வேண்டும்? எனக்கு இத்தனை வீடுகள் இருக்கின்றன''.

''ஆனால் உங்கள் வீடுகளில் நான் தங்க முடியாதே!''

''ஏன்?''

''ஏன், என்று சிந்திப்பதற்கும் அப்பாற்பட்ட விஷயம் அது!'' கன்யா உறுதியுடன் பதிலளித்தாள்.

சஜ்ஜன் ஆழ்ந்த கருத்துடன் ''உங்கள் மன நிலை எனக்குத் தெரிகிறது. நீங்கள் இதுவரை பெற்ற அநுபவத்திலிருந்து ஆண்களிடம் வெறுப்புடனும் சந்தேகத்துடனும், உங்களைப் போன்ற அறிவுள்ள பெண் நடந்து கொள்வது முற்றும் நியாயமானதுதான். நான் ஆண், கெட்டவனுங் கூட. ஆனால் வித்யுவர் பர்மிஷன் (உங்கள் அனுமதியுடன் சொல்வதென்னவென்றால்) மிஸ் வன கன்யா, என்னிடம் நல்ல குணங்களும் உண்டு!''

குனிந்தவள் நிமிர்ந்து ஒரு முறை அவனைப் பார்த்துப்புன்முறுவல் செய்தாள். அவள் கூறினாள்: ''அது தெரிந்திராவிட்டால் இன்று உங்களிடம் உதவியை நாடி வந்திருக்க மாட்டேன்''

''சரி, அப்படியானால் எழுந்திருங்கள், நாம் போகலாம்''

''ஏன்?''

'என் வீட்டுக்கு இன்று மகாத்மா ஏசு பிறந்த தினம். என் வீட்டில் உங்களுக்கு விருந்து!''

''நான் பொம்மைக் கண்காட்சியைக் காணச் செல்லப் போகிறேன்''.

சஜ்ஜன் கூறினான்: ''நானும் வருகிறேன் நம்முடன் மஹிபாலும் கர்னலும் வருவார்கள்.''

''சஜ்ஜன், நான்''

''இதோ பாருங்கள், இனி நான் நீங்கள் சொல்வதை ஒப்புக் கொள்ளப் போவதில்லை. இன்றைய விருந்துக்கு நீங்கள் வந்துதான் ஆகவேண்டும். இதுவரை ஆண்களுடன் சங்கோசமின்றி நீங்கள் பழகியதில்லையா, என்ன? பிறகு ஏன்? இந்த பாம்ஃப்ளட் (பிரசுர) விஷயமாக நீங்கள் கர்னலைச் சந்திக்க வேண்டும்!''

கன்யாவுடன் வெளியே சென்ற போது சஜ்ஜனுக்கு உண்டான மகிழ்ச்சி, பலருடன் இதற்கு முன்பு சென்றிருந்த போதிலும், புதிதாக இருந்தது. இதுவரை ஏற்படாத மனநிறைவாக இருந்தது. அவன் பெண்ணை மதிக்கக் கற்றுக்கொள்ள ஆரம்பித்தான்.

# 13

புத்தாண்டின் கணக்கில் 51ஆம் ஆண்டின் ஒரு செய்தி 'ரொக்கம் பாக்கி' என்பது போல் வெளி வந்தது. தேர்தல் அறுவடையின் அமர்க்களத்திலும் இன்றைய ஜனநாயக சமுதாயத்தின் இந்தச் 'சாசுவதமான செய்தி' டிசம்பர் மாதம் 31 ஆம் தேதி செய்தித் தாட்களில் வெளியாகி லக்னோ நகரத்து மனிதாபிமானத்தையே திடுக்கிடச் செய்து விட்டது.

நகரத்து முனையில், ரெயில் பாதையின் ஓரத்தில் ஒரு சடலம் புதைக்கப்பட்டிருந்தது. நாய்கள் அதை வெளியே இழுத்துக் கொண்டிருந்தன. நெஞ்சைப் பதைக்கச் செய்த அந்தக் காட்சியைச் சிறுவர்கள் கண்டனர். நகரம் முழுவதும் அமளிதுமளிப் பட்டது. சுமார் இருபத்தைந்து வயதுப் பெண்மணியின் சடலம். நீல நிற வாயில் சேலையும் ப்ளாஸ்டிக் வளையல்களும் அணிந்திருந் தாள். துர்நாற்றம் வீசும் இந்தச் சடலம் அங்கே புதைக்கப் பட்டிருந்தது. இரண்டு தினங்களுக்கு முன்பு இது நடந்திருக்கக் கூடும். அவளுடைய ஒரு வெண்மையான செருப்பு அங்கேயே கிடந்தது.

புத்தாண்டுக்கு முதல் நாள் அழுகிப்போன வாலிபத்தைப் பற்றிய சர்ச்சை நகரத்துத் தெருக்களில் பரவியது. எத்தனையோ கொலை, கொள்ளை, பலாத்காரம் போன்ற காட்சிகளை மக்கள் கண்டிருக்கின்றனர். ஆதலால் தேர்தல் சூழ்நிலையில் இந்தச் செய்தியும் காங்கிரஸ் ஆட்சியின் புகாராக மாறிக் கப்பும் கிளையுமாகப் படர்ந்தது. இதுவரை அந்தப் பெண் யாரென்று போலீசாரால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவள் இந்துவென்று சிலரும் முஸ்லிம் என்று சிலரும் கூறினர். இந்த நகரத்தைச் சேர்ந்தவள் தான், யாரோ ரெயிலில் கொன்று போட்டிருக்கிறார்கள் எனச் சிலர் சாதித்தனர். விஷத்தைக் கொடுத்துக் கொன்றிருப்பார்கள் என்பது மற்றும் சிலரின் கருத்து. கொலையின் காரணங்கள் பற்றி மக்கள் பந்தயம் போட்டுக்கொண்டு பேச ஆரம்பித்தனர் வாய்க்கு வந்தது வார்த்தை என்றாகி விட்டது. புத்தாண்டின் புதிய தினமும் பழைய ஆண்டுகளின் தினங்களைப் போலவே ஒவ்வொரு வருக்கும் வயிற்றிலிட்ட நெருப்பாய்த்தான் இருந்தது.

சாதாரண மக்களின் வாழ்க்கை, பொருளாதார நெருக்கடியின் காரணமாக மணல் போல் சிதறிவிட்டது. லாபம் சம்பாதிக்க விழைபவர் எப்போதும் போல் 52ஆம் ஆண்டின் புதிய நாளிலும் கல்லைக் கயிறாய்த் திரிப்பதில் முனைந்துள்ளனர். எங்கும் உப்பு, புளிபற்றிய ஓலக்குரல்தான். போதாதற்குத் தேர்தல் கெடுபிடி வேறு; ஒவ்வொரு வார்டிலும், தெருவிலும் அரசியல் கட்சி ஒலி

பெருக்கிகள் தத்தம் கூக்குரலினால் மக்களைச் செவிடாக்கிக் கொண்டிருந்தன. ''சீ! தூ! ''என்று ஒருவரையொருவர் தூற்று வதில் உயிரையே பணயம் வைத்து ஈடுபட்டுக்கொண்டிருந்தனர்.

துன்புறுத்தப்பட்ட வேசி தன் வேதனையை மறைத்துக் கொண்டு தன் வயிற்று பிழைப்பிற்காக, அலங்கரித்துக் கொண்டு, வந்திருக் கும் ஆடவர்களை மகிழ்விக்க முயல்வதுபோல் புத்தாண்டின் புதிய தினத்து இரவும் பிரமாதமாக ஒளி வீசிக்கொண்டிருந்தது.

கடனை வாங்கித் திருமணம் செய்து உற்சவம் கொண்டாடும் மக்கள் பார்ப்பதற்கு வெகு ஆடம்பரமாகவும் கோலாகலத்துட னும் காட்சியளித்தாலும், அவர்களுடைய உள்ளம் கடனின் சுமையால் சிதை போன்று எரிந்து கொண்டிருக்கும்; கடைத் தெருவின் வெளிப்பகட்டும் அப்படித்தான் இருந்தது.

சொத்துக்கள் எல்லாம் திவாலாகி விட்ட சேட்டின் மில்மட்டும் இயங்குவது போல், தெருக்களில் பஸ்களும், மோட்டார்களும், வண்டிகளும் தம்போக்கில் இயங்கிக் கொண்டிருந்தன. மில் கட கடவென்று ஒலிக்கும்போது வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்குப் புதிதாக உற்பத்தி உண்டாகியிருக்குமோ, புதிய நிர்மாணம் ஏதாவது நடக்கிறதோ என்று எண்ணத் தோன்றும்.

ஆனால் உள்ளே சென்று பார்த்தால் உற்பத்தி குறைந்து சக்தி அதிகம் இயங்குவது புரியவரும், அதுவும் சேட்ஜியின் மானத்தைக் காப்பாற்றுவதற்காக. ஆனால் மனப்பால் குடித்துக் கொண்டி ருக்கும் இந்த முதலாளித்துவ மலர்ச்சியின் லட்சியமற்ற நடை எதுவரையில் செல்லும்? இப்போது அதனிடம் தெம்புதான் எவ்வளவு எஞ்சியிருக்கிறது?

சிற்றுண்டிச்சாலைகள், அல்வாக்கடைகள், வெற்றிலைப் பாக்குக் கடைகள் இவற்றிலிருந்து ரேடியோச்செய்தி வந்து கொண்டிருந் தது. கடைத் தெருவிலிருந்து வீடு வரை செல்லும் மக்களுக்கு இந்த ரேடியோவின் ஒலியைத் தங்கு தடையின்றி கேட்க முடிந்தது. சிற்சில தெருக்களில் ஒவ்வொரு வீட்டிருந்தும் வரும் ஒலி சமுதாய யத்தின் 'ஒரு குரல்' போல் ஒலித்தது. விளையாட்டைப்பற்றிச் செய்தி வந்துகொண்டிருந்தது. இன்று கல்கத்தாவில் பாரதத் திற்கும், இங்கிலாந்திற்கும் நடைப்பெற்றுக் கொண்டிருந்த ஆட்டத்தின் மூன்றும் நாள். ராய், உம்ரீகர் மற்றும் ஹஜாரே இருபத்தெட்டு ரன்கள் எடுத்து ஒரு மணி நேரத்திற்குள் ஆட்ட மிழந்தனர். மாஞ்ஜ்ரேகர் நாற்பத்தெட்டு ரன்கள் எடுத்து இன்றைய விளையாட்டில் விறுவிறுப்பை உண்டாக்கினர்.... இனி வானிலை அறிக்கை...''

ரேடியோவிற்கு 'க்ரின்விச்' நேரத்தை அறிவிக்கும் விக்கல் ஏற் பட்டது. புதிய 'ப்ரோகிராம்' (நிகழ்ச்சி) வரும் என்று எதிர்நோக்

கியபடி சஜ்ஜனும், கன்யாவும் ஒருவரையொருவர் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். இருவரும் சஜ்ஜனின் 'டிராயிங் ரூமி'ல் அருகருகே அமர்ந்திருந்தனர். நான்கைந்து தினங்களுக்குள் இருவருடைய பார்வையிலும் இருந்த தயக்கம் மறைந்துவிட்டது. ரேடியோ அறிவித்தது: ''ஆல் இண்டியா ரேடியோ—லக்னோ—அலாகாபாத்—பாட்னு—'பராக்'—இந்த இலக்கிய நிகழ்ச்சியில் இன்று மஹிபால் சுக்லா அவர்கள் எழுதிய புதிய சிறுகதையை அவரே கூறக் கேட்கலாம்: 'வந்தது புது யுகம்' சிறுகதை.''

சஜ்ஜன் சோபாவின்மேல் சாய்ந்துகொண்டு கண்களை மூடிக் கொண்டான். கன்யா நேராக ரேடியோவைப் பார்த்துக் கொண்டிருந்தாள். மஹிபாலே எதிரே தெரிவதுபோல் கவனித்துப் பார்த்தாள். மஹிபாலின் குரல் கட்டையானது. கம்பீரம், இனிமை இரண்டும் கலந்த குரல். சொற்கள் எதிரொலியின் சதங்கை கட்டிக்கொண்டு கிளம்புகின்றன; ஆனல் குரலில் ஒரு களைப்பு, இழுத்து இழுத்துப் பேசுவது போன்று இருந்தது. ரேடியோவில் கரகரவென்று ஓர் ஒலி ஏற்பட்டது.

கண்களைத் திறந்து சஜ்ஜன் கன்யாவிடம் கூறினன்: ''அவனுடைய குரலை 'ட்யூன்' செய்யுங்கள்—தாங்க்யூ; மஹிபால் தன் கதையைச் சொல்லிக்கொண்டிருந்தான். புராதன காலத்தில் உரிமைக்காக ஆடவரும், பெண்டிரும் நடத்தி வந்த போராட்டம் கதையின் கருப்பொருள். கதை முடிந்தது.

''இதுவரை மஹிபால் சுக்லா அவர்கள் தம் சிறுகதையைத் தாமே சொல்லக் கேட்டீர்கள்! ஆல் இண்டியா ரேடியோ'' மூக்கால் பேசப்பட்டது அந்தக் குரல்.

''கதை எப்படி?—நன்ருகத்தான் இருந்தது!'' கதையைப்பற்றிக் கன்யா சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

சஜ்ஜன் வானெலி நிலையத்திற்கு 'போன்' செய்து ட்யூடி ஆபீசரிடம் மஹிபாலைக் கூப்பிடும்படி கேட்டுக் கொண்டான்.

கன்யா சோபாவிலிருந்து எழுந்து ரேடியோகிராம் அருகே வந்தாள். சஜ்ஜன் செவிமடுத்தான்.

''இந்தக் கருத்து உனக்குப் பிடித்திருந்ததா?''

டெலிஃபோன் ரிசீவரைக் காதில் வைத்துக்கொண்டே சஜ்ஜன், ''இல்லை'' என்று தலையசைத்தபடி கூறினன்: ''எனக்கு என் எண்ணங்களும் என்னைச் சார்ந்தோரின் எண்ணங்களுந்தான் பிடிக்கும்... உம், சொல்லுங்கள், ஆசிரியர் அவர்களே! தங்கள் புகழ் எட்டுத் திக்கும் பரவுகிறது. 'ஏன்' இது ஒரு கேள்வியா? பத்து 'ஹண்டர்' போடலாமா அந்த ஏன் என்ற கேள்வியின் மேல்? ஆறு நாட்களாக ஏன் காணவேயில்லை? காலையிலும் இல்லை—மாலையிலும் இல்லை!... ஓகோ! பாவமே பெரிய உழைப்புத்தான் போ!, இதனுல்தான்

அதிகமாகக் குடிக்காதே என்று சொல்கிறேன். ஹ...ஹ ஹ! வெரிகுட்! வா. என் கருத்தா? என் கருத்தைவிட அதிக மதிப்பிடக் கூடிய கருத்து இருக்கிறது. அதைக் கேட்கப் போகிறீர்கள். சார்! உங்கள் சிறந்த 'ஃபான்' (விசிறி) ஒருத்தியின் கருத்து! (ரிசீவரைத் தாழ்த்திக்கொண்டு) கம் ஹியர் கன்யா, ஐ வில் இன்ட்ரட்யூஸ் யூ டு யுவர் மோஸ்ட் ஃபேவரிட் ஆதர்! (இப்படி வாருங்கள் கன்யா, உங்களை உங்களுக்கு மிகவும் பிடித்த ஆசிரியருக்கு அறிமுகப்படுத்து கிறேன்)''

கன்யா ரேடியோவைச் சற்று குறைத்து வைத்துவிட்டு டெலி போனில் நடந்துகொண்டிருந்த பேச்சைக் கவனித்தாள். சஜ்ஜன் கூப்பிடும்போது இனிய கர்நாடக இசை கேட்டுக்கொண்டிருந்தது எழுந்திருக்க மனமின்றி கன்யா போனருகே சென்றாள்.

சஜ்ஜன் மஹிபாலிடம் கூறினான்: "இதோ மிஸ் வனகன்யா வந்துவிட்டார்கள்"; "என் முட்டாள் நண்பனுடன் பேசுங்கள்'' என்று கூறியபடி ரிசீவரைக் கன்யாவிடம் கொடுத்தான்.

கன்யா புன்முறுவலுடன் ரிசீவரை வாங்கிக்கொண்டு மஹிபா லுடன் பேச ஆரம்பித்தாள்: ''வணக்கம், உம், (சிரிப்பு) நான் இதை உண்மை என்று நினைக்கமாட்டேன். நீங்கள் இருவரும் நண்பர்கள்; ஒருவரை ஒருவர் என்னவேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளலாம், எனக்கு உங்கள் கலையிலிருந்து ஊக்கம் உண்டா கிறது!... மிகவும் நன்றாக இருந்தது என்று சொல்லமாட்டேன். 'தெய்வம்' என்று ஒரு கதை எழுதியிருக்கிறீர்களே, அதுதான் மிகவும் நல்ல கதை.''

திடீரென்று கூரைக்கு மேல் விமானம் பெரிய ஓசையுடன் பறந் தது. காது செவிடாகிவிடும்படி ஆகிவிட்டது. வனகன்யா மறு படியும் பேச ஆரம்பித்தாள். மறுபடியும் விமானம் வந்து பய முறுத்தியது. வனகன்யாவினால் பேச முடியவில்லை. விமானத் தைப் பார்க்க சஜ்ஜன் பால்கனிக்குச் சென்றுவிட்டான்.

இப்போது சஜ்ஜனின் வீட்டிற்குத்தான் வருவதாகச் சொல்லி மஹிபால் ரிசீவரை வைத்துவிட்டான். இரண்டு விமானங்களின் காரணமாக மஹிபாலும் ரேடியோ ஸ்டேஷனைச் சேர்ந்த மற்றவர் களும் அலுத்துக்கொண்டனர். இதற்குள் மஹிபாலுக்கு மற்றொரு ஃபோன் வந்தது; இது கர்னலிடமிருந்து வந்தது.

மஹிபால் கூறினான்: "இங்கேயா இருப்பதா? எதற்கு? நான் சஜ்ஜனின் வீட்டிற்குச் செல்லப் போகிறேன். ஏரோட்ராமி லிருந்தா (விமான நிலையத்திலிருந்தா) பேசுகிறாய்? அங்கே என்ன வேலை உனக்கு?...''

மறுபடியும் விமானத்தின் ஒலி வந்தது—ஒன்று, பிறகு இரண்டு அதே வேகம், அதே ஓசை!

நகரம் முழுதும் திகைத்தது. குளிர் காலத்து இரவு; ஐம்பத் திரண்டாம் முதல் நாளில் புதிர் போல் இந்த விமானங்கள் கிளம்பி நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றனவே! ஐந்து நிமிடங்கள் வரை அதே ஓசை. தெருக்கள், வீடுகள் என்று எங்கே பார்த்தாலும் அதே ஓசை!

மறுபடியும் அமர்க்களம்! காகிதத் துண்டுகள் — இனிய சுந்தர முகத்தின் காந்தி போல் மிளிரும் நிலாவொளியில் புறுக்களைப் போல் பறக்க ஆரம்பித்தன. ஆகாயத்திலிருந்து வரப்பிரசாத மெனப் பொழியும் அந்தக் காகிதத் துண்டுகளை நகரத்துத் தெருக் களிலும், மாடிகளும் லட்சக்கணக்கான கரங்கள் ஏந்திக்கொண்டு வரவேற்று நின்றன. தெருக்களில் மின்சாரக் கம்பங்களின்மீது அவை நின்றுவிட்டன. அப்போதுதான் அவை காகிதத் துண்டு களல்ல. சிறு புத்தகங்கள் என்பது மக்களுக்குத் தெரியவந்தது.

பிரயாசையின்றிப் புத்தகத்தைப் பெற்றவர்கள் டர்பி லாட்டரி யில் வெற்றி பெற்ற மகிழ்ச்சி அடைந்தனர். சிற்சில இடங்களில் சண்டையிட்டுக் கொண்டு பிடுங்கினர். வசை, திட்டு, அடி எல் லாம் பிரயோகிக்கப்பட்டன. புத்தகம் கிட்டாதவர்கள் ஆத்திரத் துடன் திரிந்து கொண்டிருந்தனர். ஹிந்தி தெரிந்தவரிடம் உருதுப் புத்தகம் வந்துவிட்டது. அவர் உருது தெரிந்தவரைப் பேட்டை முழுதும் தேடிக் கொண்டிருந்தார். உருது தெரிந்தவரிடம் ஹிந்திப் புத்தகம் வந்துவிட்டது. அவர் பள்ளிப் பிள்ளைகளை எழுப்பி படிக்கச் செய்துகொண்டிருந்தார். மக்களின் ரகப்படி, வேலைகளும் நடந்து கொண்டிருந்தன.

இம்மாதிரி நேரங்களில் மக்களின் சுறுசுறுப்பு வியத்தக்கதாக இருக்கும். ஒரு சிறு புத்தகத்திற்காக ஆயிரக்கணக்கான விபத்துக் கள் நேர்ந்தன. பரபரப்பு ஒருவாறு அடங்கிற்று. கும்பல் கும்ப லாக மக்கள் ஆங்காங்கே அமர்ந்துகொண்டு புத்தகத்தைப் படித் துக்கொண்டிருந்தனர்.

புத்தகத்தின் முதல் பக்கத்தில் பென்சிலால் மூன்று முகத்திரை களின் 'ஸ்கெச்' வரையப்பட்டிருந்தது. கீழே பெரிய எழுத்துக் களில் அச்சிடப்பட்டிருந்தது: ''முகத்திரையை விலக்கு''—எழுதி யவர் குமாரி வனகன்யா''.

தன் வீட்டில் நடந்த விபத்தை விவரமாக எழுதியிருந்த ஆசிரியை இவ்விதம் குறிப்பிட்டிருந்தாள்: ''ஆடவர் சமுதாயத்தைப்பற்றிச் சொல்ல எனக்கொன்றுமில்லை. கொள்ளையிட்டுப் பழகியவன் தன் பழக்கத்தை எளிதில் நிறுத்திக் கொள்ளமாட்டான். நான் என் சகோதரிகளிடந்தான் சில விஷயங்களைக் கூற விரும்புகிறேன். பள்ளியிலும், கல்லூரிகளிலும், படிப்பவர்க்கும், வேலை பார்ப்பவ ருக்கும் நான் ஒன்று சொல்ல வேண்டும். 'காதல்' என்னும்

சொல்லைப் பெண்ணிற்கு மாறான முறையில் மக்களின் சமுதாயம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. அதைப் பாம்பென்று எண்ணி அதி லிருந்து எட்டியிருங்கள். யாரை அடிமையாக்க விரும்புகின்றனரோ அவரைக் கொடியவர்கள் முதலில் சீலமற்றவராக்கி விடுகின்றனர். சமுதாயத்தில் பெண்ணுடன் சிற்றின்ப விளையாட்டுக்கள் விளை யாடிவிட்டு, அவளுடைய ரசத்தை நுகர்ந்துவிட்டுக் காலால் நசுக் குவதே ஆயிரமாயிரமாண்டுகளாக ஆடவர்களின் தொழிலாகி விட்டது. இவ்விதம் பெண்ணை அவர்கள் உயிருடன் வதைத்து விடுகின்றனர். திருமண மந்திரங்களில் பெண்ணிற்கு அளிக்கப் படும் உரிமை, அர்த்தநாரீஸ்வரரின் உருவில் அளிக்கப்படும். சமத்துவம்—இந்த லட்சியங்கள் எல்லாம் புத்தகங்களில் வைக்கப் பட்டுப் பெரும்பாலும் இப்போது அயல் நாடுகளில் அதிகமாக பூஜிக்கப்படுகின்றன. ‘பெண்ணை பூஜிக்குமிடத்தில் தெய்வம் மகிழும்’ இந்த வாக்கியத்தை வெட்கமின்றிப் பொய்யாக்கிவிட்டுப் பாரத சமுதாயம் பெண்ணைத் தம்பட்டம், மாடு, மூடர்கள் என்ற வரிசையில் நிறுத்தி இருக்கிறது.* இதைத்தான் மக்கள் மதமெனக் கொள்கின்றனர். மதம், நீதி, அரசு எல்லாமே ஆடவர்களுக்கு உரியவை; ஆடவர் தம் இஷ்டப்படி பெண்ணை ஏமாற்றி அடிமை யாக்கி வைத்துவிட்டால், அவள் பாவம் என்னதான் செய்வாள்! தெய்வமாக மாறி அவளைக் கபளீகரம் செய்துவிட்டால் அவளால் என்ன செய்யமுடியும்? இனி நாம் பொய்ச் சாத்திரத்தைக் கண்டு அஞ்சுவதை, பொய்க் கௌரவத்தில் திளைத்திருப்பதை விட்டுவிடவேண்டும். இவற்றைத் தகர்த்தெறியப் போராடவும் வேண்டும்.

“என் தந்தை செய்த அட்டூழியங்களுக்கு எதிராக நான் வீட்டில் ஏதோ சொல்ல விரும்பினேன். அப்போது என் அண்ணியே அழுதுகொண்டு தடுத்தாள். இந்த அநீதத்தை எதிர்த்துப் போராட மக்களின் ஒத்துழைப்பை நாடினால் அதில் நம் கௌரவத் துக்கு ஒரு இழுக்கும் வராது. இதை ஆயிரம் தடவை எடுத்துக் கூறியும் அவள் கேட்கவில்லை. நம் விருப்பத்திற்கு மாறாக நாம் பயன்படுத்திக் கொள்ளப்படும்போதுதான் நம் கௌரவம் குலைந்து போகிறது. ‘காதல்’ என்னும் வலையை வீசிப் பெண்ணின் விருப்பத்தையே பாழாக்கி அவளைப் படுகுழியில் ஆடவன் வீழ்த்து கிறானே, அப்போதுதான் அவளது கௌரவம் சீர்குலைந்து போகிறது. பேதைப் பெண்! நம்மை அவன் காதலிக்கிறான்; வாழ்நாள் முழுவதும் நம் சுகதுக்கங்களை நாம் இருவரும் சமமாய்ப்

---

* பெண், பேரிகை, மாடு, அறிவற்றவன்—இவற்றை அடிக்க உரிமையுண்டு என்று துளசீதாசர் குறிப்பிட்டுள்ளார்.

பகிர்ந்துகொள்ளலாம்' என்று நம்பி விடுகிருள்...ஆனுல் என் சகோதரிகளிடம் நான் ஒன்று கேட்கவிரும்புகிறேன்; இன்று அமுத மாய் இருந்து நாளைக்கு நஞ்சாய் மாறுவதுதான் உண்மையான அன்பா! நம் உயிரைத் துளைத்துக்கொண்டு நம் உடலின் ரத்தத் தைக் கண்ணீர்த்துளிகளின் உருவில் கொண்டுவரும் இதுதான் காதலா?... வாழ்நாள் முழுதும் இதயமற்ற ஒருவனை எண்ணி உருகிக் கொண்டிருப்பதா? ஒன்றிற்கும் உதவாமல் போவதா? அழுது அழுது கண்கள் ஒளியிழந்து போவதா? கண்ணீர் பெருக்கிப் பெருக்கிப் பார்வையிழந்து தவிப்பதா?... நம்மிடம் ஓர் ஊக்கம், உற்சாகம் ஒன்றுமே இல்லாமல் போய்விடுவதா! இதுதான் காதலா என்று நான் கேட்கிறேன்? இந்தப் பிரமையில் சிக்கிக்கொண்டு தன் அழிவுக்குத் தானே அடிகோலிக் கொள் கிறது, இந்தப் பெண் குலம்? ஆடவர்களுடன் சேர்ந்து கொண்டு அவர்களுக்கு இதில் உதவி வேறு செய்கிறது. பெண்ணின் இந்த மோகம் ஒழியட்டும். திரையை விலக்குங்கள்? ஆடவரின் கொடுமைகளை எதிர்த்து அணிவகுத்துக் கிளம்புங்கள்! தன் பேரில் இழைக்கப்படும் கொடுமைகளை எதிர்த்து என்றைக்குப் பெண் வர்க்கம் போராட ஆரம்பிக்குமோ அன்றைக்குத்தான் கொடுமை களும் அழியும்!''

சஜ்ஜனும் கன்யாவும் சோபாவில் குனிந்தபடி படித்துக்கொண் டிருந்தனர். வனகன்யா எழுதியிருந்த கட்டுரையின் முடிவில் ஒரு சிறு குறிப்பு எழுதப்பட்டிருந்தது. வனகன்யாவின் கட்டுரை தேர்தல் அமர்களத்தையும் கட்சி அரசியலையும் அப்புறப் படுத்தி விட்டு சிந்தித்துப் பார்க்கத் தகுந்தது. மக்கள் இதை நன்கு கவனி யுங்கள். இந்தத் தேர்தல் போட்டியில் மக்கள் எந்த நியாயத்தைத் துடிப்புடன் எதிர்பார்க்கிருர்களோ, அதே நியாயத்தைத்தான் வனகன்யாவின் இந்தக் கட்டுரையும் கேட்கிறது. பொது மக்கள் கவனிக்கவேண்டும். (கையொப்பங்கள் : மஹிபால், சுக்லா, சஜ்ஜன் வர்மா, நகீன் சந்த்ஜைன் அதாவது கர்னல் சாஹேப்).

இதைப்படித்த கன்யாவின் கண்களில் நகைச்சுவை ததும்பியது. சஜ்ஜனுக்குச் சிரிப்புடன் கோபமும் சேர்ந்து வந்தது. சஜ்ஜன் கூறினன்: ''இந்தக் கர்னல் எப்போதும் இப்படித்தான்! சரியான மடையன். இப்படி ஏன் அசட்டுத்தனமாகக் குறிப்பிட்டு கையொப்பமிட்டிருக்கிருன்? போதாதென்று என் பெயரையும் மஹிபாலின் பெயரையும் போட்டிருக்கிருன் முட்டாள்!''

கன்யா சிரித்தாள்: ''இதனுல் என்ன? கர்னல் சாஹேப் செய்தது பிரமாதந்தான்!''

சிகரெட்டை வாயில் வைத்துக் கொண்டு லைட்டரை எடுத்தபடி சஜ்ஜன் கூறினன். ''கிறிஸ்துமஸ் தினத்தன்று உங்கள்

முன்னிலேயில்தானே அவனிடம் நான் கட்டுரையைக் கொடுத்தேன். அதற்குப் பிறகு இன்றுவரை அதுபற்றி அவன் என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லே. ஒருவிதமான கருத்தையும் வெளியிடவில்லே!''

''உம்! உங்களிடம் கூருமல் இருந்திருப்பாரா என்ன?''— ஒருவித அவநம்பிக்கையைப் பொய்க்காக வரவழைத்துக்கொண்டு கன்யா சஜ்ஜனேப் பார்த்தாள். வெற்றியால் துள்ளிய உள்ளம் தன் உள்ளத்து ரகசியத்தைத் துள்ளிக்கொண்டு கண்களினூடே வெளிப்படுத்தியது. சஜ்ஜன் மகிழ்வடைந்தான். உள்ளத்து ரகசியம் என்னும் திரை, இருவருக்குமிடையிலிருந்து விலகிக் கொண்டிருந்தது; இந்த உணர்ச்சியை இன்றைய பொக்கிஷப் பெட்டியில் நிரப்பிவிட்ட பிறகு தன் பேச்சைக் கன்யா ஆரம்பித்தாள்: ''இந்த ஸ்கெச் நீங்கள் போட்டதுதானே?''

சஜ்ஜன் காரணமின்றி உரக்கச் சிரித்துவிட்டுப் பதிலளித்தான். ''இதுவும் கர்னலின் வேலே என்றுதான் சொல்ல வேண்டும். நான் வரைந்திருந்த 'ஸ்கெச்'சைத் தெரியாமல் எடுத்துக்கொண்டு சென்றிருக்கிருன். தேவா, மிஸ்ரிக், படேச்வர் போன்ற கிராமத் திருவிழாக்களின் 'ஸ்கெச்' வரைந்திருந்தேன். என்னிடம் கேட்டிருந்தால் புதிய சித்திரம் வரைந்து கொடுத்திருப்பேன்.''

''ஆனுல் இது நன்ருக இருக்கிறதே—நிறையப்பணம் செலவழித்திருப்பர் போலத்தோன்றுகிறது.''

''உம்! பணம் பின்பு எதற்கு?''

''தமக்காகத்தான் யாரும் செலவழித்துக்கொள்வார்கள். ஆனுல் பிறருக்காகச் செலவழிப்பது கடினம். ஏதாவது லட்சியத்தை நிறைவேற்றச் செலவழிப்பது இன்னும் கடினம்!'' உணர்ச்சி மிகுந்த குரலில் கன்யா பதிலுரைத்தாள்.

நல்ல இலட்சியத்திற்காக உடல் — பொருள் — ஆவியைத் தியாகம் செய்யத்தானும் தன் நண்பனும் எப்போதும் காத்திருப்பதாகக் காண்பித்துக் கொள்ள விரும்பி சஜ்ஜன் சோபாவின் பிடிகளில் கைகளேப் பரப்பிக்கொண்டு கூறினுன்: ''இதுதான் என் வாழ்வின் முதல் குறிக்கோள்; இம்மாதிரி பரந்த உள்ளம் படைத்தவருடன்தான் என் உள்ளமும் உறவு கொள்ளும். இது மிகச் சிறந்த குணம் என்று கருத மாட்டேன். ஒவ்வொரு சராசரி மனிதனிடமும் இந்த இயல்பு இருந்தாக வேண்டும்''

கன்யா அன்புடன் அவனேப் பார்த்தாள். பார்க்கும்போது நாணம் இப்போது இருக்கவில்லே. ஆனுல் ஆவல்தான் அதிகரிக்க ஆரம்பித்தது. ஒவ்வோர் ஆடவனுக்கும் பெண்ணிற்கும் இயற்கையாக ஏற்படும் விருப்பம்போல் சஜ்ஜனும் உள்ளத்திற்கு ஓர்

ஆதாரம் கிடைத்தாற்போல் உணர்ந்தான். கன்யாவின் பார்வையில் வெளிப்பட்ட அதே உண்மை சஜ்ஜனுடைய உள்ளத்தில் உறங்கிக் கிடந்த உண்மையைக் கிளறிவிட்டது; இந்தக் கிளர்ச்சியில் அவன் சுவையை நுகர்ந்தான். எழுந்து நின்று சவாலுக்கு ஈடு கொடுக்கும் உணர்வு அவனுக்கு உண்டாயிற்று. கன்யாவிற்கு முன்னே அவன் அடிக்கடி தன் மனத்தைக் கட்டுப்படுத்திக்கொள்ள நேர்ந்தது. அன்புகனிந்த பார்வையுடன் கன்யா தன்னைப் பார்ப்பதைக் கண்ட சஜ்ஜன் தன் பேச்சின் மகிமையை உணர்ந்து விழிப்படைந்தான். பேச்சை மாற்றியபடி கூறினன். ''உங்கள் கட்டுரை மிகவும் அழகாக இருக்கிறது. மக்கள் இதனால் பெரிதும் பயன் அடைவர்.''

கன்யா தலை குனிந்து சிந்தித்தாள். பிறகு கூறினாள்: "என்னவாகுமோ, தெரியவில்லை, இந்தக் கொடுமையை வெட்ட வெளிச்சத்தில் உரைக்காதவரையில் நான் எனக்குள் புழுங்கிக் கொண்டிருந்தேன். அன்று எத்தகைய துடிப்புடன் உங்களிடம் வந்தேன் என்று உங்களால் கற்பனை செய்ய முடியாது. உங்களிடம் கர்னல் சாஹேபிடமும் ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. பிறகுதான் என் மனம் நிம்மதியடைந்தது. அநீதம் உலகில் நடக்கிறது. ஆனால் அதைத் தகர்த்தெறிய வேண்டிய சாதனங்களும் கிடைக்கின்றன. என்று நான் நினைத்தேன். பழிக்குப் பழி வாங்கிவிட்டோம் என்று என்க்குத் தோன்றிற்று. இவ்வளவு அமர்களப்படுத்தி என் உள்ளத்து உண்மையைப் பிரசாரம் செய்துவிட்டேன். ஆயினும் என்ன பலன்? ஆயிரம்—லட்சம் மக்கள் இந்தப்பிரசாரத்தைப் படிப்பார்கள். ஓரிரு தினங்கள்வரை காரசாரமாக விவாதிப்பார்கள்; அதற்குப் பிறகு?— மறுபடியும் இதே கதைதான். முறைப்படி பிறக்கவில்லை என்று குழந்தைகளைக் கொல்வதும், பெண்கள் தீயினால் தற்கொலை புரிந்துகொள்வதும்...''

தன் காதலி (ஆம், காதலிதான். ஆனால் இன்னும் வெளிப்படையாக அந்தச் சொல் வரவில்லை) கன்யாவிற்கு ஆறுதல் அளித்தபடி உணர்ச்சி வசப்பட்டு சஜ்ஜன் கூறினன்.

"முடியாது! இந்த அநீதத்தை வேருடன் களைந்தெறிய நாம் இறுதிவரை போராடுவோம்''.

அவனுடைய பேச்சின் உறுதியை அவனது பார்வையிலிருந்து தெரிந்துகொண்ட கன்யா ஒரு பெருமூச்சுடன். கூறினாள் "எப்படி முடியுமோ, தெரியவில்லை. நம் அரசியல் கட்சிகள் சமுதாயத்தைப் புறக்கணித்துவிட்டு ஆளும் வர்க்கத்தின் பின்னே ஓடுகின்றன"

''ஓடட்டும். பொதுமக்கள் தாங்களாகவே அவர்களை விரட்டியடித்துவிடுவார்கள்''.

''அப்படிச் செய்வதால் சமுதாயத்தில் நேர்மை நிலைக்காது,

சஜ்ஜன் பாபு. குழப்பத்தை உண்டு பண்ணுவது மனிதப் பிரச்னைக்குத் தீர்வாகாது. சமுதாய உணர்ச்சியை மாற்றி அமைக்க வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் இந்த அநீதங்கள் எல்லாம் நடந்து கொண்டுதான் இருக்கும்... அரசியல் இப்போது செல்லும் போக்கைப் பார்த்து! அதை நாம் திட்டினாலும், சமுதாயம் என்னும் வண்டியின் ஸ்டியரிங் வீல்' பாலிடிக்ஸ் (அரசியல்) தான்''

''நான் இதை ஒப்புக் கொள்ள மாட்டேன். கல்சர்?''

''கல்ச்சர் பெட்ரோலைப் போல் தேவைதான். அதின்றி வண்டி இயங்காது; இதனால் ஸ்டியரிங் வீலின் மகத்துவம் குறைந்து விடவில்லையே! செக்ரடேரியட், போலீஸ், மினிஸ்டர் (அமைச்சரவை) இவையின்றி இயங்கும் சக்தியையும், நாகரிகத்தையும் சமுதாயம் அடைந்தாலன்றி அரசியலின் ஆதிக்கம் இவ்வாறு அதிகமாகத் தான் இருக்கும். இந்த நிலைமை குறைந்தபட்சம் நூறாண்டுகள் வரையிலாவது இருக்கும்''.

கன்யா பேசாமல் இருந்து விட்டாள். சஜ்ஜனும் சிந்தித்த வண்ணம் உட்கார்ந்திருந்தான். கன்யா மறுபடியும் யோசனை செய்தபடி கூறினாள்: ''எந்தக் கட்சியைச் சேர்ந்தவராயினும் சரி, நம் அரசியல் தலைவர்களில் 90 சதவிகிதம் பண்புடன் சிந்திக்கத் தெரியாதவர்கள். பண்புடன் எதையும் பார்க்கும் நோக்கு மலர்ச்சி அடைந்தாலன்றி அரசியலில் ஆத்மிக சக்தி (ஸ்பிரிசுவல் ஃபோர்ஸ்) வருவதற்குவழி கிடையாது. அதுவரை அரசியல், அதிகார ஆதிக்க அரசியலாகதான் இருக்கும்.''

''நீங்கள் ஆத்மிக சக்தியை ஒப்புக் கொள்கிறீர்களா! கம்யூனிஸ்டுகள் இதையெல்லாம் நம்பமாட்டார்கள் என்று நான் எண்ணினேன்''.

''கம்யூனிஸ்டுகள் நம்பாவிட்டால், மற்றவர்கள் மட்டும் சரிவர நம்புகிறார்களாக்கும்?'' கன்யா சிரித்தபடி கூறினாள்: ''கம்யூனிஸ்டுகளும் நம்புகிறார்கள்; ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் ஒவ்வொருவரும் அறிந்து கொள்ளும் விதத்திலும் ஒப்புக் கொள்ளும் விதத்திலும் வேற்றுமை இருக்கிறது. உண்மையில் பார்க்கப்போனால் ஸ்பிரிட், ஆத்மா, பரமாத்மா என்ற வார்த்தைகள் எந்தச் சக்தியின் பெயர்கள் என்பதே எனக்குத் தெரியாது. மனசில் உள்ள ஏதோ ஒரு உணர்ச்சியை வெளியிட இந்தச் சொற்கள் வந்து விடுகின்றன.''

''என்னைப் பொறுத்தவரையில் எனக்குத் தெரியும்'' கன்யா அவனை உற்று நோக்கினாள். சஜ்ஜன் புன்முறுவலுடன் அன்பு கலந்த குரலில் பேசினான்; ''என் ஸ்பிரிட், ஆத்மா, பரமாத்மா எதையோ சொல்லுங்கள் எல்லாம் ஒரு காட்டுப் பெண்தான்...''

இந்த வார்த்தைகள் வனகன்யாவை என்னவோ செய்தன; ஒரு முறை கண்பார்வையில் அவள் அமுதத்தைப் பொழிந்தாள். பிறகு பதில் கூறாமல் தலையைக் குனிந்து கொண்டாள். வாசலுக்கு வெளியே மஹிபால், கர்னல் இருவரின் குரல்களும் ஒலித்தன. கர்னல் கூறிக்கொண்டிருந்தான். "நாளைக்குத் தெரியும் பார், நகரத்தில் இது என்ன செய்கிறது என்று"

இருவரும் அறைக்குள் நுழைந்ததும் வனகன்யா கரங்குவித்து நின்றாள். மஹிபால் பண்புள்ள கம்பீரத்துடன் அவளைப் பார்த்தான்; கர்னல் பாசத்துடன் சிரித்தபடியே பார்த்தான்.

கர்னல் அவளைக் கேட்டான்: "இன்றைய வேடிக்கை எப்படி இருந்தது?"

கன்யா பதிலளிப்பதற்குள் சஜ்ஜன் மஹிபாலிடம் கூறினான்: "யாராவது நல்ல வக்கீல் இருந்தால் சொல்லேன்!"

மஹிபால் பேசுவதற்குள் கர்னல் ஆவலுடன் கேட்டான்: "வக்கீலா? இப்பொழுதே ஃபோன் செய்கிறேன். எதற்கு வக்கீல்?"

"உங்கள் பேரில் ஒரு வழக்கு!" சஜ்ஜன் மிகவும் கம்பீரமான முகபாவத்துடன் பதிலளித்தான்.

"மடையனுக்கு வேண்டும், வேண்டும். அப்படித்தான் செய்ய வேண்டும்" என்று கூறிய படியே மஹிபால் கன்யாவைப் பார்த்துச் சொன்னான். "மன்னிக்க வேண்டும், வாயிலிருந்து வசை வந்து விட்டது,"

கன்யா சிரித்தாள். சஜ்ஜன் கூறினான்: "அவனுக்கு இது போதாது. எங்கள் பெயரில் என்ன 'ஸ்டேட்மென்ட் கொடுத்தாய்?"

"கொஞ்சம் திருவாய் மலர்ந்தருள் பார்க்கலாம்!" அருகே இருந்த முக்காலியிலிருந்து பிரசுரத்தை சஜ்ஜன் எடுக்கமுயன்றான். கர்னல் சங்கோசத்துடன் சிரித்தான்.

மஹிபால் கூறினான்: "வழியெல்லாம் நான் இவனைத் திட்டிக் கொண்டே வந்தேன். மொழியில் எத்தனை பிழைகள்! அத்துடன் என் பெயரைச் சேர்த்திருக்கிறான்"

"மொழி கிடக்கட்டும், அதன் பொருளைப் பார்க்கவேண்டும்! மொழியில் தவறு பெரிய பெரிய இலக்கிய கர்த்தாக்கள் கூடச் செய்து விடுகின்றனர். ஆனால் இவர் நகரம் முழுவதையும் பிரமிக்கச் செய்துவிட்டாரே! உங்களையும் என்னையும் கூடத்தான்; இது சாதாரணமான செயலா என்ன?" வனகன்யா சொன்னாள்.

கர்னல் மிகவும் மகிழ்ச்சியுற்றான்; உரத்த குரலில் கூறினான். "போதும்! நீங்கள் வாழ்க! எனக்காக நீங்கள் இன்டெலக்சுவல் (அறிவுத்திறன் மிக்க) பதில் சொல்லக் கிடைத்து விட்டீர்கள், இந்த முட்டாள்களை அடக்க! இந்தப் பசங்களுக்கு மாங்காய்

தென்படாது, இலைகள்தான் தென்படும். அதிலும் தங்களை மிகப் பெரிய ஆர்ட்டிஸ்ட் என்று சொல்லிக்கொள்கிறார்கள்!''

மஹிபால் கூறினான்: ''உங்களால் இவனைச் சும்மா விட்டோம். உங்கள் கட்டுரை மிகவும் அழகாக இருந்தது. நீங்கள் அழகாக எழுதுகிறீர்கள்''

கன்யா பணிவுடன் தலை குனிந்து கொண்டாள்: ''வெளியிடு வதற்கு முன்பு உங்களிடம் காண்பிக்க விரும்பினேன். நிறையத் தவறுகள் இருந்திருக்கும்''

''இல்லையே! ரொம்பவும் அழகாக எழுதியிருக்கிறீர்கள்! ஆனால் ஒரே ஒரு குறைதான். இந்த மடையன் முதலிலேயே சொல்லி யிருந்தால் என்னிடம், அந்தக் கட்டுரையை ஆதரிக்கும் வகையில் அழகான குறிப்பு ஒன்று எழுதித் தந்திருப்பேன்''! என்று மஹிபால் கூறினான்.

சஜ்ஜனும் உடனே பேசினான்: ''அதைத்தான் நானும் சொல் கிறேன். இவனுக்கு என்ன ஆவேசம் வந்துவிட்டதோ. ஒரு வார்த்தை கூட யாரிடமும் கேட்கவில்லை.''

''இது தான் பாலிஸி, (சரியான கோட்பாடு) தேர்தலில் காகிதத் துண்டுகளுக்கு வால்யூ (மதிப்பு) இருக்கிறது-எந்தப் பேப்பர் எப் போது! அவுட் ஆகுமென்று யாருக்கும் தெரியக் கூடாது. அப் போதுதான் அது பொதுமக்களைப் பிரமிக்க வைக்கும்'' என்று கர்னல் கூறினான்.

''ஆமாம், மண்ணு!''

''நாளைக்குப் பாருங்கள்.''

''இல்லை, நிச்சயம் மக்களை அது கவரும்'' கன்யா கூறினாள். அவளுடைய பேச்சிற்கிடையே சஜ்ஜன் புன் முறுவலுடன் கூறி னான்.'' மக்களை இது என்ன செய்துவிடப் போகிறது? என்று இப்போதுதானே நீ சொன்னாய்?''

கன்யா வெட்கமடைந்தாள் வந்த ரோசத்தை அடக்கிக்கொண்டு சிரித்தபடியே சஜ்ஜனிடம் கூறினாள்: ''நீங்கள் என் பேச்சின் பொருளையே மாற்றப்பார்க்கிறீர்கள். (பிறகு கர்னலிடம் கூறினாள்) நான் இவரிடம் என்ன சொன்னேன் தெரியுமா? 'வீணாக உங்களுடைய பணம் எவ்வளவு செலவழிந்ததோ! மக்கள் நான்கு தினங்கள் வரை உற்சாகத்துடன் விவாதிப்பார்கள், பிறகு அதே கொலைதான், அதே கொடுமைதான்' என்றேன்.''

மஹிபால் கூறினான்: ''உண்மைதான். சமுதாயம் மாற வேண்டுமானால் அதன் பல குருட்டு நம்பிக்கைகள் மாறியாக வேண்டும். இதற்கு ஒரு பெரிய போராட்டம் தேவை. மக்களுக்கு நிறுவனம் ஒன்று தேவை!''

வெகு நேரம் வரை விவாதம் நடந்து கொண்டிருந்தது. கர்னலும்

மஹிபாலும் கிளம்பினர். அவர்களுடன் சஜ்ஜனும் அறையின் வாசல் வரை வந்தான். அவன் கர்னலிடம் கேட்டான்: ''எத்தனை செலவாயிற்று?''

''ஏன், செலவை நீங்கள் கொடுக்கப்போகிறீர்களா!''

''ஆமாம்!''

கர்னல் மஹிபாலைப் பார்த்துக்கூறினன்: ''இந்தக் கனவானின் பேச்சைக் கேட்டாயா? (சஜ்ஜனிடம்) இத்துடன் கூட இரண்டாயிரம் ரூபாய் மதிப்புள்ள ப்ரசன்ட் (பரிசு) வேறு கொடுத்தாக வேண்டும். மொத்தமாகச் சேர்த்து, உன்னிடம் 'பில்' அனுப்புகிறேன்.''

''ஆமாம்! நீ இவளைத்தான் திருமணம் செய்துகொள்ளப் போகிருய் என்று எனக்கும் தோன்றுகிறது. பெண் மிகவும் நல்லவள். எனக்குப் பிடித்திருக்கிறது.''

சஜ்ஜனுக்கு நண்பர்களின் இந்த வார்த்தைகள் மனதிற்குப் பிடித்திருந்தன. அவன் சிரித்தபடி கூறினன்: ''என் மூளையில் 'ஆட்டோ சஜஷனே' (தானகவே யோசனை செய்ய) வழி ஏற்படுத்துகிறீர்கள். பாவம், அவளுக்குச் சுய நலன் எதையும் எதிர்பாராமல் நான் உதவி.''

''ஆகா! பெரிய பரோபகாரி!'' கர்னல் சிரித்துக்கொண்டே கூறினன்: ''இல்லையப்பா, எனக்கும் இந்தப் பெண்ணைப் பிடித்திருக்கிறது. கொஞ்சம் கம்யூனிஸ்டு அவ்வளவு தான். ஆனால், கண்களில் நன்னடத்தை தெரிகிறது!''

அவர்கள் இருவரும் சென்ற பிறகு சஜ்ஜன் கன்யாவை அவளுடைய வீட்டில் விட்டு வந்தான். தன் தோழியின் வீட்டை விட்டு மாதம் பத்து ரூபாய் வாடகை கொடுத்து ஓர் இருட்டறையில் கன்யா இருக்கலானள். வண்டியிலிருந்து இறங்கியதும் ஒரு பெரிய கவரை எடுத்து சஜ்ஜன் அவளிடம் கொடுத்து, ''இந்தா இதை வைத்துக்கொள்'' என்றன்.

''என்ன?''

''வைத்துக் கொள்ளேன்!''

''ரூபாயா?''

''ஆமாம், உபயோகப்படும்.''

''வேண்டாம்.''

''நான் இருக்கும்போது நீ கஷ்டப்படுவதை என்னல் சகிக்க முடியாது.''

''எனக்கு ஒரு கஷ்டமும் இல்லையே.''

''உன்னிடம் செலவிற்குப் பணம் இருக்கிறதா?''

கன்யா பேசாமல் இருந்தாள் சஜ்ஜன் கூறினன்:

''அப்படியானல் இதை வைத்துக்கொள்ளேன்! இதை அவமானமாகவோ, பெரிய உதவியாகவோ கருதக்கூடாது!''

“இல்லை . வேண்டாம்... நமஸ்தே”

கன்யா குனிந்த தலையுடன் மெள்ள தன் அறைக்குப் போய் விட்டாள்.

ஒரு பெண்ணின் முன்னிலையில் சஜ்ஜனின் ரூபாய் தோல்வி யடைந்து பின் வாங்கியது இதுதான் முதல் தடவை.

மூடப்பட்டிருந்த வீட்டில் சின்னஞ்சிறு மூன்று பூனைக் குட்டிகள் தாயியின் மஞ்சம் போன்ற கட்டிலில் படுத்துக்கொண்டு கொம்மாளம் அடித்துக்கொண்டிருந்தன. கண்கள் திறந்து கொண்டால். பூனைக்குட்டிகளால் சும்மா இருக்கமுடியா. அவற்றிடம் தாயி மிகவும் அன்புடன் நடந்துகொள்வாள். சாக் கடையைச் செங்கல் வைத்து மூடினாள். மாடிப்படிக் கதவை மூடி விட்டாள். அதைத்திறப்பதே கிடையாது. கடுவன் பூனை வந்து விடப் போகிறதே என்ற கவலை அவளுக்கு. பூனைக் குட்டிகளின் தாயைக்கூடத் தாயிக்குப் பிடிக்காது. குட்டிகளுக்குப் பால் கொடுக்க ஆயிரம் முயற்சிகள் செய்து அது தாயின் வீட்டிற்குள் வரும். தாயி அதைப்பார்த்ததுமே ஒரு கோலை எடுத்துக்கொண்டு ஓடித் துரத்துரத்துவாள்.

இருளடைந்த வீட்டின் கூரையிலிருந்து கீழே மூடிவைத்திருந்த கங்காளத்தின் மீது பூனை ஒரு பாய்ச்சல் பாய்ந்தது. அதைப் பார்த்ததும் மூன்று குட்டிகளும் ஒன்றின் மேல் ஒன்றாய் உட்கார்ந்து கொண்டு ‘மியாவ்—மியாவ்’ என்று பரப்பரப் படைந்தன. பூனை, தாயியின் கட்டிலில் ஏறிப்படுத்துக் கொண்டது; குட்டிகள் பால் குடிக்க ஆரம்பித்தன. ஒரு குட்டி அதன் முதுகின் மீதேறி அங்கிருந்து பால் குடித்தது; பரபரப்பில் வழுக்கிக் கீழே வந்துவிட்டது. மூன்றும் மகிழ்ந்து கொண்டிருந்தன; தாய்ப்பூனையும் பாசம் மேலிடவாலை ஆட்டிக்கொண்டிருந்தது.

பூனைக் குட்டிகளுக்காகத் தாயி கடையிலிருந்து ஒரு மண்கலயம் நிறையப் பால் வாங்கி வந்தாள். வழியில் விஷமக்காரப் பையன் பிரபு வாயில் வெற்றிலையை அடக்கிக்கொண்டு சிகரெட் ஊதிக் கொண்டு வந்தான். தாயியைக் கண்டதுமே ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து தாயியின் தடியைப் பிடித்துக்கொண்டான். தாயி அதிர்ச்சியடைந்தாள், மண் கலயத்திலிருந்து பால் சிதறிக் கொட்டிவிட்டது.

பிரபு கூறினான்: “தாயி, சாகப் போகிற காலத்திலே உனக்கு எதற்குப் பாலும், தயிரும்! கொடு இப்படி, என்னைப் போன்ற பையன் தான் குடிக்க வேண்டும்.”

தாயிக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. மறுபடியும் பிரபு கூறினான்: “இதோ பார், கோபித்துக் கொள்ளாதே. வீடுபோய்ச் சேருவதற்குள் பால் கொட்டிவிடும், இப்படிக் கொடுத்துவிடு.”

தாயி உண்மையில் பெரிய திண்டாட்டத்தில் அகப்பட்டுக் கொண்டாள். இம்மாதிரி பிரமையில் ஆழ்ந்து அவள் தவித்ததே கிடையாது. போர்க்களத்தில் தாயி முதல் முறையாகத் தோல்வியை ஒப்புக் கொள்கிறாள் என்று தோன்றுகிறது; சிடு சிடுத்துக்கொண்டே அவள் சொன்னாள்: ''நீ நாசமாய்ப் போக! என்னை விடடா! குழந்தைகள் பசியால் வாடிக் கொண்டிருக்கும்!''

''அடே! என்னைத் தவிர உனக்கு வேறு குழந்தைகள் வேறு இருக்கின்றனவா? எல்லோருக்கும் இப்போதே தெரிவித்து விடுகிறேன். ஐயா, கடைக்காரர்களா? தாயி என்னைத் தத்துப் பிள்ளையாக எடுத்துக் கொண்டிருக்கிறாள். இவர்களுடைய பணம் எல்லாம் இனிமேல் என்னைச் சேர்ந்தது ..உயிருடன் இருக்கும் போதும் சரி; இறந்த பிறகும் சரி''' என்றான்.

தெருவின் இருபக்கங்களிலும் உள்ள கடைக்காரர்கள் அனைவரும் சிரித்தனர். தாயியின் அருகே சென்று கொண்டிருந்த மக்கள் யாவரும் சிரித்தனர். நாற்புறத்துக் சீண்டுதலினாலும் தாயி ஆத்திரம் அடைந்தாள். ஆயினும் கையிலிருந்த பால் கலயம் காரணமாகப் பேசாமல இருந்தாள். அவள் திட்டு வதையும் நிறுத்தி விட்டாள். உலையடுப்பிலிட்ட இரும்பைப் போல கொதித்துக் கொண்டிருந்தாள்.

திடீரென்று தடியை விட்டுவிட்டு அவள் மேலே நடந்தாள். பிரபு விற்கு அவள் இப்படிச் செய்வாள் என்ற நம்பிக்கையிருக்கவில்லை. ஆதாரம் இல்லாததால் தடி தெருவில் விழுந்தது; பிரபுவின் கையில் அடிபட்டது. எழுந்து தடியைக் கொடுத்தபடி அவன் கூறினான்: ''சரி கொண்டுபோ...தாயி! கழியைக் கொண்டுபோ!''

தாயி தொலைவில் சென்று நின்றாள்! கோபத்துடன் அவனைப் பார்த்துக் கூறினாள்: ''வீட்டுக்கு வந்து கொடுத்து விட்டுப் போடா, பாவிப்பயலே, இல்லாவிட்டால் நாளைக்கு உன்னைப் பூண்டோடு அழித்துவிடுவேன்.''

பிரபுவிற்குச் சுருக்கென்றது; வேடிக்கையாகப் பேசுவதை மறந்து விட்டான். பயந்து போன அவன் ஒரு கேலிச் சிரிப்புடன் கூறினான்; ''நாளைக்குத்தானே நீ என் குலத்தையே அழிக்கப் போகிறாய்! நான் இன்றே உன்னைத் தீர்த்து விடுகிறேன்பார். இதோ உன் கொம்பு; வேண்டுமானால் எடுத்துக் கொள்.''

''இல்லாவிட்டால் போ! உன் வீட்டிற்கு வந்து என்னால் தரமுடியாது''

தாயி தன் வீட்டுத் தெருவின்பக்கம் திரும்பினாள்.

கடைக்காரர்கள், பிரபுவுக்கு அறிவுரை சொன்னார்கள். ஆனால் அவன் கேட்கவில்லை. தெய்வ பக்தியுள்ள ஒரு தட்டான் தன் மகனை அனுப்பித் தாயிக்குத் தடியைக் கொடுத்துவரச்சொன்னான்.

படபடவென்று தாயி உள்ளே நுழைந்ததுமே பூனை குதித்தது. ஒரு குட்டி பால் குடிப்பதில் முனைந்திருந்ததால் தொப்பென்று கட்டிலுக்குக் கீழே விழுந்தது. நிலைப்படியில் தாயியைப் பார்த்ததுமே ஒரு குட்டி ஓடி வந்து 'மியாவ் மியாவ்' என்று மெல்லிய குரலில் கத்தியது. கட்டிலுடன் போராடிக் கொண்டிருந்த மற்ற இரண்டும் கீழே விழுந்த தன் சகோதரனின் நிலையைக் காணத் தலைமாட்டிற்குச் சென்றன. இப்போது பால் கிடைக்கும் நேரம் என்பது பத்து நாளைய குட்டிகளுக்குத் தெரிந்துவிட்டது! விழுந்திருந்த பூனை எழுந்து ஓடி மறுபடியும் விழுந்தது. கட்டிலிலிருந்த வற்றில் ஒன்று கீழே குதிக்க முயன்று விழுந்தது. கடைசிக் குட்டி கட்டிலிலேயே இருந்துகொண்டு 'மியாவ் மியாவ்' என்று கத்தியது.

இரண்டு குட்டிகளும் முற்றத்தில் வந்து தாயியின் காலுடன் தமது முகங்களைத் தேய்த்துக் கொண்டன. தாயியை அடி எடுத்து வைக்க விடவில்லை. தாயியின் எரிச்சல் மீது அன்பின் குளுமை பட்டது. இரண்டிற்கும் தரையில் கொஞ்சம் பாலை விட்டுவிட்டு அவற்றிடமிருந்து தன்னை அவள் விடுவித்துக் கொண்டாள். தூணில் சாய்த்து வைத்திருந்த அலுமினிய மூடியை எடுத்து அதில் பாலை விட்டுவிட்டு இரண்டு குட்டிகளையும் அங்கே எடுத்து வந்தாள். பிறகு கட்டிலிலிருந்து மூன்றும் குழந்தையையும் எடுத்துப் பாலருகே விட்டாள்.

இதற்குள் வாசற்கதவு ஓசைப்பட்டது. மனித வாடை பட்டதுமே தாயி மறுபடியும் ஆவேசமடைந்தாள்.

"தாயி, இந்தா, கழியை எடுத்துக்கிட்டுப்போ?" வெளியேயிருந்து குரல் கேட்கவே, ஒரு பிடி கறுப்பு எள்ளை எடுத்து வந்து, கூப்பிட்டவன் பிரபு என நினைத்துத் தட்டானுடைய மகன்மீது தாயி போட்டு விட்டாள். மந்திரம், மாயம், வைத்தியம் எல்லாம் நடந்து கொண்டிருந்தன. தட்டான் பபூதி காவலாளியிடமிருந்து இந்த விஷயத்தைக் கேட்டான். புருஷோத்தமனின் கடையில் நின்றுகொண்டு அவனுடைய தம்பியின் உடல் நிலை பற்றி விசாரித்தான். புருஷோத்தமனிடம் அநுதாபம் கொண்ட எல்லோரும் தாயியிடம் அபாரமான கோபமடைந்தனர். பபூதி கூறினன்: "வீட்டுக்குப் போய்விட்டுப் பிறகு உன்னிடம் வருகிறேன்."

பபூதியின் வீட்டில் அப்போது மூத்தவளும் நந்தோவும் தாம் இருந்தனர். சங்கரும் இளையவளும் இரண்டாம் ஆட்டத்திற்கு சென்றிருந்தனர். தாய், தங்கையின் கணவன் இறந்த செய்தி கேட்டுக் காஸ்கஞ்ஜ் சென்றிருந்தாள். அவளுடைய பேரனும் கூடச் சென்றிருக்கிறுன். மனியா சாமான்கள் வாங்கி வரக் கல்கத்தா சென்றிருந்தான்.

மனியாவிடம் அடிபட்டு, திருட்டு வெளிப்பட்டதிலிருந்து நந்தோ வீட்டை விட்டு வெளியே செல்லவில்லை. மனியா இட்ட கட்டளை காரணமாக கோமதி நதி, கோயில் இவற்றிற்கு மட்டுமல்ல தாயி யைக் காணச் செல்வதுகூட நின்று விட்டது. முதல் இரண்டு நாட் கள் தன் அறையை விட்டுக்கூட வெளியே வரவில்லை. பிறகு வீட்டு வேலைகளில் சற்றே ஈடுபட்டாள். தாயும் சரியாகப் பேசவில்லை. மனியாவின் குழந்தைகளிடம் அன்பு காண்பித்து உறவைப் பிணைத் துக் கொள்ளப் பார்த்தாள் நந்தோ. மனியா குளித்துச் சாப்பிடும் போது, அவனுடைய துணிகளைத் துவைத்துக் கொண்டிருப்பாள். இதற்கிடையே சிற்றப்பன் இறந்த செய்தி வந்தது. தாய் காஸ்கஞ்ஜ் சென்று விட்டாள். தாய் சென்ற பிறகு நந்தோவிற்குத் துணிச்சல் பிறந்தது; தன் அண்ணிகளுக்கு வீட்டு வேலைகளில் உதவி செய்ய ஆரம்பித்தாள். இளையவள் காலையில் கணவனுக்குத் தேநீர் கொடுக்க வேண்டும், 'ஹைஸ்கூல் கோர்ஸ்' படித்தாக வேண்டும். கணவனிடம் 'ஹோம் வொர்க்' முடித்து வாங்கிக் கொள்ள வேண்டும். பிறகு தாராவுடன் பேசவேண்டும். இப்படி வேலைகள் இருந்ததால் வீட்டு வேலைகள் செய்ய நேரமே கிடைப்ப தில்லை. மாமியார் ஊருக்குச் சென்றதிலிருந்து மனியா செலுத்தும் அங்குசத்தால் வீட்டுப் பொறுப்பு முழுவதும் மூத்தவள் பேரிலேயே விழுந்துவிட்டது. ஆகையால் நந்தோவிற்கு அவளுடன்தான் அதிக நேரம் இருக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அவள் முன்னிக்காக 'ஸ்வெட்டர்' போட ஆரம்பித்து விட்டாள். மூத்தவளிடமிருந்து புது விதமான 'ஸ்வெட்டர்' போடவும் கற்றுக் கொண்டு விட்டாள்.

பபூதி ''கதவைத் திற'' என்ற குரல் கொடுத்ததும், நந்தோவும், அவளும் பெஞ்சியில் படுத்துக்கொண்டு பேசிக் கொண்டிருந்தனர். முன்னி தன் போக்கில் பாடிக் கொண்டிருந்தாள்.

''தன்னந் தனியே வாடிடுவான்
என்னைப் பிரிந்தே ஏங்கிடுவான்...''

பபூதி உள்ளே வந்தான், பெட்டியை அறையில் வைத்துப் பூட்டி னுன். சாதம் சாப்பிட்டான். அறையின் உள் தாழ்ப்பாளைப் போட்டுக் கொள்ளும்படி தம் மகளிடம் சொன்னுன்; பிறகு புருஷோத்தமனின் வீட்டிற்குச் சென்றுவிட்டான்.

நாத்தியும், அண்ணியும் பிறகு கவலையின்றி மூத்தவளின் அறைப் பக்கம் சென்றனர். திடீரென்று நந்தோவுக்கு இனிப்புப் பண்டம் செய்து தின்னவும், எல்லோருக்கும் தரவும் ஆசை பிறந்தது. மூத்தவளைக் காசு கொடுக்கவிடாமல், தன் அறையிலிருந்து தானே காசை எடுத்துக்கொண்டு நந்தோ தெருப்பக்கம் வந்தாள். வாயிற்காப்போனைக் கெஞ்சி மிட்டாய், காரப்பண்டம் அரைச்

சேர், பால் இத்தனையும் வாங்கிவர அனுப்பினாள். மாடியில் முன்னிமட்டும் தனியாக இருந்ததால், மூத்தவள் சென்றுவிட்டாள். சாமான்கள் வரும்வரை நந்தோ கீழேயே காத்திருந்தாள்.

நேற்றிரவிலிருந்து தனிமையாக இருப்பதால் மூத்தவளும் நந்தோவும் தூங்கினர். மாமியார் ஊருக்குச் சென்றதிலிருந்து மூத்தவளுக்குத் தன் நாத்தி மீது முன்புபோல் அன்பு சுரந்தது. உண்மையில் முதல் முதலில் அவள் திருமணமாகி வந்தபோதுகூட அவ்வளவு அன்பு ஏற்பட்டதில்லை.

சம்பாதிக்கும் சகோதரனிடம் நந்தோ ஒரு போதும் கோபித்துக் கொள்ள மாட்டாள். மனியா களங்கமற்ற உள்ளம் படைத்தவன். சற்றுப் பிரியமாக நடந்துகொண்டால் போதும்; உருகிவிடுவான். மூத்தவள் திருமணமாகி வந்தபோது மனியா புதுப் பெண்ணின் மீது உயிரையே வைத்திருந்தான். சந்தோவின் மனைவியுடன் மனியாவிற்குத் தொடர்பு ஏற்படுத்த முனைந்ததிலிருந்து நந்தோ மூத்தவளின் விரோதியாகி விட்டாள்; அதோடு அவன் மனைவி யிடம் மிகவும் கொடூரமாக வேறு நடந்துகொள்ளும்படி செய் தாள். ஆனால் பின்பு மனியாவுக்குத் திடீரென்று 'ஞானோதயம்' பிறந்தது. அப்போதிலிருந்து அண்ணனுக்கும் தங்கைக்குமிடையே வெறுப்பு வளர ஆரம்பித்தது! நந்தோ செய்யும் விஷமச் செயல் களைப்பற்றித் தானே அறிந்து கொண்ட மனியாவிற்கு அவளைக் கண்டால் வேம்பாய்க் கசந்தது. அவன் தங்கையின் இந்த விஷமத் தனத்தை ஒழிக்க விரும்பினான். நந்தோ அவனைப் பகைத்துக் கொண்டாள். தங்கையின் அன்புதான் அவளுக்குப் பெரிய ஆதாரமாக இருந்தது. அண்ணனும் தங்கையும் ஒருவர் மற்றவ ருடைய குற்றங் குறைகளை நன்கு தெரிந்து கொண்டிருந்தனர் ஆனால் வெளிப்படையாகச் சொல்ல மாட்டார்கள். ஆகையால் மனியா மேல் பூச்சாக நந்தோவுடன் உறவு வைத்துக் கொண் டிருந்தான். தராசில் இருவருடைய குற்றங்களும் இதுவரை சரி சமமாக நின்றுகொண்டிருந்தன. ஒரு புதிய குற்றத்தை நந்தோ விடம் கண்டுபிடித்ததிலிருந்து மனியா நந்தோவைவிடச் சிறந்தவ னாகிவிட்டான். உடனே அவளுடைய அறையைப் பரிசோதனை செய்ய உத்தரவிட்டான். அவளுடைய பெட்டியில் படங்களின் 'ஆல்பம்' இருந்ததைப் பார்த்து அவன் சிங்கம் போல் கர்ஜித்தான். "வீட்டில் உள்ள எல்லோருக்கும் காண்பித்து உன் முகத்தில் மையைப் பூசச் செய்துவிடுவேன்! என்னைப் பற்றி நீ எது சொன் னாலும் இனி யாரும் நம்ப மாட்டார்கள்! எனக்கு எதிராகக் கிளம் பினால் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிவிடுவேன். ஆமாம், நினைவிருக்கட்டும்! அப்போது அப்பாவினாலும் ஒன்றும் செய்ய முடியாது?"

*தன் சிண்டு மணியாவிடம் மாட்டிக்கொண்டுவிட்டதே என்று பயந்த நந்தோ திருந்த ஆரம்பித்து விட்டாள். தன் நேர்மையை அதிகரித்துக்கொள்ள எல்லோருடைய நட்பையும் நாடினாள். அவள் செய்த அதிருஷ்டம், அவளுடைய சிற்றப்பா திடீரென்று இறந்துவிட்டார்; மூத்தவளுடன் தனிமையில் பழகவும் மணியாவைத் தன் சீலத்தால் மகிழ்விக்கவும் அவளுக்கு ஒரு பொன்னான வாய்ப்புக் கிடையாது.*

*இரவில் நாத்தி - அண்ணி இருவரும் அருகில் படுத்திருந்தனர். பொழுது விடிந்ததும் மூத்தவளுக்கு நந்தோவின்மீது பாசம் மேலிட்டது! பகல் நேரத்தில் அவள் இளையவளிடம் தெரிவிக்கவும் செய்தாள்: ''நந்தோ பாவம் பார்ப்பதற்கு ஒரு மாதிரியாக இருந்தாலும் நல்லவள். நம்மைச் சேர்ந்தவர்களுடன் அவள் பழக ஆரம்பித்தால் முற்றும் மாறி விடுவாள்.''*

*நந்தோ தின்பண்டங்களும் பாலும் எடுத்துக்கொண்டு மாடிக்கு வந்தாள். மூத்தவள் தனியாக இருந்ததால் படுத்துக்கொண்டு சுதந்திரமாக வாய்விட்டு விரஹேஷின் ஒரு பாடலைப் பாடிக் கொண்டிருந்தாள் :*

**''காதலோ அது காதல்—அன்றி**
**காலனோ அது காலனோ!''**

*நாத்தி, அண்ணியின் அன்பு கனிந்த உரையாடல் ஆரம்பித்தது. இளமையிலிருந்து இன்றுவரை நடந்த நிகழ்ச்சிகளை இருவரும் பகிர்ந்து கொண்டனர்; மூத்தவள் தன் உள்ளத்தின் 'அப்டுடேட் அக்கௌண்டை' (அன்றுவரை உள்ள நிலையைக்) காண்பித்து விட்டாள்.*

*நந்தோவைப்பற்றி அவளுடைய தாயே அடிக்கடி கூறுவதுண்டு: "கிணற்றின் ஆழத்தையும், கடலின் ஆழத்தையும் கண்டு பிடித்து விடலாம். நந்தோவின் உள்ளத்து ஆழத்தைக் காண முடியாது.'' காஸ்கஞ்ஜ் செல்வதற்கு முன்பு மாமியார் மருமகளிருவரையும் நந்தோவிடம் ஜாக்கிரதையாக இருக்கும்படி எச்சரித்துவிட்டுச் சென்றாள். இளையவள் சற்று கெட்டிக்காரி; ஆனால் மூத்தவள் சேற்றில் சிக்கிக்கொண்டு தவிக்கும் படகுபோல், தேவையற்ற விஷயங்களில் சிக்கிக்கொண்டு விடுவாள். இப்போது நல்ல வேளையாக இருவரும் சௌஜன்யமாக இருந்தனர்.*

*இருவரும் மூச்சு விடாமல் பேசிக் கொண்டிருந்தனர். லைலாவின் கதையைப்போல் தன்னையும் பிறரையும்பற்றிப் பல கதைகள் கூறி நந்தோ மூத்தவளைத் தன் மந்திரத்திற்குள் கட்டுப்படுத்திக் கொண்டாள். தான் கெட்ட செயல்களில் இறங்கி விட்டதுபற்றி ஒளிக்காமல் நந்தோ மூத்தவளிடம் கூறிவிட்டாள்: ''ஆண்கள் கெட்ட செயல்களில் இறங்கலாம்; பெண்கள் மட்டும் ஏன் சும்மா இருக்க*

வேண்டும்..? கடவுள் அழகைக் கொடுத்திருக்கிறார், அதைக் கொண்டு நான்கு நகைகளைச் சேர்த்து வைத்துக்கொண்டால் என்ன வந்தது? பெண்கள் ஆண்களை ஒரு விஷயத்திலும் நம்பக் கூடாது. எப்போதும் நகையால் அவள் தன்னை நிரப்பி வைத்துக் கொள்ள வேண்டும். இந்தக் கையில் வைத்தது அந்த கைக்குத் தெரியக்கூடாது. பெண்கள் அந்தமாதிரி சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.'' அப்போது தந்தை வந்து விட்டார். நந்தோ போய்க் கதவைத் திறந்தாள். தலை முகட்டில் உக்காவை நிரப்பி வைத்தாள். பிறகு மூத்தவளுடன் ரசமான பேச்சைத் தொடர்ந்து நடத்தினாள்.

பேச்சுவாக்கில் மூத்தவளிடம் நந்தோ அவளுடன் யாருக்காவது நட்பு இருந்தால் தான் சேர்த்து வைப்பதாகச் சொல்லி வைத்தாள்; யாருக்கும் தெரியாது; நந்தோ அவர்களிருவரும் சந்திக்க ஏற்பாடு செய்துவிடுவாள்—தன் காதலனிடமிருந்து கிடைப்பதில் கால் பங்கு நந்தோவிற்குக் கொடுத்தாலும் போதும்!

மூத்தவள் ஒன்றும் அறியாமல் தனக்கு வரஹேஷிடம் உள்ள அன்பைப்பற்றிக் கூறி வைத்தாள். நந்தோவிற்கு ஒரு பெரிய ஆதாரம் கிடைத்தாற்போல் இருந்தது. அப்போது யாரோ மாடிப்படி ஏறி வருவது தெரிந்தது. பயந்துபோய் இருவரும் ஒருவரையொருவர் கட்டிக் கொண்டனர். நந்தோ சங்கரைக் கூப்பிட்டாள். ஆனால் கேட்ட காலடி ஓசை தாயியின் வீட்டை நோக்கிச் சென்றுவிட்டது.

* * * *

தாயி தன் குழந்தைகளை அருகே படுக்க வைத்துக்கொண்டு குறட்டை விட்டுத் தூங்கிக்கொண்டிருந்தாள். இப்போதெல்லாம் தாயிக்கு நேரங் கழித்துதான் தூக்கம் வருகிறது. பூனைக் குட்டிகளினால் வீட்டில் அசுத்தம் அதிகமாகிவிட்டது. எப்போது பார்த்தாலும் தாயி வீட்டை அலம்ப நேரிடுகிறது. அவள் பூஜை செய்யவோ ஜபம் செய்யவோ உட்கார்ந்துவிட்டால் போதும்; குட்டிகள் அவளது மடியில் புகுந்து கொண்டு தூங்க ஆரம்பித்து விடுகின்றன. பால் குடிக்கும் நேரத்தில் 'மியாவ்—மியாவ்' என்று கத்துகின்றன. இரவு வேளைகளில் மூன்றும் குஸ்திச் சண்டை போட்டுக்கொண்டு தாயியின் வயிற்றையும், மார்பையும் குருக்ஷேத்திரப் போர்க்களமாக்கி விடுகின்றன.

இன்று குட்டிகளுக்குப் பால் கொடுத்த பிறகு ஒன்றை எடுத்து அன்புடன் அதன் கண்களைப் பார்த்தாள். குழந்தை கண்ணனே அவளைப் பார்ப்பதுபோல் நினைத்தாள்.

தாயியின் உள்ளம் பக்திப் பரவசப்பட்டது. அவை எல்லாவற்றையும் மார்புடன் தழுவிக் கொண்டாள். மூன்றையும் எடுத்துத்

தன் போர்வைக்குள் மூடிக்கொண்டு ஜபம் செய்து கொண்டே தாயி தூங்கிவிட்டாள்.

திடீரென்று விழித்துக்கொண்ட தாயி தன் வாயில் யாரோ துணி அடைத்திருப்பதைப் பார்த்தாள். தலைப்பாகையால் முகத்தையே உருத் தெரியாமல் சுற்றிக்கொண்டு கொடிய பார்வையுள்ள இரண்டு ஆசாமிகள் தாயியைப் பிடித்துக்கொண்டனர். அவளுடைய போர்வையை இழுத்துக் கீழே எறிந்தார்கள். துணி மாட்டும் ஸ்டாண்டில் தொங்கிக் கொண்டிருந்த சிவப்புச் சால்வையால் அவளைச் சடலத்தைச் சுருட்டுவதுபோல் சுருட்டிப் புதிய வலுவான கயிற்றால் கட்டி வீசினர்; பூனைகளையும் அதேபோல் வீசி எறிந்தனர். அவளுடைய வாயைமட்டும் துணியால் துடைத்துவிட்டு முகத்தை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டனர்.

தாயியின் கண்களுக்கெதிரே வீட்டுப் பொருளனைத்தையும் சூறையாடினர். சிலவற்றைத் தின்பதும், வேறு சிலவற்றை வீசுவதுமாக அட்டகாசம் செய்தனர் அந்த ஆசாமிகள். ஒருத்தனுக்குத் தாயி மந்திரம் செய்யும் பெட்டி கிடைத்தது! அதிலிருந்த குங்குமப் பொட்டலத்தை எடுத்துத் தாயின் முகத்தில் வாரிப் பூசினான். பிறகு மையினால் கோடுகள் இழுத்துவிட்டுப் பெட்டியை வைத்தான். தாயியின் முகத்திற்கெதிரே அவர்கள் 'டண் டண்' என்று பணப்பையை ஒலிக்கச் செய்துவிட்டு அதை எடுத்துச் சென்றுவிட்டனர்.

பூனைக் குட்டிகள் கட்டிலருகே ஒன்றன்மேல் ஒன்று இடித்துக் கொண்டு உட்கார்ந்தபடியே 'மியாவ்—மியாவ்' என்று கத்த ஆரம்பித்தன.

## 15

வனகன்யா இவ்வளவு வேகமாகத் தன் வாழ்க்கையில் பிரவேசிப்பதை உணர்ந்த சஜ்ஜன் சற்று அச்சமடைந்தான். இம்மாதிரி வெகு விரைவில் பல நட்புகள் அவனுக்கு ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் இந்த உறவில் உள்ளத்தைக் கவரும் சக்தி அதிகம் இருந்தது. எத்தனையோ பெண்களின் நினைவுகளைத் தலையணையாக வைத்துக் கொண்டு சஜ்ஜன் உறங்கிவிட்டான். அப்படிப்பட்ட உறவல்ல இவளுடன் நேர்ந்திருக்கும் நட்பு. கன்யாவின் கவர்ச்சி அவனை ஓர் உலுக்கு உலுக்கி விழிப்புறச் செய்து கொண்டிருந்தது. முதல் சந்திப்பிலேயே, அவனுடைய உயிரை அவள் கல்லாக்கிவிட்டாள். அவனுடைய நண்பர்களும் வனகன்யாவைத்தான் அவன் மணந்து கொள்ளப் போவதாக ஆரூடம் கூற ஆரம்பித்துவிட்டனர்;

அவனும் இம்மாதிரியேதான் நினைத்துக் கொண்டிருந்தான். இப்படி நினைப்பதைத் தவிர அவனுக்கு வேறு வழியே இல்லை. தினசரி அதிகரித்துக்கொண்டிருக்கும் இத்தக் கவர்ச்சிக்குப் பின்பு எப்படித் தான் இறுதி உருவம் அளிப்பது? ஆனால் கன்யாவும் இப்படித்தான் நினைப்பாளா? கன்யா அவனைப் பயன்படுத்திக் கொள்ளப் பார்க் கிறாளா என்ன? தன் வேலை முடிந்ததும் ஏமாற்றிவிட்டு மறைந்து விடுவாளா? இம்மாதிரி சந்தேகத்தாலும் சஜ்ஜனுடைய மனம் வேதனையுற்றது.

முந்திய நாள் இரவில் கர்னல் செய்த செப்பிடு வித்தையின் காரணமாகக் கன்யா தன் கட்டுரையுடன் புகழின் உச்சியை எட்டி விட்டாள். விமான விறுவிறுப்புடன் நேற்று எல்லாச் செய்தித் தாட்களிலும் வனகன்யாவின் கட்டுரை பற்றிய சர்ச்சை வெளி யிடப்பட்டிருந்தது. நகரத்துத் தினத்தாட்கள் புத்தாண்டின் முதல் தினத்தன்று நிகழ்ந்த அந்த நிகழ்ச்சிக்கு முக்கியத்துவம் அளித்து வர்ணித்திருந்தன. மறுநாள் காலையில் கண்களைத் திறந் ததுமே வனகன்யா தான் நகரத்தில் புகழ் பெற்றுவிட்டதாக உணர்ந்தாள். நண்பர்கள் உற்சாகத்துடன் அவளைப் பாராட் டினர். செய்தித் தாட்களின் நிருபர்கள் அவளைப் பேட்டி கண் டார்கள். புகைப்படங்கள் எடுக்கப்பட்டன. இந்நிகழ்ச்சிகளால் வனகன்யா ஊக்கம் மிகுந்து மகிழ்வுடன் காணப்பட்டாள். பகல் முழுவதும் நடந்த நிகழ்ச்சிகளால் களைப்புற்றுவிட்ட கன்யாவை, சஜ்ஜன் வந்து சந்தித்தான். அப்போது அவள் மாறிவிட்டதை உணர்ந்தான். அவனுடன் குறைவாகப் பேசி, உடனே அவனிட மிருந்து தப்பி ஓட அவள் துடிப்பதை அவன் அறிந்துகொண்டான். அதன் பிறகு சஜ்ஜனுடன் காரில் செல்லக்கூட மறுத்துவிட்டாள்; தனிமையில்தான் சென்றாள். இருவரும் சேர்ந்து எங்கும் செல்ல வேண்டும், மக்கள் யாவரும் அவனையும் அவனுடைய 'ஹீரோயின்' பற்றியும் பேச வேண்டும், பொறாமைப்பட வேண்டும் என்றெல் லாம் சஜ்ஜன் ஆசைப்பட்டான். ஆனால் கன்யா அவனுடைய எல்லா ஆசைகளிலும் மண்ணைப்போட்டுச் சென்று விட்டாள்! செல்லும் போது ஒரு வார்த்தையும் சொல்லிச் சென்றாள்: ''மஹிபாலின் 'தெய்வம்' என்ற கதையில் ஓர் அழகான வாக்கியம் வருகிறது. நீங்களும் அதைப் படித்திருப்பீர்கள். 'கடவுள் எந்த நல்ல மனிதனைத் தண்டிக்க விரும்புகிறாரோ அவனைத் தெய்வீக குணமுள்ளவனுக்கிவிடுகிறார்' என்று எழுதியிருக்கிறார்'' இந்த வாக்கியத்தை அவள் கூறிய முறை சஜ்ஜனுக்குக் குத்தலாகவும் கடுமையான தாக்குதல் போலவும் பட்டது!

சஜ்ஜனுக்கு முந்திய நாள் முழுவதும் மாலை, இரவு—முதல் அடுத்த நாள் காலை வரை வேதனை நிறைந்த நேரமாக இருந்தது.

வனகன்யாவும் அவனுடைய ஈனமான நடத்தையைப் புரிந்து கொண்டுவிட்டாளோ என அவன் நினைத்தான். சஜ்ஜனுக்கு மிகவும் வேதனையாக இருந்தது. இனி, கன்யா வரவே மாட்டாளோ என்னவோ என்று கூட அவனுக்குத் தோன்றியது. முந்திய நாள் மாலையிலிருந்து சிதறிய 'மூட்' (மனப்போக்குக்) காரணமாகத் தனிமையை அவன் நாட ஆரம்பித்தான். டெலி போனை அடுத்த அறைக்கு அனுப்பிவிட்டான்; யாரையும்—கர்னல் மஹிபால், இப்போது—சென்ற மேடம் எவரையும் சந்திக்கப் போவதில்லை என்று வேலையாட்களிடம் கூறிவிட்டு அறைக் கதவைச் சாத்திக்கொண்டான். அதே அறையில் இருந்து கொண்டு காரணமின்றி அவன் வேலையாட்களைத் திட்டினான், மது அருந்தினான்; நிமிடத்திற்கு ஒரு 'டிஷ்' என்று ஏதோ தயார் செய்யும்படி கட்டளை பிறப்பித்தான். எல்லோரையும் தன் போக்கினால் வியப்பில் ஆழ்த்தினான். பிறகு ரேடியோவுடனும், இசையுடனும் போராடினான். பிறகு புத்தகங்களுடன்—கீதை, மகாத்மா, புத்தர்...

"காமத்தினால் சினம் மூள்கிறது; சினத்தினால் அறிவு மழுங்கி விடுகிறது" என்று கீதையில் கூறப்பட்டிருக்கிறது.

சிதைந்த உள்ளத்தின் தாறுமாறான நடைகளினால் சோர்வுற்ற சஜ்ஜன் எப்படியோ ஓர் இடத்தில் வந்து சற்று இளைப்பாறினான். ஒரு முறை அவன் மிகவும் உறுதியுடன் காம உணர்ச்சியை வென்றுவிடப் போவதாக நினைப்பான். தன் வாழ்வினின்றும் பெண் என்னும் பொருளையே நீக்கி ஒழித்துவிடுவதாக சங்கற்பம் செய்துகொள்வான்!

புத்தர்—அவருடைய சீடன் ஆனந்தன் இருவருடைய உரையாடலையும் ஓரிடத்தில் படித்தான்:

ஆனந்தன்: குருதேவா! பெண்களிடம் நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

புத்தர்: (அதர்சனம்)—பாராதிருத்தல் வேண்டும்.

ஆனந்தன்: பார்த்துவிட்டால் என்ன செய்வது?

புத்தர்: ஆனந்தா, பேசக்கூடாது.

ஆனந்தன்: பேசியும் விட்டோமானால்?

புத்தர்: சுய உணர்வைப் பத்திரமாக வசப்படுத்தி வைத்துக் கொள்ளவேண்டும்!

இனி சஜ்ஜனும் அப்படியேதான் செய்வான். பெண் அவனை மிகவும் ஏமாற்றிவிட்டாள். இனி அவன் சுய உணர்வுடன் இருப்பான்; பிரம்மச்சரியத்தை அநுஷ்டிப்பான்—நிச்சமாகத்தான் உலகில் எத்தனையோ பேர் பிரம்மச்சரியத்தை அநுஷ்டித்துள்ளனர். அவனால் மட்டும் ஏன் முடியாது? பிரம்மச்சரியம் நம் பாரதப்

பண்பாட்டின் உன்னதமான இலட்சியம். நாம் அதையும் பயின்று தானுக வேண்டும். புதிய அநுபவத்தால் அவனுக்குப் புத்துணர்ச்சி உண்டாகலாம். புதிய நோக்குக் கிடைக்கலாம்! இனி அவனுக்கு வாழ்வின் உண்மையான பாதை தெரிந்தாக வேண்டும். புத்த கத்தைப் புரட்டிப்பார்த்தான். புத்தர் ஓரிடத்தில் கூறுகிருர்: ‘நாம் கூடத்தான் எப்போதும் இயங்கிக் கொண்டே இருக்கிருேம். ஆனுல் எங்கே செல்லவேண்டும் என்பது தெரியவில்லை. நடையிருக்க வேண்டும். இயங்குதல் வேண்டும்; ஆனுல் தன்ன டக்கத்தினின்றும் வழுவக் கூடாது; பற்றற்ற தன்மை இருக்க வேண்டும், ஆனுல், தொண்டாற்றும் கடமையில் குறை வைக்கக் கூடாது; உசிதமான சுயாபிமானம் இருக்க வேண்டும்; ஆனுல் பணிவின்றி இருத்தல் கூடாது; க்ஷத்திரியனின் சுபாவத்தை உள்ளபடி அறிந்து கொண்டு அதன்படி ஒழுக வேண்டும்; ஆனுல் ஆயுதம் தரிக்கக்கூடாது. இப்படியிருந்தால் இறைவனே எதிரே கண்டு விடலாம், தாமதம் ஏற்படாது.'' வாழ்வில் புதிய பாதையைக் கண்டு விட்டது போல் சஜ்ஜன் உணர்ந்தான். வனகன்யா—அவள் துன்பத்தில் சிக்குண்ட பெண்மணி, தன்னுல் இயன்ற வரை சஜ்ஜன் அவளுக்கு உதவி புரிந்தான். அவ்வளவு தான்—பரோபகாரம்—புண்ணியம்!

தத்துவ ஆராரய்ச்சியில் இறங்கியபடி பல கற்பனேகளுடன் சஜ்ஜன் அன்றிரவைக் கழித்தான். நள்ளிரவில் கண்ணயர்ந்தான். சஜ்ஜனிடம் பிரம்மச்சரியம் தொடர்ந்து இருந்தது. அவனுடைய உள்ளத்தின் முதல் எண்ணமாக அது அதிகாலேயில் உதித்தது.

இன்றையச் செய்தித்தாளில், தலேயங்கத்தில் கன்யாவின் கட்டுரையைப் பாராட்டி, இதுபற்றி அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று குறிப்பிட்டிருந்தது. தம் வெற்றிக் காகவோ, தோல்வி காரணமாகவோ மனிதத்தன்மையைக் கொலே செய்துவிட வேண்டாம் என்றும் அரசியல் கட்சிகளிடம் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது. உலகம் சில நம்பிக்கைகளின் ஆதாரத்தில்தான் இருக்கிறது; அந்த நம்பிக்கைகளே அழிந்து விட்டால், அரசியல் கட்சியின் சிறந்த லட்சியங்களே செத்துவிடும்.

சஜ்ஜனுக்கு, ‘கன்யாவின் பேரில் பொருமை மூண்டது. நாம் பிரம்மச்சரியத்தை அநுஷ்டிக்கிருேம்' என்பது பிறகுதான் நினேவிற்கு வந்தது. கன்யாவிடம் அவனுக்கு என்ன கொடுக்கல்-வாங்கல் இருக்கிறது?

தன் உள்ளத்தை இறுகக் கட்டி வைத்துக் கொண்டு சஜ்ஜன் தன் தினசரி வேலேகளில் ஈடுபட்டான். பல ஆண்டுகளுக்குப் பிறகு திடீரென அவன் தன் தாயின் பூஜையறைக்குச் செல்ல விரும்பினுன். வேலேயாட்களுக்கும் இது வியப்பாக இருந்தது.

அறையின் பின் பக்கத்தில் சலவைக் கற்களால் பூஜையறை கட்டப்பட்டிருந்தது. இந்த அறை சஜ்ஜனின் கொள்ளுப் பாட்டியினுல் தன் குல தெய்வங்களைப் பூஜிப்பதற்காகக் கட்டப் பட்டது. கணவர் சீமையிலிருந்து திரும்பிவந்ததும், கன்ஞேமல்லின் தாய் அவர் தன்னையும் தொடக்கூடாது, தன் பூஜை யறையையும் மிதிக்கக்கூடாது என்று அவருக்குக் கட்டளை பிறப் பித்து விட்டாள். மாமியார் மருமகளிடம் பூஜையறையைப் பரம்பரை பரம்பரையாக ஒப்படைப்பது வழக்கம். சஜ்ஜனின் தாயுடைய வாழ்நாள் வரை இது தங்கு தடையின்றி நடந்து வந்தது. சஜ்ஜனின் தாய் உயிருடன் இருந்த போது பூஜை செய் தவரின் அண்ணனுடைய மகன் தான் இப்போதும் அந்த அறையில் வந்து பூஜை செய்வது வழக்கம். தினசரி பூஜையும் சண்டி ஸ்தோத்திர பாராயணமும் நடந்த பிறகு அவன் சஜ்ஜனுக்கு அபிஷேக தீர்த்தமும் ஆசீர்வாதமும் அளிக்க வருவான். இவ்வளவு தான் சஜ்ஜனுக்கும் சம்பிரதாயத்திற்குமிடையே இருந்த உறவு—இன்று நீராடி விட்டு நேராகப் பூஜையறையை அடைந்த சஜ்ஜனைப் பார்த்த அர்ச்சகர் சண்டி ஸ்தோத்திரத்தை முணுமுணுத்துக் கொண்டு அரைத்தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு எழுந்தார்; பூதத்தைப் பார்த்தது போல் தூக்கி வாரிப் போட்டது அவருக்கு!

தன் அறைக்கு அடுத்த அறைக்குள் அவன் பல ஆண்டுகளுக்குப் பிறகு நுழைந்திருந்தான். தன் தாயைப் போல் அந்த பூஜையறையிடமும் எப்போதும் பற்றுக்கொண்டிருந்த சஜ்ஜன், தாய் இறந்த பிறகு முதல் முறையாக உள்ளே நுழையவே உணர்ச்சி வசப்பட்டு விட்டான். அறை ஒளியிழந்து காணப் பட்டது. சலவைக்கல் பூஜை மண்டபம் அழுக்கடைந்திருந்தது. சரிகை வேலைப்பாடுகளுள்ள திரையும், திண்டும், புழுதி படிந்து காணப்பட்டன. வெள்ளிக் கோதண்டங்கள் கருத்துக்கிடந்தன.

ஒளியிழந்த சூழ்நிலையில் சந்தனத்தாலும், மலர் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்ட விக்கரகங்கள், ஜீவகளையற்றுக் கிடந்தன. சஜ்ஜனுக்கு இது பிடிக்கவில்லை. அவன் கோபத்துடன் அர்ச்சகரைத்திட்டினன்: "நீங்கள் அந்த மதத்தைச் சேர்ந்த வர்கள் சுவாமி! எந்தத் தெய்வத்தை மிகவும் புனிதமாகக் கருது கிறீர்களோ, அதையே இவ்வளவு மோசமாக வைத்திருக்கிறீர் களே! இவ்வளவு லட்சணமாக நீங்கள் செய்யும் வேலைக்குச் சம்பளம் வேறு வாங்கிக் கொள்கிறீர்களே, கொஞ்சங்கூட வெட்கமாக இல்லையா உங்களுக்கு?''

அர்ச்சகரின் கைகால்கள் நடுங்க ஆரம்பித்தன. பேச முயன்றும் முடியவில்லை. மாதம் முப்பது ரூபாய் சம்பளம் பெறும் அந்தண ருக்குத் தம் எஜமானனின் கோபத்திற்கெதிரே எப்படிப் பேசத்

துணிவிருக்கும்?

இன்று சஜ்ஜன் தன் வேலையாட்களிடம் அறையைச் சுத்தம் செய்யும்படி பணித்தான். தோட்டக்காரனுக்கும் கட்டளை விடுக்கப்பட்டது. "அம்மா இருந்தபோது கொண்டுவந்தாற் போல் பூமாலை, உதிரிப்பூக்கள், தோரணங்கள் எல்லாம் கொண்டு வர வேண்டும். இதை அவனிடம் சொல். எல்லா மலர்களையும் அவன் என் அறையை அலங்கரிப்பதிலேயே உபயோகித்து விடுகிறன். நாளைக்குள் எல்லாம் சரியாக இல்லாவிட்டால் எல்லோருக்கும் தலா ஐந்து ரூபாய் அபராதம் போடப் போகிறேன். சுவாமி, நீங்கள் மனசைச் செலுத்தி பூஜை செய்யா விட்டால் நாளையிலிருந்து நான் வேறு ஏற்பாடு செய்து கொள்கிறேன்."

"இல்லை, அப்படி சொல்லக் கூடாது."

"போதும் நிறுத்தும்! உண்மையான ஆராதனையைத்தான் என்னுல் விரும்ப முடியும்! சிரத்தையுடன், பக்தியுடன் பூஜை செய்ய வேண்டும்."

அர்ச்சகர் மீதும் வேலையாட்கள் மீதும் எறிந்து விழுந்து விட்டு, சஜ்ஜன் பூஜை செய்யப்படும் விக்கிரகங்களின் மீது தன் பார்வையைச் செலுத்தினுன். அவனுடைய உள்ளத்தில் ஒருவிதமான பக்தியும் எழவில்லை. இந்த விக்ரஹங்களில் மக்கள் எதைக்கண்டு பரவசமடைகின்றனர் என அவன் நினைத்தான். பாட்டியும், அம்மாவும் மின்சார விசிறி இருந்தபோதிலும் மணிக்கணக்காக இந்த விக்கிரஹங்களுக்கு விசிறிக்கொண்டிருப்பார்கள். பாரதத்துப் பல கோயில்களுக்குச் சென்ற போதிலும் அங்குள்ள கலைப் பொருளைத்தான் அவனுல் காணமுடிந்தது; இறைவனையல்ல. பண்டாக்கள், பூசாரிகள் இவர்களுடைய போக்கிரித்தனத்தையும் பொய்யையுந்தான் அவனுல் காண முடிந்தது; எந்தச் செப்பிடு வித்தையால் மயங்கி ஆயிரக்கணக்கில் தினந்தோறும் மக்கள் இங்கு வந்து கூடுகின்றனர் என்று அவன் ஒரு சிறிதும் எண்ணிப் பார்க்கவேயில்லை. முதல் முதலாக இன்று சஜ்ஜன் இதைப் பற்றிச் சிந்தித்தான்; அவன் சிந்தனையில் ஆழ்ந்தான். ஆனுல் இதற்கு ஒரு பதிலும் அவனுல் பெறமுடியவில்லை. பெரிய செயற்கைக் கண்கள் வைக்கப்பட்ட பித்தளை ராதாகிருஷ்ண விக்கிரகம், தேய்ந்து கிடந்தது. சிறு சிறு விக்கிரகங்கள் வேறு! சாளிக்ராமம், குழந்தைக்கண்ணன், செப்பு இயந்திரங்கள் வெள்ளித் தட்டில் பாம்புடன் சிவபிரான்-இத்தனை பொருள்களும் அவனுக்கு எந்த உண்மையையும் எடுத்துரைக்கவில்லையே. இருந்தபோதிலும் கோடிக்கணக்கான மக்கள் இவற்றில் எதைத்தான் காண்கிருர்கள் என்று தெரியவில்லையே?

சஜ்ஜனின் தனிமையான சில கணங்கள் மிகவும் பகுத்தறிவுடன்

கழிந்தன. அவை அவனை ஆட்கொள்ளவும் செய்தன. "இனி தினந்தோறும் இங்கு வருவேன்; ஒன்றுமில்லை என்றாலும் இதை நான் சிந்தனை அறையாகச் செய்துகொள்வேன். தவறாமல் இதைச் செய்யப் போகிறேன்-தன்மீது இவ்வளவு கட்டுப்பாட்டை ஏற்படுத்திக்கொள்ள முடியும்'' என்பது சஜ்ஜனின் நம்பிக்கை.

இன்று காலையிலிருந்து சஜ்ஜன் ஓர் உறுதியுடன் எழுந்திருக்கிறான்; தவம் செய்வது போல் கஷ்டப்பட்டுப் பிறகு மெள்ள மெள்ள அவனது உள்ளம் சங்கற்பித்துக் கொண்டது. இனிப் பெண்டிர் விஷயத்தில் அவன் தன்னைத்தவற விடமாட்டான். அவனுடைய வாழ்க்கையில் பெண் வந்தால் கூட இனி அவளை ஒரு சாதாரண நண்பனைப் போன்றே அவன் எண்ணுவான். பிடிவாதத்துடன் அவன் தனது உள்ளத்தை அவள்பால் செல்லாத வண்ணம் பிடித்து வைத்திருப்பான்.

இன்று அவன் சௌகிலிருந்த தன் ஸ்டூடியோவிற்குச் சென்றான். தன்னுடன் வேலையாட்கள், வாளிகள், மலர்மாலைகள் முதலியவற்றையும் சேர்த்துக்கொண்டு சென்றான். இன்று அவன் உள்ளும் வெளியும் எல்லாவிதத்திலும் சுத்தம் செய்ய உறுதிபூண்டான். போதையிலிருக்கும் போதும் இந்த உணர்ச்சியைச் சூடாக வைத்திருக்க முயன்றான்.

வேலையாட்களுடன் முதன் முறையாக அவன் தன் அறைக்கு வந்தான். இதுவரை டிரைவர்தான் இந்த இடத்தைப் பார்த்திருந்தான். பங்களாவின் பணியாட்கள் இந்தச் சிறு கூண்டிற்குள் மெள்ள மெள்ள தம் எசமானனுடன் நுழைந்தனர். மாடிப்படி ஏறியதும் தாயியின் வீட்டு வாசற்கதவு திறந்து இருப்பது தெரிந்தது. அவளுடைய கடவுளுக்கும் கொஞ்சம் மலர் கொடுக்கலாமே, அதனால் அவள் ஒரு வேளை மகிழ்ச்சிஅடையலாம் என நினைத்து, வேலையாட்களிடம் சஜ்ஜன் சாவியைக் கொடுத்தான். சிறு மலர்க்கூடையை அவர்களிடமிருந்து, வாங்கிக்கொண்டு உள்ளே நுழைந்தான். அவளிடம் வீணாகத் திட்டுக்கேட்க நேரிட்டால்? என்ன செய்வது என்று நினைத்தான். பரவாயில்லை, கேட்டுக் கொண்டால் போகிறது எனக்கருதி உள்ளே நடந்தான்.

முற்றத்தில் பூனைக்குட்டிகள் மூன்றும் வரிசையாக உட்கார்ந்திருந்தன. அவனைப் பார்த்ததுமே ஒரே குரலில் மூன்றும் 'மியாவ் மியாவ்' என்று கத்த ஆரம்பித்தன. சஜ்ஜனை முற்றத்தில் ஓர் அடிகூட எடுத்து வைக்க அவை விடவில்லை. காலில் பட்டு நசுங்கி விடப்போகின்றனவே என்று சஜ்ஜன் அஞ்சினான். அவை அவனுடைய கால்களைச் சுற்றித்தளைபோல் வளைத்துக் கொண்டன.

தாழ்வாரத்தில் போடப்பட்டிருந்த கட்டிலில் தாயி கட்டப்பட்டுக் கிடந்ததை சஜ்ஜன் கண்டான்; திடுக்கிட்டான். அநுமானைப்

போன்று முகத்தில் குங்குமம் பூசப்பட்டிருந்தது. வாயில் துணி அடைக்கப்பட்டுக் கன்னங்களில் மைக்கோடுகள் தீட்டப்பட்டிருந்தன. தாயி பிணமாகிவிட்டாள் என்றே ஒரு கணம் சஜ்ஜன் நினைத்தான். அருகே செல்லத் தயக்கமாக இருந்தது. மந்திர தந்திர முறைப்படி மேக்கப் செய்திருந்த அவளுடைய உருவம் ஒரு கணம் அசைந்தது. கண்கள் வெள்ளையாகத் தெரிந்தன. சஜ்ஜன் உடனே அருகே சென்றான்; முகத்தில் கட்டப்பட்டிருந்த துணியை அவிழ்த்தான். வாயில் அடைக்கப்பட்டிருந்த துணியை வெளியே எடுத்தான். தாயியின் மோவாய் வெகுநேரம் வரை திறந்தே இருந்தது. கட்டப்பட்டிருந்த கயிற்றை சஜ்ஜன் பிறகு அவிழ்த்து விட்டான். சில்லென்று இருந்த அவளுடைய கைகால்களை அவன் பிடித்துவிட்டான்.

சிறிது நேரத்தில் தாயி-சுய உணர்விற்கு வந்தாள். மோவாய்க் கட்டையின் வலிதாங்க முடியாமல் தவித்தாள். அவளுடைய கழுத்தில் 'மாலிஷ்' செய்து சஜ்ஜன் அவளைக் குணப்படுத்த முயன்றான். தாயி பேசமுயன்றாள். கட்டிலின்மீது இரண்டு கால்களையும் அழுத்திக்கொண்டு அவள் எழுந்து உட்கார்ந்தாள். அவள் சஜ்ஜனை மெதுவாக 'போதும்' என்று நகர்த்தினாள்.

''டாக்டரை அழைத்து வரட்டுமா?'' என்று சஜ்ஜன் கேட்டான். கையை ஆட்டித் தாயி வேண்டாம் என்றாள். முற்றத்தில் மியாவ் மியாவ் என்று கத்தும் பூனைக் குட்டிகளைக் காண்பித்துத் தாயி ஏதோ கூறமுயன்றாள்.

சஜ்ஜனுக்கு ஒன்றும் புரியவில்லை. ''நான் உங்களுக்கு ஒத்தடம் தருகிறேன். தேவைப்பட்டால் டாக்டரையும் அழைத்து வருகிறேன்'' என்றான்.

சொற்களின்றி ஏதோ ஒருவிதக் குரலில் தாயி முற்றத்தைக் காண்பித்தாள். சஜ்ஜன் அதை வேறுவிதமாகப் புரிந்துகொண்டு பதிலளித்தான்: ''நான் உங்கள் மகன். நீங்கள் தயங்காதீர்கள். என்ன வேண்டுமோ செய்கிறேன்!''

தாயி மறுபடியும் முற்றத்துப்பக்கம் கையை நீட்டினாள். சஜ்ஜன் வேலையாட்களை அழைத்து வர வெளியே சென்றான். பூனைக்குட்டிகள் கத்திக் கூப்பாடு போட்டுக்கொண்டிருந்தன.

சஜ்ஜன் தன் வேலையாள் ஒருவனுடன் ஸ்டவ் எடுத்துக் கொண்டு வந்தான். தாயி கட்டிலில் உட்கார்ந்துகொண்டு தன் தலையையும் கழுத்தையும் அசைக்க முயன்று கொண்டிருந்தாள். சஜ்ஜன் இடைவிடாமல் 'மாலிஷ்' செய்தான். வேலையாளின் மஃப்ளரையும், தனது மஃப்ளரையும் ஸ்டவ்வில் காண்பித்துச் சூடு செய்து சஜ்ஜன் தாயிக்கு ஒத்தடம் கொடுத்தான். தாயி மண் உருண்டை போன்ற நாக்கை அசைத்து, முதல் சொல்லை உச்சரித்தாள்.

''பால்'' பால் அருந்த தாயி விரும்புகிறாள் என சஜ்ஜன் நினைத்து உடனே ஒரு சேர் பால் வாங்கி வர வேலையாளை அனுப்பினான். தாயி சேலைத் தலைப்பிலிருந்து முடிந்த காசை எடுத்துக்கொண்டே இருந்தாள்.

சற்று நேரங்கழித்து தாயி மெதுவாகப் பேசினாள்: ''கன்றே மல்லின் பேரனே'' பிறகு ''நந்தோவின் தந்தை'' என்று சொல்ல வந்தவள் களைத்துப் போனாள். மை, எள், குங்குமம் இவற்றால் பூசப்பட்ட அவளுடைய முகத்தைப் பார்த்தால் சஜ்ஜனுக்கு பழங்குடிப் பூசாரிபோல் தோன்றியது.

தாயி எழுந்து முற்றத்தை நோக்கி நடந்தாள். சஜ்ஜன் அவளைப் பிடித்துக் கொண்டு நடந்தான். தாயி இருமுறை அவனைத் தடுத்தாள். ஆயினும் அவன் சும்மா இருக்கவில்லை. தாயி திண்ணை மீது உட்கார்ந்து பூனைக்குட்டிகளை மடியில் போட்டுக் கொண்டாள். பிறகு தலைப்பில் முடிந்திருந்த காசை சஜ்ஜனிடம் கொடுத்துப் ''பால் வாங்கி வா'' என்றாள்.

''அனுப்பியிருக்கிறேனே!''

''இந்தப் பூனைக் குட்டிகளுக்கும் வாங்கி வா.'' வேலையாள் திரும்பி வரும்வரை சஜ்ஜன் பேசாமல் தாயியைப் பார்த்துச் சிந்தித்த வண்ணம் இருந்தான். ''எல்லோராலும் நிந்திக்கப்படும் தாயி எல்லோரையும் வெறுக்கும் இவள், மந்திரமும், மாயமும் செய்து சூழ்ச்சிசெய்பவள்,இந்தப் பூனைக்குட்டிகளுக்காக எவ்வளவு நேரமாகத் துடித்துக் கொண்டிருந்தாளோ தெரியவில்லை. அவளுக்கு முதலில் அந்தக் குட்டிகள் பசியால் தவிக்கின்றனவே என்ற கவலைதான். 'கல்லும் தக்க தருணத்தில் உருகும் போலும்' இவ்வாறு சஜ்ஜன் நினைத்தான். மனிதனின் வாழ்க்கையில் எவ்வாறு சௌந்தரியம் ஒளிந்துகொண்டிருக்கிறது. இவ்வளவு இருந்தும் மனிதன் தன்னைச் சுற்றிலும் வெறுப்பு, குரூரம், வன்முறை இவற்றை வலையாகப் பின்னிக் கொண்டு அதனுள் சிக்கிக் கொண்டு தவிக்கிறான். இது ஏன்? சஜ்ஜனுக்குப் புரியவில்லை. தாயி அவனுடைய பக்திக்குப் பாத்திரமாகி விட்டாள்.

தாயியின் மடியில் உட்கார்ந்திருந்த பூனைக்குட்டிகள் தூங்குவதற்காக ஒன்றோடொன்று சண்டையிட்டுக்கொண்டிருந்தன. இரண்டிற்கு இடம் கிடைத்துவிட்டது. மூன்றாவது குட்டி தாயியின் கை வழியாகத் தோளில் ஏறிக்கொண்டு தூங்க ஆரம்பித்தது. தாயியின் கழுத்து அன்புடன் வளைந்து கொடுத்தது. சஜ்ஜன் ஒரு காகிதமும் பென்சிலும் இல்லையே என்று தவித்தான். இந்த விசித்திரமான 'மேக்அப்'பில், அவள் எவ்வளவு பயங்கரமாக இருந்தாளோ, அவ்வளவு அந்தப் பூனைக்குட்டிகளிடம் அன்பு நிறைந்தவளாகத்தான் இருந்தாள்.

வேலையாள் பால் வாங்கி வந்தான். தாயி குட்டிகளை மடியி லிருந்து வாங்கிக் கொண்டு எழுந்தாள். தட்டில் பாலை வார்த்து விட்டு, ''இனி நீ போகலாம்'' என்று சஜ்ஜனைப் பார்த்துக் கூறினாள்.

''நீங்களும் கொஞ்சம் பால் குடிப்பதுதானே.''

''போதும், நான் ஒரு வாய் குடித்தேனோ வீட்டிலிருப்பவர்கள் எல்லோருக்கும் காலரா வந்துவிடும். நீ உன் பங்கை எடுத்துக் கொண்டு போ?''

பசித்திருந்த குட்டிகள் பரபரப்புடன் தட்டிலிருந்த பாலை நக்கிக் குடித்துக்கொண்டிருந்தன. சஜ்ஜனும் அவனுடைய வேலையாளும் சென்ற பிறகு, தாயி கதவைத் தாழிட்டுக் கொண்டாள். பரபரப் புடன் திருடர்கள் எறிந்திருந்த சாமான்களைப் பார்க்க அவள் உள்ளே சென்றாள். பூஜை அறையில் பதுக்கி வைத்திருந்த அவளுடைய பணம் பத்திரமாக இருந்தது. தாயிக்கு உயிர் வந்தது. தன் 'ரிசர்வ் பாங்க்' பத்திரமாக இருக்கக் கண்ட அவள் மற்றப் பாங்கிகளைப் பரிசோதித்தாள். கல் இயந்திரத்திற்குக் கீழே புதைக்கப்பட்டிருந்த பானை காலியாக்கப்பட்டு இருந்தது. பணத்தாசையினால் அடுப்பு உடைத்தெறியப்பட்டிருந்தது. தாழ் வாரத்திற்கருகே இருந்த அறைக் கதவுகளைப் பணம் கிடைக்கும் என்ற ஆசையினால் திருடர்கள் திறந்திருந்தார்கள். கை விளக்கை ஏற்றிப் பரண்மீது வைத்திருந்த பணப் பொட்டலத்தைத் தேடினாள். அது கிடைக்கவில்லை. தலையில் கை வைத்தபடி தாயி வெகு நேரம் வரை சிந்தித்த வண்ணம் இருந்தாள். வயிறு நிரம்பிய மகிழ்ச்சியில் பூனைக்குட்டிகள் கொம்மாளம் போட்டுக் கொண்டிருந்தன.

திருடர்கள் நாசப்படுத்திச் சென்ற வீட்டை மறுபடியும் தாயி சீர்ப்படுத்தினாள். தானியங்களும், சமையல் சாமான்களும் எறியப்பட்டிருந்தன. அவற்றை இருந்த இடத்தில் வைத்து விட்டு உடைந்த மண் பாத்திரங்களை வெளியே எறிந்தாள். வீட் டைக் கழுவி விட்டுத் தானும் ஸ்நானம் செய்தாள். பிறகு பூஜை செய்தாள். சஜ்ஜன் கொடுத்த மலரைப் படங்களுக்குப் போட் டாள். பிறகு கதவைப் பூட்டிக் கொண்டு சஜ்ஜனின் அறையை அடைந்தாள். வேலையாட்கள் அறையைக் கழுவிச் சுத்தம் செய் தனர். ஒவ்வொரு பொருளும் மிக ஒழுங்காக வைக்கப்பட்டிருந் தது. மலர்க் கொத்துக்கள் அறையை இன்னும் அழகுபடுத்தின. சஜ்ஜன் அமர்ந்துகொண்டு தாயியின் 'ஸ்கெச்' வரைந்து கொண் டிருந்தான். தாயியை அறையின் வாசற்படியில் கண்ட சஜ்ஜன் தூக்கி வாரிப் போட்டுக்கொண்டு எழுந்தான். ''வாருங்கள் தாயி!''

தாயியின் முகம் கவலையால் சற்றுக் கடுகடுப்புடன் கூடியிருந்தது. அவள் கூறினாள் : ''என் மூவாயிரத்து நூற்றிருபது ரூபாயைக் களவாடிக்கொண்டு போய்விட்டனர். பாவிகள், இவர்களுடைய உடம்பெல்லாம் குஷ்டநோய் வந்து என் காசு அவர்களை என்ன பாடு படுத்தப்போகிறது பார்!''

தாயி சேர்த்து வைத்திருந்த பணம் முழுவதையும் கள்ளர் கொண்டு போயினர் என சஜ்ஜன் நினைத்தான். அவன் தாயிக்கு ஆறுதலளித்தான். திடீரென்று அவள் கேட்டு வைத்தாள் : ''உனக்குத் திருமணமாகி விட்டதா மகனே?''

''இன்னும் இல்லை.''

''கோகுல் துவாராவில் என் உறவினர் இருக்கின்றனர். அவர்கள் வீட்டில் ஒரு பெண் இருக்கிறாள்; மிகுந்த அழகி. வேலை செய்வதில் படு கெட்டிக்காரி. ஆறு வகுப்புவரை படித்திருக்கிறாள். வீட்டிலேயே ஆங்கிலம் கற்றிருக்கிறாள். நீ சரி என்றால் நான் மேற்கொண்டு ஏற்பாடு செய்கிறேன்.''

சஜ்ஜன் சிரித்தபடி கூறினான் : ''இல்லை, தாயி இப்போது திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை.''

''இப்போது செய்து கொள்ளாவிட்டால், பிறகு கிழவனான பிறகா செய்துகொள்வாய்? உன் தாத்தா கன்னோமல் ஒரே போக்கிரியாக இருந்தான்; நீயும் அப்படித்தான் இருக்கிறாய்!''

சஜ்ஜன் சிரித்தபடி பதிலளித்தான்: ''இல்லை, அம்மா நான் மிகவும், பரிசுத்தமாக இருக்கிறேன்.''

''சாப்பாடு எங்கே சாப்பிடுகிறாய்? சமையற்காரன் இருக்கிறானா, இல்லை, ஓட்டலில் சாப்பிடுகிறாயா?''

''சமையற்காரன் இருக்கிறான், சில சமயங்களில் நானும் செய்து கொள்வேன்'' தன் பரிசுத்தத்தன்மை பற்றிக் கூறிக்கொண்டிருந்த சஜ்ஜனுக்கு உரக்கச் சிரிக்கத் தோன்றியது. தாயி கூறினாள் : ''நீ ராம்சந்தரின் மகளை மணக்கச் சம்மதித்தால், நூறு தோலா நகையுடன் அவளை மணக்க ஏற்பாடு செய்வேன். என்னைக் கொள்ளையிட எத்தனை பேர் முயற்சிக்கிறார்கள்! ஆனாலும் கோகுல் நாத் என்னை காப்பாற்றத்தான் செய்கிறார். அவர்களைப் பூண்டோடு ஒழித்துவிட மாட்டேனா; நீ திருமணம் செய்து கொள், அப்பா!''

சஜ்ஜனும் தாயியும் நிமிர்ந்து பார்த்தனர். வாசற்படியில் கன்யா நின்றுகொண்டிருந்தாள். சஜ்ஜன் நடுங்கிவிட்டான். தன்னையும் கண்டு, தாயியையும் நினைத்து அவன் அச்சம் கொண்டான். தாயி அவளைப் பரீட்சிப்பது போல்கடுமையான பார்வையுடன் பார்த்தாள். கன்யா உள்ளே வந்து பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டாள். தாயி கேட்டாள் : ''இவள் யார்?''

சஜ்ஜன் திணறினான். வேறு ஜாதியைச் சேர்ந்தவள், கன்னிப் பெண் என்று கூறினால் தாயி முகத்தைச் சுளித்துக் கொள்வாள் என்று சஜ்ஜனுக்கு தெரியும். உடனே அவன் அவளைத் தன் உறவுக்காரப் பெண் என்று கூறிவிட்டான்.

''யாருடைய மகள்?''

''இவளுடைய பிறந்த வீடு வெகு தொலைவிலிருக்கிறது.''

''மாமியார் வீடு எங்கே இருக்கிறது?''

கன்யா ஏதும் பதில் சொல்லிவிடக் கூடாது என்று அஞ்சிய சஜ்ஜன் மேலும் மேலும் பொய்யை அடுக்கிக் கொண்டே சென்றான். தாயியின் கேள்வி, கன்யாவின் வருகை இரண்டினாலும் பயந்துபோன அவனுக்குச் சிந்திக்க வாய்ப்பே கிடைக்கவில்லை. திடீரென்று கன்யாவின் வளையில்லாத கரங்களைப் பார்த்துப் புதிய கற்பனை தோன்றவே சஜ்ஜன் கூறினான்: ''இவள் பள்ளி கூடத்தில் வேலை பார்க்கிறாள். மாமியார் வீட்டார் எல்லோரும் இறந்து விட்டனர்.''

''உன்னிடம் எதற்கு வந்திருக்கிறாள்?''

''வேலை கற்றுக்கொள்ள! நான் வருகிறேன் அம்மா?'' கன்யா தாயியைச் சஜ்ஜனின் நெருங்கிய உறவினர் என நினைத்து சஜ்ஜனின் நடுக்கத்தைக் கண்டு மகிழ்ச்சியுற்றாள்.

தாயி திடீரென்று சஜ்ஜனைக் கேட்டு வைத்தாள்: ''இந்த விதவையை மறுமணம் செய்து கொள்ளப் போகிறாயா? என்ன?''

''இல்லை அம்மா, நான் இவளுக்கு மாஸ்டர். மாதம் பத்து ரூபாய் வாங்கிக் கொண்டு பாடம் கற்றுக் கொடுக்கிறேன்.''

தாயி ஒன்றும் பேசாமல் எழுந்தாள்: ''நீயே நன்றாக யோசித் துச் சொல் மகனே! உன்னிடம் சொல்லிவிட்டேன். வேறு யாரிடமும் சொல்லிவிடாதே!''

''மாட்டேன், அம்மா! நீங்கள் அனுமதித்தால் போலீசுக்கு ரிபோர்ட் செய்கிறேன்.''

தாயி கூறினாள்: "போலீஸ் வேண்டாமப்பா" அவள் வெளியே சென்ற பிறகு கன்யா ''இவர்கள் யார்?'' என்று கேட்டாள்.

சஜ்ஜன் சிரித்தபடி கூறினான்: ''பாரதமாதா!'' கன்யாவினால் ஒன்றும் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆயினும் பிசாசு போன்ற அந்தக் கிழவியை, பாரத மாதா என்று கற்பனை செய்து பார்த்த அவளுக்குச் சிரிப்பு வந்தது. ''இவர்களிடம் என்னைப்பற்றி நீங்கள் ஏன் இத்தனை பொய் பேசினீர்கள்?'' என்று கேட்டாள்.

சஜ்ஜன் கேள்வியைக் கேட்டுத் திணறினான். பிறகு சமாளித்துக் கொண்டு பதிலுரைத்தான்: ''உண்மை பேசியிருந்தால் உன்னைப் பற்றி—உங்களைப்பற்றி அவர்களுக்கு நல்ல அபிப்பிராயம் இருந் திருக்கும்.''

சஜ்ஜன் 'உங்களை' என்று கூறியதை வனகன்யா கவனித்தாள். சஜ்ஜனும் தன் புதிய உறுதி கன்யாவின் இயற்கையான கவர்ச்சி இரண்டினுலும் தடுமாறினன். அவனுடைய பார்வை கீழே இருந்தது. முகத்தில் சிந்தனை பிரதிபலித்தது. நேற்றைய நிகழ்ச்சி காரணமாக சஜ்ஜன் கோபித்துக் கொண்டிருக்கிருனே என்று கன்யா நினைத்தாள். அதை லட்சியம் செய்யாமல் அவள் கூறினுள்: ''நான் கர்னல் சாஹேபின் வீட்டிலிருந்து வருகிறேன்.''

சஜ்ஜன் அவளை நிமிர்ந்து பார்த்தான். அவள் மேலும் கூறினுள்: ''இன்று பொழுது விடிந்தவுடனே மதுராவிலிருந்து ஒருவரை (ஒரு சிரிப்புச் சிரித்து) அழைத்துக் கொண்டு கர்னல் சாஹேப் என் வீட்டைத்தேடி வந்தார்.''

அதற்குள் சஜ்ஜனுடைய உள்ளம் நிலைக்கு வந்துவிட்டது. எப்படியோ சமாளித்துக்கொண்டு அவன் கேட்டான். ''அவர்களுக்கு உன்—உங்கள் வீட்டு விலாசம் எப்படித் தெரிய வந்தது?''

''நேற்றுச் செய்தித் தாட்களில் செய்தி வந்திருந்ததே, அதைப் படித்துக் கண்டுபிடித்துள்ளனர். முதலில் என் வீட்டிற்கு வந்தனர். அங்கு நல்ல திட்டு வாங்கிக் கொண்டனர். பிறகு யாரோ அவர்களுக்கு, கர்னல் சாஹேபின் பெயரைச் சொன்னுர்கள். அவரையும் அழைத்துக் கொண்டு என்னைக் காண வந்தனர்'' என்று கூறிய கன்யா நான்காக மடிக்கப்பட்ட ஒரு காகிதத்தை எடுத்துக் கொடுத்தாள். ''இது அண்ணி தன் தோழி ஒருத்திக்கு எழுதிய கடிதம்'' என்று கூறினுள்.

சஜ்ஜன் கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தான். மிகவும் நன்ருக எழுதப்பட்டிருந்த அந்தக் கடிதம் பரிதாபகரமாக இருந்தது: ''நான் அரக்கர்களின் கையில் சிக்கிவிட்டேன். திரிபுவன் லாலாஜி தன் மனைவியை வெறுத்தார். அவர்என்னை மறுமணம் செய்து கொள்ளச் சம்மதித்தார். அம்மா இதற்குச் சம்மதிக்கவில்லை. ஆனுல் என்னை அவரிடம் ஒப்படைத்துவிட்டால் திரிபுவன் தன் வசப்பட்டுவிடுவார் என்று அம்மா நினைத்தாள். இந்த வீட்டு நாடகத்தைப்பற்றிக் கேட்காதேயம்மா! யாரைத்தான் நான் குற்றம் சொல்வேன்? திரிபுவன் ஒன்றும் அறியாதவர். என்னைத் திருமணம் செய்து கொள்ளப் போவதாக எல்லோருடைய முன்னிலையிலும் அவர் தண்டோரா போட்டுவிட்டார். சித்தியும் சித்தப்பாவும் என்னை அடிக்க வந்தார்கள். என்னைக் காப்பாற்ற வந்த அம்மாவின்மீதும் அடி விழுந்தது. சித்தப்பா இருக்கிருரே அரக்கர்; என்னை அடித்து நொறுக்கிவிட்டு எல்லாவற்றையும் கொள்ளையடித்துக்கொண்டு சென்றுவிட்டார்! நான் இறங்கவும் வழியில்லை. வீட்டில் எனக்கு உறுதுணையும் யாருமில்லை. கடவுளும் பொய்யாகி விட்டது. தந்தையை எதிர்த்துத் திரிபுவன் ஒன்றும் செய்ய முடி

யாது. கன்யா எனக்காகப் பரிந்து பேசுவாள். அவளுந்தான் என்ன செய்வாள்! என் நிலைமையை உனக்கு எழுதிச் சிறிது ஆறுதல் அடைகிறேன். ஆனால் நீ எனக்குப் பதில் எழுத வேண்டாம். இந்த அரக்கர்களிடம் கடிதம் அகப்பட்டுவிட்டதோ, அவ்வளவு தான்; என்னை உயிருடன் வைக்கமாட்டார்கள்.''

கடிதத்தை சஜ்ஜன் ஒருமுறை, இருமுறை, மும்முறை படித்தான். அதையே பார்த்துக்கொண்டு நின்றான். கன்யா கூறினாள்: "இந்தக் கடிதத்தின் வாயிலாகத் தந்தையை எளிதில் சிக்க வைத்து விடலாம் என்று கூறி கர்னல் சாஹேப் என்னை மாஜிஸ்டிரேட்டிடம் கொண்டு சென்றார். உங்களை முதலில் கேட்டுக்கொண்டு பிறகு ஏதாவது செய்வோம் என நான் நினைத்தேன்.''

சஜ்ஜன் மறுபடியும் மனம் சஞ்சலம் அடைந்தான். தன்னைச் சமாளித்துக்கொண்டு தலை குனிந்தபடி அவன் கூறினான்: ''கர்னல் கூறியது சரிதான், நீங்கள் மாஜிஸ்டிரேட்டைக் காணச் சென்றிருக்கலாம். உங்களைச் சந்திக்க வந்தவர் யார்!''

சஜ்ஜனின் நூதனப் போக்கை ஆராய்ந்தபடி அவனை அடிக்கடி பார்த்து நகத்தைக் கடித்துக்கொண்ட கன்யா கூறினாள்: ''அண்ணியின் இந்தத் தோழியுடைய கணவர்தான். பாரிச நோயினால் பீடிக்கப்பட்ட அவளால் ஆறு மாதங்களாக எழுந்து நடக்க இயலவில்லை. இவர்கள் எனக்கு முழு உதவியும் தரச் சித்தமாக இருக்கின்றனர். இங்கிருந்து கோர்ட்டின் ஆர்டரைப் பெற்றுக்கொண்டு, மதுரா சென்று தம் மனைவியின் வாக்கு மூலத்தைக்கூட வாங்கித் தருவதாகச் சொல்கிறார் நாம் வேண்டுமானால்...''

சஜ்ஜன் கேட்டான்: ''நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்?''

''நீங்கள் எப்படி நினைக்கிறீர்களோ, அப்படியே செய்யலாம்!''

சட்டைப் பையிலிருந்து சிகரெட்டை எடுத்துக்கொண்டு முகத்தில் தத்துவ ஞானியின் பாவத்தைக் காண்பித்தபடி சஜ்ஜன் கூறினான்: ''நான் என்ன சொல்ல இருக்கிறது, இது உங்கள் விஷயம்.''

"என்னுடையதுமட்டுமா? மனித சமுதாயத்தின் பிரச்னையில்லையா இது?''

"இல்லை, நான் கூற நினைத்தது அப்படியல்ல. இது உங்கள் தந்தை, உங்கள் குடும்ப கௌரவத்தைப்பற்றிய பிரச்னையாயிற்றே—''

''தந்தையின் கௌரவமா?'' கன்யா சற்றுக் கடுமையாகப் பேசினாள்: ''அவர்களுடைய கௌரவத்திற்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. அண்ணிக்கிழைத்த தீங்கிற்கு அவரை நான் பழி வாங்கியே தீருவேன். நேற்றிலிருந்து அவர் என்னைப்

பின் தொடர்ந்து கொண்டிருக்கிறார். என்னை அவமானப்படுத்தப் போக்கிரிகளை வைத்திருக்கிறார்!''

கன்யாவின்மீது சஜ்ஜனுக்கு இருந்த வெறுப்பு மனப்பான்மை ஒரு நொடியில் பறந்தோடியது; அவன் பயந்து போனான்: "உனக்கு அவர்கள் ஏதாவது தீங்கிழைத்து விட்டார்களா?''

கன்யா பதிலுரைத்தாள்: ''நேற்றிரவு எட்டு மணியிருக்கும். என் அறைக்குத் தந்தை வந்து கூச்சல் போட்டார். கண்டபடி மிரட்டினார். நான் கதவைத் திறக்கவில்லை...''

''அப்புறம்?''

"அப்புறம் திரும்பிப் போய்விட்டார். ஆட்களை ஏவிவிட்டார். அந்த இடத்தைச் சுற்றிலும் பெரும்பாலும் கூலியாட்கள்தாம் இருக்கிறார்கள். சாளிக்ராம் என்ற பிரமுகர், காசு இந்த இரண்டும் துணையாக இருக்கவே அவர்கள் எனக்குப் பகைவராகிவிட்டார்கள். இன்று காலையில் அக்கம் பக்கத்திலிருக்கும் சில வேலையாட்களும், பெண்களும், குழந்தைகளுங்கூட என் அறைக்கருகே வந்து என்னைத் தொந்தரவு செய்துவிட்டுச் சென்றார்கள். பிறகு கர்னல் சாஹேப் வந்து... இதுவரை நான் அங்கே செல்லவில்லை!'' கன்யாவின் கண்கள் கலங்கின. சஜ்ஜனின் உள்ளம் மறுபடியும் நெகிழ்ந்தது. உணர்ச்சி வசப்பட்டு அவன் கூறினான்: ''நீங்கள் ஏன் அங்கே இருக்க வேண்டும்? எத்தனை தடவை உங்களுக்குச் சொல்லிவிட்டேன்? ஒருவேளை நான் மோசமானவன், போக்கிரி என்பது உங்கள் கருத்தோ...?''

''நான் அப்படி நினைக்கவேயில்லை.''

''பின்பு என்னதான் நினைக்கிறீர்கள்? என் வீடு இவ்வளவு பெரியதாக இருக்கிறது. முழு வீட்டிலும் நான் இருப்பதில்லை. வேண்டுமானால் உங்களுக்கு ஒரு பகுதியைத் தரமுடியும். என்னைப் பொறுத்தவரை சுவர் வேண்டுமானாலும் வைத்துத் தடுத்துவிடுகிறேன். இன்னும் என்ன வேண்டும் உங்களுக்கு?'' கன்யா திடீரென்று சிரித்தாள். ''உங்கள் கோபம்கூட எவ்வளவு கீழ்த்தரமாக இருக்கிறது! ஆயினும் நான் தவறாக எண்ணவில்லை.''

கன்யா இவ்விதம் சிரித்துவிட்டுப் பேசின முறையைப் பார்த்து சஜ்ஜன் துணுக்குற்றான். தன்னைச் சிறியவனாக உணர்ந்தான். இரவில் தான் நிச்சயித்தப்படி முற்றும் பற்றற்றும் அவனால் இருக்க முடியவில்லை. முழு மனத்துடன் பாசமாகவும் இருக்க இயலவில்லை. வியப்புடன் அவளைப் பார்த்தான்—நெருக்கம், தொலைவு இரண்டும் கலந்த அதே நிலைதான்.

கன்யா மறுபடியும் கூறினாள்: ''அந்தப் பெரிய அறைக்கு வாடகை கொடுத்துக் கொண்டு இருக்கும்படி என் நிலைமை

இல்லையே! எனக்காக நீங்கள் அதற்குப் பத்து ரூபாய் போதும் என்றால் அது தவறில்லையா?''

சஜ்ஜன் கூறினான்: ''நான் வாடகைக்கு விடும் வீடுகளில் எதையும் உங்களுக்குத் தரப்போவதில்லையே! இப்போது எதுவும் காலியாக இல்லை. நான் ஒரு நண்பன் என்ற முறையில் கஷ்ட காலத்திற்குக் கைகொடுத்து உதவ விரும்புகிறேன். எனக்குப் பதிலுக்கு ஒன்றும் தரவேண்டாம். இப்போது இந்த ஒரு சிக்கலி லிருந்து விடுபட்டு நீங்கள் மன அமைதியுடன் இருங்கள். இந்தக் கடிதத்தைப் பற்றி ஏதாவது நடவடிக்கை எடுக்கலாம் என்றால் நீங்கள் அந்த இடத்தில் நிம்மதியாக இருக்க முடியாமல் தவிப் பீர்கள்.''

''என்னை 'நீ' என்று அழைத்து வந்தவர் திடீரென்று ஏன் 'நீங்கள்' என அழைக்கிறார்கள்?''

''திடீரென்று தேவதையாக மாற்றி விட்டேன்!'' சஜ்ஜன் குத்த லாகக் கூறிக் கொண்டான். குனிந்தபடி கன்யா கேட்டுக் கொண்டிருந்தாள். சில விநாடிகள் வரை நிசப்தம் நிலவியது. திடீரென்று கன்யா கனைத்துக் கொண்டு: ''ஒரு விஷயம் சொல் லட்டுமா?'' என்றாள்.

சஜ்ஜன் அவளைப் பார்த்தபடியே ''என்ன?'' என்று கேட்டான்.

கன்யா ஒரு முறை கண்களைத் தாழ்த்திக் கொண்டாள். முகம் சிவந்துவிட்டது. பிறகு தலையை நிமிர்த்திக் கொண்டு பேசினாள்: ''ஒரு நல்ல வேலைக்கு நல்ல மனிதர் ஒருவர் உதவுகிறார் என்ற ஒரே ஓர் எண்ணந்தான் உங்களை முதல் முதலில் சந்தித்தபோது என் உள்ளத்தில் இருந்தது. ஆனால் நம் சந்திப்பை வெகு விரைவில் நீங்கள் மாற்றியமைத்த விதத்திலிருந்து எனக்கு அதிர்ச்சியாக இருக்கிறது. தவறாக ஏதும் படவில்லை. சற்றுப் பொறுங்கள். நான் என் உள்ளத்து விஷயங்களைச் சொல்லி விடுகிறேன். நான் உங்களைக் கெட்டவர் என்று நினைக்கவில்லை. ஆனால் மன்னிக்க வேண்டும். நீங்கள் என்னை நட்புக் கொண்டவள் என்று மட்டும் கருதாமல் வேறு என்னவோ நினைக்கிறீர்கள். உங்கள் அந்தப் பேச்சைத்தான் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.''

தெளிவாக உள்ளத்தைத் திறந்து கன்யா பேசியது சஜ்ஜனுக்குப் பிடித்திருந்தது. அவன் கூறினான்: ''நீ உண்மையை அழுத்த மாகக் கூறுகிறாய். அதே போல் நானும் சொல்லட்டுமா? நான் உன்னை வேறு உறவுடன் பார்க்க எனக்கு நீ உதவியாக இருக்க வில்லையா?''

. கன்யாவின் கண்களை நாணம் கவ்விக்கொண்டது. சஜ்ஜன் கூறினான்: ''நான் முழுமையுடன் நன்னடத்தையுள்ளவனில்லை என்றாலும், நடத்தை கெட்டவனுமில்லை. நான் உன்னை எவ்விதம்

கருதுகிறேனு...இல்லே, இப்படிச் சொல்கிறேன்: நேற்றுவரை எப்படிக் கருதி வந்தேனே, அதைக் கொண்டு எதையும் நிச்சயித்து விடுவது தவறு.என்னுல் ஏதாவது பிழைநேர்ந்திருந்தால் மன்னித்து விடு. நான் பெண்களே மதிப்பவன் என்று உனக்கு நிரூபித்துக் காண்பிக்கிறேன். அதற்கு எனக்கு நீ வாய்ப்பளிக்க வேண்டும்.''

''உங்களே நான் அவ நம்பிக்கையுடன் பார்க்கவில்லே. இப்போதும் ஒரு சிறிதும் இல்லே. உங்கள் நட்பை அடைந்து நான் என் வாழ்வில் ஒரு புது நம்பிக்கையைப் பெற்றேன்.''

சஜ்ஜனுடைய உள்ளத்து லட்சியம் மறுபடியும் தட்டுத் தடுமாறத் துவங்கியது. கன்யாவை அவள் உள்ளத்தைத் துளேக்கும்படி பார்த்தான். அவளாலும் உறுதியுடன் இருக்க இயலவில்லே. பிறகு சமாளித்துக் கொண்டு கூறினுள்.

''இந்த கடிதத்தை என்ன செய்வது?''

சஜ்ஜன் சமாளித்துக்கொண்டு கூறினுன்: ''கிளம்பு, கர்னலின் வீட்டுக்குச் செல்லலாம். இன்றே ஏதாவது நடவடிக்கை எடுத் தாக வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது.'' பிறகு அவன் எழுந்தபடி கூறினுன்: ''ஆனுல் நீ எங்கே இருக்கப் போகிருய்? நான் உன்னே அங்கே இருக்கச் சம்மதிக்கவே மாட்டேன்.''

கன்யா பேசாமல் கால் கட்டை விரலால் நிலத்தைக் கிளறிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். பிறகு அவள் கூறினுள்: ''இன்று எங்கோ இருந்து விடுகிறேன், உங்கள் வீட்டிலோ அல்லது கர்னல் சாஹேப் வீட்டிலோ, நாளேக்குள் ஏதாவது ஏற்பாடு செய்தாக வேண்டும். நீங்கள்தான் செய்ய வேண்டும்.''

சற்று யோசித்து சஜ்ஜன் கூறினுன்: ''கேசர்பாகில் உள்ள என் வீட்டில் மாடியறைகள் கட்ட எனக்கு அநுமதி கிடைத்துவிட்டது. எல்லாம் ஒப்புக்கொள்ளப்பட்டுவிட்டது. உனக்காக விரைவில் ஒரு ஃப்ளாட் கட்ட ஏற்பாடு செய்கிறேன். அது வரையில்?''

கன்யா அவனேப் பார்த்துக்கொண்டிருந்தாள். சஜ்ஜன் அவளேயே உற்றுப் பார்த்துக்கொண்டு தன் பேச்சை முடித்தான்: ''அதுவரை நீ என் வீட்டிலேயே இருந்துவிடு. கர்னலிடம் இருப் பதில் எனக்கு ஆட்சேபனே கிடையாது. ஆனுல் அவனுடைய மனேவி பழைய காலத்துப் பழக்கங்களேக் கொண்டவள். உன்னே யாரும் தவருக நினேப்பதை நான் விரும்ப மாட்டேன்.''

''ஆனுல் உங்களுடன் இருப்பதைப் பார்த்துக் கொண்டு உலகம் என்னேச் சும்மா விட்டு விடுமா? நேற்று என் தந்தை கூடக் குத்த லாகப் பேசினுர். சரி, நீங்கள் சொன்னபடியே செய்கிறேன்.''

மகிழ்ச்சியின் ஆர்வத்தில் சஜ்ஜன் மறுபடியும் தன்னே மறந்தான். கன்யாவை அன்புடன் அணைத்து கொள்ள, அவனது உள்ளம் துடித்தது. வெளிப்படையாக சஜ்ஜன், சஜ்ஜனுகவே (நல்லவ

ளுகவே) இருந்தான். புத்தருடைய வாக்கியம் அவனுடைய செவிகளில் ஒலித்தன. ''சுய உணர்வைப் பத்திரமாக வசப்படுத்திக் கொள்ளவேண்டும் ஆனந்தா!''

தினசரி வேலைகளில் சஜ்ஜன் புதிய மாறுதலைக் கண்டான். கர்னலின் வீட்டில் டிபன் சாப்பிட்ட பிறகு சௌக் செல்வதற்குப் பதிலாகத் தன் அறைக்கு வந்து விட்டான். தெய்வங்களிடம் எஜமானனின் போக்கு மாறிவிடவே நேற்றுப் பிற்பகலிலிருந்தே பணியாட்களின் பட்டாளம் பரமபக்தி நிறைந்து காணப்பட்டது. இப்போது பூஜையறை மணமகனின் முகத்தைப் போல் பளபளத்தது. மண்டபத்தில் வைத்திருந்த வெள்ளிக் கோதண்டம் மினுமினுத்தது! மண்டபத்திலிருந்த சலவைக்கல் தூண்களில் சித்திர வேலைப்பாட்டுடன் நின்று கொண்டிருந்த நங்கையரின் சிலைகள் நேற்றை விட இன்று அதி சுத்தமாகக் காணப்பட்டன. தோட்டக்காரனும் தன் கடமையுணர்ச்சியைக் காண்பதில் ஒரு குறையும் வைக்கவில்லை. அழகிய தோரணங்கள் வாயிற்படியை இன்னும் அழகுபடுத்தின. இன்று பண்டித்ஜியும் குறித்த நேரத்திற்கு முன்னமேயே வந்து பூஜை செய்வதற்கு முன்பு விக்கிரகங்களை அபிஷேகம் செய்வித்து அலங்கரித்துப் பக்தியின் ஆடம்பரத்தை வெளிப்படுத்திக்கொண்டு, ''ஜய ஜகதீச ஹரே!'' என்று பாடினர். கடவுளுக்கு ஆரத்தி எடுத்தார். அதே சமயத்தில் அர்ச்சகருக்குத் தொல்லை வருவது போல் சஜ்ஜன் அறைக்குள் நுழைந்தான். அவருடைய கைகால்கள் பதறிப் போயின. எப்படியோ அவர் ஆரத்தியைச் செய்து முடித்தார். சஜ்ஜன் உற்றுப் பார்த்துக்கொண்டே நின்றான். அவனுடைய தாயே ஆவி உருவில் அங்கு இருப்பதுபோல் அவன் உணர்ந்தான். பண்டித்ஜி வார்த்தைகளை உச்சரிக்கும் விதத்தையும், அவர் காண்பிக்கும் வெளிப்பகட்டையும் பார்த்த சஜ்ஜனுக்குச் சிரிப்பும் வந்தது. ''இந்தத் தரகனால் எவ்விதம் உண்மையான பக்தி செலுத்த முடியும்?'' என்று சஜ்ஜன் நினைத்தான்.

தன் சிந்தனைக் கோயிலிலிருந்து அவன் வெளியே வந்தான். சாளிக்ராம், ஜானகிசரண் என்ற பெயர்களை கொண்ட சிறு காகிதத்தை அவனிடம் வேலையாள் நீட்டினான். சஜ்ஜன் கேட்டான்: ''எவ்வளவு நேரமாக உட்கார்ந்திருக்கிறார்கள்?''

''சுமார் இருபது நிமிஷங்களாக, சாமி''

''டீ கொடுத்தாயா?''

''கொடுத்தேன், சாமி.''

''அவர்களிடம் என்ன சொல்லி வைத்தாய்?''

''பூஜையறையில் இருப்பதாகச் சொன்னேன்?'' ''சரி'' சஜ்ஜன் திருப்தியுடன் உடையை மாற்றிக் கொண்டான்.

'டிராயிங் ரூமி'ற்குச் சென்றதும் இருவரும் பிரமாதமாகச் சஜ்ஜனை வரவேற்றனர். சாளிக்ராமை அவனுக்குத் தெரியாது. ஜானகிசரண் அவனுக்குத் தெரிந்தவர்.

கரங்குவித்து மன்னிப்புக் கேட்டவண்ணம், சஜ்ஜன் கூறினன்: "உங்களைக் காக்கவைத்து விட்டேன்."

மெலிந்த உடல், மெல்லிய உதடுகள், சிறிய மூக்கு, கோடுபோல் இருந்த மீசை—இவர்தாம் ஜானகிசரண். "இல்லை, நீ பூஜை செய்வதுபற்றி நாங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தோம்" என்றார் அவர்.

அடர்ந்த மீசையுடன், ஜரிகைத் தொப்பிக்காரர் சாளிக்ராம் மூக்குக் கண்ணாடி வழியாகப் பார்த்துக்கொண்டிருந்த கண்களை மூடிக்கொண்டு சிரித்தார்.

"பெரிய குடும்பத்தவர்; கலைஞர் வேறு, நம் பாரத நாட்டில் மிகச் சிறந்து விளங்கும் மனிதராயிற்றே! சரஸ்வதியின் அருளின்றிக் கலை வருமா?—இவர் பூஜை செய்யாமலா இருப்பார்?. ஹி... ஹி... ஹி!"

வெள்ளியால் சித்திர வேலைப்பாடு செய்யப்பட்ட பிடியுடைய தடிமேல் இரு கைகளையும் ஊன்றிக்கொண்டு ஜானகிசரண் கூறினார்.

"நமக்கு வேண்டியவர்களில் ஒருவரான நீ இவ்வளவு பெயர் பெற்றுவிட்டாய். எங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி. இப்போது எங்கள் பேட்டையிலேயே வேலை செய்கிறாய். ஒரு நாள் ராஜா சாஹேப்கூட என் வீட்டுக்கு வந்து உன்னைப்பற்றிச் சொன்னார். அடிக்கடி உன்னைப்பற்றிக் கேட்கிறார்!"

"பெரியவராயிற்றே; என்னைப் போன்ற சிறியவனைப் பற்றி எப்போதும் கவலைப்படுவார்!" சஜ்ஜன் நன்றியுணர்ச்சி தொனிக்கும் குரலில் கூறினன்.

சாளிக்ராம் கூறினன்: "இவருடைய இரண்டு நண்பர்களையும் எனக்கு நன்றாகத் தெரியும். இவருடைய பெயரையும் கேட்டிருக்கிறேன். இவர் உண்மையில் சஜ்ஜன் தான் ஹி...ஹி"

"ஒரு காரியமாக உங்களிடம் வந்திருக்கிறோம். சாளிக்ராமும் என் வேண்டுகோளுக்கு இணங்கியிருக்கிறார். அரசியல் இருக்கவே இருக்கிறது, மக்களுக்காக! ஏதாவது நல்ல வேலை செய்ய வேண்டும் என்று நான் இவரிடம் கேட்டுக்கொண்டேன். இவர் ஒப்புக்கொண்டார். உன் கருத்தையும் கேட்டுக்கொண்டு போக நினைத்தேன். சுக்லாவும், கர்னல் சாஹேபும் என் நண்பர்கள். உன் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டால் மேற்கொண்டு செய்ய வேண்டியதைக் கவனிக்கலாம்."

சாமர்த்தியமாக ஜானகிசரண் பேசியதைக் கேட்ட சஜ்ஜன் "இது அந்தத் துண்டுப் பிரசுரம் செய்யும் வேலை" என அறிந்து

கொண்டான். மனத்திற்குள் வெகு ஜாக்கிரதையாக இருந்து கொண்டு வெளிப்படையாக மிகவும் எளிமையுடன் பேசினன்: "எந்த நல்ல வேலைக்கும் நான் உங்களுடன் ஒத்துழைக்கிறேன். என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள்!"

சாளிக்ராம் கூறினர்: "நாங்கள் அரசியலில் வளைய வரும் புழுக்களாகிவிட்டோம். சொற்பொழிவாற்றத்தான் எங்களுக்குத் தெரியும். பொதுமக்கள் நல்ல அறிவுடன் இருக்க வேண்டும், இதற்கு நாம் என்ன செய்யலாம் என்று சொல்லுங்கள்?"

"ஆமாம் தம்பி, நீ சுற்ருத இடமில்லை; படிக்காத நூல்களில்லை. மக்களை நம் வசப்படுத்தத் தெரிய வேண்டும். இதற்கு ஏதாவது உபாயம் உண்டா? சொல். பொம்மைக்கண்காட்சி நடந்ததே அதைப்பற்றி மக்களிடையே ஏதாவது பிரசாரம் செய்யலாமா?"

"அதனுல் ஒரு பலனும் இருக்காது. அநேகம் பேர் அதைப் பார்த்து விட்டார்கள். அது மட்டுமின்றி, இப்போது மக்கள் பொம்மைவைத்து விளையாடும் நிலையில் இல்லை... ஹி... ஹி உங்கள் ஓவியங்களை ஏன் ஒரு கண்காட்சியில் வைக்கக்கூடாது என்று நான் சொல்கிறேன். புதுயுகத்தில் கலை எப்படி இருக்கிறது என்று மக்களுக்குத் தெரிய வேண்டாமா?" சாளிக்ராம் குறிபார்த்து அம்பை விட்டார். சஜ்ஜனுக்கு இந்தக் கருத்துப்பிடித்திருந்தது.

சாளிக்ராம் கூறினர்: "ஹர் எக்ஸெலன்ஸி கண் காட்சியைத் திறந்து வைக்க ஏற்பாடு செய்கிரும்—இந்த மாதம் இருபதாம் தேதிக்குள் பிரமாதமாக வைத்து விடவேண்டும். எல்லோருடைய ஓவியங்களையும் நீங்கள் சேர்த்துவிடுங்கள். இதில் ஏதாவது சிக்கல் இருக்கும்போல் தோன்றினல், உங்கள் ஓவியங்கள் மட்டும் போதும்.—"

சஜ்ஜன் சிரித்தபடி கூறினன்: "இந்தக் கண்காட்சியும் உங்கள் எலெக்ஷனின் ஒரு 'ஸ்டன்ட்' போலத்தான் தோன்றுகிறது"

ஜானகிசரண் புன்முறுவல் செய்தார். சாளிக்ராம் பேசாமல் உட்கார்ந்திருந்தார். ஜானகிசரண் கூறினர்; "ஆமாம், எலெக்ஷனுக்குச் சிறிது லாபம் உண்டாகும். ஆனல் நம் குறிக்கோள் மக்களுக்கு நலன் செய்வதுதான்."

நகரத்து ஓவியக்கலைஞர்களின் சித்திரங்களைத் திரட்டி ஒரு கண் காட்சிச்சாலை ஆரம்பிக்கலாம் என்று சஜ்ஜன் கூறினன். கண் காட்சி சாலைபற்றிய அறிக்கை—காகிதத்தில் சஜ்ஜன், அவனுடைய இரு நண்பர்கள் ஆகியோரின் பெயர்களை வெளியிடச் சாளிக்ராம் அநுமதி பெற்றுக் கொண்டார். மஹிபால் இதற்குச் சம்மதிக்க மாட்டான் என்பது சஜ்ஜனுக்குத் தெரியாது. அப்போது அவன் கன்யாவைச் சந்திக்க ஆவலாக இருந்தான். இந்தக் கண்காட்சி யினல் அவளுக்கு ஒருவித இடைஞ்சலும் நேராது என்று

கன்யாவிற்கு உறுதியளிக்க அவன் விரும்பினன். சாளிக்ராம் ஏதாவது வலையில் அவனைச் சிக்கவைக்க நினைத்தால், அவனே சாளிக்ராமைச் சிக்க வைத்துவிடுவான்!

ஜானகிசரண் சஜ்ஜனின் வண்டியிலேயே திரும்பினர். சஜ்ஜன் தன் அறைக்கு வந்தான். நேற்றைய வாடிய மலர்கள் அவனுக்குத் தாயினை நினைவுபடுத்தின; நேற்றுக் கட்டுண்டு தவித்தாள், பாவம்; களவு போன பொருள்களைப் பற்றியோ, தனக்கு நேர்ந்த கஷ்டத்தைப்பற்றியோ அவளுக்கு அவ்வளவு கவலை இருக்கவில்லை. பூனைக் குட்டிகள் பசியால் வாடுகின்றனவே என்று அவள் தவித்தாள்! தாயியின் சுபாவத்துள் இந்த நேர்மாறன தன்மை சஜ்ஜனை வியப்பில் ஆழ்த்தியது. வெறுக்கத்தக்க அவள், அன்பே உருவாய் ஆகி விட்டாளே, அப்படியானல் கெட்ட நடத்தை போய் அவள் நன்னடத்தையுள்ளவளாக ஏன் மாறக்கூடாது?...கன்யாவைப் பற்றி அவளுக்கு ஏன் கவலை? அவள் நல்லவளா, கெட்டவளா என்றறிய அவளுக்கு எதற்கு அவ்வளவு ஆவல்? நாற்புறமும் திரிந்து கொண்டிருந்த தன் உள்ளத்தை சஜ்ஜன் ஒரு முகப் படுத்தித் தாயியின் சித்திரத்தை வரைய ஆரம்பித்தான்.

மகாகவி 'போர்' மெள்ள மெள்ள நடந்து அறைக்குள் நுழைந்தார். அவரைப் பார்த்ததும் சஜ்ஜனுக்கு எரிச்சலாக இருந்தது. ஆனல் வாயினல் ஒன்றும் சொல்லாமல், தன் வேலையைச் செய்து கொண்டிருந்தான்.

விரஹேஷ் சிரித்தபடி கூறினர்: "இப்போது கலைஞர் தம் சாதனையில் ஈடுபட்டிருப்பார் என்று நான் நினைத்தது சரியாய்ப் போச்சு! என்ன வரைகிருயப்பா?"

'உன் தலை' என்று சொல்லத் தோன்றிற்று. ஆனல் ஒன்றும் சொல்லாமல் அவன் வேகமாகச் சிகரெட்டை ஊதினன்.

வாசற்படியில் அமர்ந்துகொண்டு விரஹேஷ் உரக்கச் சிரித்துக் கொண்டிருந்தார்; இப்படியே முக்கால் மணி நேரம் கழிந்து விட்டது. தம் புதிய கவிதைகளைப் பாடி வேறு காண்பித்தார்.

'இப்போது போய் விடு' என்று சஜ்ஜன் பல முறை சமிக்ஞை செய்து பார்த்தான். பிறகு ஒரு முறை தெளிவாகக் கூறி விட்டான்:

"விரஹேஷ், இப்போது எனக்குத் தனிமை வேண்டும். பிறகு எப்போதாவது வா!"

"வருகிறேன். உங்களிடம் வந்தால் எனக்குப் புதிய ஊக்கம் பிறக்கிறது; கலைஞரே! புத்தொளியுடன் செல்கிறேன். இப்போது உன்னை—உங்களைத் தொந்தரவு செய்ய மாட்டேன். ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருக்கிறேன்."

சிறிது நேரம் வரை உட்கார்ந்துகொண்டு விரஹேஷ் மூத்த

வளின் வீட்டு ஜன்னலையே பார்த்தவண்ணமிருந்தான்: திடீரென்று பேசி வைத்தான்: "சஜ்ஜன்! தேநீர் தயார் செய்யட்டுமா? எனக்கு 'மூட்' வந்து கொண்டிருக்கிறது." என்று கூறியபடியே சஜ்ஜனுடைய, பதிலை எதிர்பாராமல் 'ஸ்டவ்' அருகே சென்றான். "அணைத்தால் அணையாது, அணைந்தால் அணைக்காது!" என்று ஒரு கவிஞர் காதலைப் பற்றிக் கூறினாரே, அது பிரமாதம்" என்று கூறியபடியே விரஹேஷ் அடுப்பில் தண்ணீர்ப் பாத்திரத்தை வைத்தான். "சஜ்ஜன், உங்களிடம் ஒன்று சொல்ல வேண்டும்: உள்ளத்தில் காதல் கனல் எரிந்தாலன்றி நல்ல கவிதை உதிக்காது. நீங்கள் பார்த்துக் கொண்டே இருங்கள். வெகு விரைவில் நான் இன்னும் ஒரு அமரகீதம் எழுதிவிடுகிறேன்."

சஜ்ஜன் ஒன்றும் கூறவில்லை. மறுபடியும் விரஹேஷ் வாசற்படியருகே வந்து கதவுடன் தன் கன்னத்தைச் சேர்த்துக்கொண்டு நின்றான். மூத்தவளின் வீட்டு ஜன்னலைப் பார்த்தபடி முணுமுணுத்தான் :

'காத்துத் தவங் கிடந்தேன்
கண்ணும் பூத்து நின்றேன்!"

தேநீர் தயாராகி விட்டது. குடித்த பிறகு விரஹேஷ் சஜ்ஜனின் சிகரெட்டுகளனைத்தையும் ஊதித் தள்ளிவிட்டான். திடீரென்று மூத்தவளின் வீட்டு ஜன்னலில் ஒரு முகம் ஒளி வீசிற்று. ஆனால் அது வேறு யாருடைய உருவமோ தெரியவில்லை. (நந்தோ போலும்) நம்பிக்கையிழந்த விரஹேஷ் பிரிவாற்றாமை தாங்காமல் சோக கீதம் பாடத்தொடங்கினான்.

மாடியில் ஏறிவந்து கொண்டிருந்த மஹிபால், தன் இடது காதைக் கையால் பொத்திக்கொண்டு, கண்களை மூடிக்கொண்டு பாட்டில் முனைந்திருக்கும் விரஹேஷ்வை பார்த்தான். அவனுக்கு ஆத்திரம் மூண்டது.

யாரோ வரும் ஓசை கேட்ட சஜ்ஜன், கன்யா வருகிறாள் என நினைத்து மகிழ்ச்சியடைந்தான்.

வாசற்படியில் வந்து விரஹேஷின் தலையை ஆட்டிவிட்டு மஹிபால் "கால்களை மடக்குங்கள் சுவாமி, உள்ளே போக வேண்டும்' என்றான்.

"ஆ! குருதேவா!" என்று உடனே மஹிபாலின் கால்களைச் விரஹேஷ் பிடித்துக் கொண்டான். தலை முடியை ஓர் அசைப்பு அசைத்தபடி, "இனி எனக்குக் குறைவில்லை. குருதேவரின் தரிசனம் கிட்டிவிட்டது," என்றான் விரஹேஷ்.

வனகன்யாவிற்குப் பதிலாக மஹிபாலைக் கண்ட விரஹேஷ் ஏமாற்றமடைந்தான்; ஆயினும் திருப்தியுடன் இருந்தான்.

மஹிபால் தலையணையை ஆதாரமாகக் கொண்டு உட்கார்ந்த

தைப் பார்த்து அவனுக்கு ஏதோ வருத்தம் என சஜ்ஜன் புரிந்து கொண்டான். உடனே அவன் தன் ப்ளேட்-பிரஷ் முதலிய வற்றைக் கீழே வைத்து விட்டான்.

விரஹேஷ் கூறினான்: ''குருதேவா! புதிய கவிதை ஒன்று எழுதி வருகிறேன்''.

சஜ்ஜன் பணிவுடன் கூறினான்: ''விரஹேஷ், மஹிபாலுடன் நான் முக்கியமான விஷயத்தைப்பற்றிப் பேச வேண்டும்!''

''தாராளமாகப் பேசிக்கொள்ளுங்கள். நான் மாடிக்குச்சென்று உட்கார்ந்து கொள்கிறேன். என் குருதேவர் இன்று வந்திருக் கிறார். அவரது அருளால் என் பாடல் அழகாக அமைந்துவிடும். குருஜி! உங்கள் ஆசியினால் இது என் இரண்டாவது அமரகீதமாகும். இதை முடித்துவிட்டால் நேரே பம்பாய் சென்றுவிடுவேன்.''

பிறகு தான் எதிர்பார்த்தபடி ஜன்னல் கதவு திறக்கிறதா என்று கவனிக்க வெளியே சென்றான்.

சஜ்ஜன் ஆத்திரமுற்றான். பிறகு மஹிபாலுடன் மெதுவாகப் பேசலானான்: ''இந்த மடையன் அட்டையைப் போல் ஒட்டிக் கொள்கிறான். நாம் பேசுவதைக் கேட்கிறானு பார். ஒரு கர்னல் தான் சரி. ஏன் வருத்தமாக இருக்கிறாய்? அண்ணியுடன் ஏதாவது போர் மூண்டு விட்டதா?'' ''இல்லை'' என்று மஹிபால் தலையசைத் தான் சஜ்ஜன் மறுபடியும் கேட்டான்: ''உனக்கு ஏதோ கவலையிருக் கிறது. நேற்று உன் மைத்துனனின் திருமணம் இங்கே நடந்த தாமே! கர்னல் சொன்னான்.''

''திருமணம் நேற்றைக்கு முந்தைய நாள் நடந்தது.''

சஜ்ஜன் சற்று மௌனமாக இருந்துவிட்டுக் கேட்டான்: ''திரு மணத்தில் ஏதாவது ப்ரெசன்ட் கொடுத்திருப்பாயே!''

''கொடுத்தேனே!''

சஜ்ஜன் சிகரெட் கேசை எடுத்தான். உள்ளே ஒன்றும் இருக்க வில்லை. கோபத்துடன் வெளியே பார்த்தான்: ''இந்த போர்''

''இந்தா இதில் இருக்கிறது சிகரெட்'' என்று தன்னிடமிருந்த சிகரெட்டை மஹிபால் சஜ்ஜனுக்குக் கொடுத்தான்.

''குருஜி!. எனக்கும் ஒரு சிகரெட்......'' என்று கூறியபடி விர ஹேஷ், உள்ளே மறுபடி வந்துவிட்டான்.

''விரஹேஷ், என்ன வேலை செய்துகொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான், மஹிபால்.

சிகரெட் பாக்கெட்டைத் திறந்து எடுக்கும்போது சஜ்ஜன், மஹி பால் இருவரிடமும் கை நீட்டியபடி விரஹேஷ் பதிலளித்தான்: ''வேலைதானே? இதோ பாடல் எழுதிக் கொண்டிருக்கிறேன்.''

''எப்படி வயிற்றுப் பிழைப்பு நடக்கிறது? குடும்பத்தை எப்படிக் காப்பாற்றுகிறாய்! உனக்குத் திருமணமாகிவிட்டது. பிள்ளை

குட்டிக்காரன் நீ என்று கேள்விப்பட்டேனே?'' குழந்தைகளைத் தாத்தாவின் வீட்டில் விட்டு வைத்திருக்கிறேன். என் மனைவி படுபட்டிக்காடு. அவளுடன் இருந்தால் என் கவிதை மண்ணுகப் போய் விடும்.''

"எத்தனை குழந்தைகள்?''

"ஐந்து ... உங்கள் ஆசியால்.''

மஹிபால் அதைக் கேட்டுக் கோபமடைந்தான்: ''ஐந்து குழந்தைகளைப் பெற்றுவிட்டு வேலையில்லாமல் திரிகிறுயே, உனக்கு வெட்கமாக இல்லையா? அவர்களுக்கு எப்படிப் பணம் கொடுத்து உதவுகிருய்?''

விரஹேஷ் ஒன்றும் பேசவில்லை-சிகரெட்டை ஊதிக்கொண்டேயிருந்தான்.

மஹிபால் சஜ்ஜனிடம் கேட்டான்: ''முக்கியமான வேலையில்லாவிட்டால், கிளம்பு போகலாம். இங்கே என்னுல் இருக்க முடியவில்லை.''

''சரி, போகலாம். நான் ஓர் ஆசாமியை எதிர்பார்த்தேன்'' மஹிபால் புரிந்து கொண்டான். கேட்டான்; ''வருவதாக வாக்களித்திருந்தார்களா?''

''இல்லை''

விரஹேஷ் கூறிஞன்: ''சஜ்ஜன், நீ போ, சாவியை என்னிடம் கொடுத்துவிட்டுப்போ. நான் இங்கே உட்கார்ந்து கொண்டு வேலை செய்கிறேன். எனக்கு 'மூட்' வந்துகொண்டிருக்கிறது?''

சஜ்ஜன் தன், பண்பை உதறித்தள்ளிஞன். ஆத்திரத்துடன் கூறிஞன்: ''இது சத்திரமில்லை''.

விரஹேஷ் 'ஹி ஹி' என்று சிரித்தான்.

மஹிபால் கூறிஞன்: ''சஜ்ஜன், உடனே எழுந்திரு. இங்கே என் மூச்சுத் திணறுகிறது. கோபம் வந்தால் நான் அடித்து விடுவேன்!''

விரஹேஷ் புகைபிடித்தபடி பேசாமல் மாடிக்குச் சென்றுவிட்டான். அதன் பிறகு சஜ்ஜன் முணுமுணுத்தான்: ''சலித்துப் போய்விட்டது. இவன் வந்தாலே என் மூட் பாழாகி விடுகிறது''

மஹிபால் கூறிஞன்: ''நீ தான் அவனைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டிருக்கிருய்!''

திடீரென்று சஜ்ஜன் பேச ஆரம்பித்தான்: ''இன்று காலை சாளிக்ராமும், ஜானகிசரணும் என் வீட்டுக்கு வந்திருந்தார்கள் நம் பேட்டையில் ஒரு 'ஆர்ட் எக்சிபிஷன்' ஆரம்பிக்க விரும்புகிருர்கள்.''

''என்னமோ செய்துவிட்டுப் போகட்டும், சனியன்கள்!''

''நாம் அதன் கன்வீனர்களாக வேண்டுமாம்.''

''இந்த மாதிரி மோசமானவர்களுடன் நான் சேரத்தயாராக இல்லை! இந்தப் பணம் படைத்தவர், காங்கிரசுக்காரர்கள் இருவருமே நம்பத்தக்கவரில்லை?''

சஜ்ஜன் சிரித்தான்: ''அந்தப் பறக்கவிட்ட காகித பிரசுரங்கள் செய்யும் வேலை இது என்று எனக்குத் தெரியும். நான் சரி என்று தலையாட்டி வைத்தேன். நம்மை அவர்கள் முட்டாளாக்கப் பார்த்தால், நாமும் அவர்களை முட்டாளாக்கி விட்டால் போகிறது.''.

''நீ அவர்களைவிடக் கெட்டிக்காரன் என்று உன்னைப்பற்றி எண்ணிக்கொண்டிருக்கிறாயா? ஏமாந்து போவாய், சஜ்ஜன்!''

''எதில் ஏமாறுவேன்? நமக்கும் அவர்களுக்குமிடையே அரசியல் ஒப்பந்தம் ஒன்றுமில்லையே! இந்தச் சாக்கில் நான் நம் பேட்டை மக்களை நன்கு தெரிந்துகொள்ளலாமே!''

''அதற்கு வேறு வழியில்லையா என்ன? இந்த மாதிரி ஆசாமிகளுடன் சேர்ந்து எந்த வேலையிலும் இறங்குவது தவறு''.

விரஹேஷ் மாடியில் நின்றுகொண்டு எதிரேயுள்ள ஜன்னலையே பார்த்தபடி பாடலானான்:

உன்னைக் காணப் பாகாய் உருகினேன்
உன்றன் உள்ளம் இரங்காதோ!''

மஹிபாலும், சஜ்ஜனும் வெளியே வந்தனர். கவிஞன் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்தனர். 'போர்' மகிழ்ந்து போனான். மஹிபால் சிந்தனையில் ஆழ்ந்தான். விரஹேஷ் தன்னை மறந்து பாடுவதை சஜ்ஜன் கண்டான். உன்றன் உள்ளம் இரங்காதோ! ''சரி கிளம்பு'' என்றான் சஜ்ஜன் விரஹேஷிடம்.

''போகிறேன், நண்பனே சற்றுப் பொறு. மறுபடியும் பாடி விட்டுப் போய் விடுகிறேன்''

மஹிபால் கோபத்துடன் கூறினான்; ''போதும் உன் வேஷம்! கிளம்பு, எங்களுக்கு நேரமாகிவிட்டது''

மஹிபால் முதலில் படியிலிருந்து இறங்கினான். பிறகு சஜ்ஜன், கடைசியாகப் 'போர்'. அவனுடைய பார்வை வேறு எங்கோ இருந்தது. கால்தடுமாற சஜ்ஜன் மீது விழுந்தான். சஜ்ஜன் தடுக்கி மஹிபால் மீது விழுந்தான். மஹிபால் கைபிடிச் சுவரைப் பிடித்துக்கொண்டான். எல்லோரும் உருண்டு விழாமல் தப்பினர். சர்தாரின் குடும்பத்தினர் ''என்னவாயிற்று?' என்று பரபரப்புடன் கேட்டுக்கொண்டு வந்தனர். சஜ்ஜனுக்குத் தோளில் லேசாகக் காயம்பட்டது. மஹிபாலின் முழங்கால் சற்றுச் சுளுக்கிக் கொண்டது. 'போரின்' நீண்ட கேசத்தைப் பிடித்திழுத்து நான்கு அடிகள் கொடுத்துவிட்டான் மஹிபால்''பார்த்து நடக்கமாட்டாயா? கொடுக்கிற உதையிலே நீ கனவுகாண்பதையே நிறுத்தி விடுவேன். நினைவிருக்கட்டும்.''

'போர்' "குருஜி! குருஜி" என்று காலில் விழுந்தான். சஜ்ஜன் மஹிபாலை இழுத்து அவனுடைய பிடியிலிருந்து விடுவித்தான். சர்தாரின் வீட்டுக் குழந்தைகள் 'போர்' படும் அடியைப் பார்த்துச் சிரித்தன.

விரஹேஷைக் கவனிக்காமல் மஹிபால் வேகமாக சஜ்ஜனுடன் கிளம்பினான். விரஹேஷை அடித்தது அவனுக்கே வருத்தமாக இருந்தது. ஆயினும் அதை அவன் காண்பித்துக் கொள்ளவில்லை. நேற்றிரவிலிருந்து அவன் மிகுந்த கவலையில் ஆழ்ந்திருந்தான்.

சொந்த மைத்துனனின் பெண் வீட்டார் லக்னோ வந்திருந்தனர். பெரும்பாலும் அவன் தன் உறவினரின் வீட்டிற்குப் போவதிலிருந்து தப்பித்துக்கொண்டுவிடுவது வழக்கம். ஆனால் இங்கு வேறு வழியில்லை. நேற்றிரவு பெண் வீட்டாரது இருப்பிடத்தில் நடந்த சடங்குகளுக்குச் சென்றிருந்த அவன் ஆத்திரத்தில் தன் சாதியினரை நிந்திக்க ஆரம்பித்தான். ஒரு பிராம்மணன் எழுந்து மஹிபாலைத் தாறுமாறாகப் பேசிவிட்டான்; "இவன் பெரிய நாத்திகன் போல் இருக்கிறது. முதலில் ஒரு சேட்டின் உதவியால் பணம் பண்ணினான்; இப்போது ஒரு டாக்டர் கிடைத்திருக்கிறாள். இவர்களுடன் சேர்ந்து சாப்பாடு வேறு நடக்கிறது."

மஹிபாலுக்கு எல்லை மீறிய கோபம் வந்தது. அவனுடைய மாமனார் மதிப்பிற்குரிய மாப்பிள்ளையையும், பூஜிக்கத்தக்க விருந்தினரையும் வணங்கிக் கேட்டுக்கொண்டதன் பேரில் நிலைமை சீர்ப்பட்டது.

மனைவி தன் சக்களத்திப் போராட்டத்தின் காரணமாக எத்தனையோ முறை இன்று பாஞ்சஜன்யம் ஊதிவிட்டாள். மஹிபால் அலுத்துப் போய் இங்கு வந்துவிட்டான். அதனால்தான் அனுயசமாக விரஹேஷின் பேரில் எரிந்து விழுந்தான். "உன் கோபத்தைச் சற்று அடக்கியிருக்கவேண்டும், அப்பா," என்றான் சஜ்ஜன்.

உள்ளத்துக் கலவரத்தால் மஹிபாலின் முகம் சினந்தது. "பாழாய்ப் போகட்டும்" இப்போது எனக்கு வாழ்க்கை மீதே வெறுப்பு வந்துவிட்டது!"

இதற்குப் பிறகு சஜ்ஜன் ஒன்றும் கூறவில்லை. இருவரும் தெருக்களைக் கடந்து சென்று கொண்டிருந்தனர்.

## 17

மஹிபாலும் அவனுடைய இரண்டு தமக்கைமாரும், ஒரு தம்பியும், தாத்தாவின் வீட்டில் வளர்ந்தவர்கள். தந்தை ஏதோ

ஜில்லா பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியர். தன்மானமுள்ளவர், பயமற்றவர், சீலமுள்ளவர். மஹிபாலின் தாயிடம் பெரிய வீட்டுப் பெண்ணின் எல்லாக் குறைபாடுகளும் நிரம்பியிருந்தன. அவனுடைய தந்தையும் அண்ணனும் அவளிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்தனர். அதனால் மஹிபாலின் மாமிகளின் பேரில் அவனுடைய தாய் ஆட்சி செலுத்தி வந்தாள். அந்தப்புரத்துச் சூழ்ச்சிகளில் அவள் மிகவும் கைதேர்ந்தவள். சற்று இதயமற்ற வளுங்கூட. ஆதலால் எல்லோருக்கும் அவளைக் கண்டால் எரிச்சல்!

மஹிபாலின் இரு சகோதரிகள் திருமணமும் அங்கிருந்துதான் நடந்தது. மிகப் பெரிய குடும்பத்தில் அவர்களைக் கொடுத்திருந் தனர். மஹிபாலின் திருமணமும் சிறந்த குடும்பத்துப் பெண் ணுடன்தான் நடந்தது. திருமணமாகிச் சில நாட்களுக்குள்ளேயே விதி அவனுக்குப் பெரும் மாற்றலைக் கொண்டுவந்துவிட்டது. தந்தை நோய்வாய்ப்பட்டுப் போய்ச் சேர்ந்தார். ஓராண்டுக்குள் மூத்த மாமன் இறந்துவிட்டார். அவர் இறந்த பிறகு மஹிபாலின் தாய்க்குப் பிறந்த வீடு சிறிது கசக்க ஆரம்பித்துவிட்டது. வீட்டில் அவளுக்கு எண்ணற்ற பகைவர்கள் இருந்தனர். தருணம் பார்த்து அவர்கள் அவளை அவமதிக்கத் தொடங்கினர். வெறுக்கத்தக்க சூழ்நிலையில் பிடிபட்ட அவள் வேறுவழியின்றித் தற்கொலை புரிந்து கொள்ள நேர்ந்தது.

தாய் இறந்தபிறகு மஹிபால், அவனுடைய மனைவி தம்பி ஜய் பால் மூவருக்கும் சோதனைக்காலம் வந்துவிட்டது. இறந்துபோன நாத்தி செய்த கொடுமைக்கு அவளுடைய குழந்தைகளிடம் மாமி கள் பழி தீர்த்துக் கொள்ள ஆரம்பித்தனர். அப்போது மஹிபால் இன்டர் படித்துக்கொண்டிருந்தான். ஜய்பால் பத்தாம் வகுப்பில் இருந்தான்.

இளம் வயதிலிருந்தே மஹிபாலுக்கு இலக்கியத்தில் ஈடுபாடு உண்டு. தாயிடம் அன்பும், தந்தையிடம் பக்தியும் உள்ள அவன், அந்த உணர்ச்சியையே தன் சூனியமான வாழ்க்கையின் நிதி எனக் காத்து வைத்துக்கொண்டிருந்தான். குழந்தைப் பருவத்தில் அவன் தந்தையுடன் இருக்க விரும்பினான். ஆயினும் தாயின் பிடிவாதம் காரணமாக அவளுடன் அவன் இருக்க முடியாமற் போய்விட்டது. அவனுடைய தந்தை மிகவும் சாந்தமானவர். சிந்தனையாளர். எப் போதும் ஏதாவது எழுதும் சுபாவம் உள்ளவர். ஹிந்தியில் அவர் இயற்றியுள்ள சில கவிதைகளை மஹிபால் இப்போதும் பத்திரமாக வைத்திருந்தான். சரித்திரம், சமுதாயம், கல்வி முதலிய பொருள் பற்றிய அவருடைய கட்டுரைகள் 'சரஸ்வதி', 'சுதா', 'சாந்த்', 'மாதுரி' போன்ற பத்திரிகைகளில் அடிக்கடி வெளிவந்துள்ளன.

சிறு வயதிலிருந்தே தன் தந்தையைப் போல் கல்வியறிவு படைத்து, லட்சியவாதியாகவும், சிறந்த எழுத்தாளனுகவும்தான் இருக்க வேண்டும் என மஹிபால் விரும்பினுன். ப்ரேம் சந்த், சாந்த், ப்ரதாப் ஆகியோரின் சமுதாய, அரசியல் நூல்கள் அவனை மிகவும் ஆட்கொண்டு விட்டன. அவனுடைய மாமன்மாரும் அவர்களுடைய குமாஸ்தாக்களும் குடியானவர்களுக்கு இழைத்த கொடுமைகளைக் கண்டு அவன் பெரிதும் வருந்துவான். இந்த ஏழைக் குடியானவர்களை இந்தச் சோம்பேறிகள் ஏன் இப்படிப்படுத்துகிருர்கள் என்று அவன் அடிக்கடி எண்ணிப்பார்ப்பதுண்டு. குடியானவர்களைத் தடியால் அடிப்பது, மரங்களில் அவர்களைத் தலை கீழாகக் கட்டி உதைப்பது, அவர்களிடம் வேலை வாங்கிக்கொண்டு பட்டினி போடுவது, அவர்களுடைய வீடுகளைக் கொள்ளையிடுவது போன்ற குரூரச் செயல்களை அவன் பார்த்திருந்தான். அவன் அவற்றைப் பார்த்துத் துடிப்பான். தன் மூன்று மாமன்மாரும் கிராமத்துப் பெண்களிடம் மிருகத்தனமாக நடந்துகொள்வதையும் கண்டிருக்கிருன். இரண்டாம் மாமா மிகவும் மோசமான போக்கிரி. கன்னிப்பெண்களின் கற்பைக் களவாடுவதில் அவனுக்கு விசேஷமான நாட்டம் உண்டு. தன் மகளைப் போன்ற வயதுள்ள பெண்களைத் தன் போகப் பொருட்களாகப் பயன்படுத்திக் கொள்வதில் சற்றும் தயங்காத அரக்கன் அவன்!

தந்தையின் வீட்டில் தசரா, கோடை விடுமுறை, கிறிஸ்துமஸ், விடுமுறை முதலிய நாட்களில் இருந்துவிட்டு மஹிபால் தன் பாட்டனுரின் வீடு திரும்புவான். அப்போது பசும்புல் நிறைந்த மைதானத்திலிருந்து அவனை வற்புறுத்தி மனத்திற்குப் பிடிக்காத நிலவறைக்குக் கொண்டு தள்ளுவதுபோல் இருக்கும். பெரிய இடத்துச் சூழ்நிலையில் கஞ்சா, மதுபானம், அடிதடி, கொடுமை, நடத்தைகெட்ட செயல், மனத்திற்கு ஒவ்வாத சுகபோகம் முதலிய ஆபாசங்களைக் காணும்போது அவன் இராப்பகலாகத் துடிப்பான். நாவை அறுத்துவிட்டால் அந்த மனிதனுல் என்ன செய்ய முடியும்? அதே நிலையில்தான் அப்போது மஹிபாலும் இருந்தான். ஊமையின் குரலாக இலக்கியம் அவனது வாழ்க்கையில் இடம் பெற்றது. முதலில் சிறுகவிதைகளுடன் தொடங்கி, அவன் பிறகு சிறுகதைகள் எழுத ஆரம்பித்தான். தந்தையைப் பார்த்து நாட்குறிப்பும் எழுதக் கற்றுக்கொண்டான். இந்தப் பழக்கந்தான் சிறுகதை எழுத அவனுக்கு உதவியது. இன்டர் பரீட்சை எழுதுவதற்குள் 'சாந்த்', 'சுதா' போன்ற பத்திரிகைகளில் அவனுடைய ஐந்தாறு சிறுகதைகள் பிரசுரமாகிவிட்டன.

தாய் இறந்த பிறகு பாட்டனுரின் வீட்டில் தங்குவதே அவனுக்கு அவமானத்திற்குரிய செயலாகப்பட்டது. ஒரு நாள் பயங்கரமான

சண்டை வீட்டில் மூண்டது. திருமணமான இளம் மனைவி கூறிய தன்பேரில் இன்டர் பரீட்சையின் முடிவு தெரிவதற்கு முன்னமேயே மஹிபால் தனிக்குடித்தனம் நடத்த லக்னோவிற்குக் கிளம்பி விட்டான்.

அப்போது 1930-ஆம் ஆண்டுப் போராட்டம் நடந்து கொண் டிருந்தது. 'சுதா' பத்திரிகை அலுவலகத்தில் மாதம் 40 ரூபாய் சம்பளத்திற்கு ஒரு வேலை கிடைத்தது. அங்கு மிகச் சிறந்த இலக் கிய கர்த்தாக்களைக் காணும் வாய்ப்புக் கிடைத்தது. ப்ரேம்சந்த், நிரலா, சுமித்ரானந்தன் பந்த், மிச்ரபந்து, ரூப் நாராயண பாண்டேய், கிருஷ்ண பிஹாரிமிச்ர போன்ற இலக்கியத் தேவதை களைத் தரிசிக்கும் வாய்ப்பு அங்கேதான் கிடைத்தது. இதனால் அவன் இலக்கியத்துறையில் வேகமாக முன்னேறத் தொடங்கினான். குறிப்பாக அவன் 'நிராலா'வுடன் நெருங்கிய தொடர்பு கொண் டான். வேலை செய்து களைத்துப்போன அவனுக்கு அவளுடைய நட்பு, புதுத் தெம்பை அளித்தது. வேலை செய்து பழக்கப்படாத தால் அது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் வயிற்றுப் பிழைப் பிற்காக அதில் ஒட்டிக் கொண்டிருந்தான். மூன்று மாதங்களுக்குள் அமீனாபாதில் ஒரு சிறு வீட்டை வாடகைக்கு எடுத்துக்கொண்டு தாயாகப் போகும் தன் மனைவியுடனும், தன் தம்பியுடனும் வசிக்க லானான். மனைவியின் நகைகள்தாம் அவனிடம் இருந்த ஒரே சொத்து.

பாட்டனாரின் வீட்டிலிருந்து கடவுள்தான் கதி என்று அவன் கிளம்பினான். தம்பியை உயர்நிலைப் பள்ளியில் சேர்த்துப் படிக்க வைத்தான். கவலையின்றி எதுவரை வேண்டுமானாலும் படி என்று அவனுக்கு ஆறுதலளித்தான். மஹிபால் உயிரைக் கொடுத்து உழைக்க ஆரம்பித்தான். 'சுதா'வில் வேலை செய்த நேரம் போக, எஞ்சிய நேரத்தில் மற்றொரு பதிப்பாளருக்காக 'அறிவுக் களஞ் சியம்' சரித்திரம், பாடப் புத்தகங்கள் முதலியவற்றை மற்றொரு பெயரில் எழுதிக் கொடுத்தான்; மொழி பெயர்த்தும் கொடுத்து 'காப்பிரைட்'டை விற்று வந்தான். மாதத்திற்கு இரண்டொரு சிறுகதையும் எழுதி விடுவான். எப்படியோ மாதந்தோறும் நூறு ரூபாய் வரும்படிக்கு அவன் வழி செய்துவிட்டான்.

காலம் அநுகூலமாக இருந்தது. பத்திரிகைகள் குறைவாக இருந்த போதிலும், புதிய எழுத்தாளன் திறமைசாலியாக இருந் ததால் வெகு விரைவில் புகழை எட்டி விட முடிந்தது. பெரிய இலக்கிய கர்த்தாக்கள் எப்போதும் இளம் எழுத்தாளரை ஊக்கு வித்து வந்தனர். மஹிபாலின் பேனாவில் திறமையும், உள்ளத்தில் முன்னேறும் சங்கல்பமும் இருக்கவே, அவன் மெள்ள மெள்ளப் புகழ்பெற்றுவிட்டான்.

அவனுடைய சிறு கதைகளைப் பாராட்டும் தன்வந்தரான ரூப்ரத்தன் என்று ஓர் இளைஞர் அவனுக்கு நண்பரானார். அவர் நாட்டுப் பற்றுக் கொண்டவர். அவருடைய தந்தை பஜ கோவிந்ததாஸ் மிகப் பெரிய தனவந்தர். ரூப்ரத்தன்கூடச் சொந்தமாக ஒரு கைத்தறிக்கூடம் வைத்திருக்கிறார். வைத்தியர்களை வைத்துக் கொண்டு ஆயுர் வேத வைத்தியசாலை நடத்தி வந்தார். திராக்ஷாரஸம், ச்யவனப்ராஷ், தசமூலாரிஷ்டம் போன்ற மருந்துகள் அங்கே தயாரித்து வந்தார்கள். பெரிய தலைவர்களைத் தம் ரசாயனசாலைக்கு அழைத்து வந்து சுற்றிக் காண்பித்து விட்டு அவர்களிடம் இருந்து நற்சான்றுகள் வாங்கிக் கொள்வார். விளம்பரம் செய்வதில் அவருக்கு நம்பிக்கையுண்டு. அவருக்கு நல்ல வரும்படி கிடைத்து வந்தது. ரூப்ரத்தன் காங்கிரசிலே மென்மையான சுபாவமுள்ள தலைவர்; பொக்கிஷதாரருங் கூட. அயல்நாட்டு மதுபானங்கள் விற்கும் கடைக்குப் பங்குதாரர். இவ்விதம் அநேகத் தொழில்களையுடைய ரூப்ரத்தன் மிகவும் எளிமையானவர்; படித்தவர்; பேச்சில் நிபுணர், 1931-32-ஆம் ஆண்டிலேயே தம்மை சோஷலிசத்தை ஆதரிப்பவர் என்று சொல்லிக் கொண்ட ஒரு சில இளைஞர்களில் அவரும் ஒருவர்.

மஹிபால் ரூப்ரத்தனை ஜிம்கானு கிளப்பில் சந்தித்தான். மஹிபாலின் உறவுக்கார இளைஞரொருவர் லக்னோ பல்கலைக் கழகத்தில் படித்து வந்தார். அவருடன் மஹிபாலுக்கு அன்பு கலந்த உறவு உண்டு. அவருடன் கூட அவன் அடிக்கடி கிளப்பிற்கு செல்வது வழக்கம். அவனுடைய பழக்கவழக்கங்களும் தனவந்தருடையவற்றைப் போலவே இருக்கும். ஆதலால், பெரிய மனிதர்களுக்குச் சரி சமமாக மஹிபால் பழகி வந்தான். லக்னோ வந்ததுமே அவன் கதர் உடுத்த ஆரம்பித்தான். மறைந்திருந்த ஆசையை வெளிப்படுத்திக்கொள்ளவும், நல்ல உடைகள் இல்லாத காரணத்தாலும், இல்லாமையை இந்தக் கதரின் எளிமை மறைத்துவிடும் என்பதனாலும் அவன் கதர் உடுத்தினான். டம்ளரில் மதுபானத்தை எடுத்துப் பருக ஆரம்பித்ததுமே இருவரும் ஒரே மாதிரியான கருத்துக் கொண்டவர்கள் என்பது மஹிபாலுக்கும் ரூப்ரத்தனுக்கும் தெரிய வந்தது. இருவருடைய நட்பும் நாளுக்கு நாள் அதிகரிக்கத் தொடங்கியது. ஒரு நாள் ரூப்ரத்தன் செய்தித்தாள் ஆரம்பிக்கலாமே என்று கூறினார். மஹிபால் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தான்.

ரூப்ரத்தனின் தந்தையிடம் அச்சுக் கூடம் ஒன்று அடகுக்கு வந்திருந்தது. அதைக் கடனுக்கு தம் தந்தையிடமிருந்து ரூப்ரத்தன் வாங்கிக் கொண்டார். பிறகு சட்டப்படி சூழ்ச்சி செய்து அந்த அச்சுக்கூடத்தின் சொந்தக்காரராகி விட்டார்!

'நவசேதனு' என்னும் வாரப் பத்திரிகை நெருப்பைக் கக்கிக் கொண்டிருந்தது, மஹிபால் ஆசிரியராக இருந்தபோது மும்முறை அதன் ஜாமீன் பறிக்கப்பட்டது. ஜாமீன் பறிக்கப்பட்ட போதெல்லாம் 'நவசேதனு' அதிகமாக விற்பனையாயிற்று. அது பிரசுரமாவதற்குத் தடையில்லாத அளவு பத்திரிகை நெருப்பைக் கக்கினுல் போதும் என்று ரூப்ரத்தன் மஹிபாலுக்கு அறிவுறுத்தினுர். ஆவேசம் மிகுந்த இளம் எழுத்தாளர்கள் எழுதிய புத்தகங்களையும் 'நவசேதனு' பிரசுரிக்கலாயிற்று.

ரூப்ரத்தன் இந்த நிறுவனத்தை சமுதாயவாதி என்ற முறையில் நடத்துவதாக அறிவித்தார். "இது சொந்த லாபத்தைக் கருதி ஆரம்பிக்கப்படவில்லை; எழுத்தாளர்களின் நலனுக்காகவும் நிறுவனத்தின் ஊழியர்களுடைய பொருளாதார நன்மைக்காகவும் சமுதாயவாதத்தைப் பிரசாரம் செய்வதற்குந்தான் தொடங்கப் பட்டது." என்று அவர் மக்களுக்குக் கூறி வந்தார். இவ்விதம் 'சமுதாய நலனுக்காக' என்று கூறி மக்களைத் தியாகம் செய்யத் தூண்டினுர்.

மஹிபால் சுகமாக வாழ்ந்து வந்தான். மாத வரும்படி ஐந்நூறு ரூபாயில் தியாகத்திற்காக என்று முந்நூறு ரூபாய் எடுத்துக்கொள்ளப்பட்டது. ரூப்ரத்தனின் தந்திரத்தை வெகுளி மஹிபாலினுல் புரிந்துகொள்ள முடியவில்லை. அவனுடைய தியாக உணர்ச்சியினுல் தூண்டப்பட்டு கம்பாசிடர்களும் மற்ற ஊழியர்களும் கூடத் தம் நிறுவனத்திற்காகத் தியாகம் செய்ய முற்பட்டனர். அப்போது மஹிபால் மிகவும் நல்ல பெயர் பெற்று விட்டான். நிரம்பப் படிப்பதும், கதைகள், நாவல்கள் எழுதுவதும், எல்லா இடங்களையும் சுற்றிப்பார்த்து ஏழை எளியோரின் கஷ்டங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதும் அவனுடைய வேலைகள். சர்க்கார் செய்யும் பித்தலாட்டங்களையும், முதலாளிகளின் வண்டவாளங்களையும், அம்பலப்படுத்துவதில் அவனுடைய பேனு முனை ஆவேசத்துடன் இயங்கி வந்தது. மற்றச் செல்வர்களின் குறைபாடுகளைப் பற்றியும் ரூப்ரத்தன் மஹிபாலுக்குச் சொல்வது வழக்கம். மக்களைத் தம் பக்கம் ஈர்க்கவே இம்மாதிரி ரூப்ரத்தன் மஹிபாலை எழுதச் செய்தார். ஆனுல் மஹிபால் பாவம் இந்தத் தந்திரத்தை அறியவில்லை!

அவன், தம்பி ஜய்பாலை இன்டர் படித்து முடித்ததும் வைத்தியப் படிப்பிற்கு அனுப்பினுன். மனைவியுடன் அறிவில் பொருத்தம் இல்லாமையால் இருவருக்கும் வாக்கு வாதம் ஏற்படத் தொடங்கியது. ஆனுல் மஹிபால் நடத்தை கெட்டுச் சீர் குலையவில்லை. மங்கை—மது யோகத்தில் ஆழ்ந்திருந்த ரூப்ரத்தனுடன் மஹிபால் மது யோகத்தில் மட்டும் ஒத்துழைத்தான். 1936-ஆம் ஆண்டுத்

தேர்தலில் 'நவசேதனு' நன்கு உழைத்தது. காங்கிரசின் சார்பில் ரூப்ரத்தன் எம்.எல்.ஏ. ஆகிவிட்டார். இப்போது அவர் தம் பத்திரிகையையே மாற்றி அமைக்க விரும்பினார். அலுவலகத்தின் சிறுசிறு விஷயங்களிலும் அவர் முட்டுக் கட்டை போட ஆரம்பித்தார். தியாகத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டு அச்சுத் தொழிலாளிகளுக்கு இரண்டு வருடங்கள் வரை சம்பள உயர்வே அளிக்காமல் இருந்து விட்டார். காலத்தின் போக்கை நன் கறிந்த ஊழியர்களுக்கு ரூப்ரத்தனின் சமுதாயவாதம், தியாகம் இவை பற்றி வெட்ட வெளிச்சமாகப் புரிந்துவிட்டது. ஆயினும் மஹிபாலின் நேர்மை, நாணயம், ஈடுபாடு இவற்றைக் கண்டு வியந்த அவர்கள், அவன் அளித்த ஆறுதலை நம்பிக்கொண்டு பேசாமல் இருந்தனர். ஆனால் இப்போது மக்கள் யாவரும் பிடிவாதமாக நின்றனர். மஹிபாலும் மற்ற ஊழியர்களுடன் சேர்ந்து கொண்டு ஊதியத்தில் உயர்வு வேண்டும் என்று கேட்டான். இனிய பேச்சில் மக்களை மயக்கும் தந்திரத்தை விட்டு விட்டு இந்தத் தடவை ரூப்ரத்தன் ''முடியாது'' என்று தெள்ளத் தெளியக் கூறிவிட்டார்.

மஹிபால் விண்ணிலிருந்து நிலத்தில் வந்து பொத்தென்று விழுந்தான். வேலையை அவன் ராஜிநாமா செய்து விட்டான். ஆயினும் ரூப்ரத்தன் தம் சொந்த உறவை எப்போதும் போல் மஹிபாலுடன் வைத்திருக்கவே விரும்பினார். அவனுக்கு எவ்வளவோ சொல்லிப்பார்த்தார்; ஆசையும் காண்பித்தார். ஆனால் அவன் இசைவு கொடுக்கவில்லை. ஊழியர்களின் நியாயமான கோரிக்கையைப் புறக்கணித்துத் தன் சுயநலனைச் சாதித்துக் கொள்ள அவன் விரும்பவில்லை. ஊழியர்கள் வேலைநிறுத்தம் செய்தனர். போலீசின் பலத்தால் ரூப்ரத்தன் அவர்களை அடக்கினார். பலர் கைது செய்யப்பட்டனர். ஆனால் மஹிபாலைக் கைது செய்யவில்லை. நிலைமை சீர்ப்பட்டதும் மெள்ள மெள்ள ரூப்ரத்தன், மஹிபாலுடன் தமக்கிருந்த உறவையும் முடித்துக்கொண்டார்.

இத்தனை மக்களைக் கவர்ந்து, இத்தனை ஆசிரியர்களுக்கு ஆதாரமாக இருந்த பிறகும் மஹிபாலினால் இப்போது ஒன்றும் செய்ய முடியவில்லை. இது அவனுக்கு மட்டற்ற வேதனையை அளித்தது. 'நவசேதனு' பதிப்பகத்திலிருந்து வெளி வந்த அவனுடைய புத்தகங்களால் ரூப்ரத்தன்தான் அதிக லாபம் அடைந்தார்.

கடுமையான லட்சியவாதியாக இருந்ததால், ஒரு காசு கூட வரதட்சிணை வாங்காமல் மஹிபால் தன் தம்பியை ஓரழகிய பெண்ணிற்குத் திருமணம் செய்து கொடுத்தான். எம். பி. பி.எஸ் படித்து முடித்ததும் அவனைச் சீமைக்குச் சென்று படிக்கும்படி மஹிபால் ஊக்கம் அளித்தான். ஆனால் ஜய்பால் சீமைக்குச்

செல்லும் நேரம் வந்ததும் மஹிபாலின் நிலைமை சீர்குலைந்து விட்டது. அப்படியிருந்தும் மஹிபால் சற்றும் சலிப்படையவில்லை. தன் மனைவியின் நகைகளனைத்தையும் விற்றுத் தம்பியை இங்கிலாந்துக்கு அனுப்பிவைத்தான். அதே சமயத்தில் துரதிருஷ்டவசமாக அவனுடைய சின்ன அக்காளும் அவளுடைய கணவனும் இறந்து விட்டனர். தாத்தாவின் வீட்டில் ஆதரவின்றியிருந்த அக்காளின் மகள் சகுந்தலா, அவனிடம் வந்து இருக்க ஆரம்பித்தாள். தன் மனைவி, குழந்தைகள், சகுந்தலா, தம்பியின் மனைவி அவனுடைய தத்துப் பிள்ளை இத்தனை பேரையும் காப்பாற்ற உயிரைக் கொடுத்து மஹிபால் உழைக்க நேர்ந்தது; அப்படியிருந்தும் நூற்றைம்பது அல்லது நூற்றெழுபது ரூபாய்க்குமேல் அவனால் சம்பாதிக்க முடியவில்லை.

இரண்டாம் யுத்தம் மூண்டது. வேலையில்லாமல் இருந்த பலருக்கு யுத்தம் வேலை வாய்ப்பை அளித்தது. வியாபாரத்தில் லாபமில்லாமற் போகவே, கடைக்காரர்கள் கள்ளத்தனமான லாபத்தினால் தம் சதையை வளர்த்துக்கொள்ள ஆரம்பித்தனர். இந்தப் போர் மஹிபாலுக்குச் சோதனையாக வந்தது. பொருளாதார நெருக்கடியைத் தவிர, சீமையில் இருக்கும் தன் தம்பியின் நிலையைப்பற்றி அவன் ஒவ்வொரு கணமும் துடித்துக்கொண்டிருந்தான். 1941-ஆம் ஆண்டில் எப்படியோ ஜய்பால் திரும்பி வந்தான்—டிகிரி வாங்கிக் கொண்டுதான். தம்பி திரும்பிவந்து சேர்ந்ததும் மஹிபாலுக்குப் போன உயிர் மீண்டும் வந்தாற்போல் இருந்தது. தம்பிக்கு ஏதாவது வழி தேட மறுபடியும் அவன் வெட்கத்தை விட்டு ரூப்ரத்தனிடம் சென்றான். அவருடைய பலத்தால் மெடிகல் காலேஜில் வேலை கிடைத்தது. எதிர்காலம் இனி சுகமாக இருக்கும் என்ற கற்பனையில் மஹிபால் மனநிறைவு கொண்டான். ஆனால் இந்த மனநிறைவு வெகுகாலம் வரை நீடிக்கவில்லை. இருவருடைய மனைவிகளும் ஒருவருக்கொருவர் பகையாகிவிட்டனர். ஜய்பாலும் சற்று மாறினாற்போல் காணப்பட்டான்.

1942-ஆம் ஆண்டு நடந்த போராட்டத்தில் மஹிபால் சிறை சென்றுவிட்டான். அவனுடைய குடும்பத்தை ஆதரவின்றி விட்டு விட்டு ஜய்பால் பிரிந்து சென்றுவிட்டான். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு பயங்கரமான நோய் காரணமாக விடுவிக்கப்பட்டு வீடு வந்த மஹிபால், தன் நம்பிக்கை முழுவதும் அட்டையாலான வீடு போல் பாழாகிவிட்டதை உணர்ந்தான். பணத்திற்குப் போராடும் உலகம் எவ்வளவோ முன்னேறிவிட்டதை அவன் கண்டான். அக்கம்பக்கத்தில் எத்தனை வீடுகள் புதிதாகக் கட்டப்பட்டு விட்டன! மெலிந்து நலிந்து கிடந்த பக்கத்து வீட்டு இளைஞன் ஒருவன் இப்போது ரேஷனிங் இன்ஸ்பெக்டராகக் கொழுத்துக்

காட்சியளித்தான். அவனுடைய வீட்டைச் சுற்றி இருந்தவர் எல்லோரும் சுபிட்சமாக வாழ்ந்து வந்தனர். அவனுடைய தம்பி ஐய்பால் கூடக் காரும் வீடும் வைத்துக்கொண்டு சுகபோகத்துடன் வாழ்க்கையை நடத்தி வந்தான். சிறையிலிருந்து திரும்பிய மஹிபாலை நின்றபடியே முறைத்து பார்த்துவிட்டுச் சென்ற ஐய்பால் மறுபடியும் அவனுடைய நிலைமைபற்றிக் கேட்க வரவேயில்லை. உலகத்தவரிடம் அவன் சொல்லிக்கொண்டது இப்படி: "அண்ணன் எனக்கு அப்படி என்ன சாதித்துவிட்டார்? வரதட்சிணை வாங்கிக் கொண்டு எனக்குத் திருமணம் நடத்தியிருந்தால், நான் அந்தப் பணத்திலேயே சீமை சென்று திரும்பியிருப்பேன். அவர் தம் லட்சிய வாதத்தின் காரணமாக முட்டாள்தனமாக நடந்து கொண்டால் அதற்கு நானு பொறுப்பாளி?''

நண்பன் ரூப்ரத்தன், பின்பு உடன் பிறந்த சகோதரன் இவர்களிடமிருந்து பெற்ற அதிர்ச்சியால் மஹிபால் விழிப்படைந்தான். போர் நடந்து கொண்டிருந்த நாட்களில் கஷ்டப்பட்டு வாழ்க்கை நடத்தி அவனுக்குச் சிடுசிடுப்பு வந்துவிட்டது. அவன் தன்மானம் மிகவும் அதிகமாக உள்ளவன். சஜ்ஜன், கர்னல் போன்ற அந்தரங்க நண்பர்களிடமிருந்து கூட ஒருவிதமான உதவியையும் பெற்றுக்கொள்ள விரும்பமாட்டான். கர்னல், சஜ்ஜன், சீலா மூவரும் அவனுடைய நிலைமையை அறிந்துகொண்டு அவனுடைய தன்மதிப்பிற்கு இழுக்கு வராமல் பார்த்துக்கொண்டனர். அப்படிப்பட்டவனை மக்களுடைய கூட்டத்தின் நடுவில் எவனுடைய பணத்தையோ விழுங்கி ஏப்பம் விட்டவன் என்று எவனுவது கூறினுல் அவன் வருந்துவது நியாயந்தானே? மஹிபாலுக்கு ஆத்திரம் வந்தது.

தெரு வழியாகச் சென்றுகொண்டிருந்த சஜ்ஜனும் மஹிபாலும் சிறிது நேரம் வரை பேசாமல் இருந்தனர். வருத்தத்தில் தோய்ந்த மஹிபாலின் முகத்தைப் பார்த்து சஜ்ஜன் கேட்டான்: ' ஏனப்பா, என்ன விஷயம்? நீ சராசரிக்கும் அதிகமாக 'அப்செட்' ஆகியிருக்கிருயே... (கவலையும் சோர்வும் கொண்டிருக்கிருயே) என்னிடம் உதவியை நாடமாட்டாய் என்பது எனக்குத் தெரியும்; ஆனுல் என்ன ஏதாவது பணக் கஷ்டமா?''

மஹிபால் சஜ்ஜனுடைய தோளில் கை போட்டுக் கொண்டு தலை குனிந்தபடி கூறினுன்: "தேவைப்பட்டால், உங்களைப் போன்ற நண்பர்களிடம் கேட்காமல், வேறு யாரிடம் கேட்பேன்?''

மஹிபால் பிறகு மௌனமாகி விட்டான். தெருவிலிருந்த கடைகள் கோலாகலமாக இருந்தன. எல்லாவிதமான பேச்சுக்களும் நடந்துவிட்டன. நான்கு தினங்களுக்கு முன்பு பறந்த காகிதப் பிரசுரத்திலிருந்து காய்கறிகளின் இன்றைய விலை வரை

தேர்தல் பற்றிய பேச்சு பொதுவானது. ஓரிடத்தில் தேர்தல் கூட்டம், சாதி-மதச் சண்டையில் இறங்கிவிட்டது. மஹிபாலுக்கு கோபம் வந்தது: "என்னிடம் இரண்டு நாட்கள் வரையில் அரசை ஒப்படைக்கட்டும். மதத்தைப்பற்றிப் பேசுபவர்களைப் பூண்டோடு ஒழித்து விடுகிறேன். மடையர்கள்!''

சஜ்ஜன் சிரித்தபடி கூறினான்: ''உம்! செய்து விடுவாய்! அவர்கள் என்ன அப்பா உனக்குத் தீங்கு செய்துவிட்டார்கள்?''

மஹிபால் கூறினான்; ''எனக்கா? மனித சமுதாயத்திற்கே தீங்கிழைத்தவர்களாயிற்றே இவர்கள்! குருட்டுச் சித்தாந்தங்களை வைத்துக்கொண்டு நல்ல பண்பு நிறைந்த கொள்கைகளை அழிக்க வல்லவா வந்திருக்கிறார்கள்? இந்தக் குருட்டு நம்பிக்கைகளால் இவர்களிடம் மனிதத்தன்மை என்பது இல்லாமற்போய்விட்டது!''

சஜ்ஜன் கூறினான்: ''உன் மைத்துனனின் திருமணத்தின்போது ஏதாவது அப்படி நடந்திருக்கும். அம்மாதிரி மனிதத்தன்மையற்ற செயலைப் பிள்ளை வீட்டார், அதாவது உன் மாமனாருடைய வீட்டார்தான் செய்திருக்க வேண்டும். என்ன, அப்படித்தானே?''

சஜ்ஜன் கூறியதை ஆமோதித்தபடி நடந்துகொண்டே மஹிபால் பதிலளித்தான்: "இந்தப் பிராம்மணர்கள் நாட்டின் 'இன்டெலெக்சுவல் லீடர்கள்' (அறிவாளிகளுக்கு தலைமை தாங்குவோர்) என்று சொல்லப்படுகிறார்கள். ஆனால் இவர்களைப் போல் கொடூரமானவர்கள், அகந்தைபிடித்த கடையர்கள், முட்டாள்கள் காட்டு ஜாதியினரிடையே கூட இருக்க மாட்டார்கள். என் பேரில்—என் தந்தையின் பேரில் பழி சூட்டுகிறார்கள். நாங்கள் சீலாவின் பணத்தை விழுங்கிவிட்டோமாம். ரூப்ரத்தனின் பணத்தைப் பறித்துக் கொண்டோமாம். என்ன திமிர் பார்!''

சஜ்ஜன் சிரித்தபடி கூறினான்: ''சாப்பிடத்தானே செய்கிறாய். இதில் பொய் என்ன இருக்கிறது?''

மஹீபால் பரிகாசத்தைச் சகித்துக் கொள்ளும் 'மூடில்' இல்லை. அவன் தெருவில் நடக்காமலிருந்தால், உரக்கக் கத்தியிருப்பான். சற்றுச் சிடுசிடுப்புடன் கூறினான்: "இந்த முட்டாள்கள், தமக்குள் சொல்ல முடியாத கசடுகளை வைத்துக்கொண்டு சனாதன மதத்தின் மகிமைபற்றிப் பேசுகிறார்கள்! பொய்யர்கள். என் பேரில் அபாண்டப் பழி சுமத்துகிறார்கள். பணத்திற்காக உயிரை விடுபவனாக இருந்தால் இன்று மஹிபால் லட்சாதிபதியாக இருந்திருப்பான்; எழுத்தாளனாகியிருக்கமாட்டான்.''

''நண்பனே! நீ வீணாகக் கோபித்துக் கொள்கிறாய். முன்னேறுபவர்களைக் கயிறுகட்டிப் பின்னே இழுக்கும் உலகம் இது. நீ துணிவுடன் இந்தப் பகைவர்களை எதிர்த்துப் போராட வேண்டுமப்பா! இவர்களுக்கு எதிரே நீ முன்னேறிக் காண்பிக்க வேண்டும்.

*மஹிபாலின் ஆத்திரத்தின்மீது சஜ்ஜனின் வார்த்தை குளிர்ந்த நீரைத் தெளித்தாற் போலிருந்தது. அவன் பேசாமல் நடந்து கொண்டிருந்தான். பிறகு ஒரு பெருமூச்செறிந்து கவிஞர் 'நிரலா' வின் பாட்டின் அடிகளை உணர்ச்சியுடன் கூறினான்:*

**''இருளைக் கடந்தேயாக வேண்டும்**
**உண்மையின் ஒளியைக் கண்டிட வேண்டும்**
**சமரில் துணிந்து இறங்கிட வேண்டும்**
**உண்மை வழியில் உறுதி கொண்டே**
**உள்ளத் துணிவுடன் சென்றிட வேண்டும்.''**

*பயங்கர நோயால் நீடிக்கப்பட்டவனுக்கு இன்றைய விஞ்ஞானம் அளிக்கும் பிராணவாயு சுவாசிக்க உதவுவது போல் வாழ்வில் சலிப்புற்ற ஒவ்வொருவருக்கும் மகாகவியின் சொற்கள் ஆதாரம் அளித்து வந்தன.*

*தெருக்கோடியில் தேர்தல் சம்பந்தமான போராட்டம் தொலை விலிருந்தே கேட்டது.*

# 18

*கன்யா இன்று வரவில்லை. அவளுக்குத் தங்க எங்கே இடம் கிடைத்ததோ! அவளை ஒரு முறை பார்க்க ஆசையாக இருந்தது. பாவம், தன்மானம் கொண்டவள்! சோதனைக்குள்ளாகியிருக் கிறாள். அவளுடைய தன்மானத்துக்கும் பங்கம் விளைவிக்காமல் அவளைக் கஷ்டத்தினின்றும் காப்பதுதான் மனிதத்தன்மை.*

*சஜ்ஜன் காரை எடுத்துக்கொண்டு கன்யா இருக்குமிடத்தை நோக்கிக் கிளம்பினான். கன்யா தன் சாமான்களை யாருடைய காரிலோ வைத்துக்கொண்டு முதல் நாளிரவே அந்த இடத்தை விட்டுச் சென்றுவிட்டாள் என்று தெரிய வந்தது. தனக்குப் பழக்க மில்லாத அந்த மோட்டாரின் சொந்தக்காரன்மீது சஜ்ஜனுக்குப் பொறாமை மூண்டது. பிறகு பிரம்மச்சரியம் நினைவிற்கு வந்தது. எனக்கென்ன வந்தது என்று நினைத்தான். ஆயினும் பிரம்மச்சரிய விரதத்தை அநுஷ்டித்து வந்த சஜ்ஜனின் உள்ளம் கன்யாவின்றி வேதனையால் குமைந்து கொண்டேயிருந்தது.*

*திரும்பி அவன் கர்னலின் கடைக்கு வந்தான். மஹிபாலும் அங்கு அமர்ந்திருந்தான். அவன் கர்னலிடம் சஜ்ஜன்—சாளிக்ராம் ஒப்பந்தம் பற்றிக் கூறியிருந்தான். எனவே சஜ்ஜனிடம் கர்னல் எல்லைமீறிக் கோபங்கொண்டிருந்தான். சஜ்ஜன் வந்ததுமே அவன் பேரில் எரிந்து விழுந்தான்; ''யாரைக்கேட்டுச் சம்மதம் தெரிவித் தாய்? நான் செய்ததை எல்லாம் நீ தகர்த்தெறியப் பார்க் கிறாயா?''*

கர்னல் எதிர்ப்புத் தெரிவித்ததும் தான் செய்தது தவறு என்பதைச் சஜ்ஜன் உணர்ந்தான். ஆயினும் என்ன செய்வான்? தவருே நடந்துவிட்டது. ஆதலால் அதிலேயே பிடிவாதமாக நின்றுவிட்டான். குறிப்பாக மஹிபாலின் முன்னிலையில் அவன் தன் குற்றத்தை ஒப்புக்கொள்ள விரும்பவில்லை. முகத்தைச் சற்றுக் கடுமையாக வைத்துக்கொண்டு கூறினுன்: ''நீயும் சேர விரும்பாவிட்டால் வேண்டாம், விட்டுவிடு, நான் தீர ஆலோசித்துத்தான் செய்திருக்கிறேன்.''

''ஆலோசித்து மண்ணுங்கட்டியைச் செய்திருக்கிருய்!'' கர்னல் கூறினுன்: ''நீ எந்தப் பிரமையில் இருக்கிருய்? காலையில் ஜானகி சரணும், சாளிக்ராமும் அறைக்குள் வந்ததுமே உனக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லையோ? அந்த வழக்கு நடந்து கொண்டிருக்கிறதே, பின்னேவின் வழக்கு அதன் நிலைமை என்னவாகும், நீ இப்படி நடந்து கொண்டால்? இது பற்றிச் சிறிதாவது உன் அறிவுக்கு எட்டிற்ரு?''

'பின்னே' என்றதும் சஜ்ஜனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. கன்யாவிற்குக் கர்னல் புதுப் பெயரிட்டிருக்கிருன் போலும்! அந்தச் செல்லப் பெயரைக் கேட்டதும் சஜ்ஜனுக்கு கன்யாவின் பேரில் பாசம் மேலிட்டது. கன்யா எங்கே இருக்கிருள்? புதிய கவலை தோன்றியது; வேதனை உள்ளத்தைக் கவ்விக்கொண்டது. தன் தவறு காரணமாக சங்கோசம் ஏற்பட்டது. காலையில் தன் சம்மதத்தைத் தெரிவித்தபோது அவனுக்குக் கன்யாவின் நினைவு நிச்சயமாக வந்தது. ஆயினும் அவன் சரி என்று தலையை ஆட்டிவிட்டான். கன்யாவின் நினைவு அவனை வாட்டியது ஏன்? பிரம்மச்சரியம்—பிரம்மச்சரியம்...மூளையில் வட்டமிடும் இந்த எண்ணம் வெறும் பித்தலாட்டமா என்ன? திடீரென்று 'நான் விவேகத்தை இழந்துவிடுவேன் போல் தோன்றுகிறது! இதற்குக் காரணம்?'—காரணம் புரியவில்லை. அறுத்த பழத்தின் சுளைகளைப் போல் அறிவு சிதறுகிறது. ஏதாவது பொருளைப்பற்றி முழு ஈடுபாட்டுடன் சிந்தித்தாலும், அதன் மீது புகை படர்ந்து விடுகிறது. கோபம் மூண்டது. சஜ்ஜன் கர்னலுக்குப் பதில் அளித்தான்: நான் எல்லாவற்றையும் பற்றி நன்கு சிந்தித்துப் பார்த்தேன். பகைவனையும் அரவணைத்துக்கொண்டு செல்பவன்தான் மனிதன். தட் இஸ் அவர் இண்டியன் கல்ச்சர்! (அதாவது நம் இந்தியப் பண்பாடு) நாம் வழக்கை ஒரு புறம் நடத்திக்கொண்டிருக்கலாம். மறுபுறம் கண்காட்சியிலும் சேர்ந்துகொள்ளலாம். நீங்கள் குறுகிய மனப்பான்மையுடன் பார்க்கிறீர்கள். அப்படி நடந்து கொள்வதை ஆர்டிஸ்ட் என்ற முறையில் நான் தவறு என்று கருதுகிறேன்!'' சஜ்ஜன் தன் பேச்சைப்பற்றித் தானே மகிழ்ச்சியடைந்தான்.

''ப்ரேவோ! என்னுடன் பழகி வருவதற்குத் தகுந்தபடி நீ நடந்து கொள்கிறாய்! மஹிபால் தன்னை ஓர் ஆசிரியன் போல் கருதிக்கொண்டு கூறினான்: ''சஜ்ஜன்! நீ கூறிய இந்த வார்த்தைகளுடன் உள்ளமும் கலந்திருந்தால், நான் உன் கால்களைத் தொட்டுக் கும்பிட்டிருப்பேன்''.

சஜ்ஜன் வெட்கம், கோபம் இரண்டாலும் நடுக்கமுற்றான். உள்ளத்து ஆத்திரம் முகத்தில் பிரதிபலித்தது. எதிரே தொங்க விடப்பட்டிருந்த தட்டியினூடே வனகன்யா கீழே இறங்கிச் செல்வது தெரிந்தது.

இவர்கள் கர்னலின் 'ப்ரைவட்' ஆபீசில் உட்கார்ந்திருந்தனர். சஜ்ஜன் சாய்வு நாற்காலியினின்றும் எழுந்தான். வாசற்படி அருகே சென்று தட்டியை உயரத் தூக்கி கன்யாவைக் கேட்டான்: ''நீ இங்கே எப்படி...? நான் அங்கே போயிருந்தேனே?''

கன்யா புன்முறுவலுடன் பேசாமலிருந்தாள். அவள் தட்டியை உயரப் பிடித்துக் கொண்டு அறைப்பக்கம் வந்தாள். சஜ்ஜன் வழி விட்டு உள்ளே வந்தான். கன்யாவைப் பார்த்து மஹிபால் கரங்குவித்தான். அமர்ந்திருந்தபடியே சிரித்துக்கொண்டு கர்னல் பேசினான்: ''உன்னை இங்கே கண்டதும் ஓவியர் அதிர்ச்சியடைந்து விட்டார்! இன்று ஒரு முட்டாள்தனமான வேலை செய்துவிட்டு வந்திருக்கிறார். அது போதாதென்று எங்களிடம் 'லெக்சர்' அடிக்கிறார்.''

சஜ்ஜன் மறுபடியும் சஞ்சலமடைந்தான். ஆனால் இந்தத் தடவை சற்றுத் தன்னடக்கத்துடன் இருந்தான்.

மூலையிலிருந்த நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டு கன்யா சஜ்ஜனிடம் கூறினாள்: ''கர்னல் சகோதரர் நான் மாடியில் இருக்க இடம் கொடுத்திருக்கிறார். காரில் எல்லாச் சாமான்களையும் ஏற்றிக்கொண்டு வந்து விடு என்று நேற்று என்னிடம் இவர் பிடிவாதம் பிடித்தார்!''

கர்னல் சிரித்துக் கொண்டு மஹீபாலிடம் கூறினான்: ''முதலில் இவர்கள் நம்மிடம் பெரிய கம்யூனிசம் பேசினார்கள். இப்படி இல்லை அப்படியில்லை என்று விவாதித்தார்கள். முதலில் சாமான்களைக் கொண்டு வா, பிறகு விவாதிக்கலாம் என்று நான் கூறிவிட்டேன். சகோதரன் என்று என்னைக் கருதினால் என் கட்டளைப்படி நடக்க வேண்டும். கூலியாட்களும், வேலையாட்களும் வசிக்குமிடத்தில் இருந்தார்கள். காசைக் காண்பித்துச் சாளிக்ராம் போன்றவர்கள் இவர்களை ஏதாவது தொல்லைப்படுத்த ஏற்பாடு செய்துவிட்டால் என்ன செய்வது? பாவம், நல்ல பெண்!''

''நீ செய்தது நல்லதாய்ப் போயிற்று? மாடி அறை காலியாகத் தான் இருந்தது.''

''கண்டா முண்டா சாமான்களை அடைத்து வைத்திருந்தேன். அவற்றை எடுத்துக் கொட்டகைக்குள் போடச் செய்து விட்டேன். மாடியில் தாழ்வாரம், குழாய், பாத்ரூம் எல்லாம் இருக்கின்றன.''

கர்னல் அளித்த இடத்தைக் கன்யா ஏன் மறுக்கவில்லை என்று மனத்திற்குள் வியந்தான், சஜ்ஜன்! தான் கூறியதை மட்டும் ஏன் அவள் மறுத்துப் பேசினாள்? சஜ்ஜனுடன் கன்யா இருப்பதை உலகம் தூற்றிப் பேசும் என்றால் கர்னலைப் பற்றி மட்டும் பேசாமலா இருந்துவிடும்? கன்யாவிற்கு அவனைப்பற்றி மட்டும் ஏன் இந்த அவநம்பிக்கை? சூறாவளியில் பறக்கும் துணியைப்போன்று சஜ்ஜனின் உள்ளம் படபடத்தது.

சாளிக்ராமுடன் ஒத்துழைப்பது பற்றிய விஷயத்தை இப்போது சொல்லியாக வேண்டும் என அவன் நினைத்தான். அந்தக் கணத்தை எதிர்த்து நிற்க அவனுக்குத் தெம்பு கிடையாது. அவனுக்குத் தன்பேரிலும், கர்னல், மஹிபால், கன்யா, சாளிக்ராம் ஜானகிசரண் எல்லோர் பேரிலும் கோபம் வந்தது. வேகமாக எழுந்து ஓடிவிட்டால் என்ன என்று அவன் நினைத்தான். ஆனால் அவ்விதம் செய்ய அவனுடைய கால்களிலும், உடலிலும், சக்தியில்லை; அவன் சாய்வு நாற்காலியில் புதைந்துவிட்டான்.

கர்னல் கன்யாவிடம் கேட்டான்: ''பின்னே, எங்காவது வெளியே செல்லப்போகிறாயா?''

''ஆமாம், சீக்கிரமாக வந்து விடுகிறேன்.''

''நீ எப்போது வேண்டுமானாலும் வா, காவற்காரனிடம் சொல்லியிருக்கிறேன். அவனை எழுப்பிக் கதவைத் திறந்து கொள்ளலாம்.''

கன்யா சிரித்தாள்: ''எனக்கு சினிமா இரண்டாம் காட்சி பார்க்கும் பழக்கம் கிடையாது.''

மஹிபால் முதல் முறையாக 'நீ' என்று பிரயோகித்தபடி கூறினான்: ''உனக்குத் தெரியாதம்மா! இந்தக் கர்னல் சொல்லும் ஒவ்வொரு பேச்சிலும் பெரிய பாலிசி (கோட்பாடு) இருக்கிறது. இந்தக் கம்யூனிஸ்டுப் பெண்கள் இரவு நேரத்தில்தான் கத்தியும், சுத்தியும் எடுத்துக்கொண்டு சுற்றுகிறார்கள் என்பது இவனுடைய கருத்து.''

கன்யா கலகலவென்று சிரித்தாள். கர்னல் சங்கோசத்துடன் கூறினான்: ''இந்த எழுத்தாளர், கலைஞர் இவர்களின் பேச்சை லட்சியம் செய்யாதே, பின்னே! இவர்கள் எப்போதும் முட்டாள் தனமாகப் பேசுவதில் தான் புகழ் பெற்றவர்கள்.''

கன்யா சிரித்தபோதிலும் கவலையுற்றிருந்த சஜ்ஜனின் முகத்தை அவளுடைய கடைக்கண்கள் பார்த்தன. சஜ்ஜன் தலை குனிந்தபடி உட்கார்ந்திருந்தான். கர்னல், மஹிபால் இருவருடைய கவனமும்

கன்யாவின் பக்கம் இருந்தது. கன்யா இவ்வாறு சஜ்ஜனைப் பார்ப்பதும், சஜ்ஜனின் மௌனமான வேதனையும் மஹிபாலின் உள்ளத்தில் கவிதையை எழச் செய்தன. "அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்!"—கன்யாவைப் பற்றி மஹிபால் தவறாக எண்ணாதபோதிலும் சஜ்ஜன் மீது அவனுக்குச் சற்றுப் பொறாமை உண்டாயிற்று. சஜ்ஜன் சாளிக்ராம் ஒப்பந்தம் பற்றிக் கன்யாவிடம் வெட்ட வெளிச்சமாகக் கூறிச் சஜ்ஜனை அவமானப்படுத்த ஒரு கணம் மஹிபால் நினைத்தான். பிறகு இந்த ஆசையை அடக்கிக் கொண்டு அவளைக் கேட்டான். "உன் கேஸ் எப்படி இருக்கிறது கன்யா?"

கன்யா திடுக்கிட்டு சஜ்ஜனையே பார்த்துக்கொண்டிருந்த தன் கண்களை மஹிபாலிடம் சுழற்றினாள். அவள் பதில் அளிப்பதற்கு முன்னமே கர்னல் கூறினான்: "நான் வக்கீல்களிடம் கலந்து ஆலோசித்துக்கொண்டிருக்கிறேன். இவளுடைய அண்ணியின் உறவினர்கள் இரண்டு பேர் நேற்று வந்தார்கள். நான் அவர்களை சூர்யா ஹிந்து ஒட்டலில் தங்கச் செய்திருக்கிறேன். இன்று சிறிய வண்டியில் அவர்களை இமாம்பாடா முதலிய இடங்களைப் பார்க்க அனுப்பியிருக்கிறேன். சரி, சஜ்ஜன் உனக்கொரு நல்ல செய்தி சொல்லட்டுமா? பின்னோ டிரைவிங் கற்றுக்கொண்டிருக்கிறாள். 'இவர்கள் சீக்கிரம் கற்றுக்கொண்டு விடுவார்கள்' என்று சிவமங்கள் இன்று சொன்னான்."

சூனியமான தன் கண்களை சஜ்ஜன் உயர்த்தினான். கன்யா சிரித்தாள் : 'சபாஷ்' என்று அவனிடம் பாராட்டும் பெற விரும்பியவள் தன் பார்வையும் அவனுடைய பார்வையும் சேர வகை செய்தாள். அந்தச் சிறு அறையில் மங்கிய ஒளியில் ஒருகணம் இருவர் மட்டும் இருந்தனர். சஜ்ஜனின் வேதனைக்கு ஆறுதல் கிடைத்தது. இந்தப் பார்வைகளின் சந்திப்பைக் கர்னல், மஹிபால் யாரிடமிருந்தும் ஒளிக்க முடியவில்லை. மஹிபாலின் உள்ளத்தில் பயங்கரமான எண்ணம் உதித்தது. 'இந்தப் பெண் பெரிய சாமர்த்தியக்காரிதான் போல் இருக்கிறது, சஜ்ஜனை மணந்த பிறகு கம்யூனிசத்திலிருந்து காபிடலிசத்திற்கு வரவேண்டும், அதற்காகத் தான் மோட்டார் வண்டி ஒட்டக்கற்றுக் கொள்கிறாள் போலிருக்கிறது!'

எல்லோருடைய கவனத்தையும் கலைத்துவிட்டுக் கர்னல் தன் பேச்சைத் தொடர்ந்தான்: "பாரிஸ்டர் தவன் மற்றுமொரு முறை என்னைச் சந்தித்து இது பற்றிச் சொல்லப்போகிறார். அவர் நல்ல அறிவுரை வழங்குவார், இது சாளிக்ராமுடன் மட்டும் நாம் நடத்தும் போராட்டமல்ல, சுவாமி இந்தத் தடவை தேர்தல் படை முழுதும் நம் கட்சியில் சேர்ந்து கொண்டுவிடும். நான்

நினைத்ததற்குமேல் பறக்கவிட்ட துண்டுப் பிரசுரம் சாதித்து விட்டது! தாதா குருவைத்தான் விடாமல் பிடிக்கவேண்டும். அவருடைய மகிமையால் விலை மதிப்பிட முடியாத தஸ்தாவேஜ் கைவசப்பட்டுவிட்டது அதை வைத்துக்கொண்டு அவர்களை ஆட்டி வைத்து விடலாம். (திடீரென்று எண்ணம் வேறு திசையில் செல்லவே) சரி, சஜ்ஜன் நீயும் சாளிக்ராமும் நடத்தப்போகும் காரியத்தை நான் ஆமோதித்துவிட்டேன். இந்தச் சாக்கில் பொது மக்களுடன் நாம் பேச நல்ல வாய்ப்புக்கிடைத்துவிடும். நம்மை மடக்குவதற்கு 'ஸ்கீம்' போடுகிறான். அவனுடைய வாலை ஒட்ட நறுக்கி உட்கார்த்திவிடலாம். நாளைக்குச் சாளிக்ராம் வருவான். ஒரு ஆர்டிஸ்டின் நேர்மையைப் பயன்படுத்திக்கொண்டு என்னை அவமானப்படுத்தத் திட்டமிட்டிருக்கிறாயா என்று கேட்டு முதலில் பேச்சைத் தொடங்குகிறேன். நானும் உனக்குச் செய்து காண்பிக்கிறேன்—சஜ்ஜன் கூறியது போல்—பகைவரையும் அரவணைத்துக் கொண்டு செல்வதுதான் மனிதத்தன்மை.''

சஜ்ஜன் மகிழ்வுற்றான். வனகன்யாவின் முகத்தில் கேள்விக்குறி தோன்றிற்று. மஹிபாலுக்குக் கர்னல் ஒப்புக்கொண்டது பிடிக்க வில்லை. விவரமாகக் கன்யாவிடம் மஹிபால் தெரிவித்தான்: ''உங்களுக்கு முழுவிவரம் தெரியாது என்று நினைக்கிறேன். இன்று சாளிக்ராமும் நகரத்துப் பெரிய வட்டிக் கடைக்காரரும் சஜ்ஜனை மகிழ்விக்க அவனுடைய ஓவியங்களுக்காக ஒரு கண்காட்சி ஆரம் பிக்க வேண்டும் என்று கூறிக் கொண்டு வந்தார்கள். கலைஞனை இவ்வாறு மகிழ்வித்துத் தம் பக்கம் சேர்த்துக்கொள்ளலாம் என்று அவர்கள் நினைத்தார்கள், போலும்'! அவர்கள் இதில் வெற்றியும் அடைந்து விட்டார்கள்!''

வனகன்யாவின் முகம் கறுத்தது; சஜ்ஜனுக்கு ஆத்திரம் பொங்கியது. மஹிபாலின் வார்த்தைகளால் உருவாகிய தவறான சூழ்நிலையைக் கலைத்தபடி கர்னல் கூறினான்: ''மஹிபால், நீ விஷயத்தைத் தவறாகக்கூறிவிட்டாய்! சஜ்ஜன் நினைத்தது சரி தான். உண்மையில் நம் மனப்பான்மை தான் குறுகியது வனகன்யாவின் முகத்தில் அதிகரித்துக் கொண்டிருந்த ஆர்வத் தைக் குறைக்க கர்னல் மறுபடியும் கூறினான்: ''சஜ்ஜன் செய்தது முற்றும் சரி என்று எனக்குப்படுகிறது; பின்னே! நம்மிடம் ஒரு நல்ல வேலையை ஆரம்பிக்கும் ப்ரபோசலுடன் (யோசனையுடன்) அவர்கள் வந்தார்கள். ஒரு சிறந்த காரியத்துக்காகச் சஜ்ஜன் உனக்கு உதவவில்லையா? அதே போல் அரசியல் வேற்றுமையை மறந்து எவருடைய நல்ல வேலையிலும் கைகொடுப்பது நம் கடமை என்கிறான். இதில் என்ன தவறு?''

கன்யாவின் கண்களில் சந்தேகம், ஆமோதிப்பு இரண்டும் கலந்த

உணர்ச்சி பிரதிபலித்தது! சஜ்ஜனுடைய கண்கள் அவளுடைய கண்களைச் சந்திக்கத் துடித்தன. அன்புடையோரின் கண்ணேக் கிஞல் தாக்குண்டவர் தோல்வி காண்பது இயல்புதானே? இருவருடைய கண்களும் சந்தித்துப் பேசும் பேச்சிற்கு ஈடாக ஆயிரம் நனவுகளின் பேச்சையும் சொல்ல முடியாது. தன் பார்வையால் கன்யாவைத் தன் பக்கம் ஈர்த்துக்கொண்டு சஜ்ஜன் கூறினன்: ''அவர்கள் என் படங்களைக் கண்காட்சியில் வைக்க விரும்புவதாகக் கூறினர்கள். அவர்களுடைய எண்ணத்தை நான் உடனே புரிந்துகொண்டுவிட்டேன். அவர்களுடைய யோசனையை மாற்றி நான் இன்னொரு விஷயத்தை அவர்களிடம் கூறினேன். நம் பேட்டையில் கண்காட்சி முதல் தடவையாக நடத்த முற்படுகிறேம். ஆகையால் நம் சகோதரிகள் செய்துள்ள கலைப் பொருட்களையும், தையல், பின்னல் முதலியவற்றையும் கண்காட்சியில் வைக்கலாம். சிறந்த கலைப் பொருட்களுக்குப் பரிசளிக்கலாம். நம் மக்களே அவற்றையும் தேர்ந்தெடுக்கட்டும். என் தாயின் பேரில் நானும் ஒரு பரிசு—நூறு ரூபாய்—அளிக்கிறேன் என்று அவர்களிடம் கூறினேன்...! நகரத்து மற்றுமுள்ள கலைஞர்களின் ஓவியங்களுக்கும் இடமளிக்கலாம். சுமார் ஐம்பது ஓவியங்கள் கிடைக்கும். ஜானகிசரணின் வீட்டில் எதிரே உள்ள இரண்டு அறைகளில் வைக்கலாம் என்று குறிப்பிட்டேன். இதில் மஹிபாலுக்கு என்ன தீமை தெரிகிறது? நான் என் பேச்சுப்படி நாணயமாக நடந்து காண்பிக்கிறேன்.''

கன்யா பதிலளித்தாள்: ''நீங்கள் ஒரு கலைஞனின் உள்ளத்தின்படி நடந்து கொண்டீர்கள். உங்களுக்கு இதில் என்ன உதவி வேண்டுமாஞலும் சரி, நான் அளிக்கத் தயாராக இருக்கிறேன். நான் அப்படி என்ன பிரமாதமானவள்?''

சஜ்ஜன் பூரித்துப் போஞன். மஹிபால் கூறினன்: ''நீங்கள் உங்கள் உள்ளத்தின் உணர்ச்சி வசப்பட்டு உலகத்தின் போக்கை மறந்து விடாதீர்கள். தேர்தல் நேரம் இது.''

''தேர்தலாக இருந்தால் என்ன? பாபுநகீன்சந்த் ஜைன்—அதாவது கர்னல் சாஹேப் இருக்கும்போது'' என்று கூறியபடி கர்னல் மீசையைத் தடவிக் கொண்டான். பிறகு சஜ்ஜனிடம் சொன்ஞன்: ''அமர்க்களமாகக் கண்காட்சியை ஆரம்பி. என் வார்த்தையையும் எழுதி வைத்துக்கொள். இவர்களுடைய சூழ்ச்சிகளை ஒரு மடக்கு மடக்கி நம் கட்சி என்று ஒன்றை ஆரம்பிக்காவிட்டால் என் பெயரென்ன என்று கேள். நாம் மக்களுடன் கலந்து வாழ்வோம். அவர்களுடைய உரிமைக்காக உழைப்போம். அரசாங்கமோ, முதலாலித்துவமோ, அல்லது எந்த அரசியல் கட்சியாக இருக்கட்டும், நம் உரிமைகள் விஷயத்தில் நாம் விழிப்புடன் இருப்போம். என்ன பின்னே? நீ என்ன சொல்கிருய்?''

மஹிபால் நாற்காலியிலிருந்து எழுந்தபடி கூறினுன்: ''பத்துத் தலை ராவணனைப்போல் பத்து மண்டைகளின் அறிவை வைத்துக் கொண்டு நீங்கள் பூரித்துப் போகிறீர்கள்! உங்களுக்கு இந்தச் சாளிக்ராம் கண்காட்சிச் சாலையில் பரிசாகக் கழுதைத் தலையைத் தான் கொடுக்கப் போகிருன்—பார்த்துக்கொண்டேயிருங்கள்! வனகன்யாவின் வழக்கு வாய்ச்சவடாலோடு முடிந்துவிடும். உங்களைப் போன்ற முட்டாள்களுக்கு நான் இதைப் பிரம்ம வாக்கியம்போல் சொல்லியிருக்கிறேன்''

சஜ்ஜனும் வேகமாக எழுந்தபடி கூறினுன்: ''மஹிபால்! என் பிரம்ம வாக்கியத்தையும் கேட்டுவிட்டுச்செல்; உன் பிரம்மாவைச் சஜ்ஜன் பொய்யாக்கிக் காண்பிப்பான்! எவர்கள் முன்னிலையி லிருந்துகொண்டு இதைக் கூறுகிறேன் தெரியுமா? பொய்யன் என்று அவர்களிடமிருந்து பெயரெடுப்பதைவிட உயிரை விடுவது சிறந்தது என்று கருதுபவன் நான்.''

மஹிபால் ஒன்றும் கூருமல் விறைப்புடன் சென்றுவிட்டான். சஜ்ஜனுக்கு இப்போது மஹிபாலிடம் எல்லையற்ற கோபம் வந்தது. தன்னைப்பற்றி நல்ல எண்ணம் கொண்டிருந்த கன்யாவையே மாற்ற முற்பட்டானே மஹிபால், என்று நினைத்து நினைத்துச் சினத்தால் சஜ்ஜன் பொங்கினுன். படபடவென்று பேசினுன். "போலி வாழ்க்கை வாழ்ந்துகொண்டு ஊரை ஏமாற்றி வருகிருன். தன்னைப் போலவே பிறரையும் எண்ணிவிட்டான், இடியட்!''

கர்னல் கூறினுன்: ''நீ ஏன் இதற்கு இவ்வளவு மகத்துவமளிக்கிருய்? ஏதோ வேதனை தைத்துவிட்டதுபோலிருக்கிறது. ஆசிரியர் உனக்கு மாருக கிளம்பி விட்டார்! பிறகு மனம் மாறினுல் உதவி யளிக்க முன் வருவார் பார்! உண்மையாகச் சொல்கிறேன், பின்னே. மஹிபாலைப் போன்ற வெகுளியை நான் பார்த்ததே கிடையாது. அவனுடைய வாய்தான் பொல்லாதது; உள்ள மில்லை.''

கன்யா கூறினுள்: ''அடே! முழுமை பொருந்திய மனிதன் உலகில் ஏது? ஆயினும் மஹிபாலிடம் எனக்கு மரியாதை உண்டு. உள்ளம் நல்லதாக இல்லாவிட்டால் இவ்வளவு சிறந்த இலக்கிய கர்த்தாவாக ஆக முடியாதே!''

கன்யா, கர்னல், இருவரின் பேச்சுக்கள் பிறகு தன் சிந்தனை இவற்றுல் சஜ்ஜனின் ரோசம் தணிந்தது. ஆயினும் அதை முற்றும் தன் உள்ளத்தைவிட்டு விலக்க அவன் விரும்பவில்லை. அந்த ரோசம் கன்யாவின் அன்புகனிந்த பார்வை அளித்ததாகும். அந்தப் பார்வைக்கு முன்பு அவன் எல்லாவற்றையும் மறந்து விட்டான். கன்யாவின் அன்பு எனும் தானம் அவனுடைய பல வீனமான உள்ளத்தை அகந்தையால் நிரப்பிவிட்டது. கன்யா

வுடன் சிறிது நேரம் தனிமையில் இருக்க அவன் விழைந்தான். தன்னுடன் அவள் வெளியேசெல்ல முதல் நாள் மறுத்துவிட்டாள். இப்போது சஜ்ஜனின் கண்களில் காணப்பட்ட ஒளி, சிந்தனைக் கோயில் பிரம்மச்சரிய விரதத்தை மேற்கொண்ட போதிருந்த ஒளிக்கு நேர்மாருக இருந்தது. அவனுடைய உயிர்ப்பறவை கன்யாவின் மோஹன சக்தியில் கட்டுண்டு தன் சிறகைப் பட பட வென்று அடித்துக்கொண்டது. தன் உடைமையை வேறு எந்த விதத்திலும் நிலைநிறுத்த இயலாத அவன் கன்யாவிடம் கேட்டு வைத்தான்: "உன் சமையலறை சீர்ப்பட்டு விட்டதா, இல்லையா?"

கன்யா கூறிஞள்: "என் தமையன் கர்னல் சாஹேப் சமைக்க வேண்டாம் என்கிருர். நான் அவர் கூறுவதைக் கேட்கப் போவதில்லை. இரண்டே நாள்களில்."

"அதுவரை நீ எங்கே?"

"நேற்றிரவுகூட அண்ணனுடன்தான்..."

"சபாஷ்!"

சஜ்ஜன் கூறிஞன்: "சமணர்களுடன் அதிக உறவு வைத்துக் கொள்ளாதே! அஹிம்சா பரமோ தர்ம! என்று உபதேசித்து உன்னை மீனின் பக்கம் போகவிடமாட்டார்கள்!"

அறை சிரிப்பொலியால் கலகலத்தது. கர்னல் கூறிஞன்: "மாமிசமும் மீனும் சாப்பிடும் உங்களுக்கு எங்கள் உணவின் அருமை எங்கே தெரியப்போகிறது?" கர்னல் எழுந்தான்: "தவன் சாஹேபுக்கு போன் செய்துவிட்டு வருகிறேன்."

கர்னல் சென்றுவிட்டான். சஜ்ஜனும் கன்யாவும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டனர். சஜ்ஜன் கூறிஞன்.

"நீ மனமார என் பேச்சை ஆமோதித்தாயா?"

"எதை?"

"அதைத்தான்! சாளிக்ராம் விஷயம்."

"உங்களுக்கு ஏன் சந்தேகம் தோன்றுகிறது?"

சஜ்ஜன் எழுந்து கன்யாவின் அருகிலிருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான்: "இன்று நீ என்னை உன் நிரந்தர அடிமை யாக்கிக் கொண்டுவிட்டாய்!"

"நான் அடிமைத்தளைகளை முறிப்பதில் நம்பிக்கை கொண்டவள் சஜ்ஜன்!"

"மனித அறிவின் எந்த 'இஸம்' முயன்ருலும் இந்தத் தளையை முறிக்க முடியாது. உள்ளத்தின் உறவு என்பது மிகச் சிறந்தது மனிதப்பண்பு, அன்பு இவற்றில் கட்டுண்ட மனிதன் அதினின்றும் விடுபட ஒருபோதும் விழையமாட்டான்; ஒவ்வொரு கணமும் அந்தக்கட்டு இன்னும் இறுகவேண்டும் என்றுதான் விரும்புவான்."

கன்யா பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அவனுடைய பேச்சு அவன் உள்ளத்தை என்ன செய்தது என்று சஜ்ஜனுல் புரிந்து கொள்ளமுடியவில்லே. அரைவிநாடிக்கும் அதிகமாகவே அறையில் அமைதி நிலவியது. "நேற்று நீ என்னுடன் இருப்பதாக வாக்களித்தாயே !'' என்று சஜ்ஜன் கேட்டான்.

தலேகுனிந்தபடி உறுதியுடன் கன்யா பதிலளித்தாள் : "இது உங்கள் வீடு என்று கருதித்தான் வந்திருக்கிறேன் !''

சஜ்ஜன் ஓரளவு திருப்தியடைந்தான். ஒரு கணம் சிந்தித்து விட்டு மறுபடியும் கூறினுன் : "யாரை எப்போதும் நினேந்து உருகுகிருேமோ, அவரை அருகே இருக்கப் பார்த்தால் மனம் சிக்கலடைகிறது. உள்ளத்தின் விசித்திரத்தன்மையா இது ?''

கன்யா பேசாமலிருந்தாள். அவளுடைய மௌனம் அவனுக்குத் தைரிய மூட்டியது. உடனே அவன் கேட்டான்: "நீ அப்படி நினேக்க வில்லேயா, கன்யா?''

மெள்ளத் தலேயை நிமிர்த்திய கன்யா கண்களில் கேள்வியுடன் அவனேப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். பிறகு முன் ஜாக்கிரதையுடன் பேசினுள்: "என் எண்ணத்தின்மீதே எனக்கு நம்பிக்கையில்லே. என் மனநிலே இப்போது இப்படி இருக்கிறது.''

ஒரு கணம் கன்யா நிறுத்தினுள். பிறகு தொடர்ந்து கூறலானுள். "என்னுல் ஒருவரையும் காதலிக்க முடியாது என்று நான் கருத மாட்டேன். ஆனுல் பொதுவாக இந்த எண்ணத்திலிருந்து விலகியே இருக்கிறேன்; ஆயினும் ஒரு கனவு உள்ளத்தில் உருப்பெற்றிருக்கிறது...எனது முற்றுப்பெருத கனவை நாடகச் சூழ் நிலேயில் வந்து முற்றுப் பெறவைக்க நீங்கள் துடித்தீர்கள், ஆதலால் என்னுல் உங்களேயும் சரியாக புரிந்துகொள்ள முடியவில்லே...... மிகவும் சோதனேயில் சிக்குண்ட எனக்கு உதவி அளிக்க நீங்கள் வந்தீர்கள். என் சுயநலத்தின் காரணமாக நான் உங்களேத் தேவைக்கு அதிகமாக மதிக்கிறேனே என்று எனக்குப் பயமாக இருக்கிறது.''

"இதில் மதிப்பதற்கு என்ன இருக்கிறது?''

"ஒரு வேளே உங்கள் உள்ளத்தில் அம்மாதிரி எண்ணம் இல்லாமலிருக்கலாம். ஆனுல் என் மனத்தில் இந்த எண்ணம் இயற்கையாகவே இருக்கிறது.''

"இயற்கையாகவே ஏன்?''

"எனக்கு நீங்கள் அறிமுகமானவரல்லர், என் உறவினருமில்லே.''

"நாம் பிணேக்கப்பட்டுள்ள உறவு உலகின் மிகப் பெரிய...''

"பூஜ்யம்''— அமைதியாகக் கன்யா வாக்கியத்தை முடித்தாள்.

சஜ்ஜன் அதிர்ச்சியடைந்தான். "பூஜ்யமா?'' கன்யா முன்னே விடச் சற்று உரத்த குரலில் பேசினுள். "ஜீரோ! சைஃபர்!

பூஜ்யம். இதைவிட இந்த உறவிற்கு ஒரு தெளிவான இலக்கணம் கிடையாது. என்பது என் கருத்து.''

சஜ்ஜன் திகைத்துப் போனுன். கன்யாவிடம் இப்படிப்பட்ட பதிலே அவன் எதிர்பார்க்கவில்லே.

கன்யா மறுபடியும் கூறிஞள்: ''எந்தக் காதலுக்காக உலகம் உயிரைக் கொடுக்கிறதோ, அதை உள்ளத்தின் 'இல்லாமை' அல்லது சூன்யம் என்று நான் கருதுகிறேன்.''

சஜ்ஜன் சற்றுக் கடுமையாகக் கேட்டான்: ''ஏன்?''

கன்யா கூறிஞள்: ''இல்லாமை, குறை என்பதைத் தவிர இது என்ன? லேலாவுக்கு மஜ்னு கிடைக்கவில்லே. மஜ்னு லேலாவின்றியே இருந்து விட்டான். அதனுல் தான் உலகம் அவர்களுடைய காதல் கீதத்தையும் பாடுகிறது. இதே லேலா, மஜ்னுவைத் திருமணம் புரிந்துகொண்டிருந்தால் உலகம் அவர்களே அமரக் காதலர் என்று நினேவு கொள்ளுமோ என்று நான் கேட்கிறேன்.''

சஜ்ஜன் சிந்திக்கலானுன். பிறகு பதிலளித்தான்: ''ஒரு குறை உள்ளத்தில் எழுவது என்றுல், அது ஒரு சாதாரணமான நிகழ்ச்சி யில்லே. கன்யா தன்னிடமுள்ள குறையை அறிந்துகொண்டு அதை நிறைவு செய்வதற்காக மனிதனிடம் மறைந்திருக்கும் சக்தி தீவிரமாக வேலே செய்கிறது. அது மலர்ச்சி அடைகிறது. ஒவ்வொரு கணமும் பித்துப் பிடித்தாற் போல் லேலா, மஜ்னுவிற்காகவும் தியாகம் செய்தார்கள். அதனுல்தான் அவர்களே எல்லோரும் நினேவில் வைத்துக்கொண்டிருக்கிருர்கள். இந்தத் தியாகத்தில் தான் மனிதனின் பெருமை இருக்கிறது!''

லேசாகக் கனேத்து விட்டுக் கன்யா பேசாமல் இருந்தாள். இந்தப் பேச்சில் சுவாரஸ்யமில்லாதவள்போல் அவள் தன் போக்கைக் காண்பித்துக் கொண்டாள். சஜ்ஜன் பேசாமல் அவளேப்பார்த்துக் கொண்டிருந்தான். திடீரென்று கன்யா எழுந்து நடந்து கொண்டே பேசிஞள்: ''எந்தக் கருத்துக்களேயும், உணர்ச்சிகளேயும் கவிஞர் மிகைப்படுத்திக் கூறுகின்றனரோ, அதை வெறும் பிதற்றல் என்று நான் கருதுகிறேன். பேச்சு தெளிவாக இருக்க வேண்டும். ஆண் பெண்களின் இறுதி உறவு: கணவன்—மனேவியாதல்...இந்த உறவுடன் என்னே உங்களுடன் இணேத்து என்னுல் இதுவரை சரியாகப் பார்க்கமுடியவில்லே.'' சஜ்ஜனுக்கு மறுபடியும் சொல்லொணு வேதனே மூண்டது.

வாசற் கதவருகே சென்ற கன்யா திரும்பிப் பாராமல் சொல்லிக் கொண்டே சென்றுள்: ''ஆண்-பெண் வாழ்வில் ஒரே ஒருமுறை தான் ஒருவரையொருவர் அடைகிருர்கள். இதில் எனக்கு உறுதியான நம்பிக்கை, அதுவும் அடைவதற்காகத் தம்மை எத்தனே வித

மான உரைகற்களில் உரைத்துக்கொள்ள நேரிடுகிறது! இது பொறுப்புடன் கூடிய உறவு. செல்வர், கலைஞர், தான் தோன்றித் தனமாகத் திரிபவரின் உல்லாச நேர விளையாட்டில்லை!..''

கன்யா சென்றுவிட்டாள். சஜ்ஜனின் கனவு உலகம் மறுபடியும் அஸ்திவாரத்துடன் ஆட்டங்கண்டது. வசமிழந்து தவிக்கும் தன் நிலைபற்றி சஜ்ஜன் பெரிதும் வருந்தினான். இந்தப் பெண்மணி தினந்தோறும் அவனிடம் வந்து பொம்மைபோல் விளையாடிய பிறகு அவனை வீசி எறிந்து விட்டுச் சென்று விடுகிறாள். சஜ்ஜன் தினந்தோறும் அவளிடம் பற்றற்று இருக்க உறுதி பூணுகிறான். அந்த உறுதி முறுக்கில்லாத நூலைப்போல் அறுந்து விழுகிறது!.

சஜ்ஜன் இவ்விதம் வசமிழந்து, தவித்தான் நடு கடைத்தெருவில் கன்னத்தில் யாரோ ஓங்கி அறைந்தாற் போலிருந்தது அவனுக்கு. அதே நேரத்தில் கர்னல் உள்ளே நுழைந்து விளக்கின் பித்தானை அழுத்தினான்: ''என்னப்பா, உன் 'லவ் மேகிங்' முடிந்து விட்டதா? உனக்கு வாய்ப்புக் கொடுக்கத்தான், நான் வெளியே சென்றிருந்தேன்!! என்றான்.

சற்றுக் கடுமையான குரலில் சஜ்ஜன் பதில் அளித்தான்: ''நீங்கள் மிகப்பெரிய உதவி செய்தீர்கள்! முட்டாள்.''

# 19

கர்னலின் வீட்டிலிருந்து கிளம்பிய மஹிபால், அமீனுபாத் பார்க்கின் அருகில் கூட்டம் நிறைந்த தெருக்களின் வழியாகச் சென்றுகொண்டிருந்தான். மழைத் தூற்றல் விழுந்தவுடன் தூசிகள் அமுந்திவிடுவதுபோல் அவனுடைய உள்ளத்து உணர்ச்சியும் வேகம் தணிந்து காணப்பட்டது. ஆனால் மன வருத்தம் அதிகரித்தது. இப்போது அவன் எங்கே செல்வது? அவனுக்கென்று ஓர் இடம் கிடையாது! அவன் எல்லோருக்கும் ஒரு சுமையாக இருந்துவிடுகிறான். அவனது வாழ்க்கை யாருக்கும் பயன்படவில்லை. தோல்வி என்பது அவன் தலையில் எழுதப்பட்ட எழுத்து. பெரிய எழுத்துக்களில் எழுதித் தொங்கவிடப்பட்டிருக்கும், விளம்பர போர்டுகள் எல்லோருடைய பார்வையிலும் படுவதுபோல் அவனுடைய தோல்வி எல்லோர் கண்களிலும் படுகிறது. அவன் என்னதான் செய்வான்!

மிகவும் நேர்மையாக இருப்பதும் சரியல்ல என்று மஹிபால் நினைத்தான். இன்றைய உலகில் நேர்மையான மனிதன் பல சிக்கல்களுக்கு இரையாகித் தவிக்க நேரிடுகிறது. சேட் ரூப்ரத் தனும், தம்பியும் அவனை ஏமாற்றினார்கள். இதை உலகில்

ஒருவரும் நம்பமாட்டார்கள். ஆனால், சேட்ரூப்ரத்தன் போன்ற வர்களிடம் தன் சுயநலத்திற்காக மஹிபால் பணம் பறித்து விட்டான் என்று சொல்ல எல்லோரும் தயாராக இருக்கிறார்கள். டாக்டர் ஜய்பாலிடமிருந்து நான் பண உதவி பெறுவதாகவும் பேசுவார்கள். நான் சீலாவிற்கு என்ன தருகிறேன் என்பது உலகிற்குத் தெரியாது. தெரிந்திருந்தாலும், மஹிபால் பெரிய இலக்கியகர்த்தாவாயினும் அரக்கன்! தன் பெண்டாட்டி பிள்ளை களின் வயிற்றிலடித்துவிட்டுச் சிற்றின்பத்தில் திளைத்துக்கொண்டி ருக்கிறான் என்றுதான் கூறும். நான் நேர்மையாக இருக்கிறேன், என் கையில் ஒருவிதமான அதிகாரமும் கிடையாது, என்பதற்காக உலகம் என்னைப்பற்றி அவதூறாகத்தான் பேசும்.''

நேற்றையத் திருமண ஊர்வலத்தில் பங்குகொண்ட இருவர் எதிரேயுள்ள 'பகத்'தின் வெற்றிலைப் பாக்குக் கடையில் தென் பட்டனர். கள்வன் போலீசிடம் அஞ்சுவதுபோல் மஹிபால் அவர்களிடமிருந்து தப்ப நினைத்தான். நஜீராபாத் செல்லும் வரை அவன் எவ்வளவு விரைவாக நடந்திருக்கிறான் என்பது தெரியவில்லை. வேகமாகச் சென்றுகொண்டிருந்த பஸ் மஹிபாலைக் கண்டு நின்றுவிட்டது. அவன் ஏன் அப்படி ஓடி இருக்கவேண்டும்; அவர்களிடம் எதற்காக அவன் அஞ்சவேண்டும்? உண்மையில் அவன் மக்களிடம் அஞ்சவில்லை. தன்னைப்பற்றி அவதூறாக யாராவது பேசிவிடப் போகிறார்களே என்றுதான் அவன் அஞ்சினான். பயந்த தன் உள்ளத்தை ஒரு நிலைக்குக்கொண்டு வந்த மஹிபால் தனக்குத்தானே கூறிக்கொண்டான்: ''இப்படி மக்களிடம் எத்தனை நாட்கள் வரையில் நான் அஞ்சி ஓடுவேன்? அப்படி ஓட நான் என்ன தவறு செய்துவிட்டேன்? ஒன்றிற்கும் மேற்பட்ட பெண்களுடன் தவறான உறவு கொள்ளும் மக்கள் உலகில் அநேகர் இல்லையா? தம் சிற்றின்ப ஆசைக்காகப் பெண் களைக் கெட்டவழியில் செல்ல ஊக்குவிக்கும் மக்கள் இல்லையா? மஹிபால் அவர்களைவிடவா கடையனாகி விட்டான்? இல்லை, நான் ஒரு பாவமும் அறியாதவன். இன்றைய உலகின் பார்வையில் சீலாவுடன் என் உறவு நேர்மையற்றதாகக் காணப்படலாம். ஆனால் நாங்கள் ஒரு பாவச் செயலும் புரிவதில்லையே! ஒரே இல்லாளுடன் வாழும் விரதம் என்னிடம் இல்லை என்று சொன் னாலும் நான் கெட்டவனல்ல. முப்பது அல்லது நாற்பது ஆண்டு களுக்கு முன்பு எத்தனை பேர் இரண்டு அல்லது மூன்று மனைவி களுடன் வாழ்ந்து வந்தனர்? கண்ணபிரான், சிவபிரான், ராம பிரானுடைய தந்தை தசரதர் இவர்களெல்லோரும் பல மனைவி மாருடன் வாழவில்லையா? எத்தனையோ முனிவர்கள் பல மனைவிகள் ஏற்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். சீலாவும் ஒருவிதத்தில்

என் மனைவிதான் : அவளை முறைப்படி மணக்காவிட்டால் என்ன ?''

தனக்குள் வளர்ந்துகொண்டிருந்த பயத்தைப் போக்கிக்கொள்ள மஹிபாலின் அறிவு நீதி—அநீதி என்ற விவாதத்தை ஆதாரமாகக் கொண்டது: சிந்தனைப் போகப் போகச் சீலாதான் தன் உண்மை யான மனைவி என்னும் முடிவிற்கு அவன் வந்துவிட்டான். முன்னோர்களின் விருப்பப்படி அவன் கல்யாணியை மணந்து கொண்டான். இந்தக் குழந்தைகள்?—அவை உண்மையில் சீலா விற்குப் பிறந்திருக்க வேண்டும்!''

தன் குழந்தைகளின் தாயாகச் சீலாவைக் கற்பனை செய்த மஹி பாலின் அசட்டு அறிவு வெட்கமுற்றது. ''சீ! சீலா குழந்தைகளின் தாயாக மாட்டாள். அவளுக்கு தாயாவது என்றாலே வெறுப் பாயிற்றே! சீலாவுக்கும் குழந்தையிருந்தால் எப்படியிருக்கும்?'' என்று அவன் நினைத்துப் பார்த்தான். 'கல்யாணியின் குழந் தைகள், சீலாவின் குழந்தை, இரண்டுமே என் குழந்தைகள் தாமே!'...குழந்தைகளிடம் அவன் அன்பை எவ்விதம் பகிர்ந்து கொடுப்பான்? தனித்தனியான பெண்களிடமிருந்து குழந்தைகள் பிறந்தால் அவர்களின் உள்ளத்தில் வேற்றுமை உணர்ச்சி வராதா? நிச்சயமாக ஏற்படும்...அது இயற்கைதானே? உலகில் அப்படி எத்தனை நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன? தசரதனையே எடுத்துக் கொள்ளலாமே! பல மனைவிகளிடமிருந்து குழந்தை பிறக்கா மலிருந்தால் அவரது வீடு இம்மாதிரி இரண்டாகியிருக்குமா? பல மனைவிகளை ஏற்றதன் (ட்ராஜடியாக) துன்பமுடிவாகத் தசரதரின் உதாரணம் அவன் முன் நின்றது. மூன்று மனைவிகளிடமிருந்து நான்கு பிள்ளைகளைப் பெற்ற தந்தை எப்படிப்பட்ட பயங்கரமான மரணத்தை ஏற்க நேர்ந்தது?

மஹிபால் சிந்தனையில் ஆழ்ந்தபடி விக்டோரியா பார்க்கை அடைந்தான். அவனையும் அறியாமல் சிந்தனையில் ஈடுபட்ட அவனது உள்ளம் எங்காவது உட்கார அவனை வற்புறுத்தியது. விக்டோரியா மண்டபத்தின் திண்ணையில் அவன் உட்கார்ந்து கொண்டான். குளிர்காலத்து நிசப்தம், பார்க்கின் நிசப்தமான சூழ்நிலை! ஏன் அவன் அமர்ந்தோம் என்றுகூடச் சிந்தித்துப் பார்க்க வில்லை. சட்டைப் பையிலிருந்து ஒரு சிகரெட்டை எடுத்துக் கொளுத்திக்கொண்டு மறுபடியும் சிந்தனையைத் தொடர்ந்தான்.

சுமார் ஒரு மணி நேரம்வரை அவன் அங்கேயே அமர்ந்திருந் தான். குளிர் அதிகரித்துச் சிந்தனையின் வெப்பத்தால்கூடச் சூழ்நிலையின் குளிரைத் தணிக்கமுடியவில்லை. நல்லெண்ணத்தின் பல கணங்களைத் தன்னிடம் கொண்டிருந்த இந்தச் செல்வன் தன்

வறுமை காரணமாக நடுங்கினுன். இப்போது எங்கே அவன் செல்வான்? எங்கே வசிப்பான்?

மஹிபால் வீடு செல்ல விரும்பவில்லை. அவனுடைய உள்ளம் கல்யாணியிடம் செல்லத் துணியவில்லை. காலையில் கணவன்—மனைவியின் சண்டைபற்றிக் குழந்தைகள்கூடத் தெரிந்துகொண்டு விட்டன. தந்தையின் நடத்தை சரியில்லை என்பது அவர்களுக்கும் புரிந்துவிட்டது! தன் மனைவி—குழந்தைகளின் தாய்—உயிருடனிருக்கும்போதே அவன் மற்றொரு பெண்ணுடன் அநீதமான உறவு கொண்டுள்ளான்!

குழந்தைகள் என்ன நினைப்பார்கள்? தந்தை மஹிபால் தன் குழந்தைகளுக்கு எதிரே எப்படி நிற்பான்? கல்யாணியோ சரியான மக்கு. அவளுக்கு உண்டாகும் ஆத்திரம் இயற்கையானதுதான். ஆயினும் அதனை அவள் வெளிக்காண்பிக்கும் விதம் ஆபாசமாக இருக்கிறதே! இப்போது மஹிபாலின் மனநிலை விசித்திரமாக இருந்தது.

நான்கு ஆண்டுகளுக்கு முன்பு கல்யாணிக்குச் சிறுகுடல் புண்ணுக இருந்ததால் படுத்தபடுக்கையாகக் கிடந்தாள். கர்னலுடன் டாக்டர் சீலா ஸ்விங்கும் அவளுக்கு வைத்தியம் செய்ய வந்தாள். மஹிபாலுடன் அவள் பேசிக்கொண்டிருப்பது வழக்கம். அவன் பேரில் சீலாவுக்கு ஒரு கவர்ச்சி ஏற்பட ஆரம்பித்தது. கர்னலும் தன் நண்பனின் புகழ்பற்றிப் பெருமிதத்துடன் உணர்ச்சிவசப்பட்டு வருணித்து வந்தான். சீலாவின் உள்ளத்தில் மெள்ள மெள்ள மஹிபால் இடம்பெற ஆரம்பித்தான். கலையிலும், இலக்கியத்திலும் சீலாவிற்கு நல்ல ரசனையிருந்தது. இந்தி இலக்கியம் அவ்வளவாகத் தெரியாவிட்டாலும், ப்ரேம்சந்தின் இரண்டொரு நூல், சரத்சந்திரரின் இரண்டு மொழி பெயர்ப்புகள் ஆகியவற்றை அவள் இந்தியில் படிந்திருந்தாள். ‘உக்ர’ எழுதிய ‘சந்த் ஹஸீனேங்கே குதூத்’ (சில அழகியரின் கடிதங்கள்) இன்றும் அவளுடைய நினைவில் இருக்கிறது. இந்த முதலைக் கொண்டுதான் இருவருடைய நட்பின் பங்கு தொடங்கியது. அந்நாட்களில் சிறிது பணக்கஷ்டமிருந்தால் கர்னலிடமிருந்து பணம் கடன் வாங்கித் தன் நூல்களின் ஒரு ‘செட்’டைக் கர்னலின் மூலமாக டாக்டர் சீலாவின் திருக்கரங்களில் மஹிபால் சமர்ப்பித்தான். அதற்குப் பிறகு சீலா பீஸ் வாங்கிக்கொள்வதை நிறுத்திவிட்டாள். அழைக்காமலேயே கல்யாணியின் வீட்டிற்கு ‘விசிட்’ செய்ய ஆரம்பித்தாள். கல்யாணியின் நோயைத் தீர்த்துவைக்க அரும் பாடுபட்டாள். சீலா கல்யாணியுடனும், குழந்தைகளுடனும் மிகவும் நெருங்கிப் பழகிவிட்டாள். ‘ஆசிரியர்’, ‘ஆசாமி’—இந்த இரண்டு முறையிலும் மஹிபாலைச் சீலாவிற்குப் பிடித்திருந்தது.

தன் கலைரசனை, நன்னடத்தை, அன்பு இவற்றின் வாயிலாக மஹிபாலைக் கவர ஆரம்பித்தாள். இருவருக்குமிடையே நட்பு இதுவரைதான் இருந்தது. பெரும்பாலும் காப்பி ஒட்டலில் சந்திப்புத் தொடங்கியது. மஹிபாலைத் தவிர சஜ்ஜன், கர்னல் இருவரும்கூட நெருங்கிய நண்பராகிவிட்டனர். இப்படியே பல மாதங்கள் கழிந்தன.

ஒரு நாள் மஹிபால் தனிமையில் காப்பி ஒட்டலில் அமர்ந்திருந்தான். சீலா வந்தாள். அன்று அவள் ஒரு மாதிரியிருந்தாள். அங்கு உட்கார அவள் விரும்பவில்லை. உலாவி வரலாம் என்று மஹிபாலிடம் கூறினாள். லா மார்டீனியர் காலேஜ்வரை இருவரும் காரில் அமர்ந்து பேசிக்கொண்டே சென்றனர். காரிலிருந்து இறங்கி ஒரு தனிமையான இடத்தில் உட்கார்ந்துகொண்டனர். சீலாவின் பார்வை இனிய உறவின் புதுமையை அவனுக்கு உணர்த்தும் செய்தியை அளித்தாற் போன்றிருந்தது. அதற்குச் சில தினங்களுக்குப் பிறகே மஹிபாலின் 'ஏகபத்தினி' விரதத்திற்குப் பங்கம் வந்துவிட்டது! இது பாவச் செயல் என்று தோன்றியபோதிலும் இன்றும் சீலாவைச் சந்தித்தால் மஹிபாலின் உள்ளம் ஒரு புத்துணர்ச்சியைப் பெறுகிறது. நான்கு ஆண்டுகளுக்கு முன்பு பெற்ற உணர்ச்சியே போல் இன்றும் அதில் ஓர் இனிமை இருந்தது. மஹிபாலை மகிழ்விக்கும் கலையில் சீலா வல்லவள். இத்தனை நாட்களில் ஒருமுறைகூட அவனுடன் சண்டை நடந்தது கிடையாது! கருத்துவேறுபாடுகள் பலமுறைகள் வந்திருக்கிறது. மஹிபால் சற்றுக் கடுமையான சுபாவமுள்ளவன். அந்தச் சுபாவம் சீலாவின் முன்னிலையிலும் வந்ததுண்டு. ஆனால் அந்த சுபாவம் சீலாவிற்கெதிரே வெகு நேரம்வரை இருந்துகொண்டு தன் சாமர்த்தியத்தைக் காண்பித்தது கிடையாது! சீலா அவனுடைய கோபத்தை அப்படியே அடக்கிவிடுவதில் வல்லவள். இவ்வளவு நெருங்கிப் பழகியபோதிலும் ஒரு போதும் மஹிபாலின் பொருளாதார நிலையைப்பற்றி அவள் அவனிடம் ஒரு கேள்விகூடக் கேட்டது கிடையாது! தன் குடும்ப விஷயங்களைப் பற்றியும் அவள் அவனிடம் தெரிவித்தது கிடையாது. இருவரும் தினந்தோறும் சந்திப்பதில்லை. இருவருமே தத்தம் வேலைகளில், தம் சொந்தச் சமுதாயத்துடன் ஈடுபட்டிருந்தனர். ஆயினும் அடிக்கடி சந்திப்பது அவர்களுடைய இன்றியமையாத காரியம்.

மஹிபாலின் உள்ளத்தில் சீலாவின் நினைவு இனிய கற்பனைகளைக் கிளறிவிட்டது. இரவு நேரத்தை அங்கேயே கழித்தால் என்ன என்று அவன் நினைத்தான்.

மஹிபால் எழுந்திருந்தான். ஒரு முறை மறுபடியும் தயக்கமடைந்தான். சீலாவின் வீட்டிற்குப் போவதைத் தவிர வேறு

உபாயம் கிடையாது என்று மறுபடியும் எண்ணினான். சஜ்ஜனின் வீட்டில்கூடப் போய் தூங்கலாம். ஆனால் இப்போது அவன் அங்கே செல்ல விரும்பவில்லை. அவனைப் பொறுத்தவரையில் சஜ்ஜன் 'ஹிபோக்ரைட்'. கர்னலின் வீடு அவனுடைய வீட்டிற்கு அருகே இருந்தது. அங்கே சென்றால் அவன் பஞ்சாமிருதம்போல் உபதேசம் அருள ஆரம்பித்துவிடுவான். சீலாவின் வீட்டிற்குச் செல்வதுதான் சரி.

பிடிவாதத்துடன் உள்ளத்தில் இந்த எண்ணத்தைக்கொண்டு அவன் பத்தடி வைத்தான்; இப்போதிலிருந்து சீலாவின் விட்டிலேயே இருந்துவிட்டாலென்ன? அது முடியுமா? மஹிபாலின் வேகம் குறைந்துவிட்டது. மறுபடியும் மனம் வருத்தத்தில் அழுந்திவிட்டது. அவனுடைய வாழ்க்கை பயனற்றுப் போய் விட்டது. அவன் துறவுபூணத்தான் வேண்டும்—எங்காவது ஓடிவிட வேண்டும்!

இந்த எண்ணத்திலிருந்து அவனைக் காப்பதுபோல் 'ஓடுவதற்கு முன்பு சீலாவைச் சந்தித்து விடை பெற்றுக்கொள்வோம்' என்ற எண்ணம் உதித்தது. அதே சாக்கில் அவன் நடக்க ஆரம்பித்தான்.

பங்காளவிற்குச் சென்றதன்பேரில் மிஸ் சீலா விசிட்டிலிருந்து திரும்பவில்லை என்று வேலையாட்களிடமிருந்து தெரியவந்தது. அப்போது மணி ஒன்பதேமுக்கால். மஹிபால், பணியாட்களிடம் காப்பி தயார் செய்யச் சொல்லிவிட்டு, சீலாவின் அறைக்குச் சென்று சோபாவில் சாய்ந்துகொண்டான். இருபது நிமிடங்களுக்குப் பிறகு சீலா வந்துவிட்டாள்.

சீலாவின் தலையில் மூன்று மஞ்சள் ரோஜா மலர்கள் இருந்தன. காதுகளில் வைரக்கம்மல் பளிச்சிட்டன. சீலா மிக்க மகிழ்ச்சியுடன் வீடு திரும்பினாள். மஹிபாலைக் கண்டவுடன் அந்த மகிழ்ச்சி பன்மடங்கு அதிகரித்தது.

''யூ ராஸ்கல், வாட் ஆர்யு டூயிங் ஹியர் அட் திஸ் டைம், ஆப் தி நைட்? (ஏய் சோதா! இரவு இந்த நேரத்தில் இங்கே என்ன ஜோலி உமக்கு?) மனைவி வீட்டைவிட்டுத் துரத்திவிட்டாளா என்ன?''

மஹிபால் வறண்ட சிரிப்புடன், ''ஆமாம்'' என்றான்.

''உண்மையைச் சொல்லுங்கள், சண்டைபோட்டுக் கொண்டு வந்தீர்களா?''

மஹிபால் பேச்சைக் காற்றோடு பறக்கவிட்டுப் பதிலளித்தான். ''இல்லை, நான் வேடிக்கையாகச் சொன்னேன். இன்று மாலை அந்த இரண்டு முட்டாள்களும் வரவில்லை. நான் வெளியே செல்லும் 'மூடி'ல் இருந்தேன். வெகு நேரம்வரை வொயிட் விக்டோரியாவில் உட்கார்ந்திருந்தேன். பிறகு உன்னைப் பார்க்க

வரவேண்டும்போல் இருந்தது; வந்துவிட்டேன். நீ சாப்பிட்டு விட்டாயா?''

''இப்போதே எப்படி? நீங்களும் சாப்பிட்டிருக்கமாட்டீர்கள்.''

''அதனால்தானே நான் கேட்டேன்?''

''அப்துல்!''

''வந்தேனுங்க, மிஸ் மேடம்!'' தொலைவிலிருந்து குரல் கேட்டது.

மஹிபாலுக்குச் சிரிப்பு வந்தது. ''எதற்காகச் சிரிக்கிறீர்கள்?'' என்று சீலா கேட்டாள்.

மஹிபால் பதிலுரைத்தான்: ''அப்துல் மிஸ் மேடம் என்று கூப்பிட்டானே, அதை நினைத்துத்தான்!''

விஷயத்தைப் புரிந்துகொள்ளச் சீலாவிற்கு ஒருகணம் பிடித்தது. பிறகு உரக்கச் சிரித்தாள்; தன்னிடமிருந்த வட்டமான தலையணையை மஹிபால்மீது எறிந்தாள். அதற்குள் அப்துல் வந்து விட்டான். சீலா உடனே தன்னை மாற்றிக்கொண்டு கட்டளை பிறப்பித்தாள்: ''ஐயாவும் இங்கேதான் சாப்பிடப்போகிறார்: இன்று என்ன செய்திருக்கிறாய்?''

''கோழிங்க.''

''சரி, சாப்பாடுகொண்டு வா... இரு. மஹிபால் ட்ரிங்க் வேண்டுமா?''

''ஓ! தாராளமாக!''

அப்துலுக்கு மேற்கொண்டு கட்டளையிடத் தேவையில்லை. சீலாவிடமிருந்து டிராயரின் சாவியை வாங்கி மேஜையைத் திறந்தான். அங்கிருந்து மற்றொரு சாவியை எடுத்து அலமாரியைத் திறந்தான். மேஜைமீது விஸ்கியும், டம்ளரும் வந்துவிட்டன.

சாப்பிடும் மேஜைமீது உட்கார்ந்தபடி சீலா கூறினாள்: ''உங்கள் நாவல் எதுவரை முடிந்திருக்கிறது?''

''அப்படியே இருக்கிறது.''

''எப்போதிலிருந்து?''

''பதினைந்து அல்லது இருபது நாட்களாக.''

''இதுவரை எத்தனை பக்கங்கள் எழுதியிருக்கிறீர்கள்?''

''ஐம்பத்துநான்கு பக்கம்.''

''எழுதுவதை ஏன் நிறுத்தி விட்டீர்கள்?''

''அதுவா? சும்மாதான். இடையே ரேடியோ வேலை வந்து விட்டது. பிறகு தினசரி கூலிப் பிழைப்பு வேறு. ஓய்வு நேரம் கிடைக்கவில்லை.''

''அதை முடித்துவிடுங்கள். நல்ல வேலையை நீங்கள் எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள்.''

''கோழியின்மீது கத்தியைச் செலுத்தியபடியே மஹிபால்

அலட்சியமான முகபாவத்துடன் கூறினுன்: "தானே முடியும். அதைப்பற்றி யாருக்குக் கவலை?''

''சரிதான். எல்லா 'ஆர்டிஸ்டு'களும் இப்படியே நினைத்தால் நாளைக்கு 'ஆர்ட்' என்ற பொருளே காணக்கிடைக்காது.''

"பழங்கதைதான் இது—சினிமாவில் நடிப்பவர்கள்கூட இதை 'டயலாக்'கில் சேர்த்துக்கொண்டுவிட்டார்கள். பார், சீலா யாரும் யாரையும் எழுதும்படி வற்புறுத்த முடியாது. ஆசிரியன் தன்னைத் தான்கூட வற்புறுத்தி எழுத வைக்க முடியாது. அதற்குக் காரணம், ஆசிரியன் என்பவன்-எந்தக் கலைஞனும் தன் கலையினுல் உந்தப்பட்டுச் சிறிது அமைதிகிட்டியவுடனேயே தன் வேலையைத் தொடங்கிவிடுகிறுன்.''

"ஏன், இப்போது ஏதாவது அமைதியைக் குலைக்கும் நிலையில் இருக்கிறீர்களா?''

மஹிபால் கேள்வியைக் கேட்டதும் தன்னை உஷாராக்கிக் கொண்டான். பிறகு கூறினுன்: "வேறென்ன, அக்காளின் மகள் சகுந்தலாவைப்பற்றிய கவலைதான். தினந்தோறும் ஜாதகம் பார்ப்பதும், யாரையாவது புகழ்ந்து பேசுவதும், இதே வேலையாகி விட்டது. இதுதான் உள்ளத்தை அழுத்துகிறது.''

''எங்காவது திருமணம் நிச்சயம் செய்திருக்கிறீர்களா?''

''முதலில் ஜாதகம் வாங்கிய பிறகல்லவா மற்ற விஷயம்? நிறையப் பணம் கொடுத்து வாங்கும் பொருளை நாமே மதிப்பது இல்லை. இது எங்கள் பழக்கமாகி விட்டது. வரதட்சிணை கொடுத்தாலும் நாம்தான் எல்லாவிதமான அவமதிப்பையும் வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும்.''

''மஹிபால், இந்த ஜாதி விலங்கை ஏன் உடைத்தெறியக் கூடாது? உங்களைப் போன்றவர்களே இதில் தலைமை ஏற்காவிட்டால், பிறகு சமுதாயம் எப்படித்தான் மாறும்?''

"நான் மாறத் தயாராயிருந்தால் போதுமா, உங்களுக்கு வேண்டியவள் ஒருத்தி இருக்கிறுளே, வீட்டில்; அவள் 'நான் விஷத்தைக் குடித்துச் செத்துவிடுவேன்; மட்டமான ஜாதியினருடன் நமக்கு உறவு கூடாது' என்று பிடிவாதம் பிடிக்கிறுள்.''

நிலைமையைப் புரிந்துகொண்ட சீலாவிற்குச் சிரிப்பு வந்தது. பிறகு கூறினுள்: ''கல்யாணியைப் போலவே பேசுகிறீர்கள்! இருக்கட்டும், சந்தித்தால் சொல்கிறேன்.''

மஹிபால் பதில் பேசாமல் சாப்பிடுவதில் முனைந்திருந்தான்.

''அப்துல்!''

''சார்!''

''டம்ளரில் ஊற்று!''

"இதோ சார்!''

சீலா கூறினாள்: "உங்கள் கவலையைப் புரிந்துகொண்டேன். பிள்ளை வீட்டார் மூட்டைப் பணம் கேட்பார்கள்!"

"கேட்டுத் தொலைக்கட்டும், சனியன்கள்!" டம்ளரில் கலர் நீர் விழவே உள்ளத்திலும் போதை வர ஆரம்பித்தது. அவன் கூறினான்: "நான் இதைப்பற்றிக் கவலைப்படுவதையே விட்டுவிட்டேன். கல்யாணி எதை வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும்" பிறகு அப்துலிடம் கூறினான்: "உம் ஊற்று!"

டம்ளரில் இரண்டு 'பெக்' ஊற்றி அப்துல் சோடா புட்டியைத் திறக்க ஆரம்பித்தான். சீலா கேட்டாள்: "நம்பிக்கையிருக்கிறதா? ஓவராகப் போய்விடவில்லையா?"

"இல்லை. ஐ நீட் இட்!" அப்துல் பாட்டிலை மூடியதைப்பார்த்துக் கேட்டான்: "மிஸ் மேடம் குடிக்க வேண்டாமா?"

"இப்போது நான் குடிப்பதில்லை!"

"என்னுடன் குடிக்க வேண்டாமா?"

"இல்லை—நாளைக் காலையில் 'பேஷன்ட்ஸை அட்டெண்ட்' செய்ய வேண்டும்!"

"ஒரு 'பெக்'—ஃபார் கம்பெனிஸ் ஸேக்?"

"அப்துல், சோடாவைத் திறந்து கொடுத்துவிட்டு நீ போ. நான் பார்த்துக்கொள்கிறேன்."

அப்துல் சென்ற பிறகு மஹிபால் குடித்து வைத்த ஒரு டம்ளரிலேயே சிறிது விஸ்கியை ஊற்றி அதில் சோடாவைக் கலந்தாள் சீலா.

இருவருடைய டம்ளர்களும் 'டண்' என்று ஒலித்தன. அன்பு கலந்த அமுதத்தை இருவரும் பருகினர். டம்ளரை வைத்துவிட்டு உணவைச் சாப்பிட ஆரம்பித்தபடியே சீலா கூறினாள்: "மஹிபால், ஒரு விஷயம் சொல்லட்டுமா?"

"என்ன?"

"என்னிடம் 'ப்ளாக் மணி' நிறைய இருக்கிறது. அதை 'ஒயிட்' செய்ய எனக்கு நீங்கள் உதவுவீர்களா?"

"முடியாது."

"முதலில் நான் சொல்லப் போவதைப் புரிந்து கொள்ளுங்கள். எனக்கு எந்த மாதிரியான ஆசாமி வேண்டுமோ அவனை அழைத்து வர வேண்டும் அவ்வளவுதான்!"

"எந்த வேலைக்காக?"

"பப்ளிகேஷனுக்காக. உங்கள் எல்லா நூல்களையும் 'பப்ளிஷ்' செய்ய எனக்கு உரிமையளிக்க வேண்டும். எங்கிருந்தெல்லாம் அவை அச்சிடப்பட்டிருக்கின்றனவோ, அங்கிருந்து எல்லா ஸ்டாக்கையும் விலை கொடுத்து நான் வாங்க அநுமதிக்க வேண்டும். விற்பனையாகி விட்ட நூல்களை மறுபடியும் நான் பதிப்பிக்கிறேன்.

புத்தக வியாபாரத்தைப் பற்றித் தெரிந்த ஒரு நல்ல மானேஜரை எனக்கு நீங்கள் தேடிப் பிடித்துத் தர வேண்டும். இவ்வளவுதான் நான் உங்களிடமிருந்து எதிர்பார்ப்பது.''

மஹிபால் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தான். சீலாவின் பேச்சு முடிந்த பிறகும் தன் கருத்தை மஹிபால் வெளியிடவில்லை. சீலா மறுபடியும் கேட்டாள்: ''சொல்லுங்கள், சம்மதமா? இதை முதலில் உங்களுக்குத் தெளிவுபடுத்தி விடுகிறேன்—இது என் ப்யூர் பிஸினஸ் ஃபார்முலா (யோசனை). பாழாகிக் கொண்டிருக்கும் நிலையில்கூட மக்கள் புத்தகங்களை விலை கொடுத்து வாங்குகிறார்கள். புதிய முறையில் நான் இதற்குப் பப்ளிசிடி (விளம்பரம்) கொடுத்து ஸேல் புஷ் (விற்பனையை ஊக்கம்) செய்து விடுவேன். நீங்கள் பிரமிப்படைவீர்கள்!''

மஹிபால் சிரித்தான்; உரக்க ஒரு வெற்றுச் சிரிப்புச் சிரித்தான். சீலா அவனைப் பார்த்தபடி இருந்தாள். மஹிபால் கூறினான்: ''உன்னிடம் ஒன்றும் கேட்காமல் இருக்கும்போதே என்னைத் தூற்றுகிறார்கள். உன் காசைக் கொண்டு புத்தகங்களைப் பதிப்பித்தால் வந்தது ஆபத்து! என்னைப்பற்றி அவதூறாக வரலாறே எழுதக் கிளம்பி விடுவார்கள்.''

''உங்களிடம் ஒரு பெரிய குறை இருக்கிறது, மஹிபால்! உங்களைப்பற்றி நீங்கள் எப்போதும் தாழ்வாகவே நினைக்கிறீர்கள். வாழ்க்கையில் பாதியைக் கழித்தாகிவிட்டது. இன்னும் இந்த முட்டாள்களுக்கு இரையாகவே காலங்கழிப்பதா? நன்கு ஆலோசித்துத்தான் இதை உங்களிடம் தெரிவித்திருக்கிறேன். இந்த வேலையினால் நம் இருவருக்கும் லாபமுண்டாகும். மக்களுடன் தொடர்பு கொள்ள மிகச் சிறந்த வழிகளைப் பற்றி நான் திட்டமிட்டிருக்கிறேன்...!''

''இருக்கலாம். ஆனால் அதை எனக்குத் தெரிவிக்கத் தேவை இல்லை.''

''நீங்கள் சிந்திக்காமல் பேசுகிறீர்கள், மஹிபால். எனக்கு உரியவர் நீங்கள் என்பதை மறந்துவிட்டு ஏன் யோசிக்க மறுக்கிறீர்கள். நாமிருவரும் உண்மையான நண்பர்கள். இருவரும் சேர்ந்து 'பிஸினஸ்' (வியாபாரம்) செய்கிறோம். இதில் என்ன தவறு? உலகத்தை விட்டுவிடுங்கள். அது பிதற்றிக் கொண்டேதானிருக்கும்.''

''எனக்கு உலகத்தைக் கண்டு பயமில்லை சீலா, எனக்குள் இருக்கும் கள்வனைக் கண்டுதான் அஞ்சுகிறேன்.''

''பயமில்லை, ஒன்றுமில்லை. உண்மையைச் சொன்னால் நீங்கள் கோபித்துக் கொள்வீர்கள். நீங்கள் முட்டாள். வேடிக்கைக்காகச் சொல்லவில்லை. உங்களை நீங்கள் நிம்மதியாக வாழவிடமாட்டீர்

கள்! அப்படியொரு சுபாவம் உங்களுக்கு. பிறரைப் பற்றிப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்!''

மஹிபால் ஏதோ கூற நினைத்தான். ஆனால் ஆறுதல் அளிக்கும் வகையில் சீலா பேசினாள்: "இதோ பாருங்கள், நான் நல்ல நல்ல ஸ்கீம்(திட்டங்)களைப் பற்றி யோசித்து வைத்திருக்கிறேன். உங்கள் புத்தகங்களைப் படித்து நல்ல விமரிசனம் செய்பவர்களுக்குப் பரிசு அளிக்கப்படும் என்று பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் சென்று விளம்பரம் செய்யப் போகிறேன். மாணவர்கள் உங்கள் புத்தகங்களை அதிகமாகப் படிக்க உற்சாகம் பெறுவார்கள்!''

மஹிபாலுக்கு இந்த வார்த்தைகள் ஆறுதலளித்தன. பாலைவனத்தில் நின்றுகொண்டு தவிப்பனுக்குத் தாகம் தீரத் தண்ணீர் கிடைத்தாற் போலிருந்தது அவனது நிலை. மக்கள் எங்கே பார்த்தாலும் தன்னுடைய நூல்களைப் படித்து அவற்றைப்பற்றிப் பாராட்டிப் பேச வேண்டும் என அவனுக்கு ஆசைதான். ஆயினும் இந்தச் சுயநலத்திற்காக அவன் தன் கோட்பாடுகளைத் தகர்த்தெறியமாட்டான். சீலாவின் உற்சாகத்தை நிறுத்தும் வகையில் அவன் பதிலளித்தான்: ''இந்தப் பதிப்பு வேலைக்கு முழு நேரமும் செலவிட வேண்டும். உனக்கு அவ்வளவு நேரம் கிடைக்காது.''

"நான் இதில் என் நேரத்தைச் செலவிடமாட்டேன் என்று ஏன் உங்களுக்கு எண்ணத் தோன்றுகிறது? எனக்கு ஒரு நல்ல 'பிஸினஸ் மானேஜர்' வேண்டும். வீணாகக் கிடைக்கும் என் பணம் லாபமளிக்கிறதா இல்லையா என்று பாருங்கள். உங்களுக்கும் ராயல்டியாக நல்ல தொகை கிடைக்கும். பொருளாதார வீழ்ச்சியடைந்த இந்த நாட்களில்கூட உங்கள் புத்தகங்களை நன்றாக விற்பனை செய்யாவிட்டால் பாருங்கள்!''

''போதும் போ! இப்போது வேறு எதையாவது பற்றிப்பேசு.''

"நான் முக்கியமான விஷயத்தைப் பற்றித்தான் பேசுகிறேன்!''

''நான் உயிருடனிருக்கும் வரையில் உன்னுடைய இந்த 'பிஸினஸ்' நடக்காது. இறந்த பிறகு நடத்திக் கொள்.''

"மஹிபால்!'' சீலா மென்மையாய் பேசினாள்: "நான் சொல்வதை நீங்கள் ஒரு போதும் கேட்பதில்லை!''

மஹிபால் வறண்ட சிரிப்புடன் கூறினான்: ''சரி; உன் வார்த்தையை அப்படியே கேட்கிறேன். நீ வெற்றி பெற்றுவிடுவாயா?''

"என்ன?''

"நான் உன்னிடம் விடை பெற்றுப்போக வந்திருக்கிறேன்.''

சீலா பிரமித்து விட்டாள். அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஆனால் சற்று அஞ்சினவள்; ''நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

*　　*　　*　　*

இருவரும் சீலாவின் கட்டிலில் அமர்ந்திருந்தனர். ஒரே போர்வையை இருவரும் போர்த்துக்கொண்டிருந்தனர். சீலாவிற்கு வருத்தமாக இருந்தது. அவளால் மஹிபாலுக்கு எப்போதும் கெட்ட பெயர் பரவி இருக்கிறது என்று நினைக்க நினைக்க அவளது மனம் வேதனையடைந்தது. வெகுநேரம் வரை பேசாமல் இருந்து விட்டுப் பிறகு, திடீரென்று மஹிபாலின் தோளில் கை போட்டு அணைத்துக்கொண்டு கண்களில் கண்ணீர் வழிந்தோடச் சீலா கூறினாள்: "உலகம் எது வேண்டுமானாலும் பேசிக் கொள்ளட்டும்."

"உலகத்தைப் பற்றி எனக்கு அக்கறையில்லை; விஷயம் கல்யாணிக்கும், குழந்தைகளுக்கும் எட்டிவிட்டது. இது வரை அவர்கள் உன்னைப் பற்றி எவ்விதம் நினைத்து வந்தார்களோ, அந்த மாதிரி இனி நினைக்கமாட்டார்கள். அதைப் பற்றித்தான் எனக்கு வருத்தம். உன்னையாவது அவர்களையாவது நான் துறக்க வேண்டிய நேரம் வந்துவிட்டது."

சீலா ஒன்றும் பேசவில்லை. அவனை அணைத்தபடி இருந்தாள்.

"சில தினங்களுக்குப் பிறகு இந்த அமர்க்களம் வீட்டிலும் சரி, வெளியிலும் சரி அடங்கிவிடும் என்பது எனக்குத் தெரியும். எந்த அமர்க்களமும் தன் முழு உச்சநிலையை அடைந்த பிறகு தணிந்தே தீரும். அதன் பிறகு நாம் இதேபோல் சந்திப்போம். உலகம் நம்மை வெட்கங் கெட்டவர்கள் என்று கருதி அவதூறாகப் பேசுவதை நிறுத்திவிடும்."

சீலா நிமிர்ந்து உட்கார்ந்தாள். பிறகு கூறினாள்: "பாருங்கள், மஹிபால் நாம் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டுள்ளோம். பிறகு இந்த நாணயமான உறவை உலகோரிடமிருந்து ஏன் ஒளிக்க வேண்டும்? உலகம் நம்மைத் தவறாக எண்ணினால் எண்ணிக் கொள்ளட்டும். ஆனால் நாம் ஏன் நம்மைத் தவறாகக் கருத வேண்டும்? இதிருக்கட்டும், நான் உங்களை ஒன்று கேட்கிறேன்; இத்தனை நாட்களில் நான் கல்யாணியின் உரிமையைப் பறித்தது கிடையாது. அப்படியிருக்கக் கல்யாணிக்காக நீங்கள் ஏன், என் உரிமையைப் பறிக்கிறீர்கள்?"

"நீ கல்யாணியிடமிருந்து என்னைப் பறித்துக் கொண்டுவிட்டாய் சீலா! எந்த மனிதன் பேரில் அவளுக்கு இருபது ஆண்டுகளாக உரிமை இருந்ததோ அந்த உரிமையில் நீ பங்கு கேட்கிறாய் சீலா!"

"கல்யாணி உங்களை எவ்வளவு வென்றிருக்கிறாளோ, அந்த அளவிற்கு நீங்கள் அவளுக்குரியவர்தான். ஆனால் என் வெற்றியின் பங்கைப் பறிக்க அவள் யார் என்று கேட்கிறேன். நான் உங்களை ஒரு போதும் விடமாட்டேன். இனி என்னெதிரே இம்மாதிரியான பேச்சை எடுக்கமாட்டேன் என்று வாக்குறுதி கொடுங்கள். லவ்—ட்ரயாங்கிள்' (காதல் முக்கோணம்) வரைந்த அந்தச் சுழலில்

சிக்குண்டு தவிக்கும் வயதில் நாம் இப்போது இல்லை. இதுவரை இருந்தபடியே இப்போதும் நாம் இருப்போம். பின் வாங்கமாட்டேன் என்று வாக்குக் கொடுங்கள்!''

மஹிபாலின் ஆணவம் அவனைப் பின் வாங்கவிடவில்லை. அவன் பதிலளித்தான்: ''நான் வாக்குக் கொடுக்கிறேன். நம் உறவு எப்போதும் மாறுமலிருக்கும்.'' மதுவின் போதை உறுதியை இன்னும் உணர்ச்சிமிக்கதாகச் செய்தது. ஆனால் அந்த நிலையில் கூட அவன், தன் சுய உணர்வை முழுவதும் இழக்கவில்லை. அவனுக்குத் தனது தன்மானம் பற்றிய கவனமிருந்தது. வாக்குக் கொடுத்த அவன் சீலாவிடமிருந்து வாக்குறுதி கேட்டான்: "இனி என் பிஸினஸ் பற்றிய பேச்சை எடுக்க மாட்டேன் என்று நீயும் எனக்கு வாக்குக் கொடுக்க வேண்டும். நீ உன்னை லட்சாதிபதி என்று நினைக்கிறுய். நான் இதுவரை உன் லட்சத்தை லட்சியம் செய்தது கிடையாது.''

''போதும் விடுங்கள். இனி அவ்விதம் பேசமாட்டேன்.'' தன் குற்றத்தைத் மன்னிக்கும்படி கேட்பது போல் சீலா மஹிபாலின் மார்பில் சாய்ந்துகொண்டாள். அது நேரடியாக உள்ளத்தில் அப்பீல் செய்வது போலிருந்தது. கெட்டிக்காரப் பெண்டிர் ஆடவரை மகிழ்விக்க நன்கு தெரிந்தவர்கள்.

மஹிபால் சீலாவின் வீட்டிலிருந்து புறப்பட்டபோது இரவு மணி ஒன்றறை. அவன் சீலாவிடமிருந்து காரை வாங்கிக்கொள்ளவில்லை. "நகரத்தில் எந்த நேரத்திலும் எதற்கும் குறைவு கிடையாது. ரிக்ஷாவாவது, வண்டியாவது நிச்சயம் கிடைக்கும்.'' என்று அவன் கூறிச் சென்றுன்.

சீலா தன் சால்வையை வற்புறுத்தி அவனுக்கு அளித்தாள். குளிர் அதிகமாக இருந்ததால் அவனும் மறுக்கவில்லை. தெருவிற்கு வந்து அவன் யோசிக்கலானுன்: "இப்போது நான் எங்கே போவேன்?''

*　　　*　　　*　　　*

பண்பாட்டின் பல்வேறு கோணங்களைப் பற்றிச் சிந்தித்த மஹிபால் குளிர்ந்த இரவைக் கோமதி நதியின்படித்துறையிலிருந்த ஒரு சிவன் கோயிலில் தன் ஞான உணர்வின் வெப்பத்தைக்கொண்டு கழித்தான். அப்படியிருந்தும், தன்னுல் பல வீனங்களினின்றும் தப்ப முடியவில்லையே என்ற எண்ணத்தைக் கைவிட முடியவில்லை. அவனுடைய பகுத்தறிவு மலர்ச்சியடையாது. அவனுடைய எந்த முடிவிற்கும் நியாயத்தின் ஆதாரம் கிடைக்காது. அவன் பலவீனமானவன், அநீதம் செய்பவன், அவன் வீட்டை விட்டுச் செல்ல நிச்சயித்ததும் அநீதம், பாவச் செயல், பலவீனமான மனம்

படைத்த மஹிபால் திணறிப் போனான். ஆகாயத்தில் பளிச்சிட்ட தாரகைகளில் சில மறைந்து விட்டன. இரவு நேரமோ கழிந்து விட்டது. பகலை இனி எங்கு எப்படிக் கழிப்பது என்று மஹிபால் சிந்திக்கலானான். அவன் எங்கேதான் சுற்றித் திரிவான்? அவனுடைய வாழ்வின் லட்சியமும் இப்படிச் சுற்றுவதுதான் என்றாகி விடுமா என்ன? இது பயந்து எண்ணும் எண்ணமல்லவா? பொழுது போக்குவதற்காகத்தான் அவன் ஞான சிந்தனையில் ஈடுபடுகிறானா? அதற்கு ஒரு மதிப்பும் கிடையாதா? தந்தை என்ற முறையில் குழந்தைகளுக்கு அவன் ஆற்ற வேண்டிய கடமை ஒன்றுமில்லையா? இப்படியே ஒளிந்து மறைந்துகொண்டு எத்தனை நாள்தான் இருக்க முடியும்? எந்த இன்னலையும் உறுதியுடன் எதிர்த்துச் சமாளித்தாக வேண்டும்!

''வீட்டுக்குச் செல்கிறேன். ஒருமுறை கல்யாணியிடம் முழு நிலைமையையும் பற்றி எடுத்துரைக்கிறேன். பிறகு என்ன முடிவு ஆகிறதோ, அதற்குத் தகுந்தபடி பார்த்துக் கொள்ளலாம்.''

மஹிபால் தன் வீடுவரை சென்று திரும்பி விட்டான்; கதவைத் தட்டத் துணிவில்லை.

இந்தக் குழப்ப நிலையில் கர்னலுடைய வீட்டை அடைந்தான். முதல் நாள் காலை தன் வீட்டை விட்டுக் கிளம்பிய நண்பன் என்று கர்னலும், சஜ்ஜனும் கனவில்கூட நினைக்கவில்லை.

## 20

''ஆமாம், அவள் சரியாகத்தான் சொல்கிறாள்: இந்தக் காலத்துத் துறவிகளை நம்ப முடியாது.''

தெருவிலிருந்த தேநீர்க் கடையருகே ஒரு பெரிய கூட்டம், தெருவையே அடைத்துக் கொண்டிருந்தது: சிலர் உள்ளே நுழைந்து வேடிக்கை பார்த்தனர். மற்றும் சிலர் பலவிதமான கருத்துரைகளை வழங்கிக் கொண்டிருந்தனர். ஒரு பெண்மணி மற்றக் குரல்களை மீறி உரக்கக் கத்திக் கொண்டிருந்தாள்.

எப்போதும் நிறுத்துமிடத்தில் சஜ்ஜன் தன் காரை நிறுத்தினான். வந்தவுடனேயே கூட்டத்தின் அமர்க்களம் அவனை அந்தப் பக்கம் கவர்ந்தது. காருக்கருகேயே நின்று கொண்டு அவன் வேடிக்கை பார்த்தான். அருகே சென்று கொண்டிருந்த இருவரின் உரையாடல் அவனையும் ஆவலுறச் செய்தது.

கூட்டத்திற்குச் சென்று பார்த்தபோது வக்கீலின் பைத்தியம் பிடித்த மருமகளைக் கண்டான் சஜ்ஜன். உரக்கக் கத்திக் கொண்டும், அழுதுகொண்டும் இருந்த அவளருகே காவியுடை தரித்த

சாதுக் கிழவர் ஒருவர் நின்று புன்முறுவல் செய்து கொண்டிருந்தார். தனக்கு அறிமுகமான அந்தப் பெண் வேடிக்கை பார்க்கும் கூட்டத்தின் முதற்காரணமாக இருந்ததைக் கண்ட சஜ்ஜனுல் சும்மா இருக்க முடியவில்லே. முன்னே சென்று அவளது தலேயை வருடியபடி கேட்டான்: "என்ன நடந்தது?"

அவன் கேள்வி கேட்பதற்கு முன் சஜ்ஜனேக் கண்ட அந்தப் பெண், மூழ்குபவனுக்கு ஓராதாரம் கிடைத்தாற் போல் எழுந்து நின்முள். மகிழ்ச்சியினுல் நாத்தழுதழுக்க அவள் கூறினுள்: "ஓ யு ஹேவ் கம் ஜென்டில்மேன்! (நீங்கள் வந்து விட்டீர்களா, கனவானே,) என்னே இவனிடமிருந்து காப்பாற்றுங்கள். இவன் சாதுவுமில்லே, சந்நியாசியுமில்லே. சரியான கசாப்புக் கடைக்காரன், என்னே இவன் தாசியாக்கப் பார்க்கிமுன். நான் தாசியா? நான் எவ்வளவு உயர்ந்த குலத்துப் பெண் என்று நீங்களே சொல்லுங்கள். என் ராஜேஷுக்கு இது தெரிந்தால் இந்தச் சாதுவைக் குண்டு போட்டுச் சுட்டிருப்பார். என்னே நீங்கள் என் ராஜேஷிடம் அழைத்துப் போங்களேன். என் காப்டன் ராஜேஷ்! அவர் வந்து இப்படிக் கூட்டம் கூடிக் கொண்டு வேடிக்கை பார்ப்பவர்களேக் கண்டால் டக் டக் என்று ஒவ்வொருவரையும் ஷுட் செய்து விடுவார். இந்தச் சாது சரியான போக்கிரி!"

கைகளேக் கட்டிக் கொண்டு ஒரு முறை சாதுவருகே அவள் சென்முள். சஜ்ஜன் அவளுடைய கைகளேப் பிடித்து அழுத்தமாக ஓர் உலுக்கு உலுக்கிக் கேட்டான்: "உங்கள் வீட்டிற்குச் செல்லலாமா?"

"அந்தக் கிழவனுடைய வீட்டிற்கா? மாட்டேன். ஒருபோதும் போக மாட்டேன். என்னே என் ராஜேஷிடம் கொண்டு சேர்த்து விடுங்கள். இப்போதே கிளம்புங்கள். இனி இங்கே நான் இருக்க மாட்டேன். உம், வாருங்கள்" அவள் சஜ்ஜனே வற்புறுத்தினுள்.

சஜ்ஜன் ஒருமுறை காவியுடை தரித்த சாதுவைப் பார்த்தான். பற்களில்லாத வாயிலும், சுருக்கம் படர்ந்த முகத்திலுந்தான் முதுமை தெரிந்தது. உடல் முழுதும் எஃகு போல் வலுவாக இருந்தது. நிறம் கறுப்பாக இருந்தாலும் தேசு பொருந்தியிருந்தது. சாதுவைப் பார்த்துவிட்டு அந்தப் பெண் சஜ்ஜனிடம் கூறினுள்: "சாதுவை ஏன் பார்க்கிறீர்கள்; அவனுல் என்னேத் தடுக்க முடியாது?" அவள் விலங்கு பூட்டப்பட்டிருந்த தன் கரங்களால் அவனே உலுக்கினுள்.

சஜ்ஜனிடம் சாது கூறினுர்: "சுவாமி! இப்போது கூட்டம் அதிகமாகி விட்டது. என்னுடன் வாருங்கள். அவளுடைய கை விலங்கை எடுத்து விடுங்கள்."

சஜ்ஜன் உடனே அவளே விடுவித்தான். சாதுவுடன் கூட்டத்தி

லிருந்து வெளியே கிளம்ப முற்பட்டான். பைத்தியக்காரப் பெண், உடனே அவனது தோளின் மீது சாய்ந்துகொண்டு கூறினாள்: "வேண்டாம்! சாதுவோடு போகாதீர்கள். அவன் உங்களையும் பித்தராக்கி விடுவான். மருந்து கொடுத்து உங்களை உடற்பயிற்சி செய்யச் சொல்லுவான். உங்களைக் கொன்றே போட்டு விடுவான்."

சாது தேநீர்க் கடைக்காரனுடைய வேலையாளரிடம் கூறினார்: "மகனே! கொஞ்சம் கவனித்துக் கொள்!"

சாதுவைப் போலீசாரிடம் ஒப்படைக்கச் செல்வதாக சஜ்ஜன் அந்தப் பெண்ணிற்குச் சொல்லிப் பார்த்தான். அவள் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தாள். சாதுவைக் கைது செய்யச் சொல்லிவிட்டு விமானத்தில் அவளை ராஜேஷிடம் அழைத்துச் செல்வதாக சஜ்ஜன் அவளுக்கு ஆறுதலளித்தான்.

கூட்டத்திலிருந்து வெளியே வந்த சாதுவும், சஜ்ஜனும் ஓரிடத்திலே பேச வந்தனர்: "சுவாமி? நான் இந்தப் பெண்ணுக்குச் சிகிச்சையளிப்பவன். நீங்கள் இவளுடைய உறவினரா?"

சஜ்ஜன் கூறினான்: "இல்லை, இவள் ஒருநாள் தெருவில் ஓடிக் கொண்டிருந்தாள். இவளைப் பிடித்துப் பத்திரமாக நான் வீடு கொண்டு சேர்த்தேன். அப்போது இவளது விவரமே தெரிய வந்தது. பாவம், இவளுடைய மாமனார்! இவளுடைய மாமனுருக்கும் நான் சொல்லியனுப்பினேன். இவள் ஓடினால் கவலைப்பட வேண்டாம் என்று சொன்னேன்—ஆனால் கௌரவம் வாய்ந்த மனிதர் பாருங்கள். நான் கூறியதை ஒப்புக் கொள்ளவில்லை. இந்தக் கூட்டத்திற்கிடையே அகப்பட்டுக் கொண்டு விட்டோம். மக்கள் தாறுமாருகப் பேசுவார்கள். இப்போது இவள் நான் சொல்வதைக் கேட்கமாட்டாள். கூட்டத்திற்கிடையே ஒரு பைத்தியக்காரப் பெண்ணை வற்புறுத்தி ஏதும் செய்ய விரும்ப மாட்டேன். இது எங்கள் சித்தாந்தத்திற்கு ஏற்றதல்ல சுவாமி, நீங்கள் ஓர் உதவி செய்வீர்களா? இவளை எப்படியாவது அறிவுறுத்தி என் ஆசிரமம் வரை கொண்டு வந்துவிட்டால் பெரிதும் உதவியாக இருக்கும்."

சஜ்ஜன் கூறினான்: "என்னிடம் வண்டி இருக்கிறது." பொக்கை வாயைத் திறந்து சிரித்தபடி சாது கூறினார்: "நீங்கள் பெரிய காரியம் செய்து விட்டீர்கள். இவளை வண்டியில் ஏற்றிச் செல்லுங்கள். நான் ஓட்டமாக ஓடி வந்து விடுகிறேன். இந்தத் தோட்டத்தைத் தாண்டியவுடன் வரும் தெருக் கோடியில் படித்துறைக்கருகே எங்கள் ஆசிரமம் இருக்கிறது."

"புரிந்துகொண்டு விட்டேன். இனிக் கஷ்டமில்லை. நீங்கள் 'ஓடி வரத் தேவையில்லை. நான் இவளை ஒரு சுற்றுச் சுற்றி

இடங்களை காண்பித்தபடி வந்து சேருகிறேன், உங்களுக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லையே!''

சாது சிரித்தார். குழந்தையின் சிரிப்புப் போன்ற களங்கமற்ற சிரிப்பு அது! கறுத்து மின்னிய கண்களில் அபாரமான அன்பு ஒளி வீசிற்று. சஜ்ஜனுக்கு அந்தச் சிரிப்பு பிடித்திருந்தது. சாது கூறினார்: ''சுவாமியின் வேலையில் நான் ஏன் இடைஞ்சலாக இருக்கப் போகிறேன்? நீங்கள் செய்வது நியாயமானதுதான். சரி, சுவாமி, நாம் ஆசிரமத்தில் சந்திப்போம்.''

காரில் அமர்ந்து கொண்டு பெண் மகிழ்ச்சியடைந்தாள். முதலில் சற்றுத் தயங்கினாள்: ''காரிலா நான் போவேன்?'' என்று கேட்டாள்: ''என் காலில் செருப்பில்லையே, இந்தப் புடவை சீ சீ! இந்தக் கிழிந்த புடவையுடன் நான் காரில் ஏற மாட்டேன்.'' நல்ல புடவையும், செருப்பும் வாங்கித் தரத்தான் காரில் அவளை ஏற்றிச் செல்வதாகக் கூறி சஜ்ஜன் அந்தப் பெண்ணை ஏற்றிக் கொண்டான். அவளும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் கிளம்பினாள். சஜ்ஜன் தான் கொடுத்த இரண்டு வாக்குகளையும் பூர்த்தி செய்தான்.

சேலையும், செருப்பும் கிடைத்ததும் ராஜேஷின் மனைவி சந்தோஷமடைந்தாள். தன் ராஜேஷிடம் அன்பு செலுத்த அவள் துடித்த துடிப்பு அவளுடைய பேச்சிலிருந்து வெளிப்பட்டது. அவனது அன்புச் செயலை நினைந்து, அது பற்றிப் பேசி அவள் திருப்தியடைந்தாள். ஆண், பெண்களின் இனிய ரகசியச் செயல்கள், அந்தப் பெண்ணுடைய காம உணர்ச்சியைக் கிளறிக் கொண்டிருந்ததைப் பார்த்த சஜ்ஜன் வேதனையடைந்தான். அவன் பற்றற்று இருக்க முயன்றான். அது சற்றுச் சிரமமாகத் தான் அவனுக்குப் பட்டது. திருப்தியடையாத உள்ளம் எப்படித் தவிப்படையும் என்பதை அவன் அறிந்து கொண்டான். அது அவனுக்குச் சற்று அச்சத்தையும் அளித்தது. மிகவும் இனிய அன்பு கலந்த இரகசியச் செயல்களைக்கூட மனிதன் எப்படித்தான் சற்றும் சங்கோசமின்றி வெளியிடத் துணிகின்றானோ! எந்த மனிதனும் பைத்தியமாக மாறலாம் எந்த நேரத்திலும் மாறலாம், இதை நினைத்து அவனது உள்ளம் வெதும்பியது. சஜ்ஜன் போன்ற கௌரவம் மிக்க மனிதன், புகழ் பெற்ற கலைஞன், அழகு ததும்பும் இளைஞன் தன் அதிருப்தியின் காரணமாக எப்போதாவது பைத்தியமாக மாறிவிட்டால்? தெய்வமே! சஜ்ஜன் நடுங்கினான். வண்டி மெடிகல் காலேஜ், பாலம், இமாம்பாடா எல்லாவற்றையும் கடந்து சென்று கொண்டிருந்தது.

படித்துறைக்கருகே விளக்குக் கம்பம் இருந்தது. அதேபோல் ஒரு சாதுவும் நேராக நின்று கொண்டிருந்தார். அவரெதிரே

வண்டி நின்றதுமே பைத்தியம் பிடித்த பெண் அலறினுள் : ''நான் போக மாட்டேன், சாதுவின் வீட்டிற்குப் போக மாட்டேன்.''

சாது வண்டிக் கதவைத் திறந்து பெண்ணின் கன்னத்தில் அறைந்தார். சேலையும், செருப்பும் வைத்திருந்த பெட்டி திறந்து கொண்டது. தான் வாங்கிய அடியையும் மறந்து சிதறிய தன் பொருட்களைப்பற்றி அந்தப் பெண் கவலைப்பட்டாள். அடியை வாங்கிக்கொண்டதும் அறிவு வந்தாற் போல் அவள் பேசாமல் இருந்து விட்டாள். சாதுவின் பிடியிலிருந்து தப்ப முயன்ற அவளிடம் அன்புடன் சாது கேட்டார்: ''இதெல்லாம் என்ன மகளே? ஏதேதோ வாங்கி வந்திருக்கிறுயே?''

அவருடைய வலுவான பிடியிலிருந்து தப்ப வீண் முயற்சி செய்து கொண்டே அவள் பதிலளித்தாள்: ''என் ராஜேஷ் எனக்காக வாங்கித்தந்தார். புடவை செருப்பு ..''

''அப்படியா?''

''இல்லாவிட்டால் வேறு யாராவது வாங்கிக் கொடுத்தால் எடுத்துக் கொள்வேனு என்ன? என் ராஜேஷ் என்ன சொன்னுர் தெரியுமா? புடவையை உடுத்திக் கொள், செருப்பைப் போட்டுக் கொள் பிறகு.''

''சரி . போ!'' என்று கூறி சாது அவளை விட்டு விட்டார். அவள் பெட்டியை வேகமாக மூடினுள்.

சாது கேட்டார்: ''இதெல்லாம் ராஜேஷ் உனக்காக வாங்கித்—தந்தாரா?''

''ஆமாம்!''

''இவர் வாங்கித் தரவில்லை?''

''இல்லை.''

''சரி; இதை கோமதி நதியில் போட்டுவிடுகிறேன்.'' சிறு குழந்தையைப் போல் பெண் பிடிவாதம் பிடித்தாள். சஜ்ஜனைப் பார்த்துப் புன்முறுவலுடன் சாது கூறினுர்: ''சுவாமி! நீங்கள் நல்ல உதவி செய்தீர்கள். சிறிது நேரம் ஆசிரமத்திற்கு வாருங்களேன்.''

தன் பொருள்களுக்காக அந்தப் பெண் பிடிவாதம் செய்து கொண்டிருந்தாள். சஜ்ஜன் சாதுவிடம் கரம் குவித்து வேண்டிக் கொண்டான்: ''பிறகு எப்போதாவது வருகிறேன். உங்களுடைய ஆசிரமத்தில் நிறையப் பைத்தியக்காரர்கள் இருக்கிறுர்களே?''

''ஆமாம் சுவாமி! எங்களைப் பைத்தியக்காரர்களின் தொண்டராக்கி விட்டீர்கள். நாமும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறும். சரி, ராஜேஷ் இவர்களுக்கு வாங்கிக் கொடுத்த பொருள்களைக் கோமதி நதியில் போட்டுவிடுகிறேன். நமஸ்தே!'' என்று கூறியபடியே, ''இந்தப் பெட்டியை எறிந்துவிடப் போகிறேன்''

என்று சொல்லி அந்தப் பெண்ணைச் சீண்டியபடியே சாது மேலே நடந்தார்.

தன் பொருளுக்காக அந்தப் பெண் சாதுவைத் துரத்திக்கொண்டு ஓடினாள். சஜ்ஜன் அவளைப் பார்த்துக்கொண்டு நின்றான். இருவரும் சிறிது நேரத்தில் படித்துறையை நோக்கிச் சென்று மறைந்து விட்டனர்.

சுய உணர்வை இழந்தவன் போல் சஜ்ஜன் தன் அறைக்கு வந்து வீழ்ந்தான். வனகன்யாவையும், தன் காம உணர்ச்சியையும் பற்றி அவன் இப்போதெல்லாம் ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கினான். முந்திய நாள் மாலை கன்யா வீடு திரும்பியபோது அவனுடைய ஆசையை இன்னும் கிளறிவிட்டுச் சென்றாள். இரவு நேரத்தில் அவன் மனம் அதிகமாகப் போராடிக் கொண்டிருந்தது. ஒரு தடவை விஸ்கியும் சோடாவும் வாங்கி வரச் சொன்னான். ஆனால் வாயினருகே கொண்டு சென்றவன் நிறுத்தி விட்டான். உள்ளம் உறுதிபூணத் துடித்தது. அந்தப் பொருள்களைக் கண்காணாமல் கொண்டு செல்லும்படி வேலையாளுக்குப் பணித்தான். இன்று காலையிலும் அவன் ஏதோ போலத்தான் இருந்தான். தன் 'சிந்தனைக் கோயிலி'லும் அவனது உள்ளம் லயிக்கவில்லை. இந்தத் தடவை தொலைவிலிருந்தே வனகன்யாவின் பேரில் சீறி விழ வேண்டும் என்று உறுதி பூண்டான். இனி அவளுடன் ஒரு விதமான தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது. எந்தப் பெண்ணிடமும் அவன் இனி நெருங்காமல் விலகித்தான் இருப்பான். தேவைப் பட்டால் தாயி குறிப்பிட்ட முன்பின் தெரியாத அந்தப் பெண்ணை மணந்துக் கொள்வான்!

சஜ்ஜன் தன் பிடிவாதம், தன்னடக்கம், அடக்கமின்மை, சந்தேகம், தீர்மானங்கள் முதலியவை நிரம்பிய பயங்கரமான கானகத்தில் சுற்றித்திரிந்து துடித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு ஒரு கணங்கூட மன நிம்மதி கிடைக்கவில்லை. அவனுடைய உள்ளந்தான் அந்தப் பைத்தியக்காரப் பெண்ணின் உருவில் வந்து அவனுடைய ஒவ்வொரு பிடிவாதத்தையும், முடிவையும், தகர்த்தெரிகிறதோ என அவன் கருதினான். ஒரு நாள் தானும் இவ்விதம் சுய உணர்வை இழந்து பித்தனாகிவிட்டால் என்ன செய்வது என்று நினைத்து அஞ்சினான். சஜ்ஜன் மிகவும் களைப்புற்றிருந்ததால், அவனுக்குத் தூக்கம் வந்துவிட்டது.

'ஹிஹி' என்றபடியே மகாகவி 'போர்' அறைக்குள் நுழைந்தான். சஜ்ஜன் தூங்கிக்கொண்டிருப்பதைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் ஜன்னல் பக்கம் பார்த்தபடி ஒரு சினிமாப்பாட்டைப் பாட ஆரம்பித்தான்:

**''உன்னைக் காணாத கண் என்ன கண்ணோ!''**

அவனுடைய பாட்டினுல் ஜன்னல் பக்கம் ஒருவிதமான மாறுதலும் ஏற்படவில்லை. விரஹேஷ் மற்றுமொரு பாடலைப் பாட ஆரம்பித்தான்:

''உன்னைக் கண்டு மயங்காத பேர்களுண்டோ!''

காதலியின் முகம் தெரியாமல் ஜன்னல் சூனியமாக இருந்தது. தோல்வியுற்ற காதலன் மூன்ருவது பாடலைத் தொடங்கினுன்:

''அமுதும் தேனும் எதற்கு...நீ
அருகினில் இருக்கையிலே எனக்கு''

தன் காதலியின் செவிகளில் படும்படி விரஹேஷ் உரக்கப்பாட ஆரம்பித்தான். சஜ்ஜனின் தூக்கம் கலைந்துவிட்டது. சஜ்ஜனுல் பொறுக்கமுடியவில்லை. தன் பொறுமையைக் கோபம் என்னும் உணர்விழந்த தன்மையில் தகர்த்தெறிந்து அவன் கத்தினுன்: ''போர்! கெட் அவுட்.''

கர்னல் அல்லது மஹிபால் இவ்விதம் நடந்துகொண்டால் விரஹேஷ் அதிசயப்படமாட்டான். ஆனுல் சஜ்ஜனிடம் அவன் இதை எதிர்பார்க்கவில்லை. சாதகப் பறவை போல் கூவிக் கொண்டிருந்த குரலை விட்டுவிட்டுக் கரங்குவித்தபடி விரஹேஷ் கேட்டுக் கொண்டான்: ''நீங்கள் தூங்குகிறீர்களா? எனக்குத் தெரியவே இல்லை.''

சஜ்ஜன் தான் அநாகரிகமாக நடந்து கொண்டது குறித்து வெட்கமடைந்தான். மற்றவர்களிடம் இப்படி வெளிப்படையாக அவன் நாகரிகமற்ற முறையில் நடந்துகொண்டது கிடையாது. போர், தன் கலையை ஆரம்பித்துவிட்டான்—போரடிக்கும் கலையைத்தான். ''நான் எனது இரண்டாவது அமரகீதம் எழுத ஆரம்பித்திருக்கிறேன். சஜ்ஜன் சாஹேப்! அதனுல்தான் 'மூடில்' என்னை மறந்து விடுகிறேன்...''

கையில் தொன்னையுடன் வாயிற்படியில் கன்யா தயங்கியபடி நின்று கொண்டிருந்தாள். அவனைக் கண்டதும் அடக்க உணர்ச்சியும் சந்திக்கும் ஆவலும் ஒருங்கே மூண்டெழுந்தன. ''ஹிஹி'' என்பதை விரஹேஷ் இப்போது கன்யாவிடம் திருப்பி விட்டான். ''ஹிஹி நீங்கள் தான் குமாரி வனகன்யா என்று நினைக்கிறேன். நீங்கள் நடித்த நாடகத்தை நான் பார்த்திருக்கிறேன். இப்போது உங்கள் புகழ் எங்கே பார்த்தாலும் பரவியிருக்கிறது. ஹிஹி! சஜ்ஜன் சாஹேப் உங்களைப் புகழின் சிகரத்தில் கொண்டு சேர்த்துவிட்டார் ஹிஹி''

கன்யா சிந்தையில் ஆழ்ந்த மன நிலையில் இருந்தாள். ''ஆமாம்'' என்று கூறிவிட்டு உள்ளே வந்தாள். உற்சாகமிழந்து காணப்பட்ட சஜ்ஜனை ஒருமுறை உற்றுப்பார்த்து விட்டுத் தொன்னையுடன், தான் கொண்டு வந்திருந்த லட்டுகளை மேஜைமீது வைத்தாள். பிறகு

அருகே வந்து "உங்கள் உடல்நிலை எப்படி இருக்கிறது?" என்று கேட்டாள்.

கன்யா உரிமையுடன் கேட்ட கேள்வி சஜ்ஜனை மந்திரம் போட்டாற்போல் சொக்கச் செய்துவிட்டது. கன்யாவின் பேரில் கொண்டிருந்த எதிர்ப்பு மனப்பான்மை நொடிப் பொழுதில் காற்றோடு காற்றாகப் பறந்து விட்டது. அவனுடைய ஆத்திரம் விரஹேஷின் மீது திரும்பியது: "விரஹேஷ்! என் உடல்நிலை சரியாக இல்லை. எனக்குத் தனிமை தேவை. தயை செய்து நீ இங்கிருந்து போய் விடு" என்று கூறியபடியே சஜ்ஜன் தலையணையில் தலையை வைத்துக்கொண்டு கண்களை மூடியபடி படுத்தான்.

கவலையுடன் கன்யா அவனைப் பார்த்தாள். இருவரையும் அர்த்த புஷ்டியுடன் விரஹேஷ் ஒரு பார்வை பார்த்தான்: "இறைவன் விரைவில் உங்களை மகிழ்விக்கட்டும். பிரிவில் வாடும் விரஹேஷ் தன் சகோதரன் சஜ்ஜனுக்கு எப்போதும் இதே வாழ்த்துக்களைத் தான் அளிப்பான்" என்று கூறிவிட்டு அவன் வெளியே வந்தான். விரஹேஷ் கிளம்பி விட்டான், என்றே இருவரும் மனநிம்மதி யடைந்தனர். ஆனால் மூத்தவனைப் பிரிந்து வாடும் கவிஞன், மறு படியும் மாடியில் போய் உட்கார்ந்துகொண்டான். சஜ்ஜன் பல்லைக் கடித்துக்கொண்டு இருந்துவிட்டான். கன்யா சஜ்ஜனைப் பார்த்தபடி உட்கார்ந்து கொண்டு, "உங்கள் மனநிலை எப்படி இருக்கிறது?" என்றாள்.

சஜ்ஜனுக்கு ஆத்திரம் வந்தது; "நான் செத்துக் கொண்டிருக் கிறேன்—உனக்கேன் கவலை?" என்றான்.

கன்யா புன்சிரிப்புடன் கூறினாள்: "நான் சஞ்சிவினி மூலிகை கொண்டு வந்திருக்கிறேன்"

கன்யா முதல் முறையாக இனிமையாகப் பேசுவதைக் கேட்டு சஜ்ஜன் திருப்தியடைந்தான். பசுமையான வயலில் காற்று வீசினால் பயிர்களுக்கு எப்படிக் குளிர்ச்சியாக இருக்குமோ, அப்படி சஜ்ஜன் மனமகிழ்வடைந்தான். பேதை உள்ளம் கடந்தவற்றையெல்லாம் மறந்து ஆனந்தக்கடலில் மூழ்கித் திளைத்தது. அவன் கூறினான்: "நான் குழந்தையாக இருந்தபோது செவிலித்தாய் எனக்கு ஒரு கதை சொல்வது வழக்கம். ஒரு வனதேவதை ஒரு ராஜகுமாரியை எடுத்துக்கொண்டு ஓடி விட்டதாம். நாள் முழுதும் ஒரு மந்திரக் கோலின் உதவியால் அவளை உயிரற்ற சடலமாக்கிக் கொண்டிருந்த தாம். இரவில் அது விளையாட விரும்பும்போதெல்லாம் அவளை உயிர்ப்பித்துவிடுமாம். விளையாட்டுக்குப் பிறகு மறுபடியும் அவளைப் பிணமாக்கி விடுமாம்"

கதையைக் கேட்டு கன்யா சிரித்தாள்.

வெளியே விரஹேஷ் பாட ஆரம்பித்தான்:

''மனங்குளிரக் கண்குளிர இளங்காற்றில் அசைந்து...
மணங்கமழும் தீங்கனிகளுமே தந்தீர்!...

கன்யா, சஜ்ஜன் இருவருக்குமே வெறுப்பாக இருந்தது. கன்யா மெதுவாகக் கேட்டாள்: ''இவர் யார்?''

''அநாகரிகமான மனிதன்! இங்கும் என்னை விட்டுத் தொலைய மாட்டான் போல் இருக்கிறது; போதும் போதுமென்றாகிவிட்டது.

விரஹேஷ்; மேல் ஸ்தாயியில் பாட ஆரம்பித்து விட்டான்.

கன்யா திடீரென்று எழுந்து கதவைத் தாழிட்டாள். பிறகு லட்டுகளை எடுத்துப் பழைய காகிதத்தின்மீது வைத்தாள் ''எனக்கு வேலை கிடைத்து விட்டது'', என்றாள்.

சஜ்ஜனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. கன்யாவிற்கு வேலை வாங்கித்தர ஏன் அவன் இதுவரை முயலவில்லை? இந்த வேலைகூட அவளுக்குக் கர்னலின் முயற்சியால் கிடைத்திருக்குமோ? ஒரு கணத்தில் அவனுடைய உள்ளத்தில் பல அதிர்ச்சிகள் உண்டாயின.

தொன்னைக்குள் ஓர் இலையில் நனைந்த குங்குமத்தைக் கன்யா வைத்திருந்தாள். அதை எடுத்து சஜ்ஜனின் நெற்றியில் இடுவதற்காக அவள் அவனருகே வந்தாள். சஜ்ஜன் அவளுடைய பரிசம் பட்டதுமே குளிர்ச்சியுற்றான். அவனுடைய சிவந்த முகத்தில் குங்குமம் மிகவும் அழகாக இருந்தது. சஜ்ஜன் உடனே அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டு மெல்லக் கூறினான்: ''கன்யா, நான் உன்னை மணக்க விரும்புகிறேன்.'' கன்யா கம்பீரமாகி விட்டாள். அவள் கையை விடுவித்துக் கொள்ள முயலவில்லை. ''இன்னும் அதற்கு நேரம் வரவில்லை'' என்று கூறினாள்! கையை மெள்ள எடுத்துக்கொண்டு தொன்னையை நீட்டி, ''ஆஞ்சனேயரின் பிரசாதம்'' என்றாள்.

தன் வார்த்தைக்குப் பதில் கேட்கும் முறையில் ''ஏன்?'' என்றான். லட்டுகளை அவன் லட்சியம் செய்யவேயில்லை.

கன்யா அமைதியாகப் பதிலளித்தாள்: ''இன்னும் நாமிருவரும் ஒருவரையொருவர் சரிவரப் புரிந்துக் கொள்ளவில்லை.''

''இது உன் எண்ணம். ஆனால் எனக்கு உன் பேரில் அன்பு உண்டு என்பது உனக்குத் தெரியும். என்னை உனக்குப் பிடிக்கும் என்று எனக்கும்—''

''இது உங்கள் எண்ணம், சரி,! லட்டை எடுத்துக்கொள்ளுங்கள். கடவுளுடைய பிரசாதத்தை எடுத்துக்கொள்ள இவ்வளவு தாமதம் செய்யக்கூடாது.''

''நீயும் எனக்குக் கடவுளின் பிரசாதத்தைப் போன்றவள், கன்யா! நான் உன்னை அடைவதில் தாமதம் செய்யவிரும்பவில்லை.'' சஜ்ஜனின் கண்களில் அதிருப்தியின் துடிப்பு ஒளி வீசிற்று.

வெளியிலிருந்து விரஹேஷின் குரல் ஒலித்தது: ''அண்ணி, நீங்கள் சஜ்ஜன் அண்ணனுக்காகத் தேநீர் தயார் செய்தால், தயை செய்து எனக்கும் ஒரு கப்!...(பிறகு பாட ஆரம்பித்தான்) "நீ இரங்காயெனில் புகலேது ..''

இந்த அநாகரிகமான பேச்சைக் கேட்டு சஜ்ஜன், கன்யா இருவருக்கும் கோபம் வந்தது. கன்யா வேகமாகக் கதவைத்திறந்து பேசினுள்: ''ஐயா! உங்களைப் போன்ற நாகரிகமற்ற மனிதரை நான் இதுவரை பார்த்ததே கிடையாது. இந்தப் பொய் உறவைப் பரப்ப உங்களுக்கு உரிமையளித்தவர் யார்?''

''தொலேகிறுன், கன்யா! உள்ளே வா'' சஜ்ஜன் உள்ளே இருந்தபடி அவளை அழைத்தான்.

மூத்தவள் ஜன்னலருகே வந்துவிட்டாள். விரஹேஷின் கண்கள் அப்படியே நின்றுவிட்டன. வனகன்யாவின் மிடுக்கானதோற்றம் அவனை நிலேகுலேயவைத்தது. கரங்குவித்தபடி அவன் கூறினுன்: ''மன்னிக்க வேண்டும், அம்மா! நான் இரண்டாவது அமரகீதம் எழுதும் 'மூடி'ல் இருந்தேன்.'' கனவில் கலங்கிய விரஹேஷின் கண்கள் மறுபடியும் ஜன்னலே நோக்கின. தன் காதலனைச் சிவந்த பெண்ணொருத்தி திட்டுவதைக்கண்டு பிரமித்து நின்றுள்,மூத்தவள். விரஹேஷின் பைத்தியக்காரத்தனத்தைக் கண்டு முகம் சுளித்தபடி கன்யா உள்ளே வந்தாள். அவள் சென்றதுமே கன்யா திறந்த கதவைத் தன்பக்கம் இழுத்து, விரஹேஷ் மூடிக்கொண்டான்.

ஒரு வழியாகத் தொல்லே ஒழிந்தது என்று அறிந்த மூத்தவள் ஜன்னலுக்கு எதிரே வந்தாள். விரஹேஷின் தாமரைமுகம் மலர்ந்தது. இருவரும் சாடையால் பேசிக் கொண்டனர். இனித் தாங்க முடியாது; சகிக்கமுடியாது, எத்தனே தொல்லேகள்! எப்போது சந்திப்போம்; உயிரையே விட்டுவிட வேண்டியதுதான் போன்ற பாவங்கள், மத்தாப்புப் போல் உதிர்ந்தன. பிறகு ஒருவருக்கொருவர் உணர்ந்துகொள்ள ஆரம்பித்தனர்: ''உங்களே ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ளுங்கள். உங்கள் நிலேமையைக் கண் கொண்டு என்னுல் பார்க்கமுடியவில்லே.'' விரஹேஷ் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்து நீட்டினுன். மூத்தவள் தன் கடிதத்தையும் காண்பித்தாள். பிறகு கையை ஆட்டிவிட்டு ஜன்னலிலிருந்து சென்றுவிட்டாள். சிறிது நேரத்தில் விரஹேஷிற்குப் பழக்கமான ஒரு பை கயிற்றின் வழியாகக் கீழே இறங்கியது. இந்தப் பையின் வாயிலாக இருவரும் இரண்டு அல்லது மூன்று முறை கடிதங்களேப் பரிமாறிக் கொண்டிருக்கின்றனர். சென்ற தடவை மூத்தவளிடம் காண்பித்துக் காண்பித்து விரஹேஷ் அந்தப் பையை முத்தமிட்டான்-தன் கடிதத்தில் கவிதையும் எழுதியிருந்தான்.

கடிதத்தை வாங்கிக் கொள்ள விரஹேஷ் படியினருகே வந்தான். அப்போது டாக்டர் சீலா ஸ்விங்கும், வர்மாவும் வந்தனர், மூத்த வளின் கடிதம் கீழே வருவதற்கும், சீலா மாடியை அடைவதற்கும் சரியாக இருந்தது. விரஹேஷின் கை அந்தக் கயிற்றை பிடித்த தோ இல்லையோ, சீலா அவனுடைய கையைப் பிடித்துவிட்டாள். விரஹேஷ் என்ன செய்வதென்று தெரியாமல் குழம்பி நின்றான்.

''இதென்ன நடக்கிறது?'' டாக்டர் சீலா உரத்த குரலில் கேட்டாள்.

மூத்தவள் வர்மாவைக் கண்டதுமே ஜன்னலிலிருந்து நடுங்கி விட்டாள். கையும்களவுமாகப் பிடிபடவே விரஹேஷ், வியர்த்து விறுவிறுத்தான். பேச்சு நின்றுவிட்டது.

டாக்டர் சீலா, விரஹேஷை அடிக்கடி பார்த்திருந்தாள். ஆனால் இதுபற்றி அவளுக்குத் தெரியாது. பையிலிருந்து காகிதத்தை அவள் எடுத்தாள். விரஹேஷிற்கு என்ன செய்வது என்று புரிய வில்லை. அழுதபடியே அவளுடைய கால்களில் விழுந்தான்: ''ஸேவ் மி! ஐ ஏம் யுவர் சர்வன்ட்! (என்னைக்காப்பாற்றுங்கள்! உங்கள் ஊழியன் நான்)'' என்றான்.

மாடிப்படியருகே ஏதோ சத்தம் கேட்கிறதே என்று சஜ்ஜன் கதவைத் திறந்தான்: ''ஹலோ சீலா!'' வர்மா பக்தியுடன் கரங்குவித்தான். தலையசைத்து சஜ்ஜன் பதிலளித்தான். விர ஹேஷைப் பார்த்துக் கேட்டான்: ''இதென்ன அமர்க்களம்?''

அழுதுகொண்டே, ''என் அமரகீதத்தை இவர்களிடமிருந்து வாங்கிக் கொடுங்களேன்!'' என்று கெஞ்சினான்.

டாக்டர் சீலா பையிலிருந்து காகிதத்தை எடுத்துப் படிக்க ஆரம்பித்தாள். கோடுபோட்ட நோட்டுப் புத்தகத்தின் நான்கு காகிதங்களின் இருபுறமும் எழுதப்பட்டிருந்த கடிதம்; அது சீலா விற்கு வேடிக்கையாக இருந்தது. இரண்டாவது வரியைப் படித்ததுமே, அவள் கலகலவென்று சிரித்தாள். சஜ்ஜனிடம் கடிதத்தைக் காண்பித்தப்படி அவள் கூறினாள்: ''இவருடைய அமரகீதத்தைப் பாருங்கள்''.

வனகன்யா வெளியேவந்தாள். சீலாவின் கவனம் அவள்மீது சென்றது; சீலா, சஜ்ஜன் இருவருடைய நெற்றியிலும் ஒரே மாதிரி பொட்டைப் பார்த்து அவள் புரிந்துகொண்டு விட்டாள். உடனே விரஹேஷையும், அவனுடைய கடிதத்தையும் மறந்து சிரித்தபடி கூறினாள்: ''ஐ ஏம் ஷ்யூர், (நிச்சயமாக) நீதானே மிஸ் வனகன்யா?''

விரஹேஷ், சஜ்ஜனிடம் தன் கடிதத்தைக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டிருந்தான். கடிதத்தை ஒரு தடவை பார்த்த துமே சஜ்ஜன் அதை மடித்துவிட்டான். கோபம் மேலிட விர

ஹேஷிடம் கூறினன். "இதற்குத்தான் இங்கு நீ வருகிருயா? நல்லவர்கள் இருக்கும் இடத்தில் வந்து என்னையும் அவமானப் படுத்தப் போகிருயா?''

இப்போது வர்மாவும் விரஹேஷை வெறுப்போடுதான் பார்த்தார். பெருமூச்சுடன் விரஹேஷ் பேசினன். ''சஜ்ஜன் சாஹப்!''

''சும்மா கிட!'' கடிந்துகொண்டு சஜ்ஜன் கூறினன்: "இனிமேல் இங்கே தலையை நீட்டினுயோ, அவ்வளவுதான்! உன்னைப் போலீசாரிடம் ஒப்படைத்து விடுவேன்! உடனே போய்விடு.''

"போய்விடுகிறேன். என் கடிதத்தைக் கொடுத்து விடுங்கள்!'' சஜ்ஜன் கடிதத்தை அவன் முகத்தின் மீது வீசி எறிந்தான். வர்மா அதை விரஹேஷிடமிருந்து பிடுங்கிக்கொண்டார். அதைக் கிழித்தபடியே கூறினர்: ''இத்துடன் போகாதே! இங்கிருந்து போய் விடு!''

பக்தனைப் போன்று சந்தித்துவந்த வர்மாவும் விரஹேஷை அவமதிக்கத் தொடங்கினர். வர்மாவைக் கடித்து விழுங்கிவிடுபவன் போல் விரஹேஷ் அவனைப் பார்க்க ஆரம்பித்தான்.

கன்யாவும் பேசிக்கொண்டே அறைக்குள் வந்தனர். கிழிந்த கடிதத்தை வர்மா தந்திரமாக தன் சட்டைப்பைக்குள் வைத்துக் கொண்டான். விரஹேஷ் சென்றுகொண்டே ஆவேசத்துடன் சஜ்ஜனைப் பார்த்துக் கூறினன்: ''ஏழைகளின் காதலைக் கூட இந்தப் பணக்காரர்களால் சகித்துக் கொள்ள முடியாது! ஜாம் ஜாம் என்று தாங்கள் மாளிகைக்குள் காதலியுடன்.''

'உர்ர்' என்று சஜ்ஜன் அவனை விழித்துப் பார்த்தான். விரஹேஷ் பேசாமல் இறங்கிச் சென்றுவிட்டான்.

வர்மா சஜ்ஜனிடம் மெதுவாகக் கூறினன். "இவனுடைய லவ் அஃபேர் (காதல் விவகாரம்) வீட்டிலுள்ள யாருடனே நடக்கிறது. அவனுடைய அண்ணனின் அறையிலிருந்து இந்தக் கடிதம் வந்திருக்கிறது. உன் பெயரே கெட்டுவிடுமப்பா!''

சஜ்ஜன் நிலைமையை நன்கு உணர்ந்து கொண்டான். "இங்கே எப்படி இவனுக்கு உறவு கிட்டிற்று என்றுதான் புரியவில்லை.''

அறைக்குள் சஜ்ஜன் நுழைந்ததுமே சீலா சிரித்தபடி கூறினள்: ''யூ ராஸ்கல் (சரியான சோதாதான்) கலையின் பெயரால் இங்கு நீங்கள் காதல் கடையைத் திறந்து வைத்திருக்கிறீர்களா?''

எல்லோரும் சிரித்தனர். சஜ்ஜன் கூறினன்: "நீயும் காதலனைத் தேடித்தான் இங்கே வந்திருக்கிருயோ? சொல். உனக்குத் தேவையான பொருளைக் கொண்டு வந்து வைக்கிறேன்!''

வர்மா இருந்ததால், அவள் விரும்பியபடி சீலாவினல் பதில் உரைக்க முடியவில்லை. அவனுடைய முதுகில் ஒரு குத்து விட்டபடி அவள் சிரித்தாள். பிறகு கூறினள்: ''இங்கு ஒரு பேஷண்

டைப் (நோயாளியை) பார்க்க வந்தேன், இவருடைய ஒய்ஃபை (மனைவியை)த்தான். உங்களைப் பற்றி இவர் குறிப்பிட்டார். சரி: இந்த நோயாளியின் நிலைமையையும் கண்டு போகலாம் என்று கிளம்பினேன். என் அதிருஷ்டத்தைப் பாருங்கள்! உங்கள் நோய்க்குக் காரணமானவரையே பார்த்து விட்டேன்!'' என்று கூறியபடி சீலா அன்புடன் கன்யாவைப் பார்த்தாள். கன்யா நாணிச்சிரித்தாள். சஜ்ஜனும் சிரித்தான்.

"இதோ லட்டு! சாப்பிடு, ஆஞ்சனேயரின் பிரசாதம்.''

சீலா, வர்மா இருவரிடமும் தொன்னையை நீட்டினான். சஜ்ஜன் சீலா கேட்பதற்குள் சஜ்ஜன் கூறினான்: ''வேலை கிடைத்து விட்டது!''

''குட் ! எங்கே?''

''நவஜீவன் எடிட்டோரியல் ஸ்டாஃபில்'' (ஆசிரியர்கள் குழுவில்) என்று கூறியபடி கன்யா கேட்டாள்: "இப்போது நீங்கள் தேநீர் அருந்துவீர்கள் இல்லையா?'''

''என்னை மன்னிக்க வேண்டும்'' கரங்குவித்தபடி வர்மா கூறினான். "ஏன்?'' சஜ்ஜன் கேட்டான்.

"கடைக்குப் போக வேண்டும். வெகுநேரமாகி விட்டது''

''சரி, சரி?''சீலா கூறினாள்: "அண்ட் தாங்க்யூ வெரிமச் ஃபார் டேகிங் சோ மச் ட்ரபிள்! (இவ்வளவு சிரமம் எடுத்துக் கொண்டதற்கு நன்றி) இன்னும் இருபத்தைந்து நாள் வரையில் ஒன்றும் இருக்காது, கவலைப்பட வேண்டாம். பிள்ளை பிறக்க வேண்டும் என்று அனுமனிடம் வேண்டிக் கொள்ளுங்கள்.''

வர்மா சிரித்தான். ''நல்ல வேளை வரட்டும். மிட்டாய் எடுத்துக்கொண்டு நாங்களே உங்கள் பங்களாவிற்கு வருவோம்'.'

''தாங்க்யூ!'' சீலா கரங்குவித்தாள். வர்மா எல்லோரையும் "நமஸ்தே'' என்று கூறி வணங்கிவிட்டுச் சென்றான். சீலா சற்றுச் சுதந்திரமாகப் பெருமூச்செறிந்தாள். பிறகு தலையணையை வைத்துக்கொண்டு சங்கோசமின்றிப் படுத்துக் கொண்டாள். 'ஸ்டவ்' வைப் பற்றவைத்துக்கொண்டிருந்த கன்யாவைப் பார்த்தபடியே சீலா சஜ்ஜனிடம் கூறினாள்: ''சஜ்ஜன் நீங்கள் அதிருஷ்டசாலிதான். இன்னும் ஒரு லட்டை எடுத்து என் வாயில் போடுங்கள். ஆனால் மிஸ் வனகன்யா கம்யூனிஸ்டு என்று மஹிபால் என்னிடம் கூறினாரே!''

"ஆமாம்! நானே உன்னிடம் கேட்கவிருந்தேன் வனகன்யா! நீ இதையெல்லாம் ஒப்புக் கொள்கிறாயா?'' சீலாவின் அருகிலேயே மற்றொரு தலையணைமீது காலைப் பரப்பிக்கொண்டு உட்கார்ந்தபடி சஜ்ஜன் கேட்டான்.

புட்டியிலிருந்த பாலைப் பாத்திரத்தில் ஊற்றி அடுப்பில் வைத்து

விட்டு ஒரு கணம் கன்யா பேசாமல் இருந்தாள். பிறகு பேசினுள். "கடவுள் இருக்கிருரா, இல்லையா என்று நான் "சீரியஸாக' (தீவிரமாக) நினைத்துப் பார்த்தது கிடையாது. அப்படியே நினைத்தாலும் எந்தத் தர்க்கத்திலும் இறைவனில்லை என்று சாதித்தது கிடையாது. நல்ல நேரங்களிலும் கெட்டநேரங்களிலும் எல்லோருக்கும் இருப்பதுபோல் அது என் உள்ளத்துக்கும் ஓர் ஆதாரமாக தான் இருக்கிறது.''

"கடவுள் தர்க்கத்தின் பொருளல்ல" சீலா கூறினுள்: "மனிதன் தன் வாழ்க்கை முழுவதிலும் தன் திறம் மிக்க செயல்களின் காரணமாகக் கடவுளைப் படைத்திருக்கிருன், என்று தான் எனக்குத் தோன்றுகிறது.''

"மஹிபாலும் அப்படியேதான் சொல்வான்.''

"நான் மஹிபால் சிந்திப்பதற்கு மாருக எப்போதாவது சிந்திப்பேன் என்ரு நீங்கள் நினைக்கிறீர்கள்?''

"க்ரேட்! இதைத்தான் அன்பு என்று சொல்லுவார்கள்?'' இதைக் கன்யாவிற்காகவே சஜ்ஜன் கூறியது போல் இருந்தது. கன்யாவின் முகத்தில் ஒரு விதமான மாறுதலும் தெரியவில்லை.

சீலா கூறினுள்: "உலகிலிருந்து, குறிப்பாக நம் நாட்டிலிருந்து கடவுள் எனப்படும் பொருளே அழிந்துவிடவேண்டும். என்ருல் இது இயலாத செயல் என்று தான் எனக்குத் தோன்றுகிறது.''

"சயின்ஸ் ஒருநாள் இதைத் தெளிவு படுத்தும். இந்த எண்ணத்தை அது உறுதிப்படுத்தும், இல்லாவிட்டால் முழுமையுடன் அந்த எண்ணத்தையே ஒழித்துக் கட்டிவிடும். இப்போது நாம் அணுயுகத்தில் அடி வைத்திருக்கிறோம் டாக்டர்! பூமியை விட்டு மற்றக் கிரகங்களுக்குச் செல்வதைப் பற்றிச் சிந்திக்கும் நாம் கடவுளின் உண்மைத் தத்துவம்வரை அடையாமலா இருந்து விடுவோம்?'' அடுப்பில் வைத்திருந்த பாலை ஒரு பார்வை பார்த்தபடியே கன்யா பேசினுள்; பால் பொங்க இன்னும் சிறிது நேரம் இருந்தது.

"அதற்குள் உலகமே முடிவுறும் நாள் வந்து விட்டால்?'' அன்புடன் கன்யாவைப் பார்த்தபடி சஜ்ஜன் கேட்டான்.

"அப்போது கடவுளை எல்லோரும் பார்த்துவிடலாம். அன்று உங்களுக்கு மாருக நான் சாட்சி கூறப் போகிறேன். சஜ்ஜன் இந்த ஆசாமி அழகான, கபடமற்ற ஒரு பெண்ணின் உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டுவிட்டார் என்று கடவுளிடம் சொல்லப் போகிறேன்.''

பால் பொங்க ஆரம்பித்துவிட்டது. சேலைத் தலைப்பால் பால் பாத்திரத்தைக் கன்யா இறக்கி வைத்தாள். கெட்டிலை தண்ணீர்

விட்டு நிரப்ப நினைத்தாள். கூஜாவிலும் தண்ணீர் இல்லை. ''கொண்டு வா, நான் நிரப்பித் தருகிறேன்.'' என்றான் சஜ்ஜன்.

''குழாய் எங்கே இருக்கிறது?''

''கீழே!''

''நீங்கள் உட்கார்ந்திருங்கள், நான் கொண்டு வருகிறேன்.''

''நீ எப்படி அங்கே போவாய்? ரெஃப்யூஜி அகதிகள் உன்னைக் கண்டு வியப்படைவார்கள்.''

கூஜாவின் கழுத்து இருவருடைய கைகளிலும் இருந்தது. இருவருடைய கண்களிலும் அன்பு கனிந்த சொந்தம் இருந்தது. மடை திறந்த அன்பு வெள்ளம் சஜ்ஜனின் உள்ளத்திலிருந்து பாய்ந்து ஓடி வந்தது, கன்யா வெட்கம் நாணம் என்னும் கதவில் அடைந்து கிடந்தாள். அந்தக் கதவின் இடைவெளி வழியாக அன்பு வெள்ளம் வழிய ஆரம்பித்தது. ''நான் என்ன பயங்கரமாகவா இருக்கிறேன்?'' என்று அவள் கேட்டாள்.

''எனக்குப் பயமாகத்தான் இருக்கிறது?'' புன்சிரிப்புடன் கூஜாவை எடுத்துக்கொண்டு சஜ்ஜன் கீழே சென்றான்.

வீணை எரிந்து கொண்டிருந்த 'ஸ்டவ்'வை அணைத்துவிட்டுக் கன்யா சீலாவினருகே அமர்ந்து கொண்டாள். சீலா அன்புடன் அவளது கையை முத்தமிட்டுக் கூறினாள் : ''நீ இவ்வளவு அழகாக இருப்பாய் என்று கனவிலும் நான் நினைக்கவில்லை. சஜ்ஜன் அதிருஷ்டசாலி; நீயுந்தான்! இனி-சட்டென்று நீங்கள் இருவரும் திருமணம் செய்துகொண்டாக வேண்டும். எனக்கு விருந்துச் சாப்பாடு கிடைக்கட்டும்!''

''இப்போது செய்து கொள்வதாக இல்லை.''

''ஏன்?''

''உங்களுக்கும் நோயாளிகளுக்குமிடையே என்ன உறவு இருக்கிறது?—விசிட்—ஃபீஸ் இவ்வளவுதானே? ஆனால் வீட்டு நோயாளிகளை நாம் இராப்பகலாகக் கவனித்து கொள்கிறோம். அவர்களுடன் உள்ள உறவு டாக்டரைவிட நெருங்கியது.''

''அதாவது திருமணம் பெரிய 'ப்ராப்ளம்' (பிரச்னை) என்கிறாய் அப்படித்தானே? காதலை 'ஸ்கூல் கோர்ஸ்' என்று நினைத்துப் பல பரீட்சைகளில் தேர்வு கண்ட பிறகு சர்டிபிகேட் பெற்றுக்கொண்டு திருமணம் செய்து கொள்கிறார்களே, அவர்களைப் போலத்தானா நீயும்? ஏன், டார்லிங்? (கண்ணே) இந்த முட்டாள்தனமான கொள்கையை நினைத்தாலே எனக்குச் சிரிப்பு வருகிறது. உன் பேரில் நம்பிக்கை கொள். இருவரும் அன்பு கொள்ளும்போது ஏன் தயக்கம்? இருவரும் படித்தவர்கள்; நாணயமானவர்கள்; வாழ்க்கை முழுதும் இந்த அன்புப் பிணைப்பு அவிழாது.''

"நான் இதை ஒப்புக்கொள்ளமாட்டேன். நீங்கள் பேசுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது!?'

''என்னை 'நீ' என்று கூப்பிடம்மா! சஜ்ஜன் சம்பந்தமாக உன்னைப் பார்ப்பதற்கு முன்னமேயே உன் பேரில் எனக்கு அன்பு உண்டு. இப்போதோ வாழ்நாள் முழுவதும் உனக்குச் சொந்தமாகி விட்டேன். உள்ளத்தின் உணர்ச்சியில் எனக்கு நம்பிக்கையுண்டு.''

கூஜாவை எடுத்துக்கொண்டு சஜ்ஜன் உள்ளே நுழைந்தான். உடனே அவனிடமிருந்து கூஜாவை வாங்கிக் கொண்டு கன்யா தேநீர் தயார் செய்வதில் முனைந்தாள். அவளுக்கு உதவி செய்யும் சாக்கில் சஜ்ஜன் அவளருகே இருந்தான்.

சீலா சஜ்ஜனிடம் கூறினாள்: ''சஜ்ஜன் ஆண், பெண் உறவிலிருந்து வாழ்வில் நான் ஒரு பாடம் கற்றுக் கொண்டிருக்கிறேன். காதல் தியரியல்ல—ப்ராக்டிஸ். (வெறும் கருத்தல்ல ; செயல் முறையின் பாற்பட்டது.) எவ்வளவுக்கெவ்வளவு அன்பு செலுத்துகிறாயோ, உறவு அவ்வளவுக்கவ்வளவு அதிகரிக்கிறது. எவ்வளவுக்கெவ்வளவு பழைய உறவோ, அவ்வளவு புதுமையும் அதில் காணப்படுகிறது. நீ சொல்வது என்ன?''

''நான் நீ சொல்வதையே ஆமோதிக்கிறேன்!'' சீலாவுக்களித்த பதிலில் சஜ்ஜன் கன்யாவுடன் பேசினான்: ''சபாஷ்! பிரமாதமான வார்த்தை சொல்லிவிட்டாயே; 'லவ் இஸ் நாட் தியரி, பட் ப்ராக்டிஸ்!''

சீலா உணர்ச்சியில் அழுந்திவிட்டாள். பிறகு கூறினாள் : ''துர்ஜன்! நேற்று வரை எந்த விஷயத்தில் நம்பிக்கை கொண்டிருந்தேனோ, அது பொய் என்று நிரூபிக்கப்பட்டுவிட்டது. பெண்ணோ ஆணோ, மனிதப்பிறவி திருமணம் செய்துகொண்டேயாக வேண்டும். இதனால் தான் விரும்பும் பெண்ணையோ, ஆணையோ தன்னருகேயே எப்போதும் வைத்துக் கொண்டிருக்க முடிகிறது. இவள் பேரில் அல்லது இவன் பேரில் உனக்குச் சட்டப்பூர்வமாக உரிமை கிடையாது என்று யாரும் சொல்லமாட்டார்கள்.''

சீலாவின் கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. சஜ்ஜன் கன்யாவின் அருகே சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கும் இல்லறத்தானைப்போல் அமர்ந்துகொண்டான். 'ஸ்டவ்' அவனுக்குச் சூரியகாந்தி மலரைப் போல் தோன்றியது. அதன் ஒளியுடன் அவன் தன் எதிர்காலத்து ஒளியையும் சேர்த்துக்கொண்டான். கன்யா அமைதியாக உட்கார்ந்துகொண்டு கெட்டிலையே பார்த்துக் கொண்டிருந்தாள். சீலா பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

சஜ்ஜன் சீலாவின் கண்ணீரைப் பார்க்கவில்லை. சீலாவைப் பார்த்துப் பிடிவாதம் பிடித்துக்கொண்டிருந்தான். ''இதோ பார், என் பக்கம் திரும்பு. எனக்குப் பதில் சொல்!''

திடீரென்று சீலா கேட்டாள்: ''துர்ஜன் லவ் கான்ஸ்பிரெஸ்ஸி (காதற் சூழ்ச்சி) ஒன்றைப் படித்தோமே, இதில் இருவரும் திரு மணம் செய்து கொண்டார்களா?''

''விரஹேஷ் பிள்ளை குட்டிக்காரன். இந்த வீட்டுப் பெண் அவனைக் காதலிக்கும் பெண்.''

''அவளும் ஒன்றும் அறியாத பெண்ணல்ல. கடிதத்தில் எழுதப் பட்டிருந்த விஷயத்திலிருந்து அது தெரிய வந்தது துர்ஜன்! நான் அவனுடைய கடிதத்தைப் படித்தது தவறு; அதை இப்போதுதான் உணருகிறேன். அப்போது எந்தப் பேய் என்னைப் பிடித்திருந்ததோ மாடிப்படி வரை வந்ததோ எல்லா வேடிக்கையையும் பார்த் தேன். சுவரிலிருந்து பை இறங்கியது, அவனைப் பார்த்து மகிழ் வடைந்த பெண்; உண்மையாகச் சொல்கிறேன். நான் அப்போது சிரித்தேன். ஆனால் எனக்கு வெறுப்பாகத்தான் இருந்தது. இது ஆபாசமான செயல் என்று எனக்குத் தெரிந்துவிட்டது.''

''உண்மையில் ஆபாசமான செயல்தான்! இந்த மனிதனை அடித் திருக்க வேண்டும்.'' ஸ்டவ்வை அணைத்துவிட்டுக் கன்யா கூறினாள்.

''ஏன்?'' அதிர்ச்சியடைந்த சீலா கேட்டாள். சஜ்ஜன் கன்யா வையே பார்த்துக் கொண்டிருந்தான்.

கோப்பைகளை எடுக்க நின்ற கன்யா கூறினாள்: ''இந்த மனிதர் கள் அன்பினால் இப்படிச் செய்யவில்லை, உடற் பசியால் ஆட்கொள் ளப்பட்டு அலைகின்றனர்.''

''இதில் தவறென்ன?'' சீலா கேட்டபடியே கன்யாவைப் பார்க் காமல் கோப்பையில் பார்வையைச் செலுத்தினாள்.

கன்யா சற்று ஆவேசத்துடன் கூறினாள்: ''தவறென்ன என்று கேட்கிறீர்கள்? இந்த உடற்பசி அரக்கத்தனமான இரண்டு உயிர் களை விழுங்கியிருக்கிறது! என் வீட்டில் நடந்த நிகழ்ச்சி இது. இந்தப் பேரவாவிற்கு அடிமையாகிய எத்தனை பெண்களின் வாழ்க்கை பாழாகியிருக்கிறது தெரியுமா?''

''இது சமுதாய அமைப்பினால் வந்தவினை, டார்லிங்! (கண்ணே) மனிதனது இயற்கையான தேவை இது. இதை ஏன் நீ குறை கூறு கிறாய்?'' கன்யா சீலாவின் இந்தப் பேச்சிற்குப் பதிலளிக்க விரும் பினாள். அதற்குள் சீலாவே தொடர்ந்து பேச ஆரம்பித்தாள்: ''பசியும் மனிதனின் இயற்கையான தேவைதானே! ஒரு குறிப் பிட்ட உணவை ருசியுடன் சாப்பிட விரும்பும் மனிதனை நீ குறை கூறலாமா?''

''டாக்டர்! நீங்கள் இதை உள்ளத்திலிருந்துதான் கூறுகிறீர்களா, அல்லது என்னைப் பரிசோதிப்பதற்காகச் சொல்கிறீர்களா?'' என்று நிதானமாகக் கன்யா கேட்டாள். அவளுடைய ஒவ்வொரு வார்த்தையும் நீறுபூத்த நெருப்புப் போல் இருந்தது. இந்த இரு

பெண்களின் பேச்சையும் கேட்டுக்கொண்டே சஜ்ஜன் பேசாமல் தேநீர் அருந்த முற்பட்டான். சஜ்ஜனுடைய கருத்தையே கன்யா கூறுவது போல் இருந்தது. சீலா கூறுவது அவனுடைய உள்ளத்தில் ஒளிந்திருந்த, நொந்துபோன கள்ளனைக் காப்பது போன்றிருந்தது. இந்த இரண்டு சிந்தனைகளின் பலமான போராட்டத்திற்கிடையே அவனுடைய சிந்தனை இயங்கிக் கொண்டிருந்தது.

கன்யாவின் இந்தக் கேள்வியினால் சீலாவும் திடுக்கிட்டாள். வறண்ட சிரிப்புடன் சமாளித்துக்கொண்டு கேள்விக்குக் கேள்வியாலேயே பதிலளித்தாள்: "உள்ளத்திலிருந்துதான் சொல்கிறதாகச் சொன்னால்?"

"அப்படியானால் என் உள்ளத்தில் உங்களுக்கு இடம் கிடையாது."

"இவ்வளவு வெறுப்பா?"

"என்னிடம் உள்ள ஒரே முதல் இதுதான்."

"இதை இழந்தது கிடையாதா?"

ஒரு முறை கன்யா சஜ்ஜனைப் பார்த்துவிட்டுக் கூறினாள்: "இதற்குப் பதில் இப்போது தரமாட்டேன்."

"அது கிடக்கட்டும். ஒன்று கேட்கிறேன், டார்லிங்(கண்ணே)! மனிதனிடம் குறைபாடுகளுடன் நாணயம் இருப்பதில்லையா? இந்த மனிதன் இங்கே வந்து ஒரு பெண்ணிடம் காதல் புரிகிறானே. வீட்டில் பெண் பிள்ளைகளிருந்தும் இவன் ஏன் அப்படிச் செய்ய வேண்டும்? வீட்டில் பத்தினிப் பெண் இருந்தும் அவள் சண்டைக்காரியாக இருக்கிறாளோ என்னவோ! பாவம் இவன் அன்பிற்காக ஏங்குகிறானோ என்னவோ..."

"அப்படியிருந்தாலும் எனக்கு அவனிடம் இரக்கம் இல்லைதான். அவன் தன் பசிக்காக ஒரு பெண்ணின் வாழ்க்கையைக் குலைக்க வந்திருக்கிறான்."

"எனக்குப் புரிந்துவிட்டது. இப்படிப்பட்ட மக்கள் பெண்களின் வாழ்வை நாசமாக்குகின்றனர் என்கிறாய், அவ்வளவுதானே? சமுதாயத்தையே மாற்றியமைத்துவிட்டால்?" "அப்போது நடத்தைக் கெட்ட செயலுக்கு இடம் இருக்காது."

சீலா அதைக் கேட்டு மௌனமாக இருந்தாள். தேநீரைக் கடைசியாக விழுங்கிவிட்டுக் கோப்பையை வைத்தாள். கன்யா வேகமாகத் தேநீரை அருந்தினாள். சஜ்ஜன் காலிக் கோப்பையைக் கையில் வைத்திருந்ததைப் பார்த்துக் கன்யா கேட்டாள்: "இன்னும் வேண்டுமா?"

சஜ்ஜன் பேசாமல் தன் கோப்பையை நீட்டினான். சீலா கூறினாள்; "சில சமயங்களில் இப்படியும் நடப்பதுண்டு—உதாரணமாக நான் திருமணமாகிக் குழந்தைகளின் தாய் என்று வைத்துக்கொள்;

எனக்கு என் கணவனிடம் அன்பும் உண்டு. சஜ்ஜனைப் போன்றவர் என் வாழ்க்கையில் வருகிறார்கள் என்று வைத்துக் கொள். அவரும் திருமணமானவர். நாங்களிருவரும் நெருங்கிய நண்பராகிவிடு கிறோம்—இந்த நிலையில் எங்கள் உடலுறவு...''

''நான் அப்போது உங்களிருவரையும் வெறுப்பேன்.'' சீலா தோல்வியுற்றுக் கூறினாள்: ''நீ பிடிவாதக்காரி, வனகன்யா! வெறுப்பு ஒரு பெரிய விஷயமில்லை. ஒரு மனிதனை அவனது குற்றங் குறையுடன் ஏற்றுக் கொள், அன்பு செய். ஆண்களோ பெண் களோ ஒரே ஒருவருடன் வாழ்க்கை நடத்தும் பண்பு கொண்டிருத் தலைவிட மனிதப் பண்பு மிகச் சிறந்தது.''

''ஹியர், ஹியர்'' கைதட்டியபடியே, பயப்படுவதுபோல் பாசாங் குடன் சஜ்ஜன் கன்யாவைப் பார்த்தான். பிறகு கூறினான்: ''நான் உனக்கு மாறாக இருக்கிறேன் என்று நினைக்காதே! எவ்வ ளவோ வேதனையும், வருத்தமும் தன் உள்ளத்தில் இருந்த போதிலும் சீலா தன் கருத்துக்களை எவ்வளவு உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்கிறாள் என்று வியப்படைகிறேன். ஆனால், உன் ஆர்வத்தை மதிக்கும் நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். சீலா, லெட் அஸ் டேக் ஹர் ஃபாதர்ஸ் கேஸ் (அவள் தகப்பனார் விஷ யத்தை எடுத்துக் கொள்ளலாம்) உன் மனிதப் பண்பு அவரையும் அன்புடன் ஏற்கத் தயாராக இருக்குமோ?''

சீலா நாற்புறத்திலிருந்தும் தாக்கப்பட்டாள். அவள் களைப் படைந்து விட்டாள். கருணையுடன் சஜ்ஜனைப் பார்த்து அவள் கூறினாள்: ''பாவச் செயலை வெறுக்கலாம். அந்தச் செயல் புரிந் தவனை அன்புடன் அணைத்துக்கொண்டு பாருங்கள். உங்கள் அன்பைப் பெறும் அவன் ஒரு நாள் திருந்தலாமல்லவா?''

''நான் உங்கள் வெற்று அஹிம்சையில் நம்பிக்கை கொள்ள மாட்டேன். உலகில் பாவத்தை ஒழிக்கவேண்டுமானால் பாவச் செயல்கள் புரிவோரையும் சீவித்தள்ளித்தான் ஆகவேண்டும்.''

கன்யாவின் ஆவேசம் நிறைந்த சொற்கள் இரண்டு பாவிகளை உலுக்கிவிட்டன. சீலா தன் உள்ளத்தை மறைத்துக் கொள்ளச் சிரித்தபடி சஜ்ஜனிடம் கூறினாள்: ''துர்ஜன் திருமணமான பிறகு இந்தப் பெண் உங்களைக் கிளியைப்போல் கூண்டில் அடைத்து வைத்துவிடுவாள், நினைவிருக்கட்டும்!''

கன்யா சிரித்தாள். ''இவரைக் கூண்டில் வைக்கவேண்டியநிலைமை வந்தால், இவரைத் திருமணமே செய்துகொள்ளமாட்டேன்!?'

''ஆனால், நீ நினைக்கும்படி சஜ்ஜன் இல்லை. நான் தீர யோசித்த பிறகுதான் இவரைத் துர்ஜன் என்று அழைக்கிறேன்.''

சஜ்ஜனுக்குச் சீலாவின் பேச்சுப் பிடிக்கவில்லை. ஆயினும் அவன் ஒன்றும் பேசவில்லை. கன்யா கூறினாள்:

"நேற்றுவரை நீங்கள் இவரைப் பார்த்திருக்கிறீர்கள், நான் இன்றிலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறேன். இவரது கடந்த காலத்தை நான் பார்க்க விரும்பவில்லே. ஆனுல் வருங்காலத்தில் இவருடைய நடத்தையில் ஏதாவது விபரீதமாகப் பார்த்தால்..." தன் ஆவேசத்தை மிகவும் சிரமப்பட்டு நிறுத்திக் கொண்ட கன்யாவின் முகத்தில் அந்தக் குளிரிலும் வியர்வைத் துளிகள் காணப்பட்டன.

சஜ்ஜன் அவளேக் கண்டு நடுங்கினுன்.

சீலா தன் தலேயைத் தாழ்த்திக்கொண்டாள். கன்யாவை நிமிர்ந்து பார்க்க விரும்பியபோதிலும் அவளிடம் அவ்வளவு தெம்பு இருக்கவில்லே.

உரையாடல் இத்துடன் முடிந்துவிட்டது.

# 21

இன்று நாள் முழுவதும் கன்யாவுடனிருந்து சஜ்ஜன் பெரிதும் போராட நேர்ந்தது. அவனுக்கு அவளிடம் பயமுண்டாயிற்று. பயம் அதிகரிக்க அதிகரிக்க அவளுடைய மோஹவலேயும் அவனுடைய உள்ளத்தில் வந்து விழுந்துவிட்டது. சீலா சென்ற பிறகு அவளிடம் அவன் கேட்டான்: "என்னிடம் குறையைக் கண்டால் நீ என்ன செய்வாய், கன்யா?"

"அண்ணியைப்போல் தீப்பற்றிக்கொண்டு எரிந்து விடுவேன்." சஜ்ஜன் நடுங்கிப் போனுன். தழுதழுத்தக் குரலில் கேட்டான், "நீ சரியான பைத்தியந்தான்!"

கன்யா கூறினுள்: "பிறருடைய குற்றங்களேக் கண்டு அவர்களுடன் போராடுவதோ அவர்களேவிட்டு விலகுவதோ எனக்கு எளிதான காரியம். ஆனுல் உங்களேப் பொறுத்தவரையில் என்னிடம் வேறு ஓர் உபாயமும் கிடையாது!"

"ஆனுல் நம் திருமணம் நடக்கவில்லே, நம் உறவு முறிந்து விட்டது, என்று நினேத்துக்கொள், அப்போது?"

"திருமணம் நடக்காமல் இருக்கலாம்; ஆனுல் உறவு முறிந்து விடுமா என்ன?" கன்யாவின் பேச்சு சஜ்ஜனுக்குப் புதிர் போன்று இருந்தது. கண்களில் அமுதத்தைப் பொழியும் ஒளியுடன் சிரித்தபடி கன்யா கூறினுள்: "உறவை ஏற்படுத்திக் கொண்டவள் நான்; அதற்கு நீங்கள் உருவம் அளித்திருக்கலாம்; அது வேறு விஷயம். அந்த உருவத்தைக் காப்பது உங்களிடம் இருக்கிறது; ஆனுல் உறவைக் காப்பது என்னுல்தான் முடியும், உங்களால் முடியாது!"

அதன் பிறகு நாள் முழுவதும் கன்யா அவன்மீது ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தாள். பிறகு அவனுடன் கர்னலின் வீட்டிற்கு வந்தாள். மதுராவினின்று வந்திருந்த ஆசாமியுடன் வக்கீலைக் காணச் சென்றாள். மாஜிஸ்டிரேட்டிடம் சென்று காலஞ் சென்ற தன் அண்ணியின் கடிதத்தைக் கொடுத்தாள். இதுபற்றித் தாம் விசாரணை நடத்துவதாக மாஜிஸ்டிரேட் உறுதியளித்தார்.

அங்கிருந்து கிளம்பிய கர்னல், கன்யாவை விருந்தாளியுடன் அவருக்கு வேண்டிய சாமான்களை வாங்க உதவி செய்யும்படி கூறினான். கன்யா சென்று விட்டாள். சஜ்ஜனுக்கு நல்ல ஓய்வு கிடைத்தது. இனி கன்யா தன் வாழ்வினின்றும் ஒருபோதும் விலக மாட்டாள், என்று நிச்சயமாக அவன் உணர்ந்து கொண்டான். தன்னை அங்குசமாய் வைத்துக்கொண்டு நடத்துவாள் என்றும் அவன் தெரிந்துகொண்டான்—இதை நினைத்துத்தான் அவன் அமைதி குலைந்து காணப்பட்டான். காட்டு மனிதனைப் பிடித்து ஓரிடத்தில் கட்டினாற்போல் அவனது உள்ளம் தவித்தது. புரட்சிகரமான எண்ணங்கள் அவனுடைய உள்ளத்தில் தோன்றின. அந்த எண்ணங்களை நினைத்துத் தன்னையே நினைத்து அவன் அஞ்சினான். தனக்குப் பைத்தியம் பிடித்துவிடப் போகிறதே என அவன் அஞ்சினான்.

சஜ்ஜனுடைய கார் கோமதி நதிக்கரையில், அந்தச் சாதுவின் ஆசிரமத்திற்கருகே சென்று நின்றது. அந்த இடம் விசித்திரமாகத் தோன்றிற்று. திறந்தவெளி மண்டபத்தில் நெருக்கமாகப் பத்துக் கட்டில்கள் போடப்பட்டிருந்தன. எதிரே வைக்கோல் கூரை போட்டகுடில்; அங்கே காஷாய உடைதரித்த மூன்று இளைஞர்கள் சமையல் செய்துகொண்டிருந்தனர். பெண் நோயாளிகளைத் தவிர மற்ற நோயாளிகளனைவரும் காவியுடை தரித்திருந்தனர். எல்லோருடைய தலைகளும் மொட்டையாக இருந்தன. மற்றும் ஓர் ஓரத்தில் இயந்திரம் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. வயது முதிர்ந்த சாது கம்பளி 'ஸ்வெட்டர்' அணிந்திருந்தார். காதுகளைச் சவுக்கத்தால் மூடிக்கொண்டிருந்தார். அவர் அருகே இருந்தவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார். ஒரு மார்வாடி இளைஞன் மண்டபத்தில் அமர்ந்தபடி கீதை, புராணங்களினின்றும் மேற்கோள்கள் எடுத்துக் காண்பித்தபடி இவ்வுலகைச் சாரமற்றது என்று நிரூபித்துக் கொண்டிருந்தான். தன் எதிரே ஆயிரக்கணக்கான பக்தர்கள் அமர்ந்து கேட்டுக் கொண்டிருப்பதுபோல் அவன் உரக்கக் கத்திப் பிரவசனம் செய்துகொண்டிருந்தான். ஒரு வங்காளி தன் நண்பனிடம் தன்னைப் பற்றியே புகழ்ந்து பேசிக் கொண்டு பரவசம் அடைந்தான். ஒரு பயில்வானை மண்டபத்துத் தூணில் கட்டி வைத்திருந்தார்கள். அவன் தன்னை விடுவித்துக்

கொள்ள முயன்று, பயனில்லாமல் போகவே எதிரேயிருந்த சாதுவைக் கண்டபடித் திட்டினன்; குஸ்திச் சண்டைக்கும் அழைத்தான். மற்ருெரு தூணில் கட்டப்பட்டிருந்த காட்டு மனிதன் ஒருவன் பயில்வானுடன் சேர்ந்துகொண்டு சாதுவைத் திட்டிக் கொண்டிருந்தான்: "இந்தச் சாது பாகிஸ்தான் ஏஜெண்டு. தினமும் இரவு நேரத்தில் ஆகாய விமானம் வருகிறது. என் இரண்டரை லட்சத்தையும் இவன்தான் எடுத்துச் சென்ருன். இன்று ராத்திரி வேளையில் இவனைக் கொன்றுவிட்டு நாங்கள் விமானத்தில் பறந்தோடிப் போய்விடுவோம். பேசாமல் இரு!" ஒரு மெலிந்த சிந்தி இளைஞன் தன் கட்டிலில் உட்கார்ந்துகொண்டு யோக சாதனையில் மூழ்கிக் கிடந்தான். இரண்டு பெண்கள் வாளி நிரம்ப நீர் கொண்டு வந்தனர். காப்டன் ராஜேஷின் மனைவி தூங்கிக்கொண்டிருந்தாள். அவளுடைய தலையும் மொட்டையடிக் கப்பட்டிருந்தது.

இத்தனைவிதமான கத்தல்களுக்கிடையே வந்தவருடன் சாது பேசிக் கொண்டிருந்தார். சஜ்ஜன் நுழைந்ததும், அவனையே எதிர்பார்த்துக் காத்திருப்பவர்போல் அவனை எழுந்திருந்து வரவேற்ருர்.

"உங்களைக் கண்டது கோடிப் பொன் கிடைத்த மகிழ்ச்சி, சுவாமி!" என்றும் கூறினர் சாது. அருகில் அமர்ந்திருந்தவர் களிடம் சொன்னர்: "இவர்தான் எனக்கு உதவினர். எப்படியோ அவளை வழிக்குக் கொண்டு வந்து இங்கு சேர்த்துவிட்டார்."

எதிரே அமர்ந்திருந்த பண்டிதர் கூறினர்: "பரோபகாரிகளுக்குக் குறைவில்லை, மகாராஜ்! உங்களைப் போன்ற மகாத்மாக்களால் தான் உலகம் நிலைத்திருக்கிறது. கடைத் தெருவில் ஒருத்தன் அந்தப் பெண் சொல்வது உண்மையாக இருக்கலாம் என்று கூறி விட்டான்; ஆனல் மகாத்மாக்கள் எப்படிப்பட்டவர்கள் என்று எங்களுக்குத் தெரியாதா என்ன?"

"நான் தொண்டன்தான் சுவாமி, சாதுமில்லை, மகாத்மாவு மில்லை! என் குரு எனக்கு இரண்டே விஷயங்கள் உபதேசித்திருக் கிருர். அதையே குருதட்சிணையாகப் பெற்றுக்கொண்டார். தம் உருவில்தான் மக்களனைவரும் இருக்கின்றனர் என்று கருதி உலகிற்குத் தொண்டாற்று; தொண்டாற்றும்போது ஏதாவது தவறு நேராத வண்ணம் இருக்க, இறக்கும் வரையில் காவியுடையே தரித்திரு என்ருர் என் குரு. எனக்கு இவை இரண்டுதான் தெரியும், சுவாமி!"

வாயில் உமிழ் நீரை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்த சிந்தி இளைஞன் திடீரென்று வாந்தி எடுத்துவிட்டான். தரை அழுக் கடைந்து விட்டது; அவனுடைய உடையும் கெட்டுவிட்டது.

"சீ சீ! இதென்ன ராம்!" என்று கூறியபடி சாது வேகமாக எழுந்தார். சாதுவின் சுறுசுறுப்பைக் கவனித்துக்கொண்டிருந்த சஜ்ஜனுடைய உள்ளத்தில் பைத்தியக்காரர் விடுதியின் சூழ்நிலை சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது!

விசித்திரமான காட்சிதான் இது! ஒரு வீட்டில் ஒரு பைத்தியம் இருந்தால்போதும்; சமாளிப்பது கடினமாகிவிடும். வீட்டிலுள்ள எல்லோருடைய மண்டைகளும் கவலை என்னும் முள்ளில் சிக்கிக் கொண்டு தவிக்கும். இங்குள்ள பத்துப் பதினைந்து பைத்தியக் காரர்களுடன் மன்றாடிவிட்டு அவர்களுடைய அடிதடிச் சண்டை, கூக்குரல்கள், பிதற்றல்கள் எல்லாவற்றையும் சமாளித்துவிட்டு வந்து உட்காரும்போது கவலையே இல்லாதவரைப் போல் சிரித்த முகத்துடன் இந்தச் சாது காட்சியளிக்கிறார்!

"உங்களுக்கு என்ன வேண்டும்! எது வேண்டுமானாலும், கொண்டுவர ஏற்பாடு செய்கிறேன், சுவாமி!"

"உங்கள் கிருபையொன்றுதான் எனக்கு வேண்டும்!"

"தேநீர் அருந்தலாமல்லவா? ஆசிரமத்திற்கு வந்து எங்கள் சேவையைப் பெற்றுக் கொள்ளாமலிருப்பதா!"

"நாங்களல்லவா உங்களுக்குச் சேவை புரியவேண்டும்!"

"ஒவ்வொரு மனிதனும் செய்யவேண்டிய கடமை அது. சுவாமி...ராமசங்கர்! தேநீர் தயார் செய், மகனே லவங்கம், ஏலக்காய், எல்லாம் போடு! ஒரு சிறிதாவது பிறருக்குத் தொண்டாற்றும் எண்ணம் மனத்தில் இருந்தால் மனிதன் ஒருபோதும் தவறான வழியில் செல்லமாட்டான். வழிதவறிச் செல்லும் அறிவை அவனால் தடுத்து நிறுத்திவிட முடியும்."

"நீங்கள் கூறுவதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை."

"உண்மையான தொண்டன் எப்போதும் அமைதியாகவும், விழிப்புடனும் இருப்பான். தான் தவறாக நடந்துகொண்ட போதிலும், தன் பிழையை அறிந்துகொண்டு விடுவான். இது தான் அதன் ரகசியம்.

சஜ்ஜனுக்கு அந்தப் பேச்சு ரசிக்கவில்லை; அவன் கூறினான்: "நீங்கள் ஏன் தொண்டாற்றுவதை வற்புறுத்துகிறீர்கள். மனிதன் தனக்குத் தானே தலைவனாக ஏன் இருக்கக்கூடாது?"

சாது சிரித்தார்: "பிறகு கூறினார்: ஒரே ஒரு விஷயம் கேளுங்கள், சுவாமி. என் பூர்வாசிரமத்தில் நான் மோட்டார் மெக்கானிக் காக இருந்தேன். முடிவில் அதை விட்டு விட்டு விந்தியாசலம் வந்து சேர்ந்தேன். திரி குடியில் தியானம் செய்தேன். அன்ன ஆகாரமின்றி இருந்தேன். என்னென்னவோ செய்தேன். அங்கு ஒரு மகாத்மாவைப் பார்த்தேன். கடமையை விட்டு விட்டு இங்கு வந்து என்ன பொய் வேஷம் போடுகிறாய் என்று கேட்டார்.

போய் மக்களுக்குச் சேவை செய் என்றார். நான் என்ன செய்வேன்? யாரை குரு என்று கருதி விட்டோமோ, அவர் சொல்வதைக் கேட்கத்தானே வேண்டும்? அதாவது, தன் கடமையைச் சரிவரச் செய்யாமல் யாராலும் தனக்குத்தான் எஜமானனாக முடியாது! என்னை நான் தொண்டன் என்று கருதுவதில்தான் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது சுவாமி!''

சஜ்ஜனுக்கு சாதுவின் வார்த்தைகள் குழப்பத்தை அளித்தன; ஆயினும் அவரது தோற்றம் அவனைக் கவர்ந்துவிட்டது. சேவை தொண்டு புரியும் அவரது விரதத்தை ஒப்புக் கொள்ளாவிட்டாலும், சாதுவின் கவர்ச்சிகரமான தோற்றத்திற்குக் காரணம் அவருடைய தொண்டாற்றும் தன்மைதான் என்று கருதினான். 'நான்—சஜ்ஜன் வர்மா—சாது—சந்நியாசிகளிடம் ஏன் செல்ல வேண்டும்? சேவையின் பெருமையே ஏசு, விவேகானந்தர், காந்தி போன்ற மகான்களின் காரணமாகத்தான் அதிகரித்திருக்கிறது. ஆனால் சேவை புரிதல் என்பது மிகவும் கடினமான விரதம். சேவை . ?' சஜ்ஜனுடைய மனதில் தன் நான்கு வேலையாட்கள், டிரைவர், பூஜை செய்பவர், தோட்டக்காரன், சமையற்காரன், குமாஸ்தா, திவான் முதலிய தொண்டர் குழாம் வந்து நின்றது. ஒரு மனிதன் பலருடைய தொண்டைப் பெற உரிமை பெற்றிருக்கிறான். சேவகர்கள் "சாமி, ஐயா, அம்மா, சார்'' என்று பலவிதமாக அழைக்க, அவன் அவர்களைத் தாழ்ந்தவராகக் கருதுகிறான். அவர்களைத் திட்டவும் உரிமை இருக்கிறது அவனுக்கு; அப்படிப் பட்ட மனிதன் தொண்டாற்றும் லட்சியத்தை புத்தர் போல் மோந்து மகிழ்வுறலாமே தவிர 'சேவை' என்னும் மலரைத் தன் கையில் எடுத்து அதன் மணத்தை மகிழக் கொடுத்து வைத்தவனல்லன். சஜ்ஜன் தன் நிலைமையை நினைத்து மகிழவில்லை; அலுப்படைந்தான். தன் காம உணர்ச்சியால் தளர்ந்து கிடக்கும் அவன், தான் கூறும் லட்சிய வார்த்தைப்படியே நடக்க இயலாதவனாக இருந்தான். அந்த அளவிற்கு அவனுடைய உள்ளத்தில் தெம்பு கிடையாது. அவன் எவ்வளவு கடையன்? முப்பத்திரண்டு ஆண்டுகள் கழிந்துவிட்டன. இன்னும் அவன் தன்னைத் தானே உணர்ந்துகொள்ளவில்லை. இதுவரை எவ்வளவு பிரமாதமாக நாணயத்துடன் தன் உள்ளத்தில் இருக்கும் மாறான தத்துவங்களை மூட்டை கட்டி வைத்துக்கொண்டு ஒரு குழப்பமுமின்றிக் காலத்தைக் கழித்து வந்திருக்கிறான். இஷ்டப்படி செய்வது, மனம் போன போக்கில் போவது, அவனுடைய உணர்வு அவனுடைய சொந்த ஆசைகளையே சவுக்கால் அடிக்கிறது! 'நான் மிகவும் கெட்டவனா என்ன? இதுவரை நான் செய்ததெல்லாம் கெட்டவைதானா?'

''ஒரு தவறும் நடந்து விடவில்லை, சுவாமி! முதலில் தவறு புரிந்துதான் மனிதன் திருந்துகிறான். என்னைப்பற்றி உங்களுக்குச் சொன்னால் இது சரிவர விளங்கும்.''

தனக்குள் விழுந்து கொண்டிருந்த கேள்விக்குத் திடீரென்று சாது விடையளிக்க முற்பட்டதைக் கண்டு சஜ்ஜன் திடுக்கிட்டான். சாது தமது கதையைக் கூற ஆரம்பித்தார்: ''நான் மோட்டார் மெக்கானிக்காக இருந்தேன். அப்போது அந்த இடத்தில் மோட்டார் புதிதாக ஓட்ட ஆரம்பித்த காலம், மேஸ்திரிகள் அதிகமாக இல்லாததால், அவர்களுக்கு அங்கே அதிக கிராக்கியிலிருந்தது. வெள்ளையர் 'பக்ஷிஸ்' நிறையத் தருவார்கள். என் வரும்படி மொத்தம் இருநூற்றைம்பதுவரை இருந்தது. கிராமத்துப் பையனாயிற்றே நான்? இந்த வரும்படியைப் பெற்று மிகவும் கர்வம் அடைந்தேன். ஐம்பது அல்லது ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு இருநூற்றைம்பது ரூபாய்க்கு மதிப்பு அதிகமாகியிருந்தது. பணம் சம்பாதிக்கும் பெருமையில் கோட்டுப் போட்டுக் கொண்டேன். மது அருந்தினேன். தயிர், பால், வெண்ணெய் திரட்டுப் பால் எல்லாம் சாப்பிட்டேன். நூறு அல்லது நூற்றிருபத்தைந்து ரூபாய் மாதந்தோறும் தந்தைக்கு அனுப்பினேன். நானும் தின்று கொழுத்திருந்தேன். இரண்டு விஷயங்கள் என்னிடம் குறிப்பிடத் தக்கவை. என் கடமையை நான் ஒழுங்காகச் செய்து வந்தேன். காவியுடை என்றால் எனக்குப் பிடிக்காது. கட்டுறுதியுள்ள உடல், நல்ல வரும்படி எவரையும் லட்சியம் செய்யாமல் நடந்தேன். ஒருநாள் ஓர் ஆசாமி என் பேரில் ஒரு பெரிய குற்றத்தைச் சாட்டி விட்டான். எஜமானருடைய காசை நான் கள்ளத்தனமாகச் சாப்பிடுவதாக, அவன் புகார் செய்தான். இந்த அபாண்டமான பழியைக் கேட்டதும் எனக்குச் சொல்லொணாக் கோபம் வந்தது. ஒரு மோட்டார் 'லாரி'யை நான் அப்போது பழுது பார்த்துக் கொண்டிருந்தேன். மாலை நேரம் 'டெஸ்டிங்' செய்வதைச் சாக்காகக் கொண்டு கிளம்பினேன். அன்று 'பாங்க்' போதைப் பொருள் வேறு அதிகமாகப் போட்டிருந்தேன். போதை அதிகமாக ஏறியிருந்தது. வேகமாக அந்த ஆசாமி படுத்திருந்த 'புட்பாத்' சென்று காரில் அவனைக் கட்டிலுடன் அரைத்து விட்டு வந்தேன். என் எஜமானன் வெள்ளையன். அவனிடம் சென்று நடந்தவற்றை ஒளிக்காமல் கூறிவிட்டேன். என் சுபாவத்தை அவன் மெச்சினான். 'போனால் போகிறது! நீ உண்மையை ஒளிக்காமல் சொல்லிவிட்டாய், அதனால் உன்னைக் காப்பாற்றி விடுகிறேன்' என்றான். எஜமானன் 'நான் கொலைகாரனை வேலைக்கு வைத்துக்கொள்வதில்லை. ஆனால் நீ பயப்படாதே உன்னை வேலையிலிருந்து நீக்க மாட்டேன்?' என்றான் சுவாமி! எதற்குச் சொல்ல

வந்தேன் தெரியுமா? தன் குற்றத்தின் காரணமாகவே அநுபவம் பெற்று மனிதன் விழிப்புடன் இருக்க முயன்ருல் நல்லவனுகி விடுகிருன். நல்ல செயல் புரியச் சக்தியை பெற்றுவிடுகிருன்.''

சஜ்ஜனுடைய மனம் வேகமாகச் சிந்தித்தது. கொடுமையான கொலேகாரன், தொண்டாற்றும் அன்புருவம் சாதுவின் இந்த இரண்டு இயல்புகளும் அவனெதிரே வந்தன. அவரிடம் அவனுல் சிரத்தையாக இருக்கவும் முடியவில்லே; அவரை அலட்சியம் செய்யவும் முடியவில்லே. இந்தக் குழப்ப நிலேயில் அவன் தவித்துக் கொண்டிருக்கையில் சாது கூறினுர் ; ''சிக்கலே அதிகமாக்கிக் கொண்டால் அது அதிகரிக்கும். குறைத்துக் கொண்டால் மெள்ள மெள்ளக் குறைந்துவிடும்.''

சஜ்ஜன் மறுபடியும் குழப்பம் அடைந்தான்: சாது சிரித்தார். பிறகு கூறினுர் :' 'வியப்படையத் தேவையில்லே, சுவாமி.'' அவனவன் கருமத்துக்கேற்ற பலனேத்தான் மனிதன் பெற முடியும் என்று பெரியோர் கூறி வைத்தது உண்மை.

உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்த சஜ்ஜனுக்கு அயர்ந்து தூக்கம் வந்தது. அவனுடைய சிந்தனேச் சக்தி சிதற ஆரம்பித்தது. சாதுவின் அன்பு கலந்த கருவிழிகள் அவனுடைய உள்ளத்து ஒவ்வொரு மூலேயையும் தேடித் துழாவுகின்றன என்பதைத் திடீரென அவன் உணர்ந்தான். அவருக்கு எல்லாமே தெரிந்து விட்டதோ என்று அவன் நினேத்தான். சாதுவின் அன்பு கலந்த கூரிய பார்வை அவன் பேரில் விழுந்தது. தான் விண்வெளியையும் தாண்டி ஒடுவது போலவும் அவன் உணர்ந்தான். சஜ்ஜனின் அகந்தை தோல்வியுற்ற போதிலும் தோல்வியை ஒப்புக் கொள்ள மறுத்துவிட்டது. ஆனுல் அந்த மறுப்புக்கு அவனுல் சக்தியளிக்க முடியவில்லே. அவனுடைய சிந்தனேச் சக்தி சிதறிக் கொண்டிருந்தது. அவனுக்கு உட்கார்ந்தபடியே ஆழ்ந்த தூக்கம் வந்தது. ஒரு முறை, இருமுறை, கண்களே நிமிர்த்தக்கூட முடியவில்லே. சஜ்ஜன் அமைதியிழந்து விட்டான். வாசனே கமகமவென்று வீசிய தேநீர் தக்க தருணத்தில் அவனுக்கு முன் கொண்டு வைக்கப் பட்டது.

## 22

சாதுவின் ஆசிரமத்திலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த சஜ்ஜன், சத்தர் மன்ஸில் என்னும் இடத்துக்கருகே மஹிபால் நடந்து செல்வதைப் பார்த்தான். அவன் வண்டியை நிறுத்தி மஹிபாலேக் கூப்பிட்டான். மஹிபாலின் முகம் வருத்தத்தால்

மிகவும் வாடியிருந்தது. வண்டியில் அமர்ந்தபடி கூறினான்: ''நல்ல வேளை நீ வந்தாய்! என்னைச் சீலாவின் வீட்டில் விட்டு விடு.'' சென்று கொண்டே மஹிபால் தனக்கும் சீலாவிற்கு மிடையே உள்ள உறவு பற்றிக் குறிப்பிட்டான். கூடவே சஜ்ஜன் கன்யா இருவருடைய அன்பையும் பற்றிப் பேசினான். சஜ்ஜன் இடைமறித்துக் கூறினான்: ''சீலாவை நான் மதிக்கிறேன் ஆனால் சீலாவிற்கு இணையாகக் கன்யாவைச் சொல்ல நான் தயா ராக இல்லை. என் தாயைத் தவிர மற்ற எல்லாப் பெண்களையும் விடத் தன் உறுதியான உள்ளத்தில் கன்யா இணையற்றவள். அவளை நான் மிகவும் அருகில் இருந்தபடி கவனித்து வருகிறேன்.''

''உறுதியான உள்ளத்தில் என் மனைவிகூட யாருக்கும் குறைந் தவளல்ல சஜ்ஜன்.''

''அப்படியானால், அவர்களை, விட்டு விடு சீலா—''

''சீலா எனக்குப் போதை போல் தேவைப்படுகிறாள். சாதா ரணமான போதைப் பொருளுக்கு நான் அடிமை இல்லை. அவற்றை அநுபவிக்கிறேன்; அவ்வளவுதான்! ஆனால் சீலா சாதாரண போதைப் பொருளல்ல; அவளுடன் என் ஆத்மா தொடர்பு கொண்டிருக்கிறது; சஜ்ஜன் நான் பொய் பேசவில்லை. என் சலிப் படைந்த வாழ்க்கையோடு இரவு பகலாக நான் எவ்விதம் போராடு கிறேன் என்பதை உன்னால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடி யாது. காயமடைந்து சலிப்புற்ற என் அகந்தைக்குச் சீலா ஆதாரமளிப்பவள். அவளைத் தவிர எனக்கு ஆறுதலளிப்பவன் கர்னல் ஒருவன்தான். தவறாக நினைக்காதே! சஜ்ஜன், கர்னலைப் போல் நீ இல்லை. உள்ளத்திற்குச் சுமையளிப்பவனாகத்தான் நீ என்னைப் பொறுத்தவரையில் நடந்து கொள்கிறாய்.''

சஜ்ஜன் கூறினான்: ''இருக்கலாம். என்னை விடக் கர்னலைச் சிறந்தவனாகக் கருதுகிறாயே, அதே போல் உன் மனைவியை விடச் சீலாவைச் சிறந்தவளாக உன்னால் எண்ண முடியுமா?''

மஹிபாலினால் ஒரு பதிலும் அளிக்க இயலவில்லை. சஜ்ஜன் சற்று ஆவேசத்துடன் மறுபடியும் பேசலானான்: ''என் உள்ளத் தைப்பற்றி எனக்குத் தெரியாது. இப்போது நான் அமைதி குலைந்திருப்பது போல் எப்போதுமே இருந்தது கிடையாது. கன்யாவைப் போன்ற உணர்ச்சி வசப்பட்ட பெண்ணுடன் என் வாழ்க்கை நிம்மதியாகக் கழியாதோ என்று கூட நினைக்கிறேன்,''

''கல்யாணி எனக்குப் பிரச்னையாகி விட்டாள் பார், அதே போலத்தான்—''

''இந்தப் பத்தரை மாற்றுத்தங்கத்துடன் என் உள்ளம் என்னும் வைரம் ஆழப்பதிக்கப்படாவிட்டால் என் வாழ்க்கையே வீண் தான், என்றும் நினைக்கத் தோன்றுகிறது. என் பலவீனங்களைக்

களைந்தெறியவே கன்யா வந்திருக்கிறளோ என்று கூட எண்ணு கிறேன். இந்த இரண்டிற்குமிடையே பெரிய போராட்டம் நடக்கிறது. என் இயற்கையான பலவீனங்களை நான் விரும்பாமற் போனாலும் என்னைக் கட்டி இழுக்கின்றன. பட் ஐ நோ, (ஆனால் எனக்குத் தெரியும்) முடிவில் என் பலவீனங்கள் கன்யாவின் சிரத்தைக்கெதிரே அடிபணிந்துவிடும்''

சஜ்ஜனின் வார்த்தைகளைக் கேட்ட மஹிபாலுக்குத் தன்னால் அப்படிச் செய்யமுடியாது என்று தோன்றிற்று. கல்யாணியுடன் வாழ்க்கை நடத்திய போதிலும் அவனால் சீலாவைத் துறப்ப தென்பது இயலாத காரியம்.

சஜ்ஜனிடமிருந்து விடை பெற்றுச் சென்ற மஹிபால் சீலாவின் மார்பில் சாய்ந்துகொண்டு அவளிடம் கூறினான்: ''என் பலவீனமே! என்னை விட்டு நீ என்றுமே பிரிந்து விடாதே''

அவனுடைய தலையைத் தடவிக் கொண்டபடி சீலா கூறினாள்: ''விட்டு விடுவதைப் பற்றிய எண்ணமே ஏன் உங்கள் உள்ளத்தில் தோன்ற வேண்டும்? சிறிது கெட்ட பெயர் வந்ததுமே நீங்கள் பயப்பட ஆரம்பித்து விட்டீர்களே?''

''கெட்ட பெயரைக் கண்டு அஞ்சவில்லை, சீலா, நீ தவறாக நடந்து கொள்கிறாய்; நீ யாருடைய உரிமையையோ பறிக்கப்பார்க்கிறாய் என்று என் உள்ளத்திலிருக்கும் பரம்பொருள் என்னிடம் கூறுகிறது. அதைக் கண்டு தான் நான் பயப்படுகிறேன்.''

''நான் அப்படி நினைக்கமாட்டேன். உரிமை பறிபோவதைப் பற்றி நீங்கள் கூறுகிறீர்களே; அதற்கு நான் முக்கியத்துவமே அளிக்கமாட்டேன். நாமிருவரும் நம் ஆத்மாவின் தேவையைப் பூர்த்தி செய்துகொள்கிறோம். இது எல்லோருக்கும் பிறவியி லிருந்தே கிடைத்த உரிமை. நான், நம் இருவரின் உறவையும் பாவ மெனக் கருதமாட்டேன்.''

''ஆமாம், ஒருபுறம் நம் 'மாரலிஸ்டிக்' (ஒழுக்கநெறி) பண் பாடுகளை வைத்துவிட்டு நானும் நாமும், பாவம் செய்யவில்லை என்றுதான் கருதுகிறேன். ஆயினும் கல்யாணியைப் பற்றிச் சிந்தித்துப்பார் சீலா. அவளுடைய வாழ்க்கை எப்படி என் ஒருவனுக்குள்ளேயே அடங்கியிருக்கிறது.''

''சரி, அது அவர்களுடைய டெம்பரமென்டிற்கு சூட் (மனப்போக் குக்கு ஒத்தது) செய்கிறது. சற்றும் சிந்தியாமல் சில உறவில் தம் மைப் பிணைத்துக்கொள்ளும் பல மனிதர்கள் உண்டு. உங்கள் ஒய்ஃப் (மனைவி) அப்படிப்பட்டவர்களில் ஒருத்தி. நாம் நம் வாழ்வை சிந்த னையின் உரை கல்லால் உரைத்துப்பார்ப்பவர்கள் நாம் எப்படிக் கெட்டவர்களாகக் கருதப்படுவோம்? 'மாரல்ஸிற்கு' (ஒழுக்க நெறிக்கு) அடிமையாக ஆரம்பத்திலிருந்தே சிரத்தை பக்தியுடன்

வாழ்க்கை நடத்துவோரைவிட நாம் எந்தவிதத்தில் சிறியவர்கள்?''

''என்ன பதில் சொல்வேன், சீலா? உலகம் நம்மைத்தூற்றுகிறது. நானும் பழக்கப்பட்டுத்தான் இப்படிப் பேசுகிறேன் போலும்! ஒன்றும் புரியவில்லே. சிற்சில சமயங்களில் துரியோதனனேப் போல் நானும் சொல்ல விரும்புகிறேன்:

ஜாநாமி தர்மம் நசமே ப்ரவ்ருத்தி:

ஜாநாம் யதர்மம் நசமே நிவ்ருத்தி:

நல்ல வழி எது என்பதை நானறிவேன், ஆனல் அதில் எனக்கு ஈடுபாடு கிடையாது. கெட்டவழி என்பதும் எனக்குத் தெரியும். ஆனல் அதிலிருந்து நான் விடுபடுவது கிடையாது. என் உள்ளத்துள் இருக்கும் இறைவன் எவ்விதம் எனக்குப் பணியிடுகிருனே, அவ் விதமே நான் செயல்படுகிறேன். (பெருமூச்சுடன்) அப்படியேதான் செயல் படுகிறேன்?''

''இந்த பிலாசபி (வேதாந்தம்) தான் மிகச் சிறந்தது. தன் 'இமோஷனல் நீட்ஸ்' (உணர்ச்சிக்குரிய தேவை) என்ன என்று மனிதன் புரிந்து கொண்டாலன்றி அவனுக்கு விமோசனம் கிடையாது. அதை உங்கள் ஒய்ஃப் (மனேவி) பூர்த்தி செய்திருந்தால் எனக்கு நன்ருகத் தெரியும். நீங்களும் அவளேப் போலவே அவளிடம் மிகுந்த பாசத்துடன் இருந்திருப்பீர்கள். இத்தனே ஆண்டுகளில் மிகப்பெரிய மாரலிஸ்டுகளுள் (ஒழுக்க நெறியாளரில்) உங்களேச் சற்றும் குறைந்தவராக நான் எண்ணியது கிடையாது.

''தன் புகழுரையைக் கேட்டு, சீலாவை அன்புடன் மஹிபால் பார்த்தான். உணர்ச்சிவசப்பட்டு அவளே வாரி மார்புறத்தழுவிக் கொண்டான். அப்போது இருவரும் அணேப்பிலிருந்த போதிலும் காம உணர்ச்சியின்றிச் சொல்லொணு ஆன்மத் திருப்தியில் ஆழ்ந்திருந்தனர்.

சில கணங்களில் தன்னேச் சமாளித்துக் கொண்டு மஹிபால் கூறினன்: ''சீலா, உலகத்தைக் கண்டு அநுபவம் பெற்றவர்கள் நாம். உணர்ச்சி வேகத்தில் திளேக்கும் இளமையைத் தர்க்கம் செய்யும் அறிவு கட்டிப் போட்டு விடுகிறது. எதிர்காலம் நம்மை எங்கே கொண்டு செல்லுமோ, தெரியாது. நம் வீட்டோருக்கு இதுவரை தெரியாமலிருந்தது. இப்போது வெட்ட வெளிச்சமாகத் தெரிந்து விட்டது. கல்யாணியுடன் சண்டை போட்டுக்கொண்டு நான் உன்னுடன் இருந்துவிடுவேன்; ஆனல் குழந்தைகளுக்குத் தெரிந்தால் எப்படி இருக்கும்? அவர்களுக்கு எதிரே நம் உறவை எப்படி என்னல் சமாளிக்க முடியும்? குழந்தைகள் நம்மைப்பற்றி என்ன நினேப்பார்கள்? எனக்கு ஆக்க சக்தியளிப்பவளாகக் கருதும் உன்னே இவர்கள் குடியைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பு என்றல்லவா நினேப்பார்கள்? இதை நான் எப்படித் தாங்கிக்கொள்

வேன்? நான் என் மனைவியைத் திருப்திப்படுத்தினுல் உன்னிடம் நாணயமாக இருந்து கொள்ள முடிவதில்லை. உன்னிடம் உண்மையாக நடந்துகொண்டால், மற்ற எல்லா விதங்களிலும் வாழ்க்கையைப் பொய்யாக்க நேரிடுகிறது!''

''ஏன்?''

''என்னுல் நீயின்றி இருக்கமுடியாது என்று ஒப்புக்கொள்கிறேன் என்று வைத்துக் கொள். அப்போது நான் என் வீட்டைவிட்டு வெளியேறியாக வேண்டும். வேறு வழி கிடையாது. வீட்டுக்கு வேண்டிய பணத்தைக் கொடுப்பதுடன் நின்று விடவேண்டும். அப்படிச் செய்வதிலும் ஒரு தொல்லை இருக்கிறது. என்னுல் உன்னுடன் ஒரே வீட்டில் இருக்கமுடியாது. உன்னை மட்டும் என்னுடன் இருக்கச் செய்து கொண்டு ஒரு தனி வீட்டிலும் வசிக்க வழி கிடையாது. உலகம் என்ன சொல்லும் தெரியுமா? உன்பேரில் அன்பு கொண்டல்ல, உன் பணத்திற்காக நான் என் வீடு வாசல்களைத் துறந்து விட்டேன் என்று சொல்லும்!''

''ஆனுல் நீங்கள் ஏன் வீட்டைத்துறக்க வேண்டும்? இப்படி ஏன் நீங்கள் நினைக்கிறீர்கள் என்றே எனக்குப் புரியவில்லை.''

''இல்லாவிட்டால் வேறு வழி தான் என்ன?

''டோண்ட் பி பெட்டி, டார்லிங்! (இப்படிச் சின்னத்தனமாக இராதீர்கள் அன்பே!) நீங்கள் தேவைக்கும் அதிகமாக உணர்ச்சி வசப்பட்டு இந்த விஷயத்தைப் பற்றிச் சிந்திக்கிறீர்கள். இரண்டும் உண்மைதான். கல்யாணியும் குழந்தைகளும் உங்களுக்கு மிகவும் தேவை. அவர்களைவிட்டுப் பிரிந்தால் மனிதத்தன்மையிலிருந்தே விழுந்தது போலாகிவிடும். நானே நாமிருவரும் பிரிந்து இருக்கலாம். ஆனுல் நம் வாழ்வின் ஒளி அணைந்துவிடும். நாம் இளம்பிள்ளைகளல்ல. நடுத்தர வயதில் அன்பு உடலுக்கு ஆதாரமாக இருப்பதில்லை; உடலுணர்ச்சியின் வேகமாக இருப்பதில்லை. ஆத்மாவின் ஆதாரமாக இருக்கும். பதினைந்து அல்லது இருபது ஆண்டுகளுக்கு முன்பு, ஏன்? பத்து ஆண்டுகளுக்குமுன்பே, நீங்கள் என் வாழ்க்கையில் வந்திருந்தால் அதிலிருந்து விலகியும் சென்றிருப்பீர்கள். அப்போது நான் உங்களிடம் அன்பு செலுத்தியிருந்தால், ஐந்தாறு மாதங்கள் வரை உங்களை நினைந்து உருகியிருப்பேன்; பிறகு எல்லாவற்றையும் மறந்திருப்பேன். ஆனுல் இப்போது என்னுல் அவ்விதம் இருக்க முடியாது.''

''அப்படியே இருந்துவிடு சீலா, உன்னுடன் இருந்தால் என் வாழ்க்கை சுகமாகக் கழியலாம். ஆனுல் உனக்கு நிம்மதி இருக்காது. நான் இறந்துவிட்டேன் என்று வைத்துக்கொள் அல்லது நன்றி கெட்டவனுக மாறிவிட்டேன் என்று நினைத்துக் கொண்டு ஏதாவதொரு நல்ல மனிதனை மணந்துகொள்: இந்தத்

தடவை உன் வாழ்க்கையில் பர்மனன்ட் செட்டில்மெண்ட் ஆகிவிட (நிரந்தரமான முடிவு ஏற்பட்டுவிட) வேண்டும். திருமணம் என்பது மனித சமுதாயத்திற்குத் தேவையான ஒரு பழக்கம். அது மிகப் பெரிய கோட்பாடு. அதை நீ ஒப்புக்கொண்டேயாக வேண்டும்.''

''ஒப்புக்கொண்டு விட்டேன். எனக்குத் திருமணமாகிவிட்டது. இனிமேல் இதைப்பற்றி என்னிடம் பேசாதீர்கள்!''

''கர்னல் சாஹேப் போன் செய்தாங்க சார்.'' வேலையாள் வாசலில் தொங்கவிடப்பட்டிருந்த துணியின் மறைவில் நின்று கொண்டு கூறினான்! இருவரும் வியப்புடன் ஒருவரையொருவர் பார்த்தனர்.

''யாரைக் கேட்டார்?'' சீலா வினவினாள்.

''உங்களையும் சாஹேபையும் கூடக் கேட்டாருங்க.''

''போய்ச் சொல்லிவிடு, சீலா. நான் இங்கே வந்திருக்கிறேன் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது. நான் இப்போது யாரு டனும் பேச விரும்பவில்லை.''

சீலா பேசச் சென்றாள். மஹிபால் வருத்தத்துடன் பெஞ்சியில் படுத்துக் கொண்டான். ''வீட்டிலிருந்து யாராவது என்னைக் கேட்டுக் கொண்டு வந்துவிட்டார்களோ என்னவோ? நேற்றுக் காலையிலிருந்து வீட்டிற்கே போகவில்லையே. குழந்தைகளும் கல்யாணியும் கவலைப்படுவார்கள்; படட்டும். நடத்தை கெட்ட தந்தை, குழந்தைகளுக்கெதிரே எப்படி வருவான்? கல்யாணி எவ்வளவு பெரிய முட்டாள் தெரியுமா? சற்றும் சிந்திக்காமல் எல்லோருடைய முன்னிலையிலும் பெரிய புயலையே சிருஷ்டித்து விட்டாளே! என்னைப் பிறருடைய அவமதிப்புக்கு ஆளாக்கிவிட் டாளே! இனி அவளுடைய முகத்தில்கூட விழிக்கமாட்டேன்—ஒரு போதும் மாட்டேன்,'' என்றெல்லாம் மஹிபால் எண்ண ஆரம் பித்துவிட்டான்.

சீலா அறைக்குள் வந்தாள். அருகே வந்து கேட்டாள்: ''நேற் றிரவு நீங்கள் எங்கே சென்றிருந்தீர்கள்?''

மஹிபால் ஒரு பதிலும் அளிக்கவில்லை. கண்களை இறுக மூடிக் கொண்டிருந்தான். சீலா மறுபடியும் கேட்டாள்: ''நேற்றிலிருந்து நீங்கள் வீட்டிற்கே செல்லவில்லை—இது எவ்வளவு கேவலமான விஷயம்!''

மஹிபால் ஒன்றும் பேசவில்லை. சீலா அவனருகே உட்கார்ந்து அவனுடைய தலையை வருடியபடி கூறினாள்: ''சாப்பிட்டுவிட்டுக் கிளம்புங்கள். நான் உங்களைக் கொண்டு விட்டுவிட்டு வருகிறேன் எழுந்திருங்கள்.''

''வீட்டிற்குப் போகமாட்டேன். நேற்றிரவும் தூங்கவில்லை. இன்று போனால் பெரிய சண்டை உண்டாகும். தூக்கம் வராது.

ஒரு சிறு கோபத்தைக்கூட என்னால் இப்போது தாங்கிக்கொள்ள முடியாது. நான் அவ்வளவு களைப்படைந்து விட்டேன். கர்ன லிடம் சொல்லி விடு; ''குழந்தைகளிடம் சொல்லுங்கள்; கவலைப்பட வேண்டாம். மஹிபால் சஜ்ஜனுடைய வீட்டில் தூங்குவான்! என்று'' பேசிக் கொண்டிருக்கும்போது முந்திய இரவு சிவன் கோயிலில் அநாதையைப்போல் இரவைக் கழித்தான் என்பது தெரியவந்தது. அதற்குப் பிறகு சீலா மஹிபாலைச் செல்ல அநுமதிக்கவில்லை.

நான்கு ஆண்டுகள் தான் கொண்டிருந்த நெருங்கிய உறவில் இன்று ஒரு இரவைத்தான் மஹிபால் அந்த வீட்டில் முழுமையாகக் கழித்தான்.

# 23

உள்ளத்தில் கள்ளனை வைத்துக்கொண்டு நவநீத சோரனின் லீலா பூமியைச் சஜ்ஜன் வந்தடைந்தான். பச்சாத்தாபம் என்னும் நெருப்பில் அவனுடைய அகந்தை சுட்டுக் கருகிவிட்டது. வேதனை யினால் அவன் வெந்தே போய்விட்டான். வனகன்யா இந்தப் பயணத்தில் அவனுடன் வந்தது, இருபத்து நான்கு மணி நேரமும் அவனுக்குப் பரீட்சை போன்றிருந்தது. இரண்டு தினங்கள் மது ராவில் இருந்ததால் சஜ்ஜனுடைய வைஷ்ணவ சம்ஸ்காரம் (மரபு) நிரம்பிய உள்ளம் தன் தாயின் பக்தியால் ஆட்கொள்ளப்பட்டுக் கண்ணபிரானின் காலடியில் ஒன்றியது.

சஜ்ஜன் தன்னை வனகன்யாவிடமிருந்து சற்று நகர்த்தியே வைத்துக்கொண்டான். கன்யாவின் அன்பைப் புறக்கணித்து, சஜ்ஜன் திடீரென்று கிருஷ்ண பக்தியில் மனத்தைச் செலுத்திப் பிரம்மச்சாரியாக முற்பட்டான். மதுரா வந்த பிறகு அவன் கன்யாவின் காலஞ் சென்ற அண்ணியைப்பற்றிய விசாரணையில் சிறிதும் பங்கு பெறவில்லை. விச்ராம் காட், த்வாரகாதீஷ், கிஷோரிராம், விஹாரி, ராதாகிருஷ்ணன் முதலிய கோயில் களுக்குச் சென்று இறைவனைத் தரிசித்துத் தான் இந்து சம்ஸ்காரம் நிரம்பிய வைஷ்ணவன் என்று உணர முற்பட்டான். தன் ஆங்கிலேயப் பழக்கவழக்கங்களை அவன் அறவே மறக்க முயன்றான். இந்நாட்டுச் சாதாரண மக்களை மகான்களாக்கிய அந்தப் பக்தி வெள்ளத்தில் தானும் மூழ்க நினைத்தான். சூர்தாசர், மீரா போன்றவர்களை மனம் ஒன்றச் செய்த அந்தத் தத்துவம் என்ன?

இந்தப் பரம தத்துவத்தை அறியும் ஆவலுடன் கோவில் கோவி லாகச் சென்று சஜ்ஜன் பார்த்தான். எங்கும் அவனை அவனால்

கண்டுணர முடியவில்லை. ஆடம்பரந்தான் அவனுக்குத் தென்பட்டது.

கிருஷ்ணன் பிறந்த இடத்தை வண்டிக்காரன், சஜ்ஜனுக்குக் காண்பித்தான். கண்ணன் அவதரித்த இடம்! இதை நினைத்த மாத்திரத்தில் சஜ்ஜனுக்கு விசித்திரமான ஊக்கம் பிறந்தது. இந் நாட்டில் வீடுதோறும் பரமாத்மா எனப் பூஜிக்கப்படும், அந்தக் கண்ணபிரான் பிறந்த இடமா இது! பரம் பொருள் மானுட வடிவம் கொண்டதே! கம்சனது சிறைச்சாலையில் அவர் பிறந்தார்!

அந்தச் சிறைச்சாலை இருந்த இடம், கிருஷ்ணன் பிறந்த இடம் ஆகியவை அவனுடைய கண்களில் சுழன்றன. கண்ணன் தோன்றிய இடத்தில் பள்ளிவாசல் நிறுவப்பட்டிருக்கிறதே! இந்து உள்ளம் அதிர்ச்சியடைந்தது. வண்டிக்காரன் அவனுக்குச் சரித்திரமே கூற ஆரம்பித்தான் :

''ஔரங்கஜேப் கோயிலைத் தகர்த்தெறிந்துவிட்டு மசூதி கட்டி விட்டார் சாமி!''

சஜ்ஜனுக்கு ஆத்திரம் பொங்கியது. மத சம்பந்தப்பட்ட உணர்ச்சி வேகத்தில் நிரம்பிய அவனுக்குத் திடீரென்று அந்தச் சலவைக்கல் மசூதியின் ஸ்தானத்தில் வனகன்யா இருப்பதுபோல் தோன்றிற்று. கிருஷ்ணன் பிறந்த இந்த இடத்திற்குவந்த அவன் மசூதி, வனகன்யா இரண்டிலிருந்தும் விடுபட்டுக் கிருஷ்ண பாவத்தில் மூழ்க விரும்பினான். ஔரங்கசீப்பின் மசூதி, வன கன்யா—இவ்விரு நினைவுகளிலேயே அவனுடைய சிரத்தை ஆட்டம் கண்டுவிடும்போல் இருந்தது. அவன் தன் உள்ளத்தை உறுதிப் படுத்திக்கொண்டான். கண்ணபிரானின் தியானத்தில் அவன் தன்னை லயிக்கச் செய்ய விரும்பினான்.

மசூதிக்குக் கீழேயிருந்த சிதை பொருள்மீது கை வைத்துக் கொண்டு நின்ற சஜ்ஜனுடைய கவனம் சிறைச்சாலையின் காட்சியில் சென்றுவிட்டது. மசூதியைப் பார்த்தான். சஜ்ஜன் கோபத்தில் தன்வசமிழந்தான். மசூதி ஒரு கொடிய சக்தியின் சின்னமாக இருந்துகொண்டு அவனுடைய சம்ஸ்காரங்கள் (பழையமரபு) நிரம்பிய கற்பனையை மேலே செல்லவிடாமல் தடுத்துக்கொண்டிருந்தது. அந்த மசூதி அப்படியே இடிந்து விழுந்தால்? இடித்து விட்டால் என்ன? என்று அவனுடைய உள்ளம் விரும்பிற்று.

அதே சமயத்தில் அவனுடைய உள்ளத்தில் எல்லோரா, அஜந்தாவின் குகைகள், சோம்நாத், விசுவநாதர் கோயில் என்று முஸ்லீம்கள் தகர்த்தெறிந்த சிலைகளும் சிற்பங்களும் தோன்றி மறைந்தன. அவனுக்கு ஆத்திரம் மூண்டெழுந்தது. கேசவனுடைய கோவில் இருக்குமிடத்தில் இவர்கள் மசூதியைக் கட்டியிருக்கிறார்களே, அதேபோன்று ஜும்மா மசூதியை உடைத்

தெறிந்து அந்த இடத்தில் கேசவனுடைய கோவிலை நிறுவினால் இவர்களுக்கு எப்படி இருக்கும்? ஆனால் சஜ்ஜனின் நண்பர்களில் பலர் முஸ்லிம்கள். அவர்கள் மிகவும் நல்லவர்களுங்கூட. முஸ்லிம் களிலும் எத்தனையெத்தனை பெரிய மகாத்மாக்களும் சூஃபி சாதுக் களும் தோன்றியிருக்கின்றனர்! மசூதியில் அவர்கள் கண்ட இறை வனைத்தான், உருவ வழிபாட்டில் கபீர் உணர்ந்தார்; சைதன்யர், ரஸ்கான், மீரா, எந்தக் கடவுளிடம் தம்மையே பறிகொடுந் தனரோ, அதே கடவுளைத்தான் சூர்தாசர், துளசிதாசர் போன்ற பக்தர்களும் வழிபட்டனர். இறைவன் தனித்தனியல்ல; ஒன்றே தெய்வம்; 'இப்படிப்பட்ட முஸ்லிம் பக்தர்களுக்கு முன்பு நான் கோடானுகோடி இந்துக்களைத் துறக்கச் சித்தமாக இருப்பேன்' என்று பாரதேந்து கூறினாரே!

மசூதியை நினைத்து வன்முறைச் செயல் புரிய விரும்பிய சஜ்ஜன் வெட்கித் தலைகுனிந்தான். மசூதியைக் கோயிலாக மாற்றுவது பற்றிய எண்ணமே அவனுக்கு ஆபாசமாகப் பட்டது. அப்படி யிருந்தும் கண்ணபிரானின் பிறப்பிடத்தில் நின்றுகொண்டிருந்த மசூதியை சஜ்ஜனுடைய உள்ளம் மன்னிக்க மறுத்துவிட்டது. அவனுக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. இந்தப் பொய் பிடிவாதத்துடன் கூடிய குருட்டுச் சம்பிரதாய பக்தியை எந்த விதத்திலும் மன்னிக்க முடியாது. நடந்தது நடந்தேறிவிட்டது. இனி இப்படிப்பட்ட கெட்ட சக்திகளை எதிர்த்துப் போராட வேண்டும். இவற்றுடன் போராடுவது மனிதனுடைய கடமை யாகும்.

நடந்தது நடந்துவிட்டது. இனிமேல் சஜ்ஜன் கன்யாவுடன் எந்தவிதமான தொடர்பும் வைத்துக்கொள்ளப் போவதில்லை. அவளிடம் வெறுப்பு இல்லை. அவனால் இனி எவரிடமும் வெறுப்புக் கொள்ள முடியாது. கன்யாவிடம் வெறுப்புக் கொள்வது மாபெரும் அநீதமாகும். கன்யாவின் உறுதியான போக்குத்தான் அவனுக்குப் புதிய வாழ்விற்கான வழியைக் காண்பித்தது. உண் மையாகப் பார்த்தால் அவன்தான் கன்யாவிடம் கீழ்த்தரமாக நடந்துகொண்டான். சினம், காமவெறி இவற்றினால் சுய உணர் விழந்து செயல் புரிந்துவிட்டான். நேற்றைக்கு முந்திய நாள் நடந்த நிகழ்ச்சியிலிருந்து அவனால் கன்யாவை ஏறெடுத்துப் பார்க்க முடியாது. கன்யா சிறந்தவள். நான்தான் கடையன். காமப்புழு நான். என்னிடம் தன்மானம் கிடையாது. வெறும் செருக்குப் பிடித்தவன். செருக்குடைய மனிதனால் உலகில் எதையும் சாதிக்கமுடியாது. நான் எதற்காகச் செருக்கடைய வேண்டும்? பரம்பரைச் சொத்தைக் கொண்டா? பத்துப்பதினைந்து ஆண்டுகளாகச் சேர்ந்த பணம் பெரிய சொத்தா என்ன! பெரிய

கலைஞன் என்று செருக்கடைவதா? அதாவது, அமைதியான நேரத்தில்கூட என்னை நான் ஏமாற்றிக் கொள்வதா?

சஜ்ஜன் பச்சாத்தாபத்தால் பாகாய் உருகினான். சீமைக் காரரைப்போன்ற நாகரீகம், கௌரவம், பதவி போன்ற இமய மலையின் பனிக்கட்டி உருகிக் கீழே பாயத் தொடங்கியது. மலை களிலிருந்து அருவிபோல் வீழ்ந்து, கொதிக்கும் உள்ளமெனும் சமவெளியில் பாய்ந்து பிரார்த்தனை என்னும் கங்கையாக மாறிப் பெருகியது. உள்ளம் உருகிய நிலையில் கண்ணனது பிறப் பிடத்தைக் கண்டதனால் எழுந்த ஸம்ஸ்காரங்களால் (பழைய மரபுணர்வால்) பிராத்தனையைத் தவிர வேறொன்றும் செய்ய முடியவில்லை.

* * * *

கருப்புக் கம்பளி நூல்களைப்போல் பின்னிக்கொண்டு இரவு பூமியில் பரவியது. கவலைக் கயிறுகள் ஒன்றாகப் பிணைந்துகொண்டு கன்யாவின் மனவுலகைப் பின்னிக்கொண்டன. ''இவர் எங்கே சென்றுவிட்டார்? என்ன நேர்ந்து விட்டதோ?''

சஜ்ஜன் வீடு திரும்பாததால் கன்யாவின் உள்ளம் கடலாய்க் கொந்தளித்தது. காலஞ்சென்ற அண்ணியின் தோழி அவளைப் பத்துமுறை கேட்டுவிட்டாள். அவளுடைய கணவன் லாலாமுரளீ மனோஹரும் கடையிலிருந்து திரும்பிவந்து பலமுறை கவலைப்பட்டு விட்டான். பகலில் தயார் செய்த சாப்பாடு ஜில்லென்று போய் விட்டது. உருளைக்கிழங்குக்கூட்டு காதலனற்ற காதலியின்நிலை போல் சுவையற்றுப் போயிற்று. சஜ்ஜன், இந்த வீட்டு மருமகன்— எங்கே சென்றுவிட்டார்? ஏன் வரவில்லை? போலீசுக்கு ரிப்போர்ட் செய்வதா?

வெளிப்படையாகச் சிரித்துக்கொண்டு, ''மருமகன் பெரிய கலைஞர்,'' என்று கன்யா கூறினாள். கலைஞர்கள் இப்படித் திடீ ரென்று காணமற் போய் விடுவார்கள். கோயிலுக்குக் கிளம் பியவர் வேறு நினைவில் பிருந்தாவனத்தை நோக்கிச் சென்றிருப் பார்.

இரவு நேரத்தில் கன்யா படுக்கையறையை அடைந்ததும் தனிமையைக் கண்டதும் விசித்து விசித்து அழுதாள். இவ்வாறு அவளை விட்டுச் சஜ்ஜன் சென்றதை ரோசமுள்ள கன்யாவினால் சகித்துக் கொள்ள முடியவில்லை. 'லக்னோ சென்றிருக்க மாட் டாரோ! இன்று அவரிடம் கசப்பான பேச்சுக்கூட நடக்கவில்லையே! ஆம், நேற்றைக்கு முந்திய நாள் காலையில் நடந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவரால் தம் மனத்தை அடக்கிக்கொள்ள முடியவில்லை. நான் எவ்வளவோ, ஆறுதலளித்துப் பார்த்தேன். அவருடைய

தப்பிதத்திற்குக் காரணம் நான் செய்த தப்பிதம் தான்; இதை எடுத்துச் சொன்னேன். நானே இதை உணரவும் செய்கிறேன்.'

கன்யா அகந்தை கொண்டவள். அவளுடைய சீலம் அவளுக்கு இன்னும் அதிகச் செருக்கை அளித்தது. வீட்டு ஆபாசமான சூழ்நிலையின் காரணமாக அவளும் அவளுடைய அண்ணனும் திருமணம் செய்துகொள்ளாமலேயே இருந்தனர். தன் திருமணத்தின் ட்ராஜடி (துன்பப் போக்கு)க்குப் பிறகு அண்ணன் வாழ்க்கையுடன் போராடியே பித்துப் பிடித்தவரானார். கன்யா அவருடைய மூளைக் கோளாற்றையும் கண்டு அதை ஒரு பேருபதேசமாகக் கருதித் தன் சீர்மையைக் காப்பாற்றிக் கொண்டாள். ஒன்று மட்டும் நிச்சயம். அவளுடைய உள்ளப் புரட்சி இன்னும் அதிகமாக வெளிப்பட்டது. தன் வீட்டுப் பெரியவர்கள் செய்த தீய செயல்களைப்பற்றி அவள் வெட்ட வெளிச்சமாக நிந்தனை செய்தாள். முற்போக்கான ஒரு தோழியின் ஊக்கம் காரணமாக இண்டியன் பீபிள்ஸ் தியேட்டர், கம்யூனிஸ்ட் கட்சியினர் மார்க்ஸீயவாதம் முதலியவற்றில் அவள் ஈடுபட்டாள். புரட்சிகரமான அவளுடைய போக்கு இதனால் வலுவடைந்தது. தன் குரு, அண்ணன் இருவருடைய பாதுகாப்பிலும் இருந்ததால், புரட்சி மனப்பான்மையைத் திருப்தி செய்யும் விருப்பத்தால் முற்போக்குச் செயல்களிலும் அவள் ஈடுபட்டாள்.

இதற்கு மேல் அவளால் வேறொன்றும் செய்ய முடியவில்லை. ஆனால் அறிவும் உணர்ச்சியும் நிறைந்த சிக்கல்கள் அவளைச் சிந்தனையில் செலுத்தின.

இந்தச் சிக்கல்களுக்கிடையே அவளுடைய சொந்த ரகசியமான சிக்கலும் தன் ஆழ்ந்த வேலையைச் செய்ய ஆரம்பித்தது. இப்போதும் அது செய்துகொண்டுதான் இருந்தது. ஏன் ஆழ்ந்தது என்றால் இதுவரை அவளால் தன் உள்ளத்தை எவரிடமும் திறந்து காண்பிக்க முடியவில்லை. அண்ணனிடமிருந்து மரியாதை காரணமாக அவரிடம் வாய் திறந்து ஏதும் கூற முடியவில்லை. வெளியே யாரிடமாவது கூறித் தன் நடத்தையைக் களங்கமாக்கிக்கொள்ள விரும்பவில்லை. இன்று, இருபத்து நான்கு வயதுவரை வனகன்யா உடலைப் பொறுத்தவரையில் பிரம்மசாரணிதான். உள்ளம் வரையில் அடக்கமற்ற தன்மை பரவ அவளுடைய சமஸ்காரங்கள் அவளுக்கு இடம் கொடுக்கவில்லை. ஆயினும் காமனைச் சுட்டெறிக்குமளவிற்கு அவள் அவ்வளவு பெரிய யோகியுமல்லள்; பருவம் காரணமாக ஆடவரின் உடற்சேர்க்கை கொள்ளும் இயற்கையான விருப்பம் அவளுடைய உள்ளத்தில் எங்கோ ஒரு மூலையில் பசியுடன் நெளிந்து கொண்டுதானிருந்தது. தந்தையின் காம வெறியாட்டங்கள், சின்னம்மாவின் நடத்தை கெட்ட

தன்மை, அவளுடைய இளமையைப் பேராவலுடன் பருகும் ஆடவர் கண்கள், பல இலட்சிய மனிதர்கள், காம உணர்ச்சியைக் கடைத்தரமான வெறி என்று அளிக்கும் உபதேச மொழிகள் இவை யாவும் இரு பக்கங்களிலும் அவளை ஈர்த்துத் துன்புறுத்தின. காம உணர்ச்சி, காம வெறியை அடக்கும் ஆசை இரண்டும் அவளை ஒரே சமயத்தில் படாத பாடுபடுத்தின. சமுதாயத்தின் சாபக்கேடு போன்ற அவளுடைய காலஞ்சென்ற அண்ணி, மனிதப் போக்கின் சாபக்கேடு போன்று வாழ்ந்து கொண்டிருக்கும் அண்ணியின் நடத்தை, இவ்விரண்டும் அவளை ஆடவர் பேரில் வெறுப்புக் கொள்ளச் செய்தன. தற்காலச் சமுதாய உணர்வினின்றும் அவள் பெற்ற அறிவின்படி பார்த்தாலும் மனித சமுதாயத்தில், குறிப்பாகப் பாரத சமுதாயத்தில் ஆடவர் பெண் குலத்தைப் படுகுழியில் ஆழ்த்தி விட்டனர் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. இவற்றையெல்லாம்பற்றிச் சிந்தித்தபடி அவளுடைய தன்மான உணர்வு ஆடவர்களின் பேரில் ஆத்திரத்துடன் கொந்தளித்தது. இவ்வளவிற்கும் இந்த இரண்டு ஆண்டுகளாக மனத்தைக் கடைந்து அதனால் திரண்டு வந்த கொள்கை என்னும் வெண்ணெய் காரணமாக அவள் எவ்வளவோ அமைதியுற்றிருக்கிறாள் என்றுதான் கூறவேண்டும். தன்னைப் போன்ற சமஸ்காரங்களுடனும் (பழைய மரபுணர்வுடனும்) கொள்கைகளுடனும் கூடிய ஒருவன் கிடைத்தால் அவனை மணந்துகொள்ள வேண்டியதுதான் என்றும் அவள் நிச்சயம் செய்துகொண்டு விட்டாள்.

அண்ணியின் தற்கொலை, அதுபற்றி எடுக்க வேண்டிய போலீசு நடவடிக்கை காரணமாக அவள் சஜ்ஜனைச் சந்திக்க நேர்ந்தது. ஓவியன் சஜ்ஜனின் புகழைப்பற்றி அவள் நன்கு அறிந்திருந்தாள். முற்போக்காளர்கள் அவனைத் தம் குருவுடன் சேர்த்துக் கொள்ளாவிட்டாலும் அவனுடைய சிறந்த கருத்துக்களைப் பெரிதும் பாராட்டி வந்தனர். கண்காட்சி சாலையில் கன்யா அவனுடைய ஓவியங்களையும் பார்த்தாள். தொலைவிலிருந்தபடி அவனையும் அவள் பார்த்திருந்தாள். புகழ், சிந்தனைச் செறிவு இவற்றுடன் கூடிய சஜ்ஜன், உணர்ச்சிவசப்பட்ட கணங்களில் கன்யாவைச் சந்தித்தான். பிறகு அவளுடைய காலஞ் சென்ற அண்ணியின் பேரில் நடந்த அநீதத்தை எதிர்த்துப் போராடவும் அவளுக்கு அவன் பெரிதும் உதவினான். சஜ்ஜன் உடல் வனப்பிலும் கவர்ச்சி மிக்கவன். இவையாயும் சேர்ந்து சஜ்ஜன்மீது அவளுடைய உள்ளத்தில் நன்றி கலந்த பக்தியை உண்டாக்கின. பிறகு சஜ்ஜன் வெகு விரைவில் கன்யாவிடம் கவர்ச்சிக் கொண்டான். தன் வாழ்க்கைத் துணைவியாகும்படியும் தன் விருப்பத்தை அவளிடம் சஜ்ஜன் தெரிவித்தான்.

ஓர் ஆடவனது கவர்ச்சிப் பிணைப்பால் வாழ்வில் முதன் முறையாகத் தான் கட்டுண்டு விட்டது கன்யாவிற்குத் தெரிய வந்தது. தற்புகழ்ச்சி என்னும் தாழிட்டுச் சீலத்தைக் காத்துக்கொள்ள, அகந்தைக் கொண்ட பெண்மணிக்கு ஆடவர்களைக் கீழ்த்தரமானவர் என்று சந்தேகத்துடன் நோக்கும் கன்யாவிற்கு சஜ்ஜனுடைய பிணைப்பில் கட்டுப்படச் சற்று தயக்கமாகத்தான் இருந்தது. ஆதலால் அவள் சஜ்ஜனை அடிக்கடி ஈர்க்கவும் தடுக்கவும் செய்தாள்.

தந்தையினுல் வீட்டை விட்டு வெளியேற்றப்பட்ட பின்பு வாடகைக்கு ஓர் அறையில் வாழ ஆரம்பித்த அவளால் தெரு நாய்களின் குரைப்பைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. அவள் பயந்து போனுள்; இந்த அநுபவத்தின் காரணமாகத்தான், இன்றைய உலகில் மானத்துடன் ஒரு பெண் வாழ விரும்பினுல் அவளுக்கு ஓர் ஆடவனின் துணை வேண்டும் என்னும் முடிவிற்கு வந்தாள். சஜ்ஜன் பேரிலிருந்த அவளது உள்ள உறவு இன்னும் இறுக ஆரம்பித்தது. ஆனுல் அவளால் சஜ்ஜனுடைய வீடு மட்டுமல்ல, அவனுடைய வாடகை வீட்டிற்குக்கூடச் சென்று வசிக்க முடியவில்லை. கர்னலுடைய வீட்டிலிருந்த போதிலும் தன்னை அவள் சஜ்ஜனுடைய பாதுகாப்பில் இருப்பதாகவே கருதி வந்தது வியப்புக்குரிய விஷயம் மட்டுமல்ல; சஜ்ஜனைத் தவிர கர்னலுடனோ, தனிமையாகவோ, மதுரா வருவதற்கு அவள் தயங்கினுள்.

அன்று சஜ்ஜன் அவளை எப்படித் தாக்கினுன்? சஜ்ஜன் இவ்விதம் நடந்து கொள்வான் என்று அவள் கனவிலும் கருதவில்லை. அவளுடைய தன்மானவுணர்வுக்கு இது பெரிய அடியல்லவா? அப்படியிருந்தும் அவளுடைய உள்ளத்தின் ஆழ்ந்த ஒரு மூலையில் சஜ்ஜன் அவ்விதம் நடந்து கொண்டதுபற்றிப் பெருமிதம் ஏற்பட்டது. அவளுக்குத் தெம்பு உண்டாயிற்று. உள்ளத்தின் மேற்புறத்திலிருந்து எழுந்த ஒரு தர்க்கம் சஜ்ஜன் பேரில் அவளை இன்னும் அதிகமாக அன்பு கொள்ளச் செய்தது. அதன் பிறகு பகுத்தறிவுடன் அவள் நடந்து கொண்டாள். சஜ்ஜன் பச்சாத்தாபம் அடைவது சரியல்ல என்றும், அவனுடைய தவறுக்குக் காரணம் தன் அகந்தைதான் என்றும் அவனைச் சமாதானப் படுத்தினுள் கன்யா. சஜ்ஜன் எப்போது விரும்பினுலும் சரி, அவனை மணக்கத் தான் சித்தமாக இருப்பதாகவும் கன்யா தெரிவித்து விட்டாள். ஆனுல் இன்று சஜ்ஜன் எங்கே? அவளை விட்டுச் சென்று விட்டானு? அவளைத் துறந்து செல்லவே விரும்பினுலும் அயலாரிடம், வேறிடத்தில் பிறருடைய ஏளனத்திற்குப் பாத்திரமாக ஆக்கிவிட்டா செல்ல வேண்டும்? ரமா அண்ணி என்ன

நினைத்துக் கொண்டிருப்பாள்? அவளும் அவளுடைய கணவனும் இப்போது இவர்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருப்பார்கள்? 'என்னென்ன பேசுகிறார்களோ, நினைக்கிறார்களோ இவர் என்னைத் தலை நிமிர்ந்து நிற்கும்படியா வைத்திருக்கிறார்?'

நீரிலிருந்து வெளியே துள்ளிய மீனைப்போல் கன்யா துடித்தாள். ஊடலின் ஆயுதமான கண்ணீர் அம்புகளும் காலியாகிவிட்டன. உள்ளம் சற்றுச்சுமை குறைந்து காணப்பட்டது. ஆனால் வெற்றுப் பொந்து போலாகிவிட்டது. அதனை அவள் பெருமூச்சுக்களால் நிரம்பிக் கொண்டிருந்தாள். ஒரே நினைவில், ஒரே உருவத்தில் மனம் ஒன்றிய வனகன்யா–கல்வியறிவு பெற்ற, துணிச்சலான பெண்மணி. காவியங்களில் வருணிக்கப்பட்ட நாயகியைப் போல் காதலனைப் பிரிந்து சுய உணர்விழந்து பிரமித்துக் கிடந்தாள். உறக்கத்தில் உடலைப்பற்றிய உணர்வை மறந்திருப்பது போன்று மார்க்ஸ், காந்தி முதலியவர்களின் தத்துவங்கள், கருத்துரை, எலெக்ஷன், அரசியல், பெண் சுதந்திரம், இலக்கியம், கலை, பண்பாடு-இந்த அறிவுத்துறைகளில் அமர்க்களத்தினின்றும் அவள் விடுபட்டிருந்தாள். இது மறதி உறக்கமோ, ஜடத்தன்மையோ, அல்ல. தன்னைத்தான் இழந்து தன்னைத்தான் மீட்டுப் பெற்றுக்கொள்ளும் விழிப்பின் புத்துணர்வு இது. கண்ணீரை அடிவேருக்குப் பாய்ச்சி வேரை ஆத்மாவின் அடித்தளம் வரை பாயும்படி செய்யும் பிரிவாற்றாமையால் துடிக்கும் காதலியின் நிலை இது. இப்போது கன்யா பழைய கன்யாவாக இல்லை. அவளுடைய உள்ளும் புறமும் இரண்டறக் கலந்து விட்டன. அவள் சஜ்ஜனுக்குரியவள். அவனுடைய நினைவுதான் இப்போது அவளுக்கு உயிரளித்து வந்தது.

*　　*　　*　　*

களைப்படைந்த உள்ளமும், உடலும் கொண்ட சஜ்ஜன் அப்போது பிருந்தாவனத்து இலவச விடுதி ஒன்றில் நடந்துகொண்டிருந்த ராச லீலையைப் பார்த்துக் கொண்டிருந்தான். குஜராத்தைச் சார்ந்த சேட்டுக்களால் தனிப்பட்ட முறையில் இது நடத்தப் பட்டிருந்தது. ஆயினும் வெளியூரிலிருந்து சுமார் முப்பது பேர் அதைக் காண வென்றே அங்கு வந்திருந்தனர். சஜ்ஜன் அந்த இலவச விடுதியின் ஓரறையில் தான் தங்கியிருந்தான். பிருந்தாவனத்திற்கு வந்து அவன் கைவசப்பட்டது மாபெரும் ஏமாற்றந் தான். எந்த பிருந்தாவனம், மக்களின் பழமையான நாட்டுப் பாடல்கள், நாட்டு நடனங்கள், இலக்கியப்படைப்பிற்கு ஊக்கமளிக்கும் சூழ்நிலைகள் இவையாவற்றையும் தன்னுள் கொண்டிருந்ததோ; எங்கு ஆயகலைகள் அத்தனையும் ஒருங்கே விளங்கும்

கண்ணபிரானின் குழந்தை லீலைகள் இன்றும் மக்கள் பக்தியுடன் நினைவு கோருகின்றனரோ; அந்த நினைவைப் போற்றி வளர்த்து வருகின்றனரோ; அங்கு அவனுக்கு இறைவனே புலப்படவில்லை. மதுராவினின்றும் பக்தியின் எந்த ஒளியுடன் அவன் பிருந்தாவனம் வந்தானே, அந்த ஒளி பிருந்தாவனத்து தார்மீக மற்றநிலை, வெற்று ஆடம்பரம், வெளிப்பகட்டு இவற்றினால் தாக்குண்டு அணைந்துவிடும் நிலையில் இருந்தது. இருளில் ஒளி போல், பிருந்தாவனத்து எளிய உள்ளம் படைத்த மக்களும், பக்த உள்ளங்களும் இறைவனின் அழகுவடிவை நினைவுபடுத்தி வந்தது, உண்மைதான். ஆயினும் தட்டிப்பறித்துப் பணம் சம்பாதிக்கும் கொள்ளையர்களுக்காகவே பிருந்தாவனத்தின் பெருமை உரைக்கப்படுகிறதோ என்று சஜ்ஜன் கருதலானான். ராசலீலை தொடங்கப்போகும் அறிகுறி வாத்திய இசையினூடே கேட்டதும் சஜ்ஜன், சற்றே அதைக்கண்டு ரசிக்கலாம், என்னும் விருப்பத்துடன் அறையை விட்டு வெளியே வந்தான்.

வந்தனை, ஆரத்தி இவற்றிற்குப் பிறகு கிருஷ்ணலீலை ஆரம்பமாயிற்று. கண்ணபிரான் பெரிய, பெரிய தத்துவங்களை உபதேசிக்க ஆரம்பித்தார். சஜ்ஜனுக்குச் சலிப்புத் தட்டிற்று. ராசலீலைக் குழுவினரின் தலைவருடைய கொள்ளை லாபத்திற்குச் சாதனமாகக் கிருஷ்ணனே மாறி விட்டாற்போல் அவன் நினைத்தான். அவர்களுக்குப் பிரசாரம் செய்யும் ஏஜெண்டாக அவர் மாறி, 'சச்சிதானந்தன்' 'ஆனந்தகந்தன்' என்ற பல பெயர்களுடன் வைஷ்ணவத் தலங்களில் பிரசாதங்களின் வடிவில் விற்பனையாவது போல் அவனுக்குத் தோன்றியது. அவனுடைய மனச்சோர்வு அதிகரித்தது. இதுதான் நம்முடைய மதத்தின் சாரமா? இந்த மதமும், இந்தக் கடவுளுமா அவனுடைய தாயினாலும், பாரத நாட்டுக் கோடிக்கணக்கான மக்களினாலும் பூஜிக்கப்பட்டு, அவர்களுடைய உள்ளங்களில் சமஸ்காரமாக (பழைய மரபுணர்வாக) உறைந்து வருகின்றன? உயர்ந்த பனை மரத்தைப் போன்ற ஒரு மனிதன் மஞ்சள் ரவிக்கை சேலையுடன் முகத்திரை போட்டுக் கொண்டு யசோதையின் உருவில் தோன்றினான். கரகரத்த குரலில் அன்னை யசோதை பேசலானாள்:

''என் கண்ணன் இன்று விளையாடச்சென்றிருக்கிறான். காலைச் சிற்றுண்டி சாப்பிடாமல் போய்விட்டானே!''

தன் கண்மணியைப்பற்றிய கவலையில் நந்தராணி இப்படியும், அப்படியுமாக உலாவினாள். இதற்குள் மயிற் பீலியுடன் அலங்கரிக்கப்பட்ட கிரீடத்தை அணிந்த நந்தகுமாரன் வந்துவிட்டான். அவனைக் கண்டு யசோதை கூறினாள்:

''கண்ணே! நீ வந்துவிட்டாயா? இரவு பகலாக நீ விளையாடிக்

கொண்டேயிருக்கிறாய்! உன் அப்பா உனக்கு அவ்வளவு செல்லம் கொடுத்திருக்கிறார். இனி நீ விளையாடச் செல்லாதே, என் கண்ணே! இங்கே பூதம் வந்துவிட்டுப் போயிற்றடா!''

''அப்புறம்?'' என்று கண்ணன் கேட்டான்.

''நான்கு வேதங்களையும் எடுத்துச் சென்று நீரில் மறைத்து வைத்துவிட்டது. பிறகு அந்தப் பூதத்தை மீன் வடிவங் கொண்டு அந்த வேதங்களைக் கொண்ட சங்காசுரனைக் கடவுள் தீர்த்துக் கட்டிவிட்டார்.''

''அம்மா, நான் மீன் வடிவங் கொண்டு நீரில் சென்று பார்த்தேனே! நீ கூறிய சங்காசுரனை அங்கே காணவில்லையே! அங்கும் நான் பூதத்தைப் பார்க்கவில்லையம்மா''

''சங்காசுரனை நீ தானடா கொன்றாய்! மீன் வடிவங் கொண்டவனும் நீ தானப்பா!''

''ஆமாம் அம்மா, நான்தான் மீன் வடிவங் கொண்டேன்!''

''நீயா :''

''இல்லையம்மா! சும்மா சொன்னேன்.''

''என் கண்ணே!''

''அம்மா யமுனை நதிக்கரையில் நான் பாம்புடன் விளையாடினேனே! அந்த மடுவில்கூட, நீ சொன்ன பூதத்தைப் பார்க்கவில்லையே.''

இவ்விதம் கண்ணன் ஆமை, வராஹம், நரசிம்மம், வாமனன் என்று தம் அவதார ரகசியங்களைப்பற்றிக் கூறலானார்.

கண்ணன் கூறினான்: ''அம்மா! மன்னன் மகாபலியை ஏமாற்றினேன் நான்; ஒரு பிராம்மணன்போல் வேஷம் போட்டுக் கொண்டு மூன்றடி மண் கேட்டேன். ஓர் அடியால் சுவர்க்கத்தை அளந்தேன். மற்றொன்றால் பாதாளத்தை அளந்தேன்; இன்னும் ஒரு அடியால் பூலோகத்தை அளந்தேன். அங்கும் நான் நீ சொல்லும் பூதத்தைப் பார்க்கவில்லையே.''

''என் கண்ணே! வாமனனாக நீதானே, மன்னன் மகாபலியை ஏமாற்றினாய்.''

''ஆமாம் அம்மா! நான்தான்.''

''கண்ணா! கங்கை நதி உன் திருவடிகளிலிருந்துதான் கிளம்பிற்று?''

''இல்லையம்மா! அப்பாவின் கால்களிலிருந்து வந்திருக்கும்!''

''நீ பொல்லாத பயலடா? உன்னை விளையாட அநுமதித்தால் வந்தது ஆபத்து இது.''

சஜ்ஜன் மகிழ்ந்து போனான். கண்ணனுடைய முதல் லீலையை ஏஜெண்ட் கண்ணபிரான் இந்தப் பூதக்கதையின் வாயிலாக நன்றாகப் பிரசாரம் செய்திருக்கிறான். மானுட உருக்கொண்ட

இந்தக் கடவுள் தொன்றுதொட்டுத் தன் பராக்கிரமங்களை வரலாற்று வடிவில் அமைத்திருக்கிறார். ஆயினும் அவருடைய தாய் மனிதனை ஈன்றெடுத்த இந்த நிலத்தாய்—அவரைத் தன் குழந்தை என்ற எண்ணத்துடனே பார்க்கிறாள். பேதைத்தாய் தன் மகன் மிகப் பெரிய வீரச் செயல்கள் புரிவான் என்று நம்பாமல் இருக்கிறாள். தாய்க்குப் பிள்ளை எப்போதும் பிள்ளைதான்.

தன் தாயை நினைந்து அவனுடைய கண்கள் கண்ணீர்த் துளிகளை உதிர்த்தன. ரசிகப் பெருமக்களனைவரும் இந்தக் கிருஷ்ண லீலையைக்கண்டு பரவசம் அடைந்து நிற்பதை அவன் உணர்ந்தான். இறைவன் தன்னை நன்கு புரிந்துகொண்டுள்ளான். தாய், பூதம், பிசாசு என்று கூறி அவனைப் பயமுறுத்த முயன்றபோதிலும், அவன் பயத்தினின்றும் விடுபட்டுப் பேரானந்தத்தில் திளைத்து நிற்கிறான்!

இன்றையக் 'கடவுள்', தான் படைத்த அணுகுண்டைக் கண்டு தானே அஞ்சி நடுங்குகிறான். அவன் இந்தப் பேய், பிசாசு, பயத்தினின்றும் என்றைக்கு விடுபடுவானோ, அன்றுதான் அவன் மறுபடியும் இளம் பாலகன் வடிவில் இருந்துகொண்டு புதியதொரு பண்பாட்டைப் படைப்பான். ஆமை, மீன், வராஹம், நரசிம்மம் போன்ற அவதாரங்களுடன், இன்னல்கள் என்னும் அசுரர்களை அவன் அழித்துவிட்டு, அணு என்னும் அரக்கனையும், தீர்த்துக்கட்டு வனையின் பின்பு, எழில்மிகு நிலமகள்பேரில் பயமின்றித் தோன்று வான். அந்த அழகிய காட்சி யாருக்குத்தான் ரம்மியமாக இராது? இந்த இயற்கையான உணர்ச்சி நிரம்பிய வடிவத்தில் யார்தாம் தம் உள்ளத்தைப் பறிகொடுக்க மாட்டார்கள்?

இந்தக் கடவுளின்பேரில் அபாரமான நம்பிக்கை வைக்கத் தோன்றுகிறது! இந்தக் கடவுள் தன்னம்பிக்கையின் வெளிப் படையான உருவம்.

சஜ்ஜன் அன்று முழுவதும் அடைந்த சலிப்பை ஒழித்தான். பூதம், பேய், இவற்றின் பயத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு புதிய ஊக்கத்துடன் புத்துணர்ச்சியுடன் உறங்கினான். அவனுக்கு ஒரு முறைகூடக் கன்யாவின் நினைவு வரவில்லை.

அதிகாலையில் ஒரு கோயிலுக்கு வெளியே இருந்த கருங்கல் மேடைமீது அமர்ந்துகொண்டு சஜ்ஜன் சாதுவின் 'ஸ்கெட்ச்'சை வரைந்துகொண்டிருந்தான். கன்யா சஜ்ஜனை நிதிவனத்தில் தேடிக்கொண்டிருந்தாள். கன்யா பிடிவாதத்துடன் பிருந்தா வனத்திற்கு வந்தாள். பிருந்தாவனம் லண்டன், நியூயார்க், பம்பாய், கல்கத்தா, தில்லிபோன்று இல்லாவிட்டாலும், நெளிந்து வளைந்து செல்லும் சிறு சிறு தெருக்களும், ஆன்மீக ஸ்தாபனங் களும் நிறைந்த இடம். புதிதாகச் செல்பவர்கள் ஓரிடத்தைக் கண்டுபிடிப்பது அவ்வளவு சுலபமான காரியமன்று, என்று முரளி

மனோஹர், கன்யாவிடம் கூறியிருந்தான். ஆனால் கன்யா அவனது பேச்சைக் கேட்கவில்லை.

கன்யா நிதிவனத்தின் நான்கு மூலைகளிலும் தேடிவிட்டு இழந்த நிதியை வேறெங்கிருந்தாவது அடைந்துவிடலாம் எனக் கருதித் திரும்பினாள். நிதிவனம் என்பது மகிமை பொருந்திய நாதோ பாசகர், தான்சேன், பைஜீபாவ்ரா போன்றவர்களின் குரு இருந்த தவபூமி. ரசிகர்கள் அங்கு இசை விழாக் கொண்டாடிப் பரவச மடைவது வழக்கம். கண்ணபிரானுடைய நாட்களில் இருந்த பிருந்தாவனத்தில்தான், நாம் இருக்கிறோமோ என்ற பிரமை நிதி வனத்திற்குச் செல்லும் எவருக்கும் ஏற்படுவது இயற்கை. புதர் களும், அழகிய கொடிகளும், மரங்களும் நிரம்பிய அந்த இடம் காண மிகவும் அழகாக இருக்கும். சில இடங்களில் புராதன காலத்துச் சிதைவுகள் நிறைந்து காணப்படும். மற்றும் சில இடங் களில் முட்கள் நிரம்பிய மூங்கில் காடுகள் இருக்கும்; வேல மரங்கள் அடர்ந்து வளர்ந்திருக்கும். பறவைகளின் நாதம், குரங்குகளின் கொம்மாளம், மான் குட்டியின் துள்ளல்—சஜ்ஜனின் நினைவில் தன்னை மறந்திருந்தபோதிலும் கன்யா நிதிவனத்தில் மன நிம்மதி யடைந்தாள்.

அவள் வருத்தத்துடன் திரும்பினாள்; சுவாமி ஹரிதாசரின் கல்லறையில் அமர்ந்துகொண்டு அவருடைய பக்தர்கள் ராகம், சுருதி, லயம், இவற்றினின்று விடுபட்டு அலறிக்கொண்டிருந்தனர்.

''மாயிரீ சஹஜ் ஜோரி ப்ரக்ட் பயீ''

''ராதை—கண்ணன் இருவரின் பொருத்தந்தான், என்னே!'' என்று பாடிக்கொண்டிருந்தார்கள். அந்தப் பாடல் கன்யாவிற்கு ஆசியளிக்கும் முறையில் பாடப்பட்டதுபோல் தோன்றிற்று. சஜ்ஜன், கன்யா இருவரும் மட்டும் சாமானியமான ஜோடிகளா என்ன? காலம், இடம் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட பொருத்த மாயிற்றே அது! அது அழியாத உறவுதான்!

## 24

கணவன்—மனைவி என்ற முறையில் ஆண்—பெண்ணின் இந்த ஜோடி என்பது தேசம்—காலம் இவற்றிற்கு அப்பாற்பட்டது. இது நிரந்தரமானது. இதற்கு முடிவு என்பது கிடையாது.

சீலாவிற்கும் தனக்குமிடையே இருந்து வரும் இனிய மென்மை யான உறவு, படங்களில் கடவுளின் முகத்தைச் சுற்றி ஒரு வட்டம் இருப்பது போல் மஹிபாலைச் சுற்றி வளைத்துக் கொண்டது. ஆயினும் கொள்கை, நீதி என்ற முறையில் அவனால் தனக்கும்

கல்யாணிக்குமிடையே உள்ள உறவை மறுக்க முடியவில்லை. அதன் உன்னதமான உண்மையை ஏற்றுக்கொண்டுதான் ஆக வேண்டியிருந்தது. தவிர்க்க முடியாத இந்த நிலைமை காரண மாகத்தான், வீட்டிலிருந்து இரண்டு நாட்கள் வரை வெளியே இருந்த போதிலும் கர்னலின் வண்டியில் சீலாவின் வீட்டிலிருந்து தன் இல்லத்திற்கு மஹிபால் திரும்ப நேர்ந்தது.

மைத்துனனது திருமண அமர்க்களத்தின்போது அவனுக்கும் சீலாவிற்குமிடையே இருந்து வரும் காதற் களங்கம் சதிபதி களிடையே மனஸ்தாபம் என்னும் ஆழ்ந்த அகழியை ஏற்படுத்தி விட்டது. அந்த அகழியில் இந்த இரு தினங்களும் மஹிபால் நீராடிக் கொண்டிருந்தான். சீலாவும்—அவனும், கல்யாணியும்—அவனும்! மஹிபால் சுக்லாவினால் இனி இந்த இரட்டை உறவுகளில் தவிக்க முடியாது. இந்த இரட்டை உறவில் ஒரு பலனும் தெளி வாக அவனுக்குப் புலப்படவில்லை.

அதிகாலையில்—அதாவது சுமார் ஒரு மணி நேரத்திற்கு முன்பு கர்னல் அவனை அழைத்துச் செல்லச் சீலாவின் வீட்டிற்கு வந்தான். அப்போது மஹிபாலின் உள்ளம் உருகிய மெழுகைப் போன்றிருந் தது; சில கணங்கள் இவ்விதம் துடித்த பிறகு கருணை நிரம்பி ஒலிக்கும் கடலைப் போல் மாறிவிட்டது. சீலாவின் வீட்டை விட்டுத் தன் வீட்டிற்குச் சென்றேயாக வேண்டும் என்பது அவனுக்குத் தெரியும். முதல் முதலாகத் தன் பிறந்த வீட்டை விட்டுப் புகுந்த வீடு செல்லும் மணப்பெண்ணைப் போன்றிருந்தது, மஹிபாலின் மனநிலை. அங்கே செல்லாமல் அவனுக்கு வேறு போக்கிடம் கிடையாது. கணவன்—மனைவியின் இயற்கையான உறவு உலகில் எப்போதும் இருக்கத்தான் செய்யும். அது நித்திய மானது. நல்ல பண்புகள் செறிந்த மனமுடைய மஹிபால் இந்த உண்மையை எவ்விதம் புறக்கணிப்பான்?

வீட்டிலிருந்து கோபித்துக்கொண்டு வெளியே ஓடிய சிறுவன், பிடிபட்டு வீட்டிற்குள் செல்வது போல் இரண்டு நாட்களாக வீட்டில் தங்காமல் வெளியே வந்த மஹிபால், துறவு, போகம் என்னும் ஊஞ்சலில் திருப்தியற்ற தன் புரட்சிகரமான உள்ளத்தை ஆடவிட்டுக்கொண்டு கர்னலுடன் இன்று வீடு திரும்ப முற்பட் பட்டான். அவன் கிளம்பும்போது தன் சூனியமான பார்வை யைச் சீலா அவன்மீது செலுத்தினாள். மலையின் ஒரு சுரங்கத்தி னின்றும் கண்ணுக்குப் புலப்படாத சுனை பெருக்கெடுத்து வருவது போல் மஹிபால் கருதினான். அமைதி என்னும் எஃகுப் பெட் டிக்குள் இருந்த அவனது உள்ளம் தனக்குத் தானே துடித்துக் கொண்டிருந்தது. இந்தத் துடிப்புக்கள்தான் ஒன்றாய் உறைந்து அவனுடைய சித்தாந்தமாக மாறிவிட்டன. மஹிபால் சுற்றித்

திரிந்த பிறகு மறுபடியும் தன் சொந்தக் கருத்துக்குள் வந்துவிட்டான்—கணவன்—மனைவியின் உறவு நித்தியமானது, முடிவற்றது; பிரிக்க முடியாதது.

* * * *

கர்னலின் மருந்துக் கடைக்குப் பின்பக்கத்துப் பகுதியில், கன்யாவின் அறையில் கல்யாணி தன் இளைய மகன் தபோதனுடன் உட்கார்ந்திருந்தாள். கர்னல் அவளை அந்த அறைக்குள் அழைத்துச் சென்றான். இந்த இரண்டு நாட்கள் நடத்திய தவத்தில் கல்யாணி மெருகிட்டவளாகி விட்டாள். ஆழ்ந்த துக்கத்தினால் அமைதியுடனும், அமைதியிழந்துமிருந்த அவளது முகம் அப்போதுதான் நீராடிவிட்டு வந்தாற்போல் பளிச்சிட்டது. தபோதன் நாற்காலியில் கால்களை ஆட்டிக்கொண்டு உட்கார்ந்தான்.

முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக்கொண்டு மஹிபால் அறைக்குள் நுழைந்தாள். கர்னலும் உடன் சென்றான். கல்யாணி மஹிபால் இருவரின் கண்களும் ஒரு முறை சந்திக்காமல் இருக்க முடியவில்லை. இருவருமே பரபரப்புடன் பார்வையைத் திருப்பிக் கொண்டனர்—ஒரு கணத்தில் இருவருமே தம் சாசுவதான உறவைப் புரிந்து கொண்டு விட்டனர். ஆனால் உள்ளத்து விரோதம் இருவரையும் ஒருவரையொருவர் நெருங்கவிடவில்லை. கல்யாணி தலையைக் குனிந்துகொண்டாள். மஹிபால் தலையைத் திருப்பித் தபோதனைப் பார்க்க முற்பட்டான்.

சிறுவன் பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தான். தந்தை தன்னைப் பார்ப்பதைக் கண்ட அவனுடைய சப்த நாடிகளும் ஒடுங்கிவிட்டன. திடீரென்று சிங்கத்தை எதிரே கண்ட மனிதனுடைய பார்வை எங்கும் செல்லாமல் ஒரே இடத்தில் நின்று விடுவது போல், நடுங்கிய தபோதன் இமை கொட்டாமல் தன் தந்தையைப் பார்த்தான். தந்தையின் அன்பினால் தனயனைப் புறக்கணிக்க இயலவில்லை. உள்ளம் பணிந்துவிட்டது. கண்களில் பாசம் பளிச்சிட்டது. குழந்தையின் தந்தை மஹிபாலினால், போக வெறி கொண்ட மஹிபாலை மன்னிக்க முடியவில்லை! ''இந்தக் குழந்தைகள்—நான் வேறொரு பெண்ணுடன் கொண்டிருக்கும் உறவை—இவர்களால் எப்படிச் சகிக்க முடியும்?''

பழைய பிரச்சினை புத்துருக் கொண்டு கூரிய முள்ளைப் போல் அவனது உள்ளத்தில் பாய்ந்தது. தபோதன் இருந்ததால் மஹிபாலுக்குச் சற்று வெட்கமாக இருந்தது. ஆயினும் அதை அடக்கிக் கொண்டு ஆவேசத்துடன் அவனை வாரி அணைத்தான்.

மஹிபால் : ''ஏண்டா கண்ணு! இன்று பள்ளிக்கூடம் போக வேண்டாமா?'' என்று கேட்டான்.

"ஆமாம், இப்போ போவேன்.''

குழந்தையின் தலையை வருடியபடியே மனைவியிடம் முதல் முதலாகப் பேசமுற்பட்டான், மஹிபால்: ''இன்று குழந்தைகள் பட்டினியாகவா பள்ளிக்கூடம் போவார்கள்?''

கல்யாணி முதலில் மௌனமாக இருந்தாள்! மஹிபால் அமைதி இழந்து சற்றுச் சினத்துடன் பேசமுற்பட்டான். அதற்குள் கால் கட்டைவிரலையும், மெட்டி அணிந்திருந்த விரலையும் பார்த்த படியே கல்யாணி பதில் உரைத்தாள்: ''சகுந்தலா சமையல் செய்கிருள், தபோதா நீ உள்ளே போ. இதோ நாங்கள் வந்து விடுகிறோம்!''

''ஆமாம் கண்ணு! நாங்கள் வருகிறோம், நீ போ!'' செல்வதற்குள் தாயையும் தந்தையையும் கருணைநிரம்பிய பார்வையுடன் பார்த்து விட்டுச் சென்றான் தபோதன். 'என் அம்மாவைத் துன்பப்படுத்தா தீர்கள்' என்று கூறுவதுபோன்றிருந்தது அந்தப் பார்வை.

தபோதன் சென்ற பிறகு அறையில் யாரோ இறந்து கிடந்தாற் போன்ற நிசப்தம் சில விநாடிகள் வரை நிலவிற்று; கல்யாணி தலை குனிந்து அமர்ந்திருந்தாள். மஹிபாலும் தன் தலையை நிமிர்த்தவே யில்லை. இருவரையும் சூனியமான பார்வையுடன் பார்த்த கர்னல் தன் கீழ்உதட்டைக் கடித்துக்கொண்டான். மஹிபால் மெள்ள பேச்சைத் துவக்கினன்; கர்னலிடம் கேட்டான்: ''இவர்கள் மதுராவிலிருந்து எப்போது வருவார்கள்?

"நாளை இல்லாவிட்டால் மறுநாள் வந்துவிடுவார்கள். பின்னே நான்கு நாட்கள் வரைதான் விடுமுறை வாங்கிக்கொண்டு போயி ருக்கிருள்.''

பிறகு மறுபடியும் ஒரு கணம் நிசப்தம். கர்னல் திடீரென்று கல்யாணியைப் பார்த்துக் கூறினன்: "அண்ணி, இனி கடந்த நிகழ்ச் சிகளை மனசிலிருந்து அகற்றி விடுங்கள். உங்கள் சண்டை பூசல் தான் முக்கியம் என்று இருக்கக்கூடாது. வயதுவந்த மகன்—மகள் எல்லோரையும்பற்றிக் கவலைப்பட வேண்டும். அவர்களுக்கு எப்படி இருக்கும்? அதை நினைத்து நீங்கள் இருவரும் சரியாக நடந்து கொள்ள வேண்டும்.''

"இவளா? இந்தப் பிறவியில் மட்டுமல்ல. எண்பத்து நான் காயிரம் பிறவியிலும் இதைப்பற்றிக் கருதமாட்டாள். எனக்குப் பிடிக்காத விஷயத்தைப் பத்து லட்சம் தடவை சொல்லுவதில் தான் இவளுக்குப் பெருமை! பாண்டேயின் மகள் என்னும் பெருமை பின்பு எதில் இருக்கிறது?''

"மஹிபால்: நீ பேசாமல் இருக்கப் போகிருயா இல்லையா? இவ்வளவு பெரிய எழுத்தாளனுக இருந்துகொண்டு நீ..."

"நாசமாகப் போனேன் நான்; எழுத்தாளனுக்கு வீட்டில் மரியாதையா? இவளுடைய மாங்கல்யம் கீழே விழுந்த பிறகு தான் நான் எவ்வளவு பெரிய ஆசிரியர் என்பது இவளுக்குத் தெரியும். அது வரை தெரியாது—" என்று கூறிக்கொண்டே அறையை வேகமாக மஹிபால் சுற்றிச்சுற்றி நடை போட்டான்.

கல்யாணி தலை குனிந்தபடி உட்கார்ந்திருந்தாள்.

கர்னல் மறுபடியும் பேச ஆரம்பித்தான்; கல்யாணியிடம் அவன் கூறினுன்: "மஹிபால் உங்களை ரொம்பவும் சோதித்துவிட்டார். அண்ணி இதை நான் இவனெதிரிலேயே கூறுகிறேன். ஆனுல் இவர் உங்களைப் பெரிதும் மதிக்கிருர். இதையும் நான் இவருடைய முன்னிலையிலேயே சொல்கிறேன்.."

போகத்தில் திளைத்திருந்த மஹிபாலின் குற்றவாளி மனத்திற்குத் தான் நியாயமானவன் என்று வாதிக்க ஆதாரம் ஒன்று கிடைத்தது. ஆவேசத்துடன் அவன் பேசினுன்: "நீ என்ன, பிரம்மதேவனே வந்து சொன்னுலும் இவர்களுக்குப் புரியாது. நான் இவர்களை மதிக்கிறேன் என்று நம்பமாட்டார்கள். விட்டுத்தள்ளு. நான் கத்துவதுதான் இவர்களுக்குத் தெரியும். நான் நடந்துகொள்வதைப் புரிந்துகொள்ள முடியாது. நான் இவர்களை மதிப்பதைச் சற்றும் கவனிப்பது கிடையாது. என்னிடம் ஒரு நல்ல குணமே இல்லை என்று இவர்கள் கருதும்போது என்னைப்பற்றிப் பிறகு எப்படித்தான் நினைக்க முடியும்? நான் இவர்கள் எல்லோருக்கும் பகைவன் என்பது இவர்களது கருத்து. (பற்களைக் கடித்துக் கொண்டு) கொடுமைக்காரன் அறிவுகெட்டவன்:"

"மஹிபால்!"

"இந்தப் பெண் என் வாழ்க்கையையே நாசப்படுத்தி விட்டாள். நான் சொல்வதை ஒருபோதும் கேட்கமாட்டாள். என்னைப் புரிந்துகொள்ள இவள் முயன்றதே கிடையாது. 'இந்த மனிதன் என்னதான் சொல்கிருன். இவன் விரும்புவதுதான் என்ன' ஊஹூம்."

"சரி, நான் இப்போது!"

"கர்னல், நான் ஆவேசத்துடன் பேசுகிறேன். ஆனுல் சிறிதும் கோபமில்லை. என் உள்ளத்து விஷயங்கள் எல்லாவற்றையும் உன் முன்னிலையில் இந்தப் பெண்ணிடம் கூறி விடுகிறேன். இப்போது எனக்கு வயது நாற்பத்திரண்டாகி விட்டது. குஸ்திச் சண்டை போடத்தெம்பு கிடையாது. நான் சோர்வடைய ஆரம்பித்து விட்டேன். எனக்கும் சக்தி தேவைப்படுகிறது. அதிகம் சொல்லப் போனுல் நான் பத்து வருஷங்கள் வரையில் தான் இனிவேலை

செய்யலாம். வாழ்க்கையில் ஒன்றுமே கிடைக்காவிட்டாலும் சரி, அமைதி எனக்கு வேண்டும். இந்தப் பெண் என் அமைதியைக் குலைத்து விடுகிறாள்.''

''எங்கே அமைதி கிடைக்கிறதோ, அங்கேயே போய் இருக்கட்டும் இவரிடம் சொல்லி விடுங்கள்.''

''பார்த்தாயா, கர்னல்! நீயே பார்த்துக் கொள்,''

''நான் சொல்வதைக் கேள், மஹிபால், நீ பேசாமலிரு.'' கர்னல் உரக்கக் கத்தினான். பிறகு குரலைத் தாழ்த்திக்கொண்டு, ''அண்ணியிடம் கொஞ்சம் என்னைப் பேசவிடு. குறுக்காக ஏதாவது பேச முற்பட்டாயோ, ஜாக்கிரதை ஆமாம்! அண்ணி, விஷயம் சற்றுச் சிக்கலானது தான். நான் ஏதாவது தவறாக நடந்து கொண்டால் என்னை மன்னித்துவிடுங்கள். நீங்கள் மஹிபாலைப் புரிந்துகொள்வதில் தவறு செய்துவிட்டீர்கள். இவரிடம் குறை கள் இருக்கின்றன, என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இவரைப் போன்ற களங்கமற்ற உள்ளம் படைத்த நாணயமான மனிதரை உலகில் அதிகமாய் காணமுடியாது. இதை நீங்கள் ஒப்புக்கொண்டேயாக வேண்டும். நான் பொய் பேசமாட்டேன் அண்ணி. கடைக்காரனுக்கு உலகம் தெரியும். பத்துப் பேர், தினசரி என் பார்வையில் படுகிறார்கள். நம்மைச் சேர்ந்தவர் என்பதால் நாம் இவரை மதிப்பதில்லை. ஆனால் இவருடைய குணங்களையும் தகுதியையும் கண்டு, மிகப் பெரிய மனிதர் இவரிடம் தலைதாழ்த்தி வணக்கம் செலுத்துவதை நான் பார்த்திருக்கிறேன்.''

விரல்களில் எரிந்துகொண்டிருந்த சிகரெட்டை வைத்துக் கொண்டு குனிந்தபடியே மஹிபால் உட்கார்ந்திருந்தான். தன் பிரதாபத்தை மனம் ஒன்றிக் கேட்டுக்கொண்டிருந்தான். கர்னல் தொடர்ந்து கூறினான்: ''மஹிபாலைப் போன்ற ஆசிரியரை, உண்மையில் அயல் நாடுகள்தான் மதிக்கும்; கௌரவிக்கும்; இவரைப்போன்ற ஆர்ட்டிஸ்ட் இன்டெலக்சுவல் இப்படிப்பட்ட தொல்லைகளை எதிர்த்துப் போராடவேண்டி வருகிறது, பாருங்கள்! இத்தகையோரிடம் ஓரிரு குறைபாடுகள் இருந்தாலும் அவற்றைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்; மன்னித்துவிட வேண்டும், அண்ணி.''

கர்னல் பேசாமல் இருந்துவிட்டான். அறையில் நிசப்தம் நிலவியது. மூவரும் சிந்தனையில் ஈடுபட்டுக் குனிந்து உட்கார்ந்திருந்தார்கள். இடதுகை விரலில் போடப்பட்டிருந்த நவரத்தினக் கற்கள் பதித்த மோதிரத்தைக் கர்னல் சுழற்றிக்கொண்டே மேலே பேச்சைத் தொடர்ந்தான்: ''மஹிபாலை நீங்கள் கண்டிக்க வேண்டாம் என்று நான் கூறவில்லை. ஆனால் அவருடைய 'மூட்'

எப்படி இருக்கிறது என்று பார்த்து அதன்படி பேசுங்கள். வயது வந்த குழந்தைகளை எதிரே வைத்துக்கொண்டு உங்கள் சச்சரவுகளை நடத்தினுல் அவர்களுக்கு விஷயமெல்லாம் புரிந்துவிடும். காலம் எப்படிக் கெட்டுக் கிடக்கிறது என்பது உங்களுக்கு நன்ருகத் தெரியும். பருவத்திற்கு வந்த குழந்தைகள் நம்மைவிட்டுக் கை நழுவிவிட்டால்—''

''இந்தக் காரணத்தால்தான் நான் இவருடன் கடுமையாகப் பேசுகிறேன், வேறு ஒன்றுமில்லை.'' இவ்வளவு நேரத்திற்குப் பிறகு கல்யாணி மனம் திறந்து பேசினுள். மஹிபாலின் புருவங்கள் வளைந்தன - கண்களைச் சுழற்றி சுழற்றி ஏதோ 'ஹிப்னுடிசம்' செய் பவனைப்போல் மனைவியை உற்றுநோக்கினுன். கல்யாணி ஆத்திரம் கொண்டிருந்தாலும் அடக்கமான குரலில் பேசினுள்: ''என்னுல் எதையும் பொறுத்துக்கொள்ள முடியும். ஆனுல் இவர் செய்யும் நடத்தை கெட்ட செயலை என்னுல் தாங்க முடியாது! ஒரு துளி விஷம் கொடுத்து என்னைக் கொன்றுவிடச் சொல்லுங்கள். இவராஞலும் சரி, குழந்தைகளாஞலும் சரி, நடத்தைகெட்டு நடந்துகொள்வதை என்னுல் சகித்துக்கொண்டு இருக்க முடியாது.'' கல்யாணியின் முகத்தில் ஒளி வீசிற்று.

இந்த ஒளிதான் மஹிபாலின் மனத்தில் உள்ள லட்சியம். இந்த லட்சியத்தை அவன் எவ்வளவு முயன்றபோதிலும் தன் சொந்த வாழ்வில் அடையமுடியவில்லை. கல்யாணியின் பிடிவாதமும், கடும் வீம்புமே இதற்குக் காரணம். ''இவள் என் இலக்கியப்படைப்புக்கு ஒருபோதும் ஊக்கமளிக்கும் வகையில் நடந்துகொள்ளவில்லை. எப்போதும் எனக்கு மாருகவே நடப்பாள். பதிவிரதையாகவும், ஒளி வீசும் சீலமுடையவளாகவும் இருந்துவிட்டால் மட்டும் போதுமா என்ன?—சரியான மக்கு, முட்டாள்.'' சொற்களும் எண்ணங்களும் நதியின் அலைகளைப் போன்று ஒன்றன்பின் ஒன்ருக ஓடி வந்தன. மஹிபால் கர்ஜித்தான்: ''நான் உன் அப்பனுக்கு அடிமையல்ல, தெரிந்ததா? உனக்கு அக்கறையிருந்தால் என் னுடன் இரு; இல்லாவிட்டால், இனி என்னுல் ஒரு கணம்கூடப் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. அகந்தை பிடித்த சுய நலக்காரி! கீழ்த்தரமானவளே!''

கர்னல் உடனே எழுந்து அவனது வாயைக் கையால் மூடினுன். மெதுவான குரலில் கடிந்துகொண்டான்: ''மஹிபால்! உனக் கென்ன வந்துவிட்டது? எல்லாக் குற்றமும் உன்னுடையதுதான் என்பது இப்போது புரிகிறது.''

''உளருதே!'' மஹிபால் கர்னலையும் திட்ட ஆரம்பித்து விட்டான். ஆனுல் கர்னல் சற்றும் பகுத்தறிவை இழக்காத நிலையில் இருந்தான். இம்மாதிரி மனநிலையைக் கர்னல் அடையும்

போதெல்லாம் சண்டையிடும் கட்சிகள் ஒப்பந்தத்திற்கு வருவதைத் தவிர வேறு வழி கிடையாது. இல்லாவிட்டால் வேருெரு கட்சி கர்னலுடன் சண்டைக்குத் தயாராக இருக்கவேண்டும். லாலா நகீன் சந்த், அதாவது கர்னல் சாஹேப் எத்தனையோ உற்ருர் உறவினரின் வீடுகளை இரண்டுபடாதபடி காப்பாற்றியுள்ளான். கர்னல் தன் கை விரலை நீட்டியபடியே கூறினுன்: ''இதோ பார்! இந்த உருட்டலுக்கும், மிரட்டலுக்கும் அஞ்சுபவனல்ல நான்; சீரியஸ் மூடில் இருக்கிறேன். புரிந்ததா? இப்போது நான் உன்னைச் சேர்ந்தவனுமில்லை, அண்ணியின் கட்சியைச் சேர்ந்தவனுமில்லை. எனக்கு எது உண்மை என்று படுகிறதோ அதைத்தான் பேசுவேன். மறுபடியும் கூறுகிறேன்; குற்றம் முழுவதும் உன்னுடையதுதான். அண்ணியைப்போன்ற கற்புக்கரசியின் கால் தூசிகூட நீ பெறத் தகுந்தவனல்ல. பெரிய இன்டெலெக்சுவல் (அறிவாளி) என்று சொல்லிக் கொண்டால் என்ன பயன்?''

தான் அமர்ந்திருந்த நாற்காலியைக் கர்னல் இழுத்துவிட்டது போல் மஹிபால் கருதினுன். சஜ்ஜனின் முன்னிலையில் இவ்விதம் அவன் பேசியிருந்தால் அதனைத் தவருக எண்ணியிருக்க மாட்டான். ஆனுல் கல்யாணியின் முன்னிலையில் தன்னை அவன் கடிந்து கொண்டது மஹிபாலுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. தன்னை எப்படியோ சமாளித்துக்கொண்டு, மனைவி தன்னை வெற்றிவீரன் எனக் கருதுமளவுக்குக் கர்னல்மீது ஒரு பாய்ச்சல் பாய முற்பட்டான், மஹிபால். அதற்குள் கர்னல் ஒரு கடுமையான உண்மையைக்கூறி அவனது வாயை மூடிவிட்டான். கர்னல் கூறினுன்: ''ஆசிரியர் என்ற முறையில் நீ மனிதப் பண்பை எவ்வளவு நன்கு புரிந்து கொண்டிருந்தபோதிலும், மனிதத்தன்மையை நீ இன்னும் நன்கு உணர்ந்துகொள்ளவில்லை. அண்ணி சற்றுப் பிடிவாதம் பிடிக்கும் சுபாவம் உள்ளவர் என்ருலும் நீ சரியான முட்டாள் என்பதிலும் சந்தேகமில்லை. இத்தனை ஆண்டுகள் இவருடன் வாழ்ந்தும் இவருடைய உள்ளத்து உணர்ச்சிகளை உன்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. சிறிது நேரத்துக்குள் நான் புரிந்துகொண்டு விட்டேன். இந்தப் பெண்மணி மிகச் சிறந்த எண்ணங்கள் கொண்ட தேவி. இப்படிப்பட்டவர் யாராயினும் சரி, அவரால் எந்த அழுக்கடைந்த எண்ணத்தையும் செயலையும் சகித்துக் கொண்டிருக்க முடியாது. உன்னையே எடுத்துக்கொள்ளேன். உனக்குப் பிடிக்காத சில சின்னத்தனங்களை நீ கண்டால் ஆத்திரத்தால் பொங்குகிருயா இல்லையா? நானே நூறு தடவைகள் உன்னை அம்மாதிரி நிலையில் கண்டிருக்கிறேனே!''

சிற்சில சமயங்களில் நோயாளிக்குச் சுத்தமான காற்றே தீங்கை விளைவித்துவிடும். கர்னலின் பேச்சு மஹிபாலுக்கு அப்படித்தான்

இருந்தது. அவனுக்குள்ளிருந்த உண்மை வெளிப்பட்டது. அமைதியுடனல்ல, ஆத்திரத்துடன். அவன் தலையை நிமிர்த்திக் கொண்டு கர்ஜித்தான்: ''எனக்குத் தெரியும். எல்லோருடைய முன்னிலையிலும் இதைச் சொல்லவும் தயார். கல்யாணி என்னை விட மிகச் சிறந்தவள்தான். நானும் பதினெட்டு ஆண்டுகள் வரையில் ஒரே மனையாளை ஏற்று வாழ்ந்து வந்தேன். இவளுடைய முட்டாள்தனத்தில் வெறுப்புக் கொண்டிருந்த போதிலும் இவளிடம் எனக்குச் சொல்லொணு அன்பு உண்டு; மதிப்பு உண்டு! எது எப்படியானுலும் சரி; நான் கல்யாணியின் முன்னிலையில் கூறுகிறேன். 'சீலாவிற்கும் எனக்கும் உள்ள காதலில் ஒருவிதமான ஆபாசமும் எனக்குத் தெரியவில்லை; என் சீலாவை வெறுப்பவர் களிடம் எனக்கும் வெறுப்பு உண்டு!' புரிந்து கொள்ளுங்கள்.''

'என்' என்னும் வார்த்தையில் அழுத்தம் இருந்தது; அந்த வார்த்தை வேலைசெய்யத் தொடங்கியது. கல்யாணி ஆத்திரத்தில் பொங்கினுள்; மூச்சுத்திணற விழித்தாள். 'என்னைப் பாதாளத்தில் ஆழ்த்திவிட்டாயே' என்று கூறுவதுபோல் மஹிபாலைப் பார்த் தாள்.

ஆவேசத்தில் மொழிந்துவிட்டுக் கள்ளனைப்போல் மஹிபால் தன் மனைவியை நோக்கினுன். அப்போதுதான் புகார் செய்யும்விதத்தில் கல்யாணி அவனைப் பார்த்தாள். கண்கள் சந்தித்தது ஆபத்தாகி விட்டது; மஹிபால் இப்போது உண்மையால் தாக்குண்டிருந்தான். ''கணவன்—மனைவியின் உறவு பிளவுபடாதது; நிரந்தரமானது. இதை நான் முறித்துவிடப் போகிறேன். ஆண்—பெண் உறவு மிகப் பெரிய பிணைப்பாகும்படி அவர்கள் கணவன்—மனைவியாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. கல்யாணி கற்புக் கரசியாக இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டுமே. நான் கடைய ஞயினும் சிறந்தவன். சீலா என்னை ஆக்க வேலையில் ஈடுபடுத்து கிருள். நான் சீலாவின் உயிரில் உறைந்திருக்கிறேன். சமுதாயம் இதனை நேர்மையற்றது என்று கருதும். சமுதாயம் கிடக்கிறது, சனியன்! அது ஒரு பொருட்டா என்ன?''

மஹிபால் திடீரென்று உணர்ச்சிவசப்பட்டு எழுந்தான். கர்னலிடம் கூறினுன்: ''கர்னல், நான் போகிறேன். என் வரு மானத்திலிருந்து எழுபத்துஐந்து ரூபாய் எனக்கென்று எடுத்துக் கொண்டு, மீதியை உன் வழியாக இவளுக்கு மாதந்தோறும் அனுப்பிவிடுகிறேன்.''

மஹிபால் வாசற்கதவருகே சென்றுன்; கல்யாணி, கர்னல் இரு வருமே திகைத்தனர். கர்னல் கேட்டான்: ''இனிமேல் சீலாவின் வீட்டிலேயே இருப்பதாக எண்ணமோ?''

மிகவும் எளிமையாகக் கேட்ட கேள்வி மஹிபாலுக்குக் குத்த

லாகப் பேசியது போன்றிருந்தது. ''நான் பெண்களின் காசில் வாழும் நாயில்லை!''

வாழ்வே மண்ணாய்ப் போகும் தருணத்தில் இருக்கிறோமென்று கருதிய கல்யாணி, எப்படியோ தன்னைச் சமாளித்துக்கொண்டு கூறினாள் : ''குழந்தைகளுக்கு நான் என்ன பதில் சொல்வேன்? உலகத்தில் எப்படி என் முகத்தைக் காண்பிப்பேன்?''

''உனக்கென்ன? நீதான் கற்புக்கரசியாயிற்றே! உன்னை யார் என்ன சொல்லப் போகிறார்கள்? என் போன்ற கடையனைத்தானே காறி உமிழ...''

''இன்று சகுந்தலாவைப் பார்க்க முராதாபாதிலிருந்து எல்லோரும் வரப் போகிறார்கள், அதற்காகத்தான் இவரை அனுப்பி வைத்தேன்.''

மஹிபாலின் ஆவேசம், தீர யோசிக்கும் பண்பு, சங்கற்பம், சபதம் எல்லாம் இதை கேட்டுப் பறந்தோடி விட்டன. களவாடிய வீட்டில் திடீரென அந்த வீட்டுத் தலைவனைக் கண்டதும் கள்ளன் தன்னை மறைத்துக்கொள்ளத் தவிப்பது போல் புதிய தலைமுறையின் பிரச்னைகளைக் கண்டதுமே மனைவி, காதலி, அன்பு முதலியவற்றின் பிரச்னைகள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன. ஆயினும் மஹிபால் தன் பிடிவாதத்தை விடாமல் பேசினான் : ''யார் வந்தால் இனி எனக்கென்ன? எனக்கும், உனக்குமிடையே ஒரு விதமான தொடர்பும் கிடையாது.''

கர்னல் கூறினான் : ''மஹிபால் சிறு பிள்ளைத்தனமாக நடந்து கொள்ளாதே. இந்த அம்மாளுடன் நீ சண்டை போட்டுக்கொள்வாய். ஆனால் குழந்தைகளை எதிர்த்துக்கொண்டு எங்கே போவாய்? இரண்டு நாளாக உன் வீட்டின் நிலைமை எப்படி, என்ன என்று கவனித்தாயா?''

''இந்த இரண்டு நாளாக நான் எப்படித் தவித்தேன் என்பதும் உனக்குத் தெரியாது. கல்யாணியுடன் நான் ஒரு விதமான சமாதானத்திற்கும் வர முடியாது. இது என் உறுதியான முடிவு.''

''இதோ பாருங்கள்!...''

''என்னத்தைப் பார்க்கிறது; இருபத்து நாலு வருஷங்களாக உடன் வாழ்ந்திருந்தும் என்னைப் புரிந்து கொள்ள முடியாத பெண்ணுடன் இனி நான் ஒருவிதமான உறவும் வைத்துக் கொள்ளப் போவதில்லை.''

''சீலாவின் வீட்டில் நீ இருக்கப் போவதில்லை. என்னுடனோ, சஜ்ஜனுடனோகூட இருக்கத் தயாராக இல்லை...''

நேற்றைக்கு முந்திய நாள் இரவைத் தான் கழித்த அந்தச் சிவன் கோவிலும், கோமதி நதிக்கரையும் கண் முன் வந்து நின்றன. தெய்விகமான இருக்கை மட்டும் அல்ல, இப்போது அது அவனுக்கு

அழகிய புகலிடமாகவும் காட்சி அளித்தது. சிவன் கோவிலின் நினைவு வந்ததுமே கல்யாணி, சீலா இருவருமே தம்முடைய பிரச்னைகளனைத்தையும் திரட்டிக்கொண்டு அவனுடைய உள்ளத்தினின்றும் வெளிக் கிளம்பி விட்டனர். ஒரு புத்துணர்ச்சி அவனை ஆட்கொண்டது. அவன் கூறினான்: "என் போன்ற இலக்கிய கர்த்தாவிற்கு அரண்மனை வாழ்வு தேவையில்லை. கட்ட ஒரு கோவணம், குடிக்க உப்பில்லாக் கஞ்சி .."

கர்னல் கூறினான்: "எனக்குத் தெரியும். ஆனால் நான் சொல்வதைக் கேள்; வீட்டில் நடக்க வேண்டியதைக் கவனி. இவர் பாவம் நேற்றிலிருந்து கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார். பெண் பார்க்க வேறு யாரோ வரப் போகிறார்கள். நான் உன்னை அழைத்துச் செல்லலாம் என்று வரவில்லை. உன் 'மூட்' எப்படியிருக்கிறதோ, அதன்படி நீ நடந்து கொள்வாய் என்று தெரியும். பாவம், அண்ணி படும் அவதியைப் பார். இன்று அண்ணியைச் சந்திக்க முடிந்தது. இனி நான் இங்கு நினைத்தபோது வரலாம். ஒளிவு—மறைவு—இன்றிப் போகலாம்..." கர்னல் சூழ்நிலையைச் சற்று மாற்றியமைக்க முற்பட்டான்.

கல்யாணி மனநிறைவுடன் காணப்பட்டாள். கர்னல் சொற்பொழிவைச் சற்றே நிறுத்திவிட்டுப் பிறகு மறுபடியும் ஆரம்பித்தான்: "அண்ணி என் போன்ற கடையனின் வீட்டில் நீங்கள் ஏதாவது சாப்பிடுவீர்களோ, மாட்டீர்களோ, தெரியாது. ஆனால் இனிப்புப் பண்டம் சாப்பிடாமல் உங்களைப் போக விடமாட்டேன். இதோ ஒரு நொடியில் வந்துவிட்டேன்." என்று கூறியபடியே கர்னல் வேகமாக அறைக்கு வெளியே வந்தான்.

கணவன்—மனைவி இருவருக்கும் தனிமை கிடைத்தது. கல்யாணி கண்களை அகல விரித்துக் கருணை ததும்பத் தன் கணவனைப் பார்த்தாள். அந்தப் பார்வையை எதிர்க்க மஹிபாலிடம் தெம்பு கிடையாது. இன்றையச் சமாதானம் அவனுக்குப் பிடிக்கவில்லை. அலெக்சாண்டரின் முன்பு தோல்வியுற்ற புருஷோத்தமனுடைய நிலை போல் இருந்தது, மஹிபாலின் நிலைமை.

* * * *

வீடு திரும்பிய மஹிபாலின் நிலைமை விசித்திரமாக இருந்தது. இரண்டு நாட்கள் வரை வெளியே இருந்துவிட்டுக் குழந்தைகளின் முன்னிலையில் வர அவன் சங்கோசமடைந்தான். வளரும் குழந்தைகள். இதை நினைத்த மாத்திரத்தில் அவனுக்குக் கல்யாணியின் பேரில் ஆத்திரம் மூண்டெழுந்தது. வீடு வந்து சேர்ந்தும் அவனால் வீட்டிற்குள் நுழைய முடியவில்லை. கடிதங்கள் போடப்படும் பெட்டியிலிருந்து கடிதங்கள் எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தன.

கல்யாணி கூறினுள், ''அறையின் சாவியை இப்படித் தந்துவிட்டுப் போங்கள்.'' மஹிபால் இன்னும் தெருவில் உலாவிக் கொண்டிருந்தான். அண்டை வீட்டுக்காரர் ஒருவர் தம் வீட்டிற்குள் நுழைவதை அவன் கண்டான். வணக்கம் தெரிவித்துக்கொண்ட பிறகு அவர் கேட்டார்: ''பண்டித்ஜி! யாருக்கு நீங்கள் ஓட்டுப் போடப் போகிறீர்கள்?''

''நாசமாய்ப் போச்சு! எனக்கு இதெல்லாம் வெறுப்பாக இருக்கிறது.''

அண்டை வீட்டவருக்கு இந்தப் பதில் திருப்தி அளிக்கவில்லை. முகத்தை கோணிக் கொண்டு பேசினுர்: ''அது சரி. நீங்கள், கர்னல் சாஹேப் முதலியவரெல்லோரும் கம்யூனிஸ்டுகளை ஆதரிக்கிறீர்களாமே! விமானத் துண்டுப் பிரசுரம் பிரமாதம்! இப்படிப்பட்ட பிரசாரம் இதுவரையில் எந்தக் கட்சியும் செய்யவில்லை என்று அதைப் படித்தவரெல்லோரும் பேசிக்கொண்டார்கள். ஹி ஹி.. ஹி...!''

மஹிபாலுக்கு ஆத்திரம் வந்தது! ஆயினும் அவன் பேசாமல் இருந்தான். அதே நேரத்தில் கல்யாணி கதவருகே வந்தாள். எப்படியோ நண்பரிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு மஹிபால் வந்தான். ''குளித்துவிட்டுச் சாப்பிட வாருங்கள்'' என்ருள் கல்யாணி.

''குழந்தைகளுக்குப் போடு!'' என்ருன் மஹிபால்.

''எல்லோரும் சாப்பிட்டுவிட்டுக் கிளம்பி விட்டார்கள். தப்பூ, ரஜ்ஜோ, சக்கு மூன்று பேர்தான் இருக்கிருர்கள்.''

''ஏன்?''

''சக்குவை இருக்கச் சொன்னேன். ரஜ்ஜோ கூடமாட ஏதாவது உதவட்டுமே என்றுதான்—''

மஹிபால் பேசாமல் அறைக்குள் சென்ருன், கடிதப் பெட்டியில் இரண்டு கடிதங்களும் ஒரு பத்திரிகையும் இருந்தன.

கல்யாணி சென்று விட்டாள். குழந்தைகள் வீட்டில் இருந்ததால் மஹிபால் உள்ளே கல்யாணியுடன் செல்லவில்லை. புதிய பத்திரிகை ஒன்று அமர்க்களமாக வெளியிடப்பட்டிருந்தது. கடிதங்களில் ஒரு கவர் வானெலியிலிருந்து வந்திருந்தது. மஹிபால் பத்திரிகையைப் படிப்பதில் மனம் ஊன்றி விட்டான். படங்கள் தாம் அதிகமாக இருந்தன. படிக்கும் விஷயம் மிகக் குறைவு. இவற்றைப் புரட்டிப் பார்த்தபடியே வெகு நேரம் இருந்தான். பிறகு ரேடியோ உறையை மஹிபால் பிரித்தான். பேச்சுப் பற்றிய 'கான்டிராக்ட்' இருந்தது. தொடர் வரிசையில் ஒரு பேச்சு அது 'நான்காம் போர்—ஆண்—பெண் இடையே' என்று தலைப்புப் தரப்பட்டிருந்தது. மஹிபால் சிரித்தான். நான்காம்

போர் ஆண்—பெண்டிரிடையேதான் நேரிடும். பொருளாதார பேதநிலே அழிந்து போனதால் முக்கியமான பிரச்னே ஆடவர்—பெண்டிரைப் பற்றித்தான் இருக்கும்; பேச்சு சுவாரஸ்யமாக இருக்கும் என்று மஹிபால் கருதிஞன். மற்ருெரு கடிதத்தைப் பிரித்தான்.

"சௌ. கல்யாணிக்கு உன் அண்ணனுடைய ஆசிகள்—" தவறுதலாக மஹிபால் பிரித்து விட்டான். அது கல்யாணிக்கு வந்திருந்த கடிதம். இதுவரையில் வீட்டிற்கு வரும் கடிதங்களே அவன் பிரித்துப் படித்தது கிடையாது. இப்போது ஏஞே படித்து விட்டான். அவனுடைய இரத்தம் கொதித்தது. கல்யாணி தன் அண்ணனிடம் கொஞ்சம் பணம் கேட்டிருந்தாள் இப்போது தனக்கும் முடையாக இருக்கிறது என்று எழுதியிருந்த அண்ணன் தன் நிலே பற்றி ஒரு குரல் கடிதத்தில் அழுதிருந்தான் தன் தந்தை அவனே அவமானப்படுத்திய காரணத்தால் தான் தம்பியின் திருமணத்திற்கு லக்ஞே செல்லவில்லே என்று எழுதியிருந்தான். திருமணம்பற்றிய முழு விவரமும் தன் தங்கையிடம் கேட்டிருந்தான். கடைசியாக ஒரு வாக்கியம் எழுதியிருந்தான், "நம் ஆசிரியர் எப்படி இருக்கிருர்? இப்போது ஆர்ட்டிஸ்டின் தொழில் சற்று மந்தமாகிவிட்டதா?"

மஹிபால் சினத்தால் சுயநினேவையிழந்து விட்டான். பழி வாங்கி விட்டு மறு வேலே என்னும் சங்கற்பத்திற்கு அது அவனே கொண்டு விட்டது; அவனுடைய முகபாவம் மாறி விட்டது. மஹிபால் தன் அறையை விட்டு விட்டு முற்றம், தாழ்வாரம் எல்லாவற்றையும் கடந்து பெரிய அறையை அடைந்தான். அங்கே தப்பூ உட்கார்ந்து தன் கிழிந்த பட்டத்தைச் சேர்த்து ஒட்டிக் கொண்டிருந்தான். அவன் தந்தையின் உருவத்தைப் பார்த்துத் திகைத்து விட்டான். கல்யாணியின் குரல் கேட்டது: "சற்று அங்கேயே இருங்கள்!" சகுந்தலா வரப் போகும் விருந்தினர்களுக்காக மாதுளே முத்துக்களே உதிர்த்துத்தட்டில் போட்டுக் கொண்டிருந்தாள். ரஞ்ஜோ தாயின் அருகே அமர்ந்துகொண்டு தேநீர்க் கோப்பைகளேத் துடைப்பதில் முனேந்திருந்தாள். தொன்னேகளிலிருந்த இனிப்புப் பண்டங்களே அழகான சித்திர வேலேப்பாடமைந்த தட்டுகளில் கல்யாணி சீர்ப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தாள். ஒரு வயதுக் குழந்தை கிண்ணத்திற்குள் டம்ளரை வைக்க அரும்பாடுபட்டுக் கொண்டிருந்தான். மஹிபால் வாசற்படியருகே வந்ததும் காலனே வந்துவிட்டாற் போன்று எல்லோரும் கருதினர். மஹிபாலுக்கு இப்போது கல்யாணியைத் தவிர வேறு ஒருவரும் தென்படவில்லே. அவனுடைய கையில் கடிதம் இருந்தது. குரல் கடுமையாக இருந்தது. அவன் கல்யாணி

யிடம் "என்னுடன் வா இங்கே!" என்று கூறிச் சென்று விட்டான். கல்யாணி கணவனின் முகபாவத்தைக் கண்டதுமே கல்லாய்ச் சமைந்து விட்டாள். உடனே கையைக் கழுவிக் கொண்டு ஓடினாள். அவளது நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது.

கூட்டமின்றி அமைதியாய் மஹிபால் உட்கார்ந்துகொண்டு எழுதும் ஒரு பெரிய அறை இருந்தது. கல்யாணி அறைக்குள் வந்தவுடனே அவன் கதவைத் தாழிட்டான். சூனியமான பார்வையுடன் கல்யாணி அவனைப் பார்த்தாள். சிவந்த கண்களுடன் அவளைப் பார்த்து மஹிபால் கேட்டான்: "நீ உன் அண்ணனிடம் பணம் கேட்டிருந்தாயா?"

இதைச் செவியுற்றதுமே கல்யாணி நடுங்கி விட்டாள். "ஆமாம்" இல்லை" என்று ஒன்றுமே அவளால் கூற முடியவில்லை. மஹிபால் மறுபடியும் கேட்டான்: "சொல், ஏன் பணம் கேட்டாய்?"

"போன மாதம் உங்களுக்கு ராயல்டி பணம் வரச் சில நாட்களாகும் என்றீர்கள். தம்பிக்குத் திருமணம்..."

"மண்ணாங்கட்டி! ஏன் அவனை ரூபாய் கேட்க வேண்டும்? பிறருக்கெதிரே என்னை அவமானப்படுத்துகிறாயே, நீ!"

"அடுத்த வீட்டில் பணம் கடன்."

"அடுத்த வீடோ, கொடுத்த வீடோ; என்னைக் கேட்காமல் ஏன் கடன் வாங்கினாய்? என்னிடம் ஏன் சொல்லக்கூடாது? மற்றவர்கள் நான் கொடுமைக்காரன் என்று சொல்லும்படி நீ ஏன் செய்கிறாய்? சொல்!"

"தப்பு நடந்துவிட்டது!"

"தப்பு!" படார் என்று கல்யாணியின் கன்னத்தில் ஓரடி விழுந்தது. ஆறு குழந்தைகளுக்குத் தாய், முப்பத்தெட்டு வயது நிரம்பிய பெண்மணி உடல் வேதனை, உள்ளத்து வேதனை, இரண்டையும் தாங்கிக்கொண்டு பிரமித்து நின்றாள். "நாசமாய்ப்போக! நீ என் மானத்தை வெளியேற்றவே தோன்றி இருக்கிறாய்! சீ!சீ!சீ!" என்று கூவினான் மஹிபால்.

ராஜ்யஸ்ரீ கதவருகே நின்றுகொண்டிருந்தாள். சகுந்தலாவும் அவளும் தந்தையின் உருவத்தைக் கண்டதுமே, சண்டை மூண்டு விட்டது என்று உணர்ந்துகொண்டனர். டாக்டர் சீலாவின் காதல்தான் இதற்குக் காரணம் என்று எல்லாக் குழந்தைகளும் தெரிந்துகொண்டிருந்தனர்; ஆகையால் முழு விவரத்தையும் அறிந்துகொள்ள ரஜ்ஜோ ஓடோடியும் வந்தாள். 'வீல்' என்று அம்மா அழுததும், "வாய் திறந்து ஓசை வந்ததோ, ஜாக்கிரதை'" என்று தந்தை மிரட்டியதும் அவர்கள் செவியில்பட்டன. விசித்துக் கொண்டு தாய் அழுவதையும், முணுமுணுவென்று தந்தை வசை மாரி பொழிவதையும் கேட்ட ராஜ்யஸ்ரீ அழுதாள். தாழிடப்

பட்டிருந்த கதவைஅவள் அழுதுகொண்டே வேகமாகத் தட்டினுள். ''அப்பா! அப்பா! கதவைத் திறவுங்கள். அம்மாவை அடிக்கா தீர்கள்! அப்பா! தயவு செய்து அடிக்காதீர்கள்! சக்கு அக்கா நீயும் வாயேன்!'' அழுகையை அடக்கிக்கொண்டு உணர்ச்சிபொங்கக் கத்தும் குரல் கேட்டது.

கதவு உடனே திறந்துவிட்டது. கல்யாணிதான் திறந்தாள். ராஜ்யஸ்ரீ தாயைத் தழுவிக்கொண்டாள். கல்யாணி எவ்வளவோ முயன்று பார்த்தாள். அவளால் வருத்தத்தை அடக்க முடிய வில்லை. மஹிபால் முகத்தைத் திருப்பிக்கொண்டு நின்றிருந்தான். அவனுடைய வன்முறைச் செயலும், அதே சமயம் வெட்கமும் அவனைப் பின்னிக் கொண்டன. மகளின் முன்னிலையில் தலையிரக் கமே சக்தி பெற்றுவிட்டது.

இதற்குள் அநாமிகாவை இடுப்பில் எடுத்துக்கொண்டு சகுந்த லாவும் வந்துவிட்டாள்.

கண்ணீரைத் துடைத்துக்கொண்டு கல்யாணி பெண்களிடம் கூறினுள்: ''போங்கள், நான் வருகிறேன்.''

ஆனுல் குழந்தைகள் அங்கிருந்து அசையவில்லை. மஹிபால் திடீ ரென்று கதவருகே வந்தான். ரஜ்ஜோவும் கல்யாணியும் மாடிப் படி அருகே வந்துவிட்டனர். மஹிபால் கல்யாணியின் கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான்: ''என்னை மன்னித்து விடு'' குழந்தைகளிடமும் அவ்விதமே கூறிவிட்டுச் சென்றுவிட் டான். சலசலப்பு நிறைந்த தெருக்கள், பெரிய வீதிகள், எல்லா வற்றையும் கடந்து நடந்தான். மியூசியம் ஒன்று தென்பட்டது. அதன் சூனியமான போர்ட்டிகோவில் தன் சிதைந்த உள்ளமும் அங்கு வைக்கப்பட வேண்டிய பொருள்களில் ஒன்று போலக் கருதி மஹிபால் உட்கார்ந்துவிட்டான்.

ஒரு நீண்ட மூச்சு இரண்டு துண்டுகளாகப் பிரிந்து வெளிப் பட்டது. அவனுடைய உள்ளம் இரவு நேரத்தின் நிசப்தத்தைப் போன்றிருந்தது. பாவம்—புண்ணியம்; நீதி—அநீதி அவனுக்கு எங்குமே இடம் கிடையாது! அவனுடைய உள்ளம் தடைப்பட்டுக் கிடந்தது. அவன் இரக்கச் சித்தமுடையவன்! சிந்தனையாளன், பகுத்தறிவு படைத்தவன். தனக்கெனச் சில கோட்பாடுடையவன்; அவன் கொடுஞ்சித்தமுடையவன், சிந்தனையற்றவன், அவிவேகி: கொள்கையற்றவன். நல்லது—தீயது என்னும் இருதரப்பட்ட எல்லைகளாலும் சூழப்பட்டு அவன் அவதியுற்றுன். அடே! அதிருஷ்டமற்றவனே! நீ எங்கே செல்வாய்? என்ன செய்வாய்? நீ கௌரவ குலத்து துரியோதனனைப்போல் நியாயம் என்பதை அறிந்தவன்; ஆனுல் உனக்கு அதில் நாட்டம் கிடையாது. அநீதத் தையும்பற்றி நீ தெரிந்துகொண்டிருக்கிறுய், ஆனுல் அதினின்றும்

நீ விடுபட்டவனல்ல. ''என் உள்ளே இருக்கும் தெய்வம் என்னை எப்படி இயக்குகிறதோ, அவ்விதம் நான் இயங்குகிறேன். ஆனால் இப்போது அந்தத் தெய்வமும் ஒன்றும் பேசமாட்டேன் என்கிறது; என்னை ஒருவிதமான செயலையும் புரியத் தூண்டவில்லை.''

சகுந்தலாவின் திருமணம், குழந்தைகளின் கல்வி, அவர்களுடைய நலன்களில் நாட்டம், மனைவியிடம் அன்புடன் உண்மையாக நடந்துகொள்ளும் நேர்மை, இலக்கியகர்த்தா என்ற முறையில் நாட்டிற்கு ஆற்றவேண்டிய கடமை, எழுத்தாளன் என்ற முறையில் சாகாப் புகழ் பெறவேண்டும் என்னும் ஆசை, சகலவிதமான சுகங்களையும் அநுபவித்துக் கொண்டு வாழவிரும்பும் கனவு; தவசிகளைப் போல் இலக்கிய சாதனையில் ஈடுபட்டிருக்க விழையும் கற்பனை; எங்கே பார்த்தாலும் தோல்வி, இவற்றிற்கிடையே உயிர் வாழ விரும்பும் மஹிபாலின் போராட்டமும்கூட நலிவடைந்துவிட்டது. எவ்வளவோ சிந்தித்துப் பார்த்தும் அவனால் ஒன்றும் சிந்திக்க முடியவில்லை. எத்தனையோ அலைந்து திரிந்தும் எங்கும் போய்ச் சேரவில்லை, சிதைந்த உருவங்களுக்கருகே ஒரு சிதைந்த மனிதன் அமர்ந்திருந்தான். ஐயோ! ஐயோ!—மஹிபாலின் ஒவ்வொரு மூச்சினின்றும் இதுதான் வெளிவந்தது. முடிவற்ற அவனது நிலையும் இப்போது அதுவேதான்.

## 25

கோவர்த்தன மலையின் பரத்புர் பகுதியில் ஒரு மிகப் பெரிய குளம் இருக்கிறது. அதனருகே விசாலமான மூன்று மரங்கள் காடு போல் வளர்ந்திருக்கின்றன. அவற்றின் நிழலில் சஜ்ஜனும் கன்யாவும் 'லஞ்ச்' சாப்பிட்டுவிட்டுத் தம்மை மறந்த நிலையில் இருக்கிறார்கள். மயில்கள் அகவும் சத்தம் மலையில் எதிரொலிக்கிறது. ஒரு மயில் கத்தியது; மலையிலுள்ள அத்தனை மயில்களும் குரல் கொடுக்க ஆரம்பித்து விடுகின்றன. அவை நிறுத்தியதும் சிறு சிறு புள்ளினங்கள் ஆர்ப்பரிக்கின்றன. வாழ்வின் இன்னல்களில் அவதியுறும் மனிதனுக்குத் தன் மூச்சே செவிகளில் கேட்பது போலிருக்கிறது அந்தக் காட்சி. டிபன் காரியரைக் கன்யா மூடிக் கொண்டிருக்கிறாள். சற்றுத் தொலைவில் இன்னும் ஏதாவது கிடைக்கிறதா என்று நான்கு குரங்குகள் அவர்களையே பார்த்துக் கொண்டிருக்கின்றன. இப்படிக் குரங்குகளைப் பார்த்தபடி அவர்கள் சாப்பிடும்போது மகிழ்ச்சியாக இருந்தது. டப்பியைக் கையால் மூடிக்கொண்டே 'ஸாண்ட்விச்சு'களைச் சாப்பிட்டாள் கன்யா. கோலைக்கண்டு அஞ்சிய குரங்குகள் பழமொழியை உண்மை

என்று நிரூபித்தன. அவற்றுடன் சமாதானமாக இருக்கலாம் எனக்கருதி இவர்களும் பழம், தின்பண்டம் இவற்றின் சில துண்டுகளைக் கண்ணபிரானின், இந்த வாலுள்ள நண்பர்களுக்கு அளித்தார்கள். சஜ்ஜன் கூறினன்: ''காம்ரேட் (தோழி), கொஞ்சம் பேடாக்களை எடுத்து இவற்றுக்குப் போடேன்.''

''இனிமேல் கிடையாது. கீழே நம் டாக்சி டிரைவரும் இருக்கிறன்.''

''ஏன், அவன் தன் சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்துகொண்டிருப்பான்.''

''ஆயினும்—பாவம், தினசரி பழமும், பேடாவும் அவனுக்கு எங்கிருந்து கிடைக்கும்?''

''இந்தக் குரங்களுக்கு மட்டும் தினசரி—''

''மிருகங்களை விட மனிதனுக்கு நான் அதிகமான மதிப்பளிக்கிறேன்.''

''காம்ரேட், (தோழி) கோவர்த்தன மலைக்கு வந்ததும் இந்த 'ப்ரோக்ரசிவிஸம்' (முற்போக்கு வாதம்) எதற்கு? இதை மறந்து விடேன். உயிரினங்கள் யாவும் சமமானவை:

எல்லோரும் ஓரினம்,
எல்லோரும் ஓரிடை,
எல்லோரும் ஓர் நிறை

காம்ரேட் சிகரெட் வேண்டும் போல் இருக்கிறது.''

''பிடியுங்களேன்!''

''முடியாது, கோபாலனின் இந்தப் புனிதத்தலத்திலா?''

''எல்லாம் கோபாலனுடைய தலம்தான்! நான் தள்ளிச்சென்று விடட்டுமா?''

''உள்ளத்திலிருப்பவள் எப்படிச் செல்வாய்?....ஹ....ஹ....ஹ! நான் தோற்றுவிட்டேன்!''

டிபன் பாத்திரங்களை மூடுவதற்கு முன்பு கன்யா நான்கைந்து பேடாக்களைக் குரங்குகளுக்குப் போட்டாள். பிறகு சிரித்தபடியே கூறினள்: ''உங்களைக் கும்பிடுகிறேன். வெற்றி தோல்வியைப்பற்றி என்னிடம் பேசாதீர்கள்.''

''ஏன்?''

''இன்று தோல்வி என்பீர்கள்; நாளைக்கு நான் தோல்வி அடைய வழி செய்வீர்கள். இந்தக் கலையை என்னிடம் காண்பிக்காதீர்கள், கருணைக்கடலே.''

தரையில் வைக்கப்பட்டிருந்த கோட்டின் பையிலிருந்த சிகரெட்டை எடுத்தபடி சஜ்ஜன் கூறினன்; ''ஆர்டிஸ்டின் வாழ்க்கைத் துணைவியானல், ஆர்ட்டிஸ்டின் கலையிலிருந்து எப்படித்தப்புவாயாம்?''

''வாஸ்தவம்! தாசி ஒருத்தியால் 'ஆர்ட்டிஸ்டை' நல்ல 'மூடில்' வைத்திருக்க முடியும். மனைவி எவ்வளவு கெட்டிக்காரியாக இருந்தாலும், அவளால் முடியாது''

தன்னை மறந்த போதை நிலையிலிருந்து சஜ்ஜன் மறுபடியும் தன்னடக்கத்திற்குள் அடங்கிவிட்டான். சிகரெட்டை உதடுகளில் அழுத்திக்கொண்டு தன் உள்ளத்து உணர்ச்சிகளையும் அழுத்திக் கொண்டு அவன் கூறினான்: ''கலைஞர்களின் பேரிலேயே நீ அபாண்டப்பழி சுமத்தி விட்டாயே! எனக்குத் தெரிந்த வரையில் ஆர்ட்டிஸ்ட் எஸென்ஜியலி (கலைஞன் முக்கியமாகப்) புனிதமான உள்ளம் படைத்தவன். வெளிப்படையாக எப்படி அவன் வாழ்ந்தாலும்...''

''வெளிப்படையில் எப்படி இருக்கிறான் என்பதுதானே முக்கியம்! உங்களைப்பற்றிய மட்டும் நான் கூறவில்லை. கலைஞன் தனக்கு ஏற்பட்டுள்ள ஒரு பெரிய குறை காரணமாகத்தான் வருந்தி வருந்தி உணர்ச்சி வசப்பட்டவனாகிறான். விலைமதிப்பிட முடியாத மாணிக்கத்தைக் கலைஞன் தான் போற்றி வளர்க்கிறான் என்பது உண்மைதான். ஆயினும் உணர்ச்சி வசப்பட்டு உருகும் உள்ளம் படைத்திருந்திருந்தும் தன் வேதனையைச் சகித்து சகித்து அவன் கல்நெஞ்சத்தவனாக மாறி விடுகிறான். ஒரு புறம் அவன் ஜடமாக மாறிவிடுகிறான். அவனுக்காகப் பிறர் எவ்வளவு துக்கத்தைச் சகித்து வருகின்றனர், என்பதை அவன் அறவே மறந்து விடுகிறான்.''

''சொல்லி முடித்தாகி விட்டாதா?''

''உம்!'' சஜ்ஜன் கேட்ட முறையைக் கண்டு கன்யா முறுவல் செய்தாள்.

சிகரெட்டின் புகையை இழுத்துக்கொண்டு, புகையை வெளியே விட்டுவிட்டு, கௌடயமடத்துச் சுவரின்மீது பார்வையைச் செலுத்தியபடி சஜ்ஜன் பேச ஆரம்பித்தான்: ''இதோ பார், டார்லிங்! (அன்பே) அலௌ மீ டு அட்ரஸ் யூ லைக் தட் அட் திஸ் மோமண்ட்! (இந்த நேரத்தில் அப்படி உன்னை அழைக்க அநுமதிதா) நான் இப்போது அம்மாதிரி மூடில் தானிருக்கிறேன். உணர்ச்சிகளைப் பொறுத்த வரையில் நீ கலைஞன் என்று கூறி மற்ற மனிதரிடமிருந்து என்னைப் பிரித்து வைக்காதே. கலைஞனாக இருந்த போதிலும் உன்னைப் போன்றவன்தான்; உன் துரதிருஷ்ட அண்ணி, உன் தந்தை, மற்றும் எல்லோரையும் போன்றவன்தான். இந்தக் குரங்குகள், ஆர்ப்பறிக்கும் பறவைகள்-எல்லாவற்றையும் போல் நானும் ஒருவன். பசியும், காம உணர்ச்சியும் எல்லோ ரிடமும் உள்ளது போல் எனக்கும் உண்டு. ஈவு இரக்கம் முதலிய

பண்புகளும், எல்லோரிடமும் இருப்பது போல் எனக்கும் இருக்கிறது—''

''சுருங்கச் சொல்லுங்கள்!''

''சுருக்கமாகச் சொன்னால், வாழ்க்கை ஓரநுபவம். 'டயம்' என்றால் என்ன?—இதற்கு மற்றொரு சொல் என்ன?''

''நேரம்—''

''நேரத்தின் இடைவிடாத சங்கிலி. நேரத்தை அநுபவிப்பது உயிரினந்தான்—அதற்குத்தான் நேரத்தைப் புரிந்துகொள்ளத் தெரியும். மற்ற உயிரினங்களைவிட உயர்ந்த அறிவு படைத்திருப்பதால் மனிதன் இந்த நேரத்தைப் பற்றிய அனுபவத்தை ஆயிரம் விதமாகக் எடுத்துரைக்கத் தெரிந்து கொண்டிருக்கிறான். அநுபவத்தினால்தான் அவனுடைய ஆக்க வேலைகள் மலர்ச்சியடைந்துள்ளன. வாழ்வின் அநுபவந்தான் மனிதனின் வரலாறு. அந்த மனிதன் கலைஞனாயினும் சரி, வேறு யாராயிருந்தாலும் சரி.''

''ஆனால் அநுபவமும் ஊமையின் பேச்சைப்போலத்தான் இருக்கிறது. சொந்த அநுபவத்தை விளக்கிக்கூற முடிவதில்லை. என்னைப்பற்றி உங்கள் அநுபவம் என்ன என்று உங்களால் கூற முடியுமா? நான் உங்களைப் பொறுத்தவரையில் வெறும் உருவம் மட்டுந்தானா? என் உருவமும் நிறமுந்தான் எனக்கு அழகாக அமைகின்றனவா என்ன?''

''இல்லை. என்னைப் பொறுத்தவரையில் உடலழகு மட்டும் வாழ்க்கையின் மிகச் சிறந்த அநுபவம் என்று சொல்ல மாட்டேன், கன்யா. உன்னைக் கண்டு உன் உடலிலிருந்து நான் ஒன்றும் பெற விரும்பவில்லை என்று சொல்வதற்கில்லை. அன்று நான் படாதபாடு உன்னைப்படுத்தினேனே, அப்போதுகூட உன் உடலிலிருந்து நான் சுகம் பெறத்தான் விரும்பினேன். தக்க தருணம் பார்த்துத்தான் அவ்விதம் செய்தேன்.''

''வாய்ப்பைச் சாக்காகக் கொள்வதும் ஓர் அநுபவந்தானே, சஜ்ஜன்?''

''அதிருக்கட்டும்; பிறகு சொல்கிறேன், அன்று உனக்கு மிகவும் கடுமையான அநுபவம்.''

''எனக்கு அன்று கடும் அநுபவம் ஆகவில்லை என்றே வைத்துக் கொள்ளுங்கள், அப்போது?''

''ஆனால், நான் அளித்தது கடும் அநுபவமாகத்தான் இருந்தது.''

''கசப்பாக இருந்திருந்தால் அது பற்றி நீங்கள் பேச மாட்டீர்கள்!''

''நீ மேலாகப் பேசுகிறாய்; நான் அநுபவத்தைப்பற்றிப் பேசுகிறேன், கன்யா நல்லதா.கெட்டதா என்று கேட்கவில்லை.''

"நீங்கள் தானே பேச்சை ஆரம்பித்தீர்கள்" என்று கூறிக் கன்யா புன்முறுவல் செய்தாள்.

அவளுடைய புன்முறுவல் சஜ்ஜனுடைய காம உணர்ச்சியை மகிழ்வித்தது. அவனுடைய உள்ளம் காய்ந்த இரும்பு போல் ஆகி விட்டது. அதனுடைய ஸ்பரிசத்திஞல் தீவிரமான துடிப்பும், வேதனையும் உண்டாயின. அவனுடைய எல்லா எண்ணங்களும் தவிடு பொடியாகிவிட்டன. ஆயினும் கன்யாவின் அந்தப் புன்முறுவல் வேகமாகப் பெருகும் நீரோடைபோல் அவனுடைய நரம்புகளில் போய்ப் பாய்ந்தது. உருவம், சுவை, மணம் இனிய ஒலி, ஸ்பரிசம்—எல்லாச்சுகங்களும் கன்யாவின் புன்முறுவலில் அவனுக்கு ஒருங்கே கிட்டின. பூரணத்துவம், மகிழ்ச்சி இவற்றிஞல் அவனுடைய புற உலகின் இயக்கம் நின்றுவிட்டது. அநுபவங்கள் ஒன்றன்பின் ஒன்ருக அவனேப் பின்தொடர்ந்து வருவது போல் அவன் உணர்ந்தான். நான்கடி தள்ளி உட்கார்ந்திருந்த கன்யா இப்போது அவனது உள்ளத்தில் அமர்ந்திருந்தாள். இந்தச் சொந்தந்தான் அவனுக்குப் பூரணத்துவம் அளித்தது. அவனுடைய எல்லா அநுபவங்களும் இப்போது முற்றுப்பெற்று விட்டன. கோவர்த்தன மலே, புதர், செடி, கொடிகள், புள்ளினங்கள், கௌடீய மடம், வெயிலில் பளபளக்கும் ஆகாய வெளி, அவன், தான் இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கும் கன்யா இவர்கள் யாரும் அந்நியர் அல்லர். இவை எல்லாவற்றிலும், கன்யாவும் அவனும் இரண்டறக் கலந்திருக்கின்றனர்.

விந்தைக்கணந்தான்; அது விசித்திரமான அநுபவம்தான். அந்த அநுபவத்தின் சக்தி, எவ்வளவு தீவிரமானது; ஆஞல் இயற்கை யாக இருக்கிறது. இந்த இயற்கையில் தான் எழில் இருக்கிறது. சஜ்ஜன் அந்த அழகில் நிறைவு பெற்றவன். இந்த நிறைவு அவனுக்குக் கன்யாவிஞல்தான் கிடைத்திருக்கிறது.

எங்கோ சிந்தித்துக்கொண்டிருந்த சஜ்ஜனின் கண்களிலிருந்தும், மகிழ்வுடன் கூடிய முகத்திலிருந்தும் கன்யா விடுபட்டுப் போய்விட வில்லே. அந்த அழகிய முகம் தன் காதலனுடையது; தனக்கு உரியது. கன்யா சஜ்ஜனே நினேத்து உணர்ச்சி வசப்படவில்லே. ஆஞல் பெருமிதம் அடைந்தாள். இந்த அழகான முகத்தைத் தன் இரு கரங்களாலும் அணேத்து முத்தமிடலாம் போல் இருந்தது ஐயோ! இதென்ன இப்படி நினேத்துவிட்டாள். ஆண்டாண்டு களாக அமிழ்ந்து கிடந்த ஆசை இப்போது வெளிப்படையாகப் பேச ஆரம்பித்துவிட்டதே! அவளுக்கு மிகவும் வெட்கமாக இருந்தது. முகம் சிவந்தது; குனிந்தது. சஜ்ஜன் அறிந்துகொண்டு விடப் போகிருனே என்று அவள் தவித்தாள். உள்ளத்து நாணத்தை மறைக்கக் குறும்பாகப் பேசிஞள்.

''கலைஞர் என்ன அநுபவம் பெற்றுக்கொண்டிருக்கிறார்?'' சஜ்ஜன் சுய நினைவிற்கு வந்தான். சற்றே கூச்சத்துடன் கூறினான். ''நான் உன்னிடம் தோற்றுவிட்டேன். இந்தத் தோல்வியிலும் எனக்கு வெற்றிதான், ஆனாலும்.''

''மறுபடியும் வெற்றி தோல்வி என்று ஆரம்பித்துவிட்டீர்களா? உங்கள் 'ஆர்ட்டிஸ்டிக் மூடை' இனி என்னால் தாங்கமுடியாது.''

''ஆனால் கண்ணனுடைய இதழ்களில் இடம்பெற்ற குழலை என் இதழில் வைத்து ஊதமாட்டேன் என்றாளாம் ஒரு கோபிகை!''

''சரி, எழுந்திருங்கள்!''

''ரஸ்கான் எழுதிய அந்தக் கவிதையை நினைவு படுத்திக் கொள்கிறேன், இரு கன்யா.''

''ராதை கூறுகிறாள் கண்ணனைப் போல் மயிற்பீலியைத் தலையில் வைத்துக் கொள்வேன், பீதக ஆடை உடுப்பேன், மணிகளை அணிவேன், கையில் கோலெடுத்துக் கொள்வேன்; ஆனால் அவனுடைய இதழ்களில் மகிழ்ந்த குழலை நான் என் உதட்டருகே கொண்டு செல்ல மாட்டேன் என்கிறாளே: அந்தக் கவிதைதானே!''

''ஆமாம்.

யா முரளீ முரளீதரகீ
அதரான் திரீ அதரா நதரிங்கி

ஆகா! என்ன அழகிய கற்பனை! கன்யா ஜஸ்ட் அ செகண்ட் (ஒரு விநாடி நேரம்...)''

''ஏன்?''

''பேசாதே!''

'ஸ்கெச்' வரைய ஆரம்பித்தான் சஜ்ஜன். கன்யா-ராதையின் கண்ணனைப்போல் வேடந்தரித்த ராதையின் உருவில் காட்சியளிக்கிறாள். கண்ணபிரான் குழலை எடுத்துத்தருகிறான். அவள் வேண்டாம் என்று தடுக்கிறாள்! தடுத்து நிறுத்தும் விரல்களில் இளமை பொங்குகிறது!

கன்யாவிற்கு இந்த விளையாட்டும் பிடித்திருந்தது. தான் கலைஞனை ஆக்கச் செயலில் ஊக்குவிக்கும் சக்தியாக இருக்கிறாள், என்பதையெல்லாம் அவள் நம்பத் தயாராக இல்லை. அதெல்லாம் அவளுக்குப் பிடிக்கவும் பிடிக்காது! அவள் ஓர் ஆடவனிடம் சஜ்ஜனிடம் தன்னைச் சமர்ப்பணம் செய்துவிடத் தயாராகிறாள். அவ்வளவுதான் அவளுக்குத்தெரிந்தது! சஜ்ஜன் கலைஞன்: செல்வம் படைத்தவன். புகழ்பெற்ற ஒருவனுடைய காதலி எதிர்கால மனைவி என்பதெல்லாம் அவளுக்கு மகிழ்வூட்டும் இரண்டாம் பட்சம் எண்ணங்கள். முதல் பட்சம் சஜ்ஜன் ஓர் ஆடவன். அவனை அவள் தனக்கு உரியவன் என்று கூறிக்கொள்ளலாம் என்பதுதான். முந்திய நாள் சஜ்ஜன் தன் வீட்டிற்கு வராதபோது சஜ்ஜனுக்கு

முன்னிலையில் தன்னை அவள் மறந்து விடுகிறாள் என்பதைத் தெளிவாக உணர்ந்துகொண்டாள். இதனை மறைத்துக்கொள்ள வெளிப்படையாக வேறுவிதமாய் அவள் நடந்துகொண்டது இருக்கட்டும். முதல் முதலாக என்றைக்கு, சஜ்ஜனின் கண்களில் அன்பு ஒளிவிட்டதோ, அன்றிலிருந்து அவனுடைய அன்புக்குத் தன்னை அளிப்பதிலிருந்து அவளால் தடைப்பட்டிருக்க முடியவில்லை என்பதையும் உணர்ந்துகொண்டாள். தன்னைத் தடுத்து நிறுத்தும் ஒவ்வொரு முயற்சியிலும் அவள் தோல்வியுற்றாள். சஜ்ஜனுடைய பிடிவாதத்திற்கெதிரே அவள் தாழ்ந்துவிட்டாள். பெண் உரிமை ஆடவரின் கொடுமை, ஆண்களின்மீது அவளுக்கிருந்த வெறுப்பு, தனக்கு முதல் பெருமையளித்துக்கொள்ளும் வழக்கம், சிந்தனை, வேதாந்தம் எல்லாமே சஜ்ஜனுடைய பிடிவாதத்திற்கெதிரே ஒளியிழந்து காணப்பட்டன. சஜ்ஜன் தன் ஆசையின் மறுவடிவந் தானே! காதற்கண்களுடன் எந்த ஆடவன் பார்த்தாலும் சகிக்காத அவள், மூன்று ஆடவர்களின் காதலை உதறித் தள்ளிய அவள், இப்போது சஜ்ஜனுக்கு முன்னிலையில் தோல்வியை ஏற்று நின்றாள். முந்திய நாள் இரவு முழுவதும் கண்ணீர் உகுத்தபிறகும் அவளுக்கு அந்தத் தோல்வியில் அவமானம் ஏதும் ஏற்படவில்லை. நேற்றுப் பகல் நேரத்தில் பிருந்தாவனத்தில் தேடித்திரிந்து மனம் சலித்துக் கண்ணீர் உகுத்த பிறகு அவளுக்குத் தன் எதிர்காலம் இருள் சூழ்ந்து காணப்பட்டது; பயங்கரமான குகை போல் தென்பட்டது. திரும்பி அவள் மதுரா, லக்னோ எங்குமே செல்ல இயலாத நிலையில் தவித்துக்கொண்டிருந்தாள். இனித் தம் நண்பர், உறவினர் ஒருவருக்கெதிரிலும் தென்படக் கூடாது! என்ற முடிவிற்கு அவள் வந்துவிட்டாள். அப்போது 'சேவாகுஞ்ஜ்' என்னும் இடத்தருகே ஒரு தெருவில் சஜ்ஜன் தன்னைப் பெயரிட்டழைப்பதைக்கேட்டாள். அந்தக் குரலைக் கேட்டு அவள் எவ்வளவு மகிழ்ச்சியுற்றாள். ஏதோ ஒரு வீட்டு வாசலில் சஜ்ஜன் நின்று கொண்டிருந்ததைப் பார்த்த அவள் அப்படியே உள்ளம் முறிந்து காணப்பட்டாள். நீண்ட பெருமூச் செறிந்தாள். இரண்டு கைகளாலும் அவள் தன் நெஞ்சைப் பிடித்துக்கொண்டாள். பத்தடி தொலைவில் நின்றுகொண்டிருந்த சஜ்ஜனைக் கூட அவளால் அணுக முடியவில்லை. அவளுக்குத் தலை சுற்றியது. கால்கள் தடுமாறின. சஜ்ஜன் விரைந்து அவளைத் தாங்கிக்கொண்டிராவிட்டால் அவள் தெருவிலேயே மூர்ச்சித்து வீழ்ந்திருப்பாள். அவளுடைய நிலைமையைக் கண்ட சஜ்ஜனுடைய வைராக்கியம் இளகிவிட்டது. அவனுடைய கடுமையான சுபாவம் பொடிப் பொடியான கற்களைப் போல் சிதறிற்று. சஜ்ஜன் அப்போது ஒரு வங்க வைஷ்ணவியின் இல்லத்தில் இருந்தான். அவளிடமிருந்து ஐந்து ரூபாய்க்கு ஏராளமான ஆசிகளைப் பெற்றுக்கொண்டு

வெளியே வந்தான். கன்யாவை அவன் அதே இல்லத்திற்குள் அழைத்துச் சென்றான். கெட்டிக்காரியான வைணவி இன்னும் பணம் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன், உற்சாகத்துடன் பணிவிடை புரிந்தாள். தாழ்வாரத்திலிருந்த தன் கட்டிலின்மீது உடனே தன் கந்தல் கம்பளியை விரித்தாள். கிணற்றிலிருந்து குளிர்ந்த தண்ணீர் கொண்டு வந்து வைத்தாள். சஜ்ஜனிடம் வாங்கிக்கொண்ட பணத்திலிருந்து சாமான்களை வாங்கினாள். தேநீர், பூரி, பாயசம் எல்லாம் தயார் செய்தாள். ராதாமாதவனுக்கு நிவேதனம் செய்தாள். இனிமையாகப் பேசினாள்; கணத்திற்குக் கணம் ஆசி வழங்கினாள். வகிட்டில் குங்குமம் வைத்துக் கொள்ளாமைக்குக் கன்யாவைக் கடிந்துகொண்டாள். விடைபெற்றுக்கொண்டபோது மாதவனின் மாலையைக் கன்யாவிற்கும் ராதாவின் மாலையை சஜ்ஜனுக்கும் அணிவித்து ஆசீர்வதித்தாள். திருஷ்டி கழித்தாள். சஜ்ஜன் தன்னுடைய பர்சைக் கன்யாவிடம் கொடுத்து அதிலிருந்து கிழவிக்குத் தட்சணை கொடுக்கச் சொன்னான். வைஷ்ணவியின் சூனியமான இல்லத்தில் அவர்கள் சுமார் நான்கு மணி நேரம் வரை இருந்தனர். ஆனால் தமக்குள் அதிகம் பேசிக்கொள்ளவில்லை.

''உடல் நிலை எப்படி இருக்கிறது?'' ''தேவலாம்.'' ''எப்போது வந்தாய்?'' ''காலையில்.'' ''டீ சாப்பிடு, இன்னும் கொஞ்சம் வேண்டுமா? கன்யா, என்னை மன்னித்துவிடு.''

இப்படிக் குறிப்பிட்ட சில வார்த்தைகள்தாம் பேச முடிந்தது. இருவரும் மௌன உணர்ச்சி வேகத்தில் திளைத்திருந்தனர். மாலை நேரம். மதுரா திரும்பியதும், வீட்டிற்குப் போவதற்கு முன்பு சஜ்ஜன் கடைக்குச் சென்று எண்ணூற்றைம்பது ரூபாய்க்கு நான்கு சேலைகள் கன்னியாவிற்கென வாங்கினான். தனக்கு விருந்தளித்து வருபவளுக்கும் விலையுயர்ந்த ஒரு சேலை வாங்கினான். கன்யாவின் கால்களில் பழைய காலணிகளைக் கண்ட அவன் பிடிவாதமாகப் புதிய காலணிகள் வாங்கினான். அழகான 'வேனிட்டி பாக்' விலையுயர்ந்த சால்வைகள் வாங்கினான். கன்யா மென்மையாக ஓரிரு முறை தடுத்தாள். ஆனால் சஜ்ஜனுடைய பிடிவாதத்தை எங்குமே அவளால் நிறுத்த முடியவில்லை. சுமார் இரண்டு மணி நேரத்திற்குள் ஆயிரத்திருநூறு ரூபாய்க்குச் சாமான்களை வாங்கிக் கொண்டு சஜ்ஜனும், கன்யாவும் வீடு திரும்பினர். வீட்டிற்குச் சென்று தம் நண்பர்களுக்கு முன்னிலையில் நாங்கள் லைலா—மஜ்னு போன்றவர் என்று காண்பித்துக்கொண்டு, அவர்களுடைய உள்ளத்தில் இருந்த சந்தேக அகழியை நீக்கி விட்டனர். கன்யாவையும் அந்த வீட்டு அண்ணியையும் அழைத்துக்கொண்டு சஜ்ஜன் இரவில் படம் பார்க்கச் சென்றான். இன்று இருவரும் கோவர்த்தனத்திற்கு வந்துள்ளனர்.

சஜ்ஜன் தன் ராதையை ரஸ்கானின் கவிதை போல் ஓவியத்தில் தீட்டியிருந்தான். 'ரஃப் ஸ்கெச்' சிலும் அவள் மயிற் பீலி, மணி மாலை, பீதக ஆடையுடன் அழகாக இருந்தாள். குழல் வேண்டாம் என்னும் கன்யாவின்—ராதையின் அந்தப் பெண் உணர்ச்சி மிக அழகாக அதில் வெளிப்பட்டிருந்தது. சஜ்ஜன் தன் கலைத்திறனைக் கண்டு, தானே பெருமிதம் அடைந்தான். அந்தச் சித்திரத்தையே பார்த்து மகிழ்ந்துகொண்டிருந்தான்; பிறகு ஆழ்ந்த தாகத்துடன் கன்யாவை நோக்கினான்.

கன்யாவின் பிரம்மசாரிணி உடலால் இவ்வளவு சிருங்கார ரசத்தைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அவளுடைய உள்ளம் அவளது கையினின்றும் நழுவ ஆரம்பித்தது. தவிப்புடன் அவள் அவனை நோக்கினாள். சஜ்ஜனுடைய ஆண் உள்ளம் நினைவிழந்து துடித்தது. ஐந்தாறு தினங்களுக்கு முன்பே தன் இல்லத்தில் அவன் கன்யாவைக் கண்டு சுய உணர்வை இழந்திருந்தான்; ஆனால் அந்த மயக்கத்திற்கும் இந்த மயக்கத்திற்கும் பேதம் இருந்தது. கன்யாவின் கண்களில் தன் கண்களின் தவிப்பை வார்த்துக் கொண்டே அவன் டிபன் டப்பாவை உருட்டிக்கொண்டு எழுந்தான். கன்யாவின் தோள்களில் தன் கரங்களைப் போட்டு அவளைத் தன் அருகில் இழுத்துக்கொண்டான். உடல்கள் ஒன்று சேர்ந்து மின்சாரத்தைத் தொட்டாற் போன்ற உணர்ச்சி கொண்டன. கன்யாவின் கண்கள் காதலனின் மயக்கும் கண்களுடன் கட்டுண்டு, அவனுடைய முகபாவத்தினின்றும் தனித்து நின்றன. சிவந்த மேனியளாதலால், முகத்தில் நாணத்தின் சிவப்பும், பயத்தின் வெண்மையும் கலந்து தெரிந்தன. அவளுடைய வலதுபக்கம், ஆடவனின் இடது தோளினால் கட்டுண்டு அவனுடைய இதயத்துடிப்புடன் இணைந்துகொண்டிருந்தது. உடை நிறைய இருந்தபோதிலும் பெண்ணின் உடலுக்கு ஆடவனின் உடலுடைய இயற்கை உஷ்ணம் அமைதி நிரம்பிய போதையை அளித்துக்கொண்டிருந்தது. கன்னங்களில் இருவருடைய மூச்சுக்காற்றும் பட்டது!

''இதோ பாருங்க! அயல் நாட்டு மீன்களை டப்பா நிறைய விழுங்கிவிட்டு, கோவர்த்தனத்திலே வந்து இங்கே காதல் நாடகம் ஆடறுங்களே!''

மடத்துச் சிதைந்த சுவரின்மேல் ஒரு கிழவன் வாயைப்பிளந்து சிரித்துக்கொண்டிருந்தான். கன்யாவின் முகம் சிவந்தது. அவள் நாணத்தால் உருகிப்போனாள். தலைகுனிந்தபடி ஓடினாள். சஜ்ஜனும் பிரிந்து நின்றுவிட்டான்; மேலே பார்க்காமலேயே தன்னுடைய 'ஸ்கெச்புக்', பென்சில், டிபன் டப்பா, கான்வாஸ் முதலியவற்றைப் பையில் போட்டுக்கொண்டு சென்றுவிட்டான். முட்கள்

நிறைந்த நிலத்தில் கன்யாவினுல் வேகமாக ஓட முடியவில்லை. சஜ்ஜன் இருவருடைய வெட்கத்தையும், பரிகாசம் என்னும் திரை போட்டு மூடினுன்: ''நில்லு ஐயா நானும் வருகிறேன்.''

கன்யா நின்றுகொண்டாள். ஆனுல் அந்தப் பக்கம் பார்க்க வில்லை. அவளிடம் சென்று சஜ்ஜன் கூறினுன்: ''அயல்நாட்டுப் பெண்ணே! நீ மீன் தின்றுவிட்டு ஓடுகிருயா?''

கன்யா சமாளித்துக்கொள்ள முயன்ருள். ஆயினும் சிரிப்பு வந்தது. அவள் கூறினுள்: ''போதும் போங்கள்! நீங்கள் மிகவும் பொல்லாதவர்.''

"மான நஷ்ட ஈடு உன்னிடமிருந்து வாங்கிவிடுவேன். நான் என்ன கெட்டகாரியம் செய்துவிட்டேன்! அயல்நாட்டு மீன்களைத் தின்றுவிட்டு...ஐ யாம் சாரி . இந்தப் பெண் என்னைப் பொல்லா தவன் என்று சொல்லுகிருளே.''

சஜ்ஜனுடைய பரிகாசத்தால் கன்யாவின் சங்கோசம் சற்றுக் குறைந்தது. அவள் அவனைப் பார்த்துச் சிரித்தாள். ''நீங்கள் சரியான போக்கிரி'' என்ருள்.

"தாங்க்யூ ஃபர் தி காம்ப்ளிமெண்ட்! பாராட்டுதலுக்கு நன்றி.''

''உண்மையாகத்தான் சொல்கிறேன். என் நெஞ்சு இன்னும் படபடவென்று அடித்துக் கொள்கிறது.''

"நெஞ்சு துடிப்பது உயிர்ச்சக்தி இயங்குவதற்கு அடையாளம். 'ஸ்போர்டிவ் ஸ்பிரிட்'டே (விளையாட்டு உணர்வே) கிடையாது.''

"இல்லாவிட்டால் போகட்டுமே. இனி என் மனசை நீங்கள்தான் பத்திரமாகக் காக்கவேண்டும்; இதைப் புரிந்துகொள்ள முடிய வில்லையா?'' என்பதுபோல் கன்யா சஜ்ஜனை நோக்கினுள்.

"நீ ஒன்றுமில்லாததைப் பெரிதாக்குகிருய்.'' கன்யாவின் பயம் தேவையற்றதாக சஜ்ஜனுக்குப் பட்டது. அவன் துணுக்குற்ருன்: "அந்த மடையன் பார்த்தால் என்ன வந்துவிட்டது? அது ஒரு வேடிக்கையான நிகழ்ச்சி என்று நினைத்துக்கொள்ளேன்.''

"உங்களுக்கு வேடிக்கை! அதுவே எனக்கு வாழ்க்கையின் மிகப் புனிதமான அநுபவம்.''

''சரியான பித்துப் பிடித்திருக்கிறது உனக்கு! ஆண்—பெண் சந்திப்பைப் புனிதம்—புனிதமற்றது என்னும் 'கோடில்' கொண்டு பிணைக்கக்கூடாது. உன் வீட்டு ஆபாசமான நிகழ்ச்சி உன்னை அப்படி மாற்றியமைத்திருக்கிறது. இதில் புனிதமில்லாதது, என்ன இருக்கிறது? என் எதிர்கால மனைவியின் புனிதத்தன்மைபற்றி எனக்கு நம்பிக்கையுண்டு. நான் அவளை ஒருபோதும் ஏமாற்ற மாட்டேன் என்பதும் எனக்குத் தெரியும்.''

கன்யா தலைகுனிந்தபடி கேட்டுக்கொண்டிருந்தாள். பிறகு வறண்ட சிரிப்புடன் அவள் கூறினுள்: ''துஷ்யந்தனைப் போல் மறந்துவிட்டால்?''

"என்ன?''

தொண்டையைக் கனைத்துக்கொண்டு மறுபடியும் புன்முறுவலுடன் கன்யா கூறினாள் : "யாருடைய சாபமாவது பலித்து விட்டால்?''

''சாபமா?—இந்த யுகத்திலா?''

"கண் பார்வையினால் சாபம் இப்போதும் நம்மை வந்தடைகிறது.''

சஜ்ஜன் பேசாமல் இருந்தான். இரு நிமிடங்கள்வரை இருவரும் மௌனமாக இருந்தனர். பிறகு சஜ்ஜன் கன்யாவிடம் கேட்டான்: ''என்பேரில் உனக்கிருந்த நம்பிக்கை போய் விட்டதா?''

''நம்பிக்கை வாழ்வின் ஆதாரம்.'' எளிமையாகக் கன்யா பதிலுரைத்தாள்.

சஜ்ஜனுக்குத் தன் கேள்விக்குப் பதில் கிட்டிவிட்டது. ஆனால் அவன் திருப்தியடையவில்லை. பேச்சு வளர்ந்து பெரிய லட்சிய வாதத்தின் உருக்கொண்டது. சஜ்ஜனுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. மனநிலை காரணமாக அவன் தன்மீதே கோபங் கொண்டான். அவன் கூறினான்: "என் நடத்தை மிகவும் ஒழுங்கானதல்ல என்பது உண்மைதான். தனவந்தரின் ஒரே மகன்; பெரியோர்கள் எல்லோரும் இளமையிலேயே என்னைவிட்டுப் போய்விட்டார்கள். அப்படிப்பட்ட நிலையில் நெறிதவறுவது இயற்கைதானே? என் பலவீனங்களின் காரணமாக உன் நம்பிக்கைக்கு அதிர்ச்சி அளித்து விட்டேன். உண்மையில் நான் கெட்டவனில்லை.''

''கெட்டவர்களால் பயம் ஏற்படுவதில்லை; காரணம் அவர்களை எளிதில் அறிந்துகொண்டுவிட முடியும். அவர்களிடமிருந்து எட்டி நிற்பதோ, அவர்களோடு பகைமை கொள்வதோ எளிது. பயம், தீயவற்றினால்தான் ஏற்படுகிறது. மிகவும் நல்லவர்களின் உள்ளத்து அடித்தளங்களில் தீயவை ஒளிந்துகொண்டிருக்கின்றன. திடீரென்று வெளிப்பட்டு மற்றவர்களைத் தம் பிடியில் சிக்கவைத்து விடுகின்றன.''

சஜ்ஜனுக்குக் கன்யாவின் இந்தச் சொற்பொழிவு பிடிக்கவில்லை. இப்போது அவனுடைய மனம் புனித உணர்ச்சியில் இருந்தது. ராதாகிருஷ்ணனின் இனிய அன்பிலும், பக்தியிலும் மயங்கிய அவனுடைய உள்ளம் தன்னை மறந்திருந்தது. அவளுடைய பேச்சு மது அருந்துபவனுடைய பாத்திரத்தின் இடையில் கங்கை நீரை ஊற்றியதுபோல் இருந்தது அவனுக்கு. அவனுடைய உள்ளம் எரித்தது : மது ஏன் தீயது? கங்கை நீர் ஏன் புனிதமானது? அதிருக்கட்டும், அன்பு முத்தம் ஏன் கெட்டது? ஆண்—பெண் இயற்கையாகக் கவரப்பட்டு அவர்களுடைய உடல் சந்தித்தால் அது ஏன் கெட்டது? உண்மையில் தீயதல்லாத ஒன்றிலிருந்து

கன்யா ஏன் என்னை எச்சரிக்கிறள்? தன் புரட்சிகரமான எண்ணத்திலிருந்து உள்ளத்தெம்பை அடைந்தவனய் கன்யாவிடம் கூறினன் : ''என் ஸ்டேட்மென்டை (நான் சொன்னதை) ஏன் நீ வேண்டுமென்றே கெட்டது என்கிறய்? உள்ளுக்குள் ஒளிந்திருக்கும்படி என்னிடம் அத்தகைய தீயவை ஒன்றுமில்லையே! முதலில் நான் சொல்வதைக் கேள்! நீ எதைத் தீயது என்று கருதுகிறயோ, அது அறிவற்ற சீர்திருத்தவாதிகளின் மூடக் கொள்கை. மாரல், (ஒழுக்கநெறி), பாவம், தீயது போன்ற சொற்கள் மனிதனின் இயற்கையான மலர்ச்சியில் தடையாக நிற்குமளவு வேறெதுவும் இல்லை. உன்னைப்போலவே சிந்திக்க ஆரம்பித்தால், பெண்ணைவிடத் தீயபிராணி உலகில் வேறெதுவுமில்லை. மற்றமாரலிஸ்டுகள் (ஒழுக்க நெறிவாதி) ஒருபுறம் இருக்கட்டும்; புத்தர், ஆதிசங்கர் போன்றவர்களே பெண்ணைப்பற்றி இப்படித்தான் கருதியிருக்கிறர்கள். 'பெண் நரகத்தின் வாயில். எல்லாத் தீமைகளுக்கும் மூலகாரணம்' என்கிறர்கள். இப்போது இதற்கு என்ன சொல்கிறய்?''

கன்யா சற்றுச் சிடுசிடுப்புடன் கூறினள் : ''புத்தரும், ஆதிசங்கரரும் பெண்களாக இருந்தால், ஆண் நரகமே வடிவானவன் என்று எழுதியிருப்பார்கள். பெண் அந்த நரகத்தின் கோட்டையாக இருந்துகொண்டு இயற்கையின் மற்றப் பிராணிகளை அந்த அழுக்கிலிருந்துப் பிரித்து வைக்கிறள்!''

சஜ்ஜன் அவளுடைய முகத்தை உற்றுக் கவனித்துக்கொண்டிருந்தான். அழகிய களங்கமற்ற முகத்தில் சினம் பொங்கிக்கொண்டு வருவதைக் கண்டு சஜ்ஜன் அவளிடம் அதிக அன்பு கொண்டான். அந்த அன்பிற்கெதிரே அவன் மகிழ்வுடன் தோல்வியை ஏற்றுக் கொண்டான். தன் வலது கையை அவன் கன்யாவின் தோள்மீது அன்புடன் வைத்தான். பிறகு கூறினன் : ''அன்பே! கோபித்துக் கொள்ளாதே! இந்தச் சுதந்திர நாட்டு மனிதன் இன்றும் எஜமானனுக்கு அடிமை செய்து கிடப்பான். அவன், தனது பழைய காலத்திலிருந்து தொலைவில் சென்றுவிடமாட்டான்!''

கன்யாவின் ஆவேசம் இந்தப் பரிகாசத்தால் தடைப்பட்டு நின்றது. கூடவே அவனுடைய பரிகாசத்தால் சற்றுக் கூச்சமும் ஏற்பட்டது. ஆனல் இந்த உணர்ச்சிகள் கூண்டில் அடைபட்ட சிங்கம் போன்ற நிலையில் இருந்தன. சிங்கம் பசுவைப்போல் மாற வேண்டி வந்தது. கன்யாவின் தோளை ஒரு தட்டுத் தட்டியபடி சஜ்ஜன் கூறினன் : "இதோ பாருங்கள், கன்யாதேவி அவர்களே! நாம் இருவரும் இப்போது எல்லா காம்ப்ளெக்ஸிலிருந்தும் விடுபட்டு ஒரு சம நிலைக்கு வந்துவிட்டோம். ரயில் வண்டியில் பயணம் செய்பவரைப்போல் பிரிந்து செல்பவரா நாம்? சில கணங்கள் சந்தித்துவிட்டுப் பிறகு பிரிந்து மறந்துவிடும் எண்ணற்ற ஆண்—

பெண்களைப் போல் நாம் இருக்கமாட்டோம். புரோகிதர் நான்கு மந்திரங்களை ஓதுவதும், அல்லது நீதிமன்றத்தில் சென்று கையொப்பம் இடுவதும் வெறும் 'பார்மாலிடி' ஒப்புக்குத்தான். லக்னோ சென்றதுமே அது முடிந்துவிடும். நேற்றைக்குப் பிறகு என்னிடம் எவ்வளவு பெரிய மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்பது உனக்குத் தெரியாது. இருண்ட இடத்தில் நாம் தவித்துக்கொண்டிருந்தாற்போல் இருந்து வந்தோம். அத்தகைய இருளிலிருந்து ஒளி நிரம்பிய இடத்திற்கு நாம் வந்துவிட்டோம் என்று நேற்று நாம் பிருந்தாவனத்தில் இருந்தபோதே எனக்குத் தோன்றிற்று. உனக்கு அப்படித் தோன்றவில்லையா?''

கன்யாவின் உள்ளம் அவளுடைய முகத்தில் பிரதிபலித்தது. ஒரு நிரந்தரமான மென்சிரிப்பில் சுருங்கி அவளுடைய உள்ளம் மூர்ச்சையடைந்தது.

சஜ்ஜன் சற்றுச் சிந்தித்தான். அவள் தோளில் கை வைத்தபடி கூறினான்: "இதோ பார், நான் பலவீனமானவன் என்னும்படி போகப் பிரியன். நீ என் பலவீனத்துடன் போராட நேரிடும். உனக்கு இதில் முழு உரிமையும் உண்டு. ஆனால் ஒன்றுமட்டும் நினைவில் இருக்கட்டும். ஆசானைப் போல் எனக்கு உபதேசம் அளிக்க ஆரம்பித்துவிடாதே! நமக்குள் நாம் ஒளிவு மறைவின்றி வாழ்ந்தால் நன்றாக இருக்கும். கணவன்—மனைவியின் கடந்த கால விஷயங்களைக் கேட்பது தவறு ஒன்றும் இல்லை என்று நினைப்பவர்களில் நானும் ஒருவன். இது பக்குவமடையாத மனத்தவரின் இயல்பு! நம் போன்றவர் அப்படியல்ல.''

கன்யா சுய நினைவிற்கு வந்தாள். மிகவும் இனிய குரலில் பேசினாள்: "உங்களைப்பற்றிய எண்ணற்ற கதைகளைக் கேட்டு நான் என்ன செய்வேன்? முக்கியமானதைத் தெரிந்துகொண்டு விட்டேன். ஆனால் சஜ்ஜன்! கடந்த கால வரலாறுதான் ஒருவனுக்குத் துணை என்று கொள்ளக் கூடாது. இன்று வரலாறு சான்றாகக் கூறும் நிகழ்ச்சிகள் இருக்கின்றன. என்றாலும், நேற்று வரை நீங்கள் காம உணர்ச்சி மிக்கவராய் இருந்தீர்கள் என்றால், இன்னும் அப்படியே இருக்க வேண்டும் என்பது கிடையாதே! இன்றிலிருந்து உங்கள் வாழ்க்கை புதிய சூழ்நிலைகளில் ஆரம்பமாயிற்று என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்படியானால் உங்களைப் பற்றிய வரலாறும் புதிதாகிவிடும்.''

''மனிதனின் பழக்க வழக்கங்கள் அவ்வளவு எளிதில் மாறிவிடும் என்றா நீ நினைக்கிறாய்?''

''நிச்சயமாக மாற முடியும். சராசரி மனிதனை விட நீங்கள் அதிக அறிவும், பொறுப்புணர்ச்சியும் உடையவராக இருந்தால்' ஒரு பெண் தன் அருகாக இல்லை என்பதற்காகக் காமுகனாகத்

திரியத் தேவை வேண்டியிராது. இப்போது எனக்கு உரியவராகி விட்டீர்கள். எனக்கே உரியவராக வாழ்வீர்கள்.''

சஜ்ஜனுடைய கை கன்யாவின் தோளைத் தழுவியது. அவன் மௌனமாக இருந்தான். எதிரே சலவைக் கல்லால் ஆன அழகிய இரட்டை மாடிக் கட்டிடம் தென்பட்டது. அங்கு டாக்சி நிற்பது தெரிந்தது. டாக்சியைப் பார்த்ததும், சஜ்ஜன் சுமையைத் தாங்கிக்கொண்டிருக்கிறுன் என்பதை முதல் முதலில் கன்யா உணர்ந்தாள். சுமை அப்படி ஒன்றும் கனமானதல்ல. காமிரா, பை, கோட்டு, இவை தாம். பிறகு அவள் அவற்றை வாங்கிக் கொண்டாள். சஜ்ஜன் தன் கவலையிலிருந்து விழிப்புற்றுக் கன்யாவைப் பார்த்தான். உரிமையின் மறைவில் மௌன சமர்ப்பண பாவம் முதல் முறையாகக் கன்யாவின் கண்களிலிருந்து வெளியாயிற்று.

## 26

நந்தோவின் அழைப்பின் பேரில் மகாகவி 'போர்' அதிகாலையில் ஐந்து மணிக்குத் தட்டான் பழதியின் வீட்டின் முன்னே உலாவிக் கொண்டிருந்தார். தெருவில் ஒரே இருள். கவிஞரின் வாயில் சிகரெட்டு இருந்தது. இடையிடையே இருமலும், கனைப்பும் வேறு யாருக்கோ அறிவுறுத்துவது போல் நடந்துகொண்டிருந்தன.

கதவைத் திறந்து விளக்கேற்றி நந்தோ போரை உள்ளே அழைத்தாள். போர் நுழைந்து கொண்டிருந்தபோது அவருடைய மார்பில் தன் தோளை உராய்ந்துகொண்டே நந்தோ வெளியே வந்தாள். வீட்டின் கதவை உட்புறமாகத் தாழிட்டுக்கொண்டு அவள் கவலையின்றி உள்ளே நுழைந்தாள் வீட்டுப் பெரிய அறை முழுவதும் சதுரக்கல் பரப்பப்பட்டிருந்தது. அயல் நாட்டு டிராயிங் ரூமைப் போல் வைக்க ஓர் இடம் இருந்தது. அதன் மேல் 'மேன்டில் பீஸ்' கும்மட்டி கூட அமைக்கப்பட்டிருந்தது. குமுட்டி வைக்கும் இடத்தின் நாற்புறங்களிலும் வேலைப்பாடுகள் அமைந்த வலை பின்னப்பட்டிருந்தது. திராட்சைக் கொத்துக் களும் அவற்றைக் கொத்தும் கிளிகளும், சித்திர வேலைப்பாட்டில் காட்சியளித்தன. சதுரக் கற்களில் 'ஓம் ராதாகிருஷ்ண' என்று எழுதப்பட்டிருந்தது. சமாதி நிலையில் கங்காதரரும் இருந்தார். ஒரு சோபா செட், இரண்டு நாற்காலிகள், ஒரு 'சென்டர் டேபிள்' இவையாவும் அறையில் நிரம்பிக் கிடந்தன.

சென்டர் டேபிளின் அருகே நந்தோ வந்து நின்றுகொண்டாள். 'ஆஷ் ட்ரேயில்' சிகரெட்டை வைத்துவிட்டு மகாகவி உட்காரத் திரும்பினர். அதற்குள் அவளைப் பார்த்துப் புன்முறுவல் செய்தார்: "நந்தோதேவி, என்னைக் காயப்படுத்திவிட்டாய்.' நீதான் புண்ணை ஆற்ற வேண்டும்'' என்றார் கவிஞர்.

"போதுமே!''

"நீ பெரிய ஆசாமியாயிற்றே, நந்தோ!'' என்று கூறியபடியே துடிப்புடன் விரஹேஷ் நந்தோவை அணுகினர். நந்தோ சேலைத் தலைப்பை இழுத்துத் தன்னைப் போர்த்திக்கொண்டு, கடைக் கண்ணால் பார்த்தபடியே நகர்ந்தாள்: "உஸ், என்னைத் தொடாதீர்கள். நான் இப்போதுதான் கோமதி நதிக்குக் கிளம்பிக் கொண்டிருக்கிறேன்.''

"நீ போ, என் காதலியை இங்கே அனுப்பி விட்டுப் போ! நீ இட்ட கட்டளையின் பேரில் இந்த ஜனவரி மாதக் குளிரில் விடியற் காலை நான்கு மணிக்குக் கிளம்பி வந்திருக்கிறேன். நெஞ்சு சூடாக ஏதோ வேண்டும் என்கிறது.''

"இதைத் தாசியின் வீடு என்று நினைத்துக் கொண்டீர்களா என்ன! கெஞ்சுவதற்கும், கொஞ்சுவதற்கும்?'' நந்தோவைப் போன்றவர்களின் போக்கை மகாகவி போரைப் போன்ற சாமார்த்தியக்காரனால் புரிந்துகொள்ள முடியாதா என்ன? அவரும் வெண்ணெய் போல் பேசினர்: "இல்லை, இல்லை.''

"உங்கள் இருவருக்குமிடையே அன்பு அதிகம் என்று நான் நினைத்தேன். என் அண்ணி எப்போது பார்த்தாலும் வருத்தமாக இருப்பதைக் காண என்னால் சகிக்க முடியவில்லை.''

"அது உண்மைதான் நந்தோதேவி, நீ இறைவனின் தூதுவர் போன்றவள்.''

"உங்களை நான் எப்படிக் கண்டு பிடித்தேன் தெரியுமா?''

"அடே, நீதான் இந்திரஜாலம் செய்பவளாயிற்றே?''

"கண்களைச் சுழற்றி மயக்கி விட்டு நீங்கள் சென்று விட்டீர்கள். இங்கே பாவம் அண்ணியின் நிலைமை கவலைக்கிடமாகிவிட்டது.''

"என் நிலைமையும் அப்படித்தான் ஆகிவிட்டது, நந்தோதேவி. உன் அண்ணி என் உள்ளத்தை மட்டுமா பறித்துக்கொண்டு விட்டாள்? என் நினைவு, நெஞ்சம், உயிர், அமைதி, சுகம்—''

"ரூபாய் கொண்டு வந்திருக்கிறீர்களா?''

"நந்தோ, உனக்காக இந்த உயிரையும் சமர்ப்பிக்கச் சித்தமாக இருக்கிறேன். நான் பாபு கஞ்ஜியிலிருந்து நடந்து வந்துகொண்டிருக்கிறேன். நூறு ரூபாயை ஜேபியில் வைத்துக்கொண்டு நான் எப்படித் தனிமையில் இங்கு வருவேன்? ஆனல் இன்று மாலைக்குள் நூறு ரூபாய் கொண்டுவந்து தருகிறேன்!''

''சபாஷ்! நீங்கள் பலே ஆசாமி!''

''உன் அழகு, உன் பொலிவு, உன் அண்ணிமீது ஆணையிட்டுச் சொல்கிறேன், உன்னை ஏமாற்றமாட்டேன். எனக்கும், உனக்கும் ஒரு நாளைய உறவா என்ன? தற்சமயம், இந்தா இருபத்தைந்து ரூபாய்! இதை வைத்துக்கொள். இதைத் தவிர நூறு ரூபாய் தந்துவிடுகிறேன்.''

பசித்திருக்கும் சிங்கத்தின் முன்பு ஓர் ஈ வந்தால் எப்படியிருக்கும்? அதைப்போல் ரூபாய் நோட்டுக்களைப் பார்த்து நந்தோ முகத்தைத் திருப்பிக் கொண்டாள், ''இந்தக் காசை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். என் பிறந்த வீட்டில் லட்சக்கணக்கில் சொத்துக் கிடக்கிறது. என் அண்ணனும் பெரிய அரண்மனையை விலை கொடுத்து வாங்குமளவிற்குச் சம்பாதிக்கிறான்,'' என்றாள் நந்தோ.

சினிமா தியேட்டரிலிருந்த வாயில்காப்போன் 'வந்தது வசந்தம்' என்ற படத்து முதலாளியின் விலாசத்தை நந்தோவிற்குக் கொடுத்தான். இரண்டு தினங்களுக்கு முன்பு அவன் மகாகவி போரை நந்தோவுடன் அறிமுகப்படுத்த வந்திருந்தான். அங்கே திரைப்பட நடிகர்களுடன், தமக்கிருக்கும் நட்பைக் கவிஞர் மிகைப்படுத்திச் சொல்லிக்கொண்டார். கைலாஸ் என்பவன் மனைவி—நந்தோவின் தோழி; அவள் முதலாக நந்தோ, அவள் மூத்த அண்ணி வரை எல்லோரையும் நட்சத்திரங்களாக்கி விடுவதாக அவர் வாக்களித்தார். நந்தோ போரையும், மூத்தவனையும் சந்திக்கச் செய்வதாகக் கூறி நூறு ரூபாய் கேட்டாள். 'சரி' என்று கவிஞர் சொல்லிவிட்டார். அதுமட்டுமில்லை; அன்று நந்தோவின் முன்னிலையில் கைலாஸின் மனைவிக்காக, போர் சுமார் ஐம்பது ரூபாய் செலவு செய்து மது முதலியவை அளித்தார். ''ஐயாவின் நிலைமை அவருடைய வீட்டைப் பார்த்தால் அவ்வளவு திருப்திகரமாக இல்லை'' என்று கூறி வாயில்காப்போன் நந்தோவை எச்சரித்தான். ஆயினும் நந்தோவிற்கு அவன் பேச்சில் நம்பிக்கை ஏற்படவில்லை. புதிய கிராக்கியைத் தன் வசப்படுத்த இவன் விரும்புகிறான் என்று அவள் நினைத்தாள். இன்று இருபத்தைந்து ரூபாயைக் கண்டதும் அவள் எச்சரிக்கை அடைந்துவிட்டாள்.

''இன்று அவள் வரமாட்டாள். என் அண்ணன் நேற்றுத்தான் கல்கத்தாவில் இருந்து வந்திருக்கிறார்.''

''நீ தானே இன்று!''

''மனியா வந்து விடுவார் என்று யாருக்குத் தெரியும்? இன்னும் பத்து நாட்கள் கழித்து வருவதாகத்தான் கடிதம் எழுதியிருந்தார். இந்தச் சங்கராந்திக்கு எங்கள் அம்மாவும், அப்பாவும் அலாகாபாத்துக்குக் கிளம்பி விட்டார்கள். மனியா திடீரென்று வந்துவிட்டார். நான் என்ன செய்வேன்?''

மகா கவி போர் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து நந்தோவின் கால்களைப் பிடித்துக் கொண்டார்: ''நந்தோதேவி, எப்படியாவது மோஹினியை ஒரு முறை என்னிடம் அனுப்பி வைக்கமாட்டாயா?'' உணர்ச்சிவசப்பட்டு அவர் நின்றது, இவ்விதம் கூறுவதைப்போல் இருந்தது. ''தொலைவிலிருந்து பார்த்துப் பார்த்து நான் பித்தனுகிவிட்டேன். இப்போது அவளை அன்புடன் வாரி அணைத்து—''

''எழுந்திருங்கள்! போதும்'' சிடுசிடுவென்று நந்தோ பேசினுள். மோஹினியை அணைத்துக் கொள்ளும் உணர்ச்சியில் மகாகவி நந்தோவின் கரத்தைப் பற்றினுர். பிறகு கூறினுர்: ''என் ஆருயிர்க் காதலியை அழைத்து வாயேன் நந்தோ ராணி! என் நெஞ்சில் உறங்கிக்கொண்டிருக்கும் இரண்டாவது அமரகீதம் வெளியே வரத் துடிக்கிறது.''

''நீங்களும் உங்கள் கீதமும், நாசமாய்ப் போகட்டும்! இந்த மாதிரி பித்தலாட்டக்காரர்கள் எத்தனையோ பேர்களை நான் பார்த்திருக்கிறேன். முதலில் பணத்தை இப்படி எடுங்கள்.''

''சாயந்தரம் கொண்டுவந்து தருகிறேன். நீ நூறு கேட்கிறுய், நான் இருநூறு தருகிறேன். உன்னைக் கண்டாலும் என் உள்ளம் துடிக்கிறது, நந்தோ ராணி!''

''இந்தப் பேச்செல்லாம் எனக்குப் பிடிக்காது. நான் பூஜையில் ஈடுபட்டிருப்பவள், தெரியுமா?''

''உனக்கு இறைவன் சிறந்த பக்தியை அருளட்டும். நீ கருணையே வடிவானவள். உன் கால்களைத் தொட்டு...''

மகாகவி போர் குனிந்தார். இடது கையில் தங்கக் கடிகாரம் பளிச்சிட்டது. கால்களைத் தொட வேண்டாம் என்று தடுப்பவள் போல் நந்தோ கவிஞரின் கையைப் பிடித்துக்கொண்டாள். அவளுடைய ஒரு கை கவிஞரின் கடிகாரத்தின் மீதுதான் இருந்தது. அவள் கூறினுள்: ''இதோ பாருங்கள், என்னை நீங்கள் வற்புறுத்துகிறீர்கள். இது பெரிய ஆபத்தான காரியம். என் அண்ணன் மனியா பொல்லாதவர்.'' கடிகாரம் கையிலிருந்து அவிழ்ந்துவிட்டது. நந்தோ பேச்சை மேலே தொடர்ந்தாள்: ''சரி; உங்களுக்காக நான் முயற்சி செய்து பார்க்கிறேன். பிறகு ஈசன் செயல்.''

கடிகாரம் மகாகவியின் கையிலிருந்து நழுவி நந்தோவின் கைக்கு வந்துவிட்டது. மகாகவி நடுங்கிப் போனுர். அவர் ஏதோ சொல்வதற்குள் நந்தோ அறையை விட்டு வெளியே சென்றுள்.

மகாகவி கவலையுற்றுர். கடிகாரம் இரவல்தான். கோமதி நதிக்கரைக்குச் செல்லும் சாக்கில் கதவைத் தாழிட்டுக்கொண்டு மூத்தவளை நந்தோ கீழே அழைத்து வந்தாள். மனியா அப்போது

ஆழ்ந்த நித்திரையில் இருந்தான். தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை எடுத்து வந்து தன் அறையில் நந்தோ படுக்க வைத்தாள். ஆனால் மூத்தவளும் விரஹேஷும் வெகு நேரம் சந்திக்க விட்டுவிடவில்லை. 'மனியா விழித்துக்கொண்டு விட்டார்' என்றால் போதும்; மூத்தவள் பறந்தோடி வருவாள். விரஹேஷ் நந்தோவின் சூழ்ச்சியைப் புரிந்துகொண்டுவிட்டார். மூத்தவளின் கரம் பற்றியபடி அவர் கூறினர்: "இவள் பொய் சொல்லுகிறாள்! நந்தோ, பயப்படாதே, உன் நூறு ரூபாயை இன்றே கொண்டு வந்து தந்து விடுகிறேன்."

மூத்தவள் கேட்டாள்: "எந்த ரூபாய்?"

விரஹேஷ் போதையுடன் அவளைப் பார்த்துப் புன்முறுவலுடன் கூறினன்: "மோஹினி, கோஹினூருக்கு விலை கொடுக்க வேண்டாமா? இவர்கள் என் கடிகாரத்தை எடுத்துக்கொண்டு விட்டார்கள்!"

"ஏன்?"

"அது கிடக்கட்டும். ஆனாலும் கடிகாரத்தைத் திருப்பித் தந்தால் நன்றாக இருக்கும். நான் இன்று மாலையில் ரூபாயைத் தந்துவிடுவேன்."

"அக்கா!" மூத்தவள் கெஞ்சினள்: "உங்கள் கால்களில் விழுந்து கேட்டுக்கொள்கிறேன். இவருடைய கடிகாரத்தைக் கொண்டு வந்து கொடுத்து விடுங்கள். இவர் உங்கள் ரூபாயை நிச்சயமாகத் தந்துவிடுவார்."

நந்தோ ஒப்புக்கொண்டாள். அவள் கடிகாரத்தை திருப்பித் தந்துவிட்டாள். விரஹேஷ் இரண்டாம் அமர கீதம் இயற்ற, மூத்தவளுடன் அவரைத் தனித்திருக்க எல்லாச் சௌகரியங்களும் செய்து கொடுத்தாள் நந்தோ.

ஆனால் நூறு ரூபாய் அன்று மாலைக்குள் வந்து சேரவில்லை. மூத்தவள் கவலையுடன் இருந்தாள். மறுநாள் காலை அதே நேரத்திற்கு மகாகவி போர் வந்தார். இன்று மூத்தவள் அவரை எதிர்பார்த்து நந்தோவுடன் அறையில் உட்கார்ந்திருந்தாள். போர் இன்று ஐம்பது ரூபாயுடன் வந்திருந்தார். அவர் ஆயிரம் சாக்குப் போக்குச் சொல்லி அடுத்த நாள் ஏராளமாகக் கொண்டு வருவதாகக் கூறினர். அவர் கீழே விழுந்து வணங்கினர். கடிகாரமும் தரையில் பட்டது! ஆனால் இன்று நந்தோ இசைந்து கொடுக்கவில்லை. அவள் உரக்கக் கத்தினள்: "இங்கிருந்து போகிறாயா உரக்கக் கத்தட்டுமா?" பிறகு நந்தோ மூத்தவளிடம் உறுமினள்.

"போ அங்கே!"

மூத்தவள் நடுங்கிவிட்டாள். போரின் சாக்குப் போக்கு நடக்கவில்லை. அவர் பேசாமல் செல்ல நேர்ந்தது. கதவு தாழிடப்பட்டது.

மூத்தவள் நந்தோவின் பேரில் ஆத்திரம் கொண்டாள். அதிருப்தியுடன் செல்லும் விரஹேஷின் நினைவு ஒருபுறம், மறுபுறம் அதிகரிக்கும் அவளுடைய ஆத்திரம்! ஆயினும் அவளால் ஒன்றும் பேச முடியவில்லை. கதவு தாழிடப்பட்டதும், நந்தோ மூத்தவளிடம் கூறினாள்: "இவன் பெரிய தில்லுமுல்லுப் பேர்வழிபோல் இருக்கிறது. நான் செய்யும் தந்திரத்தில் பார், உன் உடல் முழுவதும் நகையால் மூடிவிடும்; உள்ளமும் அன்பால் நிறைந்துவிடும். அப்படிச் செய்கிறேன் பார்!"

"எனக்கு நகைகள் வேண்டாம். மனித இதயம் அன்பிற்காகத் துடிக்கிறது. நகைகளுக்கு நீசர்கள்தாம் ஆசைப்படுவார்கள்!" என்று கூறியபடியே மூத்தவள் உள்ளே சென்றுவிட்டாள். நந்தோவின் அறையிலிருந்து குழந்தையை எடுத்துக்கொண்டு மாடிக்குச் சென்று கட்டிலில் படுத்துக்கொண்டாள். கட்டிலில் ஓசை கேட்டதுமே மனியாவின் தூக்கம் கலைந்துவிட்டது.

"என்ன?"

"ஒன்றுமில்லை, கீழே கதவைத் தாழிடச் சென்றேன்."

மனியா தூக்கக் கலக்கத்தில் மூத்தவளை அணைத்தபடி தூங்க ஆரம்பித்தான். மூத்தவளின் விரஹதாபம் அடங்கவில்லை. நந்தோவின் சூழ்ச்சியில் சிக்குண்ட அவளுக்குத் தன் காதலனுடன் மனம் விட்டுச் சந்தித்து மகிழ வாய்ப்பே கிடைக்காது போல் இருந்தது. அவள் அப்படிப்பட்ட சதிகாரியாயிற்றே!

மனியாவிடம் கோள் சொல்லி நந்தோ ஏதாவது ஆபத்தை விளைவித்துவிடப் போகிறாளே என்று அவள் அஞ்சினாள். நந்தோவிடம் இப்போதெல்லாம் மனியா அன்புடன் நடந்து வந்தான். போர் தன்னை ஏமாற்றியதை நினைத்து நந்தோ மூத்தவளின்மீது ஆத்திரங் கொண்டாள். நந்தோ இன்னும் நதிக்குச் செல்லவில்லை; வீட்டிலேயே நீராடிவிட்டுத் தன் அண்ணன் மனியாவை எவ்விதம் தன் பக்கம் திருப்பிக்கொள்ளலாம் என்ற சிந்தனையில் அவள் ஆழ்ந்தாள்.

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு நீராடுவதற்காக மூத்தவள் கீழே இறங்கினாள், மனியாவும் அறையில் உட்கார்ந்து கொண்டு புகை பிடித்துக்கொண்டிருந்தான்; தக்க தருணம் பார்த்து நந்தோ தன் அண்ணனிடம் சென்றாள்.

"என்ன?" மனியா கேட்டான். வெகு நாட்களாக நந்தோவிடம் அன்புடன் மனியா நடந்துகொள்வதில்லை. மிகவும் பெரிய பக்தை போல் வேஷம் போட்டுக்கொண்டு தரையில் நந்தோ அமர்ந்தபடி கேட்டாள்: "நான் உனக்கு வேண்டாத பகையாகி விட்டேன், அப்படித்தானே?"

மனியா ஒன்றும் பேசவில்லை. நந்தோ மறுபடியும் கூறினாள்:

“நீ கிழித்த கோட்டை நான் இது வரை தாண்டியது கிடையாது. காலை நேரம், நான் ஸ்நானம் செய்யக் கிளம்பிக்கொண்டிருந்தேன். கடவுள் சாட்சியாகச் சொல்கிறேன்; அம்மா, அப்பாவின் பேச்சைக்கூட நான் தட்டியதுண்டு. ஆனால் உன் விருப்பத்திற்கு மாறாக நடந்ததே கிடையாது!”

மனியா அப்படியும் பேசவில்லை. “சந்தோவின் மனைவி என்னை எத்தனை தடவை அழைப்பாள்? ஆனால் உன் பேச்சைத் தட்டக் கூடாது என்று நான் வீட்டை விட்டு ஓர் அடிகூட வெளியே வைத்தது கிடையாது, 'என் அண்ணனுடைய கௌரவந் தானம்மா எனக்குப் பெரிது' என்று நான் சொல்லி விட்டேனப்பா!”

மனியா சிகரெட்டின் சாம்பலை உதறி விட்டுப் பேசாமல் இருந்தான். நந்தோ புன்முறுவலுடன் மறுபடியும் ஆரம்பித்தாள்: “கல்கத்தாவிலிருந்து நீ எனக்கு ஒன்றுமே வாங்கி வரவில்லை. உன் மனைவி வந்த பிறகு உடன்பிறந்தவர்களைக் கவனிப்பது வழக்க மில்லையப்பா! எந்த உறவும் விட்டுப் போகும்; உடன் பிறந்த பாசம் விடாது.” மனியாவின் மனம் நெகிழ்ந்தது. புன்முறுவலுடன் கேட்டான்: “உனக்கு என்ன வேண்டும்?”

“காலை வேளையில் சொல்லுகிறேன், நீ ஆயிரங்காலம் நன்றாக இரு. அதுதான் எனக்கு வேண்டும்.” திடீரென்று கட்டிலின் அருகே நந்தோ வந்து விட்டாள். கீழே குனிந்து அவள் எதையோ பார்த்ததைக் கண்ட மனியா ஆர்வத்துடன் கேட்டான் “என்ன அங்கே?'

“கறுப்பு நூலில் சுற்றி இருக்கிறதே! இது ஒரு காகிதம்தான். எங்கே, பார்க்கலாம். அட தெய்வமே! இது ஏதோ தாயத்துப் போல் இருக்கிறது. இதைத் தொடாதே மனியா” என்று கூறிய படியே நந்தோ அதை எடுத்தாள். மனியா கோபத்துடன் சொன்னான்: “நீதான் செய்திருப்பாய், சூழ்ச்சிக்காரி!”

“நீ என்னை என்ன வேண்டுமானாலும் சொல்லிக்கொள். நம் அம்மா, அப்பாவின் மீது ஆணை! நான் ஒன்றும் செய்யவில்லை. (பொட்டலத்தைப் பிரித்து) ஐயோ! இது ஏதோ சதிதான்!”

மனியாவும் குனிந்து பார்த்தான். கொம்புள்ள ஒரு விலங்கை ஓர் அரக்கன் கொல்வது போன்ற சித்திரம் வரையப்பட்டிருந்தது. இந்தச் சித்திரம் மனியாவையும் பிரமிக்கச் செய்துவிட்டது. இந்தக் காகிதத்தைப் பொருட்டாகக் கொண்டு நந்தோ தான் ஏதோ சூழ்ச்சியில் ஈடுபட்டிருக்கிறாள் என்று மனியா நம்பினான். சினத்தால் பற்களைக் கடித்துக்கொண்டு அவன் கூறினான்: “உள்ளதைச் சொல், இல்லாவிட்டால், உன்னைக் கொன்று போட்டு விடுவேன்”.

நந்தோ கூறினாள்: "நீ என்ன வேண்டுமானாலும் செய்துகொள். நான் செய்திருந்தால்தானே பயப்படுவதற்கு? வெளியே ஆயிரம் செய்வேன்? ஆனால் வீட்டில் செய்வேனா என்ன? எனக்கு என் அண்ணன், அப்பா, அம்மா என்றால் உயிரைவிட இனியவர்கள், தெரியுமா? தன் கணவனுடைய கண்களில் மண்ணைத் தூவிவிட்டு அயலானுடன் காதல் நாடகம் நடிக்கும் பெண்தான் இப்படிப் பட்ட வேலை செய்வாள்!"

மனியாவின் பரபரப்பும் சினமும் அதிகரித்தன!

"உண்மையைச் சொல், என்ன நடந்தது?" என்று கேட்டான்.

நந்தோ கூறினாள்: "நான் இப்படி ஒருவரைப்பற்றிப் பேசுபவள் அல்ல. ஆனால் என் அண்ணனைக் கொல்லச் சதிசெய்யும் போது என்னால் சும்மா இருக்க முடியாது. உன் உள்ளத்து ராணியின் வேலை இது! உன் சொந்தத் தங்கையையே, உதறி விட்டு எவளிடம் மோகம் கொண்டிருக்கிறாயோ, அவளுடைய சதித் திட்டம் இது. இங்கு உட்கார்ந்தபடியே எதிர் வீட்டிலிருப்பவருடன் கடிதப் போக்குவரத்து நடந்து கொண்டிருக்கிறது. இதை நான் திடீரென்று பார்த்து விட்டேன்".

"உண்மையா இது?" மனியா மெதுவான குரலில் கேட்டான். அவனுடைய முகம் வெளுத்து விட்டது. அவனுடைய உதடுகளும், கன்னத்து நரம்புகளும் துடித்தன.

"நான் ஏன் பொய்பேசப் போகிறேன்? தலைமயிரை நீளமாக வளர்த்துக்கொண்டு ஓர் ஆசாமி இருக்கிறான். அவனுடன் அண்ணி கடிதப் போக்கு வரத்து நடத்திக்கொண்டிருக்கிறாள்."

"அந்தக் கடிதங்கள் எங்கே?" மனியா கர்ஜனை புரிந்தான்.

நந்தோ மெதுவாகக் கூறினாள்: "இங்கே தான் இருக்கும். அவளுடைய பெட்டிகளில் இருக்கும் பார், எனக்கு என்ன தெரியும்?"

தங்கையின் பிதற்றலைக்கவனியாமல் மனியா ஆத்திரத்துடன் கடிதங்களைத் தேடுவதில் முனைந்தான். நந்தோ பேசாமல் அங்கிருந்து நழுவிவிட்டாள்.

சிறிது நேரத்திற்குள் மனியா நான்கைந்து பெட்டிகளைத் திறந்து விட்டான். மடித்து வைக்கப்பட்ட துணிகளை வாரி இறைத்தான். பூட்டப்பட்டிருந்த பெட்டியின் தாழ்ப்பாளை உடைத்து, அதற்குள் பட்டுத் துணியில் வைக்கப்பட்டிருந்த விரஹேஷின் கடிதங்களை அவன் கண்டெடுத்து விட்டான். கடிதங்களைப் படித்த அவன் சுய உணர்வை இழக்க ஆரம்பித்தான். சினத்தின் காரணமாக எழுத்துக்கள் மங்கலாகத் தெரிந்தன. மனியா கர்ஜித்துக்கொண்டு அறைக்கு வெளியே வந்தான்: "எங்கே அவள்?"

மூத்தவள், கீழே ஸ்நானம் செய்யச் சென்றிருந்தாள். நந்தோ

கையால் சமிக்கை செய்தாள். குளிக்கும் அறையை, கதவைத் தட்டியபடி மனியா கத்தினன் : ''சண்டாளி! உனக்குக் காதலனு?''

மூத்தவள் பாதி குளித்தபடியே ஈரப்புடவையுடன் கதவைத் திறக்க நேர்ந்தது. மனியா அவளது கையைப் பிடித்து இழுத்து முற்றத்தில் கொண்டு நிறுத்தினன். கீழே தள்ளிக் கண்டபடி திட்டினன்; அடித்தான்; உதைத்தான்.

மனைவியின் பொறுமையே வீரிட்டு அலறும்படி செய்தான். வீட்டில் அமளிதுமளியாகி விட்டது.

சங்கரும் இளையவளும் சிறிய அறையிலிருந்து வந்தனர், மனியாவின் கர்ஜனையும் மூத்தவளின் கூக்குரலும் தெருவில் கேட்டன.

நந்தோ தன் பூஜையறையில் அமர்ந்தபடி விக்கிரகத்திற்கு அபிஷேகம் செய்துகொண்டிருந்தாள்.

சங்கர் தன் அண்ணனைத் தடுக்க முற்பட்டான். ''நீ தள்ளிப் போ!'' என்று ஆத்திரத்துடன் கத்தினன் மனியா. ''இதெல்லாம் உங்கள் எல்லோராலும் வந்த வினை. நீங்கள்தானே அந்தக் காலிப் பயலை உள்ளே நுழைய விட்டீர்கள்! இன்று எல்லோருக்கும் ஒரு வழி செய்கிறேன். இவள் என் மானத்தையே போக்கி விட்டாள். இவளை நான் வெட்டிப் புதைத்து விடுகிறேன். இந்தா அன்பும், அரவணைப்பும், முத்தமும் இந்தா!''

ஒரு கையில் அவளைப் பிடித்துக்கொண்டு மறுகையால் அவளை மனியா வேண்டியவரை அடித்து வதைத்தான். ஈரப்புடவையில் புழுதி படிந்துவிட்டது. எப்படியோ உடலைப் போர்த்திக்கொண்டு அவள் துடித்தாள்.

கத்தலைக் கேட்ட மக்கள் தெருவிலிருந்து உள்ளே வர ஆரம்பித்தனர். ''அடிக்காதே ஐயா!'' என்று எல்லோரும் மனியாவைக் கேட்டுக்கொண்டனர். அங்கு வந்திருந்த இரு பெண்மணிகளுக்கு நடந்த கதையைக் கூற அவர்களைத் தன் அறைக்குள் நந்தோ அழைத்துக்கொண்டாள்.

''அட கடவுளே!'' முழுக்கதையையும் கேட்டுவிட்டுக் குணவதி அங்கலாய்த்தாள்.

பன்சோ சேட் குணவதியைக் கேட்டான்: ''என்ன நடந்தது, குணவதி?''

தலையில் அடித்துக்கொண்டு குணவதி உரக்கக் கூறினள் : ''என்னத்தைச் சொல்ல? கலிகாலம் அவ்வளவுதான் நம் மனியா அழகில் குறைந்தவனு, அல்லது பதவியில் குறைந்தவனு? எந்த வீட்டிலும் இந்த மருமகள் இருக்க வேண்டாமப்பா! அரசன் வீட்டிலே பிறந்தும் எச்சில் இலைக்குப் பறக்கிற ஜன்மம்! உண்மையில் காலம் கலி காலமப்பா!''

''எல்லாம் வெள்ளைக்கார நாகரிகம், குணி இப்போது பெண்கள்

வோட்டுக் கூட போட ஆரம்பித்துவிட்டார்கள். இவர்கள் இனி இஷ்டப்படி செய்வார்கள். நம் போன்ற பழைய காலத்து மனிதர்களை யார் கவனிக்கிறார்கள்? முகத்தைத் துணியால் மூடிக் கொண்டு சும்மா கிடக்க வேண்டியதுதான். நாளைக்கே இவளுடைய கதையும் விமானத்திலிருந்து 'பிட்நோட்டீஸ்' வடிவில் பறக்கப் போகிறது! நம் மானம் போனது போதாதென்று உலகம் நம்மைத் தூற்றுவதையும் சகித்துக்கொண்டாக வேண்டும்!''

''இப்போது எல்லோருக்கும் ஒரு வழி செய்கிறேன் பார்!'' முற்றத்தில் நின்றபடியே மனியா கர்ஜனை புரிந்தான்.

''எல்லாம் பணம் படைத்தவர்களுடைய விஷயம்!''

தெருவில் தட்டான் பபூதியின் வீட்டு வாசலில் ஒரு கூட்டம் சேர்ந்தது. வர்மா வீட்டுவரை ஒரே கூட்டம் கூடிவிட்டது. கீழே விழுந்து கிடந்த மனைவியை, மனியை மறுபடியும் அடிக்க ஆரம்பித்தான். இடையிடையே மக்கள் தடுத்து நிறுத்துவதும், நடந்து வந்தது. பேசிக்கொண்டே மக்கள் 'சஜ்ஜனுடைய காலிக்கூட்டம்' என்பது வரையில் விஷயத்தைக் கொண்டு வந்துவிட்டனர். நந்தோவின் அறைக்குள் நடந்த மாதர்கூட்டம் பொது மக்களின் கருத்தை வெளிப்படுத்த உதவியாக இருந்தது, மனியாவினால் தாங்க முடியவில்லை: ''உன் காதலனிடம் போ! குடியைக் கெடுக்க வந்தவளே!'' என்று அவன் கத்தினான்.

மனியா தன் மனைவியை இழுத்து முற்றம், தாழ்வாரம், மேடு பள்ளங்கள் எல்லாவற்றையும் கடந்து வந்து வெளியே கொண்டு வந்து தள்ளினான். உயிருடன் இருக்கும் சடலம் போன்றிருந்தது, அவளது நிலைமை. மிகவும் கஷ்டப்பட்டு மூத்தவள் எழுந்தாள். சேலையைச் சீர்ப்படுத்திக்கொண்டு மாமனாருடைய அறையின் வாசலில் கீழே உட்கார்ந்து கொண்டாள்.

கூட்டம் அதிகரித்தது. நகரத்திற்குப் பேசப் புது விஷயம் கிடைத்து விட்டது. இந்தப் பெண்மணியுடன் தொடர்பு கொண்டுள்ளவன் ஒரு கவிஞனும்; மற்றொரு மனிதன் இருக்கிறான், ஓவியம் தீட்டும் தனவந்தன். இங்கே தன் நண்பர்களுடன் கொட்டமடிக்கிறானும். இதில் கன்யா, சஜ்ஜன் இருவரின் கதைகளும் வந்தன. விமானத்திலிருந்து பறந்த காகிதங்களைப் பற்றிய சர்ச்சையும் நடந்தது. பணக்காரர்களின் பேரில் மக்களுக்கு இருந்த வெறுப்புக் காரணமாக சஜ்ஜனும் மக்களுடைய பகைக்கு ஆளானான். மனியாவின் தம்பி, அவனுடைய மனைவி, வர்மா, தாரா முதலியவர்களுடைய நவநாகரிகம் பேட்டையில் மிகவும் வெட்கக் கேடான விஷயமாகிவிட்டது என்றும் மக்கள் பேசிக் கொண்டனர்.

'கலி காலத்தின் கூத்து' என்று மக்கள் பலவகையில் தூற்ற

அவர்களை ஊக்குவித்தாள், சேற்றில் அமிழ்ந்து தவித்த அந்தப் பெண்மணி. சில வாலிபர்களுக்குக் கிழவர்களின் பழமைப் பேச்சு பிடிக்கவில்லை. காரசாரமான வாக்குவாதமும் நடந்தது. தற்காலம் முற்காலம் எப்போதும் நல்லதும் உண்டு, கெட்டதும் உண்டு என்ற முடிவிற்கு மக்கள் வந்தனர். ஆயினும் சமுதாயத்தில் நடக்கும் சீர்கெட்ட முறையைக் கண்டிக்க வேண்டும் என்றும் கூடவே முடிவு செய்யப்பட்டது. இவ்விதம் ஒழுக்கம் முதலிய பிரச்னைகளைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து முடிவுக்கு வந்த பிறகு கூட்டத்திலிருந்த மக்கள் அலுவலகம், காலேஜ், கடை, பள்ளி முதலிய இடங்களுக்குச் செல்ல நேரமாகி விட்டதே எனக்கருதி, (பிரச்னைகளையும் முடிவுகளையும் மறந்து) தத்தம் இல்லங்களுக்குத் திரும்பினர். புதிய கூட்டம் சேர்ந்து கொண்டிருந்தது; பழைய கூட்டம் கலைந்து கொண்டிருந்தது.

மூத்தவள் பிறருடைய வேடிக்கைக்குப் பாத்திரமாக அப்படியே உட்கார்ந்திருந்தாள்.

## 27

அண்ணனின் கண்மூடித்தனமான கோபத்திற்கும், கொலை செய்து தீர்த்து விடுகிறேன் என்ற மிரட்டலுக்கும் எதிரே, தன் மானத்தைக் காத்துக்கொள்ளச் சங்கர்லால் மாடிக்குச் சென்று விட்டான். மாடிக்கு அருகே இளையவளும் நடுங்கிக்கொண்டு நின்றாள். அவளுடைய முகம் பயத்தால் வெளுத்திருந்தது. சங்கரும், அவளும் மறைவில் இருந்து கொண்டு கீழே என்ன நடக்கிறது என வேடிக்கை பார்த்தனர்.

தாராவும், வர்மாவும் இந்த நிகழ்ச்சியின் முழு விவரத்தையும் அறிய ஆவலாயிருந்தனர். வர்மா தாராவை மேலே செல்ல வேண்டாம் என்று தடுத்தான். ஆனால் மனைவியின் அழைப்பை ஏற்றுப் பபூதியின் வீட்டு மாடிக்குச் சென்று நின்றுகொண்டவன் கீழே இறங்கினான். இளையவளின் பார்வை மேலே சென்றது. வர்மாவைப் பார்த்து அவள் தன் கணவனுக்குச் சமிக்ஞை செய்தாள். வர்மா இருவரையும் மேலே கூப்பிட்டான். நீண்ட மூச்செறிந்து கூறினான்: ''மிஸ்டர் லால், இனிமேல் போலீசுக்கு 'இன்பார்ம்' செய்து விடுங்கள். இந்தப் பேட்டையில் வாழும் மக்கள் மிகவும் கடையர்கள். பாவம், மனியாவிடம் சொல்லிக் கொடுத்து மோஹினி தேவியைக் கொன்று விட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்கள்.''

மனைவி அழுதுகொண்டே கூறினாள்: ''ஆமாம், இல்லாவிட்டால் பாவம், உயிரையே அவர்கள் விட்டுவிடுவார்கள்.''

''எனக்கு ஒரு ஆட்சேபமுமில்லை. ஆனால் போலீசு புலன் விசாரித்தால் பாவம், சஜ்ஜன் இதில் 'இன்வால்வ்' (ஈடுபட்டு விடும் நிலை) ஏற்பட்டுவிடப் போகிறதே என்று கவலைப்படுகிறேன்! இந்த மக்கள் நம்மையும் கூடத்தான் கெட்டவர்கள் என்று கூறுகிறார்கள்'' என்று சங்கர்லால் பதிலளித்தான்.

''பின் இவளுடைய கதிதான் என்ன? பிறந்த வீட்டுக்கு?''

''பிறந்த வீட்டில் யார் இருக்கிறார்கள், பாவம்? மாற்றாந்தாயின் மகன் இருக்கிறான். அவன் இவளைப் பாதுக்காப்பானா என்ன? இல்லையா சரூப்?'' தாரா கூறினாள்.

இளையவள் ''ஆமாம்.'' என்றாள்.

''ஆண்களுடைய ஆதிக்கம் இது! ஆண்களாகிய நீங்கள்? எது வேண்டுமானாலும் செய்வீர்கள், ஆனால் பெண்கள்?''

மனைவியின் பேச்சை நிறுத்தி வர்மா சங்கரிடம் கூறினார்: ''நீங்கள் மிஸ்டர் சஜ்ஜனிடமே 'இன்ஃபார்ம்' செய்து விடுங்களேன்.''

''அவர் இல்லை. வெளியே சென்றிருக்கிறார்''

''அப்படியானால் விரஹேஷ்ஜிக்கு 'இன்ஃபார்ம்' செய்யுங்கள். தவறு நடந்திருந்தாலும் மோஹினி தேவியை அவர் காதலித்த வரல்லவா.''

''சரி, அப்படியே செய்துவிடலாம்.'' தாரா தன் கணவரின் பேச்சை ஆமோதித்தாள். பிறகு இளையவளிடம் கூறினாள்: ''சரூப், குழந்தைக்குப் பசி போல் இருக்கிறது, அழுகிறாள் பாருங்கள்!''

இளையவள் (சரூப்) கூறினாள்; ''இன்று எங்கள் வீட்டிற்குப் பால்காரன் வரவில்லை. கீழே இருந்தால்?''

''எங்கள் வீட்டுக்குவாருங்கள்'' தாரா கூறினாள். பிறகு சங்கரைப்பார்த்து; ''மிஸ்டர் லால், எப்படியாவது விரஹேஷ் ஜிக்குத் தெரிவித்து விடுங்கள்'' என்றாள்.

''என்ன சொல்வது, அவருடைய வீடு எனக்குத் தெரியாது... இருக்கட்டும்; நான் மஹிபாலின் வீட்டுக்குப் போகிறேன். அவர் இலக்கியகர்த்தா, ஒரு வேளை—''

''டு ப்ளீஸ், (தயை செய்யுங்கள்) சீக்கிரம்—'' வர்மா கூறினார்.

''சரி, உங்கள் பெயரைச் சொல்லிக்கொண்டு கிளம்புகிறேன். சைக்கிளும் உங்களுடையதுதான்.''

''உம், எடுத்துக் கொள்ளுங்கள்.''

''நம் வீட்டு வழியாக இப்போது செல்வது சரியில்லை.''

''சரி, இப்படி வாருங்கள்.''

எல்லோரும் வர்மாவின் வீட்டிற்குச் செல்ல மாடி ஏறினர். சரூப் குழந்தையைத் தன் கணவனிடம் கொடுத்தபடி கூறினுள்: "நீங்கள் கிளம்புங்கள், நான் அறையைப் பூட்டிக்கொண்டு வருகிறேன்.''

ஒன்றரைமணி நேரத்திற்குள் மஹிபாலும், கர்னலும் வந்து விட்டனர். கூட்டம் கலைந்து விட்டது ஆயினும் சில ஆடவரும், பெண்டிரும் வீட்டிற்கெதிரே நின்று கொண்டிருந்தனர். பேச்சுக்கள் நடை பெற்றன. மனியா அறையில் நான்கு இதமான நண்பர் களுடன் உட்கார்ந்து புகை பிடித்துக் கொண்டிருந்தான். நந்தோவின் தர்பார் இப்போது அறையிலிருந்து தாழ்வாரத்திற்கு வந்துவிட்டது. சரூப் மூத்தவளின் (மோஹினி) குழந்தையை எடுத்துக்கொண்டு தாராவின் வீட்டில் இருந்தபடி தன் கணவனின் வரவை எதிர்பார்த்தாள். தாராவும் வர்மாவும் கூட ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். அன்று வர்மா, வேலைக்குச் செல்லவில்லை.

வர்மா தம் வீட்டு வாசலிலிருந்து கர்னலும், மஹிபாலும் தெருவை நோக்கி நுழைவதைப் பார்த்தார். சங்கர்லால் அவர் களுடன் இல்லை. அவர்கள் வண்டியில் வந்திருந்தனர். கர்னலின் டிரைவருங்கூட வந்திருந்தான்.

கூட்டத்தை விளக்கியபடி மஹிபால் மோஹினியிடம் சென்முன். கர்னலும் அவனுடன் இருந்தான். சமாதி நிலையில் இருக்கும் யோகியைப் போல் மோஹினி முழங்காலைக்கட்டிக்கொண்டு தலை குனிந்தபடி உட்கார்ந்திருந்தாள். ஈரச்சேலை வெயில் படவே உலர்ந்துவிட்டது.

மஹிபால் அவளுடைய தலையில் கைவைத்துக் கூறினுன்: "சகோதரி, எழுந்திரு. என்னுடன் வா.''

மோஹினி தலையை நிமிர்த்தவில்லை. கர்னல் கூட்டத்தைக் கடிந்துகொண்டான்! ''இங்கு ஏன் கூட்டம் போடுகிறீர்கள்? இங்கு என்ன வேடிக்கை இருக்கிறது?''

புதிய குரலைக் கேட்டுப் புதிய குழப்பம் ஏற்பட்டிருக்கும் எனக் கருதி மனியா வெளியே வந்தான்.

கூட்டத்திலிருந்த ஒரு தடியன் சிரித்தபடி பதில் அளித்தான்: ''வேடிக்கையில்லாமல் என்ன? லைலா மஜ்னு!''

"உங்களுக்கு வெட்கமில்லையா?'' கர்னல், மஹிபால் இருவரு டைய வாயிலிருந்தும் ஒரே நேரத்தில் அந்த வாக்கியம் வெளி வந் தது. மஹிபால் மேலே பேசிக்கொண்டே சென்றவுடன் கர்னல் மௌனமாகிவிட்டான். இது உங்களுக்கு வேடிக்கையாகவா தோன் றுகிறது? பாவம், இந்தப் பேதைப் பெண்ணின் நிலையைக் கண்டு உங்களுக்கு மகிழ்ச்சியாகவா இருக்கிறது? உங்களில் மனம், வாக்கு, காயம் மூன்றிலும் புனிதமாக இருப்பவர்கள் இந்தப்

பெண்மணியைக் கெட்டவள் என்று கூற முன் வாருங்கள், பார்க்கலாம். இவள் செய்தது பாதகமான செயல் என்பது உண்மைதான். ஆயினும் உங்களில் ஒரு களங்கமுமில்லாதவர், ஒரு பாவமும் அறியாதவர் யார், அதைக் கூறுங்கள். துணிச்சல் இருந்தால் முன் வாருங்கள்!''

ஒரு கணம் மக்கள் எல்லோரும் பிரமித்து நின்றனர். மனியா தன் வீட்டு வாசலில் நின்றபடி கேட்டான்: '' நீங்கள் யார் பெரியவரே?''

மஹிபாலுக்கு இது சற்று அவமானமாக இருந்தது. ஆயினும் சமாளித்துக்கொண்டு கேட்டான்: ''நீங்கள் யார் என்னைக் கேள்வி கேட்பவர்?''

''நான் இந்தப் பெண்ணின் கணவன்.''

''அது உண்மையானல் உடனே இவளை உள்ளே அழைத்துச் செல்லுங்கள்.''

''நீங்கள்—'' மனியா பேசுவதற்கு முன் கர்னல் ஆவேசத்துடன் கூறினன்: ''உம்முடைய மனைவியை அடிக்க உமக்கு உரிமையளித்தவர் யார், சுவாமி? இவள் கெட்ட நடத்தையுடையவள் என்ருல் நீதிமன்றத்தில் வழக்குப் போடுவதுதானே? நீதிபதியின் வேலையை நீரே ஏற்றுக்கொண்டுவிட்டீரோ?''

''நீங்களும் இவளுடைய காதலரா?'' மனியா முழுவாக்கியத்தையும் முடிப்பதற்குள் மஹிபால் அவனுடைய கையைப் பிடித்து இழுத்தான். இந்த திடீர்த்தாக்குதலை மனியா எதிர்பார்க்கவில்லை; தெருவாசலில் போய் விழுந்தான். திண்ணையில் கால் இடறி அடி வேறுபட்டது. அது போதாதென்று மஹிபால் அடி ஒன்றை மனியா, கன்னத்தில் கொடுக்க நேர்ந்தது. காது ஜிவ்வென்றது. மனியாவின் கண்கள் ரத்தமாகச் சிவந்தன. மஹிபால் அவனுடைய இடது கையைப் பிடித்துக்கொண்டான். வலது கையால் அடிக்க மனியா முற்பட்டான். அதையும் மஹிபால் பிடித்துக் கொண்டான், இருவரிடையிலும் சண்டை ஆரம்பமாயிற்று.

கர்னல் கூட்டத்தைப் பார்த்துக் கூப்பிட்டான் : ''டிரைவர், டிரைவர்! சிவமங்கள்!''

கூட்டத்திலிருந்து சிவமங்கள் வந்தான். கர்னல் உரக்கக் கத்தினன் : ''ஜானகிசரணின் வீட்டிற்குப் போய் போலீசுக்கு ஃபோன் செய். நான் வரச் சொன்னேன் என்று சுக்லாஜியிடம் சொல், போ!''

கூட்டத்தில் சிலர் பயங்கொள்ளிகள். போலீசு என்றதுமே பஞ்சாய்ப் பறந்துவிட்டனர். மற்றும் சிலர் மஹிபால் மனியாவின் மல்யுத்தத்தை 'சபாஷ்' என்று கூறி ரசித்தபடி நின்றனர். புரட்சி செய்பவர்களில் ஒருவர் போலீசு என்ற சொல்லைக் கேட்ட

துமே, கர்னலிடம் கூறினார் : "ஆமாம், அழைத்து வாருங்கள்— பணம் படைத்தவர்களின் காலம் ஐயா, இது? பேட்டையில் வந்து நடத்தை கெட்ட காரியம் செய்வதோடு நில்லாமல் போலீசையும் அழைத்து வருவார்கள்."

மற்றொருவன் பேசினான் ; "இவர்களையும் போலீசுடன் சேர்த்துப் புதைக்க வேண்டும்."

மனியா மஹிபாலிடமிருந்து விடுபட்டு மற்றும் ஒருவருடைய பிடியில் சிக்கிக்கொண்டு ஆத்திரத்துடன் பேசினான் : "இவள் என் மனைவி. நான் கொல்வேன், அடிப்பேன் தடுக்க வருபவர்களையும் அடிப்பேன்—"

"சரி விடப்பா! போதும்."

"என் மானத்தைப் போக்கிய சண்டாளியை எல்லோருடைய முன்னிலையிலும்—" மனியா மக்களின் பிடியிலிருந்து விடுபட்டு மறுபடியும் மோஹினியை அடித்தான். சுவரோடு போய் அவள் ஒன்றிக்கொண்டாள். மஹிபால், ஆத்திரங் கொண்டான். இருவரையும் மக்கள் தடுத்தனர் : "விட்டு விடுங்கள்! மனியா, இனி அடித்துப் பயனென்ன? பிறந்த வீட்டில் கொண்டு, தள்ளி விட்டு வாரும்."

"எங்கேயோ போய் ஒழியட்டும்." மனியாவைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு மக்கள் உள்ளே சென்றனர். இந்தத் தருணத்தில் மஹிபால் மனியாவை வேகமாய்ப் பிடித்துத் தள்ளினான். மனியா இந்தப் பகிரங்க அவமானத்தைத் தாங்காமல் ஆவேசங் கொண்டான். அவனால் தன்னை அடக்கிக்கொள்ள முடியவில்லை.

ஜானகிசரண் போலீசு அதிகாரி சுக்லா மற்றும் இரண்டு சிப்பாய்களுடன் வந்தார். அவர்களைக் கண்டதும் அமைதி நிலவியது. அவர்கள் கூறியதன் பேரில் மனியா ஒப்புக்கொண்டான். "எனக்கு உதவாத மனைவி எங்கோ போகட்டும்!—நரகத்திற்கு வேண்டுமானாலும் கொண்டு செல்லுங்கள்" என்றான்.

மனியாவை அவனுடைய வீட்டார் அறைக்குள் அழைத்துச் சென்றனர். ஜானகிசரண், கர்னல் மற்றும் நான்கு பேர் சேர்ந்து கூட்டங்கூடிய மக்களைக் கலைத்தனர். சங்கர், அண்ணியை எழுப்பினான்.

இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு மோஹினியின் கவிழ்ந்த தலை நிமிர்த்தப்பட்டது. அவளுடைய முகம் கல்லைப் போல் உணர்வற்றுக் காணப்பட்டது.

இதற்கிடையில் மஹிபாலின் உள்ளம் எல்லாக் காட்சிகளினின்றும் விடுபட்டுத் தனக்குள் ஒன்றிவிட்டது.

வர்மாவின் வீட்டை மோஹினி அடைந்தாள். தாராவும், சரூப்பும் ஓடி வந்து அவளை அணைத்துக் கொண்டனர். மோஹினி

சிலை போன்று நின்றிருந்தாள். அவளுடைய உடலில் ஆங்காங்கே காயங்களும் தழும்புகளும் ஏற்பட்டிருந்தன.

"இனி என்ன செய்வது?'' என்று வர்மாவும், சங்கரும் ஆலோசனை செய்தனர். கர்னல் ஜானகிசரணுடன் சென்று கொண்டே கூறினான்: ''இந்தப் பெண் படுகாயமடைந்திருக் கிறாள். டாக்டர் ஸ்விங்கை நான் அனுப்பி வைக்கிறேன். சீரியஸ் (பலமான) அடி பட்டிருக்காது என்றுதான் நினைக்கிறேன். இனி மேல் தான் அடிபட்டதன், 'ரியாக்ஷன்' ஆகும். உடனே கொஞ்சம் பிராந்தி கொடுங்கள்.''

தினசரி வழக்குகளில் இதைச் சேர்க்க வேண்டாம் என்று ஜானகி சரணின் வீட்டில் முடிவு செய்யப்பட்டது. போலீஸ்காரனுக்கு நல்ல வரும்படி கிடைக்கும். பபூதியும் சரியான சாமார்த்தியக் காரன். சங்கரும் அங்கு வந்தான். ஜானகிசரண் அவரைத் தனி யாக அழைத்துச் சென்றார். ஏதோ கூறினார். சங்கர் ஐந்நூறு ரூபாய் செக்கு ஜானகிசரணின் பெயரில் கொடுத்தார். அவர் ரூபாய் நோட்டுக்களைச் சுக்லாவின் சட்டைப் பைக்குள் மெது வாகப் போட்டார். பெண்மணியை விரஹேஷிடம் ஒப்படைக்க வேண்டும் என்று நிச்சயம் செய்யப்பட்டது. வேறு அவளுக்குப் புகலிடம் கிடையாது.

மஹிபால் கூறினான்: ''போர் எங்கே என்று தெரியவில்லை, தேடிப் பார்க்கிறேன்.''

''உன்னைவிட அவனை எனக்கு நன்றாகத் தெரியும், மஹிபால் அவனைப் பிடித்துப் போலீசில் இருபது அடிகள் வாங்கிக் கொடுக் கப் போகிறேன்.''

"நான் சொல்கிறேன், உன்னால் அவனுடைய வீட்டை அவ்வளவு எளிதாகக் கண்டு பிடிக்க முடியாது. மஹிபால் உண்மையாக இப்போது சீலாவைச் சந்திக்க விரும்பவில்லை. 'மோஹினி—போர்' பற்றிய நிகழ்ச்சியை சீலா தெரிந்துகொண்டால் அவளுக்கு வேதனையாக இருக்கும்.''

மஹிபால் தன் மனைவியைத் துன்புறுத்துபவன். விரஹேஷைப் போலவே அவனும் குழந்தைகளுக்குத் தந்தையாக இருந்து வேறொரு பெண்ணைக் காதலிப்பவனாயிற்றே! காதலில் அவனுந் தான் ஈடுபட்டிருக்கிறான். அப்படியிருக்கையில் மோஹினி— விரஹேஷின் காதலை மட்டும் ஏன் களங்கமுள்ளதாக அவன் கருத வேண்டும்? இம்மாதிரி நிலையிலிருந்து மஹிபால் தப்ப விரும்பு கிறான். அவன் சீலாவிடமிருந்து தப்ப விரும்புகிறான். தன்னிட மிருந்தே தப்ப விரும்புகிறான். அவன் கணவன்; தந்தை; தன் குடும் பத்தில் அவன் ஆற்ற வேண்டிய கடமைகள் இருக்கின்றன; அவற் றைச் செய்தாக வேண்டும். "மற்றக் கவலைகளைச் சுட்டெரி;

இதயத்தைச் சுட்டெரி; கடந்த வாழ்க்கையை மறந்து விடு'' என்றது அவனது மனசாட்சி.

தன் அறையில் சீலா, மோஹினியைத் தேற்றிக் கொண்டிருந்தாள் : ''கடந்த வாழ்க்கையை மறந்து விடு. புதிய வாழ்க்கையைப்பற்றி நினை!''

சிறிது நேரத்திற்குப் பிறகு, மஹிபால் விரஹேஷை சீலாவின் வீட்டில் விட்டு விட்டு வாசலிலிருந்தே திரும்பிவிட்டான். கர்னல், சீலா, சங்கர், சரூப் யாவரும் விரஹேஷிடம் சாம—பேத—தான—தண்டங்களைப் பிரயோகித்தனர். விரஹேஷ் அவளைக் காப்பாற்றுவதாக வாக்களித்தான்.

கிளம்பியபோது சரூப் மோஹினியை அணைத்துக்கொண்டு அழுதாள். சங்கரின் கண்களும் கண்ணீரால் நனைந்தன. கர்னலின் கண்களிலிருந்தும் நீர் வழிந்தது. மோஹினி கற்சிலை போல் நின்றுகொண்டிருந்தாள்.

விரஹேஷ் தன் காதலியின் கரம்பற்றி அறைக்குச் செல்ல முற்பட்டான். புதிய மணப் பெண்ணைப் போல் தலை குனிந்து மோஹினி பையப் பைய அடி வைத்து நடந்தாள். பிறகு திரும்பிப் பார்த்துச் சங்கரிடமும், சரூப்பிடமும் குரல் தழுதழுக்கக் கூறினாள் : ''முன்னுவை அம்மா பார்த்துக் கொள்வார்கள். என் மகளைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளுங்கள்? என் கண்ணே!''

மோஹினி திடீரென்று மூர்ச்சித்து விழுந்தாள்.

* * * *

அன்றிரவு லக்னோவில் சஜ்ஜனின் அறையைப் பேட்டையைச் சேர்ந்த சிலர் முற்றுகையிட்டனர். மோஹினி—போர் காதல் நிகழ்ச்சிக்குக் காரணம் சஜ்ஜன்தான் என்று மக்கள் அவன்பேரில் பழி சுமத்தினர். பழைய கதையை அவர்கள் புதுப்பிக்கத் தொடங்கினர். அந்தப் பேட்டைக்கு வந்ததும் சாமான் விற்பனை செய்யும் அகதிப் பத்திரிகைகளுக்கு விடுத்த புகாரைப்பற்றி அவர்கள் பேசினர் : ''இப்படி ஏதாவது நடக்கும் என்று முன்னமேயே நாங்கள் சொன்னோம்'' என்று கூட்டத்திலிருந்த அநுபவஸ்தர்களில் சிலர் கூறினர். மனியாவின் நண்பர்களும், ஆவேசங்கொண்டனர். சாளிக்ராம், ஜானகிசரண் போன்றவர்களும் மக்களை ஆத்திரப்பட ஊக்குவித்தனர். எலெக்ஷன் கூட்டம் தன் முழு வேகத்துடன் சஜ்ஜனுடைய அறைக்குள் நுழைந்து விட்டது. ஆவேசம் கொண்ட மக்கள் அறையின் பூட்டை உடைத்தனர். சஜ்ஜன் தீட்டிய படங்களைக் கிழித்து வீசினர். கலர் ட்யூப்களை எறிந்தனர். அவற்றைச் செருப்பாலும் பூட்சாலும்

மிதித்துத் தரையைப் பாழ்படுத்தினர். சிறு அறைக்குள் சுமார் இருபது பேர் நுழைந்து இஷ்டப்படி அட்டகாசம் புரிந்தனர். சுவர்களில் மாட்டப்பட்டிருந்த படங்களையும் பாழாக்கினர். ஒன்றின்மீது 'ஸ்டவ்' வீசப்பட்டது. மற்றொன்றின் மீது தேநீர் கோப்பைகளை எறிந்து உடைத்தனர். மூன்றும் படத்தின் மீது ஸ்டூலை வைத்து, அதன்மீது பலப் பரீட்சையை நடத்தினர். ஸ்டவ் வில் இருந்த எண்ணெய் படுக்கையில் சிந்தப்பட்டது. அதற்குத் தீ யிட்டனர். அறை முழுவதும், உடைந்து தூள் தூளான சாமான் களால் நிரம்பிவிட்டது.

அடுத்த வீடுகளிலுள்ள மக்கள் ஜன்னல்களின் வழியாக இந்தப் பித்தர் கூட்டத்தின் கொம்மாளத்தைப் பார்த்துக்கொண்டிருந் தனர். பற்றற்று வேடிக்கை பார்ப்பவரின் பேச்சுக்கள்! உடைந்து நொறுங்கும் ஒலி! இவற்றால் சூழ்நிலை மிகவும், பயங்கரமாகி விட்டது. கேட்டவரெல்லோரும் வேடிக்கை பார்க்க ஓடி வந்த னர். கீழே கூட்டம், அருகேயிருந்த வீடுகளில் கூட்டம்; சஜ்ஜனைப் பழி வாங்க அவனுடைய அறையில் கூடியிருக்கும் கூட்டம். இந்த அமளி துமளிகளுக்கிடையே திடீரென்று தாயியின் வீட்டுக் கதவு திறக்கப்பட்டது. ஒரு கையில் குங்கும முடிச்சுடன் கறுத்த குச்சியைப் போல், பற்களைக் கடித்துக்கொண்டு, வசைமாறி பொழிந்தபடி மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு தாயி வந்தாள். தாயியைக் கண்டதும் வேடிக்கை பார்ப்பவர்களின் உற்சாகமும் அதிகரித்தது. அவள் குங்குமத்தை எடுத்து இரு பக்கங்களிலும் வீசிக்கொண்டே சென்றாள்: "ஓம் நமோ நாராயணாய! ஓ காளி! பகைவர்களைத் தின்றுவிடு. எல்லோரையும் குலமின்றி அழித்து விடு!" பயங்கரமான கண்கள், சுளித்த முகம், கறுத்த பற்கள்—இப்படிப்பட்ட தாயி மந்திரத்தை ஓதிக்கொண்டே வந்தாள். அவளுடைய வரவால் கூட்டமே அயர்ந்துவிட்டது; மக்கள் சிலர் கூச்சல்போட ஆரம்பித்தனர். ஆனால் அவள் குங்குமத்தை வீசும் முறை மக்களை நடுங்கச் செய்தது. மாடிப்படியருகே வந்த அவள், கூட்டத்தினிடையே புகுந்தாள்; நசுக்குண்டதால் ஆத்திரங் கொண்ட அவள் ஒரு கிழவனை தன் நகங்களால் கீறி, அவனுடைய வாய் நிரம்ப குங்குமத்தைப் போட்டு அடைத்தாள். பில்லி சூனியக்காரியின் இந்தச் செயலைக்கண்ட கிழவன் கூக்குரலிட்டான். அருகே ஒரே அமளிதுமளி. தாயி ரத்தத்தைக் குடிக்கிறாள் என்று மக்கள் புரளி வேறு செய்ய ஆரம்பித்தனர்!

சஜ்ஜனுடைய அறை வரையில் கூப்பாடு போட்டுக்கொண்டு வந்த தாயி ஒரு வழியாக மாடிக்குப் போய் சேர்ந்தாள். வழியில் அவளைக் கண்டு நடுங்கிய ஒருவன் அவள்மீது மோதி குங்குமத்தை அவள் பேரிலேயே கொட்டும்படி செய்துவிட்டான். குங்குமக்

காப்புடனும், கூக்குரலுடனும் காட்சியளித்த தாயி பார்ப்பதற்கு மிகவும் பயங்கரமாக இருந்தாள்.

சிறிது நேரத்தில் தாயி பயந்த கூட்டத்தின் பேரில் வெற்றியடைந்துவிட்டாள்! கரதூஷணர்களின் பெரிய படையை ஒடுக்கி ராம லக்ஷ்மணர் வெற்றி பெற்றனரே; அதற்கு பிறகு இரண்டாவது வெற்றியை அம்மாதிரி அடைந்தவள் தாயி ஒருத்திதான்!

திரும்பிய கூட்டம் வர்மா, பபூதி இவர்களின் தெருவழியாக வந்தது. வர்மாவின் வீட்டில் சற்றுக்குரல் கொடுத்தது. ஆபாசமான வசைகளை உதிர்த்தது. கதவுகளை ஓசைப்படுத்தியது. மணியாவின் வீடு பக்கத்திலேயே இருந்தபடியால் தாக்க வந்த கூட்டத்தின் அநுதாபம் அதிக ஆவேசங்கொண்டது. சமுதாயத்தின் ஆங்கிலேயப் பழக்கவழக்கங்களைக் கூட்டத்தின் ஒரு பகுதி எதிர்த்தது. கதவு மூடியும் ஓசை கேட்கவே தாராவும் வர்மாவும் பயந்தனர். சரூப்—சங்கர் இருவரும் தம் அறையிலேயே பதுங்கிக் கிடந்தனர். மணியா மது அருந்திவிட்டுச் சுய உணர்வை இழந்திருந்தான்.

அன்றிரவு வெகு நேரம்வரை விளக்கை எரிய வைத்துக்கொண்டு தாயி கன்னேமல்லின் பேரன் தீட்டிய படங்களின் துண்டுகளை ஒன்று திரட்டிச் சீர்ப்படுத்திக் கொண்டிருந்தாள்.

## 28

தாயி திரும்பிவந்து நீராடினுள். உலகம் முழுவதையும் திட்டிக் கொண்டே பூஜையறையில் விளக்கேற்றி வைத்தாள். அதன் பிறகு அவள் பூனைக்குட்டிகளுக்காக வைக்கப்பட்டிருக்கும் கிண்ணங்களில் பால் வார்த்து அவற்றை அழைக்கலானுள். தாயியின் குரலைக் கேட்டதும் 'லலிதா'வும், 'விசாகா'வும் வாலையாட்டிக் கொண்டு வந்து நின்றன. ஆனுல் 'கிஸ்னு' மட்டும் வரவில்லை. தாயிக்குக் கிஸ்னுவைப் பற்றிக் கவலையாக இருந்தது. எங்கே போய்த் தொலைந்தது என்று எண்ணியவாறு அவள் 'கிஸ்னு' 'கிஸ்னு' என்று கூப்பிட்டுக் கொண்டே வீடு முழுவதும் தேடினுள். அது கிடைக்காமற்போன பொழுது அதைப் பலவாருகத் திட்டிக் கொண்டே வந்து, அவள் தன்னுடைய மரக்கட்டிலில் படுத்துக் கொண்டாள். பூனைக்குட்டிகள் வளர்ந்துவிட்டன. இப்பொழுதெல்லாம் அவை வீட்டில் தங்குவதே இல்லை. கைப்பிடிச் சுவர் வழியாக ஏறிக் குதித்து அந்தப் பகுதி முழுவதிலும் வட்டமிட்டுக் கொண்டே இருந்தன. தாயிக்கு இதனுல் மிகவும் கஷ்டமாக இருந்தது. அந்த மூன்று பூனைக்குட்டிகளுக்கும் ஒன்றும் கொடுக்

காதவரையில் அவள் சாப்பிடுவதேயில்லை. 'கிஸ்ஞு' இல்லாததால் இப்பொழுதும் அவள் சாப்பிடமுடியவில்லை. அவள் பொருமிக் கொண்டும், பிதற்றிக் கொண்டும் இருந்தாள். தன் வீட்டில் குட்டிகளைப் போட்டுவிட்டுப்போன அந்தக் குட்டிகளின் தாயைத் தன் சக்களத்திகளாகக் கருதித் திட்டிக்கொண்டே இருந்தாள்.

அப்பொழுது தாயி பல கவலைகளில் ஆழ்ந்திருந்தாள். 'கிஸ்ஞு' பால் குடிக்கவில்லை; கன்னுமல்லின் பேரனுக்குப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டுவிட்டது; நாளை அவளுடைய சக்களத்தியின் பேரனின் திருமணத்திற்குப் பெண் வீட்டாரிடமிருந்து பரிசம் வரப் போகிறது; அங்கே விருந்து ஏற்பாடுகள் நடக்கும்; மந்திரித்த தாயத்துக்களை மயானத்தில் புதைத்துவிட்டாளா இல்லையா என்று நந்தோ சனியன் திரும்பி வந்து சொல்லவும் இல்லை! இந்தக் கவலைகளெல்லாம் சேர்ந்து மக்கள் துன்புறுத்துவதுபோல் அவளை வாட்டிக் கொண்டிருந்தன. சஜ்ஜனின் அறையைச் சூறையாடிய கூட்டத்தை நினைத்து நினைத்துத் தாயி இன்னும் பொருமிக் கொண்டேயிருந்தாள். அந்தக் கூட்டத்தை அழிக்கும் எண்ணம் அவளுடைய உள்ளத்தில் தோன்றிக் கொண்டேயிருந்தது. கூட்டத்தார்மீது மந்திரித்த சிந்தூரத்தைத் தூவி எல்லோரையும் அழித்துவிடுவதாக அவள் இன்னும் கற்பனை செய்து கொண்டே இருந்தாள்.

காவல் நிலையத்துக் கடிகாரத்தில் மணி ஒன்று அடித்தது. 'லலிதா'வும் 'விசாகா'வும் வீட்டின் ஒரு மூலையில் எலி ஒன்றைப் பிடித்துவிட்டன. எலி சூங்–சூங் என்று கத்திக்கொண்டே இறந்துவிட்டது. பூனைக்குட்டிகள் வளர்ந்தவுடன் வேட்டையாடத் தொடங்கிவிட்டனவே என்று எண்ணிய தாயியின் உள்ளம் அவற்றைத் திட்டத் தொடங்கிற்று. தாயியின் வைஷ்ணவ சம்ஸ்காரம் (மரபுணர்வு) லலிதா, விசாகா, கிஸ்ஞு இவற்றின் வன்முறைப் போக்கைப் பெரிதும் வெறுத்தது. ஆனால் அவளால் இவற்றை ஒன்றும் செய்ய முடியவில்லை!

அப்பொழுது தாயிக்கு ஏதோ சீறும் சத்தம் கேட்டது. லலிதா, விசாகா இவற்றுள் ஏதோ ஒன்று சீறிக் கொண்டிருந்தது. ஏனென்றால், ஒன்றின் பிடியில் எலி அகப்பட்டிருந்ததால் மற்றொன்று அதைக் கைப்பற்ற முயன்று கொண்டிருந்தது. சிறிது நேரத்தில் லலிதாவும் விசாகாவும் 'காஉங்-காஉங்-காஉங்' என்று கத்திக் கொண்டு ஒன்றுக்கொன்று மோதிக்கொள்ளத் தொடங்கின. வீடு முழுவதும் ஒரு குருக்ஷேத்திரமாக ஆகிவிட்டது. லலிதாவும் விசாகாவும் வீடு முழுவதும் ஓடிக்கொண்டு நடுநடுவே சண்டை போட்டுக்கொண்டு சீறிக் கொண்டிருந்தன.

"சாகுங்கள், ஒழிந்து போங்கள், எல்லோரும் அழிந்துபோங்கள்!

சனியன்கள்! இரவில் இரண்டு மணி நேரங்கூட அமைதியாகத் தூங்கவிடுவதில்லே!'' என்று கத்திக்கொண்டே தாயி எழுந்துபோய் அவற்றின் சண்டையை நிறுத்தச் செய்யலாம் என்று நினைத்தாள். ஆனுல், அப்போது அவள் பெரிதும் களைத்துப் போயிருந்தாள். அவளுடைய உடலின் கணுக்களிலெல்லாம் ஒரே வலியாக இருந்தது. இன்று அவள் கூட்டத்தில் சிக்கிக்கொண்டதுபோல் அதுவரை சிக்கிக்கொண்டதே இல்லே. கூட்டத்தின் நெருக்கடியில் அவள் தள்ளப்பட்டு முன்னும் பின்னும் விழுந்தாள். அவளுடைய மந்திரச் சிந்தூரத்தால் பயந்த மக்களிடையே குழப்பம் பரவி விட்டது. மக்கள் சிரித்துக் கொண்டும், கோபித்துக் கொண்டும், பயந்து கொண்டும் சிந்தூரத்திரமிருந்து தப்புவதற்காக ஓடத் தொடங்கினுர்கள். மக்களின் வெறுப்பால் தாயி இங்குமங்கும் தள்ளப்பட்டாள். பல முறை மக்களின் செருப்புக்கள் தாயியின் கால்களே நசுக்கிவிட்டன. கடைசியில் தாயி வெற்றியே அடைந் தாலும், அவளுடைய நிலேமை மிகவும் மோசமாகிவிட்டது!

அந்த நேரத்தில் யாரோ ஒரு பெண் பலமாக முனகும் குரல் தாயியின் காதுகளில் விழுந்தது. தாயியின் கவனம் அதை நோக்கித் திரும்பியதும் அவள் பிதற்றுவது தடைப்பட்டது. அவள், தன் முகத்திலிருந்து போர்வையை அகற்றினுள். யாரோ ஒரு பெண் மிகவும் அருகில் பிரசவ வேதனேயால் முனகிக் கொண் டிருந்தாள். 'யார் அவள்? யாருடைய வீட்டிலிருந்து அந்தக் குரல் வருகிறது?' என்பதை அறியவேண்டுமென்ற ஆர்வம் தாயியை அமைதியுடன் காத்திருக்கவிடவில்லே. தாயி எழுந்து உட்கார்ந் தாள். தாயி உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, தன் சகோதரிகளான லலிதாவையும் விசாகாவையும்விட வலிமை குறைந்த கிஸ்னு பாய்ந்துவந்து அவள் மடியில் உட்கார்ந்துகொண்டது. ஆனுல் தாயியின் கவனம் வேறு எங்கோ இருந்தது. பக்கத்து வீட்டில் யாரோ வலியால் முனகிக் கொண்டிருந்தாள். சிந்தித்துப் பார்த்ததில் தன் வீட்டில் குடியிருக்கும் தாரா முனகுவது தாயிக்கு நன்ருகப் புரிந்துவிட்டது.

தாயியின் உள்ளத்தில் கோபம், சுதர்சனச் சக்கரத்தைப்போல் சுழலத் தொடங்கிற்று. 'சனி! செத்தால் நல்லதுதான்! அந்தப் பிசாசுக்கு ஓர் ஆண் குழந்தைப் பிறக்கப் போகிறது. அதனுல்தான் இவ்வளவு வலி ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது.' என்று தாயி எண்ணலானுள்.

தாராவின் பிரசவ வேதனேக் கூக்குரலேக் கேட்ட தாயியின் உள்ளம் எதை எதையெல்லாமோ எண்ணலாயிற்று. முதலில் சக்களத்தியை நோக்கி அவள் எண்ணம் சென்றது. 'அவளுடைய பேரனுக்குத் திருமணப் பரிசம் வரும், அவளுடைய

பேரனுக்குத் திருமணம் நடக்கும். பாட்டும், கூத்துமாகக் கொம்மாளப்படும். நாளை, சக்களத்தி ஊர்ப் பெண்களுக்கிடையில் அரசியைப் போல் வீற்றிருப்பாள். அவளுடைய மருமகளும் தலைகால் தெரியாமல் இருப்பாள். நான்கு நாட்களில் திருமணமாகும் பின்னர், அவள் பேரனுக்குக் குழந்தைகள் பிறக்கும். அந்தப் பேய்ச் சக்களத்தி கொள்ளுப் பாட்டியாகிக் கொம்மாளமடிப்பாள்' என்றெல்லாம் எண்ணிய பிறகு தன் கணவரான ராஜா சாஹேபை நினைத்ததும் தாயியின் உள்ளத்தில் கோபமும் வெறுப்பும் தோன்றின. அவளுடைய உள்ளத்து எரிச்சல் அவளை உட்கார்ந்திருக்க விடவில்லை. கிஸ்ஞு மடியிலேயே தூங்கி விட்டது. தாயி போர்வையைத் தட்டி விட்டாள். கிஸ்ஞு மடியிலிருந்து உருண்டு விழித்துக்கொண்டு விட்டது. ஆனால் தாயி எழுந்திருக்கவும் இல்லை. அவள் பூனைக்குட்டியைக் கவனிக்கவுமில்லை. அடிக்கடி காதில் விழும் தாராவின் பிரசவ வேதனைக் கூக்குரல் கூட ஏதோ பின் பாட்டுப் போல் இருந்ததே தவிர, தாயியின் கவனத்தை முழுவதும் கவரவில்லை. அவள் அப்பொழுது நந்தோவைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்தாள். நந்தோ சக்களத்தியின் வீட்டிலும் மயானத்திலும் தாயத்துக் களைப் புதைத்துவிட்டு வந்திருப்பாள். நாளை மாலையில் திருமணம் நடக்கும் பொழுது அந்தச் சனியன் (சக்களத்திப் பேரன்) வெட்டுப் பட்ட மரம் போல் விழ வேண்டும்—ஆண்டவன்தான் இதைச் செய்து வைக்க வேண்டும்! கொம்மாளமெல்லாம் அழிந்து அழுகைக் குரலாக மாறிவிடும். சக்களத்தி மார்பில் அடித்துக் கொண்டு கூக்குரலிடுவாள். தன் கணவர் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விடுவார். எங்கும் ஒரே வேதனைக் குரலாக இருக்கும்—இவ்வாறெல்லாம் எண்ணிய தாயியின் உள்ளத்தில் ஈரமற்ற ஒரு களிப்புப் பொங்கிற்று. அவளுடைய தூக்கம் போய் விட்டது. வெற்றிலை போட்டுக்கொள்ளும் ஆசை தோன்றிற்று. தாயி எழுந்திருந்து தலைப் பக்கத்தில் வைத்திருந்த விளக்குத் திரியை உயர்த்தினாள். விளக்கைப் பூஜைத் தாழ்வாரத்தில் வைத்துவிட்டுக் கை கழுவுவதற்காக முற்றத்திற்கு வந்தாள். அப்பொழுது தாராவின் பிரசவ வேதனை மிகவும் அருகிலிருந்து கேட்பது போல் இருந்தது. தண்ணீர் வைக்கப் பட்டிருந்த இடத் திற்கு மிகவும் அருகில் தாராவின் வீட்டுப் பக்கம் செல்லக் கூடிய மூடப்பட்ட கதவு ஒன்று இருந்தது. தாயி கை கழுவி விட்டுக் கதவில் காதை வைத்துக் கொண்டு அந்தக் குரலைக் கேட்டவாறு நின்று கொண்டிருந்தாள். அந்தக் கதவிற்கப்பால் தாராவின் வீட்டுப் பக்கமாகத் தாராவின் சமையலறைப் பக்கம் போகக் கூடிய ஒரு குறுகிய பாதை இருந்தது. அதற்குப் பிறகு முற்றம்,

தாழ்வாரம், அறை என்றெல்லாம் எண்ணியவாறே தாயி கற்பனையாலேயே தன் வீட்டில் குடியிருக்கும் தாராவிடம் போய்ச் சேர்ந்து விட்டாள். அவளுடைய துன்பம் நிறைந்த முகத்தைப் பார்த்துச் சிரித்தவளாய் அவளைப் பலவாருகத் திட்டத் தொடங்கினுள். தன் அழியாக் கற்பனையால் தாராவின் சாவைப் பற்றி நினைத்துக் கொண்டே தாயி வெற்றிலைப் பெட்டி வைக்கப் பட்டிருந்த பூஜை அறைத் தாழ்வாரத்தை வந்தடைந்தாள். கிஸ்ஞு, லலிதா, விசாகா மூன்றும் அந்த வெற்றிலைப் பெட்டியின் அருகில் விளக்கைச் சுற்றி உட்கார்ந்து கொண்டன. அந்த மூன்று பூனைக் குட்டிகளும் லட்டைப் போன்ற முகத்தை வைத்துக் கொண்டு தாயி வெற்றிலை மடிப்பதையே விழித்து விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தன. வெண்மையான தோலில் மஞ்சள் புள்ளிகளும் கறுப்புப் புள்ளிகளும் கலந்திருந்த மூன்று பூனைக் குட்டிகளும் மிக அழகாகக் காணப்பட்டன. வெறுப்புணர்வு மேலிட்டிருந்த தாயிக்கு அந்தக் குட்டிகளின் அழகு பெரிதும் மகிழ்வை அளித்தது. சக்களத்திக்குத் தன் பேரன்—பேத்திகளைப் பார்த்து ஏற்படும் பெருமித உணர்வு தாயிக்கு அந்தக் குட்டிகளைப் பார்த்து ஏற்பட்டது. 'சனியன்கள்! எவ்வளவு அப்பாவிகள் போல இருக்கின்றன! எலியைப் பிடிக்கும் பொழுது இந்த அப் பாவித்தனமெல்லாம் எங்கேதான் போகுமோ!' என்று அவள் எண்ணிஞள்.

தாயி வெற்றிலையைக் கழுவுவதற்காகக் கிண்ணத்தில் தண்ணீர் கொண்டு வந்தாள். அதில் விசாகா தன் வாயை விட்டு விட்டது; தாயிக்கு மறுபடியும் மிகவும் கோபம் வந்து விட்டது. பூனைக் குட்டிகள் வந்ததிலிருந்து தாயி செய்யும் பூஜை முதலிய காரியங்கள் ஒவ்வொரு நாளும் பல முறைகள் கெட்டுப் போய்விடும். பூனைக் குட்டிகள் வீட்டில் அசுத்தம் செய்துவிடும். தாயி திட்டிக் கொண்டே அந்த அசுத்தத்தைப் பல முறை சுத்தம் செய்வது வழக்கமாக இருந்தது. அந்தக் குட்டிகள் அவளுடைய சமையலறை, பூஜையறை, மற்றும் எங்கேதான் நுழைவதில்லை! எலிகளைத் தின்றுவிட்டு விரல்களால் வாயைத் துடைத்துக்கொண்டு பெருமிதத்துடன் அவை தாயியின் மடியில் வந்து உட்கார்ந்து கொள்ளும். வைஷ்ணவ சமஸ்காரம் (மரபுணர்வு) நிறைந்த தாயி அப்பொழுது சாப்பிடக் கூடாததைச் சாப்பிடும் லலிதா, விசாகா, கிஸ்ஞு மூவரையும் வெறுப்புடன் அப்பால் தள்ளி விடுவாள். குட்டிகள் அடிக்கடி அருகில் வரப் பிடிவாதம் செய்யும். பிடிவாதம் செய்து அன்பைப் பெறுவது பூனையின் சிறப்பான குணமாயிற்றே! தாயி அவற்றிடம் தோற்றுப் போய் அவற்றைத் தன் மடியில் உட்கார வைத்துக் கொள்வாள். சாப்பிடக் கூடாத

தைச் சாப்பிடக் கூடிய வெறுக்கத்தக்க அந்தப் பூனைக்குட்டிகள் இப்போது தாயியின் 'கிஸ்ஞு'கவும் 'லலிதா' 'விசாகா' வாகவும் ஆகி அவளுடைய கையில் விழுந்திருக்கும் சுருக் கங்களை நக்குவது வழக்கம். தாயியின் முகத்தையும் தம் சொர சொரப்பான நாக்கால் அவை நக்கும். அவை விளையாடிக் கொண்டே சில சமயங்களில் தெய்வதிருவுருவங்களை வைத் திருக்கும் சிம்ஹாசனத்தையும் தாண்டிவிடும். அப்பொழுது பூஜையறையில் வைக்கப்பட்டிருக்கும் பித்தளை, தாமிரம், கல் முதலியவற்ருல் அமைக்கப்பட்ட பூஜைக்கான அந்த மூர்த்திகள் சிதறிப் போகும். தாயி இதையெல்லாம் சகித்துக் கொண்டிருந் தாள். ஏதோ பிதற்றிக்கொண்டே தாயி மற்ெருரு கிண்ணத்தில் தண்ணீர் ஊற்றிக்கொண்டு வருவதற்காக எழுந்திருந்தாள். தாரா வின் உள்ளமுருக்கும் முனகலைக்கேட்டதும் நாற்பத்தைந்து ஆண்டு களுக்கு முன் தனக்கு உண்டான முதலாவதும்—கடைசியானது மான பிரசவவேதனை தாயிக்கு நினைவு வந்தது. தாயி வெற்றிலையை மடித்துக் கொண்டே அந்த வேதனைக் குரலைக்கேட்டுக்கொண் டிருந்தாள். விரலைச் சொடுக்கிக்கொண்டு கிருஷ்ணர்ப்பணம் என்று சொல்லியவாறு வெற்றிலையை வாயில் வைத்துக் கொண் டாள். பிறகு ஒரு சிட்டிகைப் புகையிலையை எடுத்து ''ஜய் ஸ்ரீ கிஷன்'' என்று கூறிக் கொண்டே வாயில் வைத்துக் கொண்டாள். கைகளைக் கழுவிவிட்டு அமைதியாக எழுந்து விளக்கை எடுத்துக் கொண்டாள். அவள் பூஜையறைக்குச் சென்று சாமான்கள் அறையிலிருந்து சாவிக் கொத்தை எடுத்தாள்.

அந்த மாளிகையில் இப்பொழுது தாரா குடியிருக்கும் பகுதியின் கதவு பல ஆண்டுகளுக்குப் பிறகு இன்றுதான் தாயி இருக்கும் பகுதியிலிருந்து திறக்கப்பட்டது.

* * * *

வலி அதிகமாகிக் கொண்டே இருந்தது. வர்மாவினுல் ஒன்றும் செய்ய முடியவில்லை. அவர் தம் நிலைமையை நினைத்துத் தாமே சிடுசிடுத்துக் கொண்டிருந்தார். வர்மாவின் பெற்றோர்களும் தாராவின் பெற்றோர்களும் அதே ஊரில் இருந்த போதிலும் யாரும் அவருக்கு உதவி செய்ய மாட்டார்கள். அவர் இருக்கும் வட்டத்தில் கூட பெரும்பாலோர் அவருடைய காதல் திரு மணத்தை வெறுப்புப் பார்வையுடனேயே பார்த்தார்கள். தன் காதல் தொடர்பை வெறுப்புடன் பார்க்கும் சமுதாயத்தை நினைத் ததும் அவருடைய உள்ளத்தில் ஓர் ஆவேசம் தோன்றிற்று. அந்த ஆவேசம் அவருடைய அன்பின் சின்னமாகத் தோன்ற விருக்கும் குழந்தைக்குத் தாயாகப்போகும் தாராபடும் துன்பத்தைப்

பார்க்கப்பார்க்க அதிகமாக வளர்ந்து கொண்டிருந்தது, தாராவின் உயிரைக் காப்பாற்றும் கவலையில் அவருக்குப் பைத்தியமே பிடித்து விடும் போல் இருந்தது. தாரா அவரை தன் அருகிலிருந்து நகர விட விரும்பவில்லை. ஆனால் வர்மா பிடிவாதமாக ஒரு நர்ஸை தேடி அழைத்து வருவதற்காக உடை மாற்றிக்கொண்டு அறையை விட்டு வெளியே கிளம்பினர். தாழ்வாரத்திற்கு வந்ததும் எதிரில் முற்றத்திற்கு அப்பாலுள்ள தாழ்வாரத்தின் எதிர்ப்பகுதியில் விறகுகள் போட்டு வைக்கப்பட்டிருக்கும் பாதையில் சிறிது வெளிச்சம் வருவதைப்பார்த்தார்.

ஒரு உருவம் அந்தப்பாதை வழியாக வருவது தெரிந்தது. அந்த உருவம் சமையலறை தாழ்வாரத்திற்கு வந்துவிட்டது. அந்த உருவம் ஒரு பெண்போலவும், வெள்ளை உடை அணிந்த பிசாசு போலவும் தென்பட்டது. அந்த வீட்டில் பேய்கள் வாழ்வதாகச் சொல்லப்பட்டது. நாள் முழுவதும் இருந்த பயமும், இப்பொழுது ஏற்பட்ட பயமும் சேர்ந்து கொண்டு தாயியை ஒரு பேயாக நினைக்க வைத்தது. வர்மாவின் கை கால்கள் உதறலெடுத்தன. பயத்தால் தொண்டை அடைத்துக் கொண்டது. அடைத்த தொண்டையிலிருந்து கடைசியாகக் கூக்குரல் எழுந்தது. வர்மா வெட்டப்பட்ட மரத்தைப்போல் தாழ்வாரத்தில் நினைவற்று விழுந்தார்.

கணவனின் கூக்குரலைக் கேட்டு அறைக்குள் வலியால் தவித்துக் கொண்டிருந்த தாரா பெரிதும் பயந்து விட்டாள். படுக்கையிலிருந்து எழுந்திருக்க முடியாததால் அவளுக்குக் கணவனின் கூக்குரலுக்கான காரணத்தை அறிய வேண்டும் என்ற ஆர்வம் தோன்றவில்லை. அவளுடைய உள்ளத்தில் அச்சம் மட்டுமே குடிகொண்டது. அவளுடைய இதயம் சஞ்சலம் அடைந்தது. கர்ப்பத்திலிருக்கும் உயிரிலும் சலனமேற்பட்டது. அவளுடைய உள்ளம் செயலற்றுப் போயிற்று. தாரா எதையும் சிந்திக்கமுடியாத நிலையில் முயற்சி ஏதும் செய்ய இயலாமல் தன்னைத்தானே காலனின் கையில் வேறுவழி இல்லாது அர்ப்பணம் செய்யலானள். அவளுடைய உள்ளம் செயலற்றுப்போய் அவள் நினைவிழந்தாள்.

தாயி வேகமாக முற்றத்தைக் கடந்து தாழ்வாரத்திற்கு வந்தாள். அங்கே ஸோபாவின் அருகில் வர்மா நினைவிழந்து கிடந்தார். ஒரு விநாடி அவரைப்பார்ப்பதற்காகத் தயங்கி நின்ற தாயி பின்னர் அறைக்குள் சென்றுவிட்டாள். தாராவின் நிலையைப்பார்த்ததும் அவளுடைய உடலில் ஒரு வேகம் ஏற்பட்டது. அவளுடைய அறிவு, நிலைமையைச் சமாளிக்க முன்வந்தது.

தனியாகவும், சக்தியற்றும் இருந்த போதிலும் தாயி தன் முயற்சியால் பெரிய காரியத்தைச் சாதித்து விட்டாள்!

நினைவு திரும்பியதும் வர்மா எழுந்து அறைக்குள் வந்தார். தாயி அப்பொழுது தாராவுக்கு பிரசவ உதவி செய்துகொண்டிருந்தாள். அதனால் வர்மாவைப் பார்த்ததும் அவரைத்திட்டி விரட்டி விட்டாள். இறைவனருள் போல் தாயி அங்கே வந்ததை வர்மாவால் நினைத்தும் பார்க்கமுடியவில்லை! ஆயினும் அவருடைய உள்ளத்தில் ஒரு பலம் வந்தது. தாயி உள்ளே இருந்தவாறே தண்ணீர் சுடவைத்துக் கொண்டுவரும்படி அவருக்குக் கட்டளை இட்டாள். பின்னர் ஒரு கத்தி கொண்டு வரும்படி கூறினாள். வர்மா அவளிடும் கட்டளைகளையெல்லாம் பேசாமல் நிறைவேற்றினார். சமையலறைப்பக்கத்துத் தாழ்வாரத்தில் (ஸ்டவ்) பற்ற வைக்கத் தொடங்கிய வர்மாவின் காதில் வீட்டில் ஏதோ ஒரு புது உயிர் வந்ததற்கு அறிகுறியான 'குவாங்-குவாங்' என்ற ஒலி விழுந்தது. அதைக் கேட்ட அவர் உள்ளம் பெரிதும் பூரிப் படைந்தது. அதோடு தாராவின் உயிரைப்பற்றிய ஓர் அச்சமும் அவர் உள்ளத்தில் தோன்றிற்று. (ஸ்டவ்) பற்றவைப்பதையும் மறந்து வர்மா ஓட்டமாக ஓடி அறைவாயிலை அடைந்தார். ஆனால் தாயியிடம் இருந்த அச்சத்தால் அங்கேயே தயங்கி நின்றுவிட்டார். முதலில் அவருக்குத் தைரியம் வரவில்லை. பிறகு அங்கிருந்து கொண்டே ''தாயி! என்ன ஆயிற்று?'' என்று கேட்டார்.

''அட! தண்ணீர் சுடவைத்தாயா இல்லையா? தகப்பனாகி விட்டான் சனியன்!'' என்று கூறிக்கொண்டே தாயி எறிந்து விழுந்தாள்.

வர்மாவுக்கு எதுவும் பேசத் தைரியம் வரவில்லை. ஆத்திரப் பட்டுக்கொண்டே அவர் சமையலறைப் பக்கம் ஓடினார்.

அன்று கற்பனைகூட செய்யப்படமுடியாத தாயியின் உருவத்தைப் பார்த்த அவரால் தன் மீது பலவிதமாக மந்திரம் போட்டு வெறுப்புடன் இருக்கக்கூடிய தாயிதான் தன்னை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்ற வந்திருக்கிறாள் என்பதை நம்பவே முடியவில்லை. எந்தப் பலனையும் எதிர்பாராது தொண்டு செய்யும் உணர்ச்சியும், இந்த அன்புணர்வும் திடீரென்று தாயியிடம் எங்கிருந்து வந்தது என்பது அவருக்குப் புதிராகவே இருந்தது. வெறுப்புணர்ச்சி நிரம்பிய தாயி அந்த நேரத்தில் புரிந்துக்கொள்ள முடியாத ஒரு தேவியாகவே அவருக்குத் தோன்றினாள்.

## 29

கன்யாவும் சஜ்ஜனும் அன்றுதான் காலையில் மதுராவிலிருந்து திரும்பி வந்தார்கள். ஸ்டேஷனில் சஜ்ஜன் கன்யாவிடம் அவள் தன்னுடன் தன் மாளிகைக்கே வரவேண்டும் என்று எவ்வளவோ சொல்லிப்பார்த்தான். ஆனால் கர்னல் அண்ணனுக்கு இதனால்

வருத்தம் ஏற்படும் என்று கூறி, கன்யா அதற்கு மறுத்துவிட்டாள். சஜ்ஜனுக்கும் அதிகம் வற்புறுத்துவது சரியல்ல என்று தோன் றிற்று. சென்ற நான்கு நாட்களில் பெரும்பாலும் இருபத்து நான்கு மணி நேரமும் கன்யாவுடன் இருந்ததில் கன்யாவை அவள் விருப்பத்திற்குமாருகத் தன்வசத்தில் கொண்டுவருவது என்பது எளிதல்ல, அவள் மற்ற நவீனப் பெண்மணிகளைப் போலல்ல என்பது சஜ்ஜனுக்கு நன்ருகப் புரிந்திருந்தது. சஜ்ஜனின் தாயைப் போலவே அவளும் பிடிவாதம் நிறைந்தவளாக இருந்தாள். சென்ற நான்கு நாட்களில் சஜ்ஜன் கன்யாவை அடையப் பெரிதும் பாடு பட்டான்; அவளை விட்டு அப்பால் போய் விடவும் அவன் துடித் தான். ஆனுல் இரண்டு நிலைகளிலும் அவனுடைய பிடிவாதம் கன்யாவின் பிடிவாதத்திற்கெதிரில் நிற்க முடியவில்லை. அந்தத் தோல்வி அவனை வெற்றி அடையப் பெரிதும் தூண்டிக்கொண்டி ருந்தது. ஆனுல் சஜ்ஜன் இந்த எண்ணத்தை உள்ளத்திலேயே அடக்கிக்கொண்டு கன்யாவுக்கெதிரில் நாகரிகம் வாய்ந்தவனுக நடந்து கொள்ள முயன்று கொண்டிருந்தான். அவனுடைய அநாகரிகப் போக்கைக் கன்யா அறிந்திருந்தாள். அதனை அவன் மாற்றிக் கொள்ள விரும்பினுன். அவன் கன்யாவின் இதயத்தை வெல்ல ஆசைப்பட்டான். அவளுடைய உடலை வெல்லவே இதயத்தை வெல்ல ஆசைப்பட்டான். நேற்றுத்தான் ஒரு நிகழ்ச்சி நடந்திருந்தது. அழகை அழிக்கும் காட்டுமிராண்டி மனிதர் களைப்பற்றிச் சஜ்ஜன் வெறுப்புடன் பேசிக்கொண்டிருந்தான். அப்பொழுது கன்யா பொருள் நிறைந்த பார்வையுடன், “நீங்கள் இன்று கூறுவதை ஒருபொழுதும் மறந்துவிடக்கூடாது” என்று அவனிடம் கூறினுள். அப்பொழுதிலிருந்தே தானே தன் சொல்லால் தோல்வியுற்ற சஜ்ஜன் அவளுடைய சொல்லை மறக்காமல் இருக்க முயன்று கொண்டிருந்தாள். அதற்குப்பிறகு அவன் கன்யாவைப் பரிகாசம் செய்யாமலிருந்தது மட்டுமல்ல; அவளிடம் எந்தவித மான வேடிக்கையுங்கூடச் செய்யாமல் இருந்தான். ரயிலில் அவன் அஜந்தா, ஆபூ, எல்லோரா, கஜுராஹோ, சிதம்பர, மதுரா முதலிய இடங்களிலுள்ள சிற்ப அழகை வருணித்துக்கொண்டே இருந்தான். ரயிலில் இரண்டு பர்த்துகளைக் கொண்ட ஒரு தனி அறை கிடைத்திருந்தும் அவன் மிகவும் தன்னடக்கத்துடன் அந்தக் கலையழகை வருணித்தான். அவன் கன்யாவுக்குத் தன் அழகு உணர்ச்சியை நன்ருக வெளிப்படுத்திவிட்டு மேல் ‘பர்த்தில்’ தூங்கச் சென்ற பொழுது அவனுடைய உள்ளம் பெரிதும் களைத்துப் போயிருந்தது.

அன்று காலையில் ஸ்டேஷனில் கன்யா, அவனுடைய மாளிகைக்கு அவனுடன் போக மறுத்தபொழுது அவன் உள்ளத்தில் வேதனை

யடைந்த போதிலும் வெளிப்படையாக "உன் விருப்பம்போல் செய்யலாம்" என்று கூறி கலைஞர்களுக்கே உரித்தான பெருமிதத்துடன் நடந்துகொள்வது போல் நடித்தான்.

மதுராவிலிருந்து தந்தி கொடுக்கப்பட்டிருந்ததால் ஸ்டேஷனுக்கு அவனுடைய டிரைவர் கார் கொண்டு வந்திருந்தான். கன்யாவைக் கொண்டு சேர்ப்பதற்காக சஜ்ஜன் கர்னலின் மருந்துக் கடைக்குச் சென்றான். அப்பொழுது கர்னல் லாலா ஜானகிசரணுடன் தன் கடைக்குப் பின்னாலிருந்த அறையில் உட்கார்ந்திருந்தான். நேற்று இரவு சஜ்ஜனின் அறை தாக்கப்பட்ட செய்தியால் கர்னல் மிகவும் நொந்து போயிருந்தான். கொள்ளைச் செய்தியைக் கொடுப்பதோடு அந்தப் பகுதியில் நடக்கவிருக்கும் சித்திரக்கலைக் கண்காட்சி ஏற்பாட்டைப் பற்றியும் பேசுவதற்காக லாலா ஜானகிசரண் வந்திருந்தார்; உலக அநுபவத்தோடு கர்னல் அவருக்குச் சரியான விடையளித்தான். லாலா ஜானகிசரண் கிளம்பிக் கொண்டிருந்த பொழுது சஜ்ஜனும் கன்யாவும் அந்த இடத்தை அடைந்தார்கள்.

இருவரையும் பார்த்ததும் கர்னலின் முகம் மலர்ந்தது. லாலா ஜானகிசரணின் பார்வை இந்த ஜோடியைப் பார்த்ததும் நீசத்தனமும், ஒரு தனிப் பொருளும் நிரம்பியதாக இருந்தது.

கர்னல் தன் வேலையாளைக் கூப்பிட்டு "போலே! வண்டியிலிருந்து 'பின்'னேவின் சாமான்களை இறக்கி மேலே கொண்டுவை" என்று கூறினான்.

"என்ன ஐயா, ரசிகரே! எங்கே காணமற்போய் விட்டீர்கள்? கண்காட்சிக்கு இரண்டே நாட்கள் தாம் இருக்கின்றன என்று தெரியுமா? நான் விளம்பரம் செய்ததில் நான்கு திசைகளிலும் உங்களைப்பற்றியே பேச்சாக இருக்கிறது" என்று லாலா ஜானகிசரண் சஜ்ஜனிடம் கூறினார்.

சஜ்ஜனுக்கு அவருடைய பேச்சு சிறிதும் பிடிக்கவில்லை; தன்னை அடக்கிக் கொள்ள முயன்றும் அவனால் இருக்கமுடியவில்லை, "ஆமாம், ஐயா! நேற்று மதுராவிலும், மற்றும் வழி முழுவதும் 'லாலா உங்களுடைய புகழ் பரவும் படி செய்துவிட்டார்' என்றுதான் ஜனங்களெல்லோரும் என்னிடம் கூறினார்கள்" என்றான் அவன்.

லாலா ஜானகிசரணால் விடையொன்றும் அளிக்கமுடியவில்லை. "நல்லது. ஐயா! இனி நீங்கள் ஆயிற்று உங்கள் வேலையாயிற்று. எங்களால் ஆன தொண்டைச் செய்துவிட்டோம். நேற்று இரவில் சாளிக்ராம் சந்தில் விழுந்துவிட்டார். அதனால் அவருடைய காலெலும்பு முறிந்துவிட்டது" என்றார்.

சஜ்ஜன் உடனே, "அடாடா!" என்று சொல்லிக்கொண்டே "அவர் எப்படி விழுந்தார்?" என்று கேட்டான். லாலா

ஜானகிசரண் புன்முறுவலுடன், "உங்கள் வீட்டு எஜமானி அவர் மீது ஏதோ மந்திரம் போட்டு விட்டதாகத்தான் காதில் விழுந்தது" என்று பதிலளித்தார்.

சஜ்ஜன் இதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே, "ஏன்? ஏன்? அவளுக்கு சாளிக்ராமிடம்..." என்று கேட்டான்.

"இப்போழுது தான் நீங்கள் வந்திருக்கிறீர்கள். சிறிது இளைப் பாறுங்கள். பிறகு கர்னல் உங்களுக்கு எல்லாம் சொல்வார். சரி நான் வருகிறேன், ராஜா சாஹேப் வீட்டிற்குப் போகவேண்டும்."

"ஏன்? எல்லாம் நலந்தானே."

"என்னங்க! இன்றுதான் திருமண விருந்து!"

"ஆமாமாம்! நான் மறந்தே போய்விட்டேன்" என்றான் சஜ்ஜன்.

"இப்பொழுதெல்லாம் நீங்கள் என்ன எண்ணங்களில் மூழ்கி யிருக்கிறீர்களோ! உங்களையே மறந்துவிடுகிறீர்களே! சரி! கர்னல், நான் போய் வருகிறேன், வணக்கம்" என்று சொல்லிக்கொண்டே வெளியே போகத் தொடங்கிய லாலா ஜானகிசரணிடம் சஜ்ஜன் "நான் இதோ வருகிறேன் என ராஜா சஹேபிடம் சொல்லுங்கள்" என்றான்.

லாலா போனபிறகு அவர்கள் ஏதேதோ பேசத் தொடங் கினார்கள். "நீ மதுராவுக்குச் சென்றதால் பெரிய காரியம் ஆகி விட்டது பின்னே! இனி நான் உன் தந்தையைக் கைது செய்யச் செய்கிறேன். அந்த சாளிக்ராமுக்கும் கர்னலிடம் மாட்டிக் கொண்டதை நினைவில் வைத்துக்கொள்ளும்படி பாடம் கற்பிக் கிறேன்" என்று கர்னல் கன்யாவிடம் கூறினான்.

சாளிகிராமைப்பற்றிய பேச்சு எழுந்ததும் அவருடைய கால் உடைந்தது பற்றியும், தாயியின் மந்திரத்தைப் பற்றியும் பேசத் தொடங்கினார்கள். கர்னல் ஒரேயடியாக சிந்தனையில் ஈடுபட்டிருந் தான். பின்பு முந்தியநாள் நடந்த நிகழ்ச்சிகளையும் கொள்ளை யையும் பற்றி அவன் சஜ்ஜனிடம் சொல்ல வேண்டியிருந்தது. அதைக் கேட்டதும் சஜ்ஜன், கன்யா இருவருடைய முகமும் சிவந்தன. வீட்டிற்குப் போவதற்கு முன்பு ஒருமுறை தனது வாடகை அறையின் நிலையை, பார்க்கச் சஜ்ஜன் முடிவு செய்தான்.

* * * *

தனது பரீக்ஷார்த்தச் சித்திரக் கூடத்தின் அவல நிலையைப் பார்த்ததும் சஜ்ஜனுக்கு எல்லைமீறிய கோபம் ஏற்பட்டது. அந்த அறை ஏதோ கொலை செய்யப்பட்ட பிணம்போல் காட்சியளித்தது. சில கிழிந்த சித்திரத் துண்டுகள் இங்குமங்கும் சிதறிக்கிடந்தன. பாதி எரிந்துபோன சிறியமேசை தன் இரு கால்களின்மீதும் கங்காரு

வைப்போல் ஒரு மூலையில் நின்றுகொண்டிருந்தது. தண்ணீர் கூஜாவின் துண்டுகளும், தாயி ஒருமூலையில் சேகரித்து வைத்திருந்த படக்கண்ணாடித் துண்டுகளும் அவனுடைய ஒவ்வொரு உரோமத்திலும் குத்துவதுபோலத் தோன்றின. மெத்தைப்பஞ்சு குடலைப் போல் வெளியே வந்து கிடந்தது. ஒரு பொருள்கூட முழுவதும் தப்பினதாகத் தெரியவில்லை. சஜ்ஜன், கன்யா, கர்னல் மூவரும் வெகுநேரம் பேசாமல் நின்று கொண்டிருந்தார்கள். சஜ்ஜனின் கண்கள் குண்டு வெளிவரப்போகும் இரண்டு துப்பாக்கிகள்போல பொங்கிக் கொண்டிருந்தன.

சஜ்ஜனின் மௌனமான பயங்கரமான உருவம் கன்யாவுக்கு அச்சத்தை அளித்தது. சஜ்ஜனை அவனுடைய கோபக்கனலிலிருந்து காப்பாற்றுவதற்காக அவள் ஏதாவது கூறவேண்டுமென்று வாக்கியங்களையும், சொற்களையும் தேடிக் கொண்டிருந்தாள். ஆனால் அவளால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அந்தச் சிறிய அறைதான் அவள் ஒரு புது உலகத்தில் நுழைந்த இடமாக இருந்தது. அங்கே தான் அவள் முதல் முறையாக சஜ்ஜனின் அருகில் வந்தாள். தினசரித் தாளான 'நவஜீவனி'ல் வேலை கிடைத்த பிறகு ஆஞ்சனேயரின் பிரசாதத்தை எடுத்துக்கொண்டு வந்ததும், அவள் சஜ்ஜனுக்கு ஆஞ்சனேயரின் குங்குமத்தைப் பொட்டாக இட்டதும், முதன் முறையாக அவளை 'நீ' என்று அவன் அழைத்ததும், தயக்கத்தைவிட்டுத் தன் திறந்த உள்ளத்துடன் அவள் சஜ்ஜனுக்கருகில் வந்ததும் அவளுக்கு நினைவிற்கு வந்தன. அன்று எதிரே சத்திய நாராயணக் கதைச் சித்திரம் வைக்கப்பட்டிருந்தது.

வெளியே மொட்டை மாடியில் புலவர் 'போர்' உட்கார்ந்திருந்தார். டாக்டர் சீலா ஸ்விங் வந்தாள். தேநீர் தயாராயிற்று. இதெல்லாம் அவளுடைய நினைவிற்கு வந்தது. அன்று எவ்வளவு சந்தோஷமான நாளாக இருந்தது! அன்று இந்த அறை எவ்வளவு அழகாகக் காட்சியளித்தது! அந்த அழகு இன்று அழிக்கப்பட்டிருப்பதைப் பார்க்க அவளுக்கு உண்மையிலேயே வேதனை உண்டாயிற்று. நேற்று சஜ்ஜன் கூறியது அவளுக்கு நினைவிற்கு வந்தது. அவள் உடனே, "நேற்று நீங்கள் கூறியது உண்மைதான்" என்று கூறினாள்.

சஜ்ஜன் மெல்ல அவள் பக்கம் கழுத்தைத் திருப்பினான். கர்னலும் அவளைக் கவனித்தான். கன்யா கூறினாள், "அழகை உண்மையாகப் புரிந்துகொள்ளாமல், அதனிடம் மதிப்புக் கொள்வதற்குப் பதிலாக அதை அழிப்பதிலேயே மகிழ்ச்சி அடையும் மக்கள் இவ்வுலகில் எப்பொழுதும் இருந்திருக்கிறார்கள். உங்களுடைய அழகான படங்களை அழித்தவர்கள் மதுராவை

அழித்த சரித்திரப் புகழ்பெற்ற கொள்ளைக்காரர்களைவிட எந்த விதத்திலும் குறைந்த காட்டுமிராண்டிகளல்லர்!"

"சந்து பொந்துகளெல்லாம் இப்பொழுது நல்லவர்கள் வாழக் கூடியதாக இல்லை. அங்கே முட்டாள்கள்தாம் வாழ்கிறார்கள் என்று நான் முன்பே சொன்னேன். சஜ்ஜன் அவர்களுடைய உள்ளத்து அழகைப் பார்க்க வந்தான். அழகைப் பார்த்தாய் விட்டதல்லவா?" என்று கர்னல் கேட்டான்.

"நான் இதனால் பயந்து இந்த அறையை விட்டுவிடுவேன் என்று இங்கே உள்ளவர்கள் நினைத்தால் அது தவறு. நான் இங்கேதான் இருக்கப்போகிறேன். நான் இந்த முட்டாள்களின் மிருகத்தனத் திற்கு இவர்களிடம் பழிவாங்கப் போகிறேன். மோசக்காரர்கள்! அஜந்தா, எல்லோரா இருக்கும் நாட்டைச் சேர்ந்தவர்களா இவர்கள்? பண்பற்ற இவர்களின் முகத்தில் கந்தகத் திராவகத்தை ஊற்றி எரித்துவிட வேண்டுமென்று தோன்றுகிறது" என்று வருத்தம் தோய்ந்த குரலில் சஜ்ஜன் கூறினான்.

"குழந்தைகளைப்போல் பேசுகிறீர்களே! எரிக்க முடியுமா? அவ்வளவு கல்நெஞ்சனாக ஆக முடியுமா?" என்று கன்யா கூறு வதைக்கேட்டு சஜ்ஜன் ஒரு பெருமூச்சு விட்டான்.

"சஜ்ஜன் நான் கூறுவதைக் கேட்பதானால் நீ இந்தக் கண் காட்சியை நிறுத்திவிடு. இங்கே உள்ளவர்கள் உன்னிடம் விரோத மாக இருக்கிறார்கள். அன்று ஏதாவது நடக்கக்கூடாதது நடந்து விட்டால் பெருங்கஷ்டமாகிவிடும். 'ஹர் எக்ஸலன்ஸீ' வரவிருக் கிறார்கள். பெரிய பெரிய மனிதர்கள் வருவார்கள். அவர்களுக் கெதிரில் உன் பெயர் கெட்டுவிடும்!" என்று கர்னல் கூறினான்.

"இல்லை அண்ணா! கண்காட்சி நடக்கத்தான் வேண்டும், இது மனிதனின் குற்றமல்ல. இது அவனுடைய சிறுமையைத்தான் காட்டுகிறது. கண்காட்சி இங்கே உள்ளவர்களுக்குக் கல்வி புகட்டு வதாக அமையவேண்டும். அப்பொழுதுதான் சஜ்ஜன் இங்கே வந்த குறிக்கோள் பூர்த்தியாகும்" என்று கன்யா தெரிவித்தாள்.

"நான் இங்கேதான் இருப்பேன், நான் இந்தப் போக்கிரிகளுக் கிடையில் இருந்துகொண்டே அவர்களுக்கும் பாடம் கற்பிப்பேன். இப்படிப்பட்ட எதிர்ப்புச் சக்திகளுக்குப் பயந்து ஓடுவது என்பது சஜ்ஜன் அறியாத விஷயம்." என்று சஜ்ஜன் பொருமிக்கொண்டே கூறினான்.

தாயி அப்பொழுது ஒரு பொட்டலத்தை எடுத்துக்கொண்டு மாடிக்கு வருவது தென்பட்டது. அவளைப் பார்த்ததும் கன்யா கைகூப்பி வணங்கினாள். தாயி விடையொன்றும் கொடுக்காமல் அவளை முறைத்துப் பார்க்கலானாள். அவள் பொட்டலத்தை சஜ்ஜனிடம் கொடுத்துக்கொண்டே, "கன்னோமல்லின் பேரப்

பிள்ளை! இதெல்லாம் உன் படங்கள்தானே! பசை பண்ணித் தருகிறேன். இவைகளையெல்லாம் ஒட்டிவைத்துவிடு'' என்று கூறினாள்.

உள்ளக்கடலின் கரையை அடைந்திருந்த கோப அலைவீச்சு உடனே பின்தங்கிவிட்டது. தாயி கூறியது அவனுக்குச் சிரிப்பை உண்டாக்கியதோடு அவனுடைய உள்ளத்தையும் தொட்டு விட்டது. தாயியின் அன்பு கடற்கோளின்பொழுது மநுவின் படகு காக்க வந்ததுபோல் அவனைக் காக்க வந்தது. சஜ்ஜன் பொட்டலத்தைப் பெற்றுக் கொண்டான். தாயி அந்த அறையைத் தாக்கியவர்களைத் திட்டிக்கொண்டே கூறத் தொடங்கினாள்; ''அப்பா? உனக்கு நஷ்டப்படுத்தியவர்கள் எல்லோரும் எட்டே நாட்களில் அழியப்போகிறார்கள்! இனிமேல் நீ இந்த அறையில் சாமான்களை வைக்காதே! நீ என்னுடைய வீட்டில் ஆண்கள் உட்காரும் அறையில் இருக்கலாமே!'' இவ்வாறு கூறிக்கொண்டே அவள் கர்னலையும் கன்யாவையும் முறைத்துப் பார்த்து ''நீங்கள் வெளியே செல்லுங்கள்! செல்லுங்கள்!'' என்று கூறினாள்.

கன்யா உடனே வெளியே சென்றுவிட்டாள். கர்னலுக்கு அவள் கூறியது பிடிக்கவில்லை. அவன் ஏதோ சொல்லத் தொடங்கும் பொழுது சஜ்ஜன் அவனுடைய கையை அழுத்தினான். கர்னலும் சைகையறிந்து வெளியே போய்விட்டான். தாயி சஜ்ஜனுக்கு மிக அருகில் வந்து மெதுவான குரலில் கூறலானாள் : ''யாரப்பா! கன்னுமல்லின் பேரப்பிள்ளை! நீ திருமணம் செய்து கொண்டுவிடு, உன் மனைவிக்கு நான் நூறு தோலா தங்கம் கொடுக்கிறேன். இந்தச் சனி யார்? வெட்கம்கெட்டவளாக இருக்கிறாளே! ஆண் பிள்ளைகளுக்குச் சமமாகச் சுற்றுகிறாளே!''

அப்பொழுது முன்னர் ஒருமுறை கூறியதுபோல் தாயியிடம் கன்யாவைப் பற்றிப் பொய் சொல்ல சஜ்ஜன் விரும்பவில்லை. விளையாட்டுப் பேச்சை அதிகமாக வளர்த்தாமல் சஜ்ஜன், ''தாயி! இவள் நல்ல பெண். உங்கள் மாளிகையில் எனக்கு இருக்க இடம் கொடுத்தால் இவளும் வரத்தான் செய்வாள்'' என்று தெளிவாகக் கூறிவிட்டான். அதற்குப் பிறகு தாயி ஒன்றும் பேசவில்லை. ஒரு விநாடி அவன் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். ''கலியுகம் வந்துவிட்டதப்பா! இவளும் வருவாளாமே! வரட்டும் சனி! வரட்டும்! வந்து தன் கணவனோடு இருக்கட்டும்! எனக்கென்ன வந்தது! என் பக்கத்துக் கதவை மூடிவிடுகிறேன்!'' என்று கூறிக்கொண்டே தாயி அங்கே நிற்காமல் வந்த வேகத்திலேயே திரும்பிப் போய்விட்டாள்.

## 30

ராஜா சாஹேபின் வீட்டில் மிகவும் பிரமாதமாக பேரனின் திருமண விருந்துநடந்தது. இரண்டு மாகாணங்களின் கவர்னர்கள், மாநில அமைச்சர்கள், துணையமைச்சர்கள், பழைய தாலூகா அதிகாரிகள் பலர், கான்புர், கல்கத்தா, ஆகிய இடங்களிலுள்ள கோடீசுவரர்கள் முதலியோர் வந்திருந்தனர். பெரிய அரசாங்கக் கூட்டமாக இருந்தது. விருந்து நடக்கும்பொழுது மஹிபால் தன் கேலி வார்த்தைகளால் மட்டமாக வேடிக்கை செய்துவிட்டான். சாப்பாடு முடிந்து புல்தரைக்கு வந்த பிறகு சஜ்ஜன் அவனிடம், "உன் மனம் பெரிதும் களைத்திருக்கிறது. சில நாட்கள் எங்கேயாவது வெளியே போய்ச்சுற்றிவிட்டு வாயேன்!'' என்று கூறினான். மஹிபாலும் தன் உள்ளத்தின் ஏதோ ஒரு மூலையில் இதனை உணர்ந்துகொண்டிருந்தான். நண்பனின் அநுதாபச் சொற்கள் அவனுக்கு அமைதியை அளித்தன. ''ஆமாம், சஜ்ஜன்! என் உள்ளக் களைப்பால் ஏற்பட்டிருக்கும் சலிப்பு, சில சமயங்களில் எனக்கே வெறுப்பை அளிக்கிறது. நீ கூறுவது சரிதான். என் மாமா பிள்ளையும் கடிதம் எழுதியிருக்கிறான். ஆகையால் சில நாட்கள் உலகக் கவலைகளையெல்லாம் விட்டுவிட்டுப் பிடிவாதமாக விடுமுறை எடுத்துக்கொண்டு அவர்கள் கிராமத்திற்குப் போய் வரலாமென்று எண்ணுகிறேன். இந்தத் தடவை போய்விட்டே வருகிறேன்'' என்று மஹிபால் கூறினான்.

தன் முடிவை நினைத்து மகிழ்ந்தவனாய் மஹிபால் அவனிடம் விடைபெற்றுக்கொண்டான். சஜ்ஜன் தனிமையை உணர்ந்தவனாய்த் தானும் வீட்டிற்குப் போகக் கிளம்பிக் கொண்டிருந்தபொழுது, பதைபதைக்கும் வெயிலைப் போல் இருந்த தன் இளமைப் பருவத்தில் அடிக்கடி நிழலாக வந்த மிகவும் பழக்கமான பெண் மணியான திருமதி சித்ரா ராஜ்தானை அவன் சந்தித்தான். தான் வீடு திரும்புவதற்கு கார் உள்ளவர் எவரையாவது அவள் தேடிக் கொண்டிருந்தாள். சித்ரா பணமானவள் அல்லள். ஆனால் பலரிடம் இருந்திருக்கிறாள். வயதால் தளர்ந்து விட்ட அவளுடைய அழகு இப்பொழுதும் கவர்ச்சிகரமாகத்தான் இருந்தது. அவனுடைய ஆசைகளுக்கு இடங் கொடுக்காமல் இருந்த கன்யாவுடன் வாழ்ந்த நான்குநாள் வாழ்க்கையில் பணக்காரனுக்கும், கலைஞனுக்கு மட்டுமே உரித்தான பிடிவாதகுணமும் சிற்றின்பவிருப்பமும் சஜ்ஜனின் உள்ளத்தில் வளர்ந்திருந்தது. அதனால் அந்த இருவரும் சேர்ந்து கொண்டார்கள்.

அன்றிரவில் மது போதையில் தான் இந்தக் குற்றம் புரிவதற்குக் காரணமாயிருந்த கன்யாவுக்குத் தண்டனை அளிப்பதற்காக அவன் தன் உள்ளத்தில் சித்ரா ராஜ்தானையே மணந்து கொண்டு வீழ்ச்சி

யடைந்த ஒருபெண்ணைக் காப்பாற்றும் லட்சியத்தை நிறைவேற்றப் போவதாக உறுதி கொண்டான்.

அடுத்த நாள் விடியற்காலையிலேயே ராஜா சாஹேபின் மூத்த மகன் வந்து அவனை அழைத்துச்சென்றான். அங்கே ராஜா சாஹேப் லாலா ஜானகிசரண், தன் முறிந்த காலில் கட்டுப் போட்டுக் கொண்டிருந்த சாளிக்ராம் ஆகியோர் அமர்ந்திருந்தனர். ராஜா சாஹேபினிடம் இருந்த மதிப்பிற்காகவும், மற்ற இருவர்கள் சூழ்ந் திருந்தாலும் வெளி உபசாரத்திற்குக் கட்டுபட்டு சஜ்ஜன் கன்யா வின் தந்தை மீதுள்ள வழக்கில் தான் எந்த உதவியும் கொடுப்ப தில்லை என்று வாக்குக்கொடுத்தான். இரண்டு நாட்கள் வரை அவன் கன்யாவையும் கர்னலையும் சந்திக்காமலேயே இருந்தான். சித்ரா அவன் வீட்டிலேதான் இருந்தாள். கர்னலும் கன்யாவும் வழக்குச் சம்பந்தமான நடவடிக்கையை மேற்கொண்டு தொடர்ந்துகொண்டிருக்கிறார்கள் என்று தினத்தாள்களில் படித்த சஜ்ஜன் மேலும் சீற்றம் கொண்டான். மூன்று நாட்கள் வரை இங்குமங்கும் சுற்றிவிட்டு நான்காவது நாளன்று சில மரச்சாமான் களையும், அழகுப் பொருள்களையும் தாயியின் வீட்டில் கொண்டு சேர்க்குமாறு தன் உதவியாளருக்குக் கட்டளை இட்டான். நடுப் பகலின் பொழுது தானும் தாயியின் வீட்டிற்குப் போய்ச் சேர்ந் தான். லலிதா, விசாகா, கிஸ்னு மூவரும் வரிசையாக ஓடிக் கொண்டிருந்தன. தாயி அவற்றைப் பிடித்துக் கொண்டு வரும் படி சஜ்ஜனிடம் கூறினாள். அவன் மூன்றையும் பிடித்துத் தூணில் கட்டிவிட்டான்.

''தாயி! நான் அனுப்பிய சாமான்கள் வந்துவிட்டனவா?''

''ஆமாம். நான் எல்லாச் சாமான்களையும் அந்தஅந்த இடத்தில் வைத்து விட்டேன். என் மாமனாரின் அறையிலேயே நீ இருந்து கொள்ளலாம். ஏனப்பா! என் சக்களத்திப்பேரனின் திருமணத் திற்கு நீ போயிருந்தாயா?''

''ஆமாம் தாயி!''

''எப்படியிருந்தது விருந்து? பல பேர்கள் வந்திருந்ததாகச் சொன்னார்களே!''

''இல்லை, தாயி! பலபேர்கள் ஒன்று மில்லை. ஏதோ அறுநூறு, எழுநூறு பேர்கள் வந்திருப்பார்கள்'' என்று அவன் அறிந்திருந்தும் பொய் கூறினான். ''எவ்வளவு இனிப்புப் பண்டங்கள் பண்ணி யிருந்தார்கள்?'' சஜ்ஜனுக்கு அவற்றைப் பற்றி நினைவில்லை. ஆயினும் அவன் அப்பொழுது தேவையில்லாத பேச்சு வார்த்தை களிலிருந்து தப்பித்துக்கொள்ள விரும்பி, ''எண்ணிப் பார்க்கும் பொழுது பல இனிப்புப் பண்டங்கள் இருப்பதாகத் தோன்றின. ஆனால் அப்படி ஒன்றும் சிறப்பாக இல்லை'' என்று கூறிவைத்தான்.

சிறிதுநேரம் மௌனமாக இருந்து விட்டுத் தாயி கூறத் தொடங்கினாள்: ''கன்னோமல்லின் பேரப்பிள்ளை! நீ திருமணம் செய்து கொள். நானும் பெரிய விருந்து ஏற்பாடு செய்து அவளுடைய உள்ளத்தில் பொறாமை ஏற்படும்படி செய்துவிடுகிறேன். சொல்லப்பா! நிச்சயம் செய்யட்டுமா? நீயும் பெண்ணைப் பார்க்கலாம். மிகவும் நல்ல பெண்.''

சஜ்ஜன் அந்தச் சிக்கலிலிருந்து தப்பவிரும்பி, ''தாயி! இரண்டு ஆண்டுகளுக்குள் நான் மணம் செய்து கொண்டால் இறந்து விடுவேன் என்று என் ஜாதகத்தில் குறிப்பிட்டிருக்கிறது'' என்று கூறினான்.

தாயி அதைக் கேட்டதும் வாயடைத்து நின்று விட்டாள். பின்னர் அவள், ''ஜாதகங்களை நன்றாக ஒப்பிட்டுப் பார்க்கச் சொல்லுகிறேன். எந்தப் பெண்ணினுடைய ஜாதகத்தில் சுமங்கலியாக இருப்பாள் என்று குறிப்பிட்டிருக்கிறதோ அவளையே ''என்று கூறிக்கொண்டே ஏதோ ஒரு ரகசியம் கூறுவது போல் மெதுவான குரலில் கூறத் தொடங்கினாள்: ''கன்னோமல்லின் பேரப்பிள்ளை யாருக்காவது நல்ல காரியம் செய்துவைக்கவேண்டுமென்று என் உள்ளத்தில் ஒரே ஆசையாக இருக்கிறது. 'நமக்குத்தான் பிள்ளைகளும் பேரப் பிள்ளைகளும் இருக்கிறார்கள். நாம்தான் அவர்களைச் சீராட்டுகிறோம்' என்று அந்தக் கேடுகெட்டவள் நினைத்துக் கொண்டிருக்கிறாள். நானும் இப்பொழுதே இந்தக் குழந்தைக்கு ஆறாவது நாள் விழாவைக் கொண்டாடிவிட்டு உனக்கும்—''

அந்த நேரத்தில் வீட்டுச் சங்கிலியை யாரோ தட்டுவது கேட்டு தாயி எழுந்து போய்விட்டாள். சஜ்ஜன் வாயிலில் தெருப்பக்கமாக வந்து நின்றான். லாலா ஜானகிசரண் தம் வீட்டு வராண்டாவில் உட்கார்ந்துகொண்டு பழக்காரனிடம் பேரம் பேசிக் கொண்டிருந்தார். அவனைப் பார்த்ததும் அவர், ''என்ன தம்பி! தாயியின் மடியில் உட்கார்ந்துவிட்டாயா?'' என்று கேட்டார்.

அந்த நேரத்தில் சஜ்ஜன் கேலியான சொற்களுக்கு விடையளிக்கக் கூடிய மன நிலையில் இல்லை. லாலாவைப் பார்த்ததும் அவன் வெட்கமடைந்தான். ''வா தம்பி! உட்காரு! அட கொஞ்ச நேரம் வந்து உட்காரு தம்பி!'' என்று லாலா மறுபடியும் கூறினார்.

சஜ்ஜன் வேறு வழியின்றி அவர் வீட்டு மேடை மீது ஏறினான். ''சிறுவர்கள் பெரியோர்களை மறந்து போனாலும் பெரியோர்கள் எப்பொழுதும் பெரியோர்களாகவே இருப்பார்கள். இன்றையச் செய்தித்தாளைப் படித்ததும் ராஜா சாஹேபுக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. இன்று அவர் டெலிபோன் கூடச்செய்தார்'' என்று லாலா கூறினார்.

லாலா ஜானகிசரண் இன்னும் ஏதாவது பேசுவதற்கு முன்னரே

சஜ்ஜன், ''லாலாஜி! இதில் எனக்கு எவ்விதத் தொடர்பும் கிடையாது. நான் இதில் சம்பந்தப்படாமல் இருக்கிறேன்'' என்று விடையளித்தான்.

''ஆனால் கர்னல்..''

''இந்த விஷயத்தில் கர்னல் என்னிடம் ஒன்றும் பேசவில்லை.''

''ஓஹோ! அப்படியா விஷயம்!'' என்று சிரித்துக் கொண்டே லாலா கூறினார்.

லாலா ஜானகிசரணின் அந்தச் சிரிப்பும் பேச்சும் சஜ்ஜனுக்குப் பிடிக்கவில்லையானாலும் அவன் அப்பொழுது தன்னைத் தானே குற்றவாளியாகக் கருதியதால் ஒன்றும் பேசாமல் இருந்தான். லாலா ஜானகிசரண் பேச்சை வளர்த்திக்கொண்டே கூறலானார்: ''தம்பி! எனக்கு இப்பொழுது அறுபத்தைந்து வயதாகிறது. விக்கிரம ஆண்டுப்படி நாற்பதில் பிறந்தேன். உன்தந்தை என்னை விட வயதில் சிறியவராக இருந்தார். அதனால் நான் உன்னிடம் என்ன சொல்வது? ஆண்டவனின் அருளால் நீ இவ்வளவு புகழ் பெற்றவனாகவும் அறிவாளியாகவும் இருக்கிறாய். சங்கேதமாய்த் தான் நான் உன்னிடம் பேசலாம். தம்பி! நீ விளையாடுவதையெல்லாம் விளையாடு. ஆனால் தன்னைத்தானே கட்டுப் படுத்தி வைத்துக் கொள். நகீன் சந்திடமும் நான் இப்படி இருக்கும்படி சொன்னதாகத் தெரிவி. தனது சொந்தத் தந்தையைத் தந்தையாகக் கருதாத ஒரு பெண் வேறு யாரைத்தான் மதிக்கப் போகிறாள்?''

சஜ்ஜன் பேசாமல் இருந்தான். லாலாஜி கன்யாவைப்பற்றி வெளியிடும் கருத்துக்களெல்லாம் அவனுக்குத் தவறு என்று தோன்றியபோதிலும் அப்பொழுது அவன் அவரை எதிர்த்துப் பேச விரும்பவில்லை. கண்காட்சியைப் பற்றிய பேச்சு நடந்தது. லாலா அவனுக்குத் தன் வீட்டிலுள்ள இரண்டு அறைகளையும் காண்பித்தார். அந்த அறைகள் சித்திரக்கண்காட்சிக்குத் தகுந்தவையாக இல்லை. அங்கே போதுமான வெளிச்சமும் இல்லாமல் இருந்தது. மின்சார ஆளுக்குச் சொல்லி அனுப்புவதாக சஜ்ஜன் லாலாவிடம் கூறினான். அடுத்தநாள் காலை எட்டு மணிக்கு வருவதாகக் கூறிவிட்டு சஜ்ஜன் தாயியின் வீட்டுக்குத்திரும்பி வந்தான். அறையில் கன்யா உட்கார்ந்திருந்தாள். அவளைப் பார்த்ததும் சஜ்ஜன் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டான். அவளிடம் ஒன்றும் பேசாமலேயே அவன் ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு தன் முகத்தை மற்றொரு புறம் திருப்பிக் கொண்டான்.

''என்னிடம் கோபமா?'' கன்யா கேட்டாள்.

''.......''

''கோபப்படும்படியாக என்ன நடந்தது?''

''நான் உங்களிடம் கோபித்துக்கொள்ள எனக்கு என்ன உரிமை இருக்கிறது?''

''நீங்கள் அநியாயத்தை ஆமோதிப்பீர்கள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை.''

சஜ்ஜன் எரிந்து விழுந்தான்: ''நியாயத்தை ஆமோதிப்பதால் தானே எனக்குக் கெட்டபெயர்!'' என்முன்.

''அப்படியானல்....''

''இந்த விஷயத்தில் நீ தவறு செய்வதாக எனக்குத் தோன்றுகிறது!''

''என்ன?''

அதற்கு விடை சஜ்ஜனுக்கு எவ்வளவு முயன்றும் கிடைக்கவில்லை. ''நான் என் தந்தைக்கு ஏதேனும் தவறு செய்துவிட்டேனு? பெண் எப்பொழுதும் நசுக்கப்பட்டுக் கொண்டே இருக்கவேண்டும் என்பதை நீங்கள் சரியென்று நினைக்கிறீர்களா?'' என்று கன்யா கேட்டாள்.

சஜ்ஜனின் உள்ளத்தில் கோபம் பொங்கியெழுந்தது. ''இல்லை, இனிமேல் பெண்ணை யார் நசுக்க முடியும்? ஆண்கள்தான் நசுக்கப் படுவார்கள் என்று அவன் கோபத்துடன் பதிலளித்தான்.''

''சஜ்ஜன்! யோசித்துப் பேசுங்கள். எதற்காகக் கோபப்பட வேண்டும்? நான்தான் உங்களை ஏமாற்றி விட்டேனு? நான் முதல் முறை உங்கள் அறைக்கு வந்தபொழுதே அது தெளிவாகி விடவில்லையா?''

''நான் அதைப்பற்றிக் குறை கூறவில்லை. ஆனல் நான் உன்னைத் தடுத்திருந்த பொழுது நீ நான்கு நாட்கள் பொறுத்திருக்கக் கூடாதா என்பதுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது.''

''சஜ்ஜன்! உங்களிடம் பெரிய பெரிய மனிதர்களெல்லாம் சிபாரிசு செய்ய வந்தார்கள். அப்படி அவர்கள் வந்தது என் தந்தையைக் காப்பாற்றுவதற்காக அல்ல. சாளிக்ராமின் மானத்தைக் காப்பாற்றத்தான் என்று நான் எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? சாளிக்ராம் அவமானமடைந்தாரோ! அல்லது காங்கிரஸ்காரர்களுக்கு அவமானம் ஏற்பட்டதோ! எனக்குத் தெரியாது. ஆனல் அந்தக் குற்றம் என்னை ஏன் சார வேண்டும்?''

''மிஸ் வனகன்யா! உன் அரசியல் சூழ்ச்சிகளெல்லாம் எனக்கு நன்முகத் தெரியும். இதுவரை...''

''சஜ்ஜன்! உண்மை என்ன என்பது உங்களுக்கு நன்முகத் தெரியும், இப்பொழுது நான் வாக்குவாதம் செய்ய விரும்பவில்லை.''

''நானும் வாக்கு வாதம் செய்ய விரும்பவில்லை'' என்று கூறி விட்டு சஜ்ஜன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். கன்யா

பெஞ்சிலிருந்து எழுந்து சஜ்ஜனுக்கருகில் வந்தாள். சாய்வு நாற்காலிக்கருகில் வந்ததும் சஜ்ஜனின் தலைமீது கையை வைத்த வாறே "இனியும் பேச மாட்டீர்களா?" என்று அவள் கேட்டாள்.

"முடியாது."

"எத்தனை நாள்வரை?"

"எப்பொழுதுமேதான்."

"பேச வேண்டாம், நானும் பேசவில்லை."

வனகன்யா தொட்டுக்கொண்டிருந்தது சஜ்ஜனுக்கு இன்னும் கோபத்தை ஊட்டியது. அந்தக் கோபம் அப்பொழுது அவனை இன்னும் அதிகமாகவே சிடுசிடுக்கக்கூடியவனாக ஆக்கிவிட்டது. ஆயினும் வனகன்யா தொட்டது இன்பமாகவும் குளுமையாகவும் இருந்தது என்பதை அவன் உணர்ந்து கொண்டிருந்தான். அவள் இவ்வாறு தொட்டுத் தனது உள்ளத் தூய்மையையெல்லாம் அவனுக்கு அர்ப்பணம் செய்வதாகத் தோன்றிற்று. சஜ்ஜனின் உள்ளத்திலிருந்த பொய்மையால் அதனைச் சகிக்க முடியவில்லை. தூய்மையும் பொய்மையும் சஜ்ஜனின் உள்ளத்தில் மாறி மாறித் தோன்றிக் கொண்டிருந்தன, அவற்றோடு அவன் தன் பொய்மை யையே தூய்மையென்று கருதியவாறு வனகன்யாவின் தூய்மையை பொய்மையென்று நிரூபித்துவிட முயன்று கொண்டிருந்தான். திடீரென்று சஜ்ஜன் எழுந்து உட்கார்ந்து கொண்டு, "இப்படி நீ என்னிடம் பேசவில்லை. என் செல்வத்திடமும், என் கௌரவத் திடமும் பேசுகிறாய்!" என்றான்.

"இரண்டாம் முறையாக இந்தச் சொற்களைக் கேட்கிறேன்."

"நீ இதை எப்பொழுதுமே வெட்கமில்லாமல் கேட்டுக் கொண்டேதான் இருப்பாய்."

வனகன்யாவின் முகத்தில் சிறிது கோப உணர்ச்சி வெளியாயிற்று. ஆயினும் தன்னை அடக்கிக் கொண்டு அவள், "உண்மையிலேயே நீங்கள் என்னைப் பற்றி இப்படிக் கருதுகிறீர்கள் என்று எனக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டால் அதற்குப் பிறகு நான் என் முகத்தை உங்களுக்குக் காட்ட மாட்டேன்" என்று கூறிவிட்டு அப்பால் நகர்ந்து கொண்டாள்.

"கன்னோமல் பேரப்பிள்ளை!"

"என்ன தாயி!"

"கேளப்பா! இதோ இருக்கிறாளே இவள்! இவளிடம் தாராவின் பிள்ளைக்கு அத்தையாக இருந்து ஆறாம் நாள் விழாவை நடத்தி வைக்கச் சொல். தர்மத்தை மறந்த அவர்களைப் போன்றே இவளும் இருக்கிறாள். அந்தக் குழந்தைக்கும் நான் அத்தையை எங்கிருந்து கொண்டு வருவேன்?"

சஜ்ஜன் உடனே உரிமையுடன் கன்யாவைப் பார்த்துக் கொண்டே, ''அப்படியே ஆகட்டும் தாயி!'' என்றான்.

''அப்படியே நடத்தி வைக்கிறேன் தாயி! ஆனால் நான் தர்மத்தை மறந்து விடவில்லை, தாயி!'' என்று கன்யாவும் சிறிது விளையாட்டாகப் பேச முயன்றாள்.

தெரு நாய் ஒன்று வீட்டிற்குள் நுழைந்து வந்தது. அறை வாயிலில் நின்று கொண்டிருந்த தாயி அதைப் பார்த்து விட்டாள். பார்த்ததும் ''போ'' என்று கத்திக்கொண்டே அதன் பின்னால் ஓடினாள். நாய் பயந்து கொண்டு வெளிக் கதவுப்பக்கம் ஓடுவதற்குப் பதிலாக தாழ்வாரத்தின் பக்கம் ஓடிற்று. ''அடே! நீ செத்துப் போ! யாராவது அதைப் பிடியுங்களேன்; அது வீட்டிற்குள் எங்கேயாவது நுழைந்து விடப் போகிறதே! என் லலிதா, விசாகாவை'' என்று கத்தத் தொடங்கினாள்.

அதற்கு முன்பே சஜ்ஜன் தாழ்வாரத்திற்கு ஓடிப்போய் நாயை அந்த இடத்தை விட்டு விரட்டினான். நாய் முற்றத்தைத் தாண்டி நேராக வாயில் பக்கம் ஓடிற்று. சஜ்ஜன் வாயிற் கதவை மூடச் சென்றான். கலை வேலைப்பாடு செய்யப்பட்ட பெரிய கதவை மூடும் பொழுது திடீரென்று தெரு வழியாக வரும் பாபாராம் ஜியை அவன் கவனித்தான்.

''ராமபக்தரே! என்ன விசேஷம்?'' என்று கேட்டுக்கொண்டே பாபா பல்லில்லாத தம் பொக்கை வாயுடன் புன்முறுவல் செய்தார். சஜ்ஜன் அவரைப் பார்த்ததும் ஏதோ திருடிவிட்டுப் பிடிபட்டவனைப் போல் பயந்து விட்டான். பாபா கதவை நோக்கி வந்தார். அவருக்குப் பின்னால் அவருடைய பருத்த தடியையும், சுரைக்குடுக்கையையும் எடுத்துக்கொண்டு லங்கோடு கட்டிக் கொண்டிருந்த ஒரு மொட்டைத் தலைச் சீடனும் வந்தான். அவர்கள் உள்ளே வந்த பிறகு சஜ்ஜன் கதவை மூடிவிட்டு அவர்களுக்குப் பின்னால் வந்தான். தாழ்வாரத்தில் நின்று கொண்டிருந்த தாயி ஒரு சந்நியாசியைப் பார்த்ததும் உடனே அவருடைய கால்களில் வந்து வணங்கினாள்.

''சுகமாகவும், அமைதியாகவும் இரு!''

''ஸ்வாமிஜி! தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?''

''ராமபக்தையே! இறைவன் இருக்கும் இடத்திலிருந்து வருகிறேன். நீயும் அங்கிருந்துதானே வந்தாய்!''

''ஸ்வாமிஜி! இதுதான் எல்லோருக்கும் தெரிந்ததாயிற்றே! நான் கேட்க வந்தது என்னவென்றால் நீங்கள்தாம் பைத்தியங்களுக்கு வைத்தியம் செய்கிறீர்களா?''

''ஆமாம், மகளே! நான் பைத்தியங்களுக்கு வைத்தியம் செய்கிறேன். பைத்தியங்கள் இருக்கும் இடங்களுக்கெல்லாம் அவர்

களுக்குத் தொண்டு செய்ய நான் போய் விடுவது வழக்கம். இல்லையா, பக்தரே!''

இது தன்னைக் குறிப்பிட்டுக் கூறப்பட்டதாக சஜ்ஜனுக்குத் தோன்றிற்று. அவன் தலை குனிந்தவாறே பேசாமல் இருந்தான்.

"அப்படியா! நீங்கள்தானா? உங்களைப்பற்றி கோகுலத்தில் கேள்விப் பட்டிருந்தேன். ஆனால் கன்னோமல் பேரனுக்கு உங்களைப்பற்றி முன்னமேயே தெரியுமா?''

"இவரா! இவர் பக்தராயிற்றே! இவருக்கு யாரைப்பற்றி என்ன தான் தெரியாது! இவரைவிட உண்மையை அறிந்தவர் வேறு யார் இருக்கிறார்?''

சஜ்ஜன் தலை குனிந்தவாறே உட்கார்ந்திருந்தான். பாபாஜி ஒரு முறை கன்யாவைப் பார்த்துவிட்டுத் தாயியிடம் "இவள் உன் மகளா?'' என்று கேட்டார்.

''சனி! எப்படி இவள் எனக்குப் பெண்ணாக முடியும்?''

"இவள் உன் மகள்தானே! அதனால்தானே நீ நூறு தோலா தங்கத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாய்! அந்தக் காரணத்தால்தானே இவளைத் திட்டவும் செய்கிறாய்!''

''நான் யாருடைய பொருளையும் எடுத்துக் கொண்டு விடவில்லை, ஆனால் நூறு தோலா தங்கம் இவனுக்கு (சஜ்ஜனை நோக்கிக் கொண்டு) இவனுடைய மனைவிக்குக் கொடுப்பேன். ஆனால் இவன் நான் கூறும் பெண்ணை மணம் செய்து கொள்ள வேண்டும்.''

''அம்மா! திருமணம் செய்யாமலேயே கொடுத்து விடேன்!''

"அது முடியாது, பாபாஜி!''

''பிறருக்கு உதவி செய்ததாக இருக்கும். ஒருவேளை அத்தனையும் திருட்டுப் போய்விட்டால் என்ன செய்வாய்?''

''என் வீட்டில் திருட்டுப் போனது உங்களுக்குத் தெரியுமா? ஸ்வாமிஜி!''

''உன் வீட்டில் திருட்டுப் போயிற்றா! நான் ஏதோ உதாரண மாகக் கூறிக்கொண்டிருந்தேன்'' என்று பாபாஜி கூறிக்கொண்டே சிரித்தார். "அப்படியா? திருட்டுப் போனதால்தான் நூறு தோலா தங்கத்தை யாருக்காவது கொடுத்துவிடலாமென்ற எண்ணம் உனக்குத் தோன்றிற்றா?'' என்று அவர் மறுபடியும் கேட்டார்.

"ஆமாம், பாபாஜி! நீங்கள் கூறுவது உண்மைதான்!'' என்று கூறிய தாயியின் வருத்தம் தோய்ந்த முகத்திலும், ஒளியிடும் கண்களிலும் கருங்குச்சிபோல் இருந்த பற்களிலும் மலர்ச்சி காணப்பட்டது. ''எனக்கு யார் இருக்கிறார்கள்? இறந்த பிறகு பாம்பு ஜோடியாக ஆக வேண்டும் என்று நான் விரும்பவும் இல்லை.

சனி பிடித்தவர்கள்தான் அப்படியெல்லாம் ஆவார்கள். (இடது உள்ளங்கையில் வலது கையால் குத்தி வானத்தைச் சுட்டிக் காட்டியவளாய்) நான் இறந்தால் வைகுண்டத்திலிருந்து விமானம் வந்து என்னை அழைத்துச் செல்லும், ஸ்வாமிஜி! நீங்களே பாருங்கள்!''

''ஆமாம், நீ கட்டாயம் செல்வாய். உனக்காகக் கிருஷ்ண பகவான் வைகுண்டத்திலிருந்து தனி விமானம் அனுப்பப் போகிறார். அவருக்குத்தான் உன்னை மிகவும் பிடிக்குமே! அவரும் இந்தப் பக்தை எப்பொழுது வைகுண்டத்திற்கு வருவாள், அவளுடைய தடியைப் பிடுங்கிக்கொண்டு நாம் எப்பொழுது ஓடலாம், என்றே நினைத்துக்கொண்டிருக்கிறார்!'' என்று கூறிக் கொண்டே பாபாஜி மறுபடியும் சிரித்தார். அங்கிருந்த எல்லோருக்கும் இதைக் கேட்டதும் சிரிப்பு வந்து விட்டது. தாயிக்கு அவருடைய சொற்களைக் கேட்டுக் கோபம் வரவில்லை. அவள் மௌனமாகவே இருந்தாள்.

பாபாஜி திரும்பி சஜ்ஜனைப் பார்த்தார். சஜ்ஜன் ஒளியிழந்து உட்கார்ந்திருந்தான். பாபாஜியின் பார்வைக்கெதிரில் அவனால் நிற்க முடியவில்லை. ''என்ன ஐயா, உமக்கு வெற்றி கிடைத்த நாளாகிய இன்று இப்படி மௌனமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறீரே!''

''பாபாஜி! இங்கே சற்று வருகிறீர்களா?'' என்று கூறியவாறு தாயி பாபாஜியைத் தனியாக அழைத்துச், சென்று ''அவரிடம் உங்களுக்கு மந்திரம் ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டாள்.

''எனக்கா! ராம பக்தையே அங்கினி, சங்கினி, டங்கினி, இவற்றில் எதைக் கொண்டு நிறுத்துவது சொல்லு!''

''பாபாஜி! என் சக்களத்தியின் பேரனை இந்தத் திருமண நேரத்தில் கொன்று விடுங்கள்!''

''அதனால் உனக்கு என்ன பயன்?''

''அந்தச் சக்களத்தியின் வம்சம் வளரும் என்பதே எனக்குப் பெரிய கவலையாக இருக்கிறது. என் மகளும் உயிருடனில்லை. இருந்திருந்தால் அவளால் வம்சம் வளரும். (மெல்ல) பாபாஜி! என்னிடத்தில் ஆண்டவன் கொடுத்தது ஏராளமாக இருக்கிறது. நீங்கள்மட்டும் நான் சொல்வது போல் செய்துவிட்டால் நான் எல்லாச் சொத்தையும் உங்களுக்கே கொடுத்து விடுகிறேன். ஆண்டவன்மேல் ஆணையிட்டு இதைச் சொல்கிறேன். நூறு தோலா தங்கம்மட்டும் கன்னுமேல் பேரப்பிள்ளைக்கு...''

''நான் ஒன்று சொல்லட்டுமா உனக்கு? நீ பெரிய விழாவாக ஒன்று கொண்டாடு. இதோ இருக்கிறாரே ராமர்! இவருக்கும், இங்கே நின்று கொண்டிருக்கும் சீதைக்கும்...''

''பாபாஜி! நான் பொய் பேசமாட்டேன். உங்களிடம் உண்மையைக் கூறப்போனுல் எனக்கு இந்த ஜோடி பிடிக்கவேயில்லை. ஜாதி, மதம் ஒன்றும் கிடையாது, இவர்களுக்கு. இப்படித் தான் ஒரு சனியன் என் வீட்டுக்குள் நுழைந்து வந்தது, ஜாதியை விட்டு இங்கிலீஷ் முறையிலே திருமணம் பண்ணிக்கொண்டு என் வீட்டிலேயே குழந்தையும் பெற்றுவிட்டாள். கொஞ்சம் இங்கிலீஷ் படித்து விட்டால் முறை, ஒழுக்கம் எல்லாம் மறந்து போகிறது. கடைசியில் நான்தானே அனுபவிக்க வேண்டியிருக்கிறது! நான் இல்லையென்முல் அந்தக் குழந்தையின் ஆறும் நாளை யார் கொண் டாடப் போகிருர்கள்?''

தாயி உரத்த குரலில் இவ்வாறு பேசிக்கொண்டே இருந்தாள். கன்யாவும் சஜ்ஜனும் அறையில் நின்று கொண்டே இருந்தார்கள். பாபாஜியின் சீடன் சுரைக்குடுக்கையும், தடியையும் தாங்கிக் கொண்டு சிலைபோல் நின்று கொண்டிருந்தான். அவன் வாயிலிருந்து உமிழ்நீர் வழிந்துகொண்டிருந்தது. தாயி உணர்ச்சி வயப்பட்டுப் பேசிக்கொண்டே போனுள்: ''எனக்கு யாரிடமும் பயம் கிடையாது. இந்தக் கன்னேமல் பேரன் எனக்கு ஓர் உதவி செய்தான். அதனுல்தான் நான் இவனைப் பொருட்படுத்து கிறேன். இவனுடைய தாத்தா, பாட்டி, தாய் எல்லோரையுமே நான் பார்த்திருக்கிறேன். என் மாமனுர் காலந்தொட்டே எங்களுக்கு இந்தப் பையன் குடும்பத்தோடு சம்பந்தம் உண்டு. அதனுல்தான் நான் இவனிடம் 'இந்தக் கஷ்டங்களையெல்லாம் விட்டு விட்டு என் விருப்பப்படி மணம் செய்துகொள். நான் எல்லாச் செலவுகளையும் செய்கிறேன்' என்கிறேன். என் பெண் ணுக்குக் குழந்தைகள் பிறக்கும். நான் ஒரு பேரனுக்கு முடி இறக்கலாம்; ஒருவனுக்குப் பூணுல் போடலாம். என் வீட்டிலும் திருமணப் பரிசம் வரும்' என்றெல்லாம் ஆசைப்பட்டுக் கொண் டிருந்தேன்.''

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு இன்றுதான் தாயியின் கண்களில் கண்ணீர் துளித்தது. பாபா ராம்ஜியின் தேகப் பயிற்சி செய்த உடல் தன்னை மறந்திருந்தது. அவருடைய கிழமுகம் சில விநாடிவரை கம்பீரமாக இருந்தது. அவருடைய சிறு கண்கள் பொங்கின. இந்த நிலையில் அவர் ''ராம பக்தையே! நீ இந்தச் சீதைக்கும் ராமருக்கும் மணம் செய்துவிடு. ராமர் என் பக்கம், சீதை உன் பக்கம், நன்முக மேள வாத்தியத்தோடு பிரமாதமாக ஊர்வலம் நடத்திவிடுவோம். நீயும் உன் ஆசைகளையெல்லாம் பூர்த்தி செய்து கொள். இந்தச் சீதையைவிடச் சிறந்த பெண் எங்கே கிடைப்பாள்?''

தாயி தன்னை மறந்து கேட்டுக் கொண்டிருந்தாள். அவர்

கூறுவதை ஆமோதிப்பவள் போல் அவளுடைய முகம் காட்டியது. ஆனால் திடீரென்று திடுக்கிட்டவளாய், நீங்கள் இந்தப் பெண்ணைச் சீதை என்று கூறி என் மகளாக ஆக்க விரும்பினால்'' என்று கூறினாள்.

"இல்லையம்மா! நல்ல சிலைகளைக் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்வோம். அதற்குப் பிறகு நான் என் மகனை அழைத்து வருகிறேன். நீ உன் மகளுக்கு என் மகனைக் கேளு!''

''நான் சீதைக்கும் ராமனுக்கும் திருமணம் செய்து வைக்க மாட்டேன்.''

''ஏனம்மா அப்படி?''

''முடியாது, அவ்வளவுதான். இது என் விருப்பம் நான் ராதைக்கும், கண்ணனுக்குந்தான் திருமணம் செய்து வைப்பேன்.''

"ஆனால் ராதை நிரந்தரக் கன்னியான குமரிப் பெண்ணாயிற்றே!''

''நான் இந்தத் தடவை அவளுக்கு மணம் செய்து வைத்துத் தான் தீருவேன்; நீங்கள் வந்ததும் நல்லதாகத்தான் ஆயிற்று!''

''ஆனால் நான் வெறுங்கையுடன் போவேன் என்று நினைக்காதே, அம்மா! என் ராம்ஜிக்கு வரதட்சணையாக ஏராளம் கொடுக்க வேண்டியிருக்கும். முதலில் நீ பெண்களுக்கான ஒரு பள்ளிக்கூடம் கட்டித்தர வேண்டும். அதற்குப் பிறகு எங்களுடைய பைத்திய ஆசிரமத்தில் ஓர் அறை கட்டித்தரவேண்டும்.''

''நல்லது நான் கட்டித் தருகிறேன்.'' என்று கூறிக் கொண்டே தாயி பாபாவின் கால்களில் விழுந்து வணங்கினாள். பின்பு பாபாவிடம், ''கோகுலத்துக்குப் போகும் வேளை வந்து விட்டது. நான் வருகிறேன்'' என்று கூறியவளாய்க் கன்யாவின் பக்கம் திரும்பி ''இதோ பார் அம்மா! அந்தக் குழந்தையின் ஆறும் நாளன்று வந்துவிடு. அத்தைக்குக் கொடுக்க வேண்டியதையெல்லாம் கொடுக்கிறேன். பாபாஜி! நீங்களும் வரவேண்டும். அன்று பிராம்மணர்களுக்கு விருந்து அளிக்கப் போகிறேன். யார் செத்தால் எனக்கென்ன? என் புக்ககத்தில் எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு இப்பொழுதுதான் ஒரு குழந்தையின் தொப்புள் கொடி புதைக்கப்பட்டிருக்கிறது.'' என்று கூறினாள்.

தாயி வேகமாகத் தாழ்வாரத்தைத் தாண்டித் தன் இருக்கைப் பக்கம் சென்று விட்டாள். தாயி சென்ற பிறகு பாபா ராம்ஜி சஜ்ஜன், கன்யா, தம் பைத்தியச் சீடன், மூவரையும் நோக்கினார். அந்தப் பைத்தியம் ஒரு கையில் சுரைக் குடுக்கையையும் மற்றொரு கையில் தடியையும் வைத்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டிருந்தான். அவனுடைய வாயிலிருந்து உமிழ்நீர் சொட்டிக்கொண்டிருந்தது. பாபாஜி உடனே பைத்தியத்தின் பக்கம் போய், ''என்னப்பா, பக்தா?'' என்று கேட்டார். பைத்தியமும் உயிரற்ற

புன்முறுவலுடன் உமிழ்நீரை வழிய விட்டுக் கொண்டே மெது வான குரலில், ''என்ன பாபாஜி!'' என்று கேட்டான்.

கன்யாவின் பக்கம் திரும்பி, பாபாஜி ''மகளே! கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா.'' என்று கூறினார். கன்யா அறையில் நான்கு பக்கமும் பார்க்கத் தொடங்கினாள். சஜ்ஜன் சிறிது அசைந் தான். ஆனால் அதற்குமேல் ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்திருந் தான். அறையின் ஒரு மூலையில் குடம் வைக்கப்பட்டிருந்தது, கன்யாவின் கண்ணில் பட்டது. அவள் அந்தக் குடம் இருந்த இடத்தை நோக்கிச் சென்றாள்.

''ராம்ஜி! உன்னை ராமர் என்று நான் எண்ணியிருந்தேன். ஆனால் நீ சஜ்ஜன்தான்'' என்று பாபாஜி சஜ்ஜனிடம் கூறினார்.

சஜ்ஜனுக்கு அவர் சொற்களைக் கேட்கப் பெரிதும் மகிழ்வாக இருந்தது.

## 31

இரவு எட்டரை மணியளவுக்குக் கடையிலிருந்து வீட்டிற்குப் போவதற்கு முன்பு, கன்யாவைச் சந்திக்க கர்னல் சென்றான். அறைக்கதவு மூடியிருந்தது. கதவிடுக்குகளின் வழியாக வெளிச்சம் தெரிந்துகொண்டிருந்தது. கர்னல் கதவைத் தட்டினான்.

''யார்?'' கன்யாவின் குரலைவிட அதிகமாக அவளுடைய கண்ணீரே வெளிப்பட்டது. கர்னலுக்கு நிலைமை புரிந்துவிட்டது. அவன் முன்னைவிட இன்னும் அதிகமாகவே எதிலோ ஆழ்ந்த மன நிலையில் இருந்தான்; பதிலுக்கு, ''பின்னோ'' என்று மட்டும் கூறினான்.

உள்ளே நாற்காலி நகர்ந்தது; ஒரு விநாடி மௌனம் நிலவிற்று; காலடிச்சத்தம் அருகில் கேட்டது; தாழ்ப்பாள் திறந்தது. கன்யாவின் முகம், பின்புறமாக ஒளி இருந்ததால் தெளிவாகத் தெரியவில்லை. கன்யாவின் ஒளியிழந்த உள்ளந்தான் அப்பொழுது அவளுடைய முகக்களையாகத் தோன்றிக் கொண்டிருந்தது. கதவைத்திறந்து விட்டு கன்யா திரும்பியவளாய் நாற்காலிக்கு அருகே போய் நின்று கொண்டாள். எதிரிலிருந்த நாற்காலியில் கர்னல் உட்கார்ந்து கொண்டான். கர்னல் தரையைப்பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய முகம் சிந்தனையில் ஆழ்ந்தி ருந்தது. கன்யா எதிரில் இருந்த நாற்காலிக்கருகில் பேசாமல் நின்று கொண்டிருந்தாள்.

கர்னல் அமைதியைக் கலைத்தவனாய் ''உட்கார், பின்னோ!'' என்றான்,

கன்யா உட்கார்ந்துகொண்டாள்.

"சஜ்ஜனைச் சந்தித்தாயா?" என்று கர்னல் மறுபடியும் கேட்டான்.

"ஆமாம்."

"தாயியின் வீட்டுக்கு அவனுடைய சாமான்கள் வந்து விட்டனவா?"

"வந்துவிட்டன."

மறுபடியும் அமைதி.

கர்னல் இந்தப் பேச்சுவார்த்தைக்குப் பிறகு உண்மையான பேச்சுக்கு வந்தவனாக "மிகவும் கோபமாக இருக்கிறானா?" என்று கேட்டான்.

கன்யா மௌனமாக இருந்தாள். அவள் கண்ணீரை அடக்கியவளாய்த் தலை குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

கர்னல் தனது நண்பனின் சார்பில் நிலைமையைத் தெளிவுபடுத்துபவனாகக் கூறலானான்: "உண்மையில் ராஜாசாஹேப் கூறியது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் எல்லா இடத்திலும் மரியாதை செலுத்துவது என்பது முடியாது. மனிதன் தன் சொல்லைக் காப்பாற்ற வேண்டுமில்லையா? அது கிடக்கட்டும். நீ கவலைப்படாதே, பின்னோ! இரண்டு நாட்களுக்குப் பிறகு அமைதியடைந்ததும் அவனே, 'கர்னல் நீ செய்தது நல்லதுதான்' என்பான். எனக்கு அவனை நன்றாகத்தெரியும்." கர்னல் சிரித்துக்கொண்டு கும்மென்றிருந்த கலகலப்பற்ற போக்கைக் குறைக்க முயன்றான். ஆனால் சூழ்நிலை அப்படியே இருந்தது.

அதற்குப் பிறகு அறையில் மௌனம் நிலவிற்று. அது முன்னை விட அதிகமாக இருந்தது. கர்னல் அறையை ஒருமுறை பார்த்து விட்டு, "இன்று நீ சாப்பாடு தயாரிக்கவில்லையா, பின்னோ?" என்று கேட்டான்.

கன்யா மௌனமாக இருந்தாள்.

"உனக்குத் தயாரிக்கப் பிடிக்கவில்லையென்றால் நான் இப்பொழுதே தயாரித்து அனுப்பிவைக்கிறேன்."

"வேண்டாம், அண்ணா!"

"கவலைப்படாதே, பின்னோ! எல்லாம் சரியாகிவிடும். நான் உனக்கு உறுதியளிக்கிறேன். இந்த மாதிரி இனிப்பும் புளிப்புமான அநுபவங்கள் உண்டாவது இயல்புதான். மறுபடியும் அமைதி நிலவலாயிற்று. கர்னல் மறுபடியும் "நான் ஒன்று கேட்கட்டுமா?" என்று ஆரம்பித்தான்.

"உம்"

"நீங்கள் உங்களுக்குள் ஏதாவது முடிவு செய்திருக்கிறீர்களா?"

"......"

"பாரு பின்னே! வாழ்க்கை மிகவும் கஷ்டமானது. நான் தெளிவாக சொல்லுகிறேன். ஒரு பெண்ணின் நிலைமை மிகவும் கவலைப்படத்தக்கதாகும். நீ எவ்வளவு தான் சுதந்திரமாக இருந்தாலும்..... நீ சஜ்ஜனைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறாயா? தெளிவாக என்னிடம் சொல்''

கன்யா குனிந்துகொண்டே வலதுகால் கட்டைவிரலால் தரையைத் தேய்த்துக் கொண்டிருந்தாள். "உங்களுக்குள் இது பற்றி ஏதாவது பேச்சுவார்த்தை நடந்திருக்கிறதா? சொல்'' என்று கர்னல் மறுபடியும் கேட்டான்.

"ஆமாம்''

"திருமணப் பேச்சு வார்த்தை நடந்ததா?''

"உம்''

"எப்பொழுது சமீபத்தில்தானா?''

கன்யா கழுத்தை அசைத்தவளாய் ஏற்றுக்கொண்டாள்.

"அவன் உன்னிடம் என்ன சொன்னான்? என்னிடம் இப்பொழுது தயங்காதே. எப்பொழுது திருமணம் நடக்கும் என்று கூறினான்?''

"இங்கே வந்ததும் ஏற்பாடுகள் செய்யலாம் என்று மதுராவில் நிச்சயித்தோம்.''

"அப்படியானால் ஏற்பாடு செய்யட்டுமா? இனியும் இந்த விஷயத்தை நான் தள்ளிப்போட விரும்பவில்லை. சஜ்ஜன் ஒரு முறை பிடியில் வந்துவிட்டால் பிறகு எல்லாம் சரியாகிவிடும்.''

"அண்ணா! நான் யாருக்கும் சுமையாக இருக்கவிரும்பவில்லை.''

"இதில் சுமையாகும் பிரச்னையே இல்லை. சஜ்ஜன் தூய்மையானவனாக இல்லாவிட்டாலும் கெட்டவனில்லை என்று உனக்கும் புரிந்திருக்கும்.''

கர்னல் சென்றுவிட்டான். அவன் சென்ற பிறகு கன்யா கதவைத்தாழிட்டுவிட்டு மரம்போல் கட்டிலில் விழுந்துகிடந்தாள். அப்பொழுது அவள் தன்னைக் களைத்தவளாகவும், தோல்வியுற்றவளுமாகவே கருதினாள். மறுநாள் விடியற்காலையிலேயே சஜ்ஜன் வீட்டிற்குப் போய்ச்சேர்ந்தான். கர்னல் அறையில் சித்ராவைப் பார்த்ததும் அவனுக்கு இடிவிழுந்தது போல் இருந்தது. ஆனாலும் அவன் எதிலோ ஆழ்ந்தது போன்ற நிலையில் இருந்தான். சஜ்ஜனும் கையும் களவுமாகப் பிடிபட்ட திருடன் போல் இருந்தான். அவர்கள் உள்பக்க அறைக்குச் சென்றார்கள். இருவரும் மௌனமாக உட்கார்ந்திருந்தார்கள். சிறிது நேரத்தில் தேநீர் வந்தது. "கேள், சஜ்ஜன், தவறு செய்வதற்கும் ஒரு வயது உண்டு. நான் உன்னுடைய இந்தக் கலைஞன் போக்கை இனியும் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது!'' என்று கர்னல் கூறலானான்.

* * * *

சஜ்ஜனுக்கு கோபம் வந்துவிட்டது. தன்னை இவ்வாறு திட்டுவது அவனுக்குப் பிடிக்கவில்லை, "நான் இப்பொழுது சிறு குழந்தை இல்லை'' என்று கூறினான்.

''நீ சிறு குழந்தையைவிட மட்டமானவன், நீ ஒரு மிருகம்! பெரிய கலைஞனாகவும், அறிஞனாகவும் ஆகிக்கொண்டிருக்கிறாயோ!"

"கர்னல்! நான் இப்பொழுது மிகவும் 'சீரியஸாக' இருக்கிறேன்."

"நானும் மிகவும் 'சீரியஸாக'த்தான் இருக்கிறேன் சஜ்ஜன்! ஒருபுறம் நீ பத்திரிகைகளில் பெரிய மனிதனாக ஆகிக்கொண்டிருக்கிறாய்; மறுபுறம் உன்னை உன்னால் கட்டுப்படுத்த முடியவில்லை.''

சஜ்ஜன் மௌனமாக இருந்தான். அவனுடைய கோபம் அடங்கவில்லை. சுக்ரூ ஒரு தட்டில் பால்கோவா கொண்டு வந்து மேசை மேல் வைக்கலானான். கர்னல் கோபத்துடன், ''எடுத்துச் செல். எனக்கு இப்பொழுது ஒன்றும் வேண்டாம்'' என்று கூறினான். சுக்ரூ உடனே தட்டை எடுத்துக்கொண்டு போய்விட்டான்.

"ஒரு புறம் ஒரு நல்ல பெண்ணிடம் காதல் நாடகம் நடிக்கிறாய். அவளைத் திருமணம் செய்துகொள்வதாக வாக்களிக்கிறாய். பெண்ணின் உரிமைக்காக என்னிடம் சிபாரிசு செய்யவருகிறாய்; மறுபுறம் வீட்டுக்குள் வேசியை மறைத்து வைத்துக்கொண்டிருக்கிறாய்.'' என்று கர்னல் கூறினான்.

சஜ்ஜன் ஒரு முறை தலைநிமிர்ந்து கர்னலை நோக்கினான். இருவருடைய பார்வையும் இணைந்தது. சஜ்ஜனின் பார்வை தாழத் தொடங்கிற்று. ஆயினும் அவன் பிடிவாதமாக பார்வையை அவ்வாறு ஆகவிடவில்லை.

"இந்த நேரத்தில் பின்னோ அவளைப் பார்த்துவிட்டால் அந்த அப்பாவியின் நிலை என்னவாகும்?'' என்று கர்னல் கேட்டான்.

''நான் ஒளிவுமறைவாக எதையும் செய்வதில்லை.''

''மிகவும் தூய்மையானவனாக ஆகிறாயா! தூய்மையானவனாக ஆவதென்றால் என்ன என்று தெரியுமா? உனக்கு எப்படித் தெரியப் போகிறது! உலகத்துக்கெதிரில் மிக உயர்ந்தவனாக நடிப்பாய், ஆனால் வீட்டுக்குள்...''

"கர்னல்! நான் சித்ராவை மணந்துகொள்ளப் போகிறேன்."

கர்னலுக்கு மலைச் சிகரத்திலிருந்து விழுந்ததுபோல் இருந்தது. ஒரு விநாடி அவனையே பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, ''நீ பின்னோவுக்கு வாக்களித்திருக்கிறாயல்லவா?'' என்று கேட்டான்.

"நான் என் எண்ணத்தை மாற்றிக்கொண்டு விட்டேன்.''

''ஏன்?''

"ஏன் என்ற கேள்விக்கு இடமேயில்லை.''

"ஏன் இல்லை! நீ ஒரு நல்ல பெண்ணுக்கு அளித்த வாக்கிலிருந்து மாறிவிட்டாய்.''

''வாக்களிக்கத்தான் செய்தேன், ஆனால் அவளிடம் ஒரு பொழுதும் தவருக நடந்துகொள்ளவில்லை.''

"தவருக நடந்துகொள்ளவில்லையா! ஏதோ அது உன் கையிலே இருப்பதுபோல் பேசுகிருயே! உடல் முழுவதும் அழுக்குக் கூடையாக இருக்கும் வேசிகள்தாம் இதுவரை உன் வாழ்வில் வந்திருக்கிருர்கள். ஒரு நல்ல பெண்ணிடம் அவளுடைய விருப்பம் இல்லாமல் நீ எப்படித் தவருக நடந்துகொள்ள முடியும்?...... சஜ்ஜன்! நன்ருகக் கேட்டுக் கொள். பின்னேவுடன் ஓர் உறவு மட்டுமல்ல, இரண்டு உறவுகள் முறிந்துபோகும். நீ அளித்த வாக்கைத் திருப்பிப் பெற்றுக்கொள்ளலாம். ஆனால் நான் உயர் குடியைச் சேர்ந்தவன். ஒரு முறை உறவுகொண்டு விட்ட பிறகு அதை நான் ஒருபொழுதும் மாற்ற முடியாது. நான் பிறகு உன் முகத்தில் விழிக்கமாட்டேன்'' என்று கூறிவிட்டுக் கர்னல் நாற்காலியிலிருந்து எழுந்து நின்று, ''சுக்ரூ!—என்ன பெயரப்பா அவனுக்கு! சஜ்ஜன், கொஞ்சம் மணியடி'' என்று கூறினன்.

மணியோசை கேட்டதும் இரண்டு கதவுகள் வழியே இரண்டு வேலையாட்கள் ஓடி வந்தார்கள். ''சுக்ரூ! டெலிபோனை இங்கே கொண்டுவா. அந்த அல்வா முதலியவற்றையும் எடுத்துவா. நான்கு டோஸ்ட்டும் கொண்டுவா.''

கட்டளை இட்டுவிட்டு கர்னல் உட்கார்ந்துகொண்டான். வேலையாட்கள் போய்விட்ட பின்னர், ''நான் இன்று அவளை வீட்டை விட்டுத் துரத்திவிட்டுத்தான் போவேன்'' என்று சஜ்ஜனிடம் கூறினன்.

"கர்னல், இது என்னுடைய சொந்த விஷயம்.''

''சஜ்ஜன், இது எனக்கும் சொந்த விஷயந்தான்."

''நீ எனக்கு யோசிக்க நேரம் கொடு.''

"என்னிடம் இப்பொழுது நேரம் கிடையாது.''

''அன்று நீ ராஜாசாஹேப் வீட்டில் ஜானகிசரணுக்கும் சாளிக்ராமுக்கும் முன்னல் ...''

''பின்னேவைப் பலவந்தமாக ஏற்றுக்கொள்ளச் செய்வேன் என்று நான் வாக்களிக்கவில்லையே. அப்பொழுது ராஜாசாஹேபை மதித்தேன்.''

''அப்படியானல் இப்பொழுது ராஜாசாஹேபை மதிக்கவில்லையா? எனக்கு ராஜாசாஹேப் கன்யாவைவிட எவ்வளவோ முக்கியமானவர். அது இருக்கட்டும் டீயைக் குடி. ஆறி போய் விட்டது. இரு மற்ருெரு கோப்பை வரவழைக்கிறேன்.'' மேசைக்குக் கீழே பொருத்தப்பட்டிருந்த மணியின் ஸ்விச்சை அழுத்தினன்.

"அந்தப் பெண் எப்படிப்பட்டவள் என்று ராஜா சாஹேபுக்குத்

தெரியுமா? அப்படியிருந்ததும் அவர் அநியாயத்தை ஆதரிக்கிருரா? சாளிக்ராம் ராஜா சாஹேபின் உதவியைக்கொண்டு என்னைத் தாக்கிஞல் நான் பொறுத்துக் கொண்டிருக்கமாட்டேன். பின்னேவுடன் உன் திருமணம் நடக்கும். அதுவும் விரைவிலேயே தெரிந்ததா?'' என்று கர்னல் கூறிஞன்.

வேலையாள் வந்தான். தேநீர் கொண்டுவரும்படி கட்டளையிடப்பட்டது. வேலையாள் கெட்டிலை எடுத்துக்கொண்டு போய் விட்டான். மற்ருெரு வேலையாள் வந்தான். தட்டில் அல்வா முதலியன வைத்துவிட்டுச் சென்ருன். சஜ்ஜனுக்கு விடையை யோசிப்பதற்கு நேரம் கிடைத்தது. அவன், ''திருமணம் என்பது வாழ்க்கைப் பிரச்னையாகும்!'' என்ருன்.

''அப்படியாஞல் நீ முன்னரேயே யோசித்து உறவை வளர்த்திருக்கவேண்டும், சஜ்ஜன்! நானும் இந்த உலகைப் பார்த்திருக்கிறேன்; நான் நல்லது கெட்டதை உணர்கிறேன். இந்தப் பத்து ஆண்டுகளில் நான் உன்னுடன் பார்த்த பெண்களில் ஒருத்திக்காவது நகீன்சந்த் கர்னலின் உள்ளத்தில் தன் சகோதரி என்று கூறும்படியான எண்ணம் தோன்றியதில்லை. இந்தப்பெண்ணை நான் முதற்பார்வையில் புரிந்துகொண்டு விட்டேன். இப்போதெல்லாம் அவள் எப்பொழுதும் என் பார்வைக்கெதிரிலேயே இருக்கிருள்.''

டோஸ்ட் கொண்டு வரப்பட்டது. தேநீர்க் கெட்டிலும் வந்து விட்டது. சஜ்ஜன் ஒரு டோஸ்டை எடுத்துச் சுக்ருவைத் தேநீர் தயாரிக்கும்படி கூறிஞன். அவன் கர்னலின் சொற்களிலிருந்து தப்பவிரும்பிஞன். ஏன்? அவன் தன்னிடமிருந்தே தப்பவிரும்பிஞன். என்று சொல்லலாம். அவன் சிந்தனையிலிருந்து தப்பவிரும்பிஞன். அவஞல் தன்னைத்தானே புரிந்துகொள்ள முடியவில்லை. பாபா, ராம்ஜீ, கர்னல், வனகன்யாவின் தூய்மையான குணம், மட்டுமல்லாது அவனுடைய உள்ளமும் இந்தக் காரணமற்ற பிடிவாதத்தை எதிர்த்தது. ராஜா சாஹேபின் கூட்டத்தில் சித்ராவைச் சந்தித்தது, மதுராவிலும் விரஜபூமியிலும் நான்கு நாட்கள்வரை கன்யாவுடன் இருந்தபொழுது அவனை அடிக்கடி துன்புறுத்திய—மறைந்திருந்த சிற்றின்ப வெறியை மறுபடியும் கிளறிவிட்டது. கன்யா அவனுடைய விருப்பத்திற்குப் பணியவில்லை என்பதுதான் கன்யாவுக்கு எதிராக அவன் உள்ளத்தில் தோன்றிய உணர்வாகும்.

இரண்டு தேநீர் கோப்பைகளை இருவருக்கெதிரிலும் வைத்துவிட்டு சுக்ரு கையைக் கட்டிக்கொண்டு ஓரமாக நின்றுகொண்டிருந்தான். கர்னல் அவனைப் போகும்படி கட்டளையிட்டான். சுக்ரு சென்றுவிட்ட பிறகு, ''சொல்லப்பா! உன் மனம் மாறும்படியாக நீ அவளிடம் என்ன தவறைக் கண்டாய்?'' என்ருன்.

"அவள் பிடிவாதக்காரி!"

"நீ ஆடம்பரக்காரன்!"

சஜ்ஜன் மௌனமாக இருந்தான். "மற்றவரிடம் குறையைக் காண்பதற்கு முன்னுல் தன்னைத்தானே ஒருமுறை கவனித்துக் கொள்" என்று கர்னல் கூறினுன்.

மௌனம் நிலவிற்று. இருவரும் தேநீர் அருந்திக் கொண்டிருந் தார்கள். சிற்றுண்டிக்குப் பிறகு தேநீரும் அருந்தியாகிவிட்டது. வேலைக்காரன் வந்து பாத்திரங்களை எடுத்துக்கொண்டுபோனுன். ஏழரை மணியாகிவிட்டது.

"சரி, கிளம்பு உடைமாற்றிக்கொண்டு வருகிருயா அல்லது இப்படியே கிளம்புகிருயா?" என்று கர்னல் கேட்டான்.

"இப்படியே போகலாம்."—சஜ்ஜன் எழுந்து நின்முன்.

"பார், சஜ்ஜன்! அவர்கள் நம்மை அவமானப்படுத்துவதற்கு ஏதாவது வழி செய்யத்தான் செய்வார்கள். நீ சிறிதும் கவலைப் படாதே! நான் இன்று பின்னேவையும் எச்சரிக்கையுடன் வைத்துக்கொள்ளுகிறேன். ஆண் மகனைப்போல் நீ நடந்துகொள். அவளுக்கு எந்தக் கஷ்டமும் வரக்கூடாது" என்று கர்னல் உட்கார்ந்தவாறே கூறினுன்.

"கர்னல் எனக்குச் சிறிது அவகாசம் கொடு."

"அவகாசம் எதற்கு? உரலில் தலையைக் கொடுத்துவிட்டு இப்பொழுது உலக்கையிடம் அஞ்சினுல் எப்படி? நான் என்ன சொல்வது, சஜ்ஜன்! உன்னைப் புகழ்வதற்காகச் சொல்லவில்லை. ஒரு விஷயத்தில் மஹிபாலைவிட அதிகம் எனக்கு உன்னுடைய நாணயத்தில் நம்பிக்கை உண்டு."

சஜ்ஜன் தலைகுனிந்தவாறே மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

கர்னல் எழுந்து ஸ்விச்சை அழுத்தினுன், சுக்ரு வந்ததும் அவனிடம், "அந்த அம்மா எழுந்தால் தேநீர் கொடுத்துவிட்டு இன்று ஐயாவைச் சந்திக்கமுடியாது என்று அவர்களிடம் கூறிவிடு. ஐயா என்னுடன் சாப்பிடுவார். அந்த அம்மா வீட்டின் எந்தப் பொருளையும் தொடாமல் பார்த்துக்கொள்" என்று கூறினுன்.

கர்னலின் கட்டளை முடிந்த பிறகு சஜ்ஜன் மெதுவான குரலில், "ஜோசஃபை வண்டி எடுக்கச் சொல், சுக்ரு" என்று கட்டளை யிட்டான். அப்பொழுது அவனுடைய பிடிவாதம் குறைந்து கொண்டிருந்தது. சஜ்ஜன் தன்னிடமே தோற்றுவிட்டான். அதற்குப் பிறகு பெரிய புரட்சிக்காரன் ஆயுதங்களை இழந்து போலீசின் விலங்குகளில் மாட்டிக்கொண்டதுபோல் தலைகுனிந்த வாறு சஜ்ஜன் கர்னலைப் பின் தொடர்ந்து அறையை விட்டு வெளியே சென்முன்.

# 32

அன்றைய நாள் சஜ்ஜனுக்குக் கெட்டநாளாக அமைந்தது. சாளிக்ராம் ஏமாற்றிவிட்டார். கண்காட்சி வார்டு கமிட்டியின் சார்பில் நடைபெறுகிறது என்றும், 'ஹர் எக்செலன்ஸீ' அதைத் திறந்து வைப்பார்கள், அந்தக் கண்காட்சிக்குத் தலைநகரின் தலை சிறந்த கலைஞர்களின் ஒத்துழைப்புக் கிடைத்திருக்கிறது என்றும், நகரின் தனவந்தரான லாலா ஜானகிசரணின் மாளிகையில் கண் காட்சி நடைபெறும் என்றும் நடுத்தர வகுப்பினரின் வாழ்க்கை முறையை உயர்த்துவதற்காகக் கண்காட்சி ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது என்றும், அந்தப்பகுதியில் முதல் முறையாக இவ்வாறு ஏற்பாடு செய்யப்படுவது புகழ்பெற்ற தலைவரான திரு சாளிக்ராம் ஜயஸ்வாலின் சிறந்த அறிவின் பயனாகும் என்றும் செய்தித்தாள் களில் வெளியிடப்பட்டிருந்தது சஜ்ஜனின் உள்ளம் கோபத்தால் பொருமிக் கொண்டிருந்தது. காலையில் கர்னல் அவனைக் குன்றச் செய்து விட்டான். இப்பொழுது இந்தச் செய்தியால் அவனுடைய உள்ளம் பெரிதும் வருந்தியது.

பன்னிரண்டு மணி அளவிற்கு அவன் எல்லாச் சித்திரங்களையும் எடுத்துக்கொண்டு லாலா ஜானகிசரணின் மாளிகையை அடைந் தான். அங்கே கர்னலையும் கன்யாவையும் காணவில்லை. லாலா ஜானகிசரண் ஆர்வத்துடன் அவனை வரவேற்று, ''தம்பி! எவ்வளவு நேரமாக உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்?'' என்று கூறினார்.

சஜ்ஜன் ஒன்றும் பேசவில்லை. கூலியாட்கள் தலையில் சுமந்து வந்த சித்திரங்களை இறக்குவதற்கு லாலா ஜானகிசரண் அவசரப் பட்டார். அவர் உடனே வேலைக்காரனுக்குக் கட்டளையிட்டார். படங்களை இறக்கும்பொழுது பழக்கமில்லாத வேலையாள் சிறிது தவறிவிட்டான். உடனே சஜ்ஜன் சுமையைத் தாங்கிக் கொண் டான். மற்றக் கூலியாட்களின் சுமையையும் தானே இறக்கத் தொடங்கினான். மிகவும் எச்சரிக்கையுடன் சாமான்களை வைத்து விட்டுக் கூலியாட்கள் சென்றபிறகு லாலா ஜானகிசரண் தம் செயற்கைப் பற்களைக் கட்டிக்கொண்டு சிரித்தவராய் ''தம்பி! நீ ரொம்பவும் களைத்துப் போயிருப்பாய். உனக்கு மிகவும் கஷ்ட மாக இருந்திருக்கும். அந்தச் சாளிக்ராம் செய்த கீழ்த்தரமான காரியத்தைப்பற்றி நான் என்ன சொல்வது?'' என்றார்.

லாலா ஜானகிசரண் தலை குனிந்தவராய் உட்கார்ந்து கொண் டார். லாலாஜீ சாளிக்ராமைக் குறை கூறிப்பேசுவது சஜ்ஜனுக்கு விசித்திரமாக இருந்தது. அவன் ஏதோ கூறத் தொடங்கும் பொழுதே அவர் மறுபடியும் பேசத்தொடங்கி விட்டார், ''தம்பி!

நான் ராஜா சாஹேபுக்கும் ஃபோன் செய்து இதுபற்றி அவருடைய அபிப்பிராயத்தையும் கேட்டுக் கொண்டுவிட்டேன். அவர் இப் பொழுது உன்னிடம் சிறிது கோபம், உனக்குத்தான் தெரியுமே! ஆனாலும் அவர் கோபப்படுவது இன்று கன்னேமல் உயிருடனிருந்து உன்மீது கோபப்பட்டால் எப்படியோ அது போலத்தான். ராஜா சாஹேப் டெலிபோனில் சாளிக்ராம் மீது எரிந்து விழுந்து கொண் டிருந்தார். அவன் பெரிய தவறான காரியம் செய்து விட்டான். ஆனால் இப்பொழுது சஜ்ஜன் சிறிது அமைதியுடன் இருக்க வேண்டும், கண்காட்சியை நடத்திவிடலாம். 'ஹர் எக்சலன்ஸீ வரவிருக்கிறார்கள். அதற்குப் பிறகு நான் அவனைக் கவனித்துக் கொள்கிறேன் என்று சஜ்ஜனிடம் கூறு' என என்னிடம் அவர் தெரிவித்தார்''

சஜ்ஜன் மிகுந்த கோபத்துடன், ''நான் இப்பொழுதே சித்திரங் களையெல்லாம் எடுத்துக்கொண்டு போய்விட்டால் சாளிக்ராமுக்கு அவர் செய்த தவறு புரிந்துவிடும். எந்தக் கலைஞன் இவருக்குத் தன் சித்திரங்களைக் கொடுப்பான்?'' என்றான்.

''ஆமாம் தம்பி! நீ கூறுவது சரிதான்.''

''எனக்கு விளம்பர ஆசை கிடையாது. ஆண்டவனின் அரு ளால் எனக்கு வேண்டிய புகழ் கிடைத்திருக்கிறது. சாளிக்ராமைப் பற்றி ஒரு நகரத்து மக்களுக்குத்தான் தெரியும்; ஆனால் சஜ்ஜன் வர்மாவின் புகழோ இந்தியாவில் மட்டிலுமல்ல; வெளி நாட்டுச் செய்தித் தாள்களிலெல்லாம் பரவியிருக்கிறது.''

''தம்பி! எனக்கு எல்லாம் தெரியும். நீ என் மகனைப் போன்ற வன். யாராவது உன்னைப் புகழ்ந்தால் என் உள்ளம் பூரித்துப் போகிறது. நான் என்ன சொல்வது? உன்வீட்டிலோ சந்தோஷப் படுபவர் யாருமே இல்லை. (தம் வேஷ்டி முனையால் லாலா ஜானகி சரண் கண்களைத் துடைத்துக் கொண்டார். பிறகு பெருமூச்சு விட்டுக்கொண்டே) பல ஆண்டுகள் நீ வாழவேண்டும் தம்பி! ஆண்டவன் உனக்கு இன்றும் புகழை வழங்கட்டும், உன்னால்தான் இன்று என் வீட்டிற்கு ஹர் எக்சலென்ஸீயும், பெரிய பெரிய மனிதர்களும் வரப்போகிறார்கள்! நான் உயிரோடிருக்கும் வரையில் உன் புகழைப் பாடிக் கொண்டேயிருப்பேன்!''

ஒரு விநாடி மௌனமாக இருந்துவிட்டு லாலா ஜானகிசரண் அவசர அவசரமாக அவனிடம், ''தம்பி! நீ இன்னும் சாப்பிட்டி ருக்கமாட்டாயே! வா! நம்ம வீட்டில் உணவு தயாராக இருக்கிறது'' என்று கூறினார்.

''வேண்டாம், நான் இன்று கர்னல் வீட்டில் சாப்பிட இருக் கிறேன். இன்றும் அவன் வரவில்லையே!''

''அவர் வந்து விட்டுப் போய் விட்டார், தம்பி. கர்னல் என்

மீது கோபமாக இருக்கிறார். அவருடன் அந்தப் பெண்ணும்... அவள் பெயரென்ன... வந்திருந்தாள். அவளால்தான் ராஜா சாஹேபுக்கு உன் மீது கோபம் உண்டாயிற்று. நாகீன்சந்த் மிகவும் நடத்தை தவறி நடந்து கொண்டார். தம்பி! நீ தவருகக்கருதக் கூடாது. அவர் உன் நண்பரென்ருல் நானும் பலமுறை சந்தித் திருக்கிறேன். அவருடைய தந்தை லாலா மோதீ சந்துடன் எனக்கு நல்ல பழக்கம் இருந்தது. ஆனுல் நான் கங்கை நீரின் பேரில் ஆணையிட்டுக் கூறுகிறேன். உன் நல்ல குணமும், வம்ச பரம்பரையான நன்னடத்தையும் நகீன் சந்திடமும் கிடையாது. உன் மஹிபாலிடமும் கிடையாது. அவர் என் சகோதரியின் கணவரான ரூப்ரத்தனுடன் சேர்ந்து செய்தித் தாள் வெளியிட ஆரம்பித்ததிலிருந்தே அவரை எனக்குத் தெரியும். உண்மை என்ன தெரியுமா, தம்பி? வம்ச பரம்பரையான தனவந்தனே தனிதான். நகீன் சந்தின் தந்தை செல்வம் திரட்டினுர். ராஜா சாஹேபைப் போலவோ அல்லது என்னையும் உன்னையும் போலவோ வம்சபரம்பரைச் சொத்தின் பெருமை அவருக்கு ஏது? அது கிடக்கட்டும், நீ சாப்பிடவா.''

''வேண்டாம், நான் ஒரு முறை கர்னலைச் சந்தித்தாக வேண்டும். எங்கே போயிருக்கிருன்? உங்களிடம் ஏதாவது சொல்லி விட்டுப் போனுஞு?''

லாலா ஜானகிசரண் முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு ஒரு விநாடி மௌனமாக இருந்து விட்டுப்பிறகு ''கண்காட்சி என் வீட்டில் நடக்காது என்றும் நகீன் சந்த் கூறிவிட்டுப் போனுர்.''

சஜ்ஜன் அதைக் கேட்டதும் திடுக்கிட்டுப்போனுன். கர்னல் எடுத்த உறுதியான நடவடிக்கையால் அவன் உள்ளத்தில் மகிழ்ந் தாலும், திடுக்கிட்டு உடனே அவசரமாக எழுந்தவனுய், ''நான் இதோ வருகிறேன்'' என்று கூறிவிட்டுக் கிளம்பினுன்.

''கேள் தம்பி!''

''நான் இதோ வந்துவிட்டேன்'' என்று கூறிவிட்டுக் சஜ்ஜன் நிற்காமல் தாயின் வீட்டின் பக்கம் சென்று விட்டான்.

கன்யா, கர்னலின் மூன்று வேலையாட்கள், பாபா ராம்ஜீ உடல் நலம் பெற்று வரும் அவருடைய நான்கு பைத்தியங்கள் எல்லோரு மாக முற்றத்தில் உட்கார்ந்துகொண்டு கொடிகளை ஒட்டிக்கொண் டிருந்தார்கள். தாயியும் நந்தோவும் அருகில் நின்றுகொண்டு அதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். தாயியும் பாபா ராம்ஜீயும் பேசிக்கொண்டிருந்தார்கள். சஜ்ஜன் அங்கேபோய்ச் சேர்ந்தபொழுது சிரிப்பு உண்டாக்கும் ஏதோ பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருந்ததால் எல்லோருடைய முகமும் மலர்ந் திருந்தன.

''வா, ராம்ஜீ! இங்கே எவ்வளவு நல்ல காரியம் நடந்து கொண்டிருக்கிறது என்று பார்!''

சஜ்ஜன் வந்ததும் கன்யாவின் முகம் ஆழ்ந்தகருத்துடன் ஆகிவிட்டது. அவள் தலை குனிந்துகொண்டு கொடிகளை வெட்டிக் கொண்டிருந்தாள்.

''கன்னேமல்லின் பேரப்பிள்ளை! நீ வருத்தப்படாதே. அந்தப் பாவி ஜானகி சரணின் வம்சத்தையே அழித்துவிடுகிறேன்'' என்று தாயி கூறினாள்.

''தாயி! உனக்கு வெறும் பேச்சுத்தான் பேசத்தெரியும். உன்னால் ஒன்றும் செய்ய முடியாது!'' என்றாள் நந்தோ.

''கழுதை! உனக்கு என்ன தெரியும்? உன்னைக் கொண்டு செய்ய வைத்ததெல்லாந்தான் நடக்காமல் போய்விட்டது. நீ ஒரு பாவி!''

''தாயி! நீ ...'' நந்தோவுக்குத் தாயியின் வசைகளைக் கேட்டதும் ஒன்றும் புரியாமல் போய்விட்டது. நான்கு பேர்களுக்கு எதிரில் தன் திறமையைக் காட்டி, நந்தோ தன் பெருமையை நிலை நாட்ட விரும்பினாள். அப்பொழுது தாயியால் பொறுக்க முடியவில்லை. ''அடீ நீ என்ன சொன்னாய்? நான் புடம் போட்ட தங்கமாக்கும்! என்னை யாரும் ஒன்றும் கூறியது கிடையாது! பாவி! நீயே மோசம்! உலகத்தை மோசமாக......''

''ராமபக்தை! போகட்டும். நல்ல காரியம் நடக்கும்பொழுது இம்மாதிரியான வசவுகளையும் நிறுத்து. (சஜ்ஜனிடம்) ஏன் ராம்ஜீ, போன காரியம் வெற்றிதானே?''

''ஆமாம்! படங்களையெல்லாம் கொண்டுவந்து விடுகிறேன்.''

''ஏதோ அவர்கள் உன்னை ஏமாற்றிவிட்டார்களாமே! கவலைப் படவேண்டாம், ராம்ஜீ! இது உலகம்—'' அதற்குள் தாயிக்கும் நந்தோவுக்கும் மறுபடியும் சச்சரவு தொடங்கிவிட்டது. நந்தோ மெதுவான குரலில் பிதற்றிக் கொண்டிருந்தாள். அதைக்கேட்டுத் தாயி திடீரென்று கோபமடைந்தாள். ''பாவி! அதிகமாகப் பேசாதே! சொல்லிவிடுகிறேன். என்னுடன் வம்புக்கு வந்தால் நான்கு நாட்களில் தெருத் தெருவாக அலையும்படி செய்து விடுவேன். பிறகு இந்த பாபாஜீயால் கூட ஒன்றும் செய்ய முடியாது!

''அவளைவிடு, ராமபக்தை!''—பாபா ராம்ஜீ நந்தோவைப் பார்த்து உரத்த குரலில்,'' யாராவது தாயியிடம் வம்பு செய்வார்களா?'' என்று கேட்டார்.

சஜ்ஜன் இந்தச் சச்சரவில் மகிழ்ச்சி அடையக்கூடிய நிலையில் இல்லை. அவன் கர்னல் எங்கே இருக்கிறான் என்று தெரிந்து கொள்ளவிரும்பினான். ஆனால் யாரிடம் கேட்பது? அங்கே கர்னலின் வேலையாட்கள் உட்கார்ந்திருந்தார்கள்; ஆனால் அவனுடைய பார்வைக்கு யாருமே படவில்லை. அவன் கன்யாவைக் கேட்க

விரும்பினான். பாபா ராம்ஜீக்கெதிரில் அவன் தன்னைத் தூய்மையானவனாக நிரூபிக்கும் எண்ணத்துடன் கன்யாவின்மீது தன் அன்பை வெளிப்படுத்த விரும்பினான். ஆனால் எவ்வாறு அன்பை வெளியிடுவது? எப்படிக் கேட்பது? ஆகையால் யாரிடம் கேட்பது என்பதே அவன் உள்ளத்தில் எழுந்துகொண்டிருந்தது. பின்னர் உள்ளத்து ஆர்வம் உந்த அவன் தயக்கத்தை விடுத்து, ''கன்யா! கர்னல் எங்கே!'' என்று தெளிவாகக் கேட்டே விட்டான்.

''சாப்பாட்டிற்கு ஏற்பாடுசெய்து கொண்டிருக்கிறார்.''

''யார் சாப்பிட ஏற்பாடு செய்யப் போயிருக்கிறான்?''

''இவர்களுக்கும், எங்களெல்லோருக்குந்தான்'' என்று கன்யா விடையளித்தாள்.

''கன்னேமல் பேரப்பிள்ளை! நீ சாப்பிடவில்லையா? நீ என்னிடம் ஏன் சொல்லவில்லை? நாலு பூரி இறக்கியிருப்பேனே எவ்வளவு நேரம் ஆகப் போகிறது!''

''வேண்டாம், தாயி! சாப்பாடு வந்துவிடும்.''

கர்னல் வந்தபிறகு சஜ்ஜனும் கர்னலும் தங்கள் தங்கள் அநுபவங்களைக் கூறிக்கொண்டார்கள். கர்னலுக்கும் ஜானகிசரணுக்கும் இடையில் பெருத்த சச்சரவு ஏற்பட்டு விட்டது. ''நான் தெளிவாகக் கூறிவிட்டேன்; ராஜா சாஹேபாக இருக்கட்டும் வைசிராயாகவே இருக்கட்டும். இனி யாருடைய சிபாரிசு வந்தாலும் கண் காட்சி அவருடைய வீட்டில் நடக்காது. அவர் ஏமாற்றினால் நாமும் அதற்கு விடைகொடுப்போம். நான் ஒன்றும் தவறாகச் சொல்லவில்லையே!'' என்றான் கர்னல்.

''இல்லை. நீ கூறியது சரிதான்!''

''நீ இப்பொழுதே போய், படங்களையெல்லாம் எடுத்து வா இந்த இடம் அதைவிட மிகச் சிறந்தது.''

சஜ்ஜன் லாலாஜீயின் வீட்டிலிருந்து படங்களை எடுத்துவரச் சென்றபொழுது அவர் முன்பு காட்டிய அன்பை மறந்து கோபத்தைக் காட்டினார். படங்களுக்குக்குப் பதிலாக ஏமாற்றத்தை அடைந்து சஜ்ஜனும் சினம் கொண்டான். ''ஹர் எக்சலென்ஸீ வந்து திறப்பு விழா நடந்த பிறகுதான் எதைப் பற்றியும் யோசிக்கப்படும்'' என்று லாலாஜி தெளிவாகக் கூறிவிட்டார்.

பரம்பரையான ஒழுக்கமும் நன்னடத்தையும் உடைய லாலா ஜானகிசரணுக்குப் பரம்பரை நன்னடத்தைக் கொண்ட சஜ்ஜன் வர்மாவிடம் சில வார்த்தைகளைக் கேட்க நேர்ந்தது. அதனால் லாலா ஜானகிசரண் கோபம் அடைந்தார். சஜ்ஜன் உண்மையிலேயே மிகவும் கலக்கமும், கோபமும் அடைந்தான். கர்னல் அவனுக்கு ஆறுதளித்தவாறு, ''இப்பொழுது ஒன்றும் செய்ய வேண்டாம், மாலை நாலரை மணி ஆவதற்கு எவ்வளவு

நேரம் ஆகப் போகிறது. திறப்பு விழாவின் பொழுது ஹர் எக் செலன்ஸிக்கு எதிரிலேயே நான் ஜானகிசரணேயும் சாளிக்ராமை யும் தலை குனிய வைக்கவில்லையானால் என் பெயரை மாற்றிவை. நீ பேசாமல் இரு!'' என்று கூறினான்.

கர்னல் தாயியின் வீட்டிற்கு எதிரிலே கொடிகளைக் கட்டி அலங் காரம் செய்தான்.

லாலாஜானகிசரண் தம் மாளிகைக்கு எதிரில் ஒவ்வொரு தூணையும் காட்டு மலர்களால் அலங்கரித்திருந்தார். நாற்சந்தியில் குழாய் அருகில் ஒரு வாயிலும், மாளிகைக்கெதிரில் ஒரு வாயிலும் கட்டச் செய்து பலவர்ண மின்சார பல்புகளைக் கொண்ட தோரண மும் கட்டச் செய்தார். அவருடைய வீட்டிலிருந்து நாற்சந்தி யின் பெரிய தெருவரையில் இரண்டு பர்லாங்குப் பாதையில் கொடிகள் கட்டச் செய்தார்.

சஜ்ஜன் கோபத்தால் பொருமிக் கொண்டிருந்தான். கர்னல் சாய்வு நாற்காலியில் கண்ணயர்ந்து விட்டான். பாபா ராம்ஜீ தம் பைத்தியங்களை அழைத்துக்கொண்டு போய்விட்டார். கர்னலின் வேலையாட்கள் முற்றத்தில் உட்கார்ந்திருந்தார்கள், கன்யா தாயியுடன் தாராவின் வீட்டிற்குப் போய்விட்டாள்.

மூன்றரை—மூன்றே முக்கால் மணியளவிற்கு லாலாஜானகி சரணின் வேலையாள் வந்து சஜ்ஜனிடம் "ராஜா சாஹேப் வந்திருக் கிறார். உங்களைக் கூப்பிடுகிறார்'' என்று கூறினான்.

"போகவேண்டிய தேவையில்லை!'' கண்களைத் திறக்காமலே கர்னல் தான் விழித்துக்கொண்டிருப்பதை அறிவித்தான். சஜ்ஜனால் ஒன்றும் கூறமுடியவில்லை. வேலையாள் ஒருவினாடி தயங்கியவனாய் மறுபடியும் சஜ்ஜனைப் பார்த்து, ''அப்படியானால் ஐயா!'' என்று கேட்டான்.

"ஆமாம்ப்பா! நான்தான் உன்னிடம் சொல்லி விட்டேனே! இந்த இடத்தை விட்டு போ!''

வேலையாள் செல்லத் தொடங்கினான்: ''போய் வரட்டுமா கர்னல், ராஜாசாஹேப்'' என்று சஜ்ஜன் கர்னலிடம் கேட்டான்.

''ராஜா சாஹேபாக இருக்கட்டும், வேறு யாராக வேண்டு மானாலும் இருக்கட்டும்; நீ போக வேண்டுமென்று எனக்குத் தோன்றவில்லை. பெரியவர்களாக இருந்தால் அந்த முறைப்படி நடந்து கொள்ள வேண்டும்!''

''நான் ஒரு முறை போய் வருகிறேன், கர்னல்!'' சஜ்ஜன் நாற் காலியை விட்டு எழுந்திருந்தான்.

"நீ போகக்கூடாது என்று நான் சொல்கிறேன் சஜ்ஜன்!''

சஜ்ஜன் உட்கார்ந்து கொண்டான்.

ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு ராஜாசாஹேபின் நடுப் பிள்ளை வந்து, ''அப்பா அழைக்கிறார்'' என்று கூறினான்.

சஜ்ஜன் இக்கட்டான நிலையில் இருந்தான். ஓரக்கண்ணால் கர்னலைப் பார்க்கலானான். கர்னலின் நிலை விசித்திரமாக இருந்தது. அவனுக்கு எதிரிலேயே திரிபுவன்தாஸ் நின்று கொண்டிருந்தார். அதனால் அவனால் சைகைகூடச் செய்ய முடியவில்லை. ஆனால் அவனால் சொல்லாமலும் இருக்க முடியவில்லை. "இதோ பாருங்கள் திரிபுவன்; ஒரு பக்கமாகப் பேசுவது முறையற்றதாகும். அந்தப் பயல் சாளிக்ராமை நான் முன்பே மதித்ததில்லை. ஆனால் எங்களுடைய கூட்டு முயற்சியில் லாலா ஜானகிசரண்......"

"கர்னல்! இது அவருடைய கௌரவத்தைப்பற்றிய பிரச்னையாகும்!"

"அப்படியானால் இது எங்களுடைய கௌரவத்தைப் பற்றிய பிரச்னையாகும்."

"சஜ்ஜன்! நீ வா" என்று கூறியவராய்த் திரிபுவன்தாஸ் சஜ்ஜனின் காலைப் பிடித்துத் தூக்கத் தொடங்கினார். சஜ்ஜனால் ஒன்றும் கூற முடியவில்லை. கர்னலாலும் தடுக்க முடியவில்லை. சஜ்ஜன் சென்று விட்டான்.

'ஹர் எக்செலன்ஸீ'யின் வண்டி தெருவில் வந்து நின்றபொழுது ராஜா சாஹேபின் தலைமையில் பணம் படைத்துச் செல்வாக்குள்ளவராய் தாமே பெரிய மனிதர் என்று கருதும் பத்துப் பன்னிரண்டு மனிதர்கள் பற்களைக் காட்டிக்கொண்டு நின்று கொண்டிருந்தார்கள். சஜ்ஜன் அந்த முட்டாள்களின் கூட்டத்தில் தியாகி போல் நின்று கொண்டிருந்தான். தெருவில் ஜானகிசரணின் மாளிகைவரையில் இரண்டு பர்லாங்கு தூரத்துப் பாதையில் 'ஹர் எக்செலன்ஸீ'க்காகச் சிவப்பு விரிப்பு விரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு வீட்டிலும் முதலிலிருந்தே பூக்கூடைகள் வைக்கப்பட்டிருந்தன. ஹர் எக்செலன்ஸீ மீது பூமாரி பொழிந்துகொண்டிருந்தது. நாற்சந்தியின் வாயிலைத் தாண்டித் தெருவில் நுழைந்ததும் இரண்டு பக்கங்களிலும் கயிற்றைக்கட்டி இரண்டு பூக்கூடைகள் இணைத்துத் தொங்கவிடப்பட்டிருந்தன. ஹர் எக்செலன்ஸீ நுழைந்ததும் இரண்டு பக்கத்துக் கயிறுகளும் இழுக்கப்பட்டன. பூக்கூடையிலிருந்த ஒரு பூமாலை ஹர் எக்செலன்ஸீயின் கழுத்தில் விழுந்தது. ஜானகிசரணின் மாளிகைக்கெதிரில் கூட்டம் கூடியிருந்தது. பெரிய பெரிய மனிதர்கள் காணப்பட்டார்கள். டாக்டர்கள், வக்கீல்கள், பணக்காரர்கள் அரசாங்க அதிகாரிகள், அந்தப் பகுதியிலுள்ள மக்கள், நகரத்து முக்கியமான கலைஞர்கள் ஆகியோர் அந்தத் தெருவை அழகு படுத்திக் கொண்டிருந்தார்கள். பழைய தலைமுறையையும் புதிய தலைமுறையையும் சேர்ந்த புகழ்பெற்ற ஓவியக் கலைஞர்களும் சிற்பிகளும் ஹர் எக்செலன்ஸீ, தனவந்தர்கள் ஆகியோரின் கூட்டத்திலும் வேறுபட்டவர்களாக மின்மினிப் பூச்சிகளுக்கிடையில் விண்மீன்

களைப் போல் பிரகாசித்துக் கொண்டிருந்தார்கள். நிலமகள் அவர்களால் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தாள். அந்தத் தெரு அவர்களுடைய வருகையால் தூய்மையடைந்தது. பலமான போலீஸ் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கர்னலும் கன்யாவும் சேர்ந்து ஏதாவது தடை ஏற்படுத்தலாம் என்று பாபூ சாளிக் ராமுக்கும், லாலா ஜானகிசரணுக்கும் சந்தேகமாக இருந்தது.

திறப்பு விழா நடந்தது. ராஜா சாஹேப் ஹர் எக்செலன்ஸீ யைப் பெரிதும் புகழ்ந்தார். அந்த ஊர்ப் பெரிய மனிதர்கள் எப்பொழுதும் பெரிய அரச பக்தர்களாகவும் தேச பக்தர்களாக வும் இருக்கிறார்கள் என்று ஆறுதல் அளித்தார். அவர் சாளிக்ராம் பெரிய தலைவரென்று புகழ்ந்தார். சஜ்ஜனைப் பற்றியும் இரண்டு நல்ல வார்த்தைகள் கூறினார்.

காலில் கட்டுப் போட்டிருந்ததால் லாலா சாளிக்ராமால் எழுந்து நிற்க முடியவில்லை. கனைத்துக்கொண்டு அவரும் மைக்ரோஃபோனைத் தாழ்த்தி வைக்கச் செய்து பெருந்தலைவரைப் போல் பேசினார். அவர் தமது பேச்சில் சஜ்ஜனைப் பற்றிக் குறிப் பிடாமல் எல்லாக் கலைஞர்களுக்கும் நாட்டின் தேசீயக் கழகத் துடன் ஒத்துழைத்ததற்காக நன்றி தெரிவித்தார். ஹர் எக் செலன்ஸீ கலையின் பெருமையைப் புகழ்ந்து பேசிய பிறகு தம் அருகில் நின்று கொண்டிருந்த உலகப் புகழ்பெற்ற முதிர்ந்த கலைஞர்களைப் பற்றித் தம் பேச்சில் மிகவும் மதிப்புடன் குறிப் பிட்டார்கள். ராஜா சாஹேபை இந்த ஏற்பாட்டிற்காக வாழ்த்தி விட்டு லாலா ஜானகிசரணின் மாளிகையின் பெரிய அறைக் கதவில் கட்டப்பட்டிருந்த பூமாலையை கத்தரிக்கோலால் வெட்டி னார்கள். எல்லோரும் கை தட்டினார்கள். அதற்குப் பிறகு கூட்டம் உள்ளே நுழைந்தது. அறையில் நுழைந்ததும் சஜ்ஜ னுக்குப் பெரிதும் வேதனையாக இருந்தது. நகரத்துப் பெரிய மனிதர்கள், தனக்கு முதியவர்கள், நண்பர்களான கலைஞர்கள் ஆகியோருக்கெதிரில் அவனால் தலை நிமிர முடியவில்லை. ஐம்பது சித்திரங்கள் ஒரே சுவரில் மேலிருந்து கீழ்வரை தொங்கவிடப் பட்டிருந்தன. லாலாக்களுக்குச் சிற்பங்களைப் பற்றிய பெருமை தெரியவில்லை. ஆனாலும் அவை ஒரு மேசை மேல் வைக்கப்பட் டிருந்தன. அந்த அறையில் எல்லோருடைய கவனத்தையும் கவரக் கூடிய பொருள் ஒன்றுதான் இருந்தது. அது ராஜாசாஹேபின் அறையில் வாயிற்புறத்தில் மின்சார பல்புகளெல்லாம் அமைக்கப் பட்ட பாரத மாதாவாகும். பாராதமாதாவின் கையில் இருந்த மூவர்ணக் கொடியில் சக்கரம் சுழன்று கொண்டிருந்தது. கலை ஞர்கள் தங்களுடைய கலைப் பொருள்களுக்கு ஏற்பட்ட இந்த அவல நிலையைப் பார்த்துத் திகைத்துப் போனார்கள். சஜ்ஜன்

அந்த இடத்தை விட்டுத் தப்பி ஓடி விட்டான். ராஜா சாஹேப் ஜானகிசரண் ஆகிய எவருக்கும் அப்பொழுது ஹர் எக்செலன்ஸீ, மற்றும் இரண்டு மூன்று பெரிய அதிகாரிகளைத் தவிர வேறு யாரைப் பற்றியுமே கவலையில்லாமல் இருந்தது. கர்னலும் கன்யாவும் அறையின் ஒரு மூலையில் நின்றுகொண்டிருந்தார்கள். பார்வைக்கு எட்டும் வரையில் ஹர் எக்செலன்ஸீ சித்திரங்களைப் பார்த்தார்கள்.

ஹர் எக்செலன்ஸீ ராஜாசாஹேப், தொந்தி படைத்த இரண்டு மூன்று செல்வர்கள், ஆபீசர்கள் முதலியோர் ஒரு முறை பார்த்துவிட்டு அறையை விட்டுப் போகத்தொடங்கினார்கள். தங்கள் கலைப்பொருள்கள் இவ்வாறு தவறான முறையில் பயன் படுத்தப்பட்டிருந்தும் முதிய கலைஞர்கள் வெளிப் படையாக ஒன்று கூற வில்லை. ஆனால் அவர்கள் அந்த அந்த இடத்தை விட்டுச் சென்று விட்டார்கள்.

சஜ்ஜனின் நண்பர்களான புகழ்பெற்ற இளம் கலைஞர்கள் தங்களுக்குள் அந்தக் கண்காட்சியைப் பற்றிப் பேசிக் கொண்டிருந் தார்கள். மின்சார மூவர்ணக் கொடியைக் காட்டுவதற்காகவே அத்தனை கலைச்சிருஷ்டிகளையும் அடிமையாக்கி அந்த அறையில் அடைத்து வைத்திருப்பது போல் தோன்றிற்று. மூவர்ணக் கொடிக்கு அடிமைப்படுவதில் எந்தக் கலைஞருக்கும் எந்தவித மறுப்பும் இருக்க முடியாது. ஆனால் அங்கோ பாரதமாதாவையும் மூவர்ணக் கொடியையும் சிகண்டியைப்போல் பயன்படுத்தப் பட்டிருந்தது. அவற்றிற்குப் பின்னால் நான்கு செல்வர்கள் கலையைத் தங்கள் அடிமையாக ஆக்கிக் கொண்டிருந்தார்கள். சஜ்ஜன் இதற்காக வைசிராயின் அட்டவணையில் மதிப்பிற்குகந்த குடிமக்களாகக் கூறப்படும் இந்தச் செல்வந்தர்களின் அடியாளாக இருந்து கொண்டு தன் நண்பர்களான கலைஞர்களை அவமதிப்புக்கு ஆளாக்குகிறான் என்றும் குற்றம் சாட்டப்பட்டது.

அருகில் நின்று கொண்டிருந்த கன்யாவுக்கு, இதைக் கேட்டதும் எரிச்சல் உண்டாயிற்று. கர்னல் அப்பொழுது அங்கே இல்லை. அந்தப் பகுதியைச்சேர்ந்த மக்கள் படங்கள் வைக்கப்பட்டிருந்த பகுதியில் நின்றுகொண்டு படங்களைத் தங்கள் பார்வையால் நுகர முயன்று கொண்டிருந்தார்கள். அந்தப்படங்களனைத்தும் பார் வையாளர்களுக்குப் பொருளற்றனவாகத் தோன்றின. கலை அர்த்தமற்றதாக இருந்தது.

இளம் கலைஞர் ஒருவர் சொற்பொழிவாற்றத் தொடங்கிவிட் டார். அந்த அறையில் சுற்றிச் சுற்றிவந்த மக்களை நோக்கி அவர் அந்தக் கண்காட்சியைப்பற்றித் தம் வருத்தத்தை வெளியிட்டார்.

''ஏனப்பா வீணாகக் கத்துகிறாய்? நீ மதிக்கத்தக்க குடி மகனல்

லேவே! களைப்பைத்தீர்த்துக்கொள்ள உனக்குத் தேநீரும், சிற்றுண்டியும் எவ்வாறு கிடைக்கும்?'' என்று மற்றொருவர் கூறினார்.

''நாம் மதிக்கத்தக்கவர்கள் இல்லையென்றால் இந்தலாலாக்கள் எவ்வாறு மதிக்கத்தக்கவர்களாக ஆகிவிட்டார்கள்?'' என்று மூன்றாவது கலைஞர் ரோஷத்துடன் கூறினார்.

''இவர்களை அரசாங்கம் மதிப்பிற்குரியவர்களாக ஆக்கியிருக்கிறது. அரசாங்கம், கவர்னர், இவர்களுடைய அட்டவணையில் நகரத்தில் இந்த லாலாக்களின் பெயர்கள்தாம் உனக்கு கிடைக்கும்; நம்மைப்பற்றி யாருக்குக் கவலை இருக்கிறது?'' என்று மற்றொரு கலைஞர் கூறினார்.

''அவர்களுக்கு நம்மிடம் மதிப்பு இல்லையென்றால் நாம் அந்தக் கழுதைகளைக் கிழிந்த செருப்பால் அடிப்போம். சஜ்ஜன் எங்கே?

ஆவேசமான அந்தச் சூழ்நிலைக்கு விடையளிப்பதற்காக கன்யா உடனே முன்னால் வந்து ''இவர்கள் சஜ்ஜனை ஏமாற்றி விட்டார்கள். படங்களைக் கொண்டுவரச் செய்த பிறகு இவர்கள் அவரை அறைக்குள் எட்டிப் பார்க்கக்கூட விடவில்லை. இந்தக் கலைச் சிருஷ்டிகள் இவர்களுக்கு வெறும் பகட்டுத்தான். இவற்றைக் கொண்டு பெரிய மனிதர்களை அழைப்பதும், தம்மைப் பிரசாரம் செய்து கொள்ளுவதுமே இவர்களது குறிக்கோள்'' என்று கூறினாள்.

''என்னமோ பிரசாரம் இந்தத் தலைவர்களுக்குத்தான் சொந்தம் போல அல்லவா இருக்கிறது! பெரிய பெரிய இலக்கிய நிபுணர்களையும், கலைஞர்களையும், விஞ்ஞானிகளையும் அழைக்கிறார்கள்! கூட்டத்திற்கு வந்திருக்கும் தலைவர்களின் பெயரையும், அவர்களுடைய பேச்சுக்களையும் பத்திரிகைகளில் விரிவாக வெளியிடச் செய்கிறார்கள். ஆனால் இலக்கிய நிபுணர்கள், கலைஞர்கள் ஆகியோரின் பெயர்களைக் கூடக்குறிப்பிடுவதில்லை'' என்று ஒருவர் பைத்தியம் போல் சிரித்துக்கொண்டு கூறினார்.

''நீங்கள் இவர்களுடன் ஏன் ஒத்துழைக்கிறீர்கள்! நீங்களும் இவர்களை ஏமாற்றுவதுதானே? இவர்கள் தங்களைப் பெரிய மனிதர்களாகக் கருதுகிறார்களல்லவா! இவர்கள் தலைவர்களாகவோ, உபதலைவர்களாகவோ இருக்கட்டுமே! ஆனால் இவர்களை இந்தக் காலத்தில் தீண்டத்தகாதவர்களாக விளம்பரப்படுத்த வேண்டும். மனிதனாக வாழமுடியாதவன் யாராக வேண்டுமானாலும் இருக்கட்டும்! அவனைத் தள்ளிவைத்து விடுங்கள்!''

''ஊர் மக்களுக்குக் கலைச்சிறப்பைத் தெரியவைப்பதற்காக இந்தக் கண்காட்சி நடத்தப்படுகிறது; ஒவ்வொரு சித்திரத்துடனும் சித்திரத்தைப் பற்றிய கருத்தைத் தெரிவிக்கக் கூடிய சீட்டுகள் தொங்கவிடப்படும் என்றல்லவா சஜ்ஜன் எங்களுக்குக் கூறினான்!''

''ஆமாம். அப்படித்தான் ஏற்பாடு. ஆனால் எங்களுக்கு எதுவுமே செய்ய வாய்ப்பு அளிக்கப்படவில்லை. சித்திரங்கள் வராதவரையில் ஆசைகாட்டிக் கொண்டிருந்தார்கள். அதற்குப் பிறகு இப்படி...''

''ஐயா! நீங்கள் இங்கே இப்படிப் பேசிக்கொண்டிருக்காதீர்கள், பக்கத்து அறையில் பெரிய பெரிய மனிதர்களெல்லாம்...'' என்று ஒரு பெரியவர் கூறவந்தார்.

''நீயும் உன் பெரிய மனிதர்களும்! சஜ்ஜன் எங்கே? அவரைக் கூப்பிடு. இந்தக் கீழ்த்தரப்பட்ட பெரிய மனிதர்களுக்காக எங்கள் கலை அவமானப்படுத்தப் பட்டுவிட்டது!,'

''நாங்கள் கண்காட்சிக்கு மற்றும் ஓர் இடத்தைத் தேர்ந் தெடுத்து வைத்திருக்கிறோம்; அந்த இடம் இந்த வீட்டுக்கு மிகவும் அருகிலேயே இருக்கிறது. அங்கே எல்லா ஏற்பாடுகளும் செய்யப் பட்டிருக்கின்றன. இவர்கள் சித்திரங்களை இப்படித் தம்வசப் படுத்தி வைக்காமல் இருந்திருந்தால் கண்காட்சித் திறப்பு விழா இங்கே நடக்காமல் அங்கே நடந்திருக்கும். சீமாட்டி கையால் திறப்பு விழா நடத்தப்படாமல் சிக்கன் துணி தயாரிக்கும் ஒரு கலைஞர் கையால் நடத்தப்பட்டிருக்கும், கலைஞர்களான நீங்கள் ஏற்றுக்கொண்டால் இப்பொழுதே இந்தச் சித்திரங்களைக் கழற்றிக் கொண்டுபோய்—'' என்று கன்யா கூறினாள்.

''சித்திரங்களைக் கழற்று'' என்று நான்கு புறத்திலிருந்தும் ஒரே குரல் ஓங்கிற்று. சினம் கொண்டிருந்த கலைஞர்கள் தாமே சித்திரங் களைக் கழற்றத் தொடங்கினார்கள். மக்கள் கூட்டத்திலிருந்த சிலரும் அவர்களுக்கு உதவிபுரியத் தொடங்கினார்கள்.

அந்த நேரத்தில் லாலா ஜானகிசரணின் மகன், இரண்டு போலீ சாருடன் ஹாலுக்குள் நுழைந்தான். நுழைந்ததுமே ''ஜாக்கிரதை! யாரும் சித்திரங்களைத் தொடக்கூடாது'' என்று கத்தினான்.

ஜானகிசரணின் மகனின் குரல், பல சிங்கங்கள் இருக்கும் காட்டில் ஓநாயின் குரலைப் போல் இருந்தது. அதன் முடிவும் அவ்வாறே அமைந்தது. கலைஞர்களின் சினம் எல்லையை மீறிவிட்டது. அவர் களுடன் பல இளைஞர்களும் பொங்கியெழுந்தனர். ஹாலில் பொது மக்களின் சினம் சீறிக்கொண்டு கிளம்பிற்று.

பக்கத்து அறையில் தேநீர் அருந்தும் படலம் முடிவடைந்து கொண்டிருந்தபொழுது எதிர்பாராமல் இந்தக் கூக்குரல் எழும் பிற்று. ராஜா சாஹேபின் புருவம் நெரிந்தது. சாளிக்ராம், ஜானகிசரண் முதலிய எல்லோருடைய முகத்திலும் கோபம் பொங்கிவந்தது. விருந்தாளிகள் தங்களுக்குள் ஏதோ பேசிக் கொள்ளத்தொடங்கினார்கள்.

கண்காட்சி அறையில் மக்களின் குரலை வெளிப்படுத்து பவள் போல் கன்யா பேசிக்கொண்டிருந்தாள். அங்கேயிருந்த

சூழ்நிலை தூக்குமேடை போல் தோன்றிற்று. கலைஞர்கள் அனைவரும் வனகன்யாவின் கூற்றை ஆமோதித்துக் கொண்டிருந்தார்கள். கலைஞர்களை அவர்களுடைய கலைச்சிருஷ்டிகளைக் கழற்ற விடவில்லையானால், அடுத்த நாள் காலையில் எல்லாக்கலைஞர்களும் ஒன்று சேர்ந்து அந்தப் பெரிய மனிதர்களின் அநியாயத்தை எதிர்த்துத் தங்கள் குரலை எழுப்புவார்கள்; செய்தித்தாள்கள், பிரசார இதழ்கள் முதலியனவற்றின் மூலமாக அவர்களுடைய அகந்தையும் பகட்டும் அம்பலப்படுத்தப்படும் என்று எச்சரிகைவிடுக்கப்பட்டது.

''கூப்பிடு, போலீசைக்கூப்பிடு. யாரை வேண்டுமானாலும் கூப்பிடு. இந்தச்சித்திரங்கள் இந்த இடத்தைவிட்டு அகற்றப்பட்டே தீரும்! நாங்கள் இங்கிருந்து சித்திரங்களை எடுத்துப் போகத்தான் செய்வோம். இல்லையென்றால் எங்கள் பிணந்தான் இந்த இடத்தை விட்டுக்கிளம்பும்.''

பொங்கும் குரலில் கன்யா இவ்வாறு பேசிக்கொண்டிருந்த பொழுது, கர்னல் இரண்டு வேலையாட்களின் தோளில் ஒரு பெரிய ஏணியுடன் சிரித்துக் கொண்டே அங்கே வந்து சேர்ந்தான். அப்பொழுது சீமாட்டி போவதற்காக வெளியே கிளம்பியிருந்தார்கள். அவர்களுடன் பெரிய மனிதர்களும் கூட்டமும் போய்க் கொண்டிருந்தன. கர்னல் அவர்களைப் பார்த்தபடியே அறையில் நுழைவதற்கு முன்பு சீமாட்டியுடன் போகும் லாலாஜானகிசரணைக் குரலிட்டு அழைத்தவாறு ''லாலா! சித்திரங்களை எடுத்துப் போக விடும். இந்தப் போலீசார்களை வெளியே போகச்சொல்லும். இல்லையானால் உங்கள் மகிழ்ச்சியெல்லாம் பாழாகிவிடும். தேர்தலும் நின்று போய்விடும்'' என்று கூறினான்.

ராஜாசர் த்வாரகாதாசும், லாலா ஜானகிசரணும் விஷம் தோய்ந்த பார்வையுடன் பார்த்துக்கொண்டே போய்விட்டார்கள். கர்னல் அவர்கள் வீட்டு விபீஷணனைப்போல் ராமனுடைய படையுடன் சேர்ந்துகொண்டு விட்டான். கன்யா கலவரத்தையும், சினம் நிரம்பிய சூழ்நிலையையும் கட்டுப்படுத்தி அதற்கு ஒரு செயல் முறை உருவம் அளிப்பதற்காக அழகான ஏற்பாடு செய்து கொண்டிருந்தான். கழற்றப்படும் ஒரு சித்திரமும் கூட்டம் கூடியிருந்த அந்த அறையில் காணமற்போய்விடவோ, வீணாகிவிடவோகூடாது என்பதில் அவள் கவனம் செலுத்தியவாறு இருந்தாள்.

சித்திரங்களெல்லாம் கழற்றப்பட்டு விட்டன. போலீசோ, ஜானகிசரணின் ஆட்களோ தலையிடாமல் இருந்தார்கள். கலைஞர்களே கூலியாட்களைப் போல் சித்திரங்களைச் சுமந்து சென்றார்கள். ஜானகிசரணின் அறையை விட்டுக் கிளம்பும் பொழுது கர்னல் ''சகோதரர்களே! நாளை மாலை தாயியின் மாளிகையில் கண்காட்சித் திறப்பு விழா நடக்கும்!'' என்று அறிவித்தார்.

கண்காட்சியின் தோல்வியால் ஏற்பட்ட அவமானம் காரணமாக அகந்தை குன்றியவனுய்ச் சஜ்ஜன் அந்த இடத்தைவிட்டு ஓடி விட்டான்,

## 33

கர்னலின் வீட்டில் இரவு மூன்று மணிவரையில் கண்காட்சியை வெற்றிகரமாக நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. கன்யாவும் அங்கே இருந்தாள். கண்காட்சித் திறப்பு விழா மறுபடியும் நடத்தப்படவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. சிக்கன் கலே வேலேப்பாடு செய்யும் ஒரு ஏழைக் கைம்பெண்ணைக் கொண்டு அந்தக் கலைக்கண்காட்சித் திறப்பு விழா நடத்தப்படவேண்டும் என்ற முடிவு மாலையிலேயே கலைஞர்களுக் கிடையில் செய்யப்பட்டிருந்தது. சித்திரக்கலைஞர் மதன் இந்த ஆலோசனையை அளித்தார். தம்சித்திரக் கண்காட்சியைச் சென்ற ஆண்டு ஒரு சீமானேயோ, கவர்னரையோ, மந்திரியையோகொண்டு திறக்கச் செய்யாமல் லக்னௌவைச் சேர்ந்த பொம்மைகள் செய்யும் திரு. ரேவதீராமைக் கொண்டு தாம் திறக்கச் செய்த தாகவும், டாக்டர் ராதா கமல் முக்கர்ஜீ திறப்பு விழாச் சொற் பொழிவு ஆற்றியதாகவும், இந்தக் கண்காட்சிக்கும் அவ்வாறே ஓர் ஏற்பாட்டை ஏன் செய்யக்கூடாது என்றும் அவர் கூறினர். எல்லோருக்கும் சிறப்பாக — கர்னலுக்கும், கன்யாவுக்கும் இந்த ஆலோசனே மிகவும் பிடித்திருந்தது. அதுபோலவே திறப்புவிழா ஏற்பாடு செய்யப்பட்டது. பல்கலைக்கழகப் பேராசிரியர்களேயும், இலக்கியக்கர்த்தாக்களேயும், பத்திரிகை ஆசிரியர்களேயும் வேண்டிக் கொண்டு விழாவிற்கு அழைத்துவருவதாக நிச்சயிக்கப்பட்டது. ஏனென்ருல், ஜானகிசரண், சாளிக்ராம் முதலியோர் இன்றைய நிகழ்ச்சிக்கு நாளை பழிவாங்குவார்கள் என்று கர்னல் அறிந் திருந்தான்.

இரவில் கர்னலும் கன்யாவும் உட்கார்ந்து கொண்டு இதைப்பற்றி யெல்லாம் பேசிக்கொண்டிருந்தார்கள். கன்யாவின் உள்ளம் வேறு எங்கோ போய்க் கொண்டிருந்தது. அவள் அடிக்கடி சஜ்ஜனைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தாள். கர்னல் பேச்சுவார்த்தைக் கிடையில் இதை ஒரிருமுறை கவனித்தான். ஆனல் அவன் சாளிக்ராம் முதலியோருடன் போடப்போகும் சண்டைக்கு ஏற்பாடுகள் செய்வதில் மூழ்கியிருந்ததால் கன்யாவின் இந்த நிலையில் கவனம் செலுத்த அவனுக்கு நேரமில்லை. ஒவ்வொன்ருகத் திட்டங்கள் பேசப்பட்டுக் கொண்டிருந்தன. ஒலிக்கருவிகள் அமைக்கப்படவேண்டும்; மாளிகைக்குள் ஒன்றும், வாயிற்புறத்தில்

மற்றென்றும் கட்டப்படவேண்டும். பெரிய பெரிய மனிதர்கள், பேராசிரியர்கள், இலக்கியக்கர்த்தாக்கள், பெரிய பெரிய வக்கீல்கள் பாரிஸ்டர்கள், நீதிபதிகள், டாக்டர்கள் முதலியோருடைய சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்யப்படவேண்டும். இந்தக் கண் காட்சியைப் பற்றி அவர்கள் வெளியிடும் கருத்துக்களால் பொது மக்களிடையே நல்ல கருத்து உண்டாகும். இடையிடையில் பஜனை ரெகார்டுகள் போடப்படும் என்றெல்லாம் ஏற்பாடுகள் செய்யப் பட்டன. கர்னலுக்குத் திடீரென்று ஒரு புதுயோசனை தோன்றிற்று.

''பின்னே! ஒரு பெரிய யோசனை தோன்றிவிட்டது. நாளை, நாளை மறுநாள், அதற்கடுத்தநாள் மூன்று நாட்களும் கண்காட்சி நடக்கும். மூன்று நாட்களும் நான் குழந்தைகளுக்கு இனிப்புப் பண்டங்கள் கொடுக்கிறேன். அதிகம்போனல் ஆயிரம் தொன்னைகள் ஒவ்வொரு நாளும் வழங்க வேண்டியிருக்கும். ஐந்நூறு, அறுநூறு ரூபாய் செலவாகும். செலவாகட்டுமே! நான்கு பெரிய மனிதர்களுக்கு இனிப்புப் பண்டம் கொடுத்தால் யார் பார்க்கப் போகிறார்கள்? குழந்தைகள் இனிப்புப்பண்டம் சாப்பிட்டால் தெருத் தெருவாகப் புகழ்பாடுவார்கள். நம்மிடத்தில் இப்படிப் பட்டத்திட்டங்கள் தாம் உண்டு...நீ என்ன யோசிக்கிறாய், பின்னே?'' என்று கேட்டார்,

''ஒன்றும் யோசிக்கவில்லையே! நான் உங்கள் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தேன். ஐயாயிரம், ஆறாயிரம் குழந்தை களுக்கு இனிப்புப் பண்டங்கள் அளிப்பது சரிதான், ஆனல் இவ்வளவு செலவு...''

''கேள், பின்னே! சஜ்ஜனைப் பற்றிக் கவலைப்பட வேண்டிய தேவையில்லை. அப்படி ஏதாவது இருக்குமானல் நான் இப்படிப் பேசாமல் உட்கார்ந்திருப்பேனு? நான் அவனைப்பற்றி உனக்கு முழுவதும் கூறமுடியும். கண்காட்சியிலிருந்து ஓடி ஒளிந்தான் அவன். உள்ளத்துக்குள்ளேயே வெந்து போயிருப்பான். சிறிது நேரம் பக்ஷிகுளத்தருகிலுள்ள சாலையில் வேகமாகக் காரை ஓட்டியிருப் பான். அதற்குப் பிறகு வீட்டுக்குப்போய் எல்லா வேலைக்காரர் களையும் ஏதாவதொரு சாக்கைக் கொண்டு திட்டிவிட்டு நன்றாகக் குடித்திருப்பான்!...ஆமாம். அவன் எப்பொழுதாவது குடிப்ப துண்டு. இதுதான் அவனிடம் ஒரு கெட்ட பழக்கம். உண்மை என்ன தெரியுமா, பின்னே! அதிக வயது வரையில் திருமணம் செய்துகொள்ளாமல் இருப்பதை நான் எதிர்க்கிறேன். அதனல் பல தீமைகள் உண்டாகின்றன. சஜ்ஜனிடத்திலும் சில தீமைகள் தோன்றியிருக்கின்றன. தீய பழக்கம் யாரிடந்தான் கிடையாது, பின்னே? அதனல் நீ வருத்தப்படக்கூடாது!''

''அப்படியொன்றுமில்லை. எனக்கு அவரிடம் எந்தத் தவறான

எண்ணமும் கிடையாது. ஆமாம், நீங்கள் ஐயாயிரம், ஆறுயிரம் குழந்தைகளுக்கு இனிப்புப் பண்டங்கள் தருவதாக ..''

கர்னல் சிரித்துக்கொண்டே, ''ஐயாயிரம், ஆறுயிரம் குழந்தைகளுக்கு இனிப்புப் பண்டங்கள் கொடுக்கத்தான் போகிறேன். ஆனால் இப்பொழுதில்லை; உன் திருமணத்தன்று. இப்பொழுது ஆயிரம் தொன்னைகள் தருவதாகத்தான் திட்டம்'' என்றான்.

இவ்வாறு பேசிக் கொண்டிருந்த பொழுது ஃபோன்மணி அடிக்கத் தொடங்கிற்று. இரத்தின வியாபாரி ஜகத்சந்த் ஹரக்சந்த் ஃபோன் செய்தார். ''ராஜா சாஹேப் கர்னலிடமும் சஜ்ஜனிடமும் மிகவும் கோபமாக இருக்கிறார். சிறிது நேரத்திற்கு முன்பு அவருடைய வீட்டில் சில முக்கியமான மனிதர்களின் கூட்டம் ஒன்று நடந்தது. சாளிக்ராமும், ஜானகிசரணும் அங்கே இருந்தார்கள். உங்களுடைய நடத்தை சரியில்லை என்றும் நீங்கள் ஒரு கம்யூனிஸ்ட் பெண்ணை உங்களுடன் வைத்துக் கொண்டிருப்பதாகவும், நீங்கள் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்திருப்பதாகவும், உங்கள் மீது குற்றம் சாட்டப் பட்டது. ஆகையால் நாளை உங்கள் கண்காட்சி நடக்கும் பொழுது லாலா ஜானகிசரணின் வீட்டு மேடையில் ஒலி பெருக்கிக் கருவி அமைத்து, முறைப்படி நான்கு பெரிய மனிதர்களைக் கொண்டு உங்கள் தீய நடத்தையைப்பற்றி பொது மக்களுக்கு அறிவிக்கப் படும்'' என்று அவர் தெரிவித்தார். சில நாட்களுக்கு முன்பு சஜ்ஜனின் அறைவழியாக அந்தப் பகுதியில் நடந்த காதல் நிகழ்ச்சியைப் பற்றியும் பறை சாற்றப்படும். ராஜா சாஹேப் இந்தத் திட்டத்துடன் சேர்ந்திருப்பதால் பொது மக்களிடம் அதற்கு மதிப்பு ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. ராஜா சாஹேப் கூட்டத்திற்கு வரமாட்டார். ஆனால் அவர்தாமே பல இரத்தின வியாபாரிகளுக்கும் பெரிய மனிதர்களுக்கும் ஃபோன் செய்திருக்கிறார் என்றும் கர்னலுக்குத் தெரிவிக்கப்பட்டது.

கர்னல் மிக்க அமைதியுடன் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தான். கடைசியாக அவன், ''பாருங்கள் ஜகத்சந்த்! எங்கள் உள்ளத்தில் என்ன இருக்கிறது என்பது ஆண்டவனுக்குத்தான் தெரியும். என் உள்ளத்தில் அந்தப் பெண்ணைப்பற்றி தீய எண்ணம் இருந்தால் ஆண்டவன்கூட என்னை மன்னிக்கமாட்டார். நான் தீமையைக் கண்டு அஞ்சுபவன். ஆனால் கெட்ட பெயரைப்பற்றி அஞ்சுபவனல்ல'' என்று கூறினான்.

நிலைமை முற்றிப் போய்விட்டது. கன்யாவிடம் கர்னல் எல்லா விஷயங்களையும் கூறவிட்டாலும் அவளுக்கு நிலைமை நன்றாகப் புரிந்துவிட்டது. கன்யாவின் முகம் கோபத்தாலும் சிவந்தது. ''ஆண்டவன் செய்வதெல்லாம் நன்மைக்கே. இந்தத் தடவை ராஜா சாஹேபின் ஜாதகத்திலும் அவர் அவமானப்படவேண்டும்

என்று எழுதப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இது வரை தலைவரென்று சாளிக்ராம் காட்டிக்கொள்ளும் பகட்டை எதிர்ப்பதாக முடிவு செய்திருந்தேன். இப்பொழுது ராஜா சாஹேபின் பணப் பகட்டையும் அழித்துவிடுகிறேன். நம்மவர்கள் நேர்மையானவர்கள். அவர்கள் நடத்தையும் நேர்மையாகத்தான் இருக்கும். பின்னே! இதுதான் நமது வெற்றி. இவர்களோ ஊசி நுழைய முடியாத இடத்தில் கோடாலி நுழைக்க முயலுகிறார்கள். நான் இதுவரை இம்மாதிரியான முட்டாள் தனமான வேலை செய்ததில்லை. டாக்டர் நோயாளியை நன்றாகப் பரிசோதனை செய்து மருந்து எழுதிக்கொடுப்பது போல், நானும் மனிதனைப் பற்றி நன்றாக ஆராய்ந்த பின்னரே அவன் போக்கில் நடக்க நினைப்பது வழக்கம். நான் இப்பொழுது என்ன செய்யப் போகிறேன் தெரியுமா? நாளைக் காலையில் உன்னையும் உன் அண்ணியையும் பெரிய மனிதர்களுடைய வீட்டிற்குக் கண்காட்சிக்கான அழைப்பு கொடுப்பதற்காக அனுப்பப்போகிறேன்''.

"நான் என்னசொல்லட்டும்? இந்தச் சஜ்ஜன் இவவளவு உதவாக்கரையாக ஆகிவிட்டான். நான் மஹிபாலைக் காலையிலேயே தந்தி அடித்துக் கூப்பிட்டு விடுகிறேன். பின்னே! நான் உனக்கு என் உள்ளக்கருத்துக்கள் எல்லாவற்றையும் கூறுகிறேன். நீ என் பெயரில் ஒரு கட்டுரை தயாரித்து வெளியிட்டு விடு'' என்று கர்னல் சிரித்துக் கொண்டே கூறினான்.

கன்யா தன் எண்ணத்தில் மூழ்கியிருந்தாள். அவளுடைய வாழ்க்கை ஓடம் மறுபடியும் பாறைகளோடு மோதும் நிலைக்குக் கொண்டு வரப்பட்டு விட்டது. அவள் அப்பொழுது சஜ்ஜனை இழந்துவிட்டதாகவும், சஜ்ஜனின் வருகை அவளுடைய வாழ்க்கைக்கு ஒரு சாபக்கேடாக அமைந்ததாகவும், ஆதாரமற்ற ஒருவனைப் பற்றி அது வரை பெருமைப்பட்டுக் கொண்டிருந்ததால் எவ்வளவு பெரிய ஏமாற்றம் ஏற்பட்டுவிட்டது என்றும் அவளது உள்ளம் எண்ணிக் கொண்டிருந்தது.

*  *  *  *

கண்காட்சியுடன் நடத்தப்பட்ட பெண்களின் விழாவிற்கு ஏற்பட்ட வெற்றியால் ராஜாசாஹேப், பாபு சாளிக்ராம், லாலா ஜானகிசரண் மூவரும் அவமானப்பட்டுப் போனார்கள். ஜனசங்க், பிரஜா சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட் முதலிய எதிர்க்கட்சிகளைச் சேர்ந்த ஒலி பெருக்கிக் கருவிகளுக்கு, காங்கிரசுக்கு எதிராகப் பிரசாரம் செய்ய ஒரு புதிய வாய்ப்பு கிடைத்துவிட்டது! வனகன்யாவின் தந்தை கைது செய்யப்பட்டது, வனகன்யாவும் சஜ்ஜனும் மதுராவுக்குச் சென்று சான்றுகள் சேகரித்தது பற்றிய விசித்திர

மான கதை (இதுபற்றி சஜ்ஜனுக்கும் கன்யாவுக்கும் எதுவுமே தெரியாது!) முதலியன பற்றி எதிர்க்கட்சிக்காரர்கள் பிரசாரம் செய்யலானார்கள். வதந்திகளின் உலகில்—தேர்தல் சூழ்நிலையில் சஜ்ஜனும் வனகன்யாவும் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்தி ரண்டாம் ஆண்டைச் சேர்ந்த லைலா—மஜ்னுவாக ஆக்கப்பட்டு விட்டார்கள்! கர்னலின் ஒலிபெருக்கிக் கருவியும், அரசியலோடு அவர்களுக்கு எவ்விதத் தொடர்பும் கிடையாது என்று தெருத் தெருவாக அறிவித்துக் கொண்டிருந்தது. ''நாங்கள் பெண்கள் பேரில் இழைக்கப்படும் கொடுமைகளை எதிர்க்கிறோம். இந்தத் தேர்தல் அமளியில் நாங்கள் எங்கள் உணர்வைப் பாதுகாக்க விரும்புகிறோம். இந்தத் தேர்தலின் குறிக்கோளைக் கடைப் பிடிக்குமாறு நாங்கள் மக்களிடம் கேட்டுக் கொள்கிறோம்'' என்றும் அறிவிக்கப்பட்டது.

மூன்றாவது நாள் சாளிக்ராமின் பிரசாரப் போக்கு மாறிவிட்டது. அந்தப் பகுதியில் பிரசாரத்திற்காக வந்த இரண்டு மந்திரிகளின் கார்களை மறித்து மக்கள் அவர்களைத் திட்டத் தொடங்கினார்கள். நிலைமை மோசமாகத் தொடங்கிற்று.

சேட்ரூப்ரத்தனும் ஒரு மந்திரியும் சேர்ந்து கர்னல், சஜ்ஜன் பாபு சாளிக்ராம், லாலா ஜானகிசரண் நான்கு பேரையும் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்வதற்காக அழைத்திருந்தார்கள். சஜ்ஜன் மிகவும் உடைந்துபோயிருந்தான். சித்திரக் கண்காட்சி, பெண்கள் விழா வாக மாறியதிலிருந்து அவன் அங்கேயும் போக நேரவில்லை; அவன் முற்றும் விடுபட்டிருந்தான். சித்ராவைக் கொண்டு அவன் தனது உண்மை நிலையையே மறைக்க முயன்றதால் அவனுடைய உணர்வே மரத்துப்போயிருந்தது. உள்ளத்து வேதனையால் அவன் உணர்வற்றுப் போயிருந்தான். சித்ராவின் கடுஞ் சொற்களால் அவன் உள்ளம் வெந்து கல்லைப்போல் மாறியிருந்தான்! இரண்டு நாட்களாக மிகவும் நெருங்கியிருந்த பழைய வேலையாட்கள்கூட அவனுடைய அறைக்குள் போவதற்கு அஞ்சினார்கள். ஏனென்றால், அப்பொழுது அவர்களுடைய எஜமானன் யாரையும் கோபித்துக் கொள்ளாமல் இருந்தான். அவன் எந்தப் பொருளும் கொண்டு வரும்படி கட்டளையிடுவதில்லை. மது, சிகரெட்கூடக் கேட்பதில்லை. தேநீர், காபிகூடக் குறைந்துவிட்டது. பெரும்பாலான நேரமும் அவன் கல்லைப்போலவே உட்கார்ந்து கொண்டு கழித்து வந்தான். சில நேரம் அவனுடைய உதடுகள் மட்டும் அசைந்தன. அவனுடைய வீட்டுக் கணக்குப்பிள்ளை கர்னலின் கடைக்குப்போய் எல்லா நிலைமைகளையும் கூறினார். கர்னல் விழாவில் ஈடுபட்டிருந்த தால் சஜ்ஜனைச் சந்திக்க முடியவில்லை. கர்னல் அவருக்கு ஆறுதல்

அளித்து, ''ஒய்வு கிடைத்ததும் நான் வருகிறேன். பயப்பட வேண்டிய அவசியமில்லை'' என்று கூறினான்.

''வேறு எந்த பயமுமில்லை. ஆனால் அவருடைய மேசையில்—'' என்று கணக்குப்பிள்ளை கூறினார்.

''நீங்கள் அறையை நன்றாகக் கவனித்துக்கொள்ளுங்கள்.''

''கவனித்துக் கொள்ளுகிறேன். ஆயினும்—''

''நீங்கள் கவலை இல்லாமல் செல்லுங்கள். விதியை யாராலும் அறிய முடியாது. ஆனால் சஜ்ஜன் தன்னைத்தானே அழித்துக் கொள்ள மாட்டான் என்றுமட்டும் எனக்கு நன்றாகத் தெரியும்.''

கர்னலின் வண்டி கன்யாவைப் பகல் பத்து மணிக்குச் சஜ்ஜனின் மாளிகைக்கு கொண்டு சேர்த்தது.

கன்யா அறைக்குள் நுழைந்தாள். எதிரில் சஜ்ஜன் சோபாவில் உட்கார்ந்து கொண்டு சிகரெட் குடித்துக் கொண்டிருந்தான். கதவு திறந்ததும் அவன் கன்யாவைப் பார்த்துத் திடுக்கிட்டான். திடீரென்று வெளிச்சம் பட்டதும் திருடன் கையும் களவுமாகப் பிடிபட்டுவிடும் பொழுது திடுக்கிடுவதுபோல் இருந்தது. அவனது நிலையும், திடுக்கிட்டு அவன் குற்றவாளியைப்போல் தன் சிகரெட்டை கைக்குள் மறைத்துக்கொள்ள ஆரம்பித்தான். அவனுடைய உள்ளங்கை சுட்டுவிட்டது. அப்பொழுதுதான் அவனுக்கு உணர்வு வந்தது. கன்யா மிகவும் தெளிவுடன் சிரித்துக்கொண்டே வந்தாள். அவள் அருகில் வந்து தன் கோட்டை அவனுடைய மடியில் போட்டவளாய், ''இன்று கலைஞர் எந்தக் கலை உணர்வில் இருக்கிறார்?'' என்று கேட்டாள். அவள் தனது ஐந்து விரல்களாலும் சஜ்ஜனின் உலர்ந்து போன அவனது கேசத்தைப் பிடித்துக்கொண்டு கண்களோடு கண்களை இணைத்துப் புருவங்களைச் சுளித்துக்கொண்டு கூறத் தொடங்கினாள்: ''இதோ பாருங்கள், உங்களுடைய இந்தக் கலைஞர் போக்கை இனிமேலும் நான் பொறுத்துக்கொள்ள மாட்டேன். நீங்கள் எனக்காகக் கொஞ்சம் விட்டுக் கொடுங்கள். நானும் உங்களுக்காகக் கொஞ்சம் விட்டுக் கொடுக்கிறேன். அப்பொழுதுதானே ஒத்துப்போகலாம். சொல்லுங்கள் ஒப்பந்தம் செய்துகொள்ளலாமா?''

சஜ்ஜனின் கண்கள் கன்யாவின் கண்களை முதலாவதாகச் சந்திக்க நேர்ந்தபொழுது மிகவும் தயங்கின. இருவரும் கண்களென்ற தெர்மாமீட்டரில் தங்களது உஷ்ணத்தை அளந்து கொண்டிருந்தார்கள். சஜ்ஜனின் சஞ்சலமடைந்த உள்ளம் கன்யாவின் கண்களில் தனது உறுதியை ஆராய்ந்து கொண்டிருந்தது. கன்யாவின் கண்களும் சஜ்ஜனின் பயம் நிறைந்த சாதுவான, பிடிவாதம் நிறைந்த கண்களில் தனது உறுதியை அளந்து கொண்டிருந்தன. கன்யா சிறிது நகர்ந்தவளாய், ''இந்த மூன்று

நான்கு நாட்களில் ஒரு விநாடிகூட உங்களை மறக்காமல் இருந்த போதிலும் எப்பொழுதும் வேலை இருந்ததால் மறந்தவளாக இருந்தேன்; உங்களுடைய போக்கு என்னை முதலில் திடுக்கிட வைத்தது. ஆனால் இந்த விழாவும் சமுதாயப் போட்டியும் சேர்ந்துகொண்டு எனக்குப் புத்துயிர் அளித்துள்ளன. நாம் ஒரு லட்சியத்துக்காகப் பெரிய சிக்கலை எதிர்த்திருக்கிறோம்'' என்று கூறினாள்.

வனகன்யா வேதனை நிறைந்த சஜ்ஜனின் உள்ளத்தில் எதிர் பாராமல் புரட்சியை உண்டாக்கி விட்டாள். அவளுடைய ஒவ் வொரு சொல்லும் இரண்டு நாட்களாக வேதனையுடன் பொருமிக் கொண்டிருந்த அவனுடைய உள்ளத்திற்குப் புதிய ரோஜா மணம் நிறைந்த காற்று வீச்சுப்போல் அமைந்தது. அவள் வருணிக்கும் நிகழ்ச்சியைச் சேர்ந்த தலைவர்களில் அவனுக்குத்தான் இடம் உண்டு. இந்த எண்ணத்தால் சஜ்ஜனின் துன்புற்ற உள்ளம் மகிழ்ச்சியடைந்தது. கன்யா தொலைவு என்ற திரையை அகற்றி விட்டு மறுபடியும் அருகில் வந்தாள்.

''சஜ்ஜன்! இன்று நான் இரண்டு மணி நேரம் ஓய்வாக இருக் கும் எண்ணத்துடன் வந்திருக்கிறேன். முதலில் நாம் சிறிது சிற்றுண்டி சாப்பிடுவோம். பின்னர் ஒரு மணி அல்லது ஒன்றரை மணி நேரத்துக்குப்பிறகு சாப்பிட்டுவிட்டு நான் போய் விடுகி றேன்'' என்று கன்யா கூறினாள்.

''அப்படியானால் கொண்டுவரச் சொல்லேன்.''

''இல்லை, நான் அன்றையதினத்திலிருந்து உங்களுடைய வேலை யாட்களுக்குக் கட்டளை இடுவதில்லையென்று சபதம் செய்திருக் கிறேன்.''

சஜ்ஜன் வேகமாக எழுந்தான். மேசைக்குக் கீழே தொங்கிக் கொண்டிருந்த மணியை எடுத்து ஸ்விச்சை அழுத்திக்கொண்டே ''நான் அதற்காக—'' என்று கன்யாவைப் பார்த்தவாறு கூறினான்.

கதவு திறந்தது. சஞ்கித்சிங் துண்டைத் தோளில் போட்டவாறு கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தான்.

''டாகுர்! இன்றிலிருந்து இந்த வீடு இவர்களுடையது. என் னுடையதுமில்லை; வேறு யாருடையதுமில்லை தெரிந்ததா?'' இவ் வாறு கூறும் பொழுது சஜ்ஜனின் முகத்திலும் நரம்புகளிலும் நடுக்கம் காணப்பட்டது. மது அருந்தியவன்போல் அவனுடைய உடல் முழுவதும் நடுங்கிக் கொண்டிருந்தது. சஜ்ஜன் தன்னை மிகவும் அடக்கி வைத்துக்கொண்டான. ஆனாலும் தவறாக மணி யடிக்கும் 'ஸ்விச்' அவன் கைப்பிடியில் இருந்ததால் அது வெளியே வெகு நேரம்வரை அடித்துக் கொண்டேயிருந்தது. அதை உணர்ந் தும் டாகுர் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால் அவனுடைய

முகக் குறிப்பால் கன்யாவின் கவனம் மணிச்சத்தத்தின் பக்கம் சென்றது. அவள் சஜ்ஜனிடம் சிரித்துக்கொண்டே, "இப்பொழுதாவது அந்த மணியின்மீது கருணைகாட்டுங்கள்" என்று கூறினாள்.

அதற்குள் எஜமானனின் மணிச் சத்தத்தைக் கேட்டு ஆறு வேலையாட்கள் வந்துவிட்டார்கள். சஜ்ஜனுக்குத் தன்னை மறந்து நின்ற நிலையை எண்ணிச் சிரிப்பு வந்தது. வேலைக்காரர்களின் நிலை விசித்திரமாக இருந்தது. ஆனாலும் எஜமானர் மறுபடியும் மனிதராக ஆனதையும், அந்த வீட்டிற்கு உண்மையான ஓர் எஜமானி வந்துவிட்டதையும் அறிந்து அவர்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. சஜ்ஜன் வேலைக்காரர்களைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, "நல்லது, நீங்கள் வந்துவிட்டதால் உங்களுக்குப் பரிசு கிடைக்கும். இந்த மாதத்தில் எல்லோருக்கும் இரண்டு மடங்குச் சம்பளம் கிடைக்கும் பரிசாக. இனிமேல் இவர்களுடைய கட்டளைப்படி நடக்கவேண்டும்" என்று கூறினான்.

கன்யாவின் கம்யூனிஸ்ட் உள்ளத்திற்கு அந்த வேடிக்கை பிடிக்கவில்லை. அதற்குள் சஜ்ஜன் கன்யாவைப் பார்த்துப் புன்முறுவலுடன், "இப்பொழுது கட்டளையிடுங்கள்" என்று கூறினான்.

வாழ்க்கையின் புதுச் சூழ்நிலையில் புதுவேலை செய்யும் பொழுது வனகன்யாவுக்கு மிகவும் வெட்கம் மூண்டது. அவளுடைய கன்னம் சிவந்தது. அவள் சஜ்ஜனிடம், "என்ன வேடிக்கை செய்கிறீர்கள்! நீங்களே சொல்லுங்கள்" என்று கூறினாள்.

எல்லோருக்கும் எதிரில் சஜ்ஜன் பிடிவாதமாகத் தலையை ஆட்டிக்கொண்டு, "முடியாது, நீதான் சொல்ல வேண்டும்." என்று கூறினான்.

மிகவும் கஷ்டத்துடன் கன்யா வேலையாட்களைப் பார்த்தும் பார்க்காமலும் கூறினாள்: "ஏதாவது கொஞ்சம் சிற்றுண்டி கொண்டு வாருங்கள், சாப்பாடு ஒன்று அல்லது ஒன்றரை மணிக்குப் பிறகு."

"என்ன என்ன வேணுங்க?"

கன்யாவுக்குப் பெரிதும் கஷ்டமாகப் போய்விட்டது, "இன்று நீங்கள், உங்கள் விருப்பப்படி சாப்பாடு தயாரியுங்கள். நான் ஒன்றரை மணிக்கு இங்கிருந்து போவேன் என்பதை மட்டும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்."

வேலைக்காரர்கள் அறையைவிட்டு வெளியே போனார்கள். சஜ்ஜன், கன்யா இருவரும் ஒருவரையொருவர் புதுப் பார்வையுடன் பார்த்தார்கள். சஜ்ஜன் அப்பொழுதுகூடத் தன்னை முழுவதும் சமாளித்துக்கொள்ள முடியாமல் இருந்தான். ஆனாலும் கன்யாவுடன் தன்னுடைய தொடர்பை அறிவித்துப் புது வாழ்வில் நுழையும் பொழுது தனக்கு மறுபடியும் உறுதியான ஒரு பிடிப்புக்

கிடைத்ததாக அவன் உணரலானான். தனது விபரீதமான பிடிவாதத்திற்குச் சித்ராவிடமிருந்து கிடைத்த எதிர்ப்பினால் அவனது உள்ளம் உணர்வற்ற நிலையை அடைந்திருந்தது. இப்பொழுது அந்த நிலை மாறிக்கொண்டிருந்தது. சஜ்ஜனின் உள்ளத்தில் மகிழ்ச்சி பரவிற்று. அவன் எச்சரிக்கையுடன் இருந்தான். சிறிது சிறிதாக அவன் உள்ளம் அமைதியடைய ஆரம்பித்தது.

அன்று இரவில் சேட்ரூப்ரத்தன் சாளிக்ராமுடனும், ஜானகி சரணுடனும் ஒப்பந்தம் செய்துகொள்வதற்காகச் சஜ்ஜனையும், கர்னலையும் அழைத்திருந்தார். ஒரு மந்திரியும் அங்கே இருப்பதாக இருந்தது. அவர்கள் சந்திக்கும் பொழுது வனகன்யாவும் இருக்க வேண்டும்; அவளுடைய கருத்து மிகவும் தேவையானதாகும் என்று கர்னல் கூறினான். கர்னலின் இந்த நிபந்தனையைச் சேட்ரூப் ரத்தன் ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது.

சஜ்ஜனின் அந்த நாள் மிகவும் நல்ல முறையில் கழிந்தது. கன்யா சென்ற நான்கைந்து நாட்களின் அநுபவங்களைத் தெரிவித்தாள். எப்படிப்பட்ட வீடுகளிலெல்லாம் அவள் கண்காட்சிக்கு அழைப்பதற்காகச் சென்றாள், அவள் அந்த வீடுகளுக்குள் என்ன என்ன கண்டாள் என்றெல்லாம் கூறினாள். திருவிழாவுக்கு வந்த பெண்களின் பேச்சுக்கள், அவர்களுடைய நடத்தையால் கன்யாவுக்குக் கிடைத்த அநுபவங்கள் முதலியவற்றையெல்லாம் கேட்கும் பொழுது மெய்மறந்த ஒரு சூழ்நிலை பரவியிருந்ததால் சஜ்ஜனுக்குத் தான் செய்த பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்யக்கூட வாய்ப்புக் கிடைக்கவில்லை. கன்யா மிகவும் உற்சாகம் நிரம்பியவளாக இருந்தாள். அநுபவங்களைக் கூறும்பொழுது தன்னையே மறந்து போய்விட்டாள். அவள் ஏதோ ஒரு கனவுக்கு உருக்கொடுத்துக் கொண்டிருந்தாள். இதைப் பார்க்கும் பொழுது சஜ்ஜனுக்கு அவளிடம் பெரிதும் மதிப்பு ஏற்பட்டது. போகும் பொழுது கன்யாவின் இடது கை மூன்றாம் விரலில் ஒரு வைர மோதிரம் ஒளிவிட்டுக்கொண்டிருந்தது. கன்யா சென்றுவிட்டபிறகு சஜ்ஜன் வெகுநேரம் வரை மெய்மறந்து உட்கார்ந்திருந்தான். அவனுக்கு, பாபா ராம்ஜீயின் நினைவு வந்தது. சிறிது தயங்கினான். பின்னர் பிடிவாதமாக அவரிடம் போவதாக அவன் நிச்சயித்தான்.

மாலை வெயில் கோமதி நதிக்கரையில் பரவிக்கொண்டிருந்தது. பாபாஜீயின் பைத்தியங்கள் லங்கோடு கட்டிக்கொண்டு ஓடிக்கொண்டிருந்தன. பாபாஜீ ஆற்றங்கரையில் இரண்டு கொட்டகைகளுக்கு நடுவில் திறந்த வானத்திற்கும், திறந்த பூமிக்குமிடையே நின்றுகொண்டு அவர்கள் ஓடுவதைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

ஆற்றங்கரையை அடைந்து பாபாஜீக்கு எதிரிலே செல்வது

சஜ்ஜனுக்குப் பெரிதும் கஷ்டமாக இருந்தது. பின்னர் அவன் மேலே நடக்க ஆரம்பித்தான். பாபா ராம்ஜீ அவனைப்பார்த்து விட்டார். பொக்கை வாயால் சிரித்துக்கொண்டே அவர் இரண்டு கைகளையும் விரித்தார். அவருடைய பாதங்களை அவன் தொடு வதற்கு முன்னமே, அவர் அவனை அணைத்துக் கொண்டார்.

''எனக்கு இப்பொழுது கோடிக்கணக்கான ரூபாய் கிடைத்து விட்டது போல் இருக்கிறது, தம்பி. பல நாட்களாக உன்னை எதிர்பார்த்திருக்கும்படிச் செய்து விட்டாயே!''

பைத்தியங்களின் உடற்பயிற்சி, பிரார்த்தனை, அவர்களுக்கு மருந்து கொடுப்பது முதலியவற்றை முடித்துக்கொண்டு கவலை யற்றவராய்ப் பாபாஜீ அவனுடன் பேசத் தொடங்கினார். வெகு நேரம் வரை அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். ''ராம்ஜீ பச்சாத்தாபத்தை விடச் சிறந்த வைத்தியம் எதுவுமே கிடையாது. உனக்கு ஒரு விதமான அநுபவம் கிட்டியிருக்கிறது என்று ஏன் எண்ணக் கூடாது? இனி அந்த அநுபவத்தைக் கொண்டு பயன் அடை. எதற்காக வருந்துகிறாய்? கழிந்ததை மறந்து வரப் போவதை நினை!'' என்று அவர் கூறினார்.

அவன் போகும்பொழுது பாபாஜீ ''ராம்ஜீ! யார் என்ன வேண்டுமானாலும் கூறட்டும்; ஆனால் நான் இந்த உலகை மாயை பொய் என்றெல்லாம் கருதுவதில்லை. ஆண்டவன் உண்மை யென்றால் அதை வெளிப்படையாக அநுபவி. பொய் இடையில் வருமானால் அதை எதிர்த்துப் போராடு'' என்று அவனிடம் கூறினார்.

''அப்படியே ஆகட்டும்'' என்று கூறி சஜ்ஜன் பாபாஜீயின் பாதங் களைத்தொட்டு உறுதி கொண்டான். அவனுடைய உள்ளம் அமைதியடைந்தது. அவன் தன் உள்ளத்துத் தீமைகளை யெல் லாம் கூறி, தூய்மையடைந்தான். அவனுக்கு வழி கிடைத்து விட்டது. சித்ராவைப்பற்றி பாபா அவனுக்கு ஆலோசனை அளித்த வாறு, ''அவளுக்கு எங்கேயாவது நல்ல இடத்தில் திருமணம் செய்துவை. அல்லது அவள் ஏதாவது வேலை செய்யக் கூடுமானால் அவளை அந்த வேலையைச் செய்யத் தூண்டு. அவள் வாழ்க்கைச் செலவுக்குப் பணம் கொடுத்துவிடு. வேலை செய்யாவிட்டால் ஒன்றும் கொடுக்காதே! சோம்பேறியிடம் கருணை காட்டுவது மனிதத்தன்மையாகாது, ராம்ஜீ!'' என்று கூறினார்.

சஜ்ஜன் மாலையில் தாயியின் வீட்டிற்குச் சென்றான். வீட்டிற்குள் பெண்கள் கூட்டமாக இருந்ததால், வர்மாவின் வீட்டுத் தாழ்வா ரத்தில் நாற்காலியைப் போட்டுக்கொண்டு கர்னல் உட்கார்ந் திருந்தான். சஜ்ஜனும் அங்கே போய் உட்கார்ந்தான். தெரு வழி யாகப் பெண்கள், குழந்தைகள் முதலியோர் சத்தம் போட்டுக்

கொண்டு வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருந்தார்கள். கர்னல் சஜ்ஜனிடம், "விழா மிக விமரிசையாக நடந்து கொண்டிருக்கிறது. கன்யா மிகவும் சாமர்த்தியமாக எல்லா ஏற்பாடுகளையும் கவனித்துக்கொண்டிருக்கிருள்; கண்காட்சியில் வேலைப்பாடமைந்த பல போர்வைகள், தலையணைகள், கைக்குட்டைகள் முதலியன விற்கப்பட்டிருக்கின்றன; பெண்கள் தேநீர், வெற்றிலை, சாட், நிலக்கடலை முதலியவற்றின் கடைகள் போட்டிருக்கிருர்கள், கன்யா பல இளம் பெண்களின் தலைவியாகி விட்டாள். பத்துப் பெண்கள் இடையருது எச்சிலைகள் முதலியவற்றை எறியும் வேலையைச் செய்கிருர்கள். மூடியிருந்த ஓர் இடத்தில் இவ்வளவு கட்டுப்பாடற்ற கூட்டம் இருந்தும் வீட்டிற்குள் அசுத்தமே இல்லாமலிருக்கிறது. பெண்களின் ஆட்டம், பாட்டு, சிறு சிறு நாடகங்கள் முதலியனவும் நடந்து கொண்டிருந்தன; கண்காட்சியில் நடந்த விற்பனையாலும் பலருக்கு உற்சாகம் தோன்றியிருக்கிறது" என்றெல்லாம் கூறினன். மேலும் உற்சாகத்துடன் கர்னல் விரைவிலேயே மறுபடியும் இப்படிப்பட்ட ஓர் ஏற்பாட்டை அமீனுபாதில் நடத்தப் போவதாகவும், வீட்டிற்குள்ளேயே அடைபட்டுக் கொண்டு வாழ்க்கை நடத்திக்கொண்டிருக்கும் பெண்களுக்கு இப்படிப்பட்ட ஏற்பாடுகளால் மகிழ்ச்சியும், ஒரு புத்துணர்ச்சியும் கிடைக்கிறது என்றும் கூறினன். சஜ்ஜன் மிகவும் மகிழ்ச்சியுடன் அதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தான்.

அவன் கன்யாவை மணம் செய்துகொள்வதுபற்றியும் பேசினன். கர்னல் பண்டித் சிவநாத் சாஸ்திரியைக் கொண்டு நல்லநாள் பார்த்து இந்த முகூர்த்தத்திலேயே திருமணம் செய்து வைப்பதாகக் கூறினன்.

எட்டு மணிக்கு, கர்னலும் சஜ்ஜனும் வீட்டிற்குள் சென்றபொழுது அங்கே கன்யா இருந்தாள். எல்லோருடைய வாழ்க்கையும் மாறிவிட்டது. இரவில் சேட் ரூப்ரத்தனின் வீட்டில் கர்னல், சஜ்ஜன், பாபு சாளிக்ராம், மந்திரி ஒருவர் ஆகியோர்கள் கூடினர்கள். சேட் ரூப்ரத்தன் இந்த முறை தேர்தலுக்கு நிற்கவில்லை; அவர் தம் தொழிலை வளர்ப்பதற்கு இந்த ஆண்டு அமெரிக்கா போய்ச் சில புது இயந்திரங்களுக்கு ஏஜென்சி கொண்டு வர விரும்பினர். ஆகையால் தாம் நடுநிலை வகிப்பதாக அவரும் கூறிக்கொண்டார்.

"கர்னல்! நீங்கள் இப்படிச் செய்வீர்களென்று நான் நினைக்கவில்லை" என்று மந்திரி கூறினர்.

"தேர்தல் என்பது நான்கு நாள் விவகாரம். ஒருவருக்கொருவர் இருக்கும் மரியாதையைக் கொஞ்சமாவது '' என்று ரூப்ரத்தன் கூறினர்.

''நாங்களாக ஒன்றும் ஆரம்பிக்கவில்லை. ஆனால் எங்களிடம் யாராவது வம்புக்குவந்தால்?''

''வம்பை நீங்கள்தான் ஆரம்பித்தீர்கள்; விமானத்தைப் பறக்க விட்டீர்கள்'' என்று பாபு சாளிக்ராம் கூறினார்.

''நாங்கள் ஓர் அக்கிரமத்தை எதிர்த்துக் குரல் எழுப்பினோம்.''

''தம்பி! நாங்களுந்தானே இருந்தோம்? நீ, சஜ்ஜன், மஹிபால் யாராவது வந்து என்னிடம் கூறியிருந்தால் நான் எல்லாவற்றை சரி செய்திருப்பேனே!'' என்று ரூப்ரத்தன் கூறினார்.

''ஐயா! இதெல்லாம் வெறும்பேச்சு! சாளிக்ராம் தம் தேர்தல் பந்தயத்தில் ஒரு பெண்ணின் உயிரை வாங்கிவிட்டார் என்று நான் தெளிவாகக் கூறுவேன்.''

''கர்னல்! நீ ஏன் பேச மாட்டாய்?'' பாபு சாளிக்ராம் கட்டுப் போட்டிருந்த தம் காலைக் கையால் தடவிக்கொண்டே, ''நான் எதற்காகச் செய்யவேண்டும்? போலீஸ்தான்'' என்று பேசத் தொடங்கினார்.

''தலைவரே! இந்தத் தலைகீழ் ராமாயணம் எனக்குச்சொல்லா தீர்கள்! உங்களோடு சேர்ந்துதான் நான் இதையெல்லாம் கற்றுக் கொண்டிருக்கிறேன்.''

''சரி! இந்தப் பேச்சையெல்லாம் விடுங்கள், வந்த பேச்சைப் பேசுங்கள்!'' என்று மந்திரி முந்திரியை மென்று கொண்டே கூறினார். ''காங்கிரஸ் நல்லதோ, கெட்டதோ! நாட்டைக் காப்பாற்றக்கூடிய ஒரே ஒரு கட்சி அது தான் என்பதை நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இப்பொழுது காங்கிர சுக்கு நஷ்டம் உண்டாக்குவது நாட்டிற்குத் துரோகம் செய்வ தாகும்'' என்று அவர் மேலும் பேசினார்.

''அதுபோலவே பெண்களுக்கு அக்கிரமம் செய்வது மனிதத்தன் மைக்குச் செய்யும் துரோகமாகும் என்று நானும் கூறுகிறேன்.''

''நீங்கள் கம்யூனிஸ்ட் கட்சியைச்...''

''நீங்கள் கட்சிப்பார்வை கொண்டு ஏன் பார்க்கிறீர்கள்? என்னுடைய அண்ணி எந்தக் கட்சியையும் சேர்ந்தவளில்லை. என் தந்தை ஒருபொழுதும் காங்கிரசை ஆதரித்ததில்லை. என்வீட்டில் கூட்டுக் கட்சியின் கூட்டம் நடந்திராவிட்டால் அவரைத் தண்டனை யிலிருந்து காப்பாற்றுவதில் உங்களுக்கு ஆர்வம் உண்டாகி யிருக்காது.''

''நல்லது. கடந்து போனதைப்பற்றிப் பேசுவதால் என்ன பயன்?''

''ஏன் பயனில்லை? எல்லாமே அதிலிருந்துதானே துவங்கிற்று.''

''கர்னல்! நீயும் இப்பொழுது முழு கம்யூனிஸ்டாக ஆகி விட்டாயே!''

"அடே! அந்தச்சொல்லை ஏதோ வசை போலவல்லவா கூறுகிறீர்" என்று சஜ்ஜன் சேட்ரூப்ரத்தனின் சொல்லை மறித்துப் பேசினுன்.

"அப்பாடா! ஒரு வழியாகப் பேசினுயே!" என்று கூறிக் கொண்டே மந்திரி சிரித்தவராய், "நம் சஜ்ஜன் சித்திரம் வரைந்து வரைந்து தாமும் யாரோ செய்த சித்திரமாக மாறிவிட்டார் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்" என்ருர். மந்திரியின் இந்தத் தமாஷ் வார்த்தையைக் கேட்டு ரூப்ரத்தன், சாளிக்ராம் முதலியோரும் சிரித்தனர். அந்தச் சிரிப்பிற்கிடையிலேயே மந்திரி தம் பேச்சைத்தொடர்ந்தவராய் கன்யாவிடம், "வனகன்யாஜீ! எங்களுடைய இந்தப் பழைய நண்பர்களை எங்களிடமிருந்து இவ்வளவு விரைவில் அகற்றியதற்கு நான் உங்களையும், உங்கள் கட்சியையும் பாராட்டுகிறேன்" என்று கூறினுர்.

கன்யாவும் உடனே, "இப்படி மக்களைத் தங்களிடமிருந்து அகற்றிச் செல்ல வாய்ப்பு அளிக்கும் உங்களையும் நான் பாராட்டுகிறேன். ஆயினும் உங்களுக்குத் தெரிவிப்பதற்காகச் சொல்கிறேன். நான் கம்யூனிஸ்ட் கட்சியின் அங்கத்தினருமில்லை; அவர்கள் இவர்களை உங்களிடமிருந்து பிரித்துச் செல்வதற்காக என்னை நியமிக்கவுமில்லை" இவ்வாறு கூறும்பொழுது கன்யாவின் முகத்தில் சினம் வெளிப்பட்டது.

மந்திரி அவர்கள் சிறிது துணுக்குற்ருர். மற்றவர்கள் திடுக்கிட்டு அவருடைய முகத்தை கவனிக்கத் தொடங்கினுர்கள். "இன்னும் ஏதாவது கேட்கவேண்டுமா?" என்று கர்னல் சிரித்துக்கொண்டே கேட்டான்.

"நான் யாரையும் அவமானப்படுத்தும் நோக்கத்துடன் எதுவும் கூறவில்லை. ஆனுல் எனக்கு அவர் கூறியது பிடிக்கவில்லை" என்று கன்யா கூறினுள்.

சஜ்ஜன் கன்யாவின் சொற்களை ஆமோதித்தவாறே கன்யாவைப் பார்த்து, "இவர்களுக்கு நன்ருகச் சொல்லிக் காட்டவேண்டும். மந்திரி ஆகிவிட்டால் என்ன வந்து விட்டது! பழைய நண்பர்களாயிற்றே!" என்ருன்.

அமைச்சர் சஜ்ஜனின் வார்த்தையை ஆமோதிக்கும் முறையில் பெரிதாகச்சிரித்தார்.

இந்த நேரத்தை நழுவவிடக் கூடாது என்பதற்காக சேட்ரூப்ரத்தனும் உற்சாகத்துடன் கனைத்துக்கொண்டு அன்பை வெளிப்படுத்துபவராய், "எத்தனையோ காலமாக நாங்கள் பழகியவர்கள். நானும் மஹிபாலும் சந்தித்ததிலிருந்து இவருடன் நட்பு ஏற்பட்டது" என்று கூறினுர்.

அமைச்சரின் நண்பரைத் தம் மகனுக ஆக்கிக்கொள்ள ஜானகி சரணும் தயங்கவில்லை. பாபு சாளிக்ராமும் எல்லோரையும்

அறிமுகப்படுத்தியவராய் புகழ்ச்சிப் படலத்தைத் தொடங்கி விட்டார். அமைச்சர் சிரித்துக்கொண்டே எழுந்தார். எல்லோரும் தங்கள் தங்கள் நாற்காலிகளைவிட்டு எழுந்தார்கள். பாபு சாளிக் ராமும் நாற்காலியின் கைகளைப் பிடித்துக்கொண்டு எழுந்திருக்க முயல்வதுபோல் நடித்தார். அமைச்சர் அவரைப் பார்த்து, "சாளிக்ராம், எல்லாம் சரியாகிவிட்டது தெரிந்ததா? கர்னல், உங்கள் மீனு பஜாரில் காங்கிரஸ் பிரசாரம் நடக்கவேண்டும். இன்று மாலையிலேயே சில விளம்பரங்கள் முதலியன அனுப்பி விடுகிறேன்'' என்று கூறினார்.

"இதோ பாருங்கள்! நான் என்னுடைய கொள்கையைத் தெரிவித்துக்கொண்டேன். அதை ஒருதலைக் கருத்தாகக் கருதக் கூடாது.''

''நான் உன்னுடைய கருத்தை ஏற்றுக்கொள்ளுகிறேன், கன்யா! இந்தக் கலாச்சார விழாவை அரசியலுக்குப் பயன்படுத்தக் கூடாது.''

அமைச்சர், சஜ்ஜன்—கன்யா இருவரையும் பார்த்தபடி சஜ்ஜனிடம், "நீங்கள் இருவரும் இணைத்துவிட்டீர்கள் போலத் தோன்றுகிறதே! திருமணம் எப்பொழுது செய்துகொள்ளப் போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

அமைச்சர் ஏதோ வேடிக்கை செய்துவிட்டார்போல் லாலா ஜானகிசரணும், பிறகு ரூப்ரத்தனும் திடீரென்று சிரித்தார்கள். அந்தச் சிரிப்பைக் கேட்டு அமைச்சரும் தம் சொல்லிலுள்ள வேடிக் கையைப் புரிந்துகொண்டு புன்முறுவல் பூத்தார். "ஆமாம், இனி ஒன்றும் தாமதமாகாது, விரைவிலேயே ஒரு நாள் உங்களிடம் நகீன்சந்தின் அழைப்புக் கடிதம் வந்துசேரும்'' என்று கர்னல் கூறினன்.

''இது மிகவும் மகிழ்ச்சிக்குரிய செய்தி. நான் உங்கள் இரு வருக்கும் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்'' என்று சொல்லிய அமைச்சர் சிரித்துக்கொண்டே சஜ்ஜனுடன் கைகுலுக் கியவாறு போய்விட்டார். பல நாட்களாக அமைதியற்றிருந்த சூழ்நிலையில் இவ்வாறு அமைதி தோன்றிற்று.

## 34

வர்மாவின் வீட்டுத்தாழ்வாரத்தில் ஒரு நீண்ட பெஞ்சியிலும் இரண்டு நாற்காலிகளிலும் வர்மா, சங்கர்லால், சஜ்ஜன், கர்னல், மஹிபால் ஆகியோர் உட்கார்ந்திருந்தனர். மஹிபால் அன்று காலையில் தன் தாய் மாமன் வீட்டிலிருந்து திரும்பியிருந்தான்.

வர்மாவின் மகளின் ஆருவது நாள் விழாவையொட்டித் தாயியின் சார்பாக நடக்கும் விருந்திற்கு சஜ்ஜனின் நண்பன் என்றமுறையில் கர்னலின் அழைப்புக் கிடைத்ததனுல் அங்கே வந்திருந்தான். விருந்து முடிந்து எல்லோரும் அமர்ந்திருந்தார்கள். பிராமணர் களின் விருந்துமுடிந்து பெண்கள் விருந்து நடந்துகொண்டிருந்தது. உள்ளேயிருந்து டோலக் வாத்திய இசையுடன் பாடல் ஒலித்தது :

"சம்பாதிக்க ராசா போனுன்
மாமிக்கு லோட்டா
நாத்திக்குக் குண்டான்
வாங்கித்தந்தான்.
எனக்கு மட்டும் மண்ணுச் சட்டி
போதுமின்னு வாங்கித்தந்தான்."

தலையணையை அணைத்துக்கொண்டு பாதிபடுத்தவனுய் மஹிபால் முழங்காலில் அஜந்தா ரேடியோ என்ஜினியரிங் வொர்க்ஸின் கடிதத்தாளில் வெகுநேரமாக அந்தப் பாட்டை எழுதிக்கொண் டிருந்தான். "அப்பா! இனி நீ இலக்கியம் எழுதுவதைவிட்டு விட்டு டோலக் பாட்டு எழுது" என்று கர்னல் சிரித்துக்கொண்டே கூறினுன். மஹிபால் விடை எதுவும் அளிக்கவில்லை. சஜ்ஜன் வேடிக்கையாக, "பார்த்தாயா கர்னல்! உன்னுடைய வார்த் தைக்கு விடையே கொடுக்காமல் உட்கார்ந்திருக்கிருன்!" என்ருன்.

"இவன் ஏன் விடை கொடுக்கப்போகிருன்? அதுதான் இவனது வழக்கமாயிற்றே! அன்று நான் இவனுக்குத் தந்தி கொடுப்பதற்கு ஒன்றரை ரூபாய் செலவு செய்தேன். இங்கே இருந்த எதிர்ப்பைக் கண்டு நான் பயந்து போனேன். ஏதாவது பிரசார இதழ் வெளியிட நேர்ந்தால், மஹிபால் வந்தால் வசதியாக இருக்குமே என்று நினைத்தேன். ஆனுல் இவனே எவ்விதபதிலும் கொடுக்க வில்லை!"

"அடே! மாமன் வீட்டுப் பணியாரத்தை விட்டுவிட்டு நான் உனக்காக பிரசார இதழ் வெளியிட ஏன் வரவேண்டும்?"

"அப்படியானுல் இன்று ஏன் வந்தாய்?"

"தாயி வீட்டில் விருந்து சாப்பிட!"

"தாயி உனக்கு அழைப்பு அனுப்பவில்லையே! நான் ஏதோ சும்மா கூப்பிட்டுவைத்தால் விருந்து சாப்பிட ஓடி வந்துவிட்டாயே!"

"போப்பா! விருந்துக்கான அழைப்பை எதிர்பார்த்துத்தான் பிராமணன் வரவேண்டுமா? ஆகா...என்ன பாட்டு! உள்ளம் மகிழ்ந்துவிட்டது!"

உள்ளிருந்து வந்துகொண்டிருந்த பாட்டின்மீது எல்லோருடைய கவனமும் சென்றது.

மஹிபால் எழுதிக்கொண்டே பாட்டின் ஒரு வரியைப் புகழ்ந்ததும் எல்லோரும் சிரித்துவிட்டார்கள். கர்னல் சிரித்துக் கொண்டே பொய்யானகோபத்துடன், "இனி இந்த வேடிக்கையை விடு! ஏதோ தேவையில்லாத வேலையை எடுத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டாயே!" என்றான். கர்னல் மஹிபாலின் கையிலிருந்து காகிதத்தைப் பிடுங்கத் தொடங்கினான். "அடேடே! என்ன செய்கிறாய்! எனக்கு மிகவும் உபயோகமான காகிதம் அது" என்று பயந்துகொண்டு மஹிபால் கூறினான்.

அந்த நேரத்தில் சஜ்ஜன், "எது வேண்டுமானாலும் சொல். தாயி மிகவும் விசித்திரமானவள்" என்றான்.

"நான் என்ன சொல்லட்டும்! இந்தக் குழந்தை பிறந்ததிலிருந்து தாயியினால் பெரிய கஷ்டமாகப் போய்விட்டது. தாயி செய்யும் உபகாரத்தை ஏற்கவும் முடியவில்லை; மறுக்கவும் முடியவில்லை!"

"ஏன் என்ன நேர்ந்தது?" என்று கர்னல் ஆர்வத்துடன் கேட்டான். வர்மாவும் சிரித்துக்கொண்டே, "ஒவ்வொரு நாளும் என்னையும் என் மனைவியையும் வேற்று மதத்தவர்கள் என்றும் மிலேச்சர்கள் என்றும் என்னென்னமோ சொல்கிறாள், தாயி. எங்களை ஒரேயடியாக மட்டமாக ஆக்கிவிட்டாள். ஆனால் குழந்தைக்காகப் பெரிதும் பாடுபடுகிறாள். என் மனைவியையும் குழந்தையையும் கவனித்துக்கொள்ளும் பொறுப்பைத் தாயி ஏற்றுக் கொண்டு பலவிதமான பணியாரங்களும், பாதாமும், நெய்யுமாகக் குவித்து வைத்திருக்கிறாள். இதையெல்லாம் என் குழந்தைக்கு நல்ல பால் கிடைக்கவேண்டும் என்பதற்காகக் கொடுக்கிறேன் என்று என் மனைவியை இடித்துக் காட்டிக் கூறுகிறாள்."

எல்லோரும் சிரிக்கத் தொடங்கினார்கள். உள்ளே "என் பாப்பா ஈசலிடம் அஞ்சிவிட்டதப்பா!" என்று பாடிக்கொண்டிருந்தார்கள்.

தாயியின் வீடு முழுவதும் அன்று ஒரே கூட்டமாக இருந்தது. தாராவின் சமையலறைத் தாழ்வாரத்தில் பெரிய அடுப்பு தோண்டப்பட்டு சமையற்காரர்கள் வேலை செய்துகொண்டிருந்தார்கள். இரண்டாம் கட்டில் டோலக் ஒலித்துக் கொண்டிருந்தது, தாயியின் வீட்டில் பெண்களின் கூட்டமாக இருந்தது. கண்ணன் கோவில் தலைவரும், அர்ச்சகரும் அங்கே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். தட்டுக்களில் உணவுப் பொருள்களை எடுத்துக்கொண்டு ஆண்கள் பகுதியிலுள்ள அறைக்குள் பெண்கள் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருந்தார்கள். பிராம்மண விருந்தும், சஜ்ஜன் கூட்டத்துச் சாப்பாடும் முடிந்துவிட்டது. தாயி 101 பிராம்மணர்களுக்கு விருந்தளித்தாள். தன் சுற்றத்தார், அக்கம்பக்கத்தவர்கள் எல்லோருக்கும் அழைப்புக்

கொடுத்திருந்தாள். தன் சக்களத்தி வீட்டிற்கும் அழைப்பு அனுப்பியிருந்தாள். அப்பொழுது பெண்களின் கூட்டம் சாப்பிட்டுக் கொண்டிருந்தது. எல்லா இடத்திலும் தாயியின் வீட்டு விருந்தைப்பற்றியே பேச்சாக இருந்தது. எங்கும் எல்லோரும் வியந்துகொண்டிருந்தார்கள். நந்தோ பெரிதும் பொருமிக் கொண்டிருந்தாள். ஆயினும் அவள் வந்து மூலையில் உட்கார்ந்து கொண்டு மற்றப் பெண்களிடம் தாயியைப் பற்றி அவதூறுகப் பேசிக்கொண்டிருந்தாள்.

சின்னமருமகளும் கன்யாவும் தாராவின் வீட்டில் இருந்தார்கள். அன்று முதல் முறையாக அவ்வளவு நேரம் தாராவிடம் உட்கார்ந்து பேசும் வாய்ப்புக் கன்யாவுக்குக் கிடைத்தது. சின்ன மருமகளை முதல்முறையாக அன்றுதான் அவள் சந்தித்தாள். பெரியவளைப்பற்றிய பேச்சும் அப்பொழுது வந்தது. சின்ன மருமகளும் தாராவும் பெரியவளை நினைத்து மிகவும் அழுதார்கள். அவள் இன்று இங்கே இருந்தால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்! கன்யாவுக்குப் பெரியவளைப்பற்றிய விஷயம் முழுவதும் இன்று தான் தெரியவந்தது. சங்கர்லால் பெரியவளைச் சந்திக்க விரஹேஷின் வீட்டிற்குப்போன பொழுது அவள் மிகவும் வருத்தத்துடன் காணப்பட்டதாகவும், விரஹேஷ் இரண்டு நிமிடங்கூட அவரைப் பேசவிடவில்லையென்றும் சின்ன மருமகள் கூறினாள். முன்பு அவர் நண்பர் வேடம் போட்டுக்கொண்டிருந்தார். ஆனல் சங்கர்லால் சென்றபொழுது நேரிடையாகப் பேசாமலிருந்தது மட்டுமின்றி, இனிமேல் பெரியவளை அவர் சந்திக்கக்கூடாது என்று தடையும் போட்டுவிட்டார். விரஹேஷின் வீட்டின் நிலை மிகவும் மோசமாக இருந்தது என்றும், அவரிடத்தில் ஒரே ஓர் அறைதான் இருக்கிறது; அது பெரியதாக இருந்தாலும் பாழாகிக்கொண்டிருக்கிறது. அந்த அறையின் பாதிப்பகுதியில் கயிறுகட்டித் திரை போடப்பட்டிருந்தது; அந்த திரையும் முழுவதுமாக இல்லை: சங்கர்லால் சென்றபொழுது விரஹேஷ் ஓரிரண்டு சோதாக்களுடன் உட்கார்ந்துகொண்டு மது அருந்தியவராய் மட்டமான கேலி வார்த்தைகள் பேசிக்கொண்டிருந்தார் என்றும் சங்கர்லால் மூலம் தெரியவந்தது. கன்யா இதையெல்லாம் கேட்டுப் பெரிதும் துன்புற்ருள். பெண்ணுகப் பிறப்பதே இன்றைய சமுதாய நிலையில் சாபக்கேடாகும், பெரியவளுடைய முடிவு அவளுக்குத் தெளிவாகத் தெரியவந்தது. ஒரு நாள் அவள் நைந்துபோய் இறந்து விடுவாள் என்று எண்ணினுள். காலம் சென்ற தன் அண்ணியை நினைத்தும், பெரியவளின் துன்பத்தை எண்ணியும் பெரிதும் வருந்தினுள். ஆணும் பெண்ணும் பொதுவாக ஒருவரையொருவர் மதிப்பதில்லை. பெண் பொதுவாகப் பொருளாதார முறையில்

ஆணுக்கு அடிமைப்பட்டிருக்கிறாள். அவளுக்கென்று ஒரு தனித் தன்மை கிடையாது. இந்த நாட்டுப் பெண்கள் எப்பொழுதுமே இந்தத்துன்பத்தை ஏற்றுக்கொண்டே வந்திருக்கிறார்கள். சீதை, திரௌபதி ஆகியோருங்கூட இந்தத்துன்பத்தை ஏற்கவேண்டி இருந்தது.

மூன்று நான்கு பெண்கள் டோலக் வாத்தியத்திற்குத்தக்கபடி மெய்மறந்து பாடிக் கொண்டிருந்தார்கள். எல்லோருடைய குரலும் இணையாமல் பிரிந்துபோய்க் கொண்டிருந்தது. பல் வரிசையில் மேலும் கீழுமாக நான்கு பற்கள் உடைந்திருந்த சுந்தரி வெற்றிலை போடுவதால் கறுத்துத் தேய்ந்து கிடந்த பற்களின் வரிசையைக்கொண்டு கொம்பு வாத்தியத்தைப்போல் 'தூ தூ' என்று கத்துவது வழக்கம். அந்த மையிட்ட கண்களைக்கொண்ட கறுப்பான சுந்தரி பலவிதமான ராக ஆலாபனை செய்துகொண் டிருந்தாள். தன் மெய்மறந்த நிலையில் அவள் வாலிபப்பருவம் நிறைந்த சர்பதியைவிட, நான்கு ஸ்வரம் கூடுதலாகவே பாடினாள்; ஆனாலும் சர்பதிக்குத்தான் மதிப்பு அதிகமாக இருந்தது. சர்பதி கண் தெரியாத ஒரு பொரி விற்பவனின் ஏழாவது மனைவி. கணவனை முழங்கையால் குத்தக்கூடியவள் அவள். அவளுடைய வீட்டிற்கு உலகத்திற்குத் தெரியும்படி அவளுடைய காதலர்கள் வருவது வழக்கம். அவளுடைய உடல் முழுவதும் நகைகளாக இருந்தன. அவளுக்குப்பாட்டு என்றால் மிகவும் பிடிக்கும்; ஆகையால் பெரிய பெரிய வீடுகளுக்கு அவள் போவது வழக்கம்; கடந்த காலத்துப் புகழ்பெற்ற சுந்தரிக்கு அவளிடம் பொறாமையாக இருந்தது. ஜாலரா தட்டும் கிசன்சிங்கின் மருமகளின் திரண்ட உருண்ட கன்னம் வெற்றிலைப் போட்டுக்கொண்டிருந்ததால் இன்னும் அதிக மாகவே தொங்கிக்கொண்டிருந்தன. அவள் குத்தென்று உட் கார்ந்துகொண்டு சுந்தரிக்கும் சர்பதிக்கும் நடக்கும் போட்டியைப் பார்த்து மெல்லச் சிரித்துக்கொண்டிருந்தாள். கிசன்சிங்கின் மருமகள் தன்னை அறிந்தவர்களுக்கிடையில் நாரதமுனியென்று பெயர் பெற்றவள். அவள் கலகமூட்டி எல்லோரையும் சண்டை போடச் செய்வாள். ஆனால் யாரிடையேயும் மனஸ்தாபம் ஏற்படுத்துவதில்லை. கிசன்சிங்கின் மருமகள் முப்பது நாற்பது ஆண்டுகளாக அங்கே கைம் பெண்ணாக வாழ்ந்து வந்தாள். புகழ் பெற்ற ஒரு பண்டிதருடன் அவளுக்கு வெகு நாளாகத் தொடர்பு உண்டு என்று அந்தப் பகுதியில் பேச்சாக இருந்தது. மேற்கத்திய க்ஷத்திரியர்கள், அகர்வால்கள் முதலியோரின் பழக்கவழக்கங்கள் அவளுக்கு மனப்பாடம். மந்திரம், பில்லிசூனியம் முதலியவற்றில் அவள் கைதேர்ந்தவள். எல்லா இடத்திலும் அவளுக்கு மரியாதை கிடைத்து வந்தது. அவள் ஆலோசனை அளிப்பதில் நேர்மையான

வளாகவும், இனிமையாகப் பேசுபவளாகவும் நல்ல நல்லவர்களை யெல்லாம் வேடிக்கை செய்வதில் கைதேர்ந்தவளாகவும் இருந்தாள். கண்ணன் கோவில் அர்ச்சகர் தாடியுடனும், கும்மட்டி போன்ற தொந்தியுடனும் அங்கே உட்கார்ந்திருந்தார். அவர் அந்த இரண்டு பாடகிகளையும் சுட்டிச்சுட்டி, "ஒழிந்து போங்கள் உங்களுக்குப் பாடவே தெரியவில்லை! என் குழந்தைப்பருவத்தில் நானும் பாடியிருக்கிறேன். தெருக்கூத்தில் ராதையின் அபிநயமும் பிடித்திருக்கிறேன்'' என்றார்.

"அப்படியா! இப்பொழுது இந்த வேடம் எதற்காகப் போட்டுக் கொண்டிருக்கிறாய்? நீ ஒழிந்து போக! பத்துச்சாண் தாடியை வைத்துக்கொண்டு என் பாட்டில் குற்றமா கண்டுபிடிக்கிறாய்?'' என்று சர்பதி கோபத்துடன் தன்னுடைய மெல்லிய—ஆனால் வேகமான—குரலில் கூறினாள்.

சுந்தரியைப்போல் தங்கம், வெள்ளியால் மினுமினுக்கும் சர்பதியின் இளமைக்கு அடங்குபவரல்ல அர்ச்சகர். அவர் மறுபடியும், "ஏண்டி குற்றம் கண்டுபிடிக்கக் கூடாது? உன் குரலென்ன ரெயில் வண்டியின் ஊதலா?'' என்று கேட்டார்.

அக்கம்பக்கத்திலிருந்த பெண்கள் சிரித்தார்கள். சர்பதியின் கோபம் எல்லைமீறிவிட்டது. கிசன்சிங்கின் மருமகள் அர்ச்சகரிடம், "இவளை இப்படித் தொந்தரவு செய்யாதீர்கள்; பிறகு இவளை விரும்புபவர்கள் உங்களைச் சும்மா விடமாட்டார்கள்!'' என்று கூறினாள்.

"நான் இவளிடமோ அல்லது இவளுடைய காதலர்களிடமோ ஏன் பயப்படவேண்டும்? இவளுக்கு நல்ல பாட்டுக்களும் தெரியவில்லை; நன்றாகப் பாடவும் தெரியவில்லை.''

"அடே ஊர் முழுவதும் சர்பதி பாடுவதில் கை தேர்ந்தவள் என்ற புகழ் பரவியிருக்கிறது, ஆனால் அர்ச்சகரோ இவளுக்குப் பாடத்தெரியாது என்கிறார்!'' என்று கிசன்சிங்கின் மருமகள் கூறினாள்.

சர்பதி அவமானப்படுத்தப்படுவதைப் பார்த்துச் சுந்தரி பெரிதும் மகிழ்ந்துகொண்டிருந்தாள். அவள் அர்ச்சகரைத் தூண்டிவிட்டவாறு, "இந்த அர்ச்சகர் சரியான ஆள். கண்ணன் கோவிலில் இவருடைய பாட்டை நான் கேட்டிருக்கிறேன்'' என்று கூறத்தொடங்கினாள்.

"அதிருக்கட்டும், அங்கே நான் வெறும் பஜனைப்பாட்டுத்தான் பாடுகிறேன், அந்த டோலக்கை என்னிடம் கொடு'' என்று கூறிக் கொண்டே தம் பருத்த தொந்தியைத் தூக்கிக்கொண்டு அர்ச்சகர் வேகமாக எழுந்தார். அவர் சர்பதியின் கையிலிருந்து டோலக்கை வாங்கிக்கொண்டு கண்களை வெட்டியவராய் கூறினார்: "அடீ போடீ. பார், டோலக்கை இப்படி அடிக்கவேண்டும். பாட்டு

இப்படிப் பாடவேண்டும். சுந்தரி! வா, ஆரம்பி. உலகில் பிறந்தோம் நாம் என்ற பாட்டைப் பாடு.''

அர்ச்சகர் டோலக் வாசிப்பது உண்மையிலேயே மிகவும் இனிமையாக இருந்தது. சுந்தரி அபஸ்வரத்துடன் பாடத்தொடங்கினுள். அர்ச்சகருக்குப் பாடும் கலே சிறிது தெரிந்திருந்தது. அவையோரைத் தம் பாவங்களால் மெய்மறக்கச் செய்யத் தேவையில்லாமல் பாடத் தொடங்கினுர்.

''துக்கமும் சுகமும் தாங்கித்தானே
தோணியிருக்கிறேம் பூமியிலே!
தோட்டத்தைச் சுத்திப் பாத்துவர என்னைக்
கூட்டிக்கிட்டுப் போ, மச்சானே!
கிட்டத்துலே உள்ள குளத்தைப் பாக்க நீ
கூட்டிக்கிட்டுப் போ மச்சானே!—என்னை நீ
கூட்டிக்கிட்டுப் போ மச்சானே!''

வெளியில் உட்கார்ந்திருந்த மஹிபால் ஒரேயடியாகச் சிரிக்கத் தொடங்கினுன். அறையில் உட்கார்ந்திருந்த எல்லோரும் திடுக்கிட்டார்கள். அப்பொழுது சங்கர்லாலும் வர்மாவும் கேட்டுக்கொண்டதஞல் சஜ்ஜன் தன் விரஜயாத்திரையைப்பற்றிக் கூறிக்கொண்டிருந்தான். அந்தக் கலாச்சாரப் பேச்சுவார்த்தைக்கிடையில் மஹிபாலின் சிரிப்பு பொருளற்றதாகத் தோன்றிற்று.

''இப்பொழுது என்ன ஞானேதயம் வந்து விட்டது?'' என்று கர்னல் சிறிது கடுமையாகக் கேட்டான். சஜ்ஜனின் கதையைக் கேட்க அவனுக்கும் சந்தோஷமாக இருந்தது. ''இந்தப் பாட்டு யாரோ ஒரு குடும்பப் பெண்தான் தயாரித்திருக்க வேண்டும். இருண்டவீட்டுக்குள் வேலேகள் செய்யும் இன்பமேகாணுத அப்பாவியான ஓர் இளம் தலேவி கற்பனையில் தன் காதலுடன் நீரோடைப் பக்கம் உலவச் சென்ருள். தேன் நிலவில் கூட அவளுக்கு வேறு ஒன்றும் தோன்ருதபொழுது துணி துவைக்கும் வேலேயை எடுத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டாள். ஆகாகா! இங்கேதான் இருக்கிறது நம்முடைய சமுதாயத்துப் பெண்ணின் உள்ளம்!'' என்று உள்ளங் காலேத் தடவியவஞக மஹிபால் கூறினுன்.

''இதோ பாருங்கள்'' என்று கூறிக்கொண்டு வனகன்யா கதவருகில் வந்து நின்ருள். அந்தக் குரலேக் கேட்டதும் எல்லோருடைய கவனமும் அந்தப் பக்கம் திரும்பிற்று; சஜ்ஜனின் முகத்தில் ஒளி பரவிற்று. அவன் உடனே எழுந்தான்.

''பின்னே! தாயி உனக்கு என்ன பரிசு கொடுத்தாள்?'' என்று கர்னல் கேட்டான்.

''இப்பொழுது எங்கே, அண்ணு? மாலேயில்தானே பூஜை நடக்கும்!'' பின்பு அவள் சஜ்ஜனிடம் மெதுவான குரலில்:

''இவர்களுடைய குழந்தைக்கு ஏதாவது பரிசு கொடுக்க வேண்டும் அத்தையாகிவிட்டேனே!'' என்று கூறினாள்.

''இன்றே பரிசு கொடுக்க வேண்டுமா?''

''ஆமாம் இன்றுதான் கொடுக்கவேண்டும். தாரா, பூசை முடிந்த பின் பரிசாகக் கொடுப்பதற்காக ஒரு விலையுயர்ந்த பனாரஸ் புடவை வாங்கியிருக்கிறாள்.''

''என்ன கர்னல்! திருமணத்துக்கு முன்பு கணவனும் மனைவியும் இப்படித் தங்களுக்குள் பேசிக் கொள்ளலாமா!'' என்று மஹிபால் கேட்ட பொழுது எல்லோரும் சிரித்தார்கள். கன்யாவின் முகம் வெட்கத்தால் சிவந்தது. ''எவனப்பா! கணவனும் மனைவியும் ஒத்துப் போனால் வேறு யார் என்ன செய்ய முடியும்?'' என்று சஜ்ஜன் சிரித்துக்கொண்டே விடையளித்தான். மறுபடியும் எல்லோரும் சிரித்தார்கள். மகிழ்ச்சிப் பெருக்கில் தன்னை மறந்து கன்யா தன் கணவனாகப் போகும் சஜ்ஜனைப் பெருமையுடன் மயக்கும் பார்வையால் பார்த்தாள். சஜ்ஜனின் கவனம் அப் பொழுது அந்தப் பக்கம் இல்லை ஆனால் மற்றவர்கள் அதைக் கவனித்தார்கள். கர்னல் புன்முறுவலுடன் பார்வையை அகற்றிக் கொண்டான். மஹிபாலின் உள்ளத்தில் பொறாமையும் இன்பமு மாகச் சேர்ந்து குத்தின.

சஜ்ஜன் மறுபடியும் மெதுவான குரலில், ''எதைச் சொன்னாலும் கொண்டு வருகிறேன்'' என்று கன்யாவிடம் கூறினான். அப் பொழுது அவனுடைய உள்ளத்தில் பெருமையும் மகிழ்ச்சியும் தோன்றின. கணவனைப்போல் நடந்து கொண்டு அவன் தன் மனைவியிடம் உலக வழக்கத்தைப் பற்றி ஆலோசனை செய்து கொண்டிருந்தான். இப் புது அநுபவம் அந்தக் கணத்தில் அவனுடைய உள்ளத்தில் ஒரு சக்தியைத் தோற்றுவித்துக் கொண் டிருந்தது. அப்பாவித்தனத்தின் அழகே இதுதானே!

கணவனிடம் கேட்பதற்காக வந்த போதிலும் கன்யாவின் நாணம் முழுவதும் போகவில்லை. சங்கர்லாலின் மனைவி சரூப் குழந்தைக்காக ஒரு தோலா தங்கத்தால் ஆன சங்கிலியும் சதங் கையும் வாங்கி வந்திருந்தாள். சரூப், தாரா இவர்களுடைய ''எங்கள் இவர், எங்கள் அவர்'' என்று பேச்சுக்களைக் கேட்டுப் பூரித்திருந்த வனகன்யா, தன்னுடைய சஜ்ஜனிடம் ஏதாவது கொண்டு வர வேண்டுமென்று சொல்லத்தான் வந்திருந்தாள். ஆனால் அவர்கள் கொண்டு வந்திருக்கும் விலையுயர்ந்த பொருள் களைவிட அதிகம் உயர்ந்த பொருளாகக் கொண்டு வாருங்கள் என்று கூற அவளுக்கு நாணமாக இருந்தது. கன்யா ஒரு லட்சாதி பதிக்கு வாழ்க்கைப் படப் போகும் மனைவி. சஜ்ஜன் அதை உலகம் அறியும்படி செய்துவிட்டான். கன்யாவும் சஜ்ஜனை இனிமேல்

கட்டிப் போட வேண்டியதுதான் என்ற முடிவுக்கு வந்துவிட்டாள். சாதாரணமான மத்திய தர வகுப்பில் துன்பங்களில் வாழ்ந்த முன்னேற்றக் கருத்துக்களைக் கொண்ட வனகன்யா புது மகிழ்ச்சி அந்தஸ்துப் போட்டியில் இறங்கிவிட்டாள். உள்ளக்கருத்தை உள்ளத்திலேயே வைத்துக் கொள்ள முடியாமலும், வெளிப்படுத்த முடியாமலும் அவள் இருந்தாள். சஜ்ஜன் கேட்டதனுல் அவள், "நான் என்ன கூறட்டும்? இவர்கள் விலையுயர்ந்த சேலை எனக்காக வாங்கி வந்திருக்கிறார்கள். சரூப் குழந்தைக்காகத் தங்கச் சதங்கை கொண்டு வந்திருக்கிறாள். இதை நீங்களே புரிந்து கொள்ளுங்கள் இல்லையென்றால் அண்ணனிடம் கேட்டுக் கொள்ளுங்கள்" என்று கன்யா கூறிவிட்டு உடனே உள்ளே சென்று விட்டாள். வீட்டிற்குள் டோலக் கேட்டுக் கொண்டிருந்தது. கன்யாவின் சஜ்ஜன் அந்த நேரம் உலக முறைப்படி மகிழ்ச்சியுடன் இருந்தான். அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்த பொழுது "இந்த ஆறும் நாள் விழா எதற்காக நடக்கிறது?" என்று வர்மா மஹிபாலிடம் ஒரு கேள்வி கேட்டார். "நான் இந்த விஷயத்தில் அதிகமாகக் கவனம் செலுத்தியதில்லை. குழந்தை பிறந்து ஆறுவது நாளும், பன்னிரண்டாம் நாளும் முக்கியமானவை. தந்திரவாதிகளினுல் இந்தப் பழக்கங்கள் ஏற்பட்டன என்பது என் கருத்து. இந்துக்களின் வழக்கப்படி இதை ஷஷ்டீ தேவியின் பூஜை நாள் என்பார்கள். நம் சமுதாயத்தில் பதினுறு தேவிகள் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறார்கள். அவர்களில் ஒரு தேவிதான் இந்த ஷஷ்டீ" என்று அவருக்கு விடையளித்தவாறு மஹிபால் கூறினுன்.

என்ன கொண்டு வரலாம் என்று சஜ்ஜன் யோசித்துக் கொண்டிருந்தான். சூழ்நிலையால் அவன் வர்மா போன்ற சாதாரண மத்தியதர வகுப்பினருடன் சமுதாய முறைப்படி நடந்துகொள்ளும்படி ஆகிவிட்டது. உள்ளூர அவனுக்கு இது பிடிக்கவில்லை. அன்பான பேச்சு வார்த்தை வைத்துக்கொள்வது வேறு. ஆனுல் இவ்வாறு சொந்தம் கொண்டாடுவது நல்லதன்று. அவர் கன்யாவைப் பெரிய மனிதனின் மனைவி என்று கருதி விலையுயர்ந்த சேலை அளித்திருக்கிறார். கன்யாவின் சார்பில் பரிசு அளிக்கப்பட வேண்டுமென்றால் அது அவன் தரத்திற்குத் தகுந்ததாக இருக்க வேண்டுமே! ஆனுல் அதிக விலையுள்ளதாகவும் இருக்கக்கூடாது. இல்லையென்றால் இந்தச் சிறியவர்கள் கண்டபடி பேசுவார்கள்.

"ஆறுவது நாளுடன்தான் நம் நாட்டில் விதி என்பதும் தோன்றிற்று. அந்த நாளில்தான் பிரம்மா ஒருவரை அரசராகவும் மற்றொருவரை ஏழையாகவும் ஆக்கி விடுகிறார். ஒருவன் வஞ்சகனுகவும், மற்றொருவன் யோக்கியமானவனுகவும் ஆகிறான். நல்ல குணங்கள் இருந்தும் ஒருவன் விதிவசப்பட்டு மோசமானவனுகவும்

மிகவும் மோசமானவனுகவும் ஆகிவிடுகிருன்'' என்றுமஹிபால் கூறிக் கொண்டிருந்தான்.

"அப்புறம்!''

"உண்மைதான், தலையெழுத்தை யாராலும் மாற்ற முடியாது'' என்று கர்னல் கூறினுன்.

''நீ தலைவிதியை நம்புகிருயா மஹிபால்?''

"நீ நம்பாவிட்டாலும், நான் நம்புகிறேன்.''

''தலைவிதியை நம்புவதானுல் பணக்காரன்—ஏழை. கல்வியறிவு கல்வியறிவின்மை முதலிய வேற்றுமைகள்—''

''இவற்றுக்குப் பொறுப்பாளியாக நான் ஏன் பணக்காரக் கூட்டத்தைக் கருதுகிறேன் என்பதுதானே உன் கேள்வி?''

''ஆமாம்.''

''சஜ்ஜன்! புத்துணர்வு அநுபவத்தால் கிட்டுகிறது. அநுபவம் அடையத் தனி மனிதனே சமுதாயம் முழுவதுமோ ஒன்றைச் செய்யவும், சகித்துக் கொள்ளவும் நேர்வதுதான் தலைவிதி; சமுதாயப் பொறுப்பு'' என்று கூறிக் கொண்டிருக்கும்பொழுதே உயர்ந்த குரலில் மஹிபால், ''முன் பிறவியில் செய்ததன் பயனை இந்தப் பிறவியில் நான் அநுபவிக்கிறேன். இந்தப் பிறவியின் வினைப் பயனை இந்தப் பிறவியிலோ அடுத்த பிறவியிலோ நான் அநுபவிக்க வேண்டியிருக்கும். அதிலிருந்து நான் ஒரு பொழுதும் தப்ப முடியாது.'' என்று கூறினுன். ஆழ்ந்த குரலில் மஹிபால் நின்று, அந்த இடத்தில் யாருமே இல்லாதது போலவும், தான் தனியாக இருப்பது போலவும் ஏதேதோ கூறிவிட்டான். அவன் உடலையும் அறிவையும் மறந்து தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தான்.

சென்ற இரண்டு நாட்களாகத் தான் அடைந்த வேதனையால் மஹிபால் தனது ஏதோ ஒரு செய்கைக்குப் பச்சாத்தாபப்படு கிருன் என்று சஜ்ஜனுக்குத் தோன்றிற்று. காரணம் அறிய ஆசைப்பட்டான். ஆனுல் அயலாரான சங்கர்லாலும் வர்மாவும் அங்கே இருப்பது அவனுக்கு நினைவிற்கு வந்தது. ஆயினும் எல்லோருக்கும் எதிரில மஹிபாலைத் தாக்கவும், அவனுடைய வேதனைக்குக் காரணத்தைக் கேட்கவும் அவன் ஆசைப்பட்டான். மஹிபாலின் முகத்தில் காணப்பட்ட ஏதோ ஒரு பெரிய குற்றத்தின் உணர்வால் அவனுடைய உள்ளத்தில் மிஞ்சியிருந்த வேதனையும் மறைந்து அவன் மகிழ்ச்சியடைந்தான். கலையுலகில் போட்டி யாளனுக நண்பனின்பால் அவனுடைய உள்ளத்தினுள் மறைந் திருந்த பொருமையும் மகிழ்ச்சியில் கலந்திருந்தது.

"எந்த பாவச்செயலை நினைத்து வருந்துகிருய் இப்பொழுது?'' என்று சஜ்ஜன் சிரித்துக்கொண்டே அவனைத்தாக்கினுன்.

ஏதோ எதிர்பாராமல் கைது செய்யப்பட்டுவிட்டவன் போல் மஹிபால் திடுக்கிட்டான். ஆனுலும் உடனேசமாளித்துக் கொண்டு பொய்ச் சிரிப்புடன் தனது சாதாரணக்குரலில் பேசப் பெரிதும் முயற்சி செய்து ஞான உலகில் பறந்தவனுய் ''என்னைப்போல் தாழ்ந்தவனும், நீசனும் வேறு யார்? எந்தப் பாவத்தைப் பற்றி நான் கூறுவது?'' என்ருன்.

அவன் கூற்று சஜ்ஜனின் உள்ளத்தைக் குத்திற்று. அவன் தான் கேட்ட கேள்வியை நினைத்து அவன் வருந்திஞன். தான் பாவம் செய்தவனில்லையா? யாராவது தன்னிடம் இவ்வாறு கேட்டிருந்தால்? மனச்சாட்சியால் உந்தப்பட்டு சஜ்ஜன், ''நானும் பெரிய பாவிதான் நண்பனே! உன் கொள்கைப்படி அடுத்த பிறவியில் நானும் என்ன என்னவெல்லாம் அநுபவிக்க வேண்டியிருக்குமோ?'' என்ருன்.

''அட! எல்லோருமே பாவம் செய்பவர்கள் தாம். எல்லோரும் அவரவர் வினைகளைத்தான் அநுபவிக்கிருர்கள்'' என்று பொதுப் படையாகக் கூறிய கர்னல் வருத்தம் தோய்ந்த சூழ் நிலையைச் சிறிது மாற்றிஞன்.

''ஹலோ!'' என்ற இனிமையான குரலுடன் டாக்டர் சீலா ஸ்விங் கன்யாவுடன் தாழ்வாரத்தில் அடிவைத்தாள். ஆனுல் மஹிபாலைப் பார்த்ததும் அவளது இனிமை மறைந்தது. மஹிபாலின் முகம் வெளிறிப்போய் ஜடமாகிவிட்டது. அவனைத் தவிர மற்ற எல்லோரும் எழுந்து நின்ருர்கள். பிறகு அவனும் எழுந்து நின்ருன்.

கன்யா சஜ்ஜனை முறைத்துப் பார்த்துக் கொண்டு ''இன்னும் நீங்கள் போகவில்லையா?'' என்று கேட்டாள். "இதோ போய்க் கொண்டேயிருக்கிறேன்'' என்று சஜ்ஜன் தயக்கத்துடன் கூறிஞன்.

கூர்மையான கடைக்கண்ணுல் மஹிபாலின் முகத்தைப் பார்த்தவாறு மறுபடியும் வேடிக்கையாகச் சீலா கன்யாவிடம், ''அது தான் சரி. இந்த மனிதனிடம் இப்படித் தான் நடந்து கொள்ளவேண்டும். இவன் இதற்குத்தான் ஏற்றவன்'' என்று கூறிஞள்.

''அம்மா! செருப்பால் அடியுங்கள்! காலம் உங்களுடைய தாயிற்றே!'' என்று சஜ்ஜன் சிரித்துக் கொண்டே கூறிஞன்.

''எங்களுக்கு எந்த ஆட்சேபமுமில்லை. ஆனுலும் எங்கள் செருப்புக்கும் மானம் என்பது உண்டு. கிழிந்து போகுமே என்று தான் பயமாக இருக்கிறது. எங்களுக்குத்தான் நஷ்டம் ஏற்படும். அப்படியும் ஆண்களின் மானங்கெட்ட மண்டை உடையாதே!''

இதைக் கேட்டு எல்லோரும் உரக்கச்சிரித்தார்கள். திரு. வர்மா தமது நாற்காலியிருந்து சிறிது நகர்ந்து நின்றவாறு, ''வாருங்கள்! டாக்டர், வாருங்கள்!'' என்ருர்.

தாழ்வாரத்தில் இரண்டு நாற்காலிகளிலும், ஒரு நீண்ட பெஞ்சியிலும் நால்வர் உட்கார்ந்திருந்தனர். இரண்டு பெண்டிர் வந்துவிட்டதால் இடம் குறைவாக இருந்தது. அதற்குக்காரணம் கூறுவது போல் திரு. வர்மா, "என்ன சொல்வது வீட்டில் இப்பொழுது பெண்களின் ஆட்சி தான்—" என்றார்.

"நான் போகிறேன்" என்று மஹிபால் கீழே பார்த்தவாறே எழுந்தான்.

"ஏன் போகவேண்டும்? உட்காருங்கள்!" என்று கூறிய டாக்டர் சீலாவின் குரலில் அன்பின் வேண்டுகோள் தொனித்தது. அவளுடைய கண்கள் கெஞ்சிக் கொண்டிருந்தன. கர்னல் மஹிபாலைச் சீலாவின் வீட்டிலிருந்து அழைத்து வந்த நாளுக்குப் பிறகு அன்றுதான் அவர்கள் முதன் முதலாகச் சந்தித்தார்கள்.

மஹிபாலின் பார்வை மேலே எழுந்தது. அப்பாவிப்பார்வையுடன் அவன் சீலாவைப் பார்த்தான். ஆனாலும் பேச்சை மாற்றியவனாய் "இல்லை. நான் இப்பொழுது கிளம்பிக்கொண்டு தான் இருந்தேன்" என்றான்.

"இரு. நானும் வருகிறேன். கர்னல்! ஒரு வார்த்தை சொல்ல வேண்டும். கேள்" என்று சஜ்ஜன் கூறினான்.

"நான் வந்ததும் எல்லோரும் கிளம்பிவிட்டீர்களே!" என்று சீலா சிரித்துக்கொண்டே, ஆனாலும் சிறிது வருத்தத்துடன் கூறினாள்

"அப்படியில்லை. கர்னலை உன்னைக் கவனித்துக்கொள்ள விட்டுச் செல்லுகிறேன். நானும் இதோ திரும்பிவந்து விடுவேன். இப்பொழுது நான் சுதந்திர மனிதனிலிருந்து அடிமை மனிதனாக ஆகிவிட்டேனில்லையா!" என்று கூறிக்கொண்டே சஜ்ஜன் அன்பு தோய்ந்த பார்வையுடன் கன்யாவைக் கவனித்தான்.

"பெண்களுக்கு எஜமானனாகவோ, அடிமையாகவோ ஆகத்தான் ஆண்களுக்கு ஆசையாக இருக்கிறது. சமத்துவத்தின் பெருமையே இவர்களுக்குத் தெரியாது!" என்று கூறிய கன்யாவின் பார்வையில் அன்பான முறையீடு காணப்பட்டது. அதில் முறையீடு குறைவாகவும், அன்பு அதிகமாகவும் இருந்தது.

அப்பொழுது திடீரென்று சஜ்ஜனின் பழைய உணர்வு மறுபடியும் தோன்றிற்று. கன்யாவின் அன்பு மிகவும் தூய்மையானது; களங்கமற்றது என்பதை அவன் உணர்ந்தான். தான் விரும்பினாலும் அந்தத் தூய்மையைத் தன்னுள்ளே ஏன் உணரமுடியவில்லை! தன்னைத்தானே மற்றவரிடமிருந்து வேறு படுத்தி ஏன் வைக்கவோ, பார்க்கவோ வேண்டும்? கன்யாவின் அன்பெனும் கங்கையில் தனது குற்றமுள்ள அன்பு கலக்கிறது. தானும் எப்பொழுதாவது குற்றமற்றவனாக ஆகமுடியாதா என்று அவன் கருதினான்.

*    *    *    *

சந்துகளைக் கடந்தபடி சேர்ந்தே சென்றாலும் சஜ்ஜனும் மஹிபாலும் மௌனமாகவே இருந்தார்கள். இருவருடைய உள்ளங்களும் கொந்தளித்துக் கொண்டிருந்தன. "நான் மிகவும் தாழ்ந்தவன்! கன்யாவைப்போன்ற நல்ல பெண்ணுக்குத் தகுந்தவனில்லை. ஆனாலும் நான் என்னைத் தூய்மை யாக்கிக் கொள்ளப் போரிடுவேன்!" என்று கன்யாவின் தூய்மையைப் பற்றி எண்ணிய சஜ்ஜனின் உள்ளத்திலும் தூய்மை பரவிற்று.

"நான் மிகவும் மோசமானவன்! சிவனே! இந்த வீணை வாழ்க்கை எதற்காக?"

சிவனை நினைத்ததும் மஹிபாலின் உள்ளம் தன் கெட்ட குணங்களை எண்ணிப் பெரிதும் வருந்தியது.

தெருக்களில் தேர்தல் பேச்சுக்கள் எதிரொலித்துக் கொண்டிருந்தன. காங்கிரஸ் முன்னேறிக்கொண்டிருக்கிறது என்று ஒருவன் பேசிக் கொண்டிருந்தான்: மற்றொருவன், ஜனசங்கம் முன்னேறிக் கொண்டிருக்கிறது என்று கூறிக்கொண்டிருந்தான். நடுப்பகலுக்குப்பிறகு பரவிய வதந்திகளைக் கேட்டு, உழவர் தொழிலாளிக் கட்சியின் வேட்பாளரின் நம்பிக்கை முற்றும் முறிந்துவிட்டது. குதிரைப்பாகன், உதிக்கும் ஞாயிறு, படகு, மலர், இஞ்சின், அரிவாள் முதலிய அடையாளங்களைக் கொண்ட கட்சிகளைப் பற்றிய பேச்சையே காணவில்லை.

## 35

சந்துகளைக் கடந்து இருவரும் நாற்சந்தியை அடைந்தார்கள். வட்டமான வாயிலைக்கொண்ட நாற்சந்தியில் நடந்து கொண்டும் நின்று கொண்டும் இருக்கும் மக்களின் கூட்டமாக இருந்தது. ஒலிபெருக்கிகளிலிருந்து கிளம்பும் ஒலிகள் ஒன்றையொன்று மோதிக் கொண்டு காற்றைப்போல் இயற்கையோடு கலந்து விட்டன. விக்டோரியா பூங்காவின் இரண்டு புறத்திலும் தேநீர், வெற்றிலைக் கடைகளில் இருந்த நாற்காலிகளெல்லாம் மக்கள் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். விக்டோரியா பூங்காவில் தேர்தல் நடந்து கொண்டிருந்தது. போலீஸ்காரர்கள், ஃபைல்கள் வைத்துக் கொண்டிருக்கும் அரசாங்க அதிகாரிகள், மோட்டார்கள், பல்லக்குகள் ஆகியவை மக்கள் கூட்டத்திற்கிடையில் சிறப்பான அம்சங்களாக விளங்கிக்கொண்டிருந்தன.

கூட்டமும் ஆவேசமும் நிறைந்த அந்த நாளில் ஏதாவது கெட்ட நிகழ்ச்சி நடந்துவிடக் கூடாது என்றும், தெருவில் நிற்கும் அவனுடைய மோட்டார் கண்காணிப்பாளர் இல்லாமல் மக்களால்

உடைக்கப்பட்டு விடக் கூடாதே என்றும் எண்ணியவனாய் சஜ்ஜன் டிரைவரைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு வந்திருந்தான். ஆனால் தேர்தல் சூழ் நிலையில் மக்களின் பேச்சே எதிரொலித்துக் கொண்டிருந்தது. ஆயினும் அங்கே அமைதி நிலவியிருந்தது. ஏற்பாடுகளெல்லாம் நன்றாகச் செய்யப்பட்டிருப்பதாகவே தோன்றியது. சஜ்ஜனும் மஹிபாலும் காருக்கருகில் வந்த பொழுது டிரைவரைக் காணவில்லை. சஜ்ஜனுக்குக் கோபம் வந்தது. "போகட்டும் திருவிழா நாள். எவ்வளவு நேரம் வரையில் தான் காரிலேயே உட்கார்ந்திருப்பான்? இங்கேதான் எங்கேயாவது இருப்பான்; வா, போகலாம். அது வரையில் வெற்றிலை போட்டுக்கொள்ளலாம். வெகு நேரமாக போட்டுக்கொள்ள நல்ல வெற்றிலையே கிடைக்கவில்லை'' என்று மஹிபால் கூறினான்.

சஜ்ஜன் அப்பொழுது தன் டிரைவரையே நினைத்துக்கொண்டிருந்தான். கன்யா எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். நான்கு மணியிலிருந்து தாயியின் வீட்டில் பெண்களின் விழா துவங்கி விடும். பின்னர் அவளைக் கூப்பிடுவதுகூட முடியாமற் போய்விடும். நேற்றிலிருந்து கன்யாவின்மீது அவனுக்கு எல்லையற்ற அன்பும், மரியாதையும் தோன்றிக்கொண்டிருந்தன.

முந்திய இரவில் ரூப்ரத்தன் வீட்டில் சித்ராவைப் பார்த்ததும் அவனுடைய உள்ளத்தில் ஆசை தோன்றிற்று. சித்ராவிடம் அவன் இன்பம் கண்டாலும் அவள் கன்யாவாக ஆகமுடியாது. அவள் நேற்று சஜ்ஜனின் மானத்தைக் காப்பாற்றினாள். ஆனாலும் சித்ராவைக் காப்பாற்றலாம், ஆனால் அவனுக்கு மனைவியாக ஆக முடியாது. அவனுக்கு மனைவி வேண்டும். அவன் தன்னுடைய கட்டுப்பாடற்ற வாழ்கையில் சலிப்படைந்து விட்டான். இதுவரை மனைவியின்றி பொறுப்பில்லாத வாழ்க்கை வாழ்ந்துவிட்ட அவன் அந்த வாழ்க்கையிலிருந்து தப்பி ஓடிக் கொண்டிருந்தான். வலையில் சிக்கிக்கொண்ட காட்டு யானையைப்போல் அவன் கட்டிலிருந்து விடுபட புரட்சி செய்து கொண்டிருந்தான். விரஜ பூமியில் கன்யாவுடன் சுற்றியபொழுது தன்னுடைய அன்பு வலையில் சிக்கிய கன்யாவுடன் சுகம் அநுபவித்துத் தன் உள்ளத்தில் அவளுடைய இடத்தைத் தாழ்த்திவிடச் சஜ்ஜனின் உள்மனம் சதி செய்த போதிலும் அதில் அவனுக்கு வெற்றி கிட்டவில்லை. அந்தத் தோல்வியால் ஏற்பட்ட வேதனையும், விரஜ பூமியில் தோன்றிப் பூரணமாகாத சிற்றின்ப வெறியும் சேர்ந்து ராஜா சாஹேபின் வீட்டுக் கூட்டத்தில் சித்ராவைப் பார்த்ததும் மறுபடியும் காம உணர்வு கிளர்ந்தெழுந்தது. சித்ராவைப் பார்த்ததால்தான் அவ்வாறு தோன்றிற்று என்பதில்லை; பழக்கமுள்ள எந்த ஒரு பெண்ணைப் பார்த்திருந்தாலும் அவன் அவளிடம் மயங்கித்தான்

இருப்பான். ஆனுல் இந்தத் தடவை அப்படிப்பட்ட பெண்ணுடன் சேர்ந்திருந்தது சித்ராவுடன் வாழ்ந்த சிற்றின்ப வாழ்வு அந்த ஒழுக்கமற்ற முறையை அவனுல் சகித்துக்கொள்ள முடியவில்லை. அப்பொழுது அவனுக்குத் தன் உள்ளத்தின் வீழ்ச்சி தெரியவந்தது. அவனுக்குத் தன்னிடமே பெரிதும் வெறுப்பு ஏற்பட்டது. அந்த நேரத்தில்தான் கன்யா அவனுடைய நற்பண்புகளுக்கு எடுத்துக் காட்டாக நேற்று வந்து அகந்தையற்ற தன் அன்பைக் கொடுத்துப் பகலிலும், இரவில் ரூப்ரத்தனின் வீட்டிலிருந்து திரும்பும் பொழுதும் அவனைக் காப்பாற்றிவிட்டாள். நேற்றிலிருந்து கன்யா (குற்றமற்ற) முழுமனத்துடன் அவனுடைய எஜமானியாகவும், அவன் வீட்டுத் தலைவியாகவும் ஆகிவிட்டாள். அவளுடைய நினைவு, அவளுடைய பார்வை, அவளுடைய ஸ்பரிசம் எல்லாமே சஜ்ஜனிடம் எஞ்சியிருந்த குறைகளையெல்லாம் விலக்கிவிட்டு நல்லவனுக மாற அவனை ஊக்குவித்தன. டிரைவர் அங்கே இல்லாததால் அவனுக்குக் கோபம் வந்தது. காரின் சாவிகூட அவனிடம் இல்லை. இல்லையென்ருல் அவன் அவ்வளவு கவலைப்படமாட்டான். ஆனுல் அப்பொழுது டிரைவர்மீது அவனுக்கு அதிகமான கோபமும் தோன்றவில்லை. ''திருவிழா நாள், எவ்வளவு நேரம்தான் பாவம் அவன் காரிலேயே உட்கார்ந்திருப்பான்? அவனும் மனிதன் தானே!'' என்று மஹிபால் கூறுவது அவனுக்குச் சரியென்றே தோன்றிற்று.

மனிதத்தன்மை, கன்யாவின் கட்டளையைக் காப்பாற்றுவது— இதே கவலையில் அவன் அப்படியே நின்றுகொண்டிருந்தான். மஹிபால் அவனுடைய கையைப் பிடித்து இழுத்தவனுக, ''வா...அப்பா! இப்பொழுதே பெண்டாட்டிக்கு அடிமையாகி விடாதே . ஆனுல் நல்ல மனைவிக்கு அடிமையாவதில்தான் நம்மைப் போன்றவர்களுக்கு நன்மை உண்டு!'' என்று கூறினுன்.

வெற்றிலைக்காரன் ஜமுனுவின் கடையில் வெற்றிலையை எதிர் பார்த்தவாறு நின்று கொண்டு அவர்கள் அருகிலேயே இருந்த லால் மகாராஜின் தேநீர், குளிர்ந்த பானம் முதலியவற்றின் கடையில் உட்கார்ந்திருந்தோரின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். தேர்தல் செய்திகளை அங்கே கேட்க முடிந்தது. அந்தப் பேச்சுக்களைக் கேட்பதில் சஜ்ஜனுக்கும் மஹிபாலுக்கும் மகிழ்ச்சியாக இருந்தது. வெற்றிலை போட்டுக்கொண்ட பிறகு, ''வா, போகலாம்'' என்று சஜ்ஜன் கூப்பிட்டான்.

ஒரு விநாடி மஹிபால் யோசனையில் ஆழ்ந்திருந்தான், மறுபடியும் சஜ்ஜன் அழைத்த பொழுது அவன், ''நீ போ. நான் இங்கேயே சிறிது சுற்றிக்கொண்டிருக்கிறேன். இங்கே மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்று கூறினுன்.

''நீ ஏதோ வேலையாக அந்த இடத்தை விட்டுக் கிளம்பினு யல்லவா ?''

''அப்படியொன்றும் இல்லை சும்மா, சரி இப்பொழுது நீ போ. ஆனுல் எப்படிப் போவாய் ? உன் டிரைவர் ?''

சஜ்ஜன் அவனுடைய முகத்தைக் கூர்ந்து கவனித்தவாறு எதையோ அறிந்து கொள்ள முயன்று கொண்டே, ''அவன் வர வில்லையானுல் பஸ்ஸில் போய்விடுகிறேன்'' என்று கூறினுன்.

சஜ்ஜன் போய்விட்டான். மஹிபால் பூங்காவின் பக்கம் சென்றுன். மக்களின் கூட்டம் விசித்திரமாகவும், ஆவேசம் நிறைந் ததாகவும் இருந்தது. தேர்தல் பேச்சைத் தவிர வேறு எதுவுமே காதில் விழவில்லை. கிழவர்கள், நோயாளிகள், நொண்டி, முடம் முதலியவர்கள்கூட வோட்டுப்போட வந்து கொண்டிருந்தார்கள். பெண்களிடம் மிகவும் ஆர்வம் காணப்பட்டது. மக்களாட்சி முறையைப் பழங்காலந்தொட்டு ஏற்றுக்கொண்டு வரும் இந்திய நாட்டுப் பெண்களுக்கு வரலாற்றிலேயே முதன் முறையாக வாக்குரிமை கிடைத்திருந்தது. பெரும்பான்மையான பெண்கள் தங்கள் கணவன்மாரின் விருப்பப்படி வாக்களித்தார்கள். சிலர் தங்கள் உரிமையைத் தம் விருப்பப்படி பயன்படுத்தினுர்கள். ஒரு பெரியவர் அடிக்கடி தம் மனைவிக்கு ஜனசங்கத்தின் விளக் கொளியைக் காக்கும்படி கட்டளையிட்டுக் கொண்டிருந்தார். ஆனுல் அவருடைய மனைவி காங்கிரஸ் மாடுகளுக்குத் தீனி போட விரும்பினுள். இருவருக்கும் சண்டை மூண்டுவிட்டது. ஆவே சத்தில் மனைவி பூங்காவையே வீடெனக் கருதி கணவனின்மீது கோபத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தாள், ''இதோ பார், இன்று நான் வாழ்க்கையில் முதல்முறையாக வோட்டுப்போட வந்திருக்கிறேன், என் விருப்பப்படிதான் நான் வோட்டுப் போடு வேன். உன்மேல் ஆணை. இனியும் ஏதாவது வம்பு செய்தால் என் சடலத்தைத்தான் நீ பார்க்க வேண்டும்'' என்று கூறினுள்.

கணவன், மனைவியின் மாடு-விளக்குச் சச்சரவு நடந்து கொண் டிருந்தபொழுது அந்த வழியாக வந்த ஒரு போலீஸ்காரன் கணவ னின் கையைப் பிடித்துக் கொண்டான். வோட்டுப் போடுமிடத் தில் பிரசாரம் செய்வது குற்றமாயிற்றே ?

நாற்சந்தியிலுள்ள சில வேசிகள் சுதந்திரத்தைப்பற்றிப் பறை சாற்றும் நாகரீக உலகிற்கு அன்று நேரிடையாகவும் உண்மையாக வும் உள்ளத்தைக் குத்தும் விடையளித்தார்கள். அவர்களிடம், ''தந்தையின் பெயர்?'' என்று கேட்கப்பட்டது. அவர்களிட மிருந்து 'பணம்' என்று பதில் கிடைத்தது, ''கணவன் பெயர்?'' என்று கேட்டதற்கும் ''பணம்'' என்ற பதிலே கிடைத்தது. அவர்களில் இருபத்திரண்டு, இருபத்து மூன்று வயது நிறைந்த

மூக்குத்தியணிந்த ஓர் இளம் பெண் கூறினாள், "இல்லை, என்னை வோட்டுப்போட அழைத்து வந்திருக்கிறாரே இவர் தாம் என் கணவர்."

தேர்தல் நிகழ்ச்சிகளைப் பார்த்து மஹிபாலின் உள்ளம் மகிழ்ந்தது. அந்தத் தேர்தல் ஒரு பெரிய கேலிக்கூத்தாக அவனுக்குத் தோன்றிற்று. ஒரு புறம் இந்தியாவின் இந்த அபூர்வமான குடியாட்சித் தேர்தல், வயது வந்தோர் வாக்குரிமையை ஏற்றுக் கொண்டு சமுதாயம் முழுவதற்கும் தன் விருப்பப்படி அரசாங்கம் அமைக்கச் சுதந்திரம் அளித்திருந்தது. பழைய பாரதத்தில் காவலர்களுக்கு அடிமைப்பட்ட குடியாட்சியில் பெண், தொழிலாளி, வியாபாரி, அடிமை முதலியோருக்குத் தங்களது அரசாங்கத்தை அமைக்கும் உரிமை இல்லாமலிருந்தது. மக்கள்மீது ஆட்சி செலுத்தும் உரிமை க்ஷத்திரிய காவலர்களுக்குத்தான் உண்டு. இவ்வாறு ஒருபுறம் முன்னேற்றமடைந்திருந்த போதிலும் இன்றையக் குடியாட்சியின் தேர்தல் முற்றும் அர்த்தமற்றதாக இருந்தது. சத்தம் போட்டுக் காரியத்தைச் சாதித்துக் கொள்கிறார்கள். திடீரென்று மஹிபாலுக்கு கல்கத்தா ஷேர் மார்க்கெட்டில் உண்டாகும் கடுமையான கூச்சல் ஞாபகம் வந்தது. ஷேர் மார்க்கெட்டின் இரைச்சலும் குடியாட்சித் தேர்தலில் போடப்படும் கூக்குரலும் ஒன்றுபோல் அவனுக்குத் தோன்றிற்று. பணமும் பதவியும் அடைவதற்காக உண்டாகியிருக்கும் இந்தப் பைத்தியக்கார முறை மஹிபாலுக்கு வியப்பையளித்தது. பத்தொன்பதரை நூற்றாண்டுகள் பழமையானதான கிறிஸ்துவ நாகரிகத்தையும் அதை விட மூவாயிரம், நாலாயிரம் ஆண்டுகள் பழையதான இந்திய நாகரிகத்தின் உயர்ந்த கோட்பாடுகளையும் நினைத்துப் பெருமைப் படும் இன்றைய நாகரிக மக்களும், சிந்தனையாளர்களும், சமுதாய ஊழியர்களும் நியாயத்தின் பெயரால் நடக்கும் இந்தப் பொருளற்ற செயலை எவ்வாறு பொறுத்துக் கொள்ளுகிறார்கள்? வெறும் கூக்குரலிட்டுச் செய்யப்படும் தந்திரம், உயர்ந்த அறிவிலிருந்து தோன்றியதாக ஆக முடியாது. இந்தச் சுயநலம் நிறைந்த ஒழுக்கமற்ற வெறும் சாமர்த்தியம் மனித அறிவை மயக்கச் சதி செய்கிறது!

பேசிக் கொண்டிருக்கும் பொழுது திடீரென்று நாக்கைக் கடித்துக்கொண்டு விடுவதுபோல் மஹிபாலின் உள்ளம் துடித்தது. உள்ளம் பிரிந்துவிட்டது. ஓர் உள்ளத்திற்கெதிரில் மற்றுமோர் உள்ளம் நாணிற்று. நாகரீகம், உயர் லட்சியம், நியாயம், அழகு, உண்மை, மனிதத்தன்மை என்ற பெரிய பெரிய சொற்களை அடிக்கடி எண்ணி அவற்றுக்குப் புதுப் புதுப் பொருள் அளிக்கும் கலைஞனும், இலக்கியக் கர்த்தாவும் இன்று தம் குற்றத்தை

நினைத்து உணர்வற்றுப் போயினர். இந்த உணர்வற்ற நிலையில் மஹிபாலின் கருத்துத் திறன் மறைந்து போயிற்று. பற்பல காரணங்களால் ஏற்படும் இவ்வாறான உள்ள உணர்வுகளில் அவன் ஒரேயடியாகச் சமைந்து போய் விடுவது வழக்கம்.

அப்பொழுது மஹிபாலினால் தன் உள்ளத்துச் சூனியத்தைச் சகிக்க முடியவில்லை. அவன் பிடிவாதமாகத் தன் நேர்மையை அடக்கிக் கொண்டவாறு நினைக்கலானான்: ''இவ்வாறு இருக்கக் கூடாது. நான் என் நிலையைச் சீர் படுத்தியாக வேண்டும். சகுந்தலாவுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும். வரதட்சணை, உலக விவகாரம் முதலியவற்றில் செய்யப்படும் வீண் செலவை நியாயமற்ற செயலாகக் கருதிய போதிலும் நான் அதைச் செய்துதான் ஆக வேண்டும். தனி மனிதனால் என்ன செய்ய முடியும்? உலகம் இப்படிப்பட்ட போக்குகளை ஏற்று நடக்கும் வரையில் ஒரு மஹிபால் சுக்லா தனியாக என்ன செய்து விடமுடியும்? அப்பாவி கல்யாணியின் உள்ளத்தை அவன் எவ்வளவு தான் அடக்கக்கூடும்? அவள் சகுந்தலாவின் திருமணத்தை ஆடம்பரமாக நடத்த விரும்புகிறாள். அது அவளுடைய பரந்த உள்ளத்தைக் காட்டுகிறது. இந்தக் காலத்தில் எந்தப் பெண் தனது நாத்தியின் மகளுக்காக இவ்வளவு கவலைப்படுவாள்? நானும் ஒரு மாதத்திற்குள் சக்குவுக்குத் தகுந்த நல்ல குடும்பத்து வரனைத் தேடி நிச்சயித்துத் திருமணமும் செய்துவிட்டு அப்புறம் என் குடும்பமும் இருக்கிறதே! யாருக்குத்தான் குழந்தைகளிடம் அன்பு இருக்காது! தம்பி, தங்கைகளுக்காக இவ்வளவு உயிரைக்கொடுத்த நான் என் குழந்தைகளின் வளர்ச்சிக்கு ஆசைப்பட மாட்டேனா? ஆனால் . திருடன் சுயநலக்காரன்...குலத் துரோகி...''

மஹிபாலின் மற்றுமோர் உள்ளம் இந்த நினைவுகளையெல்லாம் தாண்டி, காலஞ்சென்ற தன் தந்தையின் குரலில் தூற்றுவதற்காக உணர்வின் மேல் தளத்தை அடைந்தது. தீவிரமாக எண்ணாத போதிலும் அவன் தன் பலவீனங்களைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தான். சமுதாயக் குறைகளைப் பற்றியும் எண்ணிக் கொண்டிருந்தான். தனி மனிதன், சமுதாயம் இரண்டிலும் குற்றங்கள் இருக்கின்றன. சமுதாயம் மாற்றப்படாதவரையில் தனி மனிதன் என்ன செய்ய முடியும்? ஒருவரின் நடத்தையைப் பொறுத்து மற்றொருவனின் நடத்தை அமைகிறது. சமுதாயம் அமையும்பொழுது தனி மனிதனும் காக்கப்படுகிறான். தனி மனிதன், சமுதாயம் இரண்டின் சேர்க்கைக்கும் இதுவே அடிப்படையாகும். இதிலிருந்துதான் குடும்பம் அமைகிறது. இன்றைய மனிதன் சமுதாயம் இரண்டின் உணர்ச்சியும் இந்தப் போராட்டத்திலேயே கொண்டிருக்கிறது. இன்றைய மனிதன் திறனற்றவன்,

ஆகையால் உயர்ந்த கோட்பாடுகளை அவன் அறியாமல் அழித்து விட்ட போதிலும் அவனை மன்னித்தாக வேண்டும்.

இம்முறை அவனது உள்ளம்—தந்தையின் குரலில் அல்ல—மறு படியும் அவனை ஏசத் தொடங்கிற்று; மஹிபால் அறியாமலேயே முனகினான். மலர்ந்த உள்ளறிவின் ஒளி மஹிபாலின் உள்ள உணர்வை மறைக்காமல் தடுத்துக் கொண்டிருந்தது. அவனது உணர்வே அவனுக்குப் பெரிதும் வேதனையைக் கொடுத்துக்கொண் டிருந்தது. அஞ்சியவனாய் மஹிபால் விழித்து விழித்து நாற்புற மும் பார்க்கத் தொடங்கினான். அவன் நடுத்தெருவில் வந்து நின்றான். ஒரு மோட்டார் அருகில் வந்ததும் கையைக் காட்டி அதனை நிறுத்தினான். மோட்டார் நின்றது.

''அடே! நீ எங்கே இங்கே வந்தாய்?'' என்று கேட்டுக் கொண்டே, ''வா! கொஞ்சம் உன்னிடம் வேலை இருக்கிறது'' என்று ரூப்ரத்தன் கூறினான்.

''வா போகலாம். தேர்தலில் ஒன்றும் விசேஷமில்லை. சும்மா வேடிக்கை பார்க்க வந்தேன்.''

''இந்தத் தடவை நீ ஏன் தேர்தலில் நிற்கவில்லை?'' என்று மஹிபால் வழியில் கேட்டான்.

''உண்மையைச் சொல்லட்டுமா? வியாபாரியின் மகன் முதலில் தன் தொழிலைத்தான் கவனிப்பான். பிறகுதான் மற்றதெல்லாம்.''

ஒரு காலத்தில் சோஷலிஸத்தைப் பற்றிப் பெரியதாக அளந் தவனும், மக்கள் நலனைப் பற்றிப் பெரியதாகப் பேசித் தன்னை ஏமாற்றியவனுமான ரூப்ரத்தன்தானே இவன் என்று மஹிபால் மனத்திற்குள்ளேயே எண்ணலானான். திடீரென்று மஹிபாலி னுடைய தோளில் கையை வைத்து ரூப்ரத்தன், ''மஹிபால்! எனக்கு அமைச்சர் பதவி கிடைக்க வாய்ப்புக் கிடையாது. என்னை விடப் பெரிய பெரிய பேர்வழிகளெல்லாம் வேட்பாளர்களாக இருக்கிறார்கள். இந்த முறை உதவி அமைச்சர் பதவிக்குக் கூடப் போட்டியாக இருக்கிறது. ஆனால் இதெல்லாம் எனக்குப் பிடிக் காது. மற்றொன்று; இப்பொழுது நான் எனது அதிக நேரத்தை வியாபாரத்தில் ஈடுபடுத்தாமல் போனால், காலம் எவ்வாறு மாறிக் கொண்டிருக்கிறது என்பதுதான் உனக்குத் தெரியுமே!'' என்று கூறினான்.

''அடே! உன்னைப் போன்ற லட்சாதிபதிகள்கூட காலத்தை நினைத்து அழுவதா?''

''காலம் போகும் போக்கைப் பார்த்தால் அவர்கள் கூடச் சிக்கிக் கொண்டு விடுகிறார்களப்பா! ஒவ்வொரு விநாடியும் கவன மாக இருக்க வேண்டியிருக்கிறது.'' என்று ரூப்ரத்தன் ஆழ்ந்த கருத்துடன் கூறினான்.

"நீ இந்த அரசியல் தொந்தரவை விட்டது நல்லதாகப் போயிற்று."

"அப்படியொன்றும் ஒரேயடியாக விட்டுவிடவில்லை. சரி, அது போகட்டும், நான் ஒரு திட்டம் போட்டிருக்கிறேன். நீ உன்னுடைய புதுப் புத்தகங்கள் எல்லாவற்றையும் எனக்குக் கொடுத்து விடு. நான் உன்னுடைய பழைய புத்தகங்களின் காப்பிரைட்டை உனக்குத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். ராயல்டி முறையில் வாங்கிக் கொள்ளுகிறேன். இருபது சதவிகிதம் ராயல்டி. சொல்லுவதை, ஒப்புக் கொள்ளுகிறாயா?"

'இவனுக்கு மறுபடியும் தனது மதிப்பைக் காத்துக் கொள்ள வேண்டும். அதற்காக எனக்கு ஆசை காட்டுகிறான். ஆனால் இவனிடமிருந்து நானும் பயனடைய வேண்டும்' என்று எண்ணிக் கொண்டே மஹிபால் வெளிப்படையாக, "எனக்கு எல்லாவிதத்திலும் லாபந்தான், இனிக் கவனமாக .." என்று கூறினான்.

"பழைய விஷயங்களை மறந்து விடப்பா! உண்மையில் நீ அப்பொழுது உன்னுடைய லட்சியக்கனவை நனவாக்கும் வேகத்தில் இருந்தாய். என் மனத்தின் உள்ளத்தைச் சொல்லட்டுமா! என் மனத்தில் உன்னைப்பற்றித் தவறான எண்ணம் தோன்றியதேயில்லை. அதே அன்பு அதே மரியாதைதான்...;'

"அதையெல்லாம் சொல்ல வேண்டியதில்லை. நான் பழக்கத்தாலேயே அறிவேன். நல்லது! என் புத்தகங்களுக்கு எவ்வளவு முன் பணம் கொடுப்பாய்?"

"எத்தனை புத்தகங்கள் இருக்கின்றன?"

"என்னுடைய மூன்று புத்தகங்களின் புதுப் பதிப்புகள் வெளிவரவில்லை. புத்தகம் வெளியிடுவோர்கள் மரக்கட்டைகளாக இருந்தார்கள். இப்பொழுது நான் ஒரு புதுக் கதை தொடங்கியிருக்கிறேன்."

"மூவாயிரமோ, நாலாயிரமோ எது கேட்டாலும் கொடுக்கிறேன்."

"என் பழைய புத்தகங்களுக்கு?"

"முன்னைவிட மிகச் சாமார்த்தியசாலியாக ஆகிவிட்டாயே!"

"அநுபவத்தால் கற்றுக் கொண்டதுதான்."

"அதுவும் சரிதான், இனி எனக்கும் உனக்கும் நன்றாக ஒத்துப் போகும். என்ன வேண்டுமானாலும் வாங்கிக் கொள்."

"அதற்குப் பிறகு ஏதாவது வார இதழ் வெளியிடுவதாக எண்ணமா?"

"ஆம்! வெளியிடவும் செய்யலாம். உன்னைப்பார்த்த பிறகுதான் எனக்கும் இதற்கெல்லாம் ஆர்வம் ஏற்படுகிறது. புத்தக வெளியீட்டில் இனி முழுமையாகக் கவனமும் செலுத்துவதாக எண்ணம்.

நான் சிறிது புதுமுறையில் பரீட்சை செய்து பார்க்கலாம் என்று நினைக்கிறேன். 'பெங்குவின்' வரிசைபோல் இந்திய மொழிகளில் உள்ள சிறந்த நாவல்களின் ஒரு தொடர்ச்சியை வெளியிடலா மென்று எண்ணம். அமெரிக்க முறையில் பிரசாரம் செய்ய வேண்டும். இந்தியாவின் ஒவ்வொரு பெரிய நகரத்திலும் மஹி பால் சுக்லாவின் நாவல்களைப்பற்றி, அதாவது நான் வெளியிடப் போகும் நூல்களின் ஆசிரியர்களைப்பற்றி இலக்கியக் கூட்டங்களில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் படிக்கப்படும். பள்ளிகள், கல்லூரிகள், சர்வகலாசாலைகள், பெரிய சிற்றுண்டி விடுதிகள், ஸ்டேஷன் பிளாட்பாரங்கள், பத்திரிகைகள்—எல்லாவற்றிலும் உன்னைப் பற்றிப் பிரசாரம் செய்யப்படவேண்டும். இதுவரையில் இந்தியாவில் புத்தகங்கள் வெளியிடும் எவரும் ஹிந்திப் புத்தகங்களுக்கு ஒரு பெரிய மார்க்கெட் பிடிப்பதைப்பற்றி எண்ணியதே இல்லை என்று நான் உறுதியாக நம்புகிறேன்.''

சேட்டின் மாளிகையை அடைந்தது மோட்டார். மஹிபாலின் உள்ளத்தில் மகிழ்ச்சி மூண்டது. சிறிது நேரத்திற்கு முன்பிருந்த வேதனை மறைந்துவிட்டது, தனக்கு மறுபடியும் நல்லகாலம் வந்து விட்டது என்று அவன் உணரலானான்.

ரூப்ரத்தனின் வீட்டிலும், அவனுடைய நூல்நிலையத்திலும் திட்டம் போடுவதிலேயே இரண்டு மணி நேரம் போய்விட்டது. ''எனக்கு ஓர் உதவி செய்கிறாயா?;' என்று மஹிபால் கேட்டான்.

''சொல்லேன்!''

''நான் ஒரு மாலையை விற்கவேண்டும்.''

''தங்க மாலையா?''

''இல்லை, நவரத்தின மாலை.''

''எங்கிருந்து கிடைத்தது?''

''என் அம்மாவின் மாலை, நல்ல கனமானது.''

''எதற்காக விற்கிறாய்?''

''என் அக்காளுடைய மகளுக்குத் திருமணம் செய்யவேண்டும்.''

''எத்தனை ரூபாய் செலவாகும்?''

''பதினைந்தாயிரம்.''

''விலை மிகவும் அதிகமாக இருக்கிறது, மஹிபால்! அதற்குப் பிறகும் உனக்குப் பொறுப்பிருக்கிறதே!...தாய் மாமன் வீட்டிலிருந்து எந்த உதவியும்?...''

''நான் கட்டுவையும் மனைவியையும் அழைத்துக்கொண்டு அங்கிருந்து வந்ததிலிருந்து ஒரு காசுகூட வாங்கியதில்லை, இப்பொழுது அவர்களுக்கே கஷ்டம் வந்துவிட்டது. அரசாங்க வேலையும் போய்விட்டது. சமீபத்தில் அவர்கள் வீட்டில் ஒரு பெரிய கொள்ளை நடந்துவிட்டது.''

''அப்படியா?''

''ஆமாம், நான் அப்பொழுது அங்கேதான் இருந்தேன். என் கையால் ஒரு கொள்ளைக்காரன் செத்தும் போனுன்.''

''அப்படியா?''

''ஒன்றும் சொல்லக்கூடியதாக இல்லை. கொள்ளைகளைப்பற்றி நான் கேட்டிருந்தேன். அன்று நேரிடையாகப் பார்த்தேன்.''

''உன்னுடைய மாமன் வீட்டாரில் யாரும்...''

''ஒரு வேலையாள் அப்பொழுதே இறந்துவிட்டான். ஒருவனுடைய நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. ஒருவேளை இதற்குள் அவனும் இறந்து போயிருப்பான், இரண்டு பேருக்குச் சாதாரண காயம் ஏற்பட்டது.''

''ஏதாவது சாமான் கொள்ளையடிக்கப் பட்டுவிட்டதா?''

''ஒன்றரை லட்ச ரூபாய் நகைகள் போய்விட்டன! பெருத்த நஷ்டம் ஏற்பட்டுவிட்டது.''

''சரி, அப்படியானல்.''

''அதனல் எனக்கு இன்னும் கவலையாக இருக்கிறது.''

''எதைப்பற்றி?''

''அந்த மாலையைப் பற்றித்தான்!''

''சரி, சரி எடுத்து வா, பார்க்கலாம். இந்தக் கொள்ளையர் கூட்டமும் பழங்காலத்துக் கம்யூனிசம்தான், பணக்காரர்களைக் கொள்ளையடிப்பது, ஏழைகளுக்குப் பகிர்ந்தளிப்பது. ''

''நான் இதை அரசாட்சிக்கு அடிப்படையாகக் கருதுகிறேன். கொள்ளையர்கள்தாம் மிகவும் சக்திவாய்ந்தவர்களாக ஆகி, அரசர்களாகி வந்தார்கள். வியாபாரிகளின் அடிமைத் தளையிலிருந்து மக்கள் வாழ்க்கையை விடுவித்து—''

''என்ன? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!''

''மொஹஞ்சதரோ, ஹரப்பா போன்ற நகரத்து அரசுகளை அழித்து அந்த வீரர்கள் 'நிலத்தைப்பற்றிக்கொள்ளுங்கள், உழுது பயிரிடுபவனுக்கே நிலம் சொந்தம்' என்று கூறத் தொடங்கினுர்கள். அந்த வீரர்கள் காப்பவர்களாவும், நல்ல முறையில் அரசைக் கண்காணிப்பவர்களாகவும் இருந்துகொண்டு குடியானவனிடமிருந்து உற்பத்தியின் ஆறுவது பகுதியை வரியாகப்பெற்றுக் கொண்டு வந்தார்கள். மற்றவை குடியானவனின் லாபமாக இருந்தன. ஆகையால் முதலில் வியாபாரிகளின் கூலியாளாக மட்டுமிருந்த குடியானவன், சுதந்திரம்பெற்றுப் பணக்காரனுக மாறிவிட்டான். இது அந்தக் காலத்தில் பெரிய முன்னேற்றமாக இருந்தது.''

''நீ வரலாற்றை உன்போக்கில் மாற்றுவதுபோல் தெரிகிறது!''

''அப்படியொன்றுமில்லை, உண்மை என்னவென்றுல், இந்திய

வரலாறு ஒரு முழு உருவத்தைப் பெறுகிறது. மொஹஞ்சதரோ, ஹரப்பா முதலியவற்றின் ஆராய்ச்சி வெறும் வேடிக்கையில்லை; அது நமது பல வேதபுராணக் கதைகளைப் பொருளற்ற நிலையிலிருந்து பொருளுள்ள நிலைக்குக் கொண்டு வருகிறது. அது மட்டுமில்லை; நமது வளர்ச்சியின் வரலாற்றை அறிந்துகொள்வதற்கு உதவுகிறது. உதாரணமாக, 'புரந்தர்' என்ற சொல்லை எடுத்துக் கொள். 'நகரங்களை எரிக்கக்கூடிய' இந்திரன் உண்மையிலேயே வீரர்களுக்கு எடுத்துக்காட்டாக இருந்தான். நகர அரசுகளின் காவலர்கள் இந்த வீரர்களுக்கு எதிரிகளாக இருந்தார்கள். ஏனென்றால் அவர்கள் வியாபாரிகளாக இருந்தார்கள். விவசாயம் அவர்களுடைய முக்கிய தொழிலில்லை. சாப்பிடுவதற்கு எவ்வளவு தேவையாக இருந்ததோ அவ்வளவு பொருள்தான் அவர்கள் உற்பத்திப்பண்ணச் செய்தார்கள். ஆரிய வீரர்கள் மக்களின் உற்பத்தி முறையையே மாற்றிவிட்டார்கள். விவசாயத்தின்மீது மக்கள் அதிகமாகக் கவனம் செலுத்தத் தொடங்கினார்கள். தங்கள் வயிற்றை நிரப்புவதற்காகப் பெரிய வியாபாரிகளுக்கு அடிமைப் பட்டிருந்த தொழிலாளர்கள் முதலியோர் விவசாயத்தின்மூலம் சுதந்திரம் பெற்றார்கள். 'உயர்ந்த விவசாயம், நடுநிலையான குடும்பம்' என்ற பேச்சுப் பரவிவிட்டது. இதனால் சமுதாய முறையே அடியோடு மாறிவிட்டது.''

''நீ கூறுவதைக் கேட்பதில் மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. நீ ஏதாவது குடிக்கிறாயா?'' என்று ரூப்ரத்தன் கேட்டான்.

''வேண்டாம், நான் வீட்டிற்குப் போக வேண்டும்.''

''மனைவிக்கு எதிரில் குடித்துவிட்டுப் போவதற்குப் பயமாக இருக்கிறதா? அப்படியானால் இங்கேயே இருந்துவிடு, பழைய பழக்கம். உன் மனைவிக்கும் தெரிந்ததுதானே! நான் சொல்லி அனுப்பிவிடுகிறேன்.''

''ஒரு முறை வீட்டிற்குப் போகத்தான் வேண்டும், அப்படியே அந்த மாலையையும் எடுத்து வருகிறேன். விலையுயர்ந்த பொருளை அஜாக்கிரதையாக—''

''அஜாக்கிரதை எப்படி! உன் மனைவியிடந்தானே இருக்கும் மாலை!''

''ஆமாம்...! அவளிடம்தான்...அவளிடம்தான் இருக்கிறது, ஆனாலும் கொள்ளை நடந்ததிலிருந்து—''

''போப்பா! நீயும் அப்பாவி பிராம்மணன்தான்! கொள்ளைக் காரன் ஒன்றும் உன் வீட்டிற்கு வரப் போவதில்லை.''

மஹிபால் தயக்கத்துடன் சிரித்துக்கொண்டு, ''இல்லை, ஒருமுறை போய் வருகிறேன். சரி, இன்று உன் வீட்டிலேயே இருந்து விடுகிறேன், வீட்டில் சொல்லிவிட்டு வந்துவிடுகிறேன்.''

ரூப்ரத்தன் ஸ்விச்சை அழுத்தி மணியடித்தான். காவற்காரன் வந்தான்.

''வண்டியை எடுக்கச்சொல்லு. பண்டித்ஜீயின் வீட்டிற்குப் போக வேண்டும்.''

## 36

ஹோலிக்கு ஒரு நாள் முன்பு, மாலை நேரம் சஜ்ஜன் நாள் முழுவதும் ஒரு படம் வரைவதில் ஈடுபட்டிருந்துவிட்டுப் பின்புற வராண்டாவில் தேநீர் அருந்திக் கொண்டிருந்த பொழுது திடீரென்று பழைய வாயிற்காப்போன் வந்து, ''ஐயாவின் மாமியார் வந்திருக்கிறார்கள். அவர்களுடன் ஐயாவின் மைத்துனரும், ஒரு பெண்மணியும் வந்திருக்கிறார்கள்'' என்று தெரிவித்தான். புது உறவுகளின் பெயரைக் கேட்டு, சஜ்ஜன் திடுக்கிட்டான். அந்த உறவுகளைப் பற்றி சஜ்ஜனுக்குத் தெரியாது என்பதில்லை. திருமணம் செய்து கொண்டபிறகு மாமியார் வீட்டு உறவுகளும் ஏற்படத்தானே செய்யும்? ஆனால் இவ்வாறு எதிர்பாராமல்? ...

காலம் சென்ற ராஜ்பஹாதுர் லாலா கன்னோமல்லின் பேரனும் கலைஞனும் தன் மாப்பிள்ளையுமான சஜ்ஜனின் டிராயிங்ரூமில் நான்கு புறமும் விழித்து விழித்துப்பார்த்துக் கொண்டிருந்த மாஸ்டர் ஜகதம்பா சஹாயின் மனைவி தன் மகளின் அதிருஷ்டத்தை நினைத்துப் பொறாமைப்பட்டுக் கொண்டிருந்தாள். அவளுக்கு அருகிலேயே தெய்வத்தால் தண்டிக்கப்பட்ட அவளுடைய மருமகள் உட்கார்ந்திருந்தாள். மற்றொரு சோபாவில் சஜ்ஜனின் மைத்துனர் சம்மணம் கூட்டிக்கொண்டு நெற்றியிலும், கண்களுக்கருகிலும் குங்குமப் பொட்டுக்கள் இட்டுக்கொண்டு கண்களை மூடியவண்ணம் தியானம் செய்பவர் போல் பத்மாசனத்தில் அமர்ந்திருந்தார்.

சஜ்ஜன் சிறிது தயக்கத்துடன் அறையில் நுழைந்தான். மாமியாரைப்பார்த்தான். அவள் உயரமாகவும் இரட்டை நாடியான உடலுடனும் காணப்பட்டாள். இளமையில் அழகாக இருந்திருப்பாள். இப்பொழுது வெற்றிலை போட்டுக்கொள்வதால் உதடு கறுத்திருந்தது. கண்கள் அழுக்காக இருந்தன. பல நாட்களாகக் குளிக்காதவள் போல் காணப்பட்டாள். இளம் பெண் முகத் திரை போட்டுக்கொள்ளாமல் இருந்த போதிலும் அடங்கி ஒடுங்கி இருந்தாள். அவளுடைய மாநிற முகத்தில் வாட்டமும் வேதனையும் காணப்பட்டன. மைத்துனர் முதற்பார்வையிலேயே விசித்திர

மாகத் தோன்றினர். அவனுக்கு உள்ளுக்குள்ளேயே பெருஞ் சிரிப்பு வந்தது. சஜ்ஜனைப்பார்த்ததும் மாமியாரும் மருமகளும் எழுந்து நின்றார்கள். மைத்துனர் கண்களைத்திறந்து கழுத்தை வளைத்துச் சிவன் மன்மதனை எரித்தது போல் தம் சகோதரியின் கணவனை நோக்கினர். ''பஜ்ரங்க்—பஜ்ரங்க்'' (அனுமான்) என்று கத்திவிட்டு குனிந்து கொண்டு முழங்கால்களை ஆட்டியவாறு உட்கார்ந்து கொண்டிருந்தார். சஜ்ஜன் கை கூப்பி வணங்கினன். மாமியார் ஆசி வழங்கினள்.

''இவ்வளவு பெரிய இடம் கிடைப்பதற்கு என் பெண் போன பிறவியில் மிகவும் புண்ணியம் செய்திருக்க வேண்டும். தம்பி, உண்மையாக நாங்கள் உன்னுடைய வேலையாட்களோடு சம்பந்தம் செய்துகொள்ளக் கூடத் தகுந்தவர்களில்லை. உன்னைப்போன்ற மருமகனைப் பெற்றது எங்கள் பாக்கியந்தான்.'' என்று கூறிக் கொண்டே மாமியார் தன் இடுப்பில் செருகி வைத்திருந்த ஒரு கைக்குட்டையை அவிழ்க்கத்தொடங்கினள். அதிலிருந்து ஒரு மோதிரத்தை எடுத்து சஜ்ஜனிடம் அதை நீட்டிக் கொண்டே, ''இதை......'' என்று கூறினள். ''இது என்ன?''

''இதை வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும். முறைப்படி திருமணம் நடந்திருந்தால் எல்லாம் செய்ய வேண்டியிருந்திருக்கும், உங்களிடம் ஒப்பந்தம் செய்ய வேண்டியிருந்திருக்கும், பலதானம், திலகம், வரவேற்பு, விடையளித்தனுப்புவது என்ற சடங்குகளி லெல்லாம் எத்தனையோ கொடுக்க வேண்டியிருந்திருக்கும், நீயோ எங்களை ஒரு காசுகூடச் செலவு செய்ய விடவில்லை!'' சஜ்ஜனின் மாமியார் தன் அன்பு தோய்ந்த கண்களிலிருந்த வாத்ஸல்யத் துடன் ஒரு கவர்ச்சியை உண்டாக்கிக்கொண்டு தன் மாப்பிள்ளையின் வலது கையைப்பிடித்து பவள மோதிரத்திற்கருகில் தொள தொள வென்றிருந்த தங்க மோதிரத்தைப் போட்டு விட்டு ஆசிகள் அளிக்கத்தொடங்கினள். சஜ்ஜனுக்கு மாமியாரின் நடத்தையில் அன்பு தோன்றிய போதிலும் செயற்கை காணப்பட்டது.

''ஹரி ஓம்! பஜ்ரங்க்!'' என்று கூறிக் கொண்டு மைத்துனர் சமாதியிலிருந்து திடுக்கிட்டு எழுந்தார். ஒரு முறை மூச்சை இழுத்து இமைகொட்டாது தம் சகோதரியின் கணவனைப்பார்க்கத் தொடங்கினர். சஜ்ஜனுக்கு புரியாத ஒருவித அச்சம் அவரைக் கூர்ந்து பார்த்த போது தோன்றியது. இளைத்து வாடிய துன்புற்ற மருமகள் சுருங்கி உட்கார்ந்திருந்தாள்.

''குழந்தை! அத்திம்பேரின் வாயில் சர்க்கரை போடு அப்பா! என்ன பார்த்துக் கொண்டே இருக்கிறாய்? (சஜ்ஜனைப் பார்த்து) இவனுக்கு ஆரம்பத்திலிருந்தே தன் சகோதரியிடம் மிகுந்த அன்பு

உண்டு. அவளுக்கும் அண்ணனிடம் ஏராளமான அன்பு உண்டு. என்ன சொல்வது? விதி என்னை வாட்டிவிட்டது.''

வெளியே போர்ட்டிகோவில் கார் வந்து நின்றது. காரின் கதவு திறக்கப்பட்டு மூடப்படும் சத்தம் காதில் விழுந்தது. சஜ்ஜனின் உள்ளத்திற்கு குளிர்ந்த காற்று வீசியது போல் இருந்தது. அவன் முகம் மலர்ந்தது. கண்கள் வாயிலை நோக்கின. சஜ்ஜனுக்கு இந்த உறவினர்களுடன் இருந்தது சிறிது விசித்திரமாகப் பட்டுக் கொண்டிருந்தது. கன்யா ஹாலில் வந்ததுமே சஜ்ஜனைக் கவனித்தாள். அவன் சிக்கன் சேலையும், பிஸ்தா நிறக்கம்பளி பிளவுசும் சாக்லேட் நிறப்போர்வையும், மெல்லிய செருப்பும் அணிந்திருந்தாள். அவள் மிகவும் அழகாகத் தோன்றினுள்.

மாஸ்டர் ஜகதம்பாசஹாயின் மனைவி பல மாதங்களுக்குப் பிறகு தன் மகளைப் பார்த்தாள். சிறு பெண் பெரியவளாக ஆகி விட்டாள். முகத்தில் பெருமிதம் காணப்பட்டது. நடை, பழக்க வழக்கங்கள் முதலியவற்றிலும் முன்னை விட வேற்றுமை தோன்றிற்று. ஆனுல் தாய், அண்ணன் முதலியோரைப் பார்த்ததும் பூரித்துப் போன கன்யாவைப் பார்த்த பொழுது அவள் தாய்க்குத் தன் பழைய மகளாகவே காட்சியளித்தாள். தாயின் மனத்தில் பலவாருன அவநம்பிக்கைகள் தோன்றிய போதிலும் அவளுக்குத் தன் மகள் சிறு பெண்ணுகவே இருந்தாள். கன்யாவின் கணவனுக்குச் சித்திரம் வரைய அந்தச் சந்திப்பு ஒரு பொருளாக அமைந்தது. தாயின் வாடியமுகமும், தாயைவிட அதிகமாகக் கன்யாவின் அண்ணியின் வாட்டமடைந்த முகமும் கண்களும் கன்யாவைப் பார்த்ததும் மகிழ்ச்சியடைந்த காட்சி சஜ்ஜனின் உள்ளத்தில் மிகவும் ஆழமாகப் பதிந்துவிட்டது. உறவுப்பிடிப்பு எவ்வளவு ஆழமாகவும் இயற்கையாகவும் இருக்கிறது! உறவு எவ்வளவு அதிகமாகக் கவர்கிறதோ அவ்வளவு இனிமையாகவும் வலிமையுள்ளதாகவும் இருக்கிறது. கன்யாவின் தமையன் சோபாவில் அப்படியே உட்கார்ந்திருந்தார். ஒரு முறை கண்களைத் திறந்து மகளும் தாயும் சந்தித்த காட்சியைப் பார்த்துவிட்டு அதை மாயையெனக் கருதி மீண்டும் சமாதியில் மூழ்கிவிட்டார். கன்யா தன் அண்ணியை அணைத்துக்கொண்டாள். தாயிடம் தனியாகச் சிரித்துப்பேசினுள். தமையனின் காலைத் தொட்டாள். ஆனுல் அவருடைய சமாதி தடைப்படவில்லை. சமாதிநிலையில் அவருடைய முகத்தில் கோபக்குறி தென்பட்டது. அந்தக் காட்சி கேலிச்சித்திரம் வரைபவன் தீட்டிய வெற்றுச் சித்திரம் போல் தோன்றிற்று. ''இந்த மைத்துனன் சரியான பேர்வழி தான்'' என்று சஜ்ஜன் சிறிது வேடிக்கையாகவும், சிறிது வருத்தத்துடனும் எண்ணினுன்.

சஜ்ஜனின் மாமியார் தன் மகளின் கழுத்தில் காஞ்சிகாமணி மாலையை அணிவித்தாள். அந்தக் காட்சியில் ஒரு அன்போ தூய் மையோ காணப்படவில்லை.

''ஹரிஓம்! பஜ்ரங்க்! பஜ்ரங்க்!'' என்று கூறியவாறு மைத்துனர் சமாதியிலிருந்து வெளிப்பட்டார். எல்லோரையும் அவர் கூசும் கண்களுடன் கவனித்தார். ''குழந்தை! நீ எப்படிப்பட்டவண்டா! தங்கையின் வீட்டிற்கு வந்துவிட்டு இப்படி?'' என்று தாய் கேட்டாள்.

''என்ன, மிஸ்டர் சஜ்ஜன் வர்மா! நான் உங்களது மாளிகையில் உட்கார்ந்துகொண்டு பீடி குடிக்கலாமா?''

''அண்ணு? என்ன பேச்சுப் பேசுகிறுய் நீ! குடிப்பதானுல் குடியேன்!'' என்று கன்யா அண்ணன்மீது கோபித்துக்கொண்டு அவனை எச்சரிக்கை செய்ய விரும்பிஞள். சஜ்ஜன் தன் கோட்டிலிருந்து சிகரெட்கேஸையும் லைட்டரையும் எடுத்து மைத்துனர் பக்கம் நீட்டிஞன். ''நான் உங்கள் வீட்டின் எந்தப் பொருளேயும் ஏற்றுக்கொள்ள முடியாது'' என்று மைத்துனர் கூறிஞர்.

சஜ்ஜன் தன் சிகரெட்கேஸை மறுபடியும் பையில் வைத்துக் கொண்டான். ''நான் போகிறேன், டார்லிங், எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது. நீ உன் தாய் முதலியோருக்கு...'' என்று கன்யாவிடம் கூறிஞன்.

''தம்பி! உன்னிடம் ஒரு வேலை இருக்கிறது'' என்று மாமியார் தன் மருமகனிடம் கூறிஞள். சஜ்ஜன் நின்றுன். வனகன்யா தன் கணவனின் முகப்போக்கை கவனித்தாள். கோபப் பட்டவஞகத் தெரியவில்லை. ஆழ்ந்த கருத்துள்ள முகக்குறிக்கிடையில் உதடுகளில் ஒரு மறைந்த சிரிப்பு தவழ்ந்து கொண்டிருந்தது. மாமியார் மருமகனிடம் அருகில் உட்காரும்படி கேட்டுக்கொண்டாள். ''எனக்கு இதுதான் பழக்கம்'' என்று கூறியவாறு சஜ்ஜன் நின்றுகொண்டிருந்தான். மாஸ்டர் ஜகதம்பாசஹாயின் மனைவி ஏதோ சொல்லத் தொடங்கும்பொழுது மகன், ''தங்கை'' என்று அழைத்தார்.

''என்ன அண்ணு?''

''நான் இன்று ஏன் இங்கே வந்தேன் தெரியுமா? இதைப்பற்றி நேற்று இரவில் எனக்கும் சங்கர்ஜீக்கும் பெருத்தவாதம் நடந்தது. குழந்தாய்! நீ உன் தங்கையின் வீட்டுக்குப்போக வேண்டும்' என்று சங்கர்ஜீ கூறிஞர். 'நான் ஒருபொழுதும் போக மாட்டேன் என்று கூறினேன். சங்கர்ஜீயும் பிடிவாதமாக இருந்தார். நானும் பிடிவாதமாக இருந்தேன். கடைசியில் அந்த அலீகஞ்ச்* ஆண்டவன்தான் சமாதானம் செய்துவைத்தார்''

---

* அலீகஞ்ஜில் லக்னெளவிலுள்ள பழைய அனுமார்கோவில் இருக்கிறது.

எல்லோரும் அவனையே பார்த்துக் கொண்டு மௌனமாக இருந்தார்கள். கன்யாவின் தாய் சஜ்ஜனிடம் ஏதோ சொல்ல அவசரப்பட்டாள். ஆனால் அவள் மகனே பேசிக்கொண்டே போனார்; ''தங்கை! இப்பொழுது என்னுடைய 'சித்து' முன்னைவிட அதிகமாகிவிட்டது தெரியுமா? நான் நினைத்தால் உன் வீட்டுச் சாமான்களையெல்லாம் ஒரு விநாடியில் என்னுடைய வீட்டிற்குக் கொண்டு போய் விடமுடியும்; ஆனால் நான் செய்ய மாட்டேன். நான் இந்தக் கவர்ச்சியில் ஈடுபடமாட்டேன். என்னிடம் சித்து வந்தபொழுது நீ ஆசைப்பட்டால் உன் தலையணைக்குக் கீழே தினந்தோறும் ஒரு லட்சரூபாய் நோட்டுக்களைக் காணலாம் என்று கூறிற்று. உன் அம்மாவாக இருந்தால் இந்தக் கவர்ச்சியில் சிக்கி இருப்பாள். ஆனால் என் குரு பஜ்ரங்க் என் காதில் மெதுவாக 'விஷ்ணு சஹாய்! இந்த மாயையின் வலையில் விழுந்துவிடாதே. நான் உனக்கு ஆண்டவனைக் காண்பிக்கிறேன்' என்று கூறினார்.''

''மகனே! என்ன எதையெல்லாமோ உளறிக்கொண்டிருக்கிறாய்? கொஞ்சம் மரியாதையாக இருக்க வேண்டுமப்பா!'' என்று கன்யாவின் தாய் கூறினாள்.

''நான் உளறுகிறேனா? உனக்கு என் சித்துத்திறனில் நம்பிக்கை இல்லையா?'' என்று சஜ்ஜனின் மைத்துனர் தம் தாய்மீது எரிந்து விழுந்தார், அவருடைய மனைவியின் முகத்தில் அச்சம் தோன்றிற்று. அவள் மெதுவாகத் தன் மாமியாரிடம், ''அம்மா! நம்பிக்கை இருக்கிறது என்று சொல்லிவிடுங்கள்'' என்று கூறினாள்.

மைத்துனர் பற்களை நெரித்துக்கொண்டு சிவந்த கண்களுடன் முறைத்துப் பார்த்துக்கொண்டு தம் தாயின் பக்கம் போகத் தொடங்கினார். சஜ்ஜன் மைத்துனரின் கைகளைப் பிடித்து வேகமாக இழுத்தவனாய்,'' பேசாமல் உட்காருங்கள் இங்கே'' என்று கூறினான்.

மைத்துனர் அயர்ந்து போய் பிதற்றத் தொடங்கினார்; ''என்னை பீடி குடிக்க விடுவதில்லை. நான் சங்கர்ஜீயிடம் கூறுகிறேன். என் குரு உங்களையெல்லாம் கவனித்துக்கொள்வார். '' என்று கோபத்துடன் விழித்துப்பார்த்துக்கொண்டு பற்களைக்கடித்தவராய் கூறி விட்டுப் பெருமூச்சுவிட்டார்.

மாஸ்டர் ஜகதம்பா சஹாயின் மனைவி தன் மகளிடம், ''அந்த நாளிலிருந்து இவன் நிலைமை இப்படி ஆகி விட்டது. நாங்கள் ஒவ்வொரு விநாடியும் பயந்துகொண்டே இருக்கிறோம், வீட்டின் நிலையைப்பற்றி என்ன கூறுவேன்? (சஜ்ஜனிடம்) தம்பி, வீட்டுக்கு வீடு வாசலாகத்தான் இருக்கிறது. அப்படியிருக்க எங்க வீடு மட்டும் என்ன குற்றம் செய்துவிட்டது? நீயே நியாயம் செய்யப்பா!'' என்று கூறினாள்.

''அதெல்லாம் இருக்கட்டும், சும்மா இப்பொழுது ..'' என்று கன்யா தாயை கவனிக்காமலேயே உள்ளத்தில் வளரும் வேதனையை முகத்தில் அடக்கிக்கொண்டு கூறினாள்.

அவளுடைய தமையன் அதாவது விஷ்ணுசஹாய் திடீரென்று எழுந்து வட்ட மேசையில் வைக்கப்பட்டிருந்த இனிப்புப் பணி யாரத் தட்டில் கை வைக்கத் தொடங்கினார். அவனுடைய தாய் தன் மகளின் வார்த்தைக்கு விடைத் கொடுக்க தொடங்கியவள், அதை நிறுத்திவிட்டு அவனைத்திட்டத் தொடங்கினாள்: ''குழந்தை! உன் மூளை எங்கே போய்விட்டது! தங்கையின் வீட்டில் வந்து...''

''எல்லாம் மாயை, பொய். வாயைமூடு'' என்று கூறிக் கொண்டு அவர் பல இனிப்புப்பண்டங்களை எடுத்து வாயில் நிரப்பிக் கொண்டார்.

மாஸ்டர் சஹாயின் மனைவி தன் மகளையும் மருமகனையும் கருணை யோடு பார்த்தவாறு மெதுவாக, ''இதுதான் நிலைமை. இவனால் வீட்டில் யாரும் தூங்குவதில்லை. ஒரு வேலையும் செய்யமுடிய வில்லை. சமையலறையில் நுழைந்து சமைத்த உணவையெல்லாம் தூக்கி எறிந்து விடுகிறான். இல்லையென்றால் வெளியே விலங்குகளுக் குப் போட்டுவிடுகிறான்.... என்ன சொல்வேன்போ? இவனுடைய கையால் அடிபட்டு எங்கள் உயிர் போகாமல் மிஞ்சியிருக்கிறது. நீ உன் தந்தையைச் சிறைச்சாலைக்கு அனுப்பிவைத்தாய். இப் பொழுது இவனையும் பைத்தியக்கார விடுதிக்கு அனுப்பிவிடு. அப்புறம் எங்களுக்கு ஒவ்வொருவராக விஷம் கொடுத்து...'' என்று கன்யாவிடம் கூறினாள். அவளுடைய தொண்டை அடைத் துக்கொண்டது. கண்ணைத் துடைத்துக்கொண்டாள். கண்ணீர் வந்ததும் நல்லதாகிவிட்டது. அதனால் அவளுடைய கண்களி லிருந்த அழுக்குப் போய்விட்டது.

திடீரென்று சஜ்ஜன் கன்யாவின் தோளில் கை வைத்தவாறு ''இவரை பாலாஜியிடம் அனுப்பிவிடலாமா?'' என்று கேட்டான்.

கன்யா தன் மனவேதனையும், உறுதிசெய்ய முடியாத நிலைமை யையும், கண்களாலேயே வெளியிட்டுவிட்டு, ''அம்மாவிடம் கேட்டுக் கொள்ளுங்கள்!'' என்று கூறினாள்.

தாயின் காதில் அது விழுந்துவிட்டது. ''அறிவு புரண்டு விட்டது. வீட்டில் ஆணே இல்லாமற் போனதால் இவனுக்குத் திமிர் பிடித்து விட்டது'' என்று கூறியவாறு அவள் திடீரென்று மருமகனின் காலில் விழுந்தாள். சஜ்ஜனுக்கு என்ன செய்வ தென்றே புரியவில்லை. அவன் மாமியாரின் இரண்டு கைகளையும் பிடித்து அவளைத் தூக்கியவாறு, "என்ன செய்கிறீர்கள் நீங்கள்? எழுந்திருங்கள்'' என்று கூறினான்.

''மகளே! என் கணவரை எனக்குத் திருப்பிக் கொடுத்துவிடு,

ஆண்டவன் உனக்கு எல்லாம் கொடுப்பார். அவர் எப்படி இருந்தாலும், எனக்கு அவர்தான் உறுதுணே. அவரால் என்னென்ன கஷ்டமெல்லாம் வந்தது என்று எப்படிச் சொல்வேன்?''

''அவர் சட்டத்தின் கையிலிருக்கிருர். எங்களால் ஒன்றும் செய்யமுடியாது!''

''நான் உன்னிடம் ஒன்றும் கூறவில்லே, மகளே! யார் வழியே உன் தந்தையை நீ சிறைச்சாலேக்குப் போகச் செய்தாயோ அவருடன் எனக்கு எந்தச் சம்பந்தமும் அப்பொது இல்லாமல் இருந்தது. ஆனுல் இன்று அவர் என் மருமகன். எனக்கும் உரிமை உண்டு.''

கன்யாவின் முகம் கோபத்தால் சிவந்தது. தன் மாமியார் உரிமை கொண்டாடுவதைப் பார்த்துச் சஜ்ஜன் மனத்துள் பெரிதும் அச்சமடைந்தான். ஆனுல் கன்யாவின் கோபத்தைப் பார்த்து அவன் தன்னே அடக்கிக்கொண்டு இனிய குரலில் மாமியாரிடம், ''உங்களுக்கு முழு உரிமையும் உண்டு. நான் அதை மறுக்கவில்லே. ஆனுல் இதைப் பற்றி ஒன்றும் பேசாமல் இருந்தால் நல்லது. என் கையில் ஒன்றுமில்லே. அரசாங்கம் வழக்கு நடத்திக் கொண்டிருக்கிறது'' என்று கூறிஞன்.

''நீ ஜாமீன் கொடுத்தால் அவர் வெளியே வரக்கூடும் என்று எல்லோரும் கூறுகிருர்கள். உனக்குத்தான் எல்லோரையும் தெரியுமே!''

கணவனின் முகத்தை அவசரமாகப் பார்த்துவிட்டு வனகன்யா, ''அம்மா உன்னே வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். வேறு எது கூறிஞலும் நாங்கள் செய்யத் தயாராக இருக்கிருேம். இவரை எந்தத் தவருன காரியமும் செய்வதற்கு...'' என்று தாயிடம் கூறிஞள்.

''தவறு யார் செய்வதில்லே?''

''அப்பா தவறல்ல, குற்றமே செய்திருக்கிருர்!''

''ஆமாம், குற்றம் செய்யவில்லேயென்ருல் வேறு என்ன செய்துவிட்டார்?'' என்று கூறிய மாஸ்டர் சஹாயின் மனேவியின் குரலில் கோபம் தொனித்தது. அவள் ஆவேசத்துடன் ஒரே மூச்சில் உரத்த குரலில் பேசிக்கொண்டே போஞள். ''இதெல்லாம் உன் சின்னம்மா செய்தது. அவளே ஏன் பிடித்துக்கொடுக்கக் கூடாது? அந்தப் பாவியால் என் உள்ளம் எரிகிறது. (விழுந்து விழுந்து அழவும் பிதற்றவும் தொடங்கிஞள்) அவள் என் எதிர் காலத்தையே மாற்றிவிட்டாள். அவளுக்கு இன்னும் கெட்ட காலம் வரும். உடலின் ஒவ்வொரு அணுவும் அழுகிப்போகும்.''

''தண்ணீர்!'' இனிப்புப் பண்டம் தொண்டையில் அடைத்துக் கொண்டு விட்டது. மைத்துனரின் ஒரு கை பாத்திரத்திலும், மற்ருெரு கை தொண்டையிலும் இருந்தது. அவர் தொண்டையைத் தடவிக்கொண்டே அப்பாவியாக உட்கார்ந்திருந்தார்.

சஜ்ஜன் மணி அடிக்கும் ஸ்விச்சை அழுத்தினன். ஒரு வேலையாள் உடனே வந்தான், ''தண்ணீர் கொண்டு வா'' என்று கூறிய சஜ்ஜன் வேலையாட்கள் திரைக்கு வெளியே நின்று கொண்டு இந்த வேடிக்கையை கவனித்துக் கொண்டிருப்பார்கள் என்றும், பிறகு ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு கேலி செய்வார்கள் என்றும் எண்ணினன். சஜ்ஜனுக்கு எதிரில் புதுமுறையாக இந்த விசித்திர மான மைத்துனரும், எல்லோரும் வேடிக்கை பார்க்கும்படியான நிலையில் மாமியாரும் வந்திருந்தார்கள். 'இவர்கள் எனக்கு உற வினர்கள். என்னுடைய மனைவியின் அண்ணனும் தாயும் ஆவார் கள். இவர்களை உறவினர்களென்று கூறிக்கொள்ள வேண்டும். எவ்வளவு அவமானம்! கன்யா இந்த வீட்டிற்கு வந்து மரியாதை யைப் பெற்றாள். அவளுடைய எந்த நடத்தையிலும் மோசமோ, பட்டிக்காட்டுத்தனமோ காணப்படவில்லை. அப்படியில்லையென் ருல் பணக்காரர்கள் வீட்டு வேலையாட்கள் எஜமானர்களைவிட, குற்றம் கண்டு பிடிப்பதில் மிகவும் கை தேர்ந்தவர்களாவார்கள். என் மைத்துனனும் மாமியாரும் சேர்ந்துகொண்டு கன்யாவின் பெருமையைப்பற்றி இவர்கள் மனதில் தவருன அபிப்பிராயத்தை உண்டாக்கிவிடுவார்கள்!'

தண்ணீர் கொண்டுவரப்பட்டது. மைத்துனரின் கை பாத்தி ரத்தில்தான் இருந்தது. மற்ெருரு கையால் டம்ளரை வாங்கிக் கொண்டு ஒரே மூச்சில் தண்ணீரைக் குடித்துவிட்டார். பிறகு அழுத்தமாக, ''ஹரி ஓம்! பஜ்ரங்க்—பஜ்ரங்க்'' என்று கத்திக் கொண்டு அருகில் நின்று கொண்டிருந்த தம் அத்திம்பேரைப் பார்த்து, ''என்ன மிஸ்டர் சஜ்ஜன் வர்மா! ஏதாவது யோகம்—ஜோகம் செய்வதுண்டா?'' என்று கேட்டார்.

சஜ்ஜன் இந்தக் கேள்வியைக் கேட்டு அயர்ந்துவிட்டான். வேலை யாள் நின்றுகொண்டிருந்தான். அதனல் அவன் ஒன்றும் சொல்ல வும் முடியவில்லை. அவன் கன்யாவிற்கருகில் வந்து அவளைத் தனியாக அழைத்துச் சென்று மெதுவாகக் கூறினன், ''கன்யா, இவர்களிடமிருந்து என்னைக் காப்பாற்று. ஐம்பது, நூறு ரூபாய் உதவி கேட்டால் கொடுத்துவிடு.''

வெளியே போர்ட்டிகோவில் ஏதோ ஒரு கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. சஜ்ஜன் நடுங்கிவிட்டான். வெளியார் யாராவ தாக இருந்தால் இந்த மைத்துனனைப் பார்த்து என்ன நினைப்பார் கள்! மற்ெருரு வேலையாள் அறைக்குள் வந்து, ''டாக்டர் அம்மா வந்திருக்கிருர்கள்' என்று கூறினன். சஜ்ஜன் கன்யாவைப் பார்த்து, ''சீலா வந்திருக்கிருள், நீ அவளை......'' என்று கூறினன்.

''நீங்கள் போய் அவரை அழைத்து வாருங்கள், நான் இதோ இவர்களுக்கு விடை கொடுத்தனுப்பிவிட்டு வருகிறேன்.''

சஜ்ஜன் வராண்டாவிற்கு வந்தான். "ஹலோ" என்ற டாக்டர் சீலாவின் குரலிலும் புன்முறுவலிலும் சஜ்ஜன் ஓர் அயர்வை கவனித்தான், "ஹலோ சீலா! இந்த நேரத்தில் நோயாளிகளை விட்டுவிட்டு எப்படி வந்தாய் நீ?" என்ருன்.

"ஜாப்லிங் ரோடில் ஒரு நோயாளியைப் பார்க்கப் போய்க் கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு விநாடி உங்களைச் சந்திக் கலாம் என்று வந்தேன்."

"வா, மேலே போய் உட்காரலாம்."

"வேண்டாம், நீ வெளியே வா உன்னிடம் ஒரு விஷயம் கூற வேண்டும்."

போர்ட்டிகோவிற்கு வெளியே செடிகளின் ஓரமாக இருவரும் நடந்துகொண்டிருந்தார்கள். இருவரும் மௌனமாக இருந் தார்கள்.

புல்வெளிக்குள் போவதற்காகக் கொடிகளால் அமைக்கப்பட்ட மூங்கில் வாயிலுக்கு அருகில் வந்து டாக்டர் சீலா ஸ்விங் நின்ருள். "சஜ்ஜன்" என்று அழைத்த சீலா தயங்கிஞள். மிகவும் வருத்தம் தோய்ந்த பார்வையால் சஜ்ஜனைப் பார்த்து, வேதனை கலந்த குரலில், "உன் நண்பர் இனி என்னைச் சந்திக்கவே மாட்டாரா?" என்று கேட்டாள்.

அவளுடைய பேச்சு சஜ்ஜனின் உள்ளத்தில் வேதனையை உண்டாக்கிற்று. "அவன் இப்பொழுது உன்னை சந்திப்பதில்லை என்பது எனக்குத் தெரியவே தெரியாதே!" என்று கூறிஞன்.

"பல மாதங்கள் ஆகிவிட்டன. விருந்தன்று சௌக்கில் சந்தித்ததுதான், அன்று ஜனவரி 25 தேதி என்று எண்ணம்.

"ஏதாவது முக்கியமான பேச்சுவார்த்தை நடந்ததா?"

"அவருடைய மனைவியைப்பற்றி எனக்கு எந்தக் கெட்ட எண்ணமும் கிடையாது. ஆனுல் அவள் மஹிபால் போன்ற ஓர் அறிவாளியைப் புரிந்துகொள்ளவில்லை என்பது உண்மை. அவர் இப்பொது எவ்வளவு இளைத்துவிட்டார்! நான் நேற்று அவரை அமீனுபாதில் தெருவைக் கடக்கும்பொழுது பார்த்தேன், இதை இன்னும் என்னுல் பொறுத்துக்கொள்ள முடியாது" என்றுகூறிய சீலாவின் தொண்டை அடைத்துக் கொண்டது. அவள் தன் கைப் பையைத் திறந்து கைக்குட்டையை எடுத்தாள்.

சீலாவின் தோளைத் தொட்டபடி அவளுக்கு ஆறுதலளிக்கும் முறையில் சஜ்ஜன், "பைத்தியமாக இருக்கக்கூடாது சீலா! மஹிபாலின் உள்ளத்தில் உன்னைப்பற்றி எப்படிப்பட்ட எண்ணம் இருக்கிறது என்பது எனக்குத் தெரியும். அவனுல் உன்னைப்பிரிந்து இருக்கமுடியாது" என்று கூறிஞன்.

"நான் ஸ்ரீமதி சுக்லாவிடமிருந்து அவர்களுடைய கணவனைப்

பிடுங்கிக் கொள்ளமாட்டேன், ஆனால் மஹிபாலிடம் எனக்கும் உரிமை இருக்கிறது என்று நான்உணர்கிறேன்.''

சஜ்ஜன் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டான், ஒருத்தி தாலி கட்டிய மனைவி; மற்றொருத்தி காதலி, யாருடைய உரிமையை ஏற்பது? மறுப்பது? காதல் என்பது சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டு உண்டாகக்கூடியதா? ஒருவர் மற்றொருவரைக் காதலித்தால் யார் தடுக்கமுடியும்?: உடனே சிறிது நேரத்திற்கு முன்பு கண்ட நிகழ்ச்சி நினைவிற்கு வந்தது. அவனுடைய மாமியார் தன் கணவனுக்கும், அவருடைய அண்ணன் மனைவிக்குமிடையே நடந்த காதல் நிகழ்ச் சியைத் திட்டிக் கொண்டிருந்தாள். ஆனால் அந்த விஷயமே வேறு.

''நீ அவரிடம் கட்டாயம் இதைக் கூறிவிடு'' என்று சீலா கூறினாள்.

''நான் அவனை உன்னிடம் அனுப்பிவிடுகிறேன். நான் நாளைக் காலையிலே அவனிடம் போகிறேன்.''

''நீ இதைப்பற்றி யாரிடமும் ஒன்றும் கூறக்கூடாது, உன் மனைவியிடங்கூடக் கூறக்கூடாது.''

''யாரிடமும் கூறவில்லை, நம்பு என்னை. நீ ஒன்றும் கவலைப் படாதே!''

''சரி, உன் மனைவி எப்படி இருக்கிறாள்?''

சஜ்ஜனுக்கு இக்கட்டாகப் போய்விட்டது. கன்யா உள்ளே இருக்கிறாள் என்று கூறினால் ஒருவேளை டாக்டர் சீலா அவளைச் சந்திக்க உள்ளே போய்ச் சேர்ந்தால் . அங்கே அவனுடைய விசித் திரமான மைத்துனனும், மாமியாரும் இருக்கிறார்களே!

சஜ்ஜன் ''ஆமாம்—இல்லை'' என்று எதையோ கூறிப் பேச்சை மாற்றி, ''நீ கவலைப்படவேண்டிய தேவை இல்லை சீலா, மஹிபால் பெரிய கலைஞனாகவும், அறிஞனாகவும் இருந்தாலும் உறுதியான எண்ணம் உடையவனில்லை என்பது உனக்குத் தெரியும், ஆனாலும் நான் அவனை உன்னிடம் அழைத்து வருகிறேன். இது ஆணை'' என்று கூறினான்.

''அவருடைய மைத்துனரின் திருமணத்தின்பொழுது யாரோ எங்களுக்குத்கெதிராக ஏதோ கூறிவிட்டார்கள். அப்பொழுது அவருடைய மனைவியும் அதன் காரணமாகச் சண்டைபோட்டாள். அதற்குப்பிறகு மஹிபால் இரண்டு நாள் என் வீட்டில்தான் இருந்தார்.''

''அப்படியா! எனக்கு இதெல்லாம் ஒன்றுமே தெரியாது.''

''நீ மதுராவுக்குப் போயிருந்தாய்! இதையெல்லாம் நான் உனக்குச் சொல்வது நீ அவரிடம் சாமர்த்தியமாக நடந்து கொள்ளலாம் என்பதற்காகத்தான். சரி, நான் வருகிறேன்'' என்று

கூறிய சீலா இரண்டு அடி எடுத்து வைத்தாள், மறுபடியும் தயங்கியவளாய்த் தரையைப் பார்த்துக்கொண்டே "கபடமற்றதனம் மஹிபாலின் இயற்கைப் பண்பு. ஆனால் அவர் இப்பொழுது அதை மறைத்துக்கொண்டு என்னவோபோல் நடந்துகொள்கிறார். எனக்கு அவரை நன்றாகத் தெரியும். அதிக நாள் அவர் தம்மைத் தாமே வதைத்துக் கொள்வதைப் பொறுக்கமாட்டார். அவருக்கு ஏதாவது ஆகிவிடக்கூடாதே என்றுதான் பயப்படுகிறேன்'' என்று கூறினாள்.

"சீலா! நீ நம்பிக்கையோடு இரு, மஹிபால் இப்பொழுதும் கபடமற்றவன்தான். நேற்று—ஆம், நேற்றுக் காலையில்தான் அவன் இங்கே வந்திருந்தான். நாங்கள் இருவரும் இரவு பத்தரை மணிவரை பேசிக் கொண்டிருந்தோம் என்றால் நீ நம்புவாயா? ஆண்—பெண் தொடர்பு, ஜாதி, ஆரிய நாகரீகம் இதையெல்லாம் பற்றி நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். அவனுடைய பேதைத்தனம் மறைந்திருந்தால் இதைப்பற்றியெல்லாம் அறியும் ஆர்வமும் அவனிடம் இல்லாமற்போயிருக்கும்; உண்மையாகச் சொல்கிறேன்; அவன்தானே பேசிக்கொண்டே இருந்தான், அலுக்கவுமில்லை, சலிக்கவுமில்லை'' என்று சஜ்ஜன் போர்ட்டிகோவின் பக்கம் நடந்துகொண்டு சீலாவுக்கு ஆறுதலளித்தவாறு கூறினான்.

''ஏதாவது எழுதுகிறாரா?''

சஜ்ஜன் நின்றான். "இல்லை, அவனுக்கு நேரம் கிடைக்கவில்லை என்று நினைக்கிறேன், நீ இப்படிக் கேட்பதன் பொருள் நன்றாகப் புரிகிறது, ஷீலா! ஆனால் எழுதும் திறன் இன்னும் அவனிடம் இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். நான் கூடத்தான் பல மாதங்கள் வரை ஒரு சித்திரம் கூட வரைய முடிவதில்லை.''

''சரி.. நான் போய் வருகிறேன்.''

சஜ்ஜன் அவனைத் தடுக்க முயலவில்லை. அங்கிருந்து அவன் டிராயிங் ரூமுக்குப் போனபொழுது அங்கே பணியாரப் பாத்திரம் விரிப்பின் மீது உடைந்து விழுந்து கிடந்ததையும், கன்யாவின் காதின் பக்கத்திலிருந்து இரத்தம் வழிவதையும் பார்த்தான். சில விநாடிகளுக்கு முன்னால்தான் இந்த நிகழ்ச்சி நடந்திருக்க வேண்டும். கன்யாவின் அண்ணி அவளது கன்னத்தைத் தன் சேலைத் தலைப்பால் துடைத்துக் கொண்டிருந்தாள். தாய் நின்று கொண்டு பார்த்துக் கொண்டிருந்தாள். மைத்துனர் சமாதியில் அமர்ந்திருந்தார்.

கன்யாவுக்குக் காயம் பட்டதைப் பார்த்ததும் சஜ்ஜனுக்குக் கோபம் வந்து விட்டது. அதைக் கண்டதும் கன்யாவின் தாய் தனது மௌனத்தை விடுத்து மகளின் காயத்திற்காகக் கலங்கினாள். "பார் தம்பி! என் தலைவிதி எப்படி இருக்கிறது! இவனை நீ

பைத்திய விடுதிக்கு அனுப்பி விடு. ஓர் உதவி செய்ததோடு மற்ருெரு உதவியும் செய்துவிடு'' என்று சஜ்ஜனிடம் கூறிஞள்.

தன் மைத்துனரை நன்ருக அடிக்க வேண்டும் என்று சஜ்ஜனுக்குத் தோன்றிற்று. ஈரானிய விரிப்பின்மீது மண்பாத்திரத்தின் துண்டுகள் அபசகுனமாகத் தோன்றிக் கொண்டிருந்தன. உடைந்த மண் பாத்திரம் சாவுக்கு அறிகுறி என்பது அவன் மனத்தில் பதிந்து விட்டது. அதனுல் அது அவன் மனத்தைக் கலக்கிக் கொண்டிருந்தது. மாமியாருக்கு விடை அளிக்காமல் அவன் தன் மனைவியிடம், "கன்யா! அம்மாவுடன் பேசியாகிவிட்டதா? உள்ளே போ'' என்று கூறிஞன்.

"மகனே! அப்படியாஞல் நீ என் முறையீட்டை கவனிக்க மாட்டாயா?'' என்று மாமியார் கேட்டாள்.

"முடியாது. நான் தவருன செயலில் யாருக்கும் ஒரு பொழுதும் உதவி செய்வதில்லை... கன்யா! நீ போ!''

"அம்மா! அண்ணியை நான் என்னிடம் வைத்துக் கொள்ளுகிறேன். பிறகு அனுப்பி விடுகிறேன்.''

"வேண்டாம், பாவிகளான எங்கள் வீட்டைச் சேர்ந்த யாராவது உன் வீட்டில் இருந்தால் பாவம் ஒட்டிக்கொண்டுவிடும். குழந்தை! எழுந்திரு, அப்பா! போகலாம், நம்மைச் சேர்ந்தவர்களே வேற்று நபர்களாக ஆகிவிட்ட பிறகு வேற்று நபர்களைப் பற்றி என்ன சொல்லட்டும்! தன் தந்தையை ஊரெல்லாம் தண்டோரா அடித்துக் கைது செய்யும்படிச் செய்த பெண்ணிடம் நம்பிக்கையோடு வந்தது என் தவறுதான். ஆஞல் மனிதன் தனக்கு நல்லகாலம் வந்ததும் கர்வப்படக்கூடாது. நாளை உன்னுடைய கணவனே இவ்வாறு ஏதாவது தவறு செய்து விட்டால் ..''

இதுவரை தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்த கன்யாவிஞல் இனியும் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவளுடைய முகத்திலும், குரலிலும் கோபம் வெளிப்பட்டது. "இவரைப் போன்றவர்கள் தவறு செய்தால் அது யாருக்காவது நன்மையைத்தான் அளிக்கும். இவரால் யாருக்கும் தீமை ஏற்படாது. இவரைப் போன்றவர்கள் எத்தனை பேர் இருக்கிருர்கள் உலகத்தில்!'' என்ருள்.

"போதும், கன்யா! அதிகம் பேசியாகிவிட்டது. நீ இன்னும் ஏன் போகாமல் இங்கேயே இருக்கிருய்!'' என்று சஜ்ஜன் தன் மனைவிமீது கோபப்பட்டான். பிறகு அவன் ஸ்விச்சை அழுத்தி மணி அடித்தான். வேலையாள் வந்து நின்ருன் :—"ராம்குலாம், ஒரு டாங்கா கொண்டுவா, இந்தக் குப்பையைச் சுத்தப்படுத்து.''

சஜ்ஜனின் கோபம் மீறி விட்டது. அப்பொழுது அவன் ஜனங்களிடம் காட்டும் தன் கருணையை மறந்து பணக்காரப் போக்கில்

மாறிவிட்டான். கன்யாவின் கையைப் பிடித்திழுத்து, "வா, போகலாம்'' என்று கூறினான். அவளை அவன் நிற்க விடவில்லை. போகும்பொழுது ராம்குலாவிடம் அங்கேயே இருக்கும்படி கட்டளை பிறப்பித்தான்.

வெளிப்பக்கத்திலிருந்து ஒரு வேலையாளை அனுப்பி அந்தப் பைத்தியத்தின் மீது கவனமாக இருக்கும்படியும் அது எந்தப் பொருளையும் வீண் செய்யாமல் கண்காணிக்கும்படியும் கூறினான்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கன்யா மிகவும் களைத்துப் போயிருந்தாள். சஜ்ஜன் அவளை மகிழ்விக்க விரும்பினான். ஆனால் கன்யா அவனைத் தடுத்தாள். கணவனை அடைந்து மகிழ்ந்திருந்த வனகன்யா, தன் கணவனின் கவனத்தை மறுபுறம் திருப்ப இயன்றவரை முயற்சி செய்தும் வெற்றி கிட்டவில்லை. அவள் தன் பள்ளிக்கூடத்தைப் பற்றிப் பேசினாள். பல குடும்பத்துப் பெண்கள் தையல், நூற்றல் முதலியன பற்றித் தன்னிடம் பேச வந்ததைப் பற்றியும் சம்பந்தமில்லாமல் கூறினாள். ஆனால் ஒவ்வொரு விஷயமும் துவங்கிய பின்னர் எப்படியாவது அன்று மாலை நிகழ்ச்சியோடு போய்க் கலந்து கொண்டே இருந்தது. ஆனால் மாலை நிகழ்ச்சியைப் பற்றியோ அல்லது கன்யாவின் பிறந்த வீட்டுக்காரர்களைப் பற்றியோ அவர்கள் ஒரு சொல்கூடப் பேசாமல் இருந்தார்கள்,

வெளிப்படையாக என்னென்னவோ பேசினாலும் கன்யாவின் உள்ளம் தன் பழைய எண்ணத்திலேயே சுற்றிக் கொண்டிருந்தது. தான் தன் தந்தைக்குத் தண்டனை அளிக்கச் செய்தது 'நியாயமா அநியாயமா? அல்லது பாவமா புண்ணியமா?' என்ற கேள்வி அவளை வாட்டிக் கொண்டிருந்தது. அவளுடைய சமுதாயத் தொண்டில் உதவியாகவோ அல்லது எதிரியாகவோ வரும் பல பெண்கள் மறைவாகவும், வெளிப்படையாகவும் கன்யா தந்தைக்கு எதிராகக் காரியம் செய்து பெருத்த அநியாயம் செய்திருக்கிறாள் என்றும், அது இந்தியப் பண்புக்கு மாறுபட்டதும் அநாகரிகமானதுமான செயல் என்றும் கூறிவந்தார்கள். இன்று அவளுடைய தாயும் அவளுக்கெதிரில் அதைத்தான் கூறினாள். சஜ்ஜன் சீலாவைச் சந்திப்பதற்காக வெளியே போயிருந்த பொழுது கன்யாவின் தாய், "பெரிய மனிதர்களை எவ்வாறு நம்புவது? இன்று திருமணம் செய்து கொள்வார்கள்; நாளை நிறைவு ஏற்பட்டதும் வெளியே தூக்கி எறிந்துவிடுவார்கள். தன் சாதிக்குள் முறைப்படி நடக்கும் திருமணங்களே முறிந்து போகும் பொழுது இப்படிப்பட்ட போலித் திருமணங்களை எப்படி நம்புவது?'' என்று பயமுறுத்தவும் முயன்றாள். அவ்வார்த்தைகள் அப்பொழுது தவறாகப்பட்

டாலும் அவற்றைக் கன்யா காதில் போட்டுக் கொள்ளாமல் இருந்து விட்டாள். ஆனால் மறுபடியும் தாய் அவளுடைய கணவனைச் சுட்டிக் காட்டிப் பேசியதும் அவளுடைய உள்ளத்தில் எரிச்சல் ஏற்பட்டது. ''அம்மா என் கணவனைப் பார்த்து பொறாமைப்படுகிறாள். அம்மாவுக்கு என் நல்ல காலத்தைப் பார்த்து பொறாமையாக இருக்கிறது.'' என்ற எண்ணம் அவளது உள்ளத்தில் பதிந்துவிட்டது. அவளது உள்ளத்தில் தன் தாயின்மீது மிகவும் கோபம் உண்டாயிற்று. தந்தையை விடுவிப்பதற்கு உதவி செய்ய முடியாது என்று தன் தாயிடம் தெளிவாகச் சொன்ன பொழுது அவளுடைய தமையன் காலியான பணியாரப் பாத்திரத்தை எடுத்து அவள்மீது விட்டெறியும் நிலை ஏற்பட்டது. நல்ல வேளையாகப் பாத்திரம் கன்யாவின் முகத்தில் பலமாக விழ வில்லை. இடது காது வழியாக கன்னத்து எலும்பை இடித்துக் கொண்டு அந்தப்பாத்திரம் கன்யாவின் தோள் வழியாகப் பின் புறம் விழுந்து உடைந்துவிட்டது. அவளுடைய கன்னத்தில் பல மான கீறல் ஏற்பட்டது. அதிலிருந்து ரத்தம் வெளிப்படத்தொடங் கிற்று. கன்யாவை அவளுடைய தமையன் அடித்தது அது தான் முதல்முறை. கைம்பெண்ணை சின்னம்மா தன் கள்ளக் காதலனின் கர்வத்தில் சென்ற ஆண்டு வரை அவளை அடித்திருக்கிறாள். அந்தச் சின்னம்மாவினால் அந்த வீட்டில் பெரிய பிரளயம் ஏற்பட்டிருந்தது; தந்தையோ அவள் சார்ப்பில் கன்யாவின் தாயை மரக் கட்டை யால் பலமுறை அடித்திருக்கிறார். பெண்கள் அடி வாங்குவது அந்த வீட்டுப் பழக்கமாக இருந்தது. அம்மாவுக்கு நல்ல காலமாக இருக்கும் பொழுது சின்னம்மாவுக்கு அடிவிழும். சின்னம்மாவுக்கு நல்ல காலம் வரும்போது அம்மா அடி வாங்குவாள். அவளுடைய தமையனின் அப்பாவி மனைவி தன் கணவனின் கையால்தான் அடி வாங்கி இருந்தாள். கன்யாவின் காலம்சென்ற ஒன்று விட்ட அண்ணி சாவதற்கு ஓராண்டு முன்பிலிருந்தே...அதாவது, கன்யா வின் தாய் செய்த வஞ்சகத்தால் தனது இளைய மாமனாரின் மிருகப் போக்குக்குப் பலியான நாளிலிருந்தே தன் மாமியார், இளைய மாமியார், கன்யாவின் அரக்க குணமுள்ள தந்தை ஆகியோரின் கையால் தினந்தோறும் ஏதாவது காரணத்தைக் கொண்டு அடிவாங்கிக் கொண்டிருந்தாள். திருமணமான திருமதி வனகன்யா வர்மா தமையன் அடித்ததைப் பொருட்படுத்தவில்லை. (ஏனென்றால் தமையனிடம் அவளுக்கு எல்லையற்ற அன்பு இருந்தது). ஆனால் தன் பிறந்த வீட்டு வாழ்க்கையின் கலகங்களும் அடித்தடிகளும் அவளுடைய நினைவிற்கு வந்தன.

அப்பொழுது சீனத்து வேலைப்பாடுகள் அமைந்த விலையுயர்ந்த கட்டிலில் மென்மையான ரப்பர் மெத்தையில் கைமேல் தலை

வைத்துப் படுத்திருந்த அவள் பல வேலையாட்கள் பணிபுரியும் பெரிய வீட்டுத் தலைவியாகவும், கணவனின் அன்பிற்குப் பாத்திர மாகவும் இருந்த அவள், தன் கடந்த வாழ்க்கையை நினைத்து மனத் திற்குள்ளேயே துடித்துக் கொண்டிருந்தாள். அந்தக் களங்கத்தை யெல்லாம் எவ்வாறு துடைக்க முடியும்? அவளுடைய கணவனு டைய உள்ளத்தில் இருந்த ஓர் எண்ணம் அவளுடைய உள்ளத் தையும் குடைந்து கொண்டிருந்தது. தன் பிறந்த வீட்டினரைத் தன்னைச் சேர்ந்தவர்கள் என்று ஏற்றுக்கொள்வதற்கு அவளுக்கு வெட்கமாக இருந்தது என்பது தான் அது. அந்த வெட்கம் மிகவும் அதிகமாகிக் கொண்டிருந்தது; ஆனாலும் சொந்தக் காரர்கள் சொந்தக்காரர்களாகத்தானே இருப்பார்கள். உறவுத் தொடர்பை அறுத்துவிட முடியாதே!

மாலையில் நடந்த நிகழ்ச்சியைப்பற்றிப் பேசும் ஆர்வம் வெகு நேரமாக உள்ளத்தினுள்ளேயே இருந்தது. அது திடீரென்று வெளிப்பட்டது: "உறவுதான் எவ்வளவு விசித்திரமானது! அதற்கு இணையத்தான் தெரியுமே யொழிய உடைந்துபோகத் தெரியாது" என்று கன்யா கூறினாள்.

"உணர்பவர்களுக்கும், நேர்மையானவர்களுக்குந்தான் அப்படி!" என்று கூறிக்கொண்டே சஜ்ஜன் கட்டிலுக்கருகிலே இருந்த சீனத்து வேலைப்பாடு அமைந்த நாற்காலி மீது சாய்ந்து கொண்டு கால்களைக் கட்டிலின் மீது வைத்துக்கொண்டான்.

"ஆமாம்..... ஆமாம் ...ஆனால் யாரும் உறவை ஒரு போதும் முறித்துவிட முடியாது. நாளையே உங்கள் மனம் என்னிடமிருந்து மாறி என்னைக் காதலித்தது போலவே, மற்றொருத்தியிடம் காதல் கொள்கிறது என்று வைத்துக்கொள்வோம் !'

"பேசு, பேசிக்கொண்டே போ! உன்னுடைய இந்தக்கேலியை நான் மிகவும் தைரியத்துடன் பொறுத்துக்கொள்கிறேன்."

கன்யா சிரித்துக்கொண்டே, "நான் ஓர் எடுத்துக்காட்டுக்காகக் கூறுகிறேன். அப்படி நடப்பதில்லையா? இன்று சந்தித்து நாளைக் குத்திருமணம் செய்து கொண்டு, நாளை மறுநாள் விவாகரத்து செய்துகொள்ளுகிறார்கள்—அடுத்த நாளிலிருந்து மறுபடியும் புதியதாக ஒருத்தியைச் சந்திப்பது, திருமணம் செய்து கொள்வது, மறுபடியும் விவாகரத்து செய்து கொள்வது என்பது இல்லையா? ஆனால் விவாக ரத்து செய்தபிறகும் எப்பொழுதாவது சந்திக்கும் பொழுது அவர்கள் தங்களது கணவன்—மனைவி என்ற பழைய உறவை மறக்க முடியுமா என்றுதான் நான் கேட்கிறேன்?"

"முடியாது என்பது தான் என் எண்ணம், மஹாகவி பைரன், அவர் மனைவி இருவருடைய அன்பும் விவாக ரத்துக்குப்பிறகு தான்

அதிகமாயிற்று, ஆனால் இந்த விஷயத்தில் நான் எப்படி எடுத்துக் காட்டாக ஆனேன்?''

''நீங்கள் கேலிப்பேச்சைக்கூடப் பெரியதாக எடுத்துக்கொள்கிறீர்களே! அப்படியென்றால் உங்கள் உள்ளத்தில் எங்கேயோ ஒரு குறை இருக்கிறது.''

சஜ்ஜன் ''ஹாதிம் தாயி 'நல்ல மனிதனே! இதே கேள்வியை நான் உன்னிடமும் கேட்கலாம்' என்று கூறினான்'' என்பதை நடிக்கும் பாணியில் சொன்னான்.

கன்யா சிரித்தாள்: ''என்னுடைய அர்த்தமற்ற கேலியிலும், உள்ளுணர்விலும் ஏதோ ஒரு தவறு இருக்கிறது என்றுதானே கூறுகிறீர்கள்!'' என்று கேட்டாள்,

''ஆமாம்! நீ தவறாகக் கருதா விட்டால் அப்படியேதான்.''

''போங்கள்! என் உள்ளத்தில் உங்களைப்போல் கண்காட்சிச் சாலை ஒன்றும் இல்லை. இந்தக் கேலிப்பேச்சுக்கு காரணம் சொல்லட்டுமா?''

''சொல்லேன்.''

''டாக்டர் சீலாவுடன் நீங்கள் இருந்தபொழுது அம்மா தான் என்னை அப்படிக் கூறிப் பயமுறுத்தினாள். அப்பொழுது கூட என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை'' என்று கூறிய கன்யா பலமாகச் சிரித்தாள்.

சஜ்ஜன் புரிந்துகொண்டு விட்டான். சிரிப்பு, விவேகம் என்ற வெளிப்பகட்டுக்குள் ஊதுவர்த்திப்புகையின் மெல்லிய கோடுபோல் கன்யாவின் உள்ளத்தில் இருந்த அச்சத்தை உணர்ந்து சஜ்ஜனுக்கு அவள் மீது அநுதாபம் ஏற்பட்டது. கள்ளமறியாத அழகும் சாமர்த்தியமும் கலந்த மனைவியின் முகத்தைப் பார்த்ததும் அவனுடைய உள்ளத்தில் அன்பு மலர்ந்தது. சஜ்ஜன் அமைதியும் இனிமையும் கலந்த குரலில் கூறத் தொடங்கினான்; ''கன்யா! வாழ்நாளில் எப்பொழுது வேண்டுமானால் நீ ஒரு விஷயத்தில் பரீட்சை செய்து பார்த்துக்கொள்ளலாம். உன்னுடைய இந்த வாழ்க்கைத் துணைவனிடத்தில் எவ்வளவு தீய குணங்கள் இருந்தாலும் ஒரு நல்ல குணமும் உண்டு, நான் ஏற்றுக் கொள்ளாத வரையில் நிலைமை வேறு. ஆனால் என் உள்ளத்தில் ஒரு விஷயம் பதிந்துவிட்டால் அதற்குப்பிறகு அந்த விஷயம் கல் இல்லை; மலையாக ஆகிவிடுகிறது, நீ எப்பொழுது வேண்டுமானாலும் பரீட்சை செய்து பார்த்துக்கொள்ளலாம்.''

நம்பிக்கை உறுதியடைந்து, காதலனின் புகழுரைகளால் ஒளி நிறைந்த கன்யாவின் கண் விழிகள் சஜ்ஜனின் முகத்திலேயே பதிந்திருந்தன.

# 37

ஹோலிக்கு அடுத்தநாள் சஜ்ஜன் தன்வீட்டில் பாபா ராம்ஜீயை யும், ஓரளவிற்கு உள நலனைப் பெற்றிருந்த எல்லாப் பைத்தியக் கார நோயாளிகளையும் அழைத்திருந்தான். சஜ்ஜன் நான்கு மணி நேரத்திற்கு ஒரு பஸ் வாடகைக்கு எடுத்தான். அந்தப்பஸ்ஸில் தான் பாபாஜீ கூட்டத்துடன் வந்தார். பாபாஜீ தம் கூட்டத் துடன் தன் பெரிய மாளிகைக்குள் நுழையும்பொழுது சிவபெரு மானே நேரடியாக வந்ததுபோல் தோன்றிற்று சஜ்ஜனுக்கு. தன் தாயின் பூஜையறையில் எல்லோரையும் அமரவைத்தான். கன்யா சமையலறையில் இருந்தாள். சஜ்ஜன் அன்று பெரு மகிழ்வுடன் காணப்பட்டான். தாய் இறந்தபிறகு அன்றுதான் முதல் முறை யாக அவனுடைய வீட்டில் நல்ல முறையில் விருந்து நடக்க விருந்தது. எனவேதான் பாபா ராம்ஜீயின் கூட்டத்தை அழைத் திருந்தான். மாலையில் கர்னலும், குடும்பத்துடன் மஹிபாலும் வருவார்கள். வேலையாட்களனைவருக்கும் ஹோலிப் பணியாரங் களும், ஒவ்வொரு ரூபாய் இனாமும் வழங்கப்படும். அத்துடன் ஒவ் வொரு சட்டை, வேஷ்டியும், சிவப்புத்தலைப்பாகையும் அளிக்கப்படும்.

அன்று காலையிருந்தே கன்யாவுக்கு ஒரே வேலையாக இருந்தது. வேலைக்காரர்களுக்கும் மூச்சுவிடக்கூட நேரமில்லாமலிருந்தது. அடுத்த நாள் பகல் முழுவதும் எல்லோருக்கும் விடுமுறை அளிப் பதாக கன்யா எல்லோருக்கும் ஆறுதல் அளித்திருந்தாள்.

சஜ்ஜன் பூஜை அறையை மலர்களால் நன்றாக அலங்கரித் திருந்தான். ஆண்டவனுக்கு வர்ணம் தெளிக்கப்பட்ட துணி அணி வித்திருந்தான். பெரிய வெள்ளிக்கிண்ணத்தில் வர்ணம் கலந்து வைத்து சிறிய தங்கக்குழல் இரண்டு அங்கே ஆண்டவனுக்கெதிரில் வைக்கப்பட்டிருந்தன. அவன் தனது அம்மாவின் படத்திற்குப் பெரிய பெரிய ரோஜா மலர் மாலை போட்டிருந்தான். சஜ்ஜனின் மகிழ்ச்சியான முகத்தைப் பார்த்துப் பாபாஜீ "ஏனப்பா இப்படிப் பட்ட இன்பம் இதற்கு முன்பு எப்பொழுதாவது கிடைத்திருக் கிறதா?" என்று கேட்டார்.

"இல்லை, பாபாஜீ!"

"குடும்ப வாழ்க்கையைவிடச்சிறந்தவாழ்க்கை எதுவுமே இல்லை."

"அது எப்படி, பாபாஜீ துறவிகளைவிட அதிகமாகச் சுகத்துடன் இருப்பவர்யாருமில்லை என்றல்லவா எனக்குத் தோன்றுகிறது!"

"யோகிகளான துறவிகளின் இன்பம் சிறந்தது என்பதில் ஐய மில்லை. ஆனால் ஊருக்கும் நேரத்திற்கும் தகுந்தபடி உயர்ந்த அறிவின் இன்பத்தைத் தனியாக நுகர்வதில் என்ன லாபம் என்பது

என் கொள்கை! உண்மையான மகிழ்ச்சி செயலாற்றுவதால் கிட்டுகிறது. செயலாற்றுவதற்குக் குடும்ப வாழ்வுதான் உரை கல்லாகும்.''

''ஆனால் குடும்ப வாழ்வினால்தான் துன்பங்களெல்லாம் ஏற்படு கின்றன. குடும்பத்திற்காகத்தானே மனிதன் மற்றவர்களைத் துன்புறுத்தவும், பலவிதமானபாதகங்கள்செய்யவும் துணிகிறான்?''

''ஆனால் குடும்பத்தில் இருந்துகொண்டு மனிதன் பல புண்ணி யங்களையும் செய்கிறான்; செய்யவும், கூடும். குடும்பம் இல்லை யென்றால் உலகின் உருவே எப்படி மாறிவிடும் தெரியுமா, ராம்ஜீ! எங்களைப்போல் எல்லோரும் துறவிகளாக ஆகிவிட்டால் இந்தப் படைப்பு எப்படி நடக்கும்?''

''நடக்காவிட்டால் தான் என்ன நஷ்டம் வந்து விடப்போகிறது, பாபாஜீ? படைப்பு தொடர்ச்சியாக நடந்தும் என்ன என்ன வெல்லாம் நடந்து கொண்டிருக்கின்றன! இப்பொழுது அணுக் குண்டு செய்யப்பட்டிருக்கிறது. ஹைட்ரஜன் குண்டும் தயாரிக் கப்பட்டுவிட்டது என்று கேள்விப்படுகிறோம். இன்னும் என்ன என்ன அழிவுச்சக்திகள் உண்டாகுமோ யாருக்குத்தெரியும்! அப்படி இருக்க, இந்தப் படைப்பால் பயன்தான் என்ன?''

பாபாராம்ஜீ சிரித்துக்கொண்டே,'' ஆண்டவனை நம்புகிறாயா?'' என்று கேட்டார்.

இந்தக் கேள்வியைக் கேட்டுச் சஜ்ஜன் தயங்கினான். பிறகு சமாளித்துக்கொண்டு கூறினான், ''ஐயா! நம்புகிறேனா, இல்லையா என்று எனக்கே தெரியவில்லை. மதுராவிற்குப் போயிருந்த பொழுது கண்ணனின் பிறந்த இடத்தைப் பார்த்து ஆண்டவனும் மானிடர்தாம்போலும் என்று கருதினேன். நம்நாட்டில் அவ தரித்த ராமர், கிருஷ்ணர் முதலானோர் மனிதஉருவில்தான் அவ தரித்தார்கள்.''

''உண்மைதான் ராம்ஜீ! நானும் அப்படித்தான் கருதுகிறேன். ஆண்டவன் மானிட உருவில் மட்டுமில்லை, படைப்பு முழுவதிலும் இருக்கிறான். ஆனால் ஆண்டவனை மானிடனே அதிகமாக உணர் கிறான். ஆதலால்தான் மானிடனைவிடச் சிறந்த ஜீவன் எதுவுமே இல்லை என்று வியாசர் கூறினார். அப்படி இருக்கும்பொழுது இவ் வளவு உயர்ந்த மானிடசாதி தற்கொலை செய்துகொண்டு அழிந்து விடுமா? அவ்வாறு எண்ணுவது கூட விசித்திரமாகத் தோன்று கிறது! ஆண்டவன் எல்லா உயிரினங்களிலும் பரந்திருக்கிறான். அந்த ஆண்டவனைநம்பு.''

சஜ்ஜனின் உள்ளத்தில் எதையோ கேட்கவேண்டுமென்று ஆர்வம் தோன்றிற்று. ஆனால் அதைக் கேட்கத் தயங்கினான், சொற்கள் தொண்டைவரை வந்து தடைப்பட்டுவிட்டன. பாபா

ராம்ஜீ தம் சின்னஞ்சிறு பளிச்சிட்ட கண்களால் அவனைப் பார்த்துப் புன்முறுவலுடன், ''பழக்கத்தால் நான் எல்லா ஜீவனிலும் ஆண்டவனைக்காண்கிறேன். ஆனால் பூரணமாக இன்னும் அந்த ஆண்டவனை நானும் பார்த்ததில்லை. பார்த்தவர்கள் அநுபவத்தால் ஆண்டவனும் பரம புருஷனாக ஜீவனுக்குக் கிட்டுவதாகக் கூறுகிறார்கள். நாம் அவர்களுடைய கூற்றை நம்புகிறோம். எஞ்சிய உண்மை அநுபவத்தால் அறியவேண்டியதாகும். அதற்காகத் தான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். ஆண்டவன் இருப்பானால் கிடைப்பான். இல்லையென்றால் போகட்டும். சுயநல மற்ற தொண்டில் எனக்குப் பெருத்த மகிழ்ச்சி கிட்டுகிறது. இந்தப் பூமியில் ஆண்டவன் எங்கும் பரந்திருப்பதைப்பார்த்து பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது'' என்று கூறினார்.

''பாபாஜீ! நீங்கள் உட்கார்ந்தபடியே மற்றவர்கள் உள்ளத்தைப் புரிந்துகொண்டு விடுகிறீர்களே! மேலும் எதிர்காலத்தைப் பற்றியெல்லாம் கூறுகிறீர்களே!''

பாபாஜீ சிரித்துக்கொண்டே கூறினார்: ''இதில் ரகசியம் ஒன்றுமில்லை, ராம்ஜீ! அனுபவத்தால் எல்லாம் கிட்டுகிறது. அனுபவம் சாதனையால் கிட்டுகிறது. இவ்வுலகத்திய சுகங்கள் செயலற்ற மானிடனுக்குக் கிட்டுவதில்லை.''

சஜ்ஜன் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டான். அதுவரை அவனுக்கு அந்த உலகம் ரகசிய உலகமாகத் தோன்றியது: அதனால் ரகசிய மயமான பாரதம் உலகில் புகழ்பெற்றிருந்தது. அது பாபாஜீயின் கூற்றுப்படி அவனுக்கு அப்பொழுது மிகவும் சுலபமானதாகவும், சாதனையின் வாயிலாகக் கிட்டக்கூடியதாகவும் தோன்றிற்று. ''அந்தச் சாதனை எப்படிப்பட்டதாக இருக்கும்? நான் அதைச் செய்ய முடியாதா?'' என்றான்.

''ராம்! ஏன் செய்ய முடியாது? மானிடனால் செய்ய முடியாதது எதுவும் கிடையாது. அவன் விரும்ப வேண்டியதுதான் தாமதம். பிறகு எதுவும் நடக்கும்.''

''விரும்பவேண்டியதுதானா! விரும்பவேண்டியதுதானா!''—ஒரே விநாடியில் பறந்து தான் எல்லாவற்றையும் சாதித்துவிட்டதாகச் சஜ்ஜனுக்குப்பட்டது. இந்த உணர்ச்சி வேகத்தில் அவனுடைய உள்ளத்தில் ஒரு பூரிப்பும், மகிழ்ச்சியும் தோன்றின.

''ஆம், சாதித்தால் எல்லாம் ஒரு விநாடியில் கிடைத்துவிடும். ஆனால் சாதிப்பதற்கு நேரமும் சக்தியும் தேவைப்படும். தன்னடக்கமும், பொறுமையும் இல்லாத மானிடன் சாதனை செய்ய முடியாது.''

''ஆனால் நான் செய்ய முடியும் என்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது.''

"அப்படியானல் சரி, தன்னம்பிக்கையைச் செயல்படுத்து."

"நான் என்ன செய்ய வேண்டும்?"

"தொண்டு."

"யாருக்கு?"

"ஆண்டவனுக்கு. ஆண்டவன் ஒவ்வோர் உயிரிலும் இருக்கிருன். நீ உன் ஆண்டவனின்... "

"பாபாஜீ! மன்னிக்க வேண்டும், இடைமறித்துப் பேசுகிறேன். நான் ஆண்டவனுக்கு ஏன் அடிமையாக ஆகவேண்டும்!"

"ஆகவேண்டாம். குழந்தையின் அன்புடன் அவனைப் பூசனை செய். நண்பனுகப் பூசனை செய். தன் உள்ளத்தோடு பூசனை செய். எந்த உணர்வுடன் பூசித்தாலும் நீ அடிமையாகத்தான் வேண்டும். தாய் தன் குழந்தைக்குத் தொண்டு செய்கிருள். நண்பன் நன்பனுக்குத் தொண்டு புரிகிருன். மானிடன் தனக்குத் தானே கூடத்தொண்டு செய்து கொள்கிருன். தொண்டு என்பது சாமானியமானதல்ல. ராம்ஜீ! முன்புகூட ஒருமுறை நீ இந்தக் கேள்வியைக் கேட்டாய்! நினைவிருக்கிறதா?"

சஜ்ஜன் அதைக்கேட்டு நாணியவனுய், "ஆம், பாபாஜீ! 'நாம்' என்ற தோரணை—கெட்ட உணர்வு என்னுடைய விவேகத்தை மறைத்து விடுகிறது." என்று கூறினுன்.

"அந்த உணர்வு கெட்டதில்லை. அதுவும் ஆண்டவனைச் சேர்ந்ததுதான். ஆண்டவன் எல்லா உயிரினங்களிடமும் பரந்திருக்கிருர். ஆகையால் அந்த உணர்விடமும் அன்பு காட்டு, ராம்ஜீ! நான் படித்தவனில்லை. ஆனுல் அநுபவத்தால் எழுந்த கருத்துக்களைப் பற்றி யோசிக்கிறேன், சிந்தனை செய்கிறேன்; நீ பல ஊர்கள் சுற்றியிருக்கிருய்; படித்திருக்கிருய்; கல்வி கற்றவர்களுடன் உனக்குப் பழக்கம் உண்டு; இந்தப் பூமண்டலத்தில் எவ்வளவு பெரிய கோவில்களையும் கட்டிடங்களையும், சிலைகளையும், விஞ்ஞான விசித்திரங்களையும் ஆண்டவனின் சக்தி தோற்றுவித்திருக்கிறது! அந்தச் சக்தியை நீ வழிபடு. அதில் ஈடுபாடுகொள்."

"அது மிகவும் கஷ்டம்..."

"ஆமாம். எனக்கும் கஷ்டமாகத்தான் தோன்றுகிறது. ராம்ஜீ! நீ எவ்வளவு அழகிய சித்திரங்கள் வரைகிருய்? நான் அவ்வாறு வரைய முடிவதில்லை, எனக்கு அது கஷ்டமாகப் படுகிறது. நீ இவ்வளவு கஷ்டமான காரியத்தை எவ்வாறு செய்கிருய், ராம்ஜீ!"

சஜ்ஜன் மரியாதை உணர்வோடு பாபாஜீயின் கால்களில் விழுந்து வணங்கினுன். பாபாஜீ அவனை அன்புடன் எடுத்து, "கீதையில் ஆண்டவன் பயிற்சியால் யோகம் கிட்டுகிறது என்று கூறியுள்ளான். யோகம் என்பது செயல்திறனுகும். அதைத்தான் பயில

வேண்டும். மனம், வாக்கு, காயம் ஆகியவற்ருேடு நீ ஒரு வேலை யில் ஈடுபட்டால் அவ்வளவுக்கவ்வளவு உனக்குத் திறமை கிட்டும்!''

''அது மிகவும் கடினம், ஸ்வாமிஜீ! மாயையும் கவர்ச்சியும் கட்டுப்படுத்துகின்றன. உலகில் வாழ்ந்துகொண்டு, குடும்ப வலையில் சிக்கிக்கொண்டு .. ''

''ராம்ஜீ! அது அஞ்ஞானியின் போக்கு; விஞ்ஞானியின் போக்கில்லை. அணுகுண்டு செய்பவர்கள் காடுகளிலும், குகைகளிலும் வசிக்கிருர்களா? அவர்கள் சாதனையால்தான் இதையெல்லாம் உண்டாக்கியிருக்கிருர்கள்.''

''ஆனுல் அவர்கள் அழிவை உண்டாக்கியிருக்கிருர்கள்!''

''அப்படியானுல் நீ ஆக்கத்தை உண்டாக்கு. உணர்வு பரந்து விட்டால் வெற்றிகிட்டும். இரு பொருள்கள் இல்லாவிட்டால் உணர்வின் ரகசியம் எவ்வாறு புரியும்—வளர்ச்சி எவ்விதம் உண்டாகும்? ராம்ஜீ! யோகப்பாதை குடும்பத்தவர்களுக்காகத்தான் ஏற்பட்டிருக்கிறது என்று நான் கூறுவேன்.''

அப்பொழுது கன்யா அங்கே வந்தாள், ''மகளே செல்வத்தின் மகிழ்வை உணர்ந்தாயா நீ!'' என்று பாபாஜீ கேட்டார்.

கன்யா நாணம் அடைந்தாள். தலை குனிந்தவாறே புன்முறுவலுடன் ''ஆம், பாபாஜீ! ஆனுல் என்னுல் முடிந்த அளவிற்குத் தான்......'' என்று கூறினுள்.

''ஏன்? இதோ பார்; எவ்வளவு பெரிய மாளிகை உன்னிடம் இருக்கிறது! இவ்வளவு வேலையாட்கள் இருக்கிருர்கள், உன்னிடம் என்ன இல்லை? சுகமாகக் கட்டிலில் உட்கார்ந்து கொண்டு கட்டளையிட்டுக்கொண்டே இரு!''

பாபாஜீ கூறும் முறையையும், அவருடைய கண்களில் காணப் பட்ட கேலிப் போக்கையும் பார்த்த கணவனுக்கும் மனைவிக்கும் அழுகையே வந்துவிட்டது. சஜ்ஜன் பாபாஜீயின் பக்கம் கையை நீட்டியவாறு, ''உண்மையான செல்வம் இந்த உடலென்ற மாளிகையில் இருக்கிறது, ஸ்வாமிஜீ! நாங்கள் எவ்வாறு அந்தச் சுகத்தை உணர முடியும்!'' என்று கூறினுன்.

''இன்ப துன்பம் உணர்வில் இருக்கிறது, ராம்ஜீ! இன்பத்தை நீ உணருமிடத்தில்தான் செல்வம் திகழ்கிறது. செல்வம் என்பது ஒன்றுமில்லை, விடியற்காலத்து ஞாயிறு வானத்திற்குள் மறைந்திருக்கிறது. அதன் ஒளிதான் வானத்தில் பரவுகிறது. அதே போல் செல்வமென்ற ஒளியும் உள்ளத்தில் உள்ள உணர்வின் ஒளியேயாகும்,''

சஜ்ஜன் செல்வத்திற்கு அளிக்கப்பட்ட இந்தப் புதிய விளக்கத்தைக் கேட்டு வியப்படைந்தான்.

பாபாஜீ பேசிக்கொண்டே போனர், "ராம்ஜீ! வங்காளத்தில் ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இருந்தார். அவர் ஒரு கையில் தங்கத் தையும், மற்றொரு கையில் கல்லையும் வைத்துக்கொண்டு இரண் டையும் பற்றி ஒரே மாதிரியான உணர்வைப் பெற்றார். ஏன் தெரியுமா? அவரிடம் எல்லையற்ற செல்வம் இருந்தது. ஜனக மகாராஜாவுக்கு வேலையாட்கள், படை, அரண்மனை என்ற எந்தப் பொருளில் குறைவிருந்தது? அவர் ஆண்டவனின் மாமனாராகவும், தேவியின் தந்தையாகவும், குடும்பஸ்தராகவும், அரசராகவும் இருந்தார். ஆனாலும் எந்தச் சுகத்திலெல்லாம் அவருக்குக் கவர்ச்சியே இல்லாமல் இருந்தது. ஏனென்றால் அவர் எல்லையற்ற செல்வத்தின் தலைவராக இருந்தார்".

"இதெல்லாம் கேட்பதற்கு நன்றாகத்தானிருக்கிறது பாபாஜீ! ஆனால் அறிவிற்கு எதுவும் எட்டவே இல்லை." என்று கன்யா கூறினாள். "நாம் எந்த சூழ்நிலையில் வாழ்கிறோமோ அது நம்மை பாதிப்பதில்லை, நான் என்னுடைய உள்ளத்தை உணர்கிறேன். இவ்வளவு ஆண்டுகள்வரை பணக்காரர்களின் இன்பத்தை வெறுத்தும் இன்று நான் அந்தச் சூழ்நிலைக்கே வந்திருக்கும் பொழுது இந்த ஆடம்பரத்தில் இருக்கும் இன்பம் பெரிதும் தன்னடக்கம் உள்ள மானிடனையும் மயக்கி விடுகிறது என்பதை மறுக்கமுடியாது. ஆனால் என்னுடைய சமுதாயக் கருத்து என்னை இதிலிருந்து சமாளித்து வைத்துக்கொள்ள வாய்ப்பளிக்கலாம்..." என்று மேலும் கூறினாள்.

"ஆம் மகளே! இந்த அடக்கமும், பழக்கவழக்கமுமே உண்மை யான செல்வம், உன்னிடம் இப்பொது இருக்கும் செல்வம் குறை வானது. ஆகையால் வெளியே இருக்கும் செல்வத்தைப்பார்த்து நீ மயங்குகிறாய், ஓர் ஏழை லட்சாதிபதியைப் பார்த்ததும், லட்சாதிபதி கோடீசுவரனைப் பார்த்தும் மயங்குவது போலத்தான் இதுவும். ஓர் உதாரணம் காட்டுகிறேன்; ஜனக மகாராஜா விதேகர் (யோகி) என்று அழைக்கப்பட்டு வந்தார். அப்பொழுது மகரிஷி களெல்லாம் நாமெல்லோரும் கிழங்கையும் வேரையும் சாப்பிட்டுக் கொண்டு தவம் செய்கிறோம்; இவரோ அரசராக இருந்தும் நம்முடைய ஸ்தானத்தைப் பெறுகிறாரே என்று கருதினார்கள். அவர்களில் ஒரு மகரிஷி கோபத்துடன் ஜனகருடைய சபைக்கு வந்து கத்தத்தொடங்கினார்: "நீங்கள் இவ்வளவு ராஜபோகத் துடன் இருந்துகொண்டிருந்தும் எவ்வாறு யோகியாக ஆகமுடியும்? உங்கள் உள்ளம் ஆண்டவனின் பாதங்களை எவ்வாறு நினைக்கக் கூடும்? கூறுங்கள், இல்லையென்றால் இன்று உங்களுடைய வேஷத் தையெல்லாம் அம்பலப்படுத்தப் போகிறேன்!" என்றார். ஜனகர், "பெரியவரே! சிறிது இளைப்பாறி உணவு ஏற்றுக்கொள்ளுங்கள்.

அதற்குப் பிறகு உட்கார்ந்து ஆலோசிக்கலாம்'' என்று பதிலளித்தார். அரசரின் வீட்டில் மகரிஷிக்குப் பெரிய உபசாரம் நடந்தது. அவர் ஸ்நானம், பூஜை முதலியவற்றை முடித்ததும் அரசர் அவரைச் சமையலறைக்கு அழைத்துச் சென்றார். தங்க ஆசனம், தங்கத் தட்டு, ஐம்பத்திரண்டு விதமான உணவு வகைகள் முதலிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. ஜனக மகாராஜா ஒரு தந்திரம் செய்திருந்தார். மகரிஷி உட்காரும் ஆசனத்திற்குமேல் ஒரு கத்தியைக் கயிற்றில் கட்டிவைத்திருந்தார். மகரிஷி பெரிதும் அஞ்சினார். உணவு ஏற்றுக்கொள்ள அவர் அமர்ந்தார். ஆனால் அவருடைய எண்ணமெல்லாம் தம் தலைக்குமேல் தொங்கிக் கொண்டிருக்கும் கத்தியைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருந்தது. ஜனகர் அவரிடம் 'குழம்பு எப்படி இருக்கிறது,' 'லட்டு எப்படியிருக்கிறது?' என்றெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தார்; ஆனால் மகரிஷியோ ஏதோ பதில் சொல்லித் தட்டிக்கழித்துக் கொண்டிருந்தார். மகரிஷி சாப்பிட்டு முடித்த பிறகு ஜனகர் மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டார். மகரிஷி கூறினார்: 'அரசே! உண்மையில் என்னுடைய எண்ணமெல்லாம் தலைமீது தொங்கிக் கொண்டிருந்த கத்தியிலேயே இருந்தது' 'இதுதான் ரகசியம், என்று எதை நினைக்கிறோமோ அதில்தான் உள்ளம் பதிந்திருக்கும்' என்று அரசர் கூறினார்.''

சஜ்ஜன் இரண்டு காந்தங்களின் கவர்ச்சியால் நிலையாக நின்று கொண்டிருந்தான். ஆனால் அந்த நிலைத்தநிலை அவனை உணர்வற்றவனாக ஆக்கிவிடவில்லை. எண்ணமென்னும் காந்தத்தின் மின்சாரக் கவர்ச்சியின் சிலிர்ப்பு அவனுடைய நரம்புகளில் ஓடிக் கொண்டிருந்தது. கன்யா பாபாஜீயைச் சாப்பிட அழைத்துச் சென்றாள். சஜ்ஜன் மௌனமாகப் பின் தொடர்ந்தான்.

பாபாஜீயின் கட்டளைப்படி அவருடைய பைத்தியங்களுக்காகத் தயாரிக்கப்பட்ட உணவுதான் அவருக்கும் தயாரிக்கப்பட்டிருந்தது. ஹோலிப் பண்டிகையாக இருந்ததால் அவர் மிளகாய், மசாலா போடப்படாத காய்கறிகளுடன் பால் பாயசம் சாப்பிட எல்லோருக்கும் அனுமதி அளித்திருந்தார். கன்யா ஏராளமான பழங்களுக்கு ஏற்பாடு செய்திருந்தாள். ஆசனத்தில் அமர்ந்த பாபாஜீ கணவன்—மனைவியைப் பார்த்துக் கேட்டார், ''பிராம்மண சந்நியாசிக்கு விருந்து அளிக்கப்படும்பொழுது, முன்னதாகவே தட்சணையைப்பற்றி உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும், மகனே! ராம்ஜீ! எனக்கு நீங்கள் என்ன தட்சணை கொடுப்பீர்கள்?''

உணர்ச்சிவசப்பட்டுச் சஜ்ஜன் தன்னை அடக்கிக்கொண்டவாறே, பணிவுடன் ''கட்டளை இடுங்கள்'' என்று கூறினான்.

''உன்னுடைய இந்தச் செல்வத்தையெல்லாம் எனக்குத் தட்சணையாகக் கொடுப்பாயா, ராம்ஜீ?''

கன்யா சஜ்ஜனின் முகத்தைப் பார்க்கத் தொடங்கினாள். சஜ்ஜன் தலைகுனிந்தவாறே தயங்கியவனாய் யோசனையில் ஆழ்ந்தான். ''இதைவிடக் குறைந்த தட்சணையில் எனக்கு ஈடுபாடு கிடையாது, ராம்ஜீ!''

''எண்ணம் இருக்கிறது பாபாஜீ! ஆனால் அதில் உறுதியாக இருக்கமுடியும் என்று கூறமுடியாமல் இருக்கிறேன். யோசிக்கச் சிறிது அவகாசம் கொடுங்கள்'' என்று சஜ்ஜன் கூறினான்.

''அப்படியானால் அதுவரை நான் இப்படியே தட்டிற்கெதிரே உட்கார்ந்திருக்கவேண்டியதுதானா, ராம்ஜீ?''

கன்யா தன் கணவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். சஜ்ஜனின் முகத்தில் அவனுடைய உள்ளத்தில் தோன்றியிருந்த கலக்கம் வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.

''ராம்ஜீ! எண்ணத்தில் உறுதிவேண்டும். இல்லையானால் அதை மறந்து உலகம் சுற்றும் சக்கரத்தில் உழன்றுகொண்டிருப்பாய். எவ்வளவுதான் யோசித்துக்கொண்டே இருப்பாய்? வெறும் எண்ணம் திரிசங்கு நிலையாகும்'' என்று பாபாஜீ மறுபடியும் கூறினார்.

''நீங்கள் எல்லோரிடமும் இப்படிப்பட்ட தட்சணைதான் கேட்கிறீர்களா, பாபாஜீ!'' என்று சஜ்ஜன் கேட்டான்.

''இவ்வாறு கேட்பதில் என்ன பயன்? இன்று முதன் முறையாக உன்னுடைய இந்த மாயையைப் பார்த்ததும் எனக்கும் செல்வத்தின்பேரில் ஆசை தோன்றிவிட்டது என்றுதான் வைத்துக் கொள்ளேன்!''

சஜ்ஜன் கன்யாவை நோக்கினான். அவனுடைய கருத்தைப் புரிந்துகொண்டு கன்யா, ''நான் கஷ்டத்திலே வளர்ந்தவள். செல்வமில்லாமை என்னைத் துன்புறுத்தாது'' என்று கூறினாள்.

''அப்படியானால் எனக்கும் வருத்தம் ஏற்படாது, பாபாஜீ! உங்களுடைய கட்டளையை ஏற்றுக்கொள்ளுகிறேன். இதன் சுகத்தை நான் அதிகமாக அனுபவித்துவிட்டேன். இனி ஞானச் செல்வந்தான்வேண்டும். நீங்கள் உணவு ஏற்றுக்கொள்ளுங்கள். நான் நாளை மறுநாளே கோர்ட்டு திறந்ததும் உங்கள் பெயரில் எழுதிவிடுகிறேன்.''

''எந்தக் கோர்ட்டில்?'' என்று கூறிக்கொண்டே பாபாஜீ உரக்கச் சிரித்தார். என்னைப் பொறுத்தவரையில் இந்த விநாடியே எல்லாம் எழுதியாகிவிட்டது. இனிமேல் இந்தச் செல்வம் உன்னுடையதல்ல, நீ என்சார்பில் இதைக் காப்பவன்தான். உனக்குச் சம்பளந்தான் கிடைக்கும்.''

''சரி, அப்படியே ஆகட்டும், இந்தச் செல்வத்திற்கு இனி நான் எஜமானன் இல்லே.''

''ஆமாம், ராம்ஜீ! இந்தப் பிடிப்பைக்கொண்டுதான் நீ நிலேக்க வேண்டும், ஒவ்வொரு விநாடியும் நீ செய்யப்போகும் சாதனே உன்னே உனக்கே எஜமானனுக ஆக்கும். நீ எஜமானனுக ஆக விரும்புகிருய் இல்லேயா? ...ஆகிவிடு!''

வர்ணமும், இன்பமும், புது அழகும் கலந்த ஹோலி—நாள் சிந்தனேமயமாக ஆகிவிட்டது. சஜ்ஜன் பொங்கும் எண்ணக் கடலில் மிதந்து கொண்டிருந்தான். அந்த நேரத்தில் ஒவ்வோர் எண்ணத்தையும் புரிந்துகொள்வது இயலாததாகவும், தேவையற்ற தாகவும் இருந்தது. அவன் ஓர் எண்ணக் கடலின் அடித்தளத்தில் அமர்ந்திருந்தான். அவனுக்கு அருகிலும், மேலேயும் அந்த நீரில் இருக்கும் அழகுடனும், அழகற்றதும் வேகமாகவும், மெதுவாகவும் செல்லக்கூடிய உயிரினங்களேப் போன்ற பல எண்ணங்கள் அவனேச் சூழ்ந்து கொண்டிருந்தன.

## 38

பாபாஜீ சாப்பிட்டு விட்டுப்போய் ஏறக்குறைய இரண்டு மணி நேரமாகிவிட்டது. போர்டிகோவிற்கு வெளியே நின்றுகொண்டிருந்த பஸ் வரை பாபாஜீயைக் கொண்டு விட்டுவிட்டுக் கணவனும் மனேவியும் கீழே இருந்த கூடமவரை சேர்ந்தே வந்தார்கள். சஜ்ஜன் மேலே சென்றுவிட்டான். கன்யா வேலேயாட்களுக்கு உணவு அளிக்கவும், சாமான் அறையை மூடவும் கீழேயே இருந்து விட்டாள்.

கன்யா அப்பொழுதிலிருந்து ஏதாவதொரு வேலேயில் ஈடுபட்டுக் கொண்டேயிருந்தாள். வேலேயாட்களுக்கு உணவு அளித்துப் பரிசு கொடுத்து அவர்களுக்கு இரண்டு மணி நேரம் ஓய்வும் அளித்தாள். பிறகு பூஜையறையின் சாமான்களேச் சுத்தப்படுத்திஞள். சிறிது நேரம்வரை தன் மாமியாரின் படத்தை இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். இறைவனுக்கெதிரில் வைக்கப்பட்டிருந்த விளக்கில் நெய் ஊற்றிஞள். பிறகு திரியைச் சரிப்படுத்திஞள். சிறிது நேரம் அவள் கண்ணுடி விளக்குகளேப் பார்த்துக் கொண்டிருந்தாள். அறையின் மேல் தளத்திலும், சுவர்களிலும் காணப்பட்ட பழைய சித்திர வேலேப்பாட்டை வேதனே கலந்த கண்களால் பார்த்துக் கொண்டிருந்து விட்டு பூசை அறையை மூடிஞள்.

பிறகு அவள் வெளியே தாழ்வாரத்திற்கு வந்தாள். புல் வெளி

யைத் தாண்டி மறுபக்கம் இருந்த சமையலறைத் தாழ்வாரத்து வழியாக களைத்த நடையுடன் வெறித்துப் போனவள்போல் மேற்புறம் படியில் ஏறினாள்.

அந்த மாளிகையிலிருந்த பெரிய பெரிய அறைகளில் விலையுயர்ந்த பொருள்கள் நிரம்பியிருந்தன. சஜ்ஜன் உட்கார்ந்திருந்த ஸ்டூடியோ அறையைவிட்டுவிட்டுக் கன்யா வெகு நேரம்வரை இங்கு மங்கும் சுற்றிக் கொண்டிருந்தாள். சிறிது நேரம் ஓர் இடத்தில் நின்றுகொண்டு, ஒரு விநாடி மற்றுமோர் இடத்தில் உட்கார்ந்து கொண்டும், அல்லது பழைய சிலைகளிலும், மரச்சாமான்களிலும் இருந்த தூசியைச் சுத்தப்படுத்திக் கொண்டும் இருந்தபடி அவள் தன் உள்ளத்தைத் துருவி ஆராய்ந்து கொண்டிருந்தாள். அந்த வீடும், அந்த வீட்டின் ஒவ்வொரு பொருளும் அவளைச் சேர்ந்தவை. அவள் அந்த வீட்டின் எஜமானி. ஐந்தாறு மாதங்களுக்கு முன்பு கன்யா கனவில்கூட இதைக் கற்பனை செய்ய முடியாத நிலையில் இருந்தாள். தன் தாய் வீட்டுச் சூழ்நிலையில் வெறுப்படைந்து பணக்கஷ்டத்தில் வளர்ந்தவளும், வெளிப்படையாக அடக்கத்துடனும், ஆனால் உள்ளத்தினுள் வேதனையுடனும் தனக்கே புரியாத ஆசைகளை வைத்துக் கொண்டு இலக்கிய சேவை, அபிநயக்கலை, அரசியல் என்ற பல பாதைகளில் சென்று கொண்டிருந்தவளுமான அந்த இளம் பெண், செல்வ இன்பத்தைப் பற்றிப் படித்தும், கேட்டும் இருந்தாள். ஆனால் மனப்பூர்வமாக அதனைப் பார்க்கும் வாய்ப்பு அவளுக்கு முன்னர் ஒரு பொழுதும் கிட்டியதில்லை. அவள் அரசை வெறுத்தும், பணக்காரர்களைக் கேலி செய்தும் வந்தாள். ஆனால் சஜ்ஜன் அவளுடைய காதலுக்கு ஏங்கி அவளும் அவனிடம் தன் உள்ளத்தைப் பறி கொடுத்ததிலிருந்து சஜ்ஜனோடுகூட அவனுடைய செல்வத்தின்மீதும் அவளுடைய உள்ளத்தில் அறியாமலேயே ஆசை வளர்ந்துவிட்டது. திருமணத்திற்குப் பிறகு சஜ்ஜன் தனது அரசாங்கம் முழுவதையும் அவளிடம் ஒப்படைத்துவிட்டான். ஒருநாள் அவன் தன் ஆசைக்காக தன் தாய், பாட்டி, கொள்ளுப்பாட்டி ஆகியோரின் பழைய நகைகளையெல்லாம் போட்டு 'மருமகள்' உருவத்தில் அவளுடைய சித்திரம் வரைந்த பொழுது லட்சக்கணக்கான மதிப்புள்ள சொத்தைத் தன் உடல்மீது சுமந்த அவளுக்கு அது விசித்திரமாகப் பட்டது. இப்பொழுது அவள் மெல்லமெல்லச் சுகத்தில் பழக்கப் பட்டுவிட்டாள். அவளுக்கு இப்பொழுது அது விசித்திரமாகப் படவில்லை. இந்த இயற்கையான போக்கில் இன்று தியாகக் கத்தியால் கீறல் ஏற்பட்டது. தன் எண்ணப் போக்கின்படி கன்யாவினால் அந்தத் தியாகத்தை மறுக்க முடியவில்லை. ஆயினும் தியாகம் செய்யும் பொழுது அவளுடைய உள்ளம் வருந்திக்

கொண்டும், அடிக்கடி வேதனைப்பட்டுக் கொண்டும் இருந்தது. அந்தச் சொத்து முழுவதையும் பாபா ராம்ஜீ தம்மோடு எடுத்துச் செல்லாமல் இருந்தபோதிலும், அது இனி அவளுடையதில்லை என்று அவளுக்குத் தோன்றிக்கொண்டிருந்தது.

அவளுடைய புது வாழ்க்கையின் மகிழ்வு நிறைந்த அந்த நேரத்தில் ஏற்பட்ட வருத்தம் அவளுக்கு வேதனையை அளித்தது. ஆத்மீக உண்மை என்ற முறையில் தியாக உணர்வு சரியானது தான்; அதைக் காக்கும் குடும்பஸ்தன் இன்பமடைகிறான். ஆனால் அதனால் நாம் குடும்பஸ்தவர்கள் இல்லை என்று ஆகிவிட முடியாதே! 'இது என்னுடைய குடும்ப வாழ்க்கை. நான் இதில் சுகமாக இருக்கிறேன். நான் திருமண மானவன் என் குடும்பத்தின் சுகத்தையும் நான் அநுபவிக்கத்தான் செய்வேன்.'

உள்ளத்து வேதனை ஓரளவிற்குக் குறைந்தது. அவளுக்குக் கணவனின் நினைவு வந்தது. கன்யா எழுந்திருந்து படுக்கையறைக்குச் சென்றாள். சஜ்ஜனை அங்கே காணவில்லை. கன்யா கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தாள். முகம் வாடியிருந்தது. கன்யா தன் கணவனுக்கெதிரில் வருத்தமான முகத்துடன் போக விரும்பவில்லை. அவனுக்கு இதைப்பற்றிச் சந்தேகங்கூட ஏற்படக் கூடாது. அவள் சோப்பால் முகத்தைக் கழுவி க்ரீம் தடவிக் கொண்டாள். பொட்டிட்டுத் தலைவாரிக் கொண்டாள். ஏதோ திடீரென்று அவளுக்குத் தோன்றிற்று. அருகிலிருந்த அறைக்குச் சென்று அலமாரியைத் திறந்து நீலநிறமான பங்களூர்ப் பட்டுச் சேலையை எடுத்தாள். பின்னர் அவள் வைர நகைகளை எடுத்துப் போட்டுக் கொண்டாள். காதுகளில் தோடு, மூக்குத்தி, கழுத்தில் மாலை, வலது கையில் நான்கு வளைகள், இடதுகையில் வைர மிழைத்த கடிகாரம் முதலியற்றை அணிந்தாள். சஜ்ஜன் வாங்கிக் கொடுத்த அந்த வைர நகைகளை அன்றுதான் முதல் முறையாக வனகன்யா போட்டுக்கொண்டாள். உடலில் அணிந்து கொண்ட வைரத்தின் ஒளி கன்யாவின் உள்ளத்தில் பதிந்தது. கண்ணாடியில் காணப்பட்ட அவளுடைய அழகு கவர்ச்சியாக இருந்தது.

சஜ்ஜன் தன் ஸ்டுடியோவில் சித்திரம் வரைந்து கொண்டிருந்தான். கன்யாவைப் பார்த்ததும் அவனுடைய முகமும் கண்களும் வியப்பால் விரிந்தன. "ஹல்லோ!" என்று கூறிக்கொண்டு அவன் கன்யாவைத் தலையிலிருந்து கால்வரை நோக்கினான்.

"திருஷ்டி வைக்கப்போகிறீர்களா?"

"திருஷ்டி வைக்க வேண்டிய நேரத்தில் வைத்தாகி விட்டது, இப்பொழுது உன்னைக் கண் குளிரப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்."

"உங்களுக்குக் குறையாக இருக்கும் என்று எண்ணினேன்,

அவ்வளவு ஆசையாக இந்த விலையுயர்ந்த பொருள்களையெல்லாம் நீங்கள் வாங்கினீர்கள்'' என்று கூறிவிட்டுச் சிறிது நின்று ஆழ்ந்த கருத்துடன் ''தியாகம் செய்வதற்கு முன்பு ஒருமுறை அநுபவிக்க ஆசையாக இருந்தது'' என்று கூறினாள்.

சஜ்ஜன் அன்புடன் அவளுடைய கன்னத்தை தட்டி, "நான் இவ்வளவு நேரமாக ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்து விட்டு இப்பொழுது ஒரு முடிவுக்கும் வந்துவிட்டேன்'' என்று கூறினான்.

கன்யா கண்களில் கேள்விக்குறியுடன் அவனைப் பார்க்கத் தொடங்கினாள்.

''கன்யா! இல்லாமை என்பது ஒன்று வலிமையை அளிக்கிறது, அல்லது அழித்து விடுகிறது. நாம் இருவரும் இல்லாமையில் வலிமையை அடைய முடியும். நம்பலாம், அது மட்டுமில்லை. மற்றொரு விஷயமும் இருக்கிறது; என்னுடைய உள்ளத்தில் சில குறைகள் உள்ளன. உதாரணமாக, என்னுடைய திருமண வாழ்க்கை இப்பொழுதுதான் துவங்கியிருக்கிறது. உன்னை அழைத்துக்கொண்டு ஊரெல்லாம் சுற்ற வேண்டும்; நாமிருவரும் வெகு தூரம் வரை உலகமெல்லாம் சுற்றிப் பார்க்கவேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். இந்த ஆசையை நான் அடக்க விரும்பினால் அடக்கிக்கொள்ள முடியும் என்று எனக்குத் தெரியும். ஆனால் அவ்வாறு செய்தால் எனக்கு அமைதி கிடைக்காது.'' என்று சஜ்ஜன் கூறினான்,

இவ்வாறு கூறிய சஜ்ஜன் சிறிது மௌனமாக இருந்து யோசிக்கத் தொடங்கினான். கன்யா அவனருகிலேயே நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்து கொண்டாள். ஒரு நிலைப் பட்ட காதலும், மணவாழ்வின் இன்பமும் நிறைந்த பெண்ணுக்கே உரிய பார்வையுடன் இடைவிடாது, அவனைப் பார்த்துக்கொண்டே அவள் இருந்தாள். அந்தப் பார்வையில் இன்பமும், கவர்ச்சியும் தோன்றின. அந்தப் பார்வை படபடக்கும் வெயிலைப்போல் எரிக்கக் கூடியதன்று; அதிகாலையில் வீசும் தென்றலைப் போன்றது; உள்ளத்தில் பூரிப்பை உண்டாக்கக் கூடியது.

''இங்குமெங்கும் சுற்ற வேண்டுமென்ற ஆசை எனக்குந்தான் இருக்கிறது'' என்று கன்யா கூறினாள்.

''ஆம் கன்யா! நான் இனிமேல் எனக்காக அதிகமான சுகங்களை சேகரிக்க மாட்டேன்; மிகவும் குறைந்த செலவில் வாழ்க்கையை நடத்துவேன். ஆனால் சில விஷயங்களை நான் உடனே விட்டுவிட விரும்பவில்லை. ஆனால் இதனால் நான் என்னையே ஏமாற்றிக்கொள்கிறேன் என்பதில்லை, நான் என்னுடைய தேவைகளைச் சிறிது சிறிதாகக் குறைத்துக்கொள்ள விரும்புகிறேன். எதிர் காலத்தில் எனக்குப் பிறக்கும் குழந்தைகளின் பெயரால் நான்

என் முன்னோர்களின் இந்தச் சொத்தை என்னுடைய தாக்கிக் கொண்டு விடக்கூடாது என்பதுதான் முக்கியமானது, அதுதான் நியாயமுங்கூட. என்னிடத்தில் ஏறக்குறைய இப்பொழுது சுமார் எட்டு லட்சம் ரூபாய் மதிப்புள்ள சொத்து இருக்கிறது. என் தந்தை இதே அளவுள்ள சொத்தை ஆடம்பர வாழ்க்கையில் அழித்து விட்டார். நாலைந்து லட்சம் அரசாங்கக் காப்பாளர்கள் காலத்தில் போய்விட்டது. அது போகட்டும்; நான் உடனே என் பாதிச் சொத்திற்கு டிரஸ்ட் அமைத்து விடுகிறேன். நாம் இதைக் கொண்டு மக்களது நலனுக்கான காரியங்கள் செய்யலாம்.''

கன்யா இதைக் கேட்டு மகிழ்வடைந்தாள், ''நீங்கள் நான் நினைத்ததைக் கூறிவிட்டீர்கள், சஜ்ஜன்! உங்களிடம் நான் உள்ளத்து உண்மையைக் கூறுகிறேன். நமது உள்ளம் கலந்த பொழுது நீங்கள் இவ்வளவு பெரிய பணக்காரர் என்ற எண்ணமே என் உள்ளத்தில் எழவில்லை, ஆனால் உங்களுடன் என் திருமணம் நடக்கும் என்று நான் கற்பனை செய்யத்தொடங்கிய பொழுது அந்தக் கற்பனையுடன் நான் இந்த வீட்டின் எஜமானியாகி விடுவேன் என்ற எண்ணம் என் உள்ளத்தில் தோன்றவில்லை என்று சொன்னால் அது தவறாகும். இந்த வீட்டிற்கு வந்தபிறகு என் உள்ளத்தில் செல்வ மோகம் ஏற்படத்தான் செய்தது, நீங்கள் நடந்துகொள்ளும் முறையால்தான் அந்தமோகமும் தோன்றிற்று. நான் என் எண்ணத்தைச் சரியாக வெளிப்படுத்த முடியவில்லை, ஆனால் நீங்கள் அதைச் சரியாகப் புரிந்து கொள்ளுங்கள்.'' என்று கன்யா கூறினாள்.

''நான் அதை முற்றும் சரியாகப் புரிந்து கொள்ள முடிகிறது'' என்று சஜ்ஜன் கூறினான்.

''இன்று பாபாஜீ கூறிய பொழுது நான் சஞ்சலம் அடைந்து விடவில்லை. இந்தத்தியாகம் எனக்கு இயற்கையானது என்று தோன்றிற்று, ஆனால் தனிமையில் இதுவரை—'' என்று கூறிக் கொண்டே கன்யா பேச்சை முடிக்காமல் மௌனமாகத் தலை குனிந்தவாறு இருந்தாள்.

சஜ்ஜன் உரக்கச் சிரித்தான். கன்யா திடுக்கிட்டு அவனைப் பார்க்கலானாள்; அவள் குற்றவாளியைப்போல் தயங்கினாள். சஜ்ஜன் இரண்டு கைகளையும் அவளுடைய கழுத்தில் போட்டு அவளுடைய உதடுகளைத் தன்பக்கம் இழுத்துக் கொண்டு அவற்றில் இன்ப முத்திரையை இட்டான், ''நீ மிகவும் சாது—உன்னுடைய அன்பு பெரியது'' என்று கூறினான்.

சஜ்ஜன் நின்றுகொண்டு சோம்பல் முறித்தவனாய் தன் அரை குறையான சித்திரத்தை கவனமாகப் பார்த்து, ''நேர்மையானவர்களுக்கு இப்படிப்பட்ட விஷயங்கள் இருப்பதா—இறப்பதா என்ற

பிரச்சனைபோல் ஆகி விடுகின்றன. உலக வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்களிடம் நாம் இந்த விஷயங்களைக் கூறினால் நம்மைப் பைத்தியம் என்று எண்ணி அவர்கள் நகையாடுவார்கள். சத்திய யுகத்தில் இப்படிப்பட்ட தானங்கள் செய்யப்பட்டிருக்கலாம். கலியுகத்தில் இதைப் பற்றிக் கற்பனை செய்வதுகூடப் பைத்தியக்காரத்தனமாகும் என்று கூறுவார்கள் ..வா, போகலாம்'' என்று கூறினான்.

''செல்வத்தின் கவர்ச்சியை இன்றுதான் நான் உணர்ந்தேன்'' என்று கன்யா எழுந்துகொண்டே கூறினாள்.

''நீ எதையும் உணரவில்லை. நான் செல்வ ஆசை பிடித்தவர்களைப் பார்த்திருக்கிறேன். என்ன சொல்வது அவர்களைப்பற்றி! சேர்த்துச்சேர்த்து லட்சக்கணக்காக வைத்துவிட்டுப்போய் விடுகிறார்கள்! வாழ்க்கை முழுவதும் நன்றாகச் சாப்பிடுவதற்கும்,ஆடை அணிவதற்கும் ஏங்கிக் கொண்டே இருக்கிறார்கள். நோய் வந்த போது வைத்தியம் கூட அவர்கள் செய்துகொள்ளுவதில்லை. அவர்களுடைய செல்வம் அவர்களுக்குமட்டுமல்ல, மற்ற எவருக்குமே பயன் படுவதில்லை!''

''அப்படிப்பட்டவர்கள் இறந்தபிறகு பாம்பாக ஆகிவிடுகிறார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்று கன்யா சிரித்துக்கொண்டே கூறினாள். இருவரும் தங்கள் அறையை அடைந்தனர். சஜ்ஜன் தலையணை மீது சாய்ந்தவாறு கட்டிலில் உட்கார்ந்தான். ''இந்தப் பாம்புவிஷயத்தில் எனக்கு நம்பிக்கை இல்லாவிட்டாலும் இதில் ஒரு விசித்திரமான உண்மை இருப்பதாகத்தோன்றுகிறது'' என்று கூறினான்.

கன்யா அவனுக்கெதிரில் உட்கார்ந்துகொண்டு அவனுடைய முகத்தைப் பார்க்கத் தொடங்கினாள்.

''எங்கள் வீட்டில்கூட ஒரு பாம்புஜோடி இருந்தது'' என்று சஜ்ஜன் கூறினான்.

''எங்கே?''

''பூஜையறையில்.''

''பூஜை...''

''ஆமாம், அதற்குக் கீழ் ஒரு சுரங்கம் இருக்கிறது. வாய்ப்புக் கிடைக்கவில்லை. இல்லையானால் அதைக்காண்பித்திருப்பேன்; என் தந்தை இறந்தபிறகு அந்த இடத்தின் மேற்புறம் மூடப்பட்டு விட்டது. நான் கூட அதற்குள் போனதே இல்லை. ஆனால் நான் சிறுவனாக இருக்கும் பொழுது ஒரு முறை அது திறக்கப்படுவதைப் பார்த்தேன்.''

''அங்கே பாம்புகள் இருந்தனவா?'

''ஆமாம். என் தந்தை அவற்றைக் கொன்றுவிட ஏற்பாடு செய்தார்.

சில மாதங்களுக்கு அப்பால் அவரும் இறந்து விட்டார். எங்கள் வீட்டில் எல்லோரும் அதன் காரணமாகத்தான் அவர் இறந்தார் என்று நம்பினுர்கள். என் கொள்ளுத்தாத்தா இந்த மாளிகையைக் கட்டிய பொழுது எங்களுடைய பழைய வீட்டி லிருந்து அந்தப்பாம்பு ஜோடி, தங்கக் கூடையில் கொண்டுவரப் பட்டது என்று தாய் கூறக் கேட்டிருக்கிறேன். என் கொள்ளுத் தாத்தா புரட்சி மனப்பான்மை கொண்டவர். அந்தக் காலத்தில் இங்கிலாந்துக்குப் போனுர். திரும்பி வந்தபிறகு பிராயச்சித்தம் கூட அவர் செய்யவில்லை. ஆனுல் அவருக்கும் இந்தப்பாம்பு ஜோடி மீது நம்பிக்கை இருந்தது என்று கூறுகிறுர்கள். எங்கள் மூதாதையரான ரக்கூமலும், அவருடைய மனைவியுமே அந்த பாம்பு ஜோடியாக ஆகியிருந்தார்கள் என்று சொல்வார்கள்; அவர்தான் நவாப் சாதத் ஆலீ கானுடன் டில்லியிலிருந்து லக்னே வுக்கு வந்தார்.''

''அப்புறம் என்ன ஆயிற்று?''

''அவர் துணி வியாபாரம் செய்து வந்தார். அவர் மிகவும் கெட்டிக்காரராகவும் சக்திவாய்ந்தவராகவும் இருந்தார். அவரு டைய வசத்தில் நவாப் இருந்தார். இங்கே வந்த பிறகு அவர் லட்சக்கணக்காகச் சம்பாதித்தார். அவர் இறந்த பிறகு தன் மனைவியின் கனவில் வந்து நான் உட்கார்ந்திருக்கும் தங்க நாண யங்கள் நிரம்பிய பீப்பாய்க்கருகிலுள்ள நாலு பீப்பாய்களிலிருந்தும் யாரும் எதையும் எடுக்கக்கூடாது என்றும், குடும்பத்திற்குக் கஷ்டம் வரும்பொழுது தேவையான நேரத்தில் ஒரு கிண்ணம் நிறையத் தங்க நாணயங்களை நான் எடுத்துக்கொள்ள அனுமதிப் பேன் என்றும், ஒரு கிண்ணத்தில் எனக்குப்பால் வைக்கவேண்டும் என்றும் கூறியதாகச் சொல்வார்கள்.''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன? அவருடைய விருப்பப்படியே எல்லாம் நடந்தது.''

''அப்படியானுல் கனவிற்குப்பிறகு உண்மையிலேயே பாம்பாக.''

''ஆமாம், சில காலத்திற்குப்பிறகு அவருடைய மனைவியும் இறந்து விட்டாள். அப்பொழுது ஜனங்கள் அந்தப் பாம்பு ஜோடி யைப் பார்த்தார்கள்.''

''அந்தச் செல்வத்தை யாரும் எடுத்துக் கொள்ளவில்லையா?''

''இல்லை, ஒருவேளை தேவை இல்லாமலிருந்திருக்கலாம். ரக்கூ மல்லுக்குப் பிறகு ஐந்து தலை முறைகள் வரை எங்கள் செல்வம் வளர்ந்துகொண்டே போயிற்று. எங்கள் மூதாதையர் மிகவும் சாமர்த்தியசாலிகளாகவும், உலக அநுபவம் வாய்ந்தவர்களாகவும் இருந்தார்கள். அரசசபையில் அவர்களுக்கு நல்ல மதிப்பு,

இருந்தது, சூழ்நிலைக்குத் தக்கபடி அவர்கள் நடந்து கொண்டார்கள்; வியாபாரியாக இருந்தவர்கள் லேவாதேவிக்காரர்களாகவும், பிறகு தாலுகாவின் சொந்தக்காரர்களாகவும் ஆனார்கள். இந்த மாளிகையைக்கட்டிய என் கொள்ளுத்தாத்தா, சோதிப்பதற்காக எங்கள் பொக்கிஷத்தை இங்கே கொண்டுவரப்பட்டபொழுது ஒரு பீப்பாயிலிருந்து சில நாணயங்களை எடுத்துவைத்துக்கொண்டார். அன்று இரவு அந்த நாணயங்களைத் திருப்பிவைக்காவிட்டால் அவருடைய மகனும் மருமகளும் இறப்பார்கள் என்று அவரது கனவில் யாரோ சொன்னார்கள். அடுத்த நாளே அவர் நாணயங்களைப் பீப்பாயிலேயே போட்டு விட்டார். என்தாத்தா அதைத் தொட்டதே இல்லை. அவர், பாவம், இளைய வயதிலேயே இறந்து போனார். இந்தப்பகுதி அரசாங்கக் காப்பாளர்களின் கைக்குப் போய்விட்டது. அந்தக் காலத்தில் ஏராளமான பணம் கொள்ளை போயிற்று. அதற்குப் பிறகு என்தந்தை மேஜர் ஆனார். அதற்குப் பிறகு அவர் மேல் நாட்டிற்குச் சென்றார். அங்கிருந்து திரும்பிய பிறகு அவர் முற்றும் மாறிவிட்டார். அவர் ஏராளமான பணத்தை வீண் செலவு செய்தார். தம் மதிமயக்கத்தில் பாம்பு ஜோடி யையும் கொல்லச் செய்தார். சில நாட்களுக்குப் பிறகு அவரும் இறந்துவிட்டார். பாம்பாகியிருந்த மூதாதையர்களின் சாபத் தால்தான் அவருக்கு அந்த முடிவு வந்தது என்று என் தாய் கூறுவது வழக்கம்.''

"அந்தத் தங்க நாணயங்கள் என்ன ஆயின?''

''என் தந்தை அவற்றை உருக்கி விட்டார்.''

"அந்தச் சுரங்கத்தில் இப்பொழுது என்ன இருக்கிறது?''

''தெரியாது.''

ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு. ''பாம்புகள் செல்வத்தைக் காக்கும் கதைகள் நான் கேட்டிருக்கிறேன்; ஆனால் ஒரு பொழுதும் நம்பியதில்லை'' என்று கன்யா கூறினாள்.

''என்னாலும் நம்பமுடியவில்லை, ஆனால் என் தாய் அதைப்பார்த்திருந்தாள். அந்தப் பாம்பு ஜோடியோடு எங்கள் குடும்பத்து வரலாறு சேர்ந்திருக்கிறது. இப்படிப்பட்ட விஷயங்களை நம்புவதா? நம்பாமல் இருப்பதா? இது ஒரு பெரிய பிரச்சனையாகத் தோன்றுகிறது.'?

"உண்மைதான். இந்த நாட்டில் எத்தனையோ விசித்திரங்கள் இருக்கின்றன! நம் நாட்டில்தான் ஒன்றுக்கொன்று முரணாக எத்தனை விஷயங்கள் இருக்கின்றன! ஒருபுறம் ஞானம், வேதாந்தம் குடியரசு ஆகியவற்றின் பரம்பரைகள் உள்ளன. மறுபுறம் இந்தப் பாம்பு, அற்புதம் செய்யும் யோகிகள், தாயியின் மந்திர வித்தைகள்

இவையும் நிலவுகின்றன. இவற்றை நம்புவது மூட நம்பிக்கை யைத்தவிர...''

''ஆனால் கன்யா? எப்படி நம்பாமல் இருப்பது! நம் பாபாஜீ யையே எடுத்துக்கொள். இவருடைய ஆத்மீக சக்தியை நீ நம்பாமல் இருக்க முடியுமா? சொல்லு.''

கன்யா முழங்கையின் மீது தலையை வைத்துக்கொண்டு படுத்தபடி சஜ்ஜனின் முகத்தையே ஏதோ சிந்தித்தவாறு பார்த்துக் கொண்டிருந்தாள்.

சஜ்ஜன் கூறினன்: ''மோகமும், தியாகமும்..''

''பாம்பு, யோகி, இரண்டும்.''

''எல்லையைக் கடந்தவை. இரண்டு பரம்பரைகளும் மிகப் பழமையானவை, மொகஞ்சதாரோ, ஹரப்பா காலத்திலிருந்தே பாரத தேசத்தவர் நன்ருக செல்வம் திரட்டவும். அதை அநுபவிக் கவும் அறிவார்கள். அதற்கு எதிரிடையாக எல்லா இன்பங் களையும்விடுத்து யோக சாதனை செய்வதும் அந்தக் காலத்தி லிருந்தே பரவியிருக்கிறது.''

''அம்மா!'' வெளியிலிருந்து வேலையாளின் குரல் கேட்டது, ''வா சீதள்!'' என்று கூறிய கன்யா எழுந்து உட்கார்ந்தாள்.

''தேநீர் கொண்டு வரட்டுமா ஐயா?''

''கொண்டுவா'' என்று சஜ்ஜன் கூறினன். வேலையாள் போய் விட்டான்.

அறையில் அமைதி நிலவிற்று, சிறிது நேரத்தில் தேநீரும். சிற்றுண்டியும் வந்தன; சஜ்ஜனும் வனகன்யாவும் தங்கள் உள்ளத் திலிருந்த உண்மைக்கும், பொய்மைக்கும் பயந்து மௌனமாகி விட்டார்கள் போலத் தோன்றிற்று. சஜ்ஜன் தேநீர் பருகத் தொடங்கினன், கன்யாவின் கையிலிருந்த கோப்பை ஆறிக் கொண்டிருந்தது. கடைசியாக அவள் கூறினள்: ''சஜ்ஜன்! இன்று நாம் சிறிது கலக்கமடைந்தாலும் அதைவிட வெட்கக்கேடு வேறு எதுவும் கிடையாது. சாப்பிட்டுக் குடித்து இன்பம் கொண்டாடு என்ற கொள்கை, செல்வம் என்ற கரும்பாம்பின் விஷயமாகும், அதை நாம் அகற்ற முடியவில்லையென்ருல்?''

''நன்ருக யோசித்துப்பார், கன்யா! பாபாராம்ஜீ நமது உள்ளத்தில் ஒரு கலக்கத்தை உண்டுபண்ணிவிட்டார். அதிலி ருந்து தப்ப நாம் எந்த ஒரு பக்கத்திலாவது உறுதியாக அடி யெடுத்து வைக்க வேண்டும். நாம் யோகி, போகி என்ற இரண் டாகவும் ஆக முடியாது, ஏதாவது ஒரு பாதையைத் தேர்ந் தெடுத்தாக வேண்டும்.''

''தேர்ந்தெடுத்தாகி விட்டது. நாம் குடும்பஸ்தர்கள், நமது

போகமும் தியாகமும் ஒரு வரையறைக்கு உட்பட்டதாக இருக்க வேண்டும்.''

## 39

'ஹோலி ஹோலி!''

கறுப்பு, சிவப்பு, நீலம், மஞ்சள் முதலிய வர்ணங்களை முகத்திலும், கை கால்களிலும் பூசிக்கொண்டும், பல வர்ணங்கள் தோய்ந்த கிழிந்த துணிகளை அணிந்து கொண்டும், தகரங்களை அடித்துக் கொண்டும், அழுகிய தக்காளிப் பழங்களை எறிந்துக் கொண்டும், எதிர்ப்பட்ட ஜனங்களுடைய முகத்தில் கறுப்புப் பூச்சுப் பூசிக்கொண்டும், சேறு பூசிய சாக்கைத் தூக்கிக்கொண்டும் ஓர் ஊர்வலம் மஹிபாலின் வீட்டு வாயில் வழியாகப் போய்க் கொண்டிருந்தது. ஹோலி கொம்மாளத்தால் அந்தச் சிறியதெரு எதிரொலித்துக் கொண்டிருந்தது. எதிர்புறத்தில் சிவன் கோவில் மேடைத் திருப்பத்திலிருந்து சஜ்ஜனின் ஒரு வேலையாள் சைக்கிளில் வந்து கொண்டிருந்தான். தன் பக்கம் ஊர்வலம் வருவதைப் பார்த்து அவன் சைக்கிளிலிருந்து இறங்கி மேடையோடு ஒன்றிக் கொண்டு நின்றான். சிங்கங்களுக்கெதிரில் பசுவைப்போல் அவன் அகப்பட்டுக்கொண்டான். ஹோலிக் கூட்டத்தார்கள் சஜ்ஜனின் வேலையாள்மீது பாய்ந்தார்கள். சித்தூ கெட்டிக்காரனாகவும், பலசாலியாகவும் இருந்தான். இரண்டு கைகளாலும் அவன் சைக்கிளைக் கேடயம்போல் தூக்கிக்கொண்டு கத்தினான்: ''ஜாக்கிரதை, சைக்கிளோடு பாய்ந்து விடுவேன், இரண்டு மூன்று பேரையாவது அமுக்கி விடுவேன், அப்புறம் வேண்டுமானால் நீங்களெல்லாருமாக என்னைக் கொன்று போட்டுவிடுங்கள்.''

ஹோலிக்காரர்களின் மிருகப் போக்கிற்கு அவன் சாதுவான பசு இல்லை ;மற்றொரு சிங்கம் போன்றவன் என்பது தெரிந்து விட்டது. சித்தூ கண்களில் கோபத்துடன் மேடையின் சுவரிலிருந்து ஒரு ஓரமாக சைக்கிளைத் தூக்கிக்கொண்டு எதிர்ப்பை மடக்க நின்று கொண்டான். ஹோலிக்காரக்கூட்டம் கத்திற்று; கேலி செய்தது; வேடிக்கை பண்ணியது; பலவிதமாகத் திட்டியது; வர்ணக் குழாய் களிலிருந்து வர்ணங்களை வீசியது; சாக்கை வீசுவதாகப் பயமுறுத் தியது; சித்தூவும் முன்னே வந்து அவர்கள் தலைமீது சைக்கிளைப் போடுவதாகப் பயமுறுத்தினான். வர்ண வீச்சுக்களிலிருந்து தன் கண்களைக் காப்பாற்ற முயன்ற அவனுக்குத் தன்னைக் காப்பாற்றிக் கொள்வது பெரும் பாடாகப் போய்விட்டது. ஊர்வலம் கடந்து விட்டது. சித்தூவின் கைகள் சுமையைத் தாங்க முடியாமல்

கல்லைப்போல் கீழ்ப்புறம் இறங்கின. திடீரென்று உண்டான ஆவேசத்தாலும், சைக்கிளின் பாதுகாப்பு பற்றிய எண்ணத்தாலும் அவனுடைய கைகள் உணர்வற்றிருந்தன. அவன் சிறிது நேரம் தெருவிலேயே உட்கார்ந்துகொண்டான்.

மஹிபால் தன் மாடியிருந்து இந்தக் காட்சியை நோக்கிக்கொண்டிருந்தான், நாலைந்து நாட்களாக, குறிப்பாக அன்று காலையிலிருந்து அவன் இவ்வாறான பல காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். திண்ணையில் வட்டம் போட்டுக்கொண்டு கொம்மாளம் அடிக்கும் பையன்கள் எல்லை மீறி நடந்து கொள்வதை அவனால் தடுக்க முடிந்தது. ஆனால் அயலாரை அவனால் அடக்க முடியவில்லை. அந்தக் கொம்மாளத்தில் அவனது வளர்ந்த உடல் செயல் முறையில் பங்குகொள்ள முடியாவிட்டாலும், அவனுடைய இளமை நிரம்பிய உள்ளம் மகிழ்ச்சியடைந்து கொண்டிருந்தது. ஹோலியில் வர்ணங்கள் வீசப்படும் அந்தப் போரும், மதம் பிடித்த நிலையும், தீய வசைகளும் அவனுக்கு ஒரு விதத்தில் இயற்கையானவையாகத் தோன்றின. ஹோலியின் அந்த ஐந்து நாட்களில்தானே சமுதாயம் கட்டுப்பாடற்றுப் போகிறது! சிறியவர்களும் பெரியவர்களும் ஒரேவிதமான இன்பத்தில் மூழ்கி விடுகிறார்கள். பெரிய பெரிய பணக்காரர்கள், பெரிய மனிதர்கள் ஆகியோரின் வீட்டின் இளைஞர்கள் கூட முகத்தில் பலவித வர்ணங்கள் பூசிக்கொண்டு தெருக்களில் காணப்படுகிறார்கள். பல வர்ணங்களோடு விளையாடினாலும் சமுதாயம் முழுவதும் ஒரே விதமான இன்பத்தில் ஆழ்ந்துவிடுகிறது. தெருக்கள், சுவர்கள், கதவுகள், நாய்கள், பசுக்கள், காளைகள், கழுதைகள், ஆடுகள் முதலிய எல்லாமே வர்ணமயமாகக் காட்சியளிக்கின்றன. தெருக்களின் பாதைகளிலும், சுவர்களிலும், மக்களின் பேச்சிலும் காமன்—ரதி ஜோடி வசை பொருளாக மாறி உயரிய இன்பத்தின் பெருமையை அழித்துவிடுகிறது. ஹோலிக் கொம்மாளத்தில் அது ஒன்றுதான் மஹிபாலுக்குப் பிடிக்கவில்லை. இந்தப் பூமண்டலத்தின் உயர்ந்த இன்பம் இவ்வாறு வசவுப் பொருளாக ஏன் ஆகவேண்டும்? ஆண் தன்னையும், பெண்ணையும் இவ்வாறு ஏன் அவமானப்படுத்துகிறான்? இதில் அவன் எந்தச் சுகத்தைக் காண்கிறான்? ஹோலி இன்ப விழா. அது வசவாக ஏன் மாறிற்று?

சஜ்ஜனின் வேலையாள் தன் எஜமானனின் சார்பாக அவர்கள் எல்லோரும் குறிப்பிட்ட நேரமான மாலை ஆறு மணிக்குப் பதில் நாலு மணிக்கே வந்துவிட்டால், எல்லோருமாக உல்லாசத் தோணிப் பயணத்திற்குச் செல்லலாம் என்ற செய்தியைக் கொண்டுவந்திருந்தான்.

''நாங்கள் ஷாஹ்நஜப் ரோடில் இல்லை. சந்துகளில் வாழ்கிறோம்

என்று உன் எஜமானரிடம் கூறு. அவருக்கு உன் உருவத்தைக் காட்டி எங்களையும் இந்த நிலைக்கு ஆளாக்க விரும்புகிறாரா என்று கேள்'' என மஹிபால் சிரித்துக்கொண்டே கூறினான்.

வேலையாள் தயங்கிக்கொண்டே சிரித்தான். மஹிபால் அவனைக் கர்னலின் வீட்டிற்குப் போக வேண்டாம் என்று தடுத்தான். அவன் சகுந்தலாவை அழைத்துச் சித்தூவுக்கு இனிப்புப் பண்டங்கள் கொடுக்கும்படியும், அவன் துணி நனைந்திருந்ததால் அவனுக்குத் தன்னுடைய ஒரு பழைய சட்டையும், வேஷ்டியும் கொடுக்கும்படியும் கூறினான். அதுமட்டுமல்ல; மஹிபால் அவனுடைய வீரத்தைப் பாராட்டி அவனுக்கு இரண்டு ரூபாய் சினிமா பார்ப்பதற்கும் கொடுத்தான். சித்தூவின் முகம் மலர்ந்தது. மஹிபால், பின்னர் மேலே போய்விட்டான்.

மஹிபாலின் வீட்டில் அப்பொழுது எவ்வளவோ மாறுதல்கள் தோன்றியிருந்தன. இங்கு மங்கும் செல்வத்தின் பெருமை காணப்பட்டது. மஹிபால் வீட்டின் சிறிய கூடத்திலிருந்த எழுதப் படிக்க உபயோகப்படும் சாமான்கள், மேஜை, நாற்காலி, ஸ்டூல், ஃபைல்கள் முதலியன மறைந்துவிட்டன. கலைக்கூடத்திலிருந்து வந்த ஸாஞ்சிகலை அழகு கொண்ட சோபா செட், உட்காரும் பலகை மீது ஸாஞ்சியில் அச்சிடப்பட்ட போர்வை, திரைகள், சாம்பல் கிண்ணம், மேஜை விளக்குகள், தட்டு, புத்தர்சிலை முதலியன சேர்ந்து மஹிபாலின் இலக்கியக்கூடத்தின் உருவையே மாற்றி விட்டன. தாழ்வாரத்திற்கப்பால் ஒரு சிறிய மர-அறை தயாராகிக் கொண்டிருந்தது. அங்கேதான் எழுதப் படிக்கத் தேவையான பொருள்கள் வைக்க ஏற்பாடு செய்யப்பட்டன. அறை முழுமையாக இன்னும் தயார் செய்யப்படவில்லை. ஆகையால் தச்சுக் கருவிகள் வைக்கப்பட்டிருக்கும் பையும், மரப் பலகைகளும் ஒரு புறம் இருந்தன. வீட்டின் மேற்புறத்தில் சிறப்பான மாறுதல் என்று சொல்ல முடியாவிட்டாலும் ஒவ்வோர் இடத்திலும் ஏதோ மாறுதல் காணப்பட்டது. ஹோலிக்காக வாங்கப்பட்ட குடும்பத்தவர்களின் செருப்புவகைகள், சிறந்த 'டிசைன்' கொண்ட பெண்களின் செருப்புகள் ஆகியவற்றிலிருந்து குடும்பத்தவரின் முகங்கள் வரை காணப்பட்ட ஒளி, வீடு அடையாளம் தெரியாமல் மாறி விட்டதைக் காட்டிக் கொண்டிருந்தது. மஹிபால், சித்தூவைக் கூட்டத்தில் குழந்தைகளிடம் விட்டு விட்டுச் சிறிது நேரம் மேல் மாடியில் நின்றுகொண்டு வெறித்துக் கிடந்ததும் ஹோலி அழகு நிறைந்ததுமான தெருவைப் பார்த்துக்கொண்டிருந்து விட்டுச் சமையலறைக்குப் போய்விட்டான்.

அன்று கல்யாணிக்கு ஏராளமான வேலை இருந்தது. பணியாரங்கள் செய்வதால் அவளுக்கு ஓய்வே கிடைக்கவில்லை; நாளை சம்

பந்தி வீட்டிற்குப் பணியாரங்கள் அனுப்பியாக வேண்டும். கல்யாணியும் மஹிபாலும் முதன் முதலாகத் திருமணம் நிச்சயித்திருக்கிறார்கள். அதுவும் சகோதரி மகளுக்கு, கல்யாணி தன் அக்கம் பக்கத்தவர்களுக்கும், உறவினர்களுக்கும் தானும் பணக்காரி, தன் கணவன் ஒரு பெரிய எழுத்தாளன், அவனுக்கு இருபதாயிர ரூபாய் வருமானம் ஒரே செக்கில் கிடைக்கிறது என்று தெரிவித்துக் கொள்ள விரும்பினாள். கல்யாணியின் முகத்தில் சுமங்கலிக் களை காணப்பட்டது. மூக்கில் வைர மூக்குத்தி. காதுகளில் முத்துத் தோடு, கழுத்தில் தங்கச் சங்கிலி, இடுப்பில் தங்க ஒட்டியாணம், கைகளில் கண்ணாடி வளைகளோடு வைரக்கல் பதிக்கப்பட்ட தங்க வளையல்கள், கணவனின் விருப்பப்படி கால்களில் ஒலிக்கும் சதங்கை முதலியன அவள் அணிந்து கொண்டிருந்தாள். லக்னோவிலுள்ள வாஜபேயிக் குடும்பத்தோடு சம்பந்தம் செய்திருந்தாள், கல்யாணி. மாப்பிள்ளை செக்ரெடெரியெட்டில் இருநூற்று நாற்பது ரூபாய் சம்பாதித்துக் கொண்டிருந்தார். அவருடைய தமையனின் காட்டைக் குத்தகைக்கு எடுத்திருந்தார். மாப்பிள்ளையின் தம்பி எம். ஏ. படித்துக் கொண்டிருந்தான். நாத்தனார், மாமியார் கிடையாது. அது இன்னும் நல்லது. மாப்பிள்ளை ஒரே குடும்பத்தில் இருந்தபோதிலும் சுதந்திரமாக இருந்தார். அவர் ஒரே வீட்டில் இருந்தார். ஒரே சமையலறையில் சாப்பிடவும் செய்தார். ஆனால் அண்ணிக்கு மாதந்தோறும் சாப்பாட்டிற்குப் பணம் கொடுத்து வந்தார். வீட்டுக் கணக்கு விவகாரத்தில் சகோதரர்கள் நேர்மையாகவும், ஒருவருக்கொருவர் அன்புடனும் இருந்தார்கள். ஆண்டவனின் கருணையால் சகுந்தலாவுக்குச் சுகமான வாழ்க்கை கிடைத்துவிட்டது. மாமியும் மாமாவும் சேர்ந்து இவ்வளவு சிறந்தமுறையில் திருமணம் செய்து வைத்தார்கள் என்று உலகம் கூறும், மாப்பிள்ளை மிகவும் யோக்கியமானவர். பத்தாயிரத்திற்கே இசைந்து விட்டார். ஆனால் பத்தாயிரம் வரதட்சணை கொடுப்பதற்கும் ஒரு யோக்கியதை வேண்டுமே! மஹிபால் பலகையில் உட்கார்ந்துகொண்டு பணியாரங்கள் நிறைந்த புதுப்புதுப் பாத்திரங்கள் பரவியிருந்த சமையலறையில் வைரமும் முத்தும் போட்டுக் கொண்டிருந்த மனைவியை மகிழ்வோடு நோக்கினான். மஹிபாலின் பார்வையில் தந்தையின் மகிழ்ச்சியும் பெருமையும் ஒளிவிட்டுக் கொண்டிருந்தன. ராஜ்யஸ்ரீ தன் தாய்க்கு உதவி செய்து கொண்டிருந்தாள். அடுப்படியில் இருந்ததால் சிவந்திருந்த தன் முகத்தை வாணலிப் பக்கத்திலிருந்து திருப்பிக் கல்யாணி கணவனிடம், ''யார் வந்திருந்தது?'' என்று கேட்டாள்.

''ஹாஸ்நஜப் ரோடிலுள்ள பெரும் பணக்காரரான சஜ்ஜன்

சாஹேப் பஹாதுர் அரண்மனையிலிருந்து வேலைக்காரன் வந்திருந் தான்.'' மஹிபால் கூறியமுறை தாய்க்கும் மகளுக்கும் பெருமை யாக இருந்தது. அவர்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

''என்ன செய்தி சொல்லியனுப்பினார்? அழைப்பை ஒத்திப் போட்டு விட்டாரா?'' என்று கல்யாணிகேட்டாள். மஹிபால் சிரித்துக் கொண்டே கூறினான். ''இல்லை அழைப்பு இரண்டு மடங்காக ஆகிவிட்டது. நான்கு மணிக்கு நாம் உல்லாசப்படகுப் பயணம் போகலாம். சிற்றுண்டி நிகழ்ச்சி இருக்கும்; இரவில் சாப்பிட்டுவிட்டு எல்ஃபின்ஸ்டனில் 'சம்ஸார்' சினிமா பார்க்க லாம். எல்லாம் முன்னேற்பாட்டின் படியே செய்யலாம்.''

''சம்ஸார், என்ன ஒருபடமா?'' ராஜ்யஸ்ரீ முகத்தைக் கோணிக் கொண்டே ''அப்பா! நமக்கு அந்தப்படம் பிடிக்கவே பிடிக்காது. ஜனங்களுக்குப் பிடிக்கிறது, அவ்வளவுதான்! இவ்வளவு பெரிய கலைஞரின் மனைவியாகவும், இவ்வளவு முன்னேற்றவாதியாக இருந்தும் சித்தி...'' என்று கூறினாள்.

''இதற்குச் சித்தி காரணமில்லை. உன் அம்மாவும் கர்னலின் மனைவியுமே அதைத் தேர்ந்தெடுத்தார்கள்.''

''அதைவிடப் 'பஹார்' பார்ப்பது நல்லது.''

''அப்பாவைப்போலத்தான் பிள்ளையும்! 'பஹாரில், என்ன முன் னேற்றப்போக்கு இருக்கிறது?'' என்று மஹிபால் மகளைக் கொஞ்சு தலாக அதட்டியவாறு, ''செயற்கையான படங்கள்தாம் வருகின்றன. அவற்றைவிடச் 'சம்ஸார்' எவ்வளவோ சிறந்தது தான்'' என்று கூறினான்.

ராஜ்யஸ்ரீ மௌனமாக இருந்தாள். தட்டிலிருந்த பூந்தியைத் தகரடப்பாவில் போடும்பொழுது ஏதோ எண்ணத்தில் இருந்த தால் கைதவறி இரண்டு மூன்று பூந்தி தரையில் விழுந்துவிட்டது. பொரித்த பூந்தியைக் கரண்டியால் எடுத்து வேறு ஓர் அடுப்பில் வைத்திருந்த வாணலியில் போட்டுக்கொண்டிருந்த கல்யாணியின் பார்வை தன்மகளின் கவனக் குறைவை கவனித்தது. ''சினிமாப் பேச்சை அப்புறம் வைத்துக் கொள்ளக்கூடாதா ரஜ்ஜோ! வேலை யில் கவனம் செலுத்தாமல் இருக்கிறாயே!'' என்று அவள் கடிந்து கொண்டாள்.

''விழுந்துவிட்டது அம்மா'' என்று ரஜ்ஜோ முணுமுணுத்துக் கொண்டே கூறியவளாய்த் தரையிலிருந்து பூந்தியை எடுத்து டப்பாவில் போடத்தொடங்கினாள்.

''பாரு! என்ன செய்து கொண்டிருக்கிறாய் நீ? உன்னுடைய அறிவு எங்கே போய்விட்டது? தரையிலே விழுந்துகிடந்ததை...''

''அதில் என்ன வந்து விட்டது, அம்மா? சுத்தமான தரை தானே?''

''ரஜ்ஜோ! நீ இந்த இடத்தைவிட்டுப்போ! நீ செய்கிறவேலே எனக்குப் பிடிக்கவில்லே!'' கல்யாணி பேசி முடிப்பதற்குமுன்னதாகவே, ராஜ்யஸ்ரீ தடாலென்று தட்டைத் தரையில் வைத்து விட்டு அறையைவிட்டு வெளியே போய்விட்டாள். தாய்-மகளின் சண்டையில் மஹிபால் ஒன்றும் பேசவில்லே. ரஜ்ஜோ போய் விட்டபிறகு அவன் கல்யாணியிடம், ''கல்யாணி! உன்னுடைய இந்த வழக்கம் இந்தக்காலத்தில் செல்லாது'' என்று கூறினன்.

''செல்லுமோ செல்லாதோ, நான் என் பரம்பரை வழக்கத்தை விட மாட்டேன்.''

''விடாதே!'' என்று பெருமூச்சுவிட்டுக் கொண்டு கேலியாக மஹிபால் கூறினன். ''என்ன சொல்வது? உன்னுடைய இந்தப் பரம்பரைப்பழக்கந்தானே என்னேயே மாற்றிவிட்டது!'' இவ்வாறு கேலியாகப் பேசிய மஹிபால் உடனே சிந்தனேயில் ஆழ்ந்து விட்டான். ஏதோ ஒரு பெரும் வேதனே அவனுடைய முகத்தில் பளிச்சிட்டது. அவனுடைய கண்கள் மூடிக்கொண்டன. ஒரு விநாடிவரை அந்தச் சூழ்நிலேயிலிருந்து அகன்று அவன் தன்னேத் தானே மறந்திருந்தான்.

''மிகவும் நன்ருக இருக்கிறது உங்கள் பழக்கம்! உங்களுடைய பழக்கந்தான் குழந்தைகளுக்கும் வந்திருக்கிறது. நம் சகுந்தலா மிகவும் கெட்டிக்காரி. எந்த நல்ல பழக்கத்தைக் கற்றுக் கொடுத் தாலும்...''

''ஆகாகா! உனக்கெதிரில் சகுந்தலா பிராம்மணப் பெண்ணுக ஆகிவிடுகிருளாக்கும்! அவளுடைய புக்ககத்தில் எல்லோருடைய நடத்தையும் என்னேப் போலத்தான். வாஜ்பேயிக் குடும்பந்தான். ஆயினும் பிராம்மணர்கள் போல இல்லே அவர்கள்!''

''இல்லாவிட்டால் போகட்டுமே! நமக்கென்ன? கலியுகத்தில் எல்லாம் கெட்டுப்போகும் என்று சாஸ்திரத்தில் எழுதப்பட்டிருக் கிறது. உமாசங்கர் உங்களேப்போலத்தான் எல்லாவற்றையும் சாப்பிடுகிருரா?''

மஹிபால் ஆழ்ந்தமனப்போக்கில் கூறினன்: ''இல்லே உமாசங்கர் நல்ல நடத்தையுள்ள பையன், எல்லோரும் அவனேப் புகழ்வதை நான் கேட்டிருக்கிறேன். ஆனல் ஹோட்டலுக்கெல்லாம் போவதுண்டு.''

''அப்படியானல் சிவசங்கரின் மனேவி...''

''உன்னேப்போல அவள் இல்லே. ஆனலும் பிராம்மணப் பெண் தான். ஒரு கெட்டிக்காரப் பெண்வீட்டுக்காரனேப், போல நானும் சிவசங்கரிடம் எல்லாவற்றையும் கேட்டேன். நான் என்னுடைய எந்தக் குழந்தைக்கும் உன்னேப்போன்ற மதப்பித்துக் கொண்டவர் களின் குடும்பத்தில் சம்பந்தம் செய்யமாட்டேன்.''

''வேண்டாமே! எனக்கு இரண்டுவிதமாகப் பேசத் தெரியாது, சாதாரணக் குடும்பத்தில் சம்பந்தம் செய்தாலும் அது நல்ல சம்பந்தமாக இருக்கவேண்டும். உங்களிடம் சொல்வதற்கென்ன! நம் பெரிய பெண்ணுக்கும், ரஜ்ஜோவுக்கும் சீக்கிரம் திருமணம் செய்துவிடவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. அந்தக்கட்டு என்பவன் மட்டுந்தான் பெரிய மனிதன் இல்லை என்றுகாண்பிக்க வேண்டும். உண்மையைச் சொல்லப்போனுல் இந்த நேரத்தில் ஆண்டவன் இருபதாயிரம் ரூபாய் அனுப்பி நமது மானத்தைக் காப்பாற்றிவிட்டான். பத்தாயிரம் வரதட்சணை என்ன சாதாரணமா? நரன் ஐய்கிஷோர் வீட்டில் முல்லரின் மனைவி வந்திருந்தாள்...''

மஹிபால் மிகவும் ஸ்வாரஸ்யமாக மனைவி கூறுவதைக் கேட்டு மகிழ்ச்சியின் போதையில் திளைத்துக் கொண்டிருந்தான். கல்யாணி அப்பொழுது மிகவும் கர்வத்துடன் பேசிக் கொண்டிருந்தாள். முல்லரின் தாய் ஒரு முறை 'மஹிபால் பெரிய மனிதனுக இருக்கலாம், ஆனுல் பணத்தில் பெரியமனிதனில்லை, அவனுடன் யார் சம்பந்தம் செய்வார்கள்?' என்று கேலி செய்திருந்தாள். அதை இன்று மறுபடியும் கேட்டபொழுது மஹிபாலுக்குப் பெரும் வேதனையாக இருந்தது. முல்லரின் தாயைப் பற்றிய பேச்சு மறுபடியும் எழுந்தது. மஹிபாலின் ஆர்வம் மறுபடியும் வளர்ந்தது. ''என்ன சொன்னுள் முல்லரின் தாய்?'' என்று அவன் கல்யாணியிடம் கேட்டான்.

''அவள் என்ன சொல்கிறது? அவளுக்கு நானும் பதில் கொடுத்தேன். மற்றவர்களின் பெருமை பிறரை ஏமாற்றுவதாலும், கொள்ளையடிப்பதாலும் உண்டாகிறது. ஆனுல் எங்கள் குடும்பத்துப்பெருமை நாணயத்தாலும், உழைப்பாலும் ஏற்படுகிறது. எங்களுக்குப் பாங்கியில் ஒரு லட்சம், இரண்டு லட்சம் இல்லாவிட்டால் என்ன? வேண்டியபொழுது பணம் எங்கள் வீட்டைத் தேடிவருகிறது. பத்தாயிரம் சகுந்தலாவுக்குக் கொடுக்கப் போகிறேம் என்று கூறினேன்'' என்று ஆவேசத்துடன் கூறும் பொழுது கல்யாணிக்கு மூச்சு வாங்கியது. அவள் ஒரு விநாடி மௌனமாக இருந்தாள். பூந்தியெல்லாம் பொரித்தாகிவிட்டது. அருகில் வைத்திருந்த துணியால் பிடித்து வாணலியை இறக்கி வைத்துவிட்டு அரை நிமிடம் ஆசனத்தில் உட்கார்ந்து முகத்தைத் துடைத்தவளாய் இளைப்பாறலானுள். மஹிபாலின் ஆர்வம் அதிகமாகவே இருந்தது. அவனுடைய முகம் இன்ப—துன்ப உணர்வால் களைப்படைந்து காணப்பட்டது. தற்புகழ்ச்சியைக் கேட்கும் ஆர்வத்துடன் அவன் மறுபடியும், ''அப்புறம் என்ன கூறினுள், முல்லரின் தாய்? அங்கே இன்னும் யார் யார் இருந்தார்கள்?'' என்று கேட்டான்.

''எல்லோரும் இருந்தார்கள்'' என்று கூறிய கல்யாணி பொரித்த பூந்தி வைக்கப்பட்டிருந்த தட்டைத் தன் பக்கமாக இழுத்துப் பூந்தியைப் பாகில் நனைக்க முயன்றுகொண்டே கூறத் தொடங்கினாள். ''ஜய்கிஷோரின் அம்மா, அவருடைய அண்ணி, ஜய்கிஷோரின் மனைவி-எல்லோரும்தான் இருந்தார்கள். நான் எதற்காக எவருக்கும் பயந்துகொண்டு இருக்கவேண்டும்? நமக்குக் கிடைத்திருக்கும் மரியாதை இவர்களுக்கெல்லாம் ஏது? இத்தனை நாட்கள் நான் பேசாமல் இருந்துவிட்டேன். ஆனால் நேரம் வரும் பொழுது மனசில் இருப்பனவற்றையெல்லாம் சொல்லிவிடத்தான் வேண்டும். 'மற்றவர்களின் அரண்மனை, ஆடம்பரம், பெயர் முதலியனவெல்லாம் சில ஆண்டுகளிலேயே மறைந்துவிடும். ஆனால் எங்கள் வீட்டுப் பெருமை காலம் கடக்கக் கடக்க வளர்ந்து கொண்டே இருக்கிறது, ஊரிலும், அக்கம்பக்கத்திலும் பெரிய பெரிய பணக்காரர்கள், டாக்டர்கள், வக்கீல்கள் எல்லோருக்குமே என் வீட்டுக்காரரைத்தெரியும். என் வீட்டுக்காரரின் பெயர் இந்த நாட்டிலும் வெளிநாடுகளிலும் பரவியிருக்கிறது. பெரிய பெரிய அதிகாரிகளுக்கெல்லாம் அவரைத் தெரியும், எல்லோரும் அவருடைய புத்தகங்களைப் படிக்கிறார்கள். என் வீட்டுக்காரருக்கு ஈடாக யார் இருக்கமுடியும்?'' என்று அழுத்தமாகச் சொன்னேன். பிறகு அவள் கரண்டியால் பூந்தியை எடுத்துப் பாகில்போட்டாள்.

மஹிபாலுக்குச் சந்தோஷமாக இருந்தது. கல்யாணியின் சொற்களைக்கேட்டு அவனுக்குப் பெருமை ஏற்பட்டது. ''நீ இந்த மாதிரி உன் வாயாலேயே சொல்லக்கூடாது, கல்யாணி!'' என்று அவன் கூறினான்.

''ஏன் சொல்லக்கூடாது?'' என்று கூறிய கல்யாணி அசைந்ததால் அவளுடைய நகைகள் சலசலத்தன. ''ஆண்டவன் மட்டும் என்னுடைய வேண்டுகோளைக் கேட்கட்டும், உங்களுக்கு நல்ல வருமானம் ஏற்படும். நம் குழந்தைக்கு வரதட்சணையும் கொடுக்கலாம். இரண்டு வருஷத்தில் மோட்டார், பங்களா எல்லாம் வந்துவிடும் பாருங்களேன்'' என்று கூறினாள்.

மஹிபாலுக்குப் பெரிதும் மகிழ்ச்சியாக இருந்தது, தன்னைத் தொட முயன்ற கணவனைத் தடுத்தவாறு கல்யாணி சிறிது அன்பு கலந்த கோபத்துடன், ''தொடாதீர்கள், என்னை!...யாராவது வந்து விட்டால்...'' என்று கூறினாள்.

உண்மையிலேயே சகுந்தலா வந்துவிட்டாள். மஹிபால் எழுந்து நின்று அவளைப் பார்த்துக்கொண்டே சோம்பல் முறிப்பதாகப் பாசாங்கு செய்யத் தொடங்கினான். பிறகு அவன் சகுந்தலாவின் தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு அன்புடன், ''நீ புக்ககத்துக்குப் பணியாரம் செய்யவில்லையா?'' என்று

கேட்டான். பிறகு வாயிற்பக்கம் போய்க்கொண்டே, "சஜ்ஜனின் வேலையாள் போய்விட்டானா?" என்று கேட்டான்.

"அவன் போய் வெகு நேரமாகிவிட்டதே."

வாயிற்பக்கம் போன மஹிபால் கல்யாணியிடம், "சீக்கிரமாக வேலையெல்லாம் முடித்துவிடு, ஹோலிப் பண்டிகை இன்று" என்று கூறிவிட்டு வெளித்தாழ்வாரத்திற்குப் போய்ச் சேர்ந்தான். சிவன் கோவில் மேடைக்கருகில் கிணற்றுச் சுவருக்குக்கீழே பல வர்ணங்கள் பூசிக்கொண்டிருந்த ஐந்தாறு பையன்கள் உட்கார்ந்து கொண்டு வேடிக்கை செய்துகொண்டிருந்தார்கள். வாயில்வரை சென்ற மஹிபால் திரும்பி நின்றான். ஒரு பையன் உரக்கச் சிரித்துக்கொண்டே, தன்னுடைய இரண்டு மூன்று நண்பர்களுடன் சேர்ந்துகொண்டு தெருவில் ஒரு தோட்டக்காரியைத் தான் வளைத்துக்கொண்டதாகவும், அவள் பயந்துபோனதாகவும், அது எவ்வளவு வேடிக்கையாக இருந்தது என்றும், அவர்கள் அந்தத் தோட்டக்காரியையும் கடைசியில் எப்படிச் சந்தோஷப்படுத்தினார்கள் என்றும் கூறிக்கொண்டிருந்தான். இடை இடையில் அவனுடைய நண்பனும் அந்த நிகழ்ச்சியைப் பற்றித் தெரிவித்துக் கொண்டிருந்தான்.

அதைக் கேட்ட எல்லோருக்கும் சந்தோஷமாக இருந்தது. மஹிபாலுக்கும் மகிழ்ச்சியாக இருந்தது. ஆனால் பேச்சு மட்டரகமாக இருந்தது. உண்மையில் ஹோலி காமன்விழாவாகும். பங்குனியின் பெருமையே காமன் பெருமையாகும். சிறிது நாட்களுக்காக அமைக்கப்பட்ட தன் எழுதும் அறையில் தலையணையின் மீது சாய்ந்து கொண்டிருந்த மஹிபால் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

திடீரெனச் சீலா அவனுடைய உள்ளத்தில் இடம் பெற்றாள். எங்கிருந்தோ அத்தரின் மணம் வந்து அந்தச் சூழ்நிலையில் கலந்தது போல் அவனுக்குத் தோன்றிற்று. மஹிபாலின் அமைதியான நிலைபெற்ற உள்ளத்தில் எதிர்பாராமல் பூகம்பமே தோன்றி விட்டது போல் இருந்தது. அன்று ஹோலிப் பண்டிகை; ஆனால் சீலா அவனருகில் இல்லை! சீலா அவனிடமிருந்து பிரிக்கப்பட்டு விட்டாள்! மஹிபாலுக்கு சீலாவின் நினைவாகவே இருந்தது. உலக நடத்தை, நல்லொழுக்கம் என்ற உயர்ந்த நாற் சுவருக்குள் சீலா நுழைந்து விட்டாள். உள்ளத்தில் போர் மூண்டது. அந்தத் தொடர்பு கூடாது என்று எண்ணினாலும் சீலா அவனுடைய உள்ளத்தில் பதிந்து கொண்டாள். சீலாவுக்கு எவ்வளவு வருத்தமாக இருக்கும்! சென்ற ஆண்டில் ஹோலியன்று அவர்களிருவரும் சேர்ந்திருந்தார்கள். சீலாவுடன் கழித்த ஆண்டுகள், நாட்கள், மணிகள் எல்லாம் எதிர்பாராமல் சில விநாடிகளுக்குள் அவனு

டைய உள்ளத்தில் தோன்றி எண்ணற்ற தாரகைகள் நிறைந்த வானத்தை நோக்கும் பொழுது உண்டாகும் அமைதியைப் போன்ற அமைதியை அளித்தன. சீலா ஸ்விங் ஒரு டாக்டர். அந்த ஊரில் பெயர் பெற்ற பெண். நாட்டின் புகழ்பெற்ற இலக்கியக் கர்த்தாவான மஹிபால் சுக்லாவுக்கு அந்த ஊரில் நடக்கும் அரசாங்க விழாக்களுக்கு அழைப்புக் கிடைப்பதில்லை. ஆனுல் டாக்டர் சீலா ஸ்விங் அந்த ஊரின் பெரிய பெரிய கூட்டங்களில் மதிக்கப்படுகிருள். சீலாவிடம் ஒரு லட்சம், ஒன்றரை லட்ச ரூபாய் இருக்கும். வியக்கத்தக்க சுதந்திரமான போக்கு உடையவளாக இருந்த போதிலும் சீலா அவனுடன் உள்ளூர அடக்கமாகப் பழகினுள். சீலா அவனுக்கு மரியாதையளித்தாள். அவள் அவனுக்குத் தன் சொற்களாலும், நடத்தையாலும் ஊக்கமளித்தாள். விஞ்ஞானம் படித்தவர்கள் பெரும்பாலும் இலக்கியம், கலைகள் முதலியவற்றை ரசிப்பதில்லை. ஆனுல் சீலா ரசித்தாள். அவர்களுக்குள் சச்சரவுகளும் தோன்றியிருக்கின்றன. ஆனுல் சீலா அவற்றை வளர விடுவதில்லை. அந்தச் சீலாவுடன் இன்று அவன் விரோதம் பாராட்டிக் கொண்டிருந்தான்.

குடும்பப் பொறுப்பும், இன்பமும், பெருமையும் நிறைந்த மஹிபாலின் உள்ளம் சீலாவின் நினைவால் கலக்கமுற்றது. ஒரு முறை சீலாவின் வீட்டிற்குச் சென்று தன்னுடைய ஹோலியை இன்பமயமாக ஆக்கிக்கொள்ள அவனுடைய உள்ளம் ஏங்கியது. 'நான் அவளிடம் போகத்தான் செய்வேன். இந்தச் சமுதாயத்திடம் எதற்குப் பயப்படவேண்டும்? இதுவரை கவனக்குறைவுடன் இருந்துவிட்டேன். அதனுல்தான் உலகில் அவமானப்படவேண்டியதாக ஆகிவிட்டது. இல்லாவிட்டால் ஒளிவு மறைவாக வாழ்நாள் முழுவதும் அந்தத் தொடர்பைக் காத்துக் கொள்ளலாமே!' என்று கருதிய மஹிபால் சீலாவைச் சந்திக்க வேண்டும் என்ற ஏக்கத்துடன் அறையை விட்டு வெளியே வந்தான். மாடிக்குக் கீழே இரண்டாவது கட்டில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். கல்யாணியும் சேலைத்தலைப்பில் கையைத் துடைத்துக் கொண்டு சமையலறை வராண்டாவிலிருந்து வெளியே வந்து தன் அறைக்குப் போய்க் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் மஹிபாலின் திட்டமெல்லாம் ஆட்டங்கண்டு விட்டது. "கூடாது இனிச் சகுந்தலாவுக்கு மணம் செய்து வைக்க வேண்டும். மருமக்கள் வருவார்கள். நான் தனி ஆளில்லை. சுதந்தரமானவனுமில்லை. நான் என்னுடைய ஆசைகளையும், உள்ள உணர்வுகளையும் அடக்கித்தான் ஆக வேண்டும்" என்று எண்ணிய அவனுடைய உள்ளம் அதே சமயம் தனக்குத் தானே போட்டுக் கொண்ட தடைகளை எதிர்த்தவாறு துடித்துடித்து ஏங்கிக்

கொண்டிருந்தது. தனது அந்த ஏக்கம் வெறும் பொருளற்ற ஏக்கந்தான், அதில் தன்னைப்பற்றியோ அல்லது சீலா, கல்யாணி, குழந்தைகள் முதலியவர்களைப் பற்றியோ எந்தவிதமான உணர்ச்சியும் கிடையாது. தன்னுடைய உணர்வின் அடித்தளத்தில் ஏதோ ஒரு பெரிய கல்லைப் போட்டு மூடப்பட்டு விட்டது. பலவித மான எண்ணங்கள் வெறும் கற்பனையால்தான் தோன்றுகின்றன. ஆனால் உண்மையில் தன் உள்ளத்தில் எந்த உணர்வும் கிடையாது என்று அவனுக்கு (மறைமுகமாக)த் தோன்றிக் கொண்டிருந்தது.

# 40

டாக்டர் சீலா ஸ்விங் பால்ஜக்கின் வாழ்க்கை வரலாறு படித்துக் கொண்டிருந்தாள். ஓர் அட்டையை அடையாளமாக வைத்து விட்டு அவள் புத்தகத்தை மூடினாள். அப்துல் கட்டிலுக்கருகில் தேநீர் மேஜையைக் கொண்டு வைத்துவிட்டு நின்று கொண்டிருந் தான். சீலாவின் முகம் உணர்வற்றும், வருத்தமாகவும் இருந்தது. எழுந்து தேநீர் அருந்துவது கூட அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. ஆனாலும், அவள் எழுந்து உட்கார்ந்து கொட்டாவி விட்டுக் கொண்டு சோம்பல் முறித்தாள். அப்துல் தேநீர்க் கெட்டிலி லிருந்து மூடியை அகற்றி வைத்துவிட்டுக் கோப்பையைச் சரிப் படுத்திக் கொண்டு தேநீர் தயாரிக்கத் தொடங்கினான்.

''நீ போ! நான் தயார் செய்துகொள்கிறேன்.''

அப்துல் நகர்ந்து நின்றுகொண்டு, ''மேடம்! மாலையில் என்ன சாப்பாடு தயார் செய்யட்டும்? யாராவது வரப் போகிறார்களா?'' என்று கேட்டான்.

''இல்லை'' என்று கூறிவிட்டுச் சீலா மறுபடியும் கொட்டாவி விட்டவளாய் கையால் வாயை மறைத்துக்கொண்டு, ''எது வேண்டுமானாலும் செய்'' என்று கூறினாள்.

அப்துல் போய் விட்டான். சீலா உணர்வற்ற கைகளால் எப்படியோ தேநீரைத் தயாரித்தாள். ஹோலி நாளன்று அவளும் மஹிபாவின் நினைவாகவே இருந்தாள். மஹிபால் இல்லாததால் முப்பத்தெட்டு வயது நிறைந்த சீலா திடீரென்று தன்னை வயது முதிர்ந்தவளாக எண்ணலானாள். அவளுடைய வாழ்க்கையின் இன்பம் வற்றிவிட்டது. பணம், சொத்து, மதிப்பு எல்லாம் இருந்த சுதந்திரமான அவள், உதவியற்றவளாக உணர்ந்தாள். சீலா வாழ்க்கை முழுவதும் கஷ்டமான நிலைகளைத் தாண்டி இந்த உயர்ந்த நிலையை அடைந்திருந்தாள். அவளுடைய அந்தச் சக்தி மஹிபால் இல்லாததால் முறிந்து கொண்டிருந்தது. மஹிபால்

பிரிந்த பிறகு சீலாவின் மகிழ்ச்சியெல்லாம் போய்விட்டது. மிகவும் சலித்துப் போய் அவள் இரண்டு முறை சினிமா பார்க்கப் போனுள். அதைத் தவிர அவள் பல நாட்களாக நோயாளிகளைப் பார்ப்பதை தவிர வேறு எங்கும் போவதுமில்லை; யாரையும் சந்திப்பதுமில்லை. எப்பொழுதாவது சஜ்ஜனும் வனகன்யாவும் வருவதுண்டு. அதைத்தவிரப் பெரும்பாலும் அவளுண்டு புத்தகங்களும் ரேடியோவும் உண்டு, அல்லது தனிமை உண்டு என்றிருந்தாள்.

சீலாவின் குழந்தைப்பருவம் வறுமையில் கழிந்தது. உத்தர பிரதேசத்துக் கிறிஸ்துவர்களில் தொண்ணூற்ருென்பது சதவிகிதம் பேர் ஏழைகள்தாம். அவளுடைய குழந்தைப் பருவத்தின் பொழுது கிறிஸ்துவர்கள் பெரும்பாலும் வெளிநாட்டுப் பாதிரிகளிடம் வேலை பார்த்து வந்தார்கள். சீலாவின் தந்தை மேற்கு உத்தரப் பிரதேசத்தில் ஒரு சிறு ஊரில் மிஷன் ஸ்கூலில் தலைமை ஆசிரியராக இருந்தார். அவருடைய தாயாரும் ஆசிரியாராக இருந்தாள். ஆறு சகோதரர்களும் சகோதரிகளும் உள்ள குடும்பத்தில் சீலா மூன்ருவது குழந்தையாகப் பிறந்தாள், வறுமையில் வாழ்க்கை கழிந்தது. சீலா வறுமையை எதிர்த்தாள். அவள் பிடிவாதத்துடன் வீண் செலவு செய்து வந்தாள். துவக்கத் திலிருந்தே அவள் புரட்சி மனப்பான்மை கொண்டவளாக இருந்தாள். படிப்பிலும், பேச்சுப் போட்டியிலும் கெட்டிக்காரியாக இருந்ததால் மற்றக் குழந்தைகளுக்கிடையில், அவளுக்குப் பெரும் புகழ் கிடைத்தது. அதனுல் அவள் துவக்கத்திலிருந்தே மிகவும்கர்வமாக இருந்தாள். பள்ளிக்கூடங்களுக்கான பிராந்தியப்பேச்சுப் போட்டியில் அவள் அலாகாபாதில் இரண்டு முறை முதற் பரிசும் பெற்றிருந்தாள். வீட்டில் அவமானமும் சண்டையுந்தான் இருந்தன. ஆனுல் வெளியே அவள் பெருமை பெற்ருள். அதனுல் டாக்டர் சீலாவின் உள்ளத்தில் போராட்டம் மூண்டது. சிறு வயதில் நடந்த தேசீய இயக்கங்களும் அவளது மனத்தில் பதிந்தன. கிறிஸ்துவ சமுதாயம்—கறுப்பு இந்தியக்கிறிஸ்துவர்களின் கூட்டம் அந்தக் காலத்தில் தங்களை ஆங்கிலேயர்களின் ஒன்றுவிட்ட சகோதரர்களாகக் கருதிற்று. சாதாரண ஆங்கிலேயன்கூட அவர்களை மதிக்காத காலத்திலேயே அவர்களுடைய நிலை இவ்வாறு இருந்தது. தேசிய இயக்கங்களால் இருபதாம் நூற்ருண்டின் துவக்கத்திலேயே அந்த இந்தியக் கிறிஸ்துவ சமுதாயத்திலும் தேசீய உணர்ச்சி தோன்றிற்று.

வயிற்றிற்காக வெளிநாட்டுச் சங்கங்களோடு சேர்ந்து தன் நாட்டு மக்களிடமிருந்து பிரிந்திருந்ததனுல் தேசீய உணர்ச்சிச் சூழ் நிலையில் இந்தியக் கிறிஸ்துவர்கள் விசித்திரமான புழுக்கம் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள். அவர்களுடைய

சமுதாயச் சிக்கல்களும் வளர்ந்திருந்தன. இந்து மதத்தைச் சேர்ந்த சிறிய, பெரிய சாதிகளெல்லாம் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்தன. முஸ்லிம்களிலும் பல வகுப்பினர் கிறிஸ்துவர்களானுர்கள். அவர்கள் மதம் மாறினுர்களே யன்றித் தங்களுடைய பழைய மதப் போக்குகளை மாற்றிக் கொள்ளவில்லை, இந்து கிறிஸ்துவர்கள் பெரும்பாலும் தம்மவரின் திருமணங்களில் பங்குகொள்வதைத்தான் விரும்பினுர்கள். உயர்வு தாழ்வு வேற்றுமைகளும் ஓரளவுக்கு இருக்கத்தான் செய்தன. முஸ்லிம் கிறிஸ்துவர்களும் தங்களுடைய மாற்றமடைந்த சூழ்நிலையிலேயே அடைபட்டுக் கிடந்தனர், அவர்களுடைய மூட நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் இந்திய முறையிலேயே அமைந்திருந்தன. குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட திசையில் பயணம் செய்யக்கூடாது; பெண்ணின் வீட்டில் தண்ணீர் கூடக் குடிக்கக்கூடாது என்ற பழக்கங்களெல்லாம் கிறிஸ்துவ சமுதாயத்திலும் பரவி யிருந்தன. சமையலறையில் வெளியாட்கள் நுழையக் கூடாது; புது மனிதர்களுக்கெதிரில் சாப்பிடக்கூடாது என்ற இந்துக்களின் பழக்கங்களும் அவர்களிடையே காணப்பட்டன. பெயர்களில்கூட இந்துக்களின் பரம்பரை காட்சி அளித்தது. சிங், மிஸ்டர் ஸ்விங்காவும்; ராம்பலி, மிஸ்டர் ராம்பல்ஸ் ஆகவும்; பானர்ஜீ, மிஸ்டர் போனுர்ஜியாகவும் மாற்றம் அடைய பல குடும்பங்களில் பெயர்களைக் கொண்டு புரட்சிகளும் உண்டாயின. சீலாவின் குடும்பத்தில்கூட இரண்டு சகோதரர்கள் தங்களுடைய பெயரை வின்சென்ட்ராம், சாமுவெல் ராம் என்றும், தந்தை மேஸி ஸ்விங் என்றும், மூன்ரும் சகோதரன் ஸ்மித் பிரைட் என்றும் முழுதாக வெளிநாட்டுப் பெயரும் வைத்துக் கொண்டிருந்தார்கள்.

சீலா ஸ்விங்கின் குழந்தைப் பருவத்தில் முதலாவது உலகப் போருக்குப்பிறகு நாடு முழுவதிலும் தேசீய உணர்ச்சி பரவி இருந்தது. இந்த நாட்டிலிருந்த கிறிஸ்துவ சமுதாயமும் முதல் முறையாக தனது இந்தியத் தன்மையை உணரத் தொடங்கிற்று, கிறிஸ்துவ மதம் இந்திய முறையில் மாறிற்று, பியானே இருந்த இடத்தில் தபேலாவும் ஹார்மோனியமும் இடம் பெற்றன. மெழுகுவர்த்திக் கெதிரில் பஜனை செய்யும் நேரத்தில் ஆரத்தி சுற்றுவது, ஆமீன், ஆமீன் அல்லது பீஸ், பீஸ் என்று கூறுவதற்கு பதிலாக சாந்தி—சாந்தி என்று கூறுவது என்ற முறைகள் இடம் பெற்றன. இந்திய முறையைப் பின்பற்றுவதை எதிர்ப்பவர்களும் தோன்றினுர்கள். கிறிஸ்துவ மாணவர் குழுவில் இரண்டு பிரிவுகள் ஏற்பட்டன.

சீலா இப்படிப்பட்ட சமுதாய புரட்சிகளில் எப்பொழுதும் முன்னே வந்து பங்கு கொள்வது வழக்கம். அவள் துவக்கத்திலி

ருந்தே பயமற்றவளாகவும், புரட்சி மனப்பான்மை கொண்டவளாகவும் இருந்தாள். இந்த மனப்பான்மையால் அவள் ஆரம்பத்திலிருந்தே மேல் நாட்டுக் கிறிஸ்துவ மிஷனில் வேலை செய்வதில்லை என்று உறுதி கொண்டாள். புரட்சிக்காரியாக இருந்ததால் அவளுக்குக்கிடைத்து வந்த உதவிப் பணமும் நிறுத்தப்பட்டது. வீட்டின் சூழ்நிலை அவளுக்கு விஷமாக இருந்தது, இவ்வளவெல்லாம் இருந்தும் தன்னுடைய உள்ளத்து வலிமையால் அவள் படித்து டாக்டர் ஆனாள். வீட்டிலிருந்து விரைவில் விடுதலை பெறுவதற்காக அவள் அரசாங்க மெடிகல் சர்வீஸில் சேர்ந்தாள். தடைகள் இருந்த போதிலும் அவளுக்கு வேலை கிடைத்துவிட்டது. விதி அவளுக்கு உதவியாக இருந்தது. சீலாவினிடத்தில் உழைப்பும் ஈடுபாடும் இருந்தன. ஆதலால் அவள் முன்னேறிக்கொண்டே போனாள். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தேழாம் ஆண்டில் அவளுக்கு லக்னோவில் உள்ள கிங் ஜார்ஜ் ஆஸ்பத்திரியில் வேலை கிடைத்து விட்டது. இங்கே வந்ததும் அவளுடைய விதிச் சக்கரம் மின்னல் வேகத்தில் ஓடத் தொடங்கிற்று. சென்ற பதினான்கு பதினைந்து ஆண்டுகளில் டாக்டர் சீலா ஸ்விங் முற்றும் சுதந்திரமாகவும், பணக்காரியாகவும் ஆகித் தனது வைத்தியத் தொழிலை நன்றாக வளர்த்துக்கொண்டாள். இளமையில் தனது சமூகத்தைச் சேர்ந்த பால் என்ற ஒரிளைஞனை அவள் காதலித்தாள். பாலும் இந்திய நாகரீகத்தைப் போற்றி வந்தான். பாலும், சீலாவும் சேர்ந்து இந்திய வேதாந்தம், இலக்கியம், வரலாறு ஆகியவற்றை படிப்பது வழக்கம், இந்திய நாகரீக ஆர்வத்தால் அவர்கள் இருவரும் தங்களுடைய அறிவிற்கும் வயதிற்கும் பொருந்தாத உயர்ந்த நூல்களைத் தன்மயமாகப் படிப்பதும், அவற்றைப்பற்றி வாதம் செய்வதுமாக இருந்தார்கள், காலரா வந்து நான்கே நாட்களில் பால் காலமாகி விட்டான். சீலாவின் வாழ்க்கையில் ஒரு பெரிய குறை ஏற்பட்டு விட்டது, அதற்குப் பிறகு அவளுடைய வாழ்க்கையில் இரண்டு இளைஞர்கள் வந்தார்கள். ஆனால் அவர்கள் வெறும் நண்பர்களாகவேதான் இருந்தார்கள், மஹிபால் அவளுடைய சூனியமான வாழ்க்கையை மாற்றியமைக்க உறுதுணையாக வந்து சேர்ந்தான். அழகும், வலிமையும் பொருந்திய அன்பு நிறைந்த கலைஞனும், கல்வியில் நாட்டம் கொண்டவனும், சுயமரியாதை உடையவனும், புரட்சிப்போக்கு நிறைந்தவனுமாக இருந்த மஹிபால் சீலாவின் இன்பத்திற்குத் தலைவனாக அமைந்தான். அதுமுதல் அவளை எந்தக்குறையும் வாட்டுவதில்லை. அவள் முழுமையும் இந்தியப் பண்பில் தன் உடலையும் உள்ளத்தையும் மஹிபாலுக்கே அர்ப்பணம் செய்துவிட்டாள். தன் செல்வத்தையும் அவன் மீது வாரி இறைத்தால் சந்தோஷமாக

இருக்க முடியும் என்று அவள் எண்ணினுள், ஆனுல் அந்த எல்லைக்கோடுதான் மஹிபாலின் வெற்றியாகவும் ஆண்மையின் இலக்கணமாகவும் அமைந்தது. அவனுடைய அந்தப்போக்கிற்குத்தான் அவள் அடிமையாக இருந்தாள். தனிமையில் தேநீர் பருகும் பொழுது அவளுடைய உள்ளம் மஹிபாலின் வீட்டைநாடி ஓடிக்கொண்டிருந்தது. கல்யாணியும், அவளுடைய குழந்தைகளும் அவளுடைய நினைவில் வந்தார்கள். மஹிபாலின் குழந்தைகளிடம் சீலாவுக்கு எந்தவிதமான ஈடுபாடும் கிடையாது. எப்பொழுதாவது எந்தக் குழந்தையாவது எதிர்ப்பட்டுவிட்டால் ஒருவிதமான ஈடுபாடு ஏற்பட்டாலும் அது அந்தக் குழந்தையின் நலனை விழையும் உணர்வாகவே இருந்தது. ஏனென்ருல், அந்தக் குழந்தைகள் மஹிபாலின் குழந்தைகள். கல்யாணியிடம் எப்பொழுதுமே அவள் ஈடுபாடு இல்லாதவளாகவே இருந்தாள். கல்யாணியைப் போன்ற ஒன்றும் தெரியாத, சாதுவான ஒரு முட்டாள் பெண்ணுல் அவனை மகிழ்விக்கமுடியாது என்று அவள் நம்பினுள். மஹிபால் அடிக்கடி கல்யாணியின் பிடிவாதத்தையும், பழைய நாகரிகமற்ற போக்குகளையும் வெறுத்துவந்தான். சீலா அவனுக்கு எப்பொழுதும் மகிழ்ச்சி அளித்து வந்தாள். மஹிபால் தன்னிடமும் குடும்பத்திடமும் ஒரே விதமாக அன்புடன் இருந்துவருவதில்தான் தனது நலன் அடங்கியிருப்பதாக அவளுக்குத்தோன்றிற்று. கல்யாணியிடமிருந்து அவளுடைய உரிமையைப் பிடுங்கிக்கொள்ள அவள் கருதியதே கிடையாது. ஆனுல் கல்யாணியின் சகோதரனது திருமணத்தில் தனக்கும் மஹிபாலுக்கும் இருக்கும் தொடர்பு காரணமாகச் சச்சரவு ஏற்பட்டுக் கல்யாணி மஹிபாலின் வாழ்க்கையில் சீலாவுக்கு இடம் இருப்பதைப்பெரிதும் எதிர்த்து மஹிபால் அவளிடமிருந்து பிரிக்கப்பட்ட நாளிலிருந்நு கல்யாணி, அவளுடைய குழந்தைகளின் எண்ணம் மட்டுமல்ல, குடும்பம் என்ற எண்ணமே அவளுடைய உள்ளத்தில் வெறுப்பைத் தோற்றுவித்தது. புகழ்பெற்ற நாவலாசிரியரான பால்ஜக்கின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும்பொழுது மஹிபாலின் உள்ள உறுதியற்ற மன நிலையை நினைத்து அவள் வருந்திக்கொண்டிருந்தாள். மேடம் டீ பர்னீ, பால்ஜக் இருவடைய காதலையும் வருணிக்கும் ஸ்தீபான் ஜ்விக் பெருந்துடிப்புடன், :''பிறர் கூறும் குறைச் சொற்கள் குடும்பச்சச்சரவு, கிராமத்தில் நடக்கும் ரகசியமான செயல்கள் சர்ச் எதுவுமே தனது காதலியிடம் அவன் மனபூர்வமாகத் தன்னை அர்ப்பணம்செய்யும் உணர்வை முறிக்கமுடியவில்லை'' என்று எழுதியிருந்தார். இந்த வாக்கியம் சீலாவின் உள்ளத்தில் மாறி மாறி அம்புபோல் குத்திக்கொண்டிருந்தது. இன்று ஹோலிநாள்.

சீலா தனிமையாக இருந்தாள். இனி அவள் என்றுமே தனியாகத் தான் இருக்கவேண்டும்.

சீலா வெறும் பெண்ணல்ல; அவள் ஒரு டாக்டர். அவளிடம் மோட்டார், பங்களா, பாங்க் அகௌண்ட் எல்லாம் இருக்கிறது. ஆனால் இது தான் வாழ்க்கையா? ஆணுக்கும் பெண்ணுக்கும் இந்த வாழ்க்கையில் மகிழ்ச்சி ஏற்பட முடியுமா? சீலா உள்ளுக்குள்ளேயே வெந்துகொண்டிருந்தாள். அவளுடைய பிடிவாதம் தலையெடுத்துக் கொண்டிருந்தது. பல ஆண்டுகளாக இன்பவாழ்க்கையில் அந்தப் பிடிவாதம் மறைந்திருந்தது. தான் சிறிது உறுதியுடன் இருந்தால் மஹிபால் கட்டுக்களையெல்லாம் உதறி எறிந்துவிட்டுத் தன்னுடையவனாகவே ஆகிவிடுவான் என்று அவளுக்குத்தெரியும். சீலாவின் உள்ளம் அடிக்கடி அவ்வாறு செய்யும்படி அவளைத் தூண்டிக் கொண்டிருந்தது. அவளுடைய இமைகொட்டாத விழிகளில் மஹிபாலின் உருவம் தெளிவாகக்காணப்பட்டது. பின்புறம் முதுகில் இரண்டு கைகளையும் கட்டிக்கொண்டு அகன்றதும், வலிமை பொருந்தியதுமான மார்பை உடையவனும், எதையுமே பொருட்படுத்தாத போக்கும், குழந்தைத்தனமும் அதேசமயம் உறுதியும் உடையவனுமான மஹிபாலின் சிரித்தமுகம் ஏதோ ஓர் இன்பம் நிறைந்த ஒரு கணத்தின் நினைவுபோல் அப்பொழுது அவளெதிரே வந்து நின்றது. அந்த நினைவு முழுமையான உருப் பெற்று வளர்ந்தது.

''என்ன, தனிமையில் தேநீர் அருந்திக் கொண்டிருக்கிறீர்களா?'' என்ற வனகன்யாவின் குரலைக்கேட்டதும் சீலா திடுக்கிட்டாள். வனகன்யாவும், சஜ்ஜன் வர்மாவும் அறைவாயிலில் நின்றுகொண்டிருந்தார்கள். அகற்றப்பட்ட வாயில் திரையைச் சஜ்ஜன் பிடித்துக்கொண்டிருந்தான். வனகன்யா அன்று விலைஉயர்ந்த நகைகளும், சேலையும் அணிந்திருந்தாள். இந்தமாறுதல் சீலாவின் உள்ளத்தை உறுத்திற்று. அந்த நேரத்தில் வனகன்யா மணப் பெண்ணைப்போல் காட்சியளித்தாள். டாக்டர் சீலாஸ்விங்குக்கு வனகன்யா மணமான இந்தியப் பெண்ணின் இன்பக் கற்பனை உரு வெடுத்து வந்தது போல் தோன்றினாள். கன்யாவைப் போல் தனக்கும் திருமணம் ஆகியிருந்தால் என்று ஒரு விநாடி சீலா நினைத்தாள். அப்பொழுது சஜ்ஜன் கன்யாவின் பேச்சைத் தொடர்ந்தவாறு, ''இப்பொழுதெல்லாம் இவளுக்குத் தனிமை மிகவும் பிடித்திருக்கிறது; பெரிய மனிதர்களெல்லாம் அப்படித்தானே இருக்கிறார்கள்!'' என்று கூறினான்.

கலகலப்பாக இருப்பது போல் காட்டிக்கொள்ள அவன் கூறுவது பிடிக்காதது போல் நடித்துக் கொண்டு டாக்டர் சீலா சஜ்ஜனைத் தடுத்தவாறு, ''துர்ஜன்! எவ்வளவுமட்டமானவர் நீங்கள். கன்யா!

நீ இவருடைய பேச்சை நம்பாதே! இப்பொழுதெல்லாம் நோயாளிகள் அதிகமாக வருவதால் நான் சில சமயம்...'' என்று கூறி நிறுத்தினாள்.

"டாக்டர் நோயாளியாக மாறிவிட்டதாக ஏன் கூறக்கூடாது?' என்று சஜ்ஜன் இடைமறித்துக் கூறினான். சீலா விடை கொடுக்காமல் இருந்தாள். வீட்டில் நெருப்புப் பிடித்துக்கொண்டபிறகு வீட்டைவிட்டு மக்கள் வெளிக் கிளம்புவதுபோல் உண்மை தன்னை மறந்து வெளிப்பட்டுவிட்டது.

தேநீர் கொண்டுவரப்பட்டது. பேச்சுவார்த்தை துவங்கிற்று. தட்டார்வீட்டுப் பெரிய மருமகளைப்பற்றிய பேச்சு வந்தது. சீலா அவளுடைய நிலையைப் பற்றிக் கேட்டாள்.

"அவளைப்பற்றி எந்தச் சமாசாரமும் கிடையாது'' என்று கன்யா கூறினாள்.

"நான் சில நாட்களுக்கு முன்பு ஹஜ்ரத்கஞ்ஜில் அவளை அந்தக் கவிஞருடன் பார்த்தேன். அவர்களுடன் பணக்காரன் போல் தோன்றிய ஓர் இளைஞனும் இருந்தான். அதிகமாக அழகு படுத்திக் கொண்டிருந்தபோதிலும் அந்தப் பெண்மணி மிகவும் மனவாட்டத்துடன் காணப்பட்டாள்'' என்று சஜ்ஜன் கூறினான்.

அதற்குப்பிறகு சிறிது நேரம் அமைதி நிலவிற்று. "இந்தச் சமூகம் மனித சமுதாயமாக ஆகாமலிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! இந்த நாகரிகம், பண்பாடு, விஞ்ஞானம், கல்வி, மனிதன்பேசும் பெரிய பெரிய பேச்சுக்கள், இந்தச் சுமைகளையெல்லாம் மனிதன் ஏன் சுமக்க வேண்டும் என்று நான் எப்பொழுதாவது நினைப்பதுண்டு. இவையெல்லாம் இல்லாமலிருந்தால் கூட மனிதன் சுகமாக இருந்திருக்க முடியுமே! அவள் இன்றும் அதிகமான சுகத்துடன் இருந்திருக்க முடியும் என்பது என் எண்ணம், நகைகளின் பேராசையில் சுமையை ஏற்றுக்கொள்வதால் மனிதனின் இயற்கை அழகு மறைந்து போகிறது; சுமையால் அவன் களைத்துப்போய் விடுகிறான்'' என்று சீலா கூறினாள்.

சஜ்ஜன் மௌனமாகச் சீலாவைப் பார்த்துக் கொண்டிருந்தான். கன்யாவும் மௌனமாக உட்கார்ந்திருந்தாள். சீலாவின் உள்ளப் போராட்டத்தை நினைத்துச் சஜ்ஜனுக்கு அவள் மீது அநுதாபம் ஏற்பட்டது. சீலாவின் சம்பந்தமற்ற பேச்சு அவளுடைய ஆழ்ந்த வேதனையை பிரதிபலிக்கிறது என்பதை அவன் உணர்ந்திருந்தான். தியாகம் உண்மையிலேயே மிகவும் கஷ்டமானதாகும். தன்னால் பாபாராம்ஜீயின் விருப்பப்படி செல்வத்தை விட்டுவிட முடியுமா? முடியாது. தன் செல்வத்தின் சிறு பகுதியைப் பிறருக்குக் கொடுக்கலாம். ஆனால் முழுச்சொத்தையும் தியாகம் செய்வது என்பது தன்னால் ஆகக்கூடியதல்ல என்று சஜ்ஜன் எண்ணத் தொடங்கினான்.

சீலா, மஹிபால் இருவருடைய வேதனையையும் தான் தீர்த்துத் தான் ஆகவேண்டும் என்று சஜ்ஜனுக்குத்தோன்றிற்று. திடீரென்று அவன் எழுந்தவனாய், "டாக்டர்! நான் உங்களிடம் ஒன்றுசொல்ல வேண்டும். கன்யா இதோ வந்து விட்டேன்" என்று கூறிக் கொண்டு சீலாவைத் தனியாக அழைத்துக்கொண்டு போய் அவளிடம், "சீலா! இன்று மாலை என் வீட்டில் ஒரு பார்ட்டி நடக்கப் போகிறது. உன்னைக் கட்டாயம் வரும்படிக் கூறுவேன்... ஆனால் கர்னல், மஹிபால் இருவருடைய மனைவிமாரும் வருவார்கள். அவர்களை அழைக்க வேண்டி வந்தது... ஏனென்றால், என் வீட்டில் இது கன்யாவின் முதல் ஹோலி...ஆனால் நீ மஹிபாலைச் சந்திக்க விரும்புகிறாயா?" என்று கேட்டான்.

சீலா மௌனமாக நின்று கொண்டிருந்தாள். "சொல்லு சீலா!" என்று சஜ்ஜன் மறுபடியும் கேட்டான்.

"அவர் விரும்புகிறாரா?" என்று கேட்ட போதிலும் சீலாவின் விழிகள் உணர்வற்றவையாகவே இருந்தன.

"நான் அவனிடம் கேட்கவில்லை. ஆனால் இதில் கேட்பதற்கு என்ன இருக்கிறது? மஹிபால் உன்னைச் சந்திக்க விரும்பமாட்டானா? சீலா! அப்படி நினைக்கக்கூட முடியுமா உன்னால்?"

சீலா அமைதியாக நின்றுகொண்டிருந்தாள். அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகத் தொடங்கிற்று.

"நீ ஏழரை மணிக்கு என் வீட்டிற்கு வந்துவிடு சீலா! நீ வருவது பற்றி யாருக்கும் தெரிவிக்கமாட்டேன். என் சார்பில் ஹோலிப் பரிசாக மஹிபால் உனக்குக் கிடைப்பான். இப்பொழுதாவது சந்தோஷமாக இரு. உன்னுடைய இந்த நிலையை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை" என்று சீலாவின் தோளில் கையை வைத்தவாறு சஜ்ஜன் கூறினான்.

அவன் கூறியதைக் கேட்ட சீலா வெகு நேரம் அழுத பிறகு தனக்கு விருப்பமான மிட்டாயைப் பெற்ற சிறு குழந்தையைப் போல் மௌனமாக இருந்தாள். அவள் இன்று எத்தனை நாட்களுக்குப் பிறகு தன் மஹிபாலைப் பார்க்கப் போகிறாள்!

## 41

கன்யா, கல்யாணி மற்றும் கர்னலின் மனைவி மூவரும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தனர். கல்யாணி இவர்களுடைய வீட்டில் சாப்பாடு சாப்பிட மாட்டாள். இனிப்புப் பண்டங்கள் தான் ஏற்றுக்கொள்வாள். கன்யா கூறினாள்: "இவ்வளவு ஆசாரம் பார்த்தால் எப்படி, அக்கா? இனி இம்மாதிரியான வீண் விஷயங்களை, கைவிட்டாக வேண்டும்."

''இத்தனை நாட்களைக் கழித்து விட்டேன். இந்தப் பழக்கங்களை எப்படியம்மா விட முடியும்?'' கல்யாணி பெரிய மனுஷி என்ற தோரணையில் பேசினாள்.

''ஆனால் பிராம்மணன் செய்த சமையல் இது. உங்களுக்காகவே இன்று நான் சமையலறைப் பக்கம் நுழையவில்லை. அண்ணியைப் பாருங்கள். மிகவும் ஆசாரமாக இருப்பவர்தான். ஆனால் இன்று!''

''குழந்தைகளின் காரணமாக எல்லாவற்றையும் விட நேர்ந்தது. பொழுது சாய்வதற்கு முன்பு நான் சாப்பிடுவது வழக்கம். ஜைனர்களின் நம்பிக்கை இது. ஆனால் என்ன செய்வது? குழந்தைகள் காரணமாகவும், இவர் காரணமாகவும் நான் இப்போதெல்லாம் இப்படி இருக்க நேரிடுகிறது. இவர்கள் சாப்பிடாமல் நான் எப்படிச் சாப்பிடுவேன்?'' கர்னலின் மனைவி கூறினாள்.

''பெண்கள் தம் பூஜைகளில் ஈடுபட்டால் ஆண்கள் அதற்குத் தக்கபடிதான் நடந்து கொள்ள வேண்டும். எங்கள் வீடுமட்டும் குறைந்ததா என்ன? இங்கு ஆசாரக் குறைவாக ஏதும் நடக்காது. நாங்கள் உயர்ந்த பிராம்மணர்களாயிற்றே!'' கல்யாணியின் உயர்வு கர்னலின் மனைவியைத் தூண்டிவிட்டது. அவள் கூறினாள். ''எல்லோரும் தத்தம் குலப்படி உயர்ந்தவர்தான். எங்கள் ஜைன மதம் எல்லாவற்றிலும் சிறந்தது. எத்தனை அந்தணர்களும் பண்டிதர்களும் தங்கள் மதத்தைவிட்டு மகாவீரரைச் சரணடைந்திருக்கிறார்கள் தெரியுமா? காரணம் அவருடைய கொள்கை வைதிகதர்மத்தை விடச் சிறந்தது.''

இன்றைய இனிய மாலை நேரத்தைச் சிறிது சிறிதாக இந்தப் பிராம்மண–சமண விவாதம் விழுங்கிவிடும் என்று கன்யா அறிந்து கொண்டாள். அவள் கூறினாள்: ''அண்ணி! இதென்ன பேச்சு? உயர்வு, தாழ்வு, சாதி, மதம் எல்லாம் வெளி ஆடம்பரந்தான். ராஜ்யஸ்ரீ, சகுந்தலா, என்ன, அப்படித்தானே?''

சகுந்தலாவும், ராஜ்யஸ்ரீயும் பேசாமல் உட்கார்ந்திருந்தனர். சகுந்தலா புன்முறுவல் செய்தாள். ராஜ்யஸ்ரீ கூறினாள்: ''எங்களுக்கு அதெல்லாம் பிடிக்காது. அப்பாவும், அப்படித்தான். இதெல்லாம் பழைய காலத்து விஷயங்கள்!''

கன்யா உரக்கச் சிரித்தாள். கல்யாணியைப் பார்த்துக் கேட்டாள்: ''அக்கா எப்படி விஷயம்?''

கல்யாணி முகத்தைச் சுளித்துக் கொண்டு கூறினாள்: ''தினமும் தான் இவர்களுடைய பேச்சைக் கேட்கிறேன். அதில் ஏதாவது அர்த்தம் இருக்கிறதா என்ன? உயர்வு தாழ்வு, சாதி மதம் எல்லாம் இறைவன் படைத்தவை. இவையின்றி யாராவது இருக்க முடியுமா?''

ராஜ்யஸ்ரீ தன் முற்போக்கான 'சித்தி'யின் முன்னிலையில் தன் தாயைத் தோற்கடித்துப் புகழ் பெற விரும்பி உற்சாகத்துடன் பேசினாள் : ''அம்மா! கடவுள் பாரத நாடு ஒன்றைத்தான் படைத்தாரா என்ன? மற்றும் எத்தனையோ நாடுகள்—''

''போதும், நிறுத்து வாயாடாதே!'' பிறகு கர்னலின் மனைவியைப் பார்த்துக் கல்யாணி கூறினாள் : ''என்னதான் சொல், நம் ஆசாரங்களை விடுவது சரியில்லை.''

"ஆமாம், அது உண்மைதான், ஆனால் ஆண்களின் மனம் கோணாமல் நடந்துகொள்வதைத்தான் பெண்களின் பெரிய விரதம் என்று நான் கூறுவேன். இப்போது காலம் மாறிவிட்டது. அதன்படியேதான் மாற நேருகிறது. நம் கணவனுக்கு மன வருத்தத்தை அளித்துவிட்டுப் பூஜை செய்வதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். ஆமாம்!''

வேலையாள் ஒரு காகிதத்தைக் கொண்டு வந்து கன்யாவிடம் கொடுத்தான். கன்யா அதைப் படித்துவிட்டு எழுந்தபடி கூறினாள்: "இதோ வருகிறேன்.''

ரஜ்ஜோ கூறினாள் : "சித்தி. எங்கள் சொந்த சித்தி இருக்கிறார்கள் பாருங்கள்...''

''எனக்கு நன்றாகத் தெரியுமே.''

''அவர்கள் இப்படி இருக்க மாட்டார்கள். எங்கள் வீட்டைப் போன்று கண்டிப்பே அங்கே கிடையாது. நாம் புதிய வீட்டுக்குப் போனாலும் இப்படித்தானிருப்பாயா என்று நாங்கள் அம்மாவைக் கேட்போம்!''

கர்னலின் மனைவி புன்முறுவலுடன் கல்யாணியைக் கேட்டாள்: ''புதிய வீடு வாங்கப் போகிறாயா?''

பெண்ணின் பேச்சைக் கேட்டு ஆத்திரங் கொண்ட கல்யாணி வீட்டைப்பற்றிக் கேட்கவே மகிழ்ச்சியுடன் பேசினாள்: ''வீடாவது வாசலாவது! சகுந்தலாவுக்குத் திருமணம் நடக்கட்டும். பிறகு ஒரு சிறு குடிசைக்கு வழி செய்யலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம்.''

''சகுந்தலாவுக்குத் தடபுடலாகத் திருமணம் நடத்தப் போகிறாயாமே?''

"தடலாவது, புடலாவது? நிலைமைக்குத் தகுந்தபடி செய்ய வேண்டாமா? நம் பெயருக்கேற்றபடி செலவு செய்தாக வேண்டுமே! இருபதாயிரமாவது ஆகும். வரதட்சணை எங்களில் அதிகம் கேட்பார்கள்."

''எங்கே போவது இத்தனை ரூபாய்க்கு? சுக்லாஜீ பாவம்.''

கல்யாணிக்கு இது பிடிக்கவில்லை. கையில் அணிந்திருந்த முத்து வளையலைச் சுழற்றியபடி கூறினாள் : ''கடவுள்...கொடுப்பார்.

நமக்குப் பாங்கியில் பணம் இல்லாவிட்டால் என்ன? ஒரு கணத்தில் ஆயிரக்கணக்கான தொகையுடன் 'செக்' வருகிறது. பேனுவுக்கு அவ்வளவு பெருமையுண்டு.'' இருவரும் அந்தஸ்து பற்றி விவா தித்தனர். ரஜ்ஜோவுக்கு அலுத்துப்போய்விட்டது. சகுந்தலாவை மெதுவாக அழைத்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டாள். கல்யாணி கேட்டாள்: ''எங்கே போகிறீர்கள்?''

''இங்கேதான், தோட்டத்துக்கு.''

''வெளியே போனுல் அப்பாவிடம் சொல்லுங்கள். என்னை விரைவில் வீட்டுக்குக் கொண்டுவிடவேண்டும்.''

''என்ன அவசரம்? இன்று சினிமாவுக்குப் போகலாமே!''

''முடியாதம்மா, சம்பந்தி வீட்டுக்கு லட்டு, ஜிலேபி, செய்து அனுப்ப வேண்டும்.''

கல்யாணியும், கர்னலின் மனைவியும் பேசிக்கொண்டிருக்கட்டும் எனக் கருதி சகுந்தலாவும், ராஜ்யஸ்ரீயும் சஜ்ஜனுடைய அரண்மனை போன்ற வீட்டைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினுர்கள். ராஜ்யஸ்ரீக்கு எல்லாமே சுவர்க்கம் போல் காட்சியளித்தது. அவளும் 'பெரிய மனுஷன்' வீட்டுப் பெண் இல்லையா? பணம் இல்லாத குறை ஒன்றுதான் உண்டு; திடீரென்று பணம் வரவே பெரிய மனுஷர் வீட்டுத் தோரணை என்னும் பலூன், உப்பி விட்டது. புதிய கனவு காணும் பருவம். சகுந்தலாவின் திருமண நிச்சயம் அவளுடைய உள்ளத்துக் குறையை வெளிப்படுத்தியது. அவளுக்குள் சுடர்போன்று மறைந்திருந்த ஹீரோயின் ஒரு ஹீரோ வேண்டும் என்று ஆசைப்பட்டாள். கன்யா சித்தி—சஜ்ஜன் இருவருடைய சுபிட்சம் நிறைந்த ராஜ்யத்தில் சுற்றிய அவள் தானும் பொற்கனவுகளில் கட்டுண்டு விட்டாற்போல் உணர்ந் தாள். அப்போது அவர்களிருவரையும் கண்டு அவளுடைய கற்பனை திருப்தி அடைந்தது. அவள் பெருமிதத்துடன் கூறினுள்: சித்தியின் அதிருஷ்டமே அதிருஷ்டம்! இது வீடா என்ன? அரண் மனைபோல் அல்லவா இருக்கிறது!''

''நீயும் அப்படிப்பட்ட காதலனைத் தேடிக்கொள்ளேன்!'' என்று சகுந்தலா கூறினுள்.

''முடிந்தால் நிச்சயமாகத் தேடிக்கொள்வேன். நீ என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிருய்?'' கண்களைச் சுழற்றிய படி பெருமையுடன் ரஜ்ஜோ கூறினுள்: ''உன்னைப்போல் அம்மாவைத் திருப்திப்படுத்த ஊமைபோல் நான் என் வாழ்வைப் பாழாக்கிக்கொள்ள மாட்டேன்.'' நிலைக்கண்ணுடியின் முன் தன் உருவத்தைக் கண்டு மகிழ்ந்தபடியே ராஜ்யஸ்ரீ கூறினுள். கண்ணு டியில் சகுந்தலாவின் கண்களுடன் அவளுடைய கண்கள் சந்தித்தன.

குழந்தையின் பேச்சைக் கேட்டுச் சிரிப்பதுபோல் சகுந்தலா ராஜ்யஸ்ரீ பேசக் கேட்டுச் சிரித்தாள். ராஜ்யஸ்ரீ இதை விரும்ப வில்லை. அவள் தன்னைவிட மூன்று வயது மூத்தவளாயினும் இருவரும் சரிசமமாகத்தான் பழகுவது வழக்கம். கம்பளம் போடப்பட்டிருந்த படிகளிலிருந்து இறங்கியபடியே சகுந்தலா அவளை லேசாகத் தட்டிக் கேட்டாள்: ''ஏன் சிரிக்கிறாய்?''

சகுந்தலா கூறினாள்: ''ஒரு லட்சாதிபதி தேவை! இதை தினசரியின் 'தேவை' என்ற பத்தியில் விளம்பரம் செய்!''

''விளம்பரம் செய்யாமலேயே எனக்குக் கிடைத்துவிடுவார், உனக்கு விருப்பம் இருந்தால் செய்துகொள்.''

''அம்மாடி! எனக்கு லட்சாதிபதியே வேண்டாமம்மா!'' என்று சகுந்தலா கூறினாள்.

மாடிப்படியருகே இருந்த சிறு அறையிலிருந்த வனகன்யா வெளியே வந்தாள். இந்த இருவரும் கள்ளர்போல் பதுங்கி நிற்பதைக் கண்டு வனகன்யா கேட்டாள்: '' எங்கே போகிறீர்கள்?''

''எங்குமில்லை, தோட்டத்தைப் பார்க்கத்தான்!''—பணிவுடன் ராஜ்யஸ்ரீ பதிலளித்தாள். வனகன்யா அவளுடன் சென்றாள்.

கீழே டிராயிங் ரூமில் சஜ்ஜன், மஹிபால், கர்னல் இவர்கள் அமர்ந்திருந்தனர். மஹிபால் இன்று பிரமாதமாக அலங்கரித்துக் கொண்டிருந்தான். புதிய காலணிகள், சரிகை வேட்டி, பட்டுச் சட்டை, பட்டு 'ஜவாஹர்' கோட்டு, ஃபேவர்லூபா கடிகாரம், ஷீஃபர்ஸ் புதிய பேனா, விரலில் புஷ்பராகக் கல் பதித்த மோதிரம். கர்னலிடமும் சஜ்ஜனிடமும் அவன் தன் வரும்படியைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தான்.

கர்னல் கூறினான்: ''உனக்கு நல்ல அதிருஷ்டம் ஆரம்பித்து விட்டதப்பா எப்படி இத்தனை ராயல்டி வந்தது? வருடந்தோறும் மூவாயிரத்து ஐந்நூறுகூடக் கிடைப்பது அரிதாயிற்றே!''

''என் புத்தகம் ஒன்று பஞ்சாப் யூனிவர்சிடியின் கோர்சில் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.'' பெருமிதத்துடன் கண்களைச் சிமிட்டியபடியே சிகரெட் புகையை மஹிபால் உள்ளிழுத்தான்.

சஜ்ஜன் கூறினான்: ''அப்படியானால் ஒரு விருந்து பாக்கி இருக்கிறது.''

''எப்போது வேண்டுமானாலும் கேள். சரி, நாளைக்கு மாலை கபூரில்—''

மஹிபாலின் பேச்சைக் குறுக்கிட்டு, கர்னல் கேட்டான்: ''கபூரில் ஏன்? வீட்டிலேயே ஏன் வைக்கக்கூடாது?''

''வீட்டில் சீலாவை அழைக்க முடியாது'' சஜ்ஜன் கூறினான்.

''இல்லாவிட்டாலும் சீலாவை அழைப்பதாக இல்லை. அங்கு

நான் விஸ்கிக்கு ஏற்பாடு செய்யப்போகிறேன்.'' மற்றதை உதறித் தள்ளும்படி ஆழ்ந்த கருத்துடைய தோரணையில் மஹிபால் கூறினான்.

சஜ்ஜன் அவனுடைய போக்கைக் கவனித்தான். சீலாவின் பேரில் மஹிபால் கடுமையாக நடந்துகொள்வது நியாயமில்லை என்று அவனுக்குப்பட்டது. 'சீலாவை ஒரேயடியாக விட்டு விடட்டும்; ஆனால் கொடுமை இழைப்பது சரியா? சீலாவைத் தன் நெஞ்சைவிட்டு இவனால் அகற்ற முடியவில்லை என்பது இதிலிருந்தே தெரிகிறதே! இந்தப் போக்கு மிகவும் பயங்கரமானது! சூழ்நிலை காரணமாகச் சிற்சில சமயங்களில் இதனால் மனிதன் மிகவும் இதயமற்ற முறையில் நடந்துகொள்கிறான்.' சஜ்ஜன் தன் அனுபவ வாயிலாக இதனை அறிந்துகொண்டிருந்தான். ஆனால் மஹிபால் சீலாவின்பேரில் ஏன் இப்படிக் கடுமையாக நடந்துகொள்ள வேண்டும்? அவளுடன் அவனுடைய தொடர்பு முறையற்றது தான்; ஆயினும் அவள் கெட்டவளல்லவே! சீலா மிகவும் நல்ல பெண்மணி. பாவம், அவள் எவ்வளவு வருத்தமுற்றிருக்கிறாள்! சஜ்ஜனுக்கு சீலாவின்மேல் இரக்கம் வந்தது. அவன் கூறினான்: ''ஏன் சீலாவை அழைக்க உனக்கு விருப்பமில்லை?''

மஹிபால் மௌனமாக இருந்தான்.

கர்னல் ஆழ்ந்த மனநிலையில் இருந்தபடி பேசினான்: ''இதில் பெரிய தொல்லை இருக்கிறது, உனக்குத் தெரியாது. நீ மதுரா சென்றிருந்தாயே...சஜ்ஜன்!''

''எனக்கு எல்லாம் தெரியுமே'' சஜ்ஜன் கூறினான்.

கர்னல், மஹிபால் இருவருமே வியப்புடன் அவனை நோக்கினர். சஜ்ஜனைச் சீலா சந்தித்திருக்கிறாள் என இருவருமே புரிந்து கொண்டு விட்டனர்.

'யாராவது ஒருவர் வருத்தப்பட்டுத்தான் ஆகவேண்டும்!'' கர்னல் தன் சார்பில் விளக்கம் அளித்தான்.

''அது சரி, ஆனால் மனிதப்பண்புடன் நட்பு என்று ஒன்று உண்டே! அப்படிச் சீலாவைக் கருதலாமே!''

''கற்புக்கரசியான என் மனைவியை நான் வருத்தப்படுத்த மாட்டேன்.''

சஜ்ஜனுக்கு இது பிடிக்கவில்லை. அவன் கூறினான்: ''இந்த வார்த்தைகளின் மறைவில் நீ சீலாவை அவமானப்படுத்த ஏன் நினைக்கிறாய்?''

மஹிபாலுக்கு கோபம் வந்துவிட்டது. சஜ்ஜன் அவனுடைய பார்வையுடன் தன் பார்வையையும் தீரத்துடன் சந்திக்கச் செய்து பேசினான்: ''ஒரே—மனைவி இவ்விரதம் எனக்குப் பிடிக்கும். இனி வாழ்க்கையில் அவ்விதம்தான் இருக்கப் போகிறேன். ஆனால் என்

கடந்த வாழ்க்கையின் பொறுப்புகளை விட முடியாதே! அவற்றை வகித்துத்தானேயாக வேண்டும்?''

மஹிபால் கூறினான் : ''பொறுப்பு என்ற பெயரில் உன் காதலிகளுடன் களிப்பதோடுகூட ஒரு மனைவி என்ற விரதமும் பூணுவாய், அப்படித்தானே? கோஷ்போஸ், பானர்ஜி, சட்டர்ஜி, என்று ஒரு பேராசிரியரும் உனக்கு அகப்பட்டு விடுவார். திருமணத்துக்கு பிறகு உன்னைப்போன்ற சிறந்த குடும்பங்களைக் காண முடியாது என்று புகழ்ந்து கட்டுரை வரைய! ஐஸ்ட் லைக் யூ (உன் பேச்சும் உன்னைப் போலத்தான் இருக்கிறது)''

கன்யா வாசற்படியில் நின்றபடி இதனைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய உள்ளம் பலவிதமான வதந்திகளால் நிரம்பி இருந்தது. சீலா—மஹிபாலின் உறவு அவளுக்குப் பிடிக்கவில்லை. அவளுக்குள் இருந்த 'மனைவியால்' இந்த உறவைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. சீலாவின் நடை—உடை பாவனைகளால் ஆட்கொள்ளப்பட்டதாலும், கல்யாணி—மஹிபாலின் பொருத்தமற்ற ஜோடியைப் பார்த்ததாலும், சஜ்ஜனுடைய கருத்தை அறிந்ததாலும் இந்த நேர்மையற்ற உறவை அவள் ஆமோதித்து வந்தாள். அழைப்பின்பேரில் சீலா வந்துவிட்டாள். அவளுடைய சிறு சீட்டைப் பார்த்துக் கன்யா பெண்களின் அறையிலிருந்து எழுந்தாள். சீலாவைப் பாபாவின் 'சீக்ரெட்' ரூமில் உட்கார வைத்துவிட்டு அவள் சஜ்ஜனுக்கு தெரிவிக்க வந்தாள்.

ராஜ்யஸ்ரீயும், சகுந்தலாவும் வெளியே சென்றுவிட்டனர். கன்யா வாசலில் நின்று கேட்டுக்கொண்டிருந்தாள். மஹிபாலின் பேச்சைச் சஜ்ஜனின் மனைவி என்ற முறையில் அவளால் சகித்துக் கொள்ள முடியவில்லை. தனக்கும் சஜ்ஜனுக்குமிடையே அவளால் மற்றொரு பெண்ணைப்பற்றி நினைக்கக்கூட முடியாது. 'மஹிபால் இப்படிப் பேசுகிறாரே, இப்போது சீலாவைச் சந்திக்க இசைவாரா?' என்று அவள் சிந்தித்தாள். சீலாவிற்காக அவளுடைய நெஞ்சு படபடத்தது. சுவாமிதயாள்—ஒரு வேலையாள் உள்ளே நுழைந்தான். அவனைக் கண்டதும் கன்யா தான் மறைவில் நின்று கொண்டிருப்பதைவிட்டு வேகமாக உள்ளே நுழைந்தாள். கர்னல் கேட்டான் : ''பின்னே நீயா!...''

''ஏன் அண்ணா?''

''ஏதாவது இனிப்புப்பண்டம் அனுப்பேன். சுக்லாஜி கோபமாக இருக்கிறார்!''

கன்யா புன்முறுவல் செய்தாள். பிறகு நாகரிகமாக மஹிபாலுக்குப் பரிந்துகொண்டு கூறினாள் : ''நீங்கள் எல்லோருமே ஹோலிப் பண்டிகை கொண்டாடுகிறீர்கள்; பாவம் சுக்லாஜிதான் உங்களுக்குக் கிடைத்தாரா, பழி சுமத்த?''

தன் செவ்வரியோடிய கண்களை விரித்துச் சஜ்ஜன் கன்யாவை நோக்கினான். ''நான் உன்னிடம் பயந்துகொண்டு ஒன்றும் குடிக்க வில்லை. இதை மஹிபால் வற்புறுத்திக் குடிக்க வைத்துவிட்டான்.

"சரி, வெளியே வாருங்கள், ஒரு விஷயம்!''

சீலா வந்திருந்ததை அறிந்த சஜ்ஜன் சிந்தனையில் ஆழ்ந்த மன நிலையில் இருந்தான். கன்யா கூறினாள் : "இன்று நீங்கள் டாக்டரை அழைத்திருக்கக் கூடாது—''

''இதோ மஹிபாலை நான் அழைத்து வருகிறேன். சீலாவின் எதிரே வந்தவுடன் அவன் தன் கோபத்தை மறந்துவிடுவான்; எனக்கு அவனைத் தெரியுமே!'' என்று கூறியபடியே சஜ்ஜன் மறுபடியும் அறைக்குள் சென்றான். கன்யா திரும்பி வந்தாள். மஹிபாலின் எதிரே சஜ்ஜனும் கூடச் சீலாவின் தூதுவப் பெண்ணைச் செல்ல அவளுக்குப் பிடிக்கவில்லை.

சஜ்ஜன் மஹிபாலை அழைத்துக்கொண்டு மாடிப்படியருகே இருந்த அறைக்குள் வந்தான். அங்கிருந்து அவனை மறைவான ஓர் அறைக்கு அழைத்துச் சென்றான். சீலா அந்த அறையில் மௌனமாக அமர்ந்திருந்தாள். மஹிபாலைக் கதவருகே விட்டு விட்டு சஜ்ஜன் வெளியே வந்துவிட்டான்.

மஹிபாலை எதிரே கண்ட சீலா வறட்சியாகச் சிரித்தாள். மஹிபாலின் முகம் வெளுத்துவிட்டது.

'ஹோலி வாழ்த்துக்கள்!' என்றாள் சீலா. மஹிபாலின் கடுமை தோல்வியுற்றுக் கொண்டிருந்தது. ஒன்றும் பேசத்தோன்றவில்லை. சிரித்துவிட்டு, ''இன்று நாம் இங்கே சந்தித்திருக்கிறோம்'' என்று கூறினான்.

சீலா புன்முறுவலுடன் தலையைத் தாழ்த்திக்கொண்டாள். திடீரென்று மஹிபால் கேட்டான்: ''இந்த அறைக்கும் கீழே ஓர் அறை இல்லையா?''

சீலாவிற்கு விஷயத்தைப் புரிந்துகொள்ளவில்லை. அவள் விழித் தாள். மஹிபால் மறுபடியும் பேச ஆரம்பித்தான். ''திருடுவதற்கு நாம் இன்னும் கீழே பாதாளத்துக்குச் செல்லவேண்டும். இங்கும் யாராவது நம்மை பார்த்து விடுவார்கள்!''

சீலா கூறினாள்: ''இத்தனை நாட்கள் வரை உங்களைப் பிரிந்திருப்பது.''

திடீரென்று மஹிபால் கடுமையாகிவிட்டான். அவன் கூறினான்: ''எனக்குத் திருட்டுத்தனம் பிடிக்காது சீலா! சந்திப்பதாக இருந்தால் இனி உன் வீட்டிலேயேதான் சந்திப்பேன்.

''நான் வேண்டாம் என்று சொல்லவில்லையே.''

''சரி, என் உலகம் மாறிவிட்டது. நான் போகிறேன்.''

''கேளுங்கள், சமுதாயத்துக்குப் பயந்து என்னை விடுகிறீர்களா, அல்லது நீங்களாகவே விட்டுச் செல்கிறீர்களா?''

மஹிபால் நடுங்கினன். அவனுடைய தலை கவிழ்ந்தது. ஒருகணம் நின்றுவிட்டு கடுமையான குரலில் பேசினன் : ''இப்போது அதைப் பற்றியெல்லாம் நான் நினைக்கவில்லை.''

''நானும் உங்களை மறக்கவழி சொல்லிவிட்டுச் செல்லுங்களேன்.''

மஹிபால் செல்ல ஆரம்பித்தான்; சீலா அவனுடைய தோளில் கைவைத்தபடி பேசினள் : ''வீட்டுப் பொறுப்புகளுக்காக நீங்கள் இவ்வளவு பெரிய தியாகம் செய்கிறீர்கள். நான் இதைப் பெரிதும் மதிக்கிறேன். கல்யாணியையும் நான் மதிக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும். உங்கள் குடும்ப சுகத்தைப் பாழாக்கவோ, உங்களுக்குக் கெட்ட பெயர் வாங்கித்தரவோ நினைப்பவளில்லை நான். அதில் எனக்கு ஒருவிதமான சுகமும் கிடைக்காது—''

மஹிபால் மனம் இளகிவிட்டான். ஆயினும் அவளைப் பார்க்காமல் பேசினன் : ''எல்லாம் தெரிந்திருந்தும் இன்று ஏன் வந்தாய்?''

''உங்களைப் பார்க்க ஆவலாக இருந்தது. ஒரு கணம் உட்காருங்களேன்.''

மஹிபால் அவளுடைய தோளில் சாய்ந்தபடியே சென்ருன். இருவரும் நாற்காலிகளில் அமர்ந்துகொண்டனர். தூண்கள் நிரம்பிய அறை இருண்டிருந்தது. தனிமையான சூழ்நிலையைக் காண்பித்தது. சுவரிலிருந்த இரண்டு விளக்குகளைத் தவிர, வெளி உலகுடன் இந்த அறைக்கு ஒரு தொடர்பும் இல்லை. அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்துக்கருகே இரண்டு காத்ரேஜ் அலமாரிகள் வைக்கப்பட்டிருந்தன. அலமாரிகளில் பழைய அயல்நாட்டுப் பூட்டுக்கள் பூட்டப்பட்டிருந்தன. மஹிபால் சீலாவுக்குத் தெரியாமல் இப்படியும், அப்படியும் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தான். சுகமான எந்தச் சூழ்நிலையில் மகிழ்வுடன் பல வருடங்களை அவன் கழித்து வந்தானே, அதே சூழ்நிலை இப்போது அவனது மூச்சுத்திணறலுக்குக் காரணமாகிவிட்டது. அவனது வாழ்வின் களவுப் பொருளான சீலாவை அவன் மறுக்கப் பார்க்கிருன்.

சீலா கூறினள் : ''இப்போது நாம் வயது வந்தவர்களாகி விட்டோம். நான் முப்பத்தெட்டு வயதையடைந்து விட்டேன். ஜூன் மாதத்தில் முப்பதொன்பதாவது வயது ஆரம்பமாகும்.''

மஹிபால் அவளைப் பார்க்கவில்லை. அவளுடைய வார்த்தைக்குப் பதிலும் சொல்லவில்லை. சீலா மறுபடியும் கூறினள் : ''இந்தக் கட்டிடத்தைப்போல் இருக்கிறது வாழ்க்கை! நடந்துவிட்டது. இதை உணருங்கள். கல்லுடன் கல் இணைந்துவிட்டது. இனி

முடியாது 'டார்லிங்' எது சேர்ந்துவிட்டதோ, அதைப் பிரிக்க முயற்சி செய்யாதீர்கள்!''

மஹிபால் தலை குனிந்தான். சீலா மறுபடியும் ''பாவம்தான். ஆனால் இத்தனை ஆண்டுகள்வரை இணைந்து வாழ்ந்த நம் பாவம், வாழ்வின் புண்ணியமாகி விடவில்லையா? சொல்லுங்கள், பேச மாட்டீர்களா?'' என்றாள்.

மஹிபால் அப்படியே உட்கார்ந்திருந்தான். அவனுடைய முகத்தில் ஓர் உணர்ச்சியும் தெரியவில்லை. சீலா அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். மஹிபாலும் தன்னுடன் பேச வேண்டும் எனச் சீலா எதிர்பார்த்தாள். ஆனால் அங்கே ஓர் உணர்ச்சியும் இருக்கவில்லை. பேசா உணர்ச்சிகள் பேச்சுத்திறனை எதிர்பார்த்தனர். ஆனால் அது கிடைக்கவில்லை. தரித்திரனின் வீட்டு விளக்குகளைப்போல் சீலாவின் கண்கள் ஒளி காட்டின. மஹிபால் அப்படியே உட்கார்ந்திருந்தான்.

ஆழ்ந்த பெருமூச்சுடன் சீலா மறுபடியும் கூறினாள்: ''இப்படிப் பட்ட களவுமுறை உலகத்துப் பெரிய ஆசிரியர்களிடம் காணப்படும் சர்வசாதாரணமான இயல்புகள். சரித்திரம் தூற்றும் என்று பயப்பட நீங்கள் ஒருவர்தாம் இப்படிப்பட்டவர் என்பதில்லை.''

மஹிபால் எழுந்து வந்துவிட்டான். சீலாவினால் மறுபடியும் அவனை அழைக்க முடியவில்லை.

கல்யாணி, கன்யா, கர்னலின் மனைவி மூவரும் வீட்டிலேயே உள்ள பூஜையறைக்குச் சென்றனர். அது ஒரு சிறு கோவிலைப் போல் நிர்மானிக்கப்பட்டிருந்தது. மஹிபால் உடனே சீலாவிடம் வந்து கூறினான். ''இப்போது நீ எழுந்து வெளியே செல்லாதே!''

சீலா தன் நினைவிழந்து உட்கார்ந்திருந்தாள். அவளால் மஹிபாலின் வார்த்தைகளைப் புரிந்துகொள்ள முடியவில்லை. மஹிபால் வாசற்படியின் முன் ஒரு காலையும் பின்னே மற்றொரு காலையும் வைத்தபடி நின்றுகொண்டிருந்தான். சீலா அவனுடைய குரலைக்கேட்டதுமே எழுந்து நின்றாள். கதவருகே வந்த சீலாவைப் பார்த்த மஹிபால் ஸ்தம்பித்து நின்றுவிட்டான். கண்கள் கண்களைச் சந்தித்தன. சீலாவின் கண்கள், 'வேண்டாம்—வேண்டாம்' என்று தப்பி ஓட முயன்ற மஹிபாலின் கண்களை வளைத்துப் போட்டன. சீலா மிகவும் அருகே வந்துவிட்டாள். உற்று அவனைப் பார்த்தாள். மிகப் பெரிய சக்தியால் கண்கள் சூழ் நிலையையே ஆட்கொண்டுவிட்டன. கண்களின் சாரளத்தினூடே அமர்ந்திருந்தச் சீலாவின் பாவ—சத்யம் சக்கரவர்த்திபோல் காட்சியளித்தது. அதன் முன்னிலையில் மஹிபால் ஊமையாகி விட்டான்; வசமிழந்துவிட்டான். தாகத்துடன் அன்புடன் சீலா அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தத் தாகம் அழி

யாதது—அந்த அன்பு மஹிபாலுக்குத் தன்னம்பிக்கை போன்றிருந்தது. அதையல்லவா தன்னிடமிருந்து அவள் பிரித்துக்கொள்ள முயற்சி செய்துகொண்டிருந்தாள்! சீலா அருகே வந்துவிட்டாள்; மஹிபாலின் பிடிவாதம் தன் வசமிழந்த நிலையின் உச்சகட்டத்தை எட்டிவிட்டது. சீலா சுய நினைவில் இல்லை. மஹிபாலும் தன் வசமிழந்து கொண்டிருந்தான்.

அழகை ரசிக்கும் ஆசிரியனை மஹிபால் இதுவரை மனம் ஒன்றுதல், தன்மயமாகும் நிலை எப்படி இருக்கும் என்று அனுபவித்ததே இல்லை. சீலாவின் கண்களில் யோகாசனம் போட்டு அவனுடைய காதல் அமர்ந்துவிட்டது. அவனை அது அடிக்கடி கருவிக்கொண்டிருந்தது: "இந்த வசமிழந்த ஆழ்கடலை உன்னால் கடக்க முடியுமா? நீ இதில் மூழ்குவதைவிட வேறு வழி கிடையாது!"

சீலா மஹிபாலை மிகவும் அருகில் அணுகியபடி நின்றாள். நிசப்தம் மூச்சின் கஜ தூரத்தில் சுருங்கிவிட்டது. இந்தச் சூடான மூச்சுக்காற்றுபோல் வாத்தியங்களை முழக்குவதுபோல் மஹிபாலுக்குத் தோன்றிற்று. சீலாவின் கைகள் மணமாலைபோல் அவனுடைய கழுத்தில் போய் வீழ்ந்தன. மெள்ள மெள்ள அவனை இறுகப் பிடித்தன. வெளியே பறந்து சென்ற மனம் உள்ளே வந்துவிட்டது; 'ஸ்பிரிங்' கதவு தானாகவே மூடிக்கொண்டது.

மஹிபாலின் கனவு சிதைந்துவிட்டது. கர்னலின் மனைவியுடனும், கன்யாவுடனும் கோவிலுக்குச் சென்றுகொண்டிருந்த கல்யாணியைப்பற்றிய நினைவு வந்தது. சமுதாயம், சகுந்தலாவின் திருமணம், நண்பர்கள், பதவி, கௌரவம் பிறகு களவு—கள்ளக்காதல்—எல்லாம் நினைவிற்கு வந்தன. மஹிபால் பிரமித்து விழித்துக்கொண்டான். சீலாவின் தோள்களை உதறிவிட்டுக் கூறினான்: "கடந்த காலத்தை மறந்துவிடு, சீலா, கண்டிப்பாகச் சொல்கிறேன். நாம் இவ்வளவு நெருங்கிப்பழகாமல் இருந்தால் நண்பராக இருந்திருக்கலாம். ஆனால் இப்போது நண்பராகவும் இருக்க முடியாது."

சீலா சற்றுக் களைப்புற்றுக் காணப்பட்டாள். மஹிபால் அவளுடைய கைகளை உதறிய போதிலும், அவள் அவனுடைய ஸ்பரிசத்தை விடவில்லை. திருட்டுத்தனமாக அவளைக் காண மஹிபால் திரும்பினான். அவளுடைய தலை அவனுடைய மார்புடன் ஒன்றி இருந்தது. ஷேபர்ஸ் பேனா சட்டைப் பையில் பளிச்சிட்டது; அதன் தங்க மூடி மின்னியது. சீலாவின் தலையில் இரண்டொரு வெள்ளைக் கேசங்கள் பளிச்சிட்டபடி இருந்தன. இந்த இரண்டு பளபளப்பான பொருட்களும் அவனுக்குச் சொந்தமானவை. இந்தக் கணம் எந்த மனிதனின் அகந்தைக்கும் சுகமளிக்கக் கூடிய

தாயிற்றே! ஒரு பெண்ணின் அன்பைப் பெற இராப்பகலாகத் துடிக்கும் மனிதர் எத்தனை பேர்! இங்கு இவ்வளவு சிறந்த பெண் இவனுக்காகத் தன்னையே அர்ப்பணம் செய்து கொண்டிருக்கிறாள்! மஹிபாலின் செல்வத்திற்குத்தான் என்ன குறைச்சல்! இப்போது அவனிடம் பாங்க் அக்கவுண்டும் இருந்தது—பட்டுச்சட்டை, பட்டு ஜிப்பா, ஷேபர்ஸ் பவுண்டன் பேனாவுந்தான்...இந்த வைபவம், இந்தச் செல்வம் களவுப் பொருள். களவு—உறவு வெளிப்பட்டால் மிகப் பெரிய ஆசிரியர் மஹிபால் வெளியே தலையைக் காட்டத் தகுதியற்றவனாகிவிடுவான், சீலாவுடன் கூட அவனுடைய கள்ளக் காதல் நாடறிந்த விஷயந்தான். சீலா பணக்காரி, அவனுடைய செல்வத்தைப் பார்த்து உலகோர், இது சீலாவின் தானம் என்று கருதி விட்டால் அதன் காரணமாக உலகில் கெட்ட பெயர் வந்து விட்டால்? இந்தக் கவலை திடீரென்று பெருஞ்சுமை போல் அவனை அழுத்தியது. செயலற்ற பேடியைப் போல் மஹிபால் தன் வேதனையை அநுபவித்துக் கொண்டிருந்தான். வேறு வழியின்றித் தவிக்கும் தவிப்பு அவனுக்கு உதவி புரிந்தது. அவன் கடுமையாகி விட்டான்; அவன் கூறினான்.

''இனி என்னைச் சந்திக்க முயற்சி செய்யாதே.'' மஹிபால் அவளிடமிருந்து விடுபட்டான். சென்று கொண்டே கூறினான்: ''வெளியே கல்யாணி ஆகியோர் இருக்கிறார்கள், கவனித்து வா!'' அதிகார தோரணையில் இவ்விதம் கூறியபடியே மஹிபால் சென்று விட்டான்.

ஏதோ பேசிக் கொண்டு சிரித்த கர்னலும் சஜ்ஜனும் மஹிபால் வந்ததும் நிறுத்திவிட்டனர். நிசப்தம் நிலவியது.

ஆயா ஜானகி, சீலா வந்த செய்தியை அறிவித்தாள். கோவில் பெண்களின் அறை முதலியவற்றைப்பார்த்துவிட்டு மூன்று நண்பர்களின் மனைவிமாரும் வந்து கொண்டிருந்தனர். கல்யாணி அங்கிருந்து வீடு செல்லவிருந்தாள். கல்யாணியின் குழந்தை கன்யாவின் மடியில் தூங்கிக்கொண்டிருந்தது. அவள் ஜானகியைத் தனியே அழைத்துக் கூறினாள்: ''நாங்கள் போகிறோம். டாக்டரை என் மாடியறையில் உட்காரச் சொல். நான் மிஸஸ் சுக்லாவை வண்டியில் உட்கார வைத்துவிட்டு வருகிறேன்.''

கர்னலின்மனைவியிடம் கன்யா கூறிய கருத்தைப்பற்றிக் கல்யாணி சிந்தித்தாள். சகுந்தலாவின் திருமணம் இந்த வீட்டிலேயே நடக்கட்டுமே என்று கன்யா தன் கருத்தைத் தெரிவித்தாள். வெளியே ஏன் இடம் தேட வேண்டும் என்பது அவளுடைய கருத்து. இது கல்யாணிக்கும் பிடித்திருந்தது. அவர்களுடைய வீடு சிறியது. வெளியே இடம் தேடியாக வேண்டும். மஹிபால், கன்யா இவர்களின் கருத்துப்படி கர்னலின் வீட்டில் திருமணம் நடத்த நிச்சயம்

செய்தாகிவிட்டது. என்றே சொல்லலாம். இவ்வளவு பெரிய பங்களாவில் திருமணம் நடத்தலாம் என்ற கருத்து கல்யாணிக்கு மிகவும் பிடித்திருந்தது. வீட்டுக்குச் சொந்தக்காரியின் அதிகாரம் வேறு இருக்கும். சம்பந்தி வீட்டுப் பெண்கள் இங்கு வருவார்கள். இதெல்லாம் கல்யாணியைக் குழப்பியது. அவள் கர்னலின் மனைவி யிடம் கூறினள் : ''இங்கே திருமணம் நடத்தினல் அந்த வீட்டை யாரும் கவனிக்காமல் இருந்துவிட்டால்?''

கன்யா கூறினள்: "இருக்கட்டும், பார்க்கலாம். சகுந்தலாவின் பேரில் எங்களுக்கும் பாசமும் உரிமையும் உண்டு.''

கல்யாணி மிக்க மகிழ்வடைந்தாள். தழுதழுத்தக் குரலில் பேசினள் : "முதலில் அவள் உங்களுக்கு உரியவள்; பிறகுதான் எங்களுக்கு! நட்பில் பேதமுண்டா என்ன? சொந்தத் தம்பி போல் இல்லை. ஆனலும் கர்னலும், சஜ்ஜனும் உடன் பிறந்த சகோதரர்களுக்கும் மேற்பட்டவர்கள் என்று அவர் அடிக்கடி கூறுவது வழக்கம்.''

அழகான போர்ட்டிகோவில் திருமதி கல்யாணி, மஹிபால் சுக்லா இவர்களை எதிர்நோக்கி வண்டி காத்திருந்தது.

## 42

டாக்டர் சீலா மேலே போகவில்லை, அவள் கல்யாணி போவதை எதிர்பார்த்துக்கொண்டு அறையிலேயே இருந்தாள். கர்னலின் மனைவியுடன் கன்யா உள்ளே வந்தாள். அவள் எதிரில் மூலையில் வைத்திருந்த சிலையைப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்த சீலாவைப் பார்த்தாள். கல்யாணி, சீலா இருவருக்குமிடையில் மஹிபாலுக்கு இருக்கும் தொடர்பை நினைத்துக் கன்யா அப் பொழுது உள்ளத்தில் ஒரு பெருங்கவலையை அநுபவித்துக் கொண் டிருந்தாள். அவள் தனக்குள்ளேயே ஒரு பெரும் பொய்மையை உணர்ந்து கொண்டிருந்தாள். கல்யாணிக்கெதிரில் சீலாவைத் திருட்டுத்தனமாகப் பணத்தைப் போல் மறைத்து வைத்ததற்கு அவளுடைய மனம் வருந்திக் கொண்டிருந்தது. அந்தக் காரியம் அவளுக்கு நியாயமற்றதாகத் தோன்றிற்று. ஆனல் சீலாவிட மிருந்த அன்பினல் அவர் அந்த அநியாயத்திற்கு உடந்தையாக இருக்க வேண்டியிருந்தது! கன்யா தனது பிறந்த வீட்டில் முறை யற்ற தொடர்புகளைப் பார்த்திருந்தாள். அவர்களுடைய தவருன நடத்தையை அவள் வெறுத்து வந்தாள். ஆனல் இந்தச் சம்பந் தத்தை அவளால் வெறுக்க முடியவில்லை. ஏன்? அவளுடைய உள்ளத்திற்கு இது புரியாத புதிராக இருந்தது! தனது மற்றக்

கவலைகளோடு அதையும் நினைத்து அவள் உள்ளத்திலேயே போராடிக் கொண்டிருந்தாள்.

"ஹல்லோ, டாக்டர்!''

சீலா திரும்பிப் பார்த்தாள். கர்னலின் மனைவி அவளைப் பார்த்ததும் திடுக்கிட்டு, ''டாக்டர் சாஹேபா! நீங்கள் எப்பொழுது வந்திர்கள்?'' என்று கேட்டாள்.

''இப்பொழுதுதான் சிறிது நேரத்திற்கு முன்பு வந்தேன்'' என்று கூறிய சீலா கவலையில் ஆழ்ந்திருந்த ஒளியற்ற முகத்தில் புன்முறுவலைக் கொண்டுவரப் பாடுபட்டாள்.

"உங்களைப் பார்க்க மகிழ்ச்சியாக இருக்கிறது!'' என்று கூறிய கர்னலின் மனைவி கன்யாவின் பக்கம் திரும்பி, ''இவரைப்போன்ற சுபாவத்தை நான் வேறு யாரிடமும் பார்த்ததே இல்லை. டாக்டர். பல நாட்களாக நீங்கள் நம் வீட்டிற்கு வரவே இல்லையே! கன்யா! டாக்டர் அம்மாவுக்கு எங்கள் வீட்டுப் பராட்டா (ரொட்டி) மிகவும் பிடிக்கும்.'' என்று கூறினாள்.

டாக்டர் சீலாவின் முகத்தைப் பார்த்ததும் நிலைமை மோசமாகி விட்டது என்று கன்யா உணர்ந்தாள். ரகசியத்தை அறிந்து கொள்ளும் ஆர்வத்துடன் கர்னலின் மனைவியின் கூற்றுக்கு விடை அளிப்பவன் போல், ''அண்ணி ஒரு நாள் விருந்து வையுங்களேன்! டாக்டர் சாஹேபின் சாக்கில் நானும் விருந்துக்கு வருகிறேன்." என்று கூறினார்.

கர்னலின் மனைவி வேடிக்கையாகக் கண்களைச் சிமிட்டிக்கொண்டு ''பார்த்தீர்களா டாக்டர் சாஹேப்! இந்த நாத்திகளே இப்படித்தான். ஒவ்வொன்றிலும் தங்களுடைய பங்கை எடுத்துக்கொண்டு விடுவார்கள்'' என்று கூறினாள்.

ஆமோதிக்கும் முறையில் டாக்டர் சீலா இயந்திரத்தைப்போல் சிரித்தாள். அவளைப் பார்த்ததும் அந்தக் கேலி நாடகத்தை நிறுத்த வேண்டும் என்று கன்யாவுக்குத் தோன்றிற்று. அவள் கர்னலின் மனைவியிடம் ''வாருங்கள் அண்ணி! மேலே போகலாம்" என்று கூறினாள்.

கர்னலின் மனைவியின் உணர்வும், இயற்கையான அறிவும் விழித்துக் கொண்டன. அவள் பொருள் நிறைந்த பார்வையுடன் சீலாவைப் பார்த்துவிட்டுக் கன்யாவிடம், "நான் சமையலறைக்குப் போகிறேன். மணி எட்டே முக்கால் ஆகிவிட்டது. விரைவாகத் தட்டுக்களைப் போட ஏற்பாடு செய்கிறேன்'' என்று கூறினாள்.

''ஆமாம், அண்ணி! அதுவும் நல்லதுதான்.'' என்று கூறிய கன்யா தன்னுடைய உள்ளத்திலிருந்த சுமை குறைந்ததாக உணர்ந்தாள். அண்ணியின் சமயோசித அறிவை உள்ளத்திலேயே

பாராட்டிஞள். அவள் சென்ற பிறகு கன்யா டாக்டரிடம், "டிராயிங் ரூமுக்குப் போகலாமா? ஆட்சேபம் ஒன்றுமில்லையே!" என்று கேட்டாள்.

"இல்லை நான் போகிறேன்."

"இருங்கள். நான் சஜ்ஜனைக் கூப்பிடுகிறேன். நீங்கள் ஆபீஸ் அறையில் இங்கேயே உட்காருங்கள்."

சீலாவைச் சந்தித்துவிட்டுத் திரும்பியபிறகு மஹிபால் சஞ்சலப் பட்டுப் போஞன். அவனுடைய இயற்கையான போக்கு மாறி விட்டது. மஹிபால் சீலாவைச் சந்திக்கச் சென்ற பொழுது அவர்கள் இருவரையும் பற்றிப் பேசிக்கொண்டிருந்த கர்னலுக்கும் சஜ்ஜனுக்கும் சிறிது வாக்குவாதம் உண்டாகிவிட்டது. அந்தத் தொடர்பு நியாயமற்றது என்ற பேச்சு எழுந்தபோதிலும் சீலா விடம் மஹிபால் அன்புடன் நடந்துகொள்ளவேண்டும் என்ற விஷயத்தில் சஜ்ஜன் உறுதியாக இருந்தான். வாக்குவாதத்தின் பொழுது கர்னல் பிடிவாதமாக இராததால் அந்தப் பேச்சு அதோடு நின்றுவிட்டது. ஆஞல் மஹிபால் அறைக்குள் திரும்பி வந்த பிறகு சஜ்ஜன் அவனிடம் மெதுவாக சீலாவைப் பற்றிக் கேட்ட பொழுது மஹிபால் கோபத்துடன், "இரண்டு படகுகளில் காலை வைத்துக் கொண்டு போகும் பழக்கம் எனக்குக் கிடையாது. பல நாட்கள் அறியாமையால் இரட்டை வாழ்க்கை வாழ்ந்து விட்டேன்" என்று கூறிஞன்.

பேச்சுவார்த்தையின் பொழுது சீலாவிடம் தனக்கு அன்பு உண்டு என்பதை மஹிபாலால் மறுக்கமுடியவில்லை. ஆஞல் ஒரு பெரிய கோட்பாட்டிற்காக அவன் அன்பைத் தியாகம் செய்து கொண் டிருந்தான். குடும்பம் என்பது தனிப்பட்ட அன்பைவிடப் பெரிய தாகும். மணம் செய்து கொண்டு நடத்தப்படும் குடும்பம் சமு தாயத்தைக் கட்டுப்படுத்தி வைப்பதற்காக ஏற்பட்ட ஒரு சிறந்த பரம்பரையாகும். தனிப்பட்ட அன்பு என்பதால் சமுதாயக் கட்டுப்பாடுகள் முறிந்துவிடும். குடும்பம் என்ற உணர்வே அழிந்துவிடும். மஹிபால் இந்த உயர்ந்த கருத்துக்களால் சஜ்ஜனை வாயடைத்துப் போகும்படிச் செய்து விட்டான்.

மஹிபாலின் வாதத்திற்கு விடைகொடுக்க முடியாமலிருந்தால் சஜ்ஜன் மௌனமாகத்தான் இருந்தான். ஆஞல் மஹிபால் மீது அவனுடைய கோபம் அதிகரித்தது. அவன் உள்ளத்தினுள்ளேயே மஹிபாலின் குறைகளை ஒவ்வொன்ருக நினைக்கத் தொடங்கிஞன். மஹிபால் எப்பொழுதுமே அவனுடைய சுயஅபிமானத்தைக் கிளறி விடுவது வழக்கம். அவன் தன்னுடைய அறிவாலும், வாதத்தாலும் சஜ்ஜன் அடிக்கடி தாழ்த்த முயன்று கொண்டிருந் தான். சஜ்ஜன் அவனுடைய சொற்களுக்கு எப்பொழுதுமே

தாழ்ந்துபோவது வழக்கம். ஆனுல் அத்துடன் அவனுடைய உள்ளத்தில், மஹிபால் வெறும் தர்க்கம் செய்வதற்காகத்தான் பெரிய பெரிய வார்த்தைகளெல்லாம் பேசுகிருன்; அந்தச் சொற்களால் அவன் தன்குறைகளை மறைக்கிருன்; ஆனுல் அவற்றின்படிதான் நடப்பதில்லை என்ற எண்ணம் அடிக்கடி எழுந்து கொண்டிருந்தது.

மஹிபாலும் சஜ்ஜனைப்பற்றி இவ்வாறே கருதினுன். கோபமான பேச்சுவார்த்தைக்குப்பிறகு நிலவிய மௌனம் பயங்கரமாக இருந்தது. மூன்று நண்பர்களின் குடும்பமும் இன்பத்துடன் சேர்ந்திருப்பதற்காகச் சஜ்ஜனின் வீட்டில் ஹோலியன்று மாலை நேரத்தில் செய்யப்பட்ட ஏற்பாட்டின் குறிக்கோள் சீலாவந்ததால் பூர்த்தி அடையாமற்போயிற்று. பேச்சை மாற்றுவதற்காக வேறு ஏதாவது பேச்சை எடுக்கக் கர்னல் நினைத்துக்கொண்டிருந்த பொழுது கன்யா வந்து விட்டாள். "பின்னே! ஏதாவது சாப்பாடு கிடைக்குமா. கிடைக்காதா?" என்று கேட்டான் கர்னல்.

"தயாராகிவிட்டது, அண்ணு! அண்ணி தட்டுக்களை வைத்துக் கொண்டிருக்கிருர்கள்" என்று கூறிய கன்யா சஜ்ஜனைப் பார்த்து, "ஒரு விநாடி இங்கே வாருங்கள்" என்று கூறினுள்.

சஜ்ஜனும் கன்யாவும் சீலாவைக் கார் வரை கொண்டுவிடுவதற்காக, "உன்னை இன்று அழைத்து நான் பெரிய தவறு செய்துவிட்டேன். மஹிபால் இப்படிச் செய்வான் என்று என்னுல் நம்பவே முடியவில்லை," என்று சஜ்ஜன் கூறினுன்.

சீலா மௌனமாக இருந்தாள். அவளுடைய உணர்வற்ற முகம் கல்லைப் போல் ஆகி இருந்தது, "நான் குல்முகம்மதைக் கூப்பிடுகிறேன். அவன் இவர்களை விட்டுவிட்டுவருவான்" என்று கன்யா சஜ்ஜனிடம் கூறினுள்.

"நான் போகிறேன். நீ எனக்காகக் கவலைப்படாதே" என்று சீலா கூறிய பொழுது சஜ்ஜன் அழுத்தமாக, "அது முடியாது. கன்யா! நீ குல்முகம்மதைக் கூப்பிடு, டாக்டரைக் கொண்டு விட்டு விட்டு அவன் வீட்டிற்குப் போய்விடுவான்" என்று கூறினுன்.

கன்யா வராண்டாவின் பக்கம் திரும்பினுள், காருக்கருகில் சஜ்ஜனும் சீலாவும் நின்று கொண்டிருந்தனர். முழு நிலவு நேரத்தில் தோட்டத்தின் மரங்களும், கொடிகளால் அமைக்கப்பட்ட இருக்கைகளும், பசுமையான புல்திடலும் மரகதப்போர்வை போர்த்தியதுபோல் மௌனத்திற்கு எடுத்துக்காட்டாகக் கவர்ச்சியுடன் விளங்கிக் கொண்டிருந்தன. நிலவிடம் அஞ்சி இரவு சுருங்கி அந்தப் பசுமையில் ஒளிந்து கொள்வதற்காக இறங்கி வந்தது போல் தோன்றிற்று. வலது புறம் புல்திடலின் ஓரத்தில் மல்லிகைப் பூங்கா நிலவால் அழகு பெற்று விளங்கியது. சஜ்ஜனின்

அமைதியான பார்வை, பேச ஒரு பொருளும் இல்லாததால் நான்கு புறமும் சுற்றிக்கொண்டு, சீலாவின் துன்பமும் கவலையும் படர்ந்திருந்த முகத்தில் வந்து மறுபடியும் பதிந்தது. அதைப் பார்த்ததும் அவனுடைய உள்ளத்தில் பெரும் வேதனை எழுந்தது. சீலாவின் தலை மீது அன்புடன் கையால் வருடியபடி அவன், ''சீலா தைரியமாக இரு!'' என்று கூறினான். சஜ்ஜனின் குரல் கவலையில் ஆழ்ந்ததாக இருந்தது. ''சீலா! உண்மை என்பது சில சமயத்தில் இரண்டு பக்கமும் கூர்மையான கத்தியைப்போல் வெட்டுகிறது. மஹிபால் கலைஞனாக இருந்தும், வேதனையைப் புரிந்துகொள்ளாமல் நியாயத்தைப்பற்றியே பேசிக் கொண்டிருக்கிறான். என்ன சொல்வது என்று புரியவே இல்லை.'' என்று அவன் கூறினான்.

''ஆண் பெண்ணின் உள்ளத்தைக் கல்லென்று கருதுகிறான். பிறகு அந்த உள்ளத்தில் அன்பானசொற்களால் அஜந்தா, எல்லோரா போன்ற அழகுகளையெல்லாம் பொறிக்கிறான். அதற்குப் பிறகு அந்த உள்ளத்தைப் புலிகள் வாழும் இடத்தில் விட்டுவிட்டுப் போய்விடுகிறான்... பெண் கல்லாகவே இருக்கட்டும்! ஆனால் அந்தக் கல்லில், தான்பொறித்த அழகை அவன் ஏன் மறந்து விடுகிறான்? என்னால் இதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் புரிந்து கொள்ளவும் மாட்டேன்'' என்று வேதனையோடு பேசிய சீலாவின் முகத்தில் ஓர் அழகு பொலிந்தது. எண்ணத்தில் ஆழ்ந்த அவளுடைய விழிகள் இருளிலும் விளக்கைப்போல் பிரகாசித்துக் கொண்டிருந்தன.

சீலாவை அனுப்பிவிட்டுத் திரும்பும்பொழுது சஜ்ஜனின் உள்ளம் பொருமிக் கொண்டிருந்தது. டாக்டர் சீலாவுடன் மஹிபாலினால்தான் அவனுக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. சீலாவினிடத்தில் மேலை நாட்டுப் பெண்ணின் குணமும் இந்தியப் பெண்ணின் குணமும் விசித்திரமாக இணைந்திருந்தன. அவள் அருவியைப்போல் சுதந்திரமான வாழ்க்கை வாழ்பவளாகவும், அருவி தன் ஊற்றோடு கட்டுப்பட்டிருப்பது போலவே தன் அடிப்படைப் பண்போடு கட்டுப் பட்டவளாகவும் இருந்தாள். சீலாவின் குணம் மற்றவர்களின் உள்ளத்தில் அவள்மீது மதிப்பை உண்டாக்கக் கூடியதாக இருந்தது.

கார் வாயிலைக்கடந்து சென்ற பிறகு சஜ்ஜன் திரும்பினான், கன்யா அவனுடனேயே திரும்பிவந்தாள். போர்ட்டிகோ வரை வந்ததும் எதிர்பாராமல் சஜ்ஜன் மிகுந்த வேதனையுடனும் வேகத்துடனும் அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டான். விரல்களோடு விரல்களைக் கோத்துக் கொண்டு அவன் நடக்கத் தொடங்கினான்.

டிராயிங்ரூமின் கதவுவரை இருவரும் அவ்வாறே நடந்து

வந்தார்கள். கன்யாவின் கையை தன் இதயத்தில் வைத்துக் கொண்டு மற்ருெரு கையால் அதை மிகவும் மென்மையுடன் அழுத்தியவாறு வேதனைக்குரலில் சஜ்ஜன் ''மற்றவர்களின் கவலையில் பங்குகொண்டு நாம் நமது மாலைநேரத்தை அநாவசியமாகக் கெடுத்துக்கொண்டு விட்டோம்! எல்லோரையும் அழைக்காமல் இருந்திருந்தால் நன்ருக இருந்திருக்கும்'' என்று கூறினுன்.

கன்யாவின் முகத்தில் இன்பம் நிறைந்த நாணத்தால் செம்மை பரவிற்று. அவள் ஒன்றும் கூறவில்லை.

விரல்கள் துடித்தன. ஆனுல் அவை பிரிய விரும்பவில்லை. கண்களும் இணைப்பிலிருந்து அகல விரும்பவில்லை.

''நான் செல்கிறேன்'' என்று கூறிய கன்யா தலை குனிந்தவாறு போக முற்பட்டாள். அவளுடைய விரல்களைத் தன் பிடியில் அழுத்திக்கொண்டு வேதனையுடன், "உனக்கு என்னைப்பற்றி எந்தச் சந்தேகமும் இல்லையே!'' என்று சஜ்ஜன் கேட்டான்.

அந்தக் கேள்வி கன்யாவின் உள்ளத்தில் கலக்கத்தைத் தோற்றுவித்தது. சீலா, கல்யாணி, மஹிபால் இவர்களின் கவலையால் மறைந்திருந்த அச்சம் உள்ளத் துடிப்போடு கலந்து மறுபடியும் தலைதூக்கிற்று.

சஜ்ஜன் அவளுடைய கையை அழுத்தியவாறே "ஓரளவுக்குப் பொறுப்புள்ளவனுக இருந்தாலும் நான் ஒரு விஷயத்தில் கெட்டுப் போன குழந்தையைப்போல் தன்னை அடக்க முடியாமல் இருக்கிறேன். ஒரு விஷயத்தில் எனக்கு என்மீதே நம்பிக்கைகிடையாது. நான் உன்னுடைய வலிமையில் நம்பிக்கைகொள்ள விரும்புகிறேன் கன்யா! எனக்கு உன்னுடைய நம்பிக்கையைக் கொடு. நான் ஒரு பொழுதும் மஹிபாலாக ஆகிவிடாமல் இருக்கவேண்டும்.'' என்று கூறினுன். சஜ்ஜனின் உண்மைப் பேச்சு கன்யாவின் உள்ளத்தைத் தொட்டது. அவளுக்கு அதைக் கேட்க மகிழ்ச்சியாக இருந்தது.

''தவறிய குழந்தையைப் போன்ற உங்கள் உருவத்தை நான் இங்கேயும், கோவர்த்தனத்திலும் பார்த்திருக்கிறேன். பயப்படாதீர்கள்! நான் மிகவும் கவனமாக இருப்பேன்'' என்று இனிமையான குரலில் சிரித்துக்கொண்டே கன்யா கூறினுள்.

இருவருடைய கண்களும் மறுபடியும் இணைந்தன. கன்யாவின் முகத்தில் புன்முறுவல் காணப்பட்டது. அப்பொழுது சஜ்ஜனின் முகத்தில் ஒரு குழந்தையின் களங்கமின்மை காணப்பட்டது. மன மகிழ்ச்சியுடன் கன்யா அவன்மீது அன்பைப் பொழிந்தாள். அவளுடைய கண்களில் ஓர் ஒளி படர்ந்திருந்தது. சஜ்ஜனின் உள்ளம் மகிழ்ந்தது: தூய்மை அடைந்தது. அவனுக்குத் தனக்குள்ளேயே ஓர் ஆறுதல் கிடைத்தது.

கன்யா சென்றுகொண்டே "நான் தட்டு வைக்கிறேன் நீங்கள் மேலேயே வந்துவிடுங்கள்" என்று கூறினுள்.

## 43

இரவில் வெகு நேரம் விழித்திருந்த காரணத்தால் சஜ்ஜன் வெளியே உலாவக்கூடச் செல்லவில்லை. காலை வேளையில் தேநீர் கூட ஒரு மணி நேரங்கழித்துத்தான் அருந்திஞன். சஜ்ஜன் ஹோலி வாழ்த்துக்காகப் பல இடங்கள் செல்லவிரும்பிஞன். கணவன்—மனைவி இருவரும் நிச்சயித்தபடி அவன் பன்னிரண்டு மணிக்குள் திரும்பிவிடுவான். இருவரும் விடுதலையாகி நிற்கும் சிட்டுக்களைப் போல் டிரைவிங் செய்துகொண்டே கான்பூர் போவார்கள். 'லஞ்சு' அங்குதான் நடக்கும். சஜ்ஜன் அழகிய ரோஸ்வுட் டைனிங் டேபிள் மீது தபலாவைத் தட்டுவதுபோல் தாளம் போட்டுக் கொண்டு கன்யாவின் வரவை எதிர்பார்த்தான். கன்யா சமைய லறையில் சிற்றுண்டி தயார் செய்துகொண்டிருந்தாள். சீலா—மஹிபால் இவர்களைப் பற்றிச் சிந்தித்த சதியும்பதியும் நேற்றிரவு புதிதாகத் தம் இணைபிரியா உறவுபற்றி உணர ஆரம்பித்தனர்.

காத்திருந்து பார்த்த சஜ்ஜன், இரண்டு நிமிடங்களுக்குப் பிறகு செய்தித்தாளைப் புரட்ட ஆரம்பித்தான். அப்போதுதான் வேலை யாள், பாபாஜீ வந்திருப்பதாகத் தெரிவித்தான். சஜ்ஜனுடைய 'ரோமாண்டிக் மூட்' அதை அறிந்து மகிழ்வடையவில்லை. ஆயினும் அவரை உடனே மாடிக்கு அழைத்து வரும்படி பணித்தான். பாபாஜீயின் தெய்வீக சக்தி சஜ்ஜனைப் பெரிதும் ஆட்கொண்டி ருந்தது. ஓர் உள்ளம், மற்ருேர் உள்ளத்து விஷயத்தை எப்படித் தெரிந்துகொள்ள இயலும்? இதைப்பற்றி அவனுல் சிந்தித்துக் கூடப் பார்க்க முடியவில்லை. அதனுல்வேறு அவனுக்குச் சிரத்தை அதிகமாயிற்று. நேற்றுச் சஜ்ஜன்—கன்யா இருவரையும் எல்லோரும் இன்புற்றிருக்க, எல்லாவற்றையும் தியாகம் செய்ய வேண்டும் என்று பாபா உபதேசித்தார். அப்போதிலிருந்து சஜ்ஜனுடைய உள்ளத்தில் கூச்சம் அதிகரித்தது. பிறருக்காகத் தன் சுயநலனைத் தியாகம்செய்வது அவனுக்குப் பிடித்த விஷயந் தான். ஆயினும் பலவித ஆசைகள் வளர்ந்து வரும் உள்ளம் தயங்கியது. அதனுலும் பாபா வருவதைக்கேட்டு அவன் சங்கோச மடைந்தான்.

மாடியிலிருந்த விருந்தினர் விடுதியில் பாபா உட்கார்ந்திருந்தார். சஜ்ஜன் பணிவுடன் பேச்சைத் தொடங்கினுன்: "நாங்கள் தேநீர் அருந்திக் கொண்டிருந்தோம்—தங்களுக்குப் பால் கொண்டு வரட்டுமா?"

''வேண்டாமப்பா! நீங்கள் தேநீர் அருந்திவிட்டு வாருங்கள்! நானும் அங்கு வருகிறேன். நேரத்தை வீணுக்கக் கூடாது.''

''வாருங்கள்—ஆனல்?''

''என்ன?''

''நாங்கள் முட்டை ஆம்லெட்.''

பாபா சிரித்தார். ''தாராளமாகச் சாப்பிடுங்கள். நீங்கள் சாப்பிடும் முட்டையும், ஆம்லெட்டும் என் வாயில் வந்து விழுந்து விடாதே!''

கன்யா வந்ததும் பாபா தம் பேச்சை ஆரம்பித்தார். அவர் சஜ்ஜனிடம் கூறினர் : ''ஒரு பெண்ணுக்கு நீதி வழங்கவேண்டும் என்று நீங்கள் போராட்டம் நடத்தினீர்கள். விமானத்தைக்கூடப் பறக்கவிட்டீர்கள்; இப்போது பல பெண்களை ஆதரிக்க நீங்கள் எனக்கு உதவிபுரிவீர்களா?''

கன்யா கூறினள் : ''பணியுங்கள், என்ன விஷயம்?''

''நேற்றிரவு நம் ஆசிரமத்தில் ஒரு விசித்திரமான பைத்தியக் காரப் பெண் வந்து சேர்ந்திருக்கிருள். அவள் உக்கிரமான ரூபத்தைக் காண்பித்தாள். ஆனல் தனிமையில் அவளுடன் நான் பேசிப் பார்த்ததிலிருந்து அவள் முழுப் பைத்தியமில்லை என்பது எனக்குத் தெரியவந்தது.''

''பிறகு?'' சஜ்ஜனும், கன்யாவும் ஆர்வத்துடன் கேட்டனர்.

''பாவம், ஏதோ கொடுமைக்குள்ளாகியிருக்கிருள். அதனல் சித்தப்பிரமை பிடித்துவிட்டது. ஆனல் அவள் காண்பித்துக் கொள்ளுமளவு அவள் பித்துப் பிடித்தவளில்லை. மண்டலியிலுள்ள மக்கள் அவளை என்னிடம் கொண்டு சேர்த்தனர். அவர்களா, இல்லை அவர்களுடைய பாவம் இங்கே கொண்டுவந்து சேர்த்தது. எத்தனையோ பெண்கள் இவ்விதம் கொடுமைகளைச் சகித்துக் கொண்டிருக்கின்றனர்!''

கன்யாவின் சிவந்த முகம் சினத்தால் இன்னும் ரத்த நிறமாகி விட்டது. சஜ்ஜனுடைய முகத்தில் ஆர்வம்தான் மேல்நோக்கிக் காணப்பட்டது.

பாபா முழுக்கதையையும் கூறினர். அந்தப் பெண் ஒரு சமையற் காரியின் மகள். அவள் ஒரு தனவானின் வீட்டில் வேலை செய்து வந்தாள். இந்தப் பெண்ணும் தன் தாயுடன் அந்த வீட்டிற்குச் செல்வது வழக்கம். பெண் எழுதுவதிலும், படிப்பதிலும் கெட்டிக் காரி. ஆகையால் அந்தப் பணக்காரர் அவளுக்கு உதவிபுரிந்தார். அவருடைய மகனையே இந்தப் பெண், காதலிக்க ஆரம்பித்து விட்டாள்! இதற்கிடையில் சமையற்காரி இறந்துவிட்டாள். பணக்காரரின் குலக்கொழுந்து தாயற்ற ஏழைக் காதலியின் இருள் சூழ்ந்த எதிர்காலத்தைத் திருமணம் செய்து ஒளிப்படுத்தினன்.

அன்பு குறைந்ததால் ஒளி மங்கி அணைந்தே போய்விட்டது. மகனின் பெற்றோர் அவனை வற்புறுத்தி அவளிடமிருந்து பிரியச் செய்துவிட்டனர். பெண்ணைப் 'பெண்டிர் சேவா மண்டலி'யில் சேர்த்துவிட்டனர். அவளைப் பாதுகாக்க அங்கு ஏற்பாடு செய்யப் பட்டது. பிரேம்சந்த் மற்றும் பாரத நாட்டு மிகப் பெரிய ஆசிரியர்கள் வருணித்தது போலவே 'பெண்கள் விடுதி' கெட்ட நடத்தைகளின் இருப்பிடமாகத்தான் ஆகிவிடுகிறது! சுமார் இருபது ஆண்டுகளாக அங்கு ஒரே ஆசாமி ஊதியமின்றிச் செயலாளராக இருக்கிறான். செயலாளர் கமிட்டியில் நகரத்துப் பெரிய தனவான்களில் சிலர் இருக்கின்றனர். இதனால் அந்த நிறுவனம் சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வோர் ஆண்டும் பெண்டிர் சேவா மண்டலியின் அறிக்கை வெளியிடப்படும். அதில் பத்துக் கைம் பெண்களும், ஒதுக்கப்பட்டவர்களும் மறுமணம் செய்து கொண்ட வருணனை தடபுடலாகப் பிரசுரிக்கப்படுவதுண்டு. மனைவி வேண்டும் என விரும்புபவன் மண்டலிக்காக ஐந்நூறு ரூபாய் நன்கொடையளிப்பான். அதற்கு ரசீதும் கொடுக்கப் படும். திருமணம் செய்துகொள்ள விரும்புபவர் மாஜிஸ்டிரேட்டின் முன்னிலையில் திருமணத் தாளில் கையொப்பமிடுவர். இவ்விதம் முறைப்படி எல்லாம் நடக்கும்போது மண்டலியின் பேரில் யார் சந்தேகப்படமுடியும்? இப்படிக் கௌரவக் கோடு கிழித்துக் கொண்டு மண்டலியின் உள்ளே, செயலாளர், கமிட்டியின் அங்கத்தினர், போலீசார் ஆகியவரின் களியாட்டத்திற்காகச் சீர்கெட்ட முறையில் செயல் நடந்து வருகிறது. மண்டலியின் ஏஜெண்டு ரெயில்வே ஸ்டேஷன்களிலும், திருவிழாக்களிலும் வழி தப்பித் தவிக்கும் பெண்களை ஏமாற்றிக்கொண்டு வந்துவிடுகிறான். மத சம்பந்தப்பட்ட சச்சரவுகள் நடந்துகொண்டிருந்த போது முஸ்லீம் பெண்களைக் கவர்ந்து வந்து, அவர்களைப் புனிதமாக்கும் தெய்வீகத் திருப்பணியும் இங்கே செவ்வனே நடப்பதுண்டு. மண்டலியில் முதன் முதல் கிராமத்துப் பெண்டிரும், கீழ்த்தரப் பட்டபிரிவினருமே வந்தனர். ஆனால் நாட்டின் பிரிவிற்குப் பிறகு கடத்திச் செல்லப்பட்ட பெண்களைக் காக்கும் பொறுப்பும் 'மண்டலி'க்கு வந்து சேர்ந்தது. அப்போதிலிருந்து நடுத்தர வகுப்பைச் சேர்ந்த பெண்களும் தேடித் தேடிக் கொண்டு வந்து சேர்க்கப்படுகின்றன. 'மண்டலி'யின் சார்பில் தனிக்கட்டிடத்தில் தையல், நெசவு முதலிய கைத் தொழில்கள் கற்றுத் தரப்படுகின்றன. இதனால் வெளியிலிருந்து பெண்கள் வந்துபோவது எளிதாகிவிட்டது. அவர்களுக்கு ஊதியமும் தரப்படுகிறது. கல்வியைச் சாக்காகக்கொண்டு வெட்ட வெளிச்சமாகப் பாவச் செயல்கள் நடக்கின்றன!

இந்தப் பெண், முதலில் வகுப்பில் இருக்க அநுமதிக்கப்பட்டாள். அங்குள்ள சில பெண்களின் பேச்சும் செயலாளரின் பேச்சும் இவளுக்குப் பெரும் நம்பிக்கையூட்டின. சில தினங்களுக்குள்ளேயே ரகசியம் அம்பலமாகிவிட்டது. சுமார் இரண்டாண்டுகள் கடுமையாகப் போராடிய பிறகு தன்னை முழுப் பைத்தியம் என்று நிரூபித்துவிட்டு அவள் வெளியே கிளம்பியிருக்கிறாள். ஆண்கள் என்றாலே நடுங்குகிறாள்; ஆடவரிடம் இவளுக்கு மிகுந்த வெறுப்பு. இவள் கடந்த இரண்டாண்டுகளாக அத்தனை கொடுமைகளை ஆடவரிடமிருந்து சகித்து வந்தவள். இவளுடைய புனிதமான உள்ளம் ஆடவரின் கபட வலையில் சிக்குண்டு பலவிதமான அவமானங்களுக்கும் பலாத்காரத்திற்கும் உள்ளாகி விட்டது.

இதைக் கேட்டு கன்யா ஆத்திரம் அடைந்தாள். சஜ்ஜனும் அந்த விஷயத்தைக் கேட்டு அதிர்ச்சியடைந்தான்.

கன்யா சினத்துடன் பேசினாள்; "இந்தக் கெட்ட செயலை ஒழித்தாக வேண்டும். போலீசுக்குப் புகார் செய்து குற்றவாளிக் கூட்டத்தைப் பிடிக்க வேண்டும்!" அவள் சஜ்ஜனிடம் கூறினாள்: "இப்போதே நீங்கள் கிளம்புங்கள்! என்ன செய்வீர்களோ தெரியாது. இந்தப் பாவச் செயலை ஒழித்தாக வேண்டும்!"

பாபா கூறினார்: "முதலில் இதை நிரூபிக்கத் தக்க சான்றுகள் வேண்டும். அந்தப் பெண்ணின் மனநிலை இப்போது சரியாக இல்லை. அவள் கூறுவதில் சில பொய்யாகவும் இருக்கலாம்."

சஜ்ஜன் கூறினான்: "நகரத்தில் இம்மாதிரிக் கூட்டங்கள் இருக்கின்றன. நான் கேள்விப்பட்டிருக்கிறேன்."

"நடக்கிறது! அப்பா! ஆனால் உண்மையை எடுத்துக் கூறச் சான்றுகளும் வேண்டுமே! இந்தப் பெண் பித்துப்பிடித்த நிலையில் இருக்கிறாளே! இவளை நாம் எப்படிச் சாட்சியாக நிறுத்த முடியும்?"

சஜ்ஜன் திடீரென்று கேட்டான்: "உங்களுக்குப் பிறருடைய உள்ளத்தை அறியும் திறமையிருக்கிறதே, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

"உன் கருத்துடன் என் கருத்தை இணைக்காதே. உண்மையை நீயே அறிந்து கொள்."

"இப்போது அதற்கு வழி என்ன? இந்தக் கேஸில் உண்மையை எப்படிக் கண்டு உணர்வது?"

"உழைப்பினால்; சிந்தனையால் உணர்வது. போலிசாரின் உதவியால் புரிந்துகொள்கிறேன். இப்போதே கர்னலுக்குப் ஃபோன் செய்கிறேன்!"

கன்யாவும் கூறினாள்: "கர்னல் அண்ணனை அழைத்து வாருங்கள்."

கன்யா எழுந்தாள். பாபா கூறினார்: "இரு மகளே, முதலில் சிந்தித்துப் பார். தம்பி கூறியபடி போலீசு அதிகாரிகளிடமிருந்து தெரிந்துகொள்ளலாம். சிறிய அதிகாரிகள் இந்த மனிதர்களிடமிருந்து லஞ்சம் வாங்கிச் சாப்பிடுகிறார்கள். நாம் பெரிய அதிகாரிகளை அணுகுவதற்கு முன்பு இவர்களே முன் ஜாக்கிரதையாக நடந்துகொண்டுவிட்டால் என்ன செய்வது?''

சஜ்ஜன் பிரமித்துவிட்டான். கூண்டிலடைபட்ட பறவை போல் வனகன்யா துடித்தாள். அவள் கூறினாள்: "பெண்களை எப்படியெல்லாம் கொடுமை செய்கின்றனர். சரி, நான் எப்படியாவது இதற்குச் சான்றுகள் தயார் செய்யப் போகிறேன். நான் இந்த அநீதத்தை எதிர்த்தே தீருவேன்.''

பாபா சிரித்தார்: "எப்படி மகளே எதிர்ப்பாய்?''

"நான் அங்கே செல்வேன். அந்தப் பெண்களுடன் பேசுவேன்.''

"மண்டலியின் தலைவர் உன்னைப் பேச அனுமதிக்காவிட்டால்?''

"பொது நிறுவனம், பாபாஜீ! நான் செல்ல முடியும்!''

பாபா மறுபடியும் சிரித்தபடி கூறினார்: "திருடன் வெளிச்சத்தில் களவு செய்வதில்லை, மகளே; அதன் ரகசியத்தை உன்னால் எப்படி அறிந்துகொள்ள முடியும்?''

கன்யா ஒன்றும் அறியாமல் தவித்தாள். பிறகு சமாளித்துக் கொண்டு கூறினாள்: "சரி, நான் சமூகத்தில் செயலாற்றுபவள் என்ற முறையில் செல்கிறேன் என்றும் வைத்துக் கொள்ளுங்கள். சில தினங்கள் அங்குள்ள சூழ்நிலையுடன் பழகி வாழ்கிறேன். அதன் பிறகு அந்தப் பெண்களிடமிருந்து எனக்கு எல்லாமே தெரிந்துவிடுமே!''

பாபா கூறினார்: "இது நல்ல உபாயம். ஆனால் ஒன்று மட்டும் சிந்திக்க வேண்டியது. மகளே, விமானத்தின் வாயிலாக நீ ஒரு முறை இயக்கம் ஆரம்பித்தாயே, அப்போதிலிருந்து உன்னை அறியாதார் ஒருவருமில்லை. உன்னை அங்கு இருக்கவும், அனுமதித்துவிட்டு, மண்டலியின் அதிகாரிகள். அங்குள்ள பெண்களையும் எச்சரித்து விடுகிறார்கள் என்று வைத்துக்கொள், அந்த நிலையில் மாதக்கணக்காக அங்கிருந்தாலும் ரகசியத்தை உன்னால் எப்படித் தெரிந்து கொள்ள முடியும்?''

சஜ்ஜன் கூறினான்: "இன்னொரு விஷயம், உண்மையைத் தெரிந்துகொள்வதற்காகப் பொய் வேஷம் போடுவது சரியாகுமா?''

"இதில் தவறென்ன தம்பி?''

"தவறுதான். பொய் வழி சென்று உண்மையை எப்படிக் கண்டுபிடிக்க முடியும்!''

"சரிதான். இதில் எவ்வளவு அம்சம் பொய் என்பதையும்

பார்க்க வேண்டும். ஒரு ரகசியத்தை அறிந்துகொள்ள நீ ஓரிடத்திற்குச் செல்கிறாய், அதனால் பலருக்கு நன்மை உண்டாகப் போகிறது. உன்னைப் பற்றிய ரகசியத்தை வெளியிடாமல் இருக்கிறாய். இதில் பொய் என்ன இருக்கிறது?"

"பொய்தான் பாபாஜீ!"

"சரி, நான் ஒரு வார்த்தை கேட்கிறேன். பதில்சொல். திருடன் ஓடுவதை நீ பார்க்கிறாய், போலீஸ் துரத்துவதையும் பார்க்கிறாய். திருடனை நீ பார்த்தாயா என்று போலீஸ் கேட்டால் என்ன பதில் சொல்வாய்?"

"ஆமாம், பார்த்தேன் என்பேன்?"

"சரி, அந்தத் திருடனுடைய குழந்தை நோய்வாய்ப்பட்டிருக்கிறது, அவனிடம் பணமில்லை; அதனால் திருடுகிறான் என்பது உனக்குத் தெரியும் என்று வைத்துக்கொள். திருடிவிட்டு உன் வீட்டில் அவன் நுழைந்திருக்கிறான்—அப்போது நீ என்ன செய்வாய்? போலீசார் கேட்டால் பதில் கூறி விடுவாயா?"

ஒருகணம் தாமதித்துவிட்டுச் சஜ்ஜன் கூறினான்: "திருடனை நான் பார்த்தேன் என்பதை எப்படி மறுக்க முடியும்? ஆனால் அவனுடைய நிலைமையும், பரிதாபகரமாகத்தான் இருக்கிறது. நான் திருடனுக்குத் தண்டனையும் அளிக்கச் செய்வேன். குழந்தையைக் காப்பாற்றப் பொருளுதவியும் செய்வேன்.

"நீ ஏழை, உன்னிடமும் ஒன்றுமில்லை. பிறரிடம் உதவி கேட்டுக் கொடுக்கும் வகையிலும் நீ இல்லை என்று வைத்துக்கொள். அப்போது?"

"நான் பொய் சொல்லத் தயங்க மாட்டேன். இது புண்ணியந்தான். போலீசாரிடமிருந்து அவனைக் காப்பாற்றுவது பாவமில்லை". கன்யா கூறினாள்.

"இந்த விபரீத விஷயங்களை என்னால் பிணைக்க முடியவில்லை. களவு தவறு என்பது உண்மைதான். பிறருடைய உயிரைக் காக்க முயல்வதும் உண்மைதான். ஆனால் இவ்விரண்டும் . "

சஜ்ஜன் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினான். அவனால் என்ன செய்வதென்று நிச்சயிக்க முடியவில்லை.

கன்யா சற்று ஆவேசத்துடன் பேசினாள்: "வீண் விவாதத்தில் ஏன் நீங்கள் ஈடுபட்டிருக்கிறீர்கள்? இது வேலை செய்ய வேண்டிய தருணம்."

"நான் வீணாக விவாதிக்கவில்லை, கன்யா, பாபாஜீ உள்ளத்து நிலைமையை அறிந்தவர். அவர் உண்மையான சான்று கூறக் கூடும்." சஜ்ஜன் அடக்கமாகப் பதிலளித்தான்.

பாபா கூறினார்: "உன் சிந்தனையில் உள்ளக் குழப்பம் கலந்

திருக்கிறது. எதனுல் நீ இம்மாதிரி உண்மையை அலசி ஆராய முற்பட்டிருக்கிருய்!''

"எனக்குப் புரியவில்லே."

"உன் மனேவி அந்தப் பாவம் நிறைந்த கூடத்திற்குச் செல்வது உனக்குப் பிடிக்கவில்லே, அதுதானே!"

''ஆமாம்!"

''இம்மாதிரி துணிச்சலான செயலே வேறு எந்தப் பெண்ணுவது செய்யமுற்பட்டால் அவளேப் புகழ்வாயில்லேயா?"

''இவளேயும் நான் பாராட்டத்தான் செய்வேன்; ஆனுல் போக்கிரிகளிடையே இவள் சிக்குண்டு தவிப்பாளோ என்ற பயம்."

"இத்தனே அபலேகள் போக்கிரிகளிடம் சிக்குண்டு தவிக்கிருர்களே அவர்களேப் பற்றி நினேத்தீர்களா? அவர்களும் என் போன்றவர் தானே? இம்மாதிரி அநீதத்தை நான் என்வீட்டிலேயே பார்த்திருக் கிறேன்; அதனுல்தான் அதை ஒழித்துவிட்டு மறுவேலே பார்க்கப் போகிறேன். இப்படிப்பட்ட நேரத்தில் உங்கள் வேதாந்தப் பேச்சுக்கள் எனக்குப் பிடிக்கவில்லே, சஜ்ஜன். உங்கள் மனேவியாக நான் இல்லாதபோது எனக்கு உதவிசெய்யத் துடியாய்த் துடிப் பீர்களே, அந்த ஆர்வம் இப்போது எங்கேபோய் விட்டது?''

கன்யா எல்லேமீறி உணர்ச்சி வசப்பட்டாள். சிற்றுண்டி, தேநீர் காரணமாக எல்லோருடைய கவனமும் சிதறிவிட்டது. பாபா அமைதியான குரலில் பேசினுர்: ''வெறும் ஆவேசத்தினுல் பயனில்லே, மகளே, செயலாற்றும்போதுகூடச் சிந்தனேக்கும் அலசி ஆராய்வதற்கும் நம் அறிவு ஒவ்வொரு கணமும் தயாராக இருக்கவேண்டும்; இல்லாவிட்டால் செயல் பலன் அளிக்காது. உன் கணவருடைய சந்தேகம் நியாயமானதுதான். நிலேமையைப் பற்றி நாம் விழிப்புடன் இருக்கவேண்டும் என்று அவரை ஏன் எச்சரித்தேன் தெரியுமா? அவருடையபோக்குத் தவருன இடத்தில் போய்ச் சிக்கிக் கொள்ளக்கூடாது என்பதற்காகத்தான். தம்பி, நான் உன் கேள்விக்குப் பதிலளிக்கிறேன். பொய் நமது லட்சிய மில்லே. நேர்மை, நியாயம் இவற்றுக்காகத்தான் நாம் பாடுபடு கிருேம். ஒரு பொய் சொல்வதால் பிறருக்கு உதவி கிட்டுமானுல் அது புண்ணியமேயன்றிப் பாவமல்ல. பரோபகாரந்தான், புண்ணியம்; பிறரைத் துன்புறுத்துவதுதான் பாவம் என வியாச முனிவர் கூறியது நியாயம் என்றுதான் எனக்குப்படுகிறது.''

''அப்படியானுல் வன்முறைகூடச் சில இடங்களில் புண்ணியமாகி விடுமா?'' சஜ்ஜன் கேட்டான்.

"கீதையின் இந்தக் கட்டளேயையும் நான் ஒப்புக்கொள்வேன். லட்சியம் சிறந்ததாக இருப்பின் தியாகமனப்பான்மையுடன் செய்யப்படும் வன்முறைச்செயலும் புண்ணியமான காரியந்தான்.

"காந்திஜீ இதை மறுத்தார்."

"இல்லையே! கோழையின் அஹிம்சையைவிட வன்முறை சிறந்தது என்றார். பிறர் உயிரைக்காத்தல் மிகச் சிறந்த லட்சியமாக இருக்கவேண்டும்; உன்னைக் கொல்ல யாராவது பிடிவாதமாகக் காத்துக்கொண்டிருந்தால், அவருடன் நீ சண்டையிட்டேயாக வேண்டும். பெண்டிரைச் சேர்த்துக்கொண்டு வியாபாரம் செய்யும் போக்கிரிகளுடன் சண்டையிட்டே தீரவேண்டும், மகனே..."

"சேவா மண்டலி எங்கே இருக்கிறது? நான் இன்றே போகப் போகிறேன்."

"இன்று நீங்களிருவரும் செல்லுங்கள். பொருளுதவி என்று நூறு அல்லது இருநூறு ரூபாயை விட்டெறியுங்கள், பிறகு சூழ்நிலைக் கேற்ப வழி செய்யலாம்."

கன்யாவின் முன் தன் அண்ணியின் உருவம் வந்து நின்றது—நெருப்பில் வெந்த உடல், சிதைவுற்ற உதடு, மூக்கு, கண்களிருந்த இடத்தில் தோன்றிய குழிகள், தலை முடி......!

கன்யா அந்த நினைவினால் உணர்வற்றுப் போனாள். பெண்களின் உலகமே அவ்விதம் எரிவதுபோல் அவள் கண்டாள். உணர்வின் வடிவில் கண்ணீர் வழிந்தது. கன்யா நடுங்கினாள்; பிறகு உறுதியடைந்தாள்.

இன்று தன் லட்சியத்தைப் புதிய முறையில் உறுதிபடுத்திக் கொண்டாள்.

## 44

"அன்புடையீர்,

நானும் என் கணவரும் பாபாஜீயின் ஆசிரமத்தில் இருக்கும் நலமற்றவர்களை அடிக்கடி காணச் செல்வது வழக்கம். அவர்களுக்கு எங்களால் இயன்ற தொண்டாற்றுவதும் உண்டு. உங்கள் பெண்டிர் சேவா மண்டலியைப்பற்றி அங்கேதான் எங்களுக்குத் தெரிய வந்தது. பெண்களுக்கு நீங்கள் ஆற்றும் சேவைபற்றி அறிந்தோம். அப்படிப்பட்ட சேவையில் எனக்கும் நாட்டமுண்டு. மண்டலியின் நலனுக்காக நூறு ரூபாய் செக்கு அனுப்பியுள்ளேன். தாங்கள் அதைப் பெற்றுக்கொண்டால் நானும் என் கணவரும் பெரிதும் மகிழ்வுறுவோம்.

இப்படிக்குத் தங்கள்
வனகன்யா வர்மா."

'பெண்டிர் சேவா மண்டலி'யின் ஊதியமின்றிப் பணிபுரியும் செயலாளர் கன்யாவின்கடிதத்தையும், செக்கையும் கண்டு

மட்டற்ற மகிழ்வடைந்தார். நன்றி தெரிவிக்கத் தாமே வந்து விட்டார். திரு. சஜ்ஜனும் அவனுடைய மனைவியும் பெண் களுக்காக ஆற்றிவரும் தொண்டை அவர் பெரிதும் பாராட்டிப் பேசினர். வனகன்யா மண்டலியைக் காண ஆவல்கொண்டாள். செயலாளர் அதைப் பெரிய பாக்கியமாகக் கருதினர். மறுநாள் பகல் இரண்டு மணிக்குச் செயலாளரே வந்து இருவரையும் அழைத்துச் செல்வதாக முடிவு செய்யப்பட்டது.

மக்கள் திரள் திரளாகக் கடைத் தெருவில் நடந்துகொண்டிருந் தனர். முதுகில் சுமையைத் தாங்கிக்கொண்டு தெருவின் இருபுறங் களும் கூலியாட்கள் நடந்து சென்றனர். மூட்டைகளை வண்டியில் ஏற்றிச் செல்லும் எருதுகள், ஒட்டகங்கள்கூடச் சென்று கொண் டிருந்தன. சட்டை, வெயிஸ்ட் கோட்டு, காந்திக் குல்லா இவற்றுடன் பெரும்பாலானவர் காட்சியளித்தனர். தானியங் களின் மணம் எங்கும் வீசியது. வண்டிகள், லாரிகள், சைக்கிள், ரிக்ஷாக்கள், மாடுகள், ஒட்டகங்கள், வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த மக்கள் எல்லோரிடையிலும் சஜ்ஜன் தன் வண்டியை நகர்த்திச் செல்வது கடினமாக இருந்தது. செயலாளர் தொலைவிலிருந்த ஒரு மாடிக் கட்டிடத்தைக் காண்பித்தார். 'மண்டலி'யின் போர்டு அங்கே தொங்கவிடப்பட்டிருந்தது. செயலாளர் கூறினர்:

''மக்களுடைய பார்வை இதன்மீது விழவேண்டும், என்பதற் காகவே இவ்வளவு பெரிய போர்டு போடப்பட்டிருக்கிறது, பிறர் பார்வையிலிருந்து தப்பி மறைவாகப் பெண்கள் வாழவேண்டும் என்று நான் கருதுபவன். எங்கள் 'மண்டலி'யில் நன்னடத் தைக்குப் பெரிதும் மகத்துவம் அளிக்கப்படுகிறது. இங்கு நான் இருப்பத்திரண்டு ஆண்டுகளாகச் சேவை செய்து வருகிறேன். சந்திரனைக் களங்கமுடையவனுகப் பார்க்கலாம்; எங்கள் சந்திர முகத்துப் பெண்களிடம் ஒரு களங்கமும் கிடையாது.''

வண்டி கடைத் தெருவைத் தாண்டி இடது பக்கம் வந்தது; ஒரு சினிமா கொட்டகையும் பலசரக்கு வியாபாரிகளின் கடைகள் பலவும் இருந்தன. மறுபடியும் இடது பக்கம் வண்டி திரும்பியது. 'பல் வைத்தியம்' என்று போடப்பட்டிருந்தது. 'பிரெண்ட்ஸ் ட்ரேடிங் கார்ப்பரேஷன்', தையற்கடை, அதன் பிறகு பெண்டிர் சேவா மண்டலியின் மஞ்சள் நிறக் கட்டிடம் தென்பட்டது. வாசலில் வலதுபுறத்தில் செயலாளர் முதலியவர்களின் பெயர் பட்டியல் இருந்தது. இடதுபுறம் மண்டலியின் மகத்தான லட்சி யங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. சுவரில் பெரிய எழுத்துக்களில் 'தையலரைப் போற்றுமிடத்துத் தெய்வம் மகிழ்வுறும்' என்று எழுதப்பட்டிருந்தது.

உள்ளே அலுவலகம் இருந்தது. ஒரு பெண்மணி வயது முதிர்ந்த

அலுவலாளரின் அருகே அமர்ந்திருந்தாள். மாநிறம், கைகளிலும் முகத்திலும் மருக்கள், கண்களில் மை, மூக்குக் கண்ணுடி, செம் பட்டைக் கேசங்கள், பழுப்பு நிறமான பற்கள், கதர்ச்சேலை இவற்றுடன் காட்சியளித்த அவள், உடனே எழுந்து பற்களைக் காண்பித்தபடியே கரங்குவித்தாள். சஜ்ஜனுக்கு அவளுடைய புன்முறுவல் இயற்கையாகப்படவில்லை. நெற்றித்திலகமும் வகிட்டில் சிந்தூரமும் அவள் திருமணமானவள் என்று தெரிவித்தன. 'இவர்கள்தாம் திருமதி தனவதிதேவி; வைத்தியப் பட்டம் பெற்றவர். நம் மண்டலிக்கருகில் இருக்கும் பல் வைத்தியக் கூடத்தின் தலைவர்'' என்று செயலாளர் அவளை அறிமுகப்படுத்தி வைத்தார்.

மண்டலியில் நிரந்தரமாக இருந்துவரும் எட்டுப் பெண்டிர் அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர். கதருடை அணிந்திருந்த அவர்கள் பதினெட்டிலிருந்து முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவர்கள். எல்லோரும் கருத்த நிறத்தவர்தாம். ஆயினும் முகவெட்டு நன்ருக இருந்தது. ஆனுல் யாரும் அழகி என்று கூறத் தகுந்தவராக இருக்கவில்லை. செயலாளரின் அநுமதி பெற்றுச் சில சுலோகங்களைப் பெண்கள் முணுமுணுத்தனர். பிறகு தையல் வேலை, நெசவு, நடனம் பாடல், முதலியவை கற்பிக்கப்படும் அறைகள் காண்பிக்கப்பட்டன. இங்குச் சுமார் ஐம்பது பெண்டிர் இருந்தனர். அவர்களில் சிலர் இளம் பெண்கள், மற்றவர் வயது முதிர்ந்தவர். இவர்கள் குடும்பத்தில் வாழ்பவர்கள். பகல் நேரத்தில் அங்கு வந்து வேலை செய்துவிட்டுத் தக்க ஊதியம் பெற்று வீடு திரும்புபவர். இசையும், நடனமும், கற்கும் பெண்டிர் ஊதியம் பெறுவது கிடையாது. ஆயுர்வேதமும் மத சம்பந்தப் பட்ட பாடமும் கற்பிக்க மண்டலியில் இடமில்லாததால் திருமதி தனவதிதேவியின் பல் வைத்திய விடுதியில் அவை கற்றுக் கொடுக்கப்பட்டு வந்தன. அவளுடைய பெருந்தன்மையைப் பாராட்டிச் செயலாளர் பேசினுர்.

மண்டலியின் செயல்கள் சஜ்ஜன், கன்யா இருவரையும் ஆட்கொண்டன. இந்த நல்ல சூழ்நிலையில் அவர்கள் தேடி வந்த ஆபாசம் ஒரு சிறிதும் புலப்படவில்லை. பல முறைகள் தான் மண்டலிக்கு உதவுவதாக வாக்களித்து விட்டுத் திரும்பினுள் வனகன்யா. அவள் தனக்குள் கூறிக்கொண்டாள் : ''அந்தப் பைத்தியக்காரப் பெண் பொய் பேசியிருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்த மண்டலியின் போக்கு ஆழம் காண முடியாதபடி ரகசியமாக இருக்கவேண்டும்......இந்தக் கொடிய உலகுடன் போராட நாமும் கடுந்துணிவு கொள்ள வேண்டும்.....''

இதன் பிறகு அவள் சஜ்ஜனிடம் மண்டலியைப் பற்றித் தீவிர

மாக விவாதித்தாள். செயலாளர் அடிக்கடி வனகன்யாவைக் காண வந்தார். பிறகு சஜ்ஜனிடமும் வந்தார்; தனவதி தேவியுடனும் அவர் சஜ்ஜனைக் காண வந்து போய்க்கொண்டிருந்தார்.

சஜ்ஜன் பாபாஜீயிடம் மண்டலியைப் பற்றி எல்லாவற்றையும் கூறிவிட்டு "உங்கள் பைத்தியக்காரி கூறியபடி அங்கே எந்தச் சுவடும் காணப்படவில்லை!" என்று கூறினான்.

"ராம்ஜீ! அங்கே ஏதோ ஒரு பெரிய அக்கிரமம் நடக்கத்தான் செய்கிறது. அந்தப் பைத்தியக்காரியின் பல வார்த்தைகளில் எந்தவிதமான பொய்யான கற்பனைக்கும் சிறிதும் இடம் கிடையாது" என்று பாபாஜீ கூறினார்.

தன்னுடைய சகோதரரின் மகளை பலாத்கரமாகத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் ஒரு வியாபாரியின் பெயரைப் பாபாஜீ கூறினார். அவள் மண்டலிக்குத் தையற்கலை கற்பதற்காக வர வேண்டியிருப்பதாகவும், தன் விருப்பத்திற்கெதிராக பல உள வேதனைகளைச் சகித்துக்கொள்ள வேண்டியிருப்பதாகவும் அவர் கூறினார். அந்தப் பைத்தியக்காரியைப் பற்றிச் சஜ்ஜனுக்கு இன்னும் சில விஷயங்களும் தெரியவந்தன. பைத்தியக்காரியின் கூற்றுப்படி முதலில் அவளை மண்டலியின் மதச்சார்புள்ள சூழ்நிலையால் பெரிதும் கவர்ந்து, கொஞ்சம் கொஞ்சமாக ஒருவன் மனைவியாக ஆவதுதான் பெண்ணின் பெரும் கடமை என்றும், பெண்ணுக்கும் ஆணைப்போல் அடிக்கடி மணம் செய்துக் கொள்ளவும், விவாக ரத்து செய்யவும் உரிமை உண்டு என்றும் அவளுக்கு அறிவுறுத்தப்பட்டது. மற்றும் மண்டலி தூய்மையான ஆரிய பரம்பரைப்படி ஆண் பெண்ணுக்கிடையில் காதல் தொடர்பை உண்டாக்கித் தானே தன் கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வாய்ப்பு அளிக்கிறது என்றெல்லாம் அவளுடைய உள்ளத்தில் பதியவைக்கப்பட்டது. ஒரு விதத்திலும் காப்பாற்றுபவர் இல்லாததனால் பைத்தியக்காரி மண்டலிக்குக் கட்டுப்படத்தொடங்கினாள். ஒருநாள் அவளை மண்டலிக்குப் பக்கத்திலுள்ள அறைக்கு அழைத்துச் சென்று அங்கே ஓர் இளைஞனை அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டது. அந்த அறை நல்ல முறையில் சாதாரணமாக அலங்கரிக்கப்பட்டிருந்ததோடுகூட அங்கே ராதாகிருஷ்ணர்களின் படமும் மாட்டப்பட்டிருந்தது. அந்தப் படத்திற்கெதிரில் பைத்தியக்காரியையும், அந்த இளைஞனையும் அவர்களிருவரும் தங்களது ரகசியத்தை யாரிடமும் கூறமாட்டார்கள் என்று சபதம் செய்ய வற்புறுத்தினார்கள். பைத்தியக்காரி பெரும்பாலும் தன் விருப்பப்படியே அந்த இளைஞனுக்குத் தன்னை அர்ப்பணம் செய்தாள். அவள் தனது கடந்த காலத்துத் துன்பக் கதையையும் அந்தப் புதுக் காதலனிடம் கூறினாள். பைத்தியக்காரியின் புதுக்காதலன் எட்டு பத்து

நாட்கள் வரை தொடர்ந்தாற்போல் வந்து கொண்டிருந்தான். பின்னர் திடீரென்று அவன் வருவது நின்றுவிட்டது. பிறகு ஒரு நாள் அந்த அறைக்குப் போகும்படி அவளை அழைத்த பொழுது அங்கே அவள் ஒரு புது ஆடவன் அமர்ந்திருந்ததைக் கண்டாள். அந்த ஆடவனிடமும் பழைய நாடகம் தொடர்ந்தது. ராதாகிருஷ்ண னது படத்திற்கெதிரில் பழைய சபதம் முதலிய வேடிக்கைகள் நடக்கத் தொடங்கின. பைத்தியக்காரி அதனை எதிர்த்தாள். அவள் தன்னை ஒரு வேசியாக்குவதை மறுத்தாள். அதன் பயனாக அவள் பலவந்தம் செய்யப்பட்ட பொழுது உரக்கக் கூக்குரலிட் டாள். பெண்கள் சேவா மண்டலிக்கு வெளியே அவள் கூக்குரல் கேட்டது. சில நாட்கள் வரை அந்தப் பக்கத்தில் இதே பேச்சாக இருந்தது. பைத்தியக்காரி அந்த நாளிலிருந்து மண்டலிக்குக் கீழேயுள்ள பகுதியில் அடைத்து வைக்கப்பட்டாள். அங்கே பலருடைய பலாத்காரத்தை அவள் சகிக்க நேர்ந்தது. பைத்தியக் காரியின் கூற்றுப்படி பலாத்காரம் செய்பவர்களில் பெரும்பாலும் போலீஸ்காரர்கள் சேர்ந்திருந்தார்கள். அவளுக்கு அங்கே நோய் ஏற்பட்டது. மண்டலிக்குக் கீழேயுள்ள பகுதியில் இரண்டு பெரிய பெரிய அறைகள் உள்ளன. மறுக்கும் பெண்கள் அங்கே அடைத்து வைக்கப்படுகிறார்கள். அவர்கள் அங்கே அடியையும் பலாத்காரத் தையும் பொறுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. அவர்களுடைய உள்ள உணர்வையே அழித்து விடுகிறார்கள் என்றும் பைத்தியக் காரி கூறினாள். மண்டலின் மணப் பெண்களாக ஆக நினைக்கும் பெண்கள், மறுக்கும் பெண்கள்மீது ஆட்சி புரிகிறார்கள். பெண் களின் பொறாமை, பேராசை, கொடுமை முதலியவற்றால் நொந்து போய் பெண்கள் மண்டலியைச் சேர்ந்தவர்களின் விருப்பப்படி செயலாற்றத் தொடங்குகிறார்கள். அவ்வாறு நொந்துபோன பெண்கள்தாம் மாஜிஸ்டிரேட்டுக்கு எதிரில் திருமணம் செய்து கொள்வதாகப் பாசாங்கு செய்து சட்டத்தை ஏமாற்றித் தப்பி விடுகிறார்கள். தனவதி தேவியும் பைத்தியக்காரி கூறியபடி கித்தோவின் அத்தை என்று சொல்லிக்கொண்டே மற்றொரு பெண்ணுந்தான் மண்டலியைச் சேர்ந்த பெண்களுக்குத் தண்டனை, பரிசு ஆகியன அளிக்கக்கூடிய சட்டங்களை விதிக்கிறார்கள். வைத்தியர் தனவதி, செயலாளரைவிட மிகப் பயங்கரமான கொடு மைகள் புரியக்கூடியவள் என்று சஜ்ஜன் கேள்விப்பட்டிருந்தான். செயலாளரும் தனவதியுமே இந்த அக்கிரமக் கூட்டத்திற்கு அரசனாகவும் அரசியாகவும் இருந்தார்கள். தனவதியின் கிழக் கணவன் ரொட்டித் துண்டைத் தின்றுவிட்டு வேலைக்காரர்களைப் போல் அங்கே விழுந்து கிடந்தான் என்றும் அவன் கேள்விப் பட்டான்.

இதையெல்லாம் கேட்ட சஜ்ஜனின் உள்ளம் பொங்கிற்று. எப்படியாவது இந்த ரகசியத்தை வெளிப்படுத்த வேண்டுமென்று அவன் விரும்பினான். கர்னலிடமும் அவன் இதைப்பற்றிப் பேசினான். அவனும் மண்டலியைப் பற்றி பலவாறான அவதூறுகளைக் கேள்வியுற்றிருந்தான். கர்னல், அந்தச் செயலாளன் ஓர் ஏமாற்றுக்காரன் என்றும், அந்தக் கூளத்தில் கைவிட முயலாதே என்றும் சஜ்ஜனைக் கடுமையாக எச்சரித்தான்.

ஆனால் சஜ்ஜனின் உள்ளத்தில் ஒரு தீ மூண்டுவிட்டது. அவன் அந்த ரகசியத்தை அம்பலப்படுத்துவதில் முனைந்துவிட்டான்; அவன் தன் எண்ணத்தை யாரிடமும் கூறவில்லை. சஜ்ஜன் வனகன்யாவின் பெயரில் இன்னும் இரண்டு முறை இருபத்தைந்து—இருபத்தைந்து ரூபாய் அனுப்பி வைத்தான். செயலாளர் தானம் செய்யும் இந்தப் புதுக் குடும்பத்தின்பால் இயற்கையாகக் கவர்ச்சியடைந்தார். அவர் அடிக்கடி வரத் தொடங்கினார். ஒரு முறை கன்யாவை தன் மண்டலிக்குச் சொற்பொழிவாற்றவும் அழைத்துச் சென்றார். ஒருநாள் முன்னதாகவே நேரத்தை நிச்சயித்துக் கன்யா தாயியின் வீட்டில் நடக்கும் தன் பள்ளிக்குச் சென்றிருக்கும்பொழுது சஜ்ஜன், அவளது பெயரால் செயலாளரை வீட்டிற்கு அழைத்தான். அவரும் வந்தார். சஜ்ஜன் அப்பொழுது மது அருந்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்து கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் செயலாளரை அங்கேயே கூப்பிட்டு, ''எங்கே இவ்வளவு தூரம் வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

''நேற்று நடுப்பகலில் எனக்கு அம்மா அனுப்பிய செய்தி கிடைத்தது. அவர்கள்தாம் என்னை இங்கே இந்த நேரத்தில் அழைத்திருந்தார்கள்'' என்று செயலாளர் கூறினார்.

''அவர்கள் இப்பொழுது இல்லை. அவசர வேலையாக எங்கேயோ போயிருக்கிறார்கள். வந்து விடுவார்கள். உட்காருங்கள் நீங்களும் அருந்துங்களேன்!''

''இல்லை, இல்லை நான் வெற்றிலை, புகையிலையைத் தவிர வேறு எந்த பானமும் ஏற்றுக் கொள்வது கிடையாது.''

''அட...சரிதான் ஐயா! சுவர்க்கத்தில் இருக்கிறீர்கள்; ஆனாலும் அமிருத பானம் செய்வதில்லையாக்கும்!'' சிறிது நேரத்திற்குள் சஜ்ஜன் செயலாளரைத் தன் சொற்களால் கவர்ந்து விட்டான், அவனுடைய பேச்சுத் திறனைக் காட்டிலும் அவனுடைய செல்வச் சூழ்நிலைதான் இதற்குக் காரணமாக இருந்தது. வனகன்யாவின் பாதையும் சஜ்ஜனின் பாதையும் வேறு என்றும், தான் சமுதாயப் பணி என்ற நாடகம் வனகன்யாவிற்காகப் போடுவதாகவும் அவருக்கு நம்பிக்கை தோன்றும்படிக் கூறினான். சஜ்ஜன் தன்னைப்

பற்றிப் பலவாறான காதற்கதைகளை ஜோடித்துக் கூறினான். அந்தப் பகுதியில் இதற்காகவே ஸ்டூடியோ திறந்திருப்பதாகவும், அங்கே தான் பலவாறாக இன்பங்களை நுகர்ந்ததாகவும் அவன் கூறினான். அவன்தான் மறைவாக இன்பம் பெறுவதற்காக நூற்றுக்கணக் கான ரூபாய்களைச் செலவு செய்வதாகவும் குறிப்பிட்டான்.''

செயலாளர் நெகிழ்ந்து போனார். தனவதியும் அவனுடைய வீட்டைப் பார்த்திருந்தாள். வனகன்யாவைவிட அதிகமாக அவர்கள் சஜ்ஜனுடன் தொடர்பு கொள்ளத் தொடங்கினார்கள்.

ஒருநாள் தனவதி சஜ்ஜனைத் தன் வீட்டில் விருந்திற்கு அழைத் தாள். சஜ்ஜன் முதலில் தயங்கினான். பின்னர் யோசனை செய்த பிறகு அங்கே சென்றான். அன்று அவர்களுடைய தந்திரங் களெல்லாம் அவனுக்குப் புரிந்துவிட்டன. ஸ்ரீமதி சுந்தர் பீபீ தாதவ்ய ஔஷதாலயத்திற்கும், பெண்கள் சேவா மண்டலிக்கு மிடையில் இருக்கும் 'பிரண்ட்ஸ் டிரேடிங் கார்ப்பொரேஷனின்' கட்டிடம் உண்மையில் ஆண்கள் வந்து போவதற்கு வசதியான பாதையாக இருந்தது. 'பிரண்ட்ஸ் டிரேடிங் கார்ப்பொரேஷன்' 'ஷேர்' மார்க்கெட்டோடு தொடர்புள்ள குழுவாகும். மண்டலைச் சேர்ந்த ஒரு பணக்காரரின் சில வேலையாட்கள் அங்கே வேலை செய்து வந்தார்கள். அங்கே 'ஷேர்' வியாபாரம் என்பது பெயருக் குத்தான் நடந்தது. அதை வைத்துக்கொண்டு நாள் முழுவதும் மக்கள் வந்து போவதற்கு அந்தக் காரியாலயம் ஒரு சுலபமான பாதையாக அமைந்திருந்தது. சஜ்ஜன் அந்த வழியாகத்தான் உள்ளே போனான். கீழேயுள்ள முற்றம் போன்ற இடத்தில் பெரும்பாலும் ஒன்றுமில்லாமல் இருந்தது. மேலே மரப் பாதைக்கு அப்பால் திறந்த மாடி காணப்பட்டது. எதிரில் மூன்று கதவுகள் கொண்ட ஓர் அறை இருந்தது. அது உட்புறமாக மூன்று சிறு அறைகளாகச் செங்கற் சுவரால் பிரிக்கப்பட்டிருந்தது. சுந்தர் பீபீ தாதவ்ய ஔஷதாலயம் 'பிரண்ட்ஸ் டிரேடிங்கார்ப்பெரேஷன்' பெண்கள் சேவா மண்டலி மூன்றும் மேற்புறமாக இரண்டு பக்கத் தில் கதவுகளால் பிரிக்கப்பட்டு ஒரு கட்டிடமாகக்கட்டப்பட்டிருந் தன. திருமதி தனவதிதேவி வைத்தியர், சஜ்ஜனை மண்டலியின் கட் டிடத்திலுள்ள ஓர் அறைக்கு அழைத்துச் சென்றாள். அங்கே இருந்த வாறு அவன் தையல், நெசவு முதலிய வகுப்புகளில் வேலைசெய்யும் பெண்கள் நன்றாகப் பார்க்க முடிந்தது. சிறிது நேரத்தில் தனவதி தேவி மறுபடியும் வந்தாள். அவள் அவனை மற்றொரு சுவரில் அமைந்திருந்த துவாரத்திற்கு அழைத்துச் சென்றாள். சுவருக்குப் பின்புறத்து அறையில் எட்டு, பத்து பெண்கள் கூடியிருந்தார்கள். தவறான பாதையில் செல்லும் பெண்கள் தேநீர் அருந்தும் நேரம் அது. அங்கே வருபவர்களுக்கு அந்த நேரத்தில்தான் துவாரத்து

வழியே பெண்களைக் காண்பிப்பது வழக்கம். அங்கே வருபவர் எந்தப் பெண்ணை விரும்புகிறாரோ அவளை அவருடைய பணியில் ஈடுபடுத்துவது வழக்கம். சஜ்ஜன் அவளுடைய கூற்றுக்களை நின்ற வாறே கேட்டுக் கொண்டிருந்தான். அவள் குடும்பம், கணவன் மார், உறவினர்கள் முதலியன பற்றியெல்லாம் பேசிக் கொண் டிருந்தாள். அந்தப் பெண்கள் வீட்டில் கூறும் பொய்ப் பாசாங்கு களைப் பற்றியெல்லாம் கூறினாள். அவை ரகசியக் கேலிகளாக இருந்தன. தனவதிதேவி வைத்தியா சஜ்ஜனோடு மிகவும் நெருங் கியவாறு நிற்க முயற்சி செய்தபடி மிகவும் சுவாரஸ்யமாக அந்தப் பெண்களைப் பற்றிக் கூறிக்கொண்டிருந்தாள். இரண்டு மூன்று பெண்களைப்பற்றி அவர்களுடைய கணவன்மார் கிழவர்கள் என்று கூறினாள். ஒரு பெண்ணின் வறுமையைப் பற்றிச் சித்திரித்தவாறு, 'பல அப்பாவிப் பெண்களுக்குச் சாப்பாடே இங்கேதான் கிடைக் கிறது; நாங்கள் மிக மரியாதையுடன் உடல், உள்ளம், பணம் ஆகியவற்றின் பசியைத் தணிக்கிறோம்; இது ஒரு பெரும் புண்ணிய காரியமாகும்' என்று நான் கூறுகிறேன்'' என்றாள்.

தனவதிதேவியிடம் சஜ்ஜனுக்குப் பயம் தோன்றலாயிற்று, அவன் அன்று எந்த 'அழகி'யையும் கூப்பிடவில்லை.

சஜ்ஜன் தொடர்ந்தாற்போல் மூன்று நான்கு நாட்கள் அங்கே போய்க் கொண்டிருந்தான். தனவதிதேவி தன்னிடம் நெருங்கு வதால் உண்டான துன்பத்தையும் அவன் பொறுத்துக்கொண் டான். அவளைச் சந்தோஷப்படுத்துவதற்காக அவள் கேட்டபடி இருநூற்றைம்பது ரூபாய் விலையுள்ள ஒரு கடிகாரமும் பரிசாகக் கொடுத்தான்.

இந்த மூன்று நான்கு நாட்களில் சஜ்ஜனுக்கு தன்னைப்பற்றியும் சமுதாயத்தைப்பற்றியும் நல்ல அநுபவங்கள் கிடைத்தன. தன்னைப்பற்றி ஏற்பட்ட புது அநுபவம் அவனுக்கே வியப்பை அளித்தது. சில மாதங்களுக்கு முன்னால் இதே சஜ்ஜன் மேல் வாரியாக இப்படிப்பட்ட வெறுக்கத்தக்க செயல்களைக் குறை கூறினாலும் உள்ளத்திற்குள் அவற்றில் ஒரு கவர்ச்சியை உணர்ந்து வந்தான். ஆனால் இன்று அதே காட்சி நாள் முழுவதும் அவனைக் கோபத்தால் துடிக்கச் செய்தது. கன்யாவை மணம் செய்து கொள்வதற்கு முன்பு அவனுடைய உள்ளம் சஞ்சலமாக இருந்தது. இப்பொழுது திருமணத்திற்குப் பிறகு அவனுக்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டது. அவனுடைய கருத்துக்கள் உயர்ந்தன. அவை அவனுடைய உள்ளத்தைப் புதிய முறையில் மாற்றியிருந்தன. மண்டலிக்கு அடிக்கடி வந்துபோன பொழுது அவன் இதனை உணர்ந்தான். வனகன்யாவின் உருவத்தில் பெண்ணின் சுய மரியாதை, நன்னடத்தை, தியாகம் என்ற தத்துவங்களுக்கான

புதிய கோட்பாடு அவனுடைய வாழ்க்கையில் இடம்பெற்று அவனை உயர்ந்தவனாக ஆக்கிவிட்டது. தனது தாயைத் தவிர, சஜ்ஜன் வேறு எந்தப் பெண்ணையும் மதித்ததே கிடையாது. ஆனால் அவனுடைய மனைவி தனது நடத்தையால் அதை எளிதில் பெற்று விட்டாள். வனகன்யாவுக்கு மதிப்பு அளித்ததே அவனுடைய வாழ்வில் பெரும் புரட்சியாக ஆகிவிட்டது. இளமையும் அழகும் சேர்ந்த பெண்ணைப் பற்றிய அவனுடைய எண்ணமே மாறி விட்டது. இந்த நான்கு நாட்கள்வரை மண்டலிக்கு வந்ததால் சஜ்ஜன் தன்னைப்பற்றி இந்த ஓர் உயர்ந்த அறிவைப் பெற முடிந்தது. தனது முந்திய அநுபவங்களோடு மண்டலியின் காட்சிகளை இணைத்து, பெண்கள் அந்தப் பாதையில் வருவதற்கான காரணங்களையும் அவன் உணர்ந்தான். சஞ்சல ஆசைகொண்ட பணக்காரப் பெண்கள் ஆசையைப் பூர்த்திசெய்து கொள்ள அங்கே வருகிறார்கள். அவர்களுடைய கணவன்மார்கள் அவர்களை ஏமாற்றுகிறார்கள். அவர்கள் தங்கள் கணவன்மார்களுக்கு வஞ்சனை செய்கிறார்கள். வேறு வழியின்றி வாழ்க்கை நடத்தும் கைம் பெண்கள் சிறிது சிறிதாகப் பேராசைக்கு வசப்பட்டு அங்கே வருகிறார்கள். நமது சமுதாயத்தில் கைம் பெண்கள் செல்வ மற்றும், உற்றார் உதவியில்லாமலும் இருக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் மதச் சொற்பொழிவுகளைக் கேட்பது, தையல் கற்பது, கூலிவேலை செய்வது என்ற சாக்குகளைக் கொண்டு அங்கே வருகிறார்கள். குறைந்த வருமானமுள்ள மத்திய வர்க்கத்தைச் சேர்ந்த இளம் பெண்கள் காலப்போக்கால் ஏராளமான இன்பக் கனவுகளைக் காண்கிறார்கள். பிறந்த வீட்டில் இருக்கும்பொழுது அவர்கள் கணவனின் பணத்தைக்கொண்டு இன்பமாக இருக்கலாம் என்று எண்ணுகிறார்கள். ஆனால் அது பெரும்பாலும் எல்லோருக்கும் கிட்டுவதில்லை. பெரும்பாலான இளம் பெண்கள் தங்கள் கணவரின் பொருளாதார எல்லைக்குள் கட்டுப்பட்டுத் துன்பத்தோடு வாழ்கிறார்கள். நாள் முழுவதும் அவர்கள் வீட்டில் சண்டைபோட்டுக் கொண்டு அதிருப்தியோடு வாழ்கிறார்கள். சினிமாவின் நவீனப் போக்கினால் உறுதியற்ற அவர்களுடைய உள்ளம் சினிமாவின் 'ஹீரோ'வை நாடுகிறது. தங்களுடைய கணவன்மார்கள்போல் இல்லாமல் தங்கள் அழகிலும் குணத்திலும் மயங்கி தங்களை இன்பத்தில் இருக்கச் செய்யக்கூடிய 'ஹீரோ'வை அவர்கள் தேடுகிறார்கள் என்பதைச் சஜ்ஜன் உணர்ந்தான். பாட்டு, ஆடல் முதலியன கற்கும் பெயரில் தங்கள் உணராத சிற்றின்ப ஆசைநிறைந்த பெண்களும் வலையில்சிக்கி மண்டலிக்குள் அழைத்துவரப்படுகிறார்கள். பணக்குறைவால் மணமாகாத வயதுவந்த இளம் பெண்களும் அங்கே வருகிறார்கள். ஒரு முறை

தவருன வாழ்வில் சிக்கிவிடுவதால் பெண்ணின் நடத்தை புரட்சி கரமாக மாறிவிடுகிறது. சதி நிறைந்த சூழ்நிலையாக இருப்பதால் பல பெண்களில் கூட்டுமனப்பான்மை தாளுகவே தோன்றி விடுகிறது. தங்கள் கூட்டத்தில் அதிகமான பெண்களைச் சேர்ப் பதற்கு அவர்கள் முயன்றவாறு இருக்கிருர்கள். பல பெண்கள் சாதுக்களாக இருந்தாலும் பலவீனமான உள்ளத்துடன் இருப் பதால், ஒரு முறை சிக்கிய பிறகு வாழ்வு முழுவதும் அந்த நரகத் திலிருந்து வெளிவர வழிதெரியாமல், நாள் முழுவதும் உள்ளத் திலேயே நொந்துகொண்டு வாழ்ந்து வருகிருர்கள். இவற்றை யெல்லாம் சஜ்ஜன் கவனித்தான்.

இந்த நான்கு நாட்களில் சஜ்ஜன் தன் உள்ளப் போராட்டத் திலேயே மூழ்கியிருந்தான். பெயர், புகழ், ஒழுக்கம், நேர்மை என்ற பளபளக்கும் கொள்கைகளெல்லாம் அவனுக்கு அழுக்குச் சாக்கடைபோல் தோன்றின. பெண்கள் சேவா மண்டலியின் மாடியிலும், வாயிலிலும் இருக்கும் பெயர் பலகைகளுக்கு இருக் கும் மதிப்புத்தான் இந்தக் கொள்கைகளின் மதிப்பாகும். சித்திரா ராஜ்தான் முதலாக தனவதிதேவி மற்றும் மண்டலிக்கு வரும் பெருமை வாய்ந்த குடும்பங்களின் பெண்கள்வரை எல்லோரும் அவனுக்குப் பெண்ணுருவில் வேசிகளாகத் தோன்றினுர்கள். அப்படியிருக்க அலங்கரிப்பட்ட தெருக்களில் பல யுகங்களாக அவைக்களத்தின் நடுவில் திரௌபதியைப்போல் வாழவைக்கப் பட்டிருக்கும் வேசிகளை மட்டும் தீண்டத்தகாதவர்கள் என்று கருத அவர்கள் மட்டும் என்ன தவறு செய்துவிட்டார்கள்? மேல்வாரி யாக மதம், தூய்மை, நல்லொழுக்கம் என்றெல்லாம் கூறிக் கொண்டு மறைவாக வேசித்தொழில் புரியும் இந்தப் பெரிய புகழ் வாய்ந்தவளை ஏன் அம்பலப்படுத்தக்கூடாது? மதிப்பு நிறைந்த சமுதாயந்தானே தன் மதிப்பைச் சூறையாட இந்த இடங்களை உண்டாக்குகிறது? இப்படிப்பட்ட பொய்ப் பெருமையை ஏன் வெளிக்கொணரக்கூடாது? என்றெல்லாம் அவனுடைய உள்ளத் தில் போராட்டம் மூண்டிருந்தது. சமுதாயத்தின் அழுக்கை வெளிப்படுத்துவதால் சமுதாயத்திற்கு நலன் ஏற்படுமா? அப்படிச் செய்வதால் அச்சம், நாணம் முதலியன மறைந்துவிடாவா? உயர்ந்த கொள்கைகளின் அச்சத்தால் மறைமுகமாகச் செய்யும் செயலைச் சமுதாயம் பின்னர் நாணம் விடுத்து வெளிப்படையாகச் செய்யத் தொடங்கிவிடும். அப்பொழுது அந்த உலகம் பயங்கர மாக ஆகிவிடும் என்று அவன் உள்ளத்தினுள் போராடிக் கொண் டிருந்தான்.

கர்னல் அந்த அழுக்கில் கைவிடக்கூடாது என்று சஜ்ஜனை எச்சரித் திருந்தான். ஆனுல் சஜ்ஜன் மண்டலியைப் பற்றித் தெரிந்து

கொண்டு பாபாஜீயின் தூண்டுதலாலும் போலீஸின் உதவியாலும் அந்த வேசி விடுதியை அழிக்க உறுதி கொண்டுவிட்ட பின், கர்னலுக்கு எல்லாவற்றையும் தெரிவித்தான். பிறருடைய துன்பத்தைக் கேட்டால் கர்னலின் உள்ளம் உடனேயே நெகிழ்ந்துவிடும். அவன் உடனே அவனுடன் உழைக்கத் தயாராகிவிட்டான். சஜ்ஜனுக்குப் பல அதிகாரிகளைத் தெரியும். ஆனால் அவர்களுடன் அவன் பழக்கம் கர்னலைப்போல் அவ்வளவு நெருக்கமானதன்று. கர்னல் எல்லோருக்கும் பரிசுகள் அனுப்புவது வழக்கம். அவன் அவர்களை அடிக்கடி சந்திப்பதும் உண்டு. கர்னலிடம் சஜ்ஜன், "போலீஸ் சூபரெண்டை இன்றே போய்ப்பார்; நானும் வருகிறேன்" என்று கூறினான்.

"நீ நேரடியாக மந்திரியையே போய்ப் பார்ப்பது நல்லது என்று நான் நினைக்கிறேன். உனக்குத் தெரியாது. இவ்வாறான சதிகளில் போலீஸ் சூபரெண்டு வரை எல்லோரும் உட்கையாக இருக்கிறார்கள். நான் நிகழ்ச்சியைக் கூறுகிறேன், கேள்! அலீகட்டில் இது மாதிரி பெண்கள் விற்கப்படும் ஓரிடம் இருந்தது. அந்தச் சதியில் ஐந்து உதவி போலீஸ் சூபரெண்டுகளும் ஒரு எஸ். பி. யும் சேர்ந்திருந்தார்கள். யூ. பி. யைச் சேர்ந்த ரகசியப் போலீஸ் அந்தக் கேஸை உளவு செய்து கண்டு பிடித்தது," என்று கர்னல் கூறினான். அதைக்கேட்டுச் சஜ்ஜனுக்கு வியப்பு ஏற்பட்டது. "அரசாங்கம் அதில் என்ன செய்தது?" என்று அவன் கேட்டான்.

"எல்லோரையும் வேலையிலிருந்து நீக்கிவிட்டது. வேறு என்ன செய்வது? போலீஸ் சூபரெண்டை மட்டும், அவருடைய ராஜீநாமாவை வாங்கிக் கொண்டு வேலையைவிட்டு அனுப்பிவிட்டது. அதனால்தான் நான் சொல்கிறேன்..."

"பாரப்பா! மந்திரியிடம் போகாமல் இவர்களுடைய உதவியாலேயே வேலையைச் செய்வது நல்லது என்று நான் கருதுகிறேன். இவர்களில் எல்லோருமே இப்படி இருப்பார்கள் என்று ஏற்றுக்கொள்ள நான் தயாராயில்லை. போலீஸில் பொறுப்பற்றவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள் என்பது உண்மைதான். ஆனாலும் எல்லோருமே இப்படி இருக்க முடியாது. அவர்களுக்கும் தங்களுடைய தொழிலைப்பற்றிக் கவலை இருக்கத்தானே செய்யும்!" என்று இடைமறித்துச் சஜ்ஜன் கூறினான்.

"ஆமாம்; அதுவும் சரிதான். நல்லவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் அவர்களின் எண்ணிக்கை குறைவு, போலீஸ் துறையே இன்று தன் கொள்கைக்கு முற்றிலும் மாறாக மனிதனை மிருகமாக்கிவிடுகிறது!"

"ஆனாலும் நேராக எஸ். பி.யைப் போய்ப் பார்க்கலாம் என்று நான் கருதுகிறேன். ஒவ்வொரு காரியத்திலும் சிறப்பாக இப்படிப்

பட்ட காரியங்களில் மிகவும் மேலிடத்திலிருந்து உதவி பெற்றுச் செயலாற்றுவது என்பது தவருகும். நாம் மனிதனது நல்லெண்ணத்தின் உதவி கொண்டு செயலாற்ற வேண்டும்.''

கன்யாவிற்கு இன்னும் இதுபற்றிய விவரம் ஒன்றும் தெரியாது.

இன்று தனவதி தேவி அழகிய, மகிமை பொருந்திய கலைஞருக்கு 'ஊக்குவிக்கும் பொருள்' ஒன்றை அளிப்பதாக வாக்களித்துவிட்டாள். இது எல்லோருக்கும் கிட்டக்கூடியதன்று. மண்டலியிலுள்ள மற்ற ஆண்-பெண் ஜோடிகளையும் தனவதி 'கலைஞரு'க்குக் காண்பிப்பதாகக் கூறினுள். சஜ்ஜன், தனவதி தேவியைப் பெரிதும் ஆட்கொண்டுவிட்டான். இந்த நிறுவனத்தில் எத்தனையோ தனவந்தர்கள் வருகின்றனர்; படித்தவர், சில வக்கீல்கள், வியாபாரிகள் எல்லோரும்தாம் வருகிருர்கள். ஆனுல் சஜ்ஜனைப் போன்ற பெயர் பெற்றவன், தனவந்தன், படித்தவன்—அழகு படைத்த ஓவியக்காரன் இந்த மண்டலியில் தனவதிக்கு அறிமுகமானதில்லை. பேச்சில் ஒரு மிடுக்கு, பெண்ணைத் தன்னிடமிருந்து ஓரடி தள்ளிவைத்திருந்த போதிலும் மயக்கும் சக்தி படைத்தவன் பாவச் செயல் புரிந்துவந்த பழைய குற்றவாளி சஜ்ஜன். தனவதியின் உள்ளத்தில் கனவை எழுப்பி எழுப்பி மோகத்தையும் எழுப்பி வந்தான். தனவதிதேவி செயலாளருடன் சஜ்ஜனுடைய அரண்மனையைப் போன்ற வீட்டையும் பார்த்துவிட்டு வந்தாள். சேட்டுகளின் அழகு அழகான வீடுகளைத் தனவதி பல தடவைகள் பார்த்திருந்தாள். ஆயினும் கண்ணைக்கவரும் சிலைகள், சிற்பங்கள், விலையுயர்ந்த கம்பளங்கள், மிகச் சிறந்த நகாசு வேலைகள் செய்யப்பட்ட பொருள்கள், மனத்தைக்கவரும் ஓவியங்கள், பல நாட்டு 'க்யூரியோக்கள்' (அரிய கலைப்பொருள்கள்) இவையாவும் எந்தத் தனவந்தரின் வீட்டிலும் காணக்கிடைக்கவில்லை. இவற்ருல் ஆட்கொள்ளப்பட்ட தனவதி தன்னையும் அறியாமல் சஜ்ஜனுடைய சூழ்ச்சிக்கு உறுதுணையாக மாறிவிட்டாள்.

தினமும் வருவதற்குச் சற்று முன்னதாகவே அன்று சஜ்ஜன் வந்துவிட்டான். தனவதி சஜ்ஜனைத் தன் அறையிலேயே உட்கார ஏற்பாடு செய்தாள். அவள், அவனை உட்கார வைத்துவிட்டுச் சென்றுவிட்டாள்.

சஜ்ஜன் தனிமையில் அறையில் அமர்ந்தபடி, பலவிதமான கவலைகளில் சிக்குண்டு கிடந்தான். நல்லன, அல்லாதன என்று பலவிதமான கவலைகள்! இன்றைய நிலை சற்று வேறுதான். ஒவ்வோர் அங்குலத்திற்கிடையே ரகசிய போலீஸ் இருந்தது. குறிப்பிட்ட நேரத்தில் சஜ்ஜனிடம் கட்டளையைச் சங்கேதமாகப் பெற்றவுடன் போலீஸ் இந்த நரகத்து ரகசியத்தை அம்பலப்படுத்திவிடும். சஜ்ஜனைத் தம் நண்பனுக ஆக்கிக்கொண்டு அமைச்சரும் தனவதி

யும் தம் சுயரூபத்தை அவனுக்குக் காண்பித்து விட்டனர். அவர்கள் இன்று சஜ்ஜனுடைய சுயரூபத்தைக் காணப் போகின் றனர். அவன் இன்று நேருக்கு நேராகத் தனவதியைப் பார்க்கக் கூட இயலாத நிலையில் இருந்தான். அப்படி ஒரு சங்கோஜம் அவனுக்குள் இருந்தது.

எதிரேயுள்ள அறையில் ஆன்மீகத்தைப் பற்றிய சொற்பொழிவு சஜ்ஜனுடைய செவிகளில் பட்டது. செயலாளர் பாகவதத்தைப் படித்துக் கூறினர்: "பாகவதத்தில் கோபியரின் ஆடைகளைக் கண்ணபிரான் அளிக்கும் லீலை மிக அழகாக வர்ணிக்கப் பட்டுள்ளது. வேய்ங்குழல் ஊதியபடியே கோபியரின் ஆடைகளைக் கண்ணபிரான் எடுத்துக் கொண்டு கதம்ப மரத்தின்மேல் ஏறிவிட் டார். கோபியர் உடையின்றி நீரில் மூழ்கிக் குளித்துக் கொண் டிருந்தனர்..."

தனவதி சஜ்ஜனுடைய உள்ளத்தைக் கவருவதற்காக இரண்டு மூன்று புத்தகங்களைக் கொடுத்துச் சென்றாள். சிறிது நேரத்தில் அமர லோகத்துக் காட்சிகளை அவள் சஜ்ஜனுக்குக் காண்பிப்ப தாகவும் கூறிச் சென்றாள். புத்தகங்கள் குண்டுகளைப் போன்று பயங்கரமானவை. காமலீலைகளைப் பற்றி வெளிப்படையாக வருணிக்கப்பட்ட பல புத்தகங்களைச் சஜ்ஜன் இதற்கு முன்பும் படித்திருந்தான். இன்று ஹிந்தியில் அப்படிப்பட்ட புத்தகங்களைப் பார்த்த அவன் அதிர்ச்சியடைந்தான். தன் பயணங்கள் நிறைந்த வாழ்க்கையில் பல ஓட்டல்களில் இப்படிப்பட்ட இலக்கியத்தை அவன் படித்திருந்தான். ஆனால் அவை யாவும் ஆங்கிலத்தில் அல்லவா இருந்தன! ஹிந்தியில் இப்படிப்பட்ட புத்தகங்களைப் பார்த்து அவனது மனம் ஏன் வேதனையுற வேண்டும்? காரணம் அவனுக்கே தெரியவில்லை; ஒரு புத்தகத்தின் இரண்டு பக்கங்களைப் படித்ததுமே அவனுடைய ரத்தம் கொதித்தது. அவன் புத்த கத்தை மூடிவிட்டான். ஆன்மீகச் சொற்பொழிவு அவனுடைய செவிகளில் விழுந்தது. கண்ணபிரான் கோபியரின் ஆடைகளைக் கவர்ந்ததுபற்றி மிகவும் அன்புடன் செயலாளர் பேசிக் கொண் டிருந்தார். சஜ்ஜனுடைய சினம் எல்லையை மீறிவிட்டது. இந்தச் செயலாளர் லட்சியத்துடனு வியாசர் பாகவதத்தின் இந்த நிகழ்ச் சியை எழுதியிருப்பார்? கண்ணபிரானைக் காமுகனுக இவர் வர்ணிக் கிறுரே, அப்படி அவர் உண்மையில் காமுகனுக இருந்திருந்தால் பல நூற்றுண்டுகள் கழிந்த பின்பும் மக்கள் கண்ணனை வழி படுவார்களா? கண்ணன், ராதை, கோபியர்—ஆயர்பாடி எல்லா வற்றுடனும் சஜ்ஜன் ஈடுபாடு கொண்டவன். மதுரா, பிருந்தா வனம், கோவர்த்தனம் இங்கெல்லாம் அவன் சென்று திரும்பியதி லிருந்து இந்தப் புராணப் பாத்திரங்களின் மேல் சொல்லொணுத

பற்றுத் தோன்றிவிட்டது. கண்ணபிரானை அவன் மிகவும் பக்தியுடன் போற்றி வந்தான். வியாசர், ஜயதேவர் மற்றும் பல கவிஞர்கள் ஆத்மா—பரமாத்மாவின் உறவை ஏன் இவ்விதம் ரகசியக் காதல் முறையில் சித்தரிக்க வேண்டும் என அவன் சிந்திக்கலானான். கஜுராஹோ, ஜகந்நாதபுரி போன்ற இடங்களில் காமசாஸ்திரப்படி சில சிற்பங்கள் ஏன் நிறுவப்பட வேண்டும். இந்த ரகசிய ஆபாசக் கதைப் புத்தகங்கள் எந்தக் காரணத்தால் சட்டத்திற்கு மாறானவை என்று விலக்கப்படவேண்டும். அதே புரி, கஜுராஹோவிலுள்ள சிற்பங்களை ஏன் அழிக்கவில்லை. ஆயிரமாண்டுகளுக்கும் மேலான அந்தச் சிற்பங்கள் யாருக்கும் தீயவை என ஏன் தோன்றவில்லை? இந்தக் கோவில்களை யாரும் வெறுத்து இடிக்கவில்லையே? இந்தச் சிற்பங்களை எவரும் தகர்த்தெறியவில்லையே! அது ஏன்? புரியிலும் கஜுராஹோவிலும் நிறுவப்பட்ட சிற்பங்கள் சஜ்ஜனுடைய உள்ளத்தை உண்மையில் கிளுகிளுக்கச் செய்த போதிலும் அவன் அவற்றிலிருந்த கலை நுட்பங்களையே அதிகமாக ரசித்தான். சிற்பங்கள் உயிர்ப் பொம்மைகளைப் போன்று நம்மை ஆட்கொள்ளும் சக்தி வாய்ந்தவை. சஜ்ஜன் இப்படி எண்ணலானான் 'என் ஆர்வம் வேறு. ஆனால் சராசரி மனிதனால் எவ்விதம் கலையையும் உயிர்ப்புச் சக்தியையும் கண்டு மயங்க முடியும்? தாய்—தந்தை, மகன்—மகள், புனிதமான எண்ணங் கொண்ட சான்றோர் எல்லோருந்தாம் அங்கே போகின்றனர்; கோபியருடைய ஆடையைக் கண்ணன் அபகரிக்கும் லீலையை எத்தனையோ மக்கள் ஆடிப்பாடிக்கொண்டு தான் கூறுகின்றனர்—இதற்குக் காரணந்தான் என்ன? மஹிபால் அவனிடம் அடிக்கடி கூறுவதுண்டு; அவனும் எங்கோ படித்திருக்கிறான். பழைய வடமொழி இலக்கியத்தில், வால்மீகி ராமாயணத்தில்கூட காமம் பற்றிய வர்ணனை வெகு விரிவாகத்தான் இருக்கிறது; வெளிப்படையாகத்தான் கூறப்பட்டிருக்கிறது. இதற்கு என்ன காரணம்? ஒருபுறம் நம் பகுத்தறிவு இதை உதறித் தள்ளுகிறது; மறுபுறம் நமக்கு இதில் சொல்லொணாத நாட்டமும் இருக்கிறது. உண்மை எது? ஆண் பெண்ணின் இந்த உடலுறவு உண்மையானது; ஆனால் சமுதாயத்தின் இந்தச் சிறந்த உறவைக் கொண்டு ஒவ்வொரு மனிதனும் ஏன் இப்படி மண்டையைக் குழப்பிக்கொள்கிறான்? ஒரே வாயினால் இது நல்லது, தீயது என்று இரண்டுவிதமாகக் கூறிவிடுகிறோம். பாரதத்தில் மட்டுமில்லை, உலகம் முழுவதிலும் பல நூற்றாண்டுகளாக இந்த வேடிக்கை நடந்துகொண்டுதான் இருக்கிறது. இதன் பொருள்தான் என்ன? இது பொருளாதார, அரசியல் பிரச்னைகளைவிடக் குறைந்ததா என்ன? ஆண்—பெண்ணின் காமம்பற்றிய பிரச்னை அரசியல்,

பொருளாதாரப் பிரச்னைகளுக்கு அடிப்படைக் காரணமாக எதிர்ப்படுவது கிடையாதா என்ன?

வங்கப் பஞ்சத்தின்போது சஜ்ஜன் கல்கத்தா சென்றிருந்தான். அங்கு அவன் தன் விருப்பத்திற்கேற்ற இடங்களைப்பற்றிய விவரங்களைச் சேகரிக்க முயன்றபோது, பஞ்சம் நிலவிவந்த இடத்திலிருந்து விலைக்கு வாங்கப்பட்ட பெண்டிர் பலரைக் களிப்பிக்க அங்கு கொண்டு வரப்பட்டிருந்தனர். எத்தனையோ ரிக்ஷாக்காரர்கள் கட்டை விரல்களில் கட்டியிருந்த சிறு சதங்கைகளையாட்டியபடி, "ஐயா வீட்டுக்கா? ஐயா வீட்டுக்கா?" என்று கூச்சல் போட்டுக் கொண்டிருந்தனர். உலகத்தில் வெளிப்படையாகக் காணப்படும் விலைமாதரைத்தவிர இதையே தொழிலாக நடத்தும் கௌரவமான கூட்டத்திற்குக் குறைவா என்ன?—இவர்களுடன் பொருளாதாரப் பிரச்னை தொடர்பு கொண்டில்லையா? ஆண்—பெண் இவர்களுடைய உறவைப் பொருட்டாகக் கொண்டு அரசியல் துறையில் எத்தனை அமளிதுமளிகள் நேர்ந்திருக்கின்றன! பாரதத்தில் அரசியல் விரோதிகளைப் பிடித்துக் கைவசமாக்கிக் கொள்வதற்காக வென்றே இளமையிலிருந்து விஷத்தைக் கொடுத்துக் கொடுத்து அழகிய நங்கையரை விஷ கன்னிகளாக ஆக்கிவைத்தனர். இந்த விஷ கன்னிகளுக்குப் பாடவும் ஆடவும் ஆடவரை மயக்கவும் மிகச் சிறந்த பயிற்சியளிக்கப்பட்டு வந்தது. இந்த விஷ கன்னிகளை முத்தமிடுபவன், இவர்களுடன் உடலுறவு கொள்பவன் இவர்களில் தீண்டப்பட்டதுமே இறந்துவிடுவது வழக்கம். சாணக்கியன் தன் பொருளியல் நூலில் இப்படிப்பட்ட விஷ கன்னிகளைத் தயார் செய்து வைத்துக்கொள்ளும்படி கூறுகிறான். ஆண்—பெண் உறவு அரசியலில் விபரீதமாகப் பயன்படுத்தப்படவில்லையா? அரசியலும் பொருள் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளும் பசியாலும் காம உணர்ச்சிகளாலும் கட்டுண்டு இருக்கத்தானே செய்கின்றன? அப்படியிருக்க இந்தப் பிரச்னை குறித்துப் பெரிய போராட்டம் ஏன் நடத்தக்கூடாது? 1943-ஆம் ஆண்டு பஞ்சம் பரவியபோது வங்கத்து மக்கள், தம் கௌரவத்தை உதறித்தள்ளிவிட்டு வெளிப்படையாகத் தெருக்களுக்கு வந்துவிடவில்லையா?–பசியால் துடித்த அந்த மக்கள் மடிவதற்குமுன்பு மேல் நாடுகளுடன் குண்டு, டாங்கிகளைக்கொண்டு போரிட்டபடி தம் உயர்ந்த லட்சியங்களைப் பறைசாற்றி வந்த அந்த அரசியலையும், பொருளாதாரத்தையும் பகிரங்கமாகத் தூற்றவில்லையா?

அதேபோல் உலகத்துப் பொருளாதாரம் பெண்களின் புனிதத் தன்மையைக் கண்டுபிடிப்பதற்காக நாகரிகமும் பண்பாடுமே பஞ்சமாகிவிடும்படி செய்யப் போகிறதா? அப்படி உலகில் எப்போது நடக்குமோ, அப்போதே உலகம் முழுவதும் அழிந்து போகும்.

எண்ணங்களில் ஒன்றிய சஜ்ஜனின் மனம் பழுத்த கொப்புளம் வெடிப்பதுபோல் வேதனையடைந்தது. தனவதியின் சிரிப்பு அவனைச் சுய உணர்வுக்குக் கொண்டுவந்தது. தன் சிறிய கண்களில் காம உணர்ச்சியை வெளிப்படுத்தியபடி தனவதி கூறினாள்: "விசுவாமித்திரரே! யாருடைய நினைவில் மூழ்கிவிட்டீர்கள்? உங்கள் மேனகை வந்திருக்கிறாள்!"

சஜ்ஜன் ஆர்வத்துடன் இருக்கும் காதலனைப்போல் நடித்தான். ஆயினும் தன் சிந்தனையின் ஆழத்திலிருந்து அவனால் விடுபட முடியவில்லை.

எதிரே இருந்த அறையில் செயலாளர் கோபியரையும் கண்ண பிரானையும் பற்றி உரையாற்றிக் கொண்டிருந்தார். தனவதி அறையின் வெளியேயிருந்த கதவை மூடினாள். உள்ளே இருந்த கதவை லேசாகத் தட்டினாள். சஜ்ஜனுக்குத் திடீரென்று 'சந்திர காந்தா சந்ததி' என்னும் கதையின் மாய ஜாலம் நினைவிற்கு வந்தது. அவனுக்குச் சிரிப்பு வந்தது. கூடவே கட்டிடத்தைச் சுற்றி நின்றுகொண்டிருக்கும் போலீசின் நினைவும் வந்தது. தனவதியின் முன்னிலையில் போலீசின் நினைவு வரவே அவன் கூச்சமடைந்தான். அவன் தன்னைக் குற்றவாளி என்று கருதினான்.

கதவு உட்புறத்திலிருந்து திறந்துகொண்டது. தனவதி மறுபடியும் அதே காம உணர்ச்சியுடன் சிரித்தபடி அவனை அழைத்தாள். தன் லட்சியத்தையும், தனக்குள் இப்போது தலைதூக்கும் குற்ற மனப்பான்மையையும் உணர்ந்த சஜ்ஜன் மனத்திற்குள் குமைந்துகொண்டிருந்தான். தேவையற்ற நேரத்தில் இந்த மனநிலை வந்திருப்பதை அறிந்த சஜ்ஜன் அதை விலக்கிக்கொள்ள முயன்றான். தனவதியின் காமவெறிப் பார்வையுடன் அழுகிய கள்ளின் வாடை வீசிற்று. அது 'ஸ்காட்ச்' அல்லது 'ஷேம்பேனி'ன் வாடையன்று.

உள்ளே இருந்த அறை இருண்டு கிடந்தது. சஜ்ஜன் உள்ளே நுழைந்த வாயிலுக்கு எதிரே மற்றுமொரு கதவு இருந்தது. தெருவை நோக்கியிருந்த சுவரின் உச்சியிலிருந்த சாளரத்தினூடே ஒளி லேசாக வந்துகொண்டிருந்தது. பெட்டிகள், தகரடப்பாக்கள், ஜாடிகள் இவையெல்லாம் ஒருபுறம் குவிந்துகிடக்க, அவற்றின் மறுபுறம் வெண்மையான மெத்தை விரிக்கப்பட்ட கட்டிலொன்று போடப்பட்டிருந்தது. கட்டிலின் ஓரத்தில் சிவந்த மேனியுடன் ஓரழகி நின்றுகொண்டிருந்தாள். சஜ்ஜன் கூச்சத்துடன் பார்ப்பதை விட்டுவிட்டு வேண்டுமென்றே பிடிவாதமாக இரு கணங்கள் அவளையே பார்த்தான்.

தனவதி விளக்கின் 'ஸ்விச்'சை அழுத்தினாள். காம வெறியூட்டும் அழகின் ஒளி அறையில் பரவியதைச் சஜ்ஜன் கண்டான். அறிமுக்

மில்லாத, மீன்போன்ற இரு கண்கள் நாணத்துடன் அவனைப் பார்த்தன. சிக்கன் சேலையும் ரவிக்கையும் அணிந்திருந்த அவள், வாளிப்பாக வளர்ந்திருந்தாள். மெல்லிய நீண்ட மூக்கு, சிவந்த மென்மையான உதடுகள், கூரிய மோவாய்க்கட்டை, அவளுக்கு முப்பது அல்லது முப்பத்திரண்டு வயதிருக்கும். மூக்கு, காதுகள், கழுத்து எல்லா இடங்களிலும் முத்துக்கள் பளிச்சிட்டன. சேலையை இழுத்துப் போர்த்திக்கொண்டு, கால்கட்டை விரலை நிலத்தில் அழுத்திக்கொண்டு அவள் நின்ற அழகு கலைஞன் சஜ்ஜனை மோகங் கொள்ளச் செய்தது. என்ன நெளிவு, என்ன அழகு, என்ன ஒய்யாரம்! நங்கை உண்மையிலேயே அழகாகத்தான் இருந்தாள். அவள் மிகச் சிறந்த குடும்பத்தைச் சேந்தவள் என்றும், வெளியே வராமல் இருந்து வந்தவள் என்றும் அவளைப் பார்த்ததுமே தெரிய வந்தது. அவளது முகத்தில் 'அரிஸ்ட்டோகிராடிக்' (பெரிய மனிதர் வீட்டு) மிடுக்கு இருந்தது; அவள் உயர்குடும்ப 'நங்கை' போல் இருந்தாள்.

அவளை உற்றுப்பார்த்த சஜ்ஜன் கரங்குவித்து வணங்கினான். மெல்லிய விரல்களை சேலைத்தலைப்பிலிருந்து எடுத்துப் பெண் மணியும் வணங்கினாள். இதழ்கள் மலர்ந்தன. புன்சிரிப்பில் உயிர்ப்புக் கவர்ச்சி மேலிட்டது.

தனவதி (இல்லை, கள்ளின் வாடை) இருவரையும் பார்த்துப் போதையுடன் சிரித்தாள். உருதுக் கவிதை ஒன்றை அவள் முணு முணுத்தாள்.

"காதலே விசித்திரமப்பா!
காதல் ஜோடியே துடிக்கிறதே!
வாருங்கள் கலைஞரே! இந்தக் கலைப் பொருளையும் சற்றுப் பரிசோதித்துப் பாருங்கள்!"

தனவதி சஜ்ஜனின் கரத்தைப்பற்றிக் கட்டிலின் முன்பு நிறுத்த முயன்றாள். கள்ளின் வாடையால் காய்ச்சல் வந்ததுபோல் வெப்பம், அவளுடைய பேச்சில் ஆபாசம், சஜ்ஜனுக்குச் சகிக்க வில்லை. உடனே அவன் சுய உணர்வுக்கு வந்துவிட்டான். அவனுடைய சமிக்ஞைக்காக வெளியே போலீஸ் காத்துக் கிடந்தது.

காலத்தின்நிலை அப்போது வில்லினின்றும் விடுபட்ட அம்பைப் போல் சஜ்ஜனுக்குத் தோன்றிற்று. ஆபாசமான ஒரு சூழ்ச்சியை அம்பலப்படுத்துவதற்காகத்தானே ஒரு சூழ்ச்சிக்காரனாக மாறி அவன் காதலனைப்போல் நடித்தான்? நல்ல குலத்தைச் சேர்ந்த ரகசியமான நடத்தைகெட்ட அந்த அழகியுடன், தனவதி சென்ற பிறகு தனிமையில் அமர்ந்திருந்த சஜ்ஜன் தன் உள்ளப் போராட்டம் காரணமாக மிகவும் வேதனையடைந்தான். 'இந்தப்

பாவத்தை நாம் ஏனடா விலைக்கு வாங்கிக் கொண்டோம்? ஒரு கணத்தில் எத்தனை நற்குலப் பெண்களின் மானம் மண்ணோடு மண்ணாகப் போய்விடும்! தம் வீட்டு ஆடவரின் முன்னிலையில் இந்தப் பெண்டிரின் நிலைமை என்னவாகும்? இவர்களுடைய வாழ்க்கையே பாழாகிவிடும். அட தெய்வமே! நான் ஏன் இப்படிச் செய்துவிட்டேன்? நான் செய்தது பெருந்தவறாயிற்றே!' தன் பழைய அனுபவங்களையும் நினைத்து சஜ்ஜன் அடிக்கடி தன்னை நொந்துகொண்டான். அவன் சமூகத்து அழுக்கை வெளிப்படையாகக்கொண்டு வருகிறான். இதில் தவறென்ன இருக்கிறது? அப்படிச் செய்யாவிட்டால், சமுதாயம் எவ்விதம் மாறும்? குறிக்கோளை அடையச் சற்று கடுமையாகத்தான் மாறவேண்டும்!

எதிரே அமர்ந்திருந்த பெண் தன் பேச்சுக்களால் அவனை மறு பக்கம் திருப்பிக்கொண்டிருந்தாள். உள்ளத்துப் பயங்கரப் போராட்டத்துடன் அந்தப் பெண்ணோடு சஜ்ஜன் இனிமையாகவும் பேசவேண்டியிருந்தது. அதனால் அவன் இடையிடையே தட்டுத் தடுமாறினான். இடையில் இனிப்புப்பண்டமும் தேநீரும் கொண்டு வந்து வைக்கத் தனவதி ஒருமுறை வந்தாள். அந்தப் பெண் கண்டிராக்டர் ஒருவரின் மனைவி; இரும்புக் கம்பெனியின் முதலாளியுடைய மனைவி, அவள் தன் கணவனுடைய பெயரையோ தன் வீட்டு விலாசத்தையோ தெரிவிக்கவில்லை. சஜ்ஜன் கேட்டபோது மிகவும் சாமர்த்தியமாக அவள் அந்தப்பேச்சை மாற்றி விட்டாள். சிரித்துக்கொண்டே அவள் கூறினாள்; "கிளியும் மைனாவும் பற்றிய கதையை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? ஒன்று எங்கிருந்தோ பறந்து வந்தது. மற்றொன்றும் அப்படியேதான். இரண்டும் ஒரே கிளையில் உட்கார்ந்திருந்தன. இரண்டுக்கு மிடையே நட்பு உண்டாகி விட்டது அவ்வளவுதான்!"

பேச்சுத் தொடர்ச்சியில் தனக்கும் தன் கணவனுக்கும் மனப் பொருத்தம் கிடையாது என்று அந்தப்பெண் கூறிவிட்டாள். மனைவிக்கு அன்பு, காதல் இவற்றில் நாட்டமுண்டு, கவிதை என்றால் பிடிக்கும். உயர்ந்த இலக்கியத்துடன் தொடர்புகொள்ளாவிட்டாலும் அவள் ரசிகை, அவளுடைய கணவன் வர்த்தகத்தில் ஈடுபட்டவன்; கணவன்-மனைவி, உறவு—உடலுறவு மட்டுந்தான் எனக் கருதுபவன். அந்தப் பெண்ணுக்குக் காம உணர்ச்சி அதிகம் கிடையாது; தன் அழகிய பேச்சால், தனி நடையுடை மயக்கக்கூடிய ஆடவனை அவள் விரும்பினாள்.

தன் கணவனின்மேல் சொல்லொணாத வெறுப்புக் காரணமாகத் தான், அவள் அறிமுகமில்லாத ஆடவருக்குத் தன் உடலையளித்து விட்டுத் தன் கணவனுடன் வஞ்சம் தீர்த்துக்கொள்கிறாள் என்பது சஜ்ஜனுக்குத் தெரிந்தது, திருமணத்திற்கு முன்பும் அவள்

பிற ஆடவருடன் இம்மாதிரி நெருங்கிப்பழகி வந்தாளா என்ற ஓர் அசட்டுக் கேள்வியை சஜ்ஜன் கேட்டுவைத்தான்; ''ஆமாம்'' என்று அவள் பதிலளித்தாள். ஒருமுறை அவளுக்குச் சிகிச்சை யளிக்கத் தனவதி வரவழைக்கப்பட்டாள். அதிலிருந்து இருவரும் அறிமுகமானார்கள். தனவதி சில தினங்களுக்குள் நெருங்கிய தோழியாகிவிட்டாள். அவளுடைய தனிமையுணர்ச்சி பெரும் பாலும் மறைந்துவிட்டது. சஜ்ஜன் கேட்டதன் பேரில் அவள் பிற ஆடவருடன் பழகுவதில் சற்றும் சங்கோஜம் அடைவதில்லை எனக்கூறினாள். ஆடவர் பழகக் தயாராக இருக்கும்போது பெண்கள் ஏன் பழகக்கூடாது? சமூகத்தில் பெண்களுடைய பாதுகாப்பு நிரந்தரமாக இல்லாத காரணத்தால்தான் அவள் அத் தகைய தொடர்புகளை ரகசியமாக வைத்திருந்தாளேயன்றி வேறு ஒரு காரணமுமில்லை.

பெண் கவர்ச்சி மிகுந்தவளாக இருப்பினும் சீலமற்றவளாயும், தன் பேச்சுகளால் மயக்கும் திறன் படைத்திருந்தபோதிலும் சூழ்ச்சி செய்பவளேயாயினும், இயற்கையாக உணர்ச்சி வசப்பட்ட காரணத்தால் அவள் கபடமற்றவளுங்கூட. அந்தப் பெண்ணுக்கு ஒரு தீங்கும் அளிக்கக்கூடாது என்று சஜ்ஜன் முடிவு செய்துவிட் டான். அவன் தன் ரகசியத்தை அந்தப் பெண்ணிடம் தெரி வித்தான். பெண்மணி திடுக்கிட்டாள். தன் கருத்துப்படி அவள் நடந்துகொண்டால், அவளுக்கு ஒரு விதமான அபகாரமும் தான் செய்ய மாட்டேன் என்று வாக்களித்தான். தனவதியிடம் இந்த ரகசியத்தை அறிவிக்காமல் சென்றுவிடும்படி சஜ்ஜன் அந்தப் பெண்மணிக்குக் கட்டளையிட்டான்.

பெண்மணி சென்று பதினைந்து நிமிடங்களுக்குள் அக்கம் பக்கத் தில், கடைகளிலும் வீடுகளிலும் வழியில் சென்றுகொண்டிருந்த மக்களிடையிலும் ஒரே பரபரப்பு ஏற்பட்டது. மறுநாள் செய்தித் தாட்களில் பெண்கள் சேவா மண்டலியின் மோசடி பற்றிய செய்தி பகிரங்கமாயிற்று. முதற்பக்கத்தில் பிரமாதமாகச் செய்திவரவே மக்களின் நாவில் அந்த விஷயம் சர்ச்சைக்குரிய முக்கிய விஷயமாகி விட்டது. அந்த நிகழ்ச்சிக்குப்பிறகு சஜ்ஜன் வர்மாவின் பெயர் நகரமெங்கும் பரவி விட்டது. அவ்வளவு புகழ் அவனுக்குத் கலைத்துறையில்கூடக் கிட்டவில்லை!

சஜ்ஜனுடைய செயலைக் கண்டு மற்றும் பல இளைஞர்கள் இம் மாதிரி 'ஹீரோ'வாக மாறிப் புகழைத் தட்டிச்செல்ல முயன்றனர். பல சமுதாய சீர்த்திருத்தங்கள் பொங்கி எழ ஆரம்பித்தன. இம்மாதிரி சமுதாயத்தை ஏமாற்றும் பல நிறுவனங்களின் விஷயத்தில் மக்கள் விழிப்புடன் இருக்க ஆரம்பித்தனர். பசுக்கள் ராமலீலா, கீர்த்தனை மண்டலி, பல டிரஸ்டுகள் இப்படிப்

பல சாக்குகளைக்கொண்டு நடந்து வந்த அலுவல்களைப்பற்றி மக்கள் கவலையுடன் சிந்திக்கத் தொடங்கினர். மசூதி, கோவில் இவற்றில் நடக்கும் பல நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், பஜனைப் பாடல்கள் முதலியன ஆதாரமற்றவை; எவ்வளவு ஆபாசமான கருத்துக்கொண்டவை, என்பது மெள்ள மெள்ளப் புலனாயிற்று. இதனால் மக்களுக்குச் சிரத்தை குறையத்தொடங்கியது. உயிர் வாழ்வது, உயிர் துறப்பது இவையாவும் எந்தப் பக்தியை ஆதார மாகக்கொண்டு நாம் செய்வதாகக் காண்பித்துக்கொள்கிறோமோ, அது எவ்வளவு பலமற்றது! இது பல சிந்தனையாளர்களின் உள்ளத்தை முள்போல் தைத்தது.

## 45

அனுமார் கோயிலருகிலிருந்த திண்ணையில் உட்கார்ந்து கொண்டு 'உக்கா' பிடித்தபடி லாலா முகுந்தீமல் காய்கறிக்காரனுடன் சண்டை போட்டார். பக்கத்திலேயே அடர்ந்த மீசை வைத்துக் கொண்டு கனத்த உடலுடன் அந்தணர்கள் ராமாயணம் படித்துக் கொண்டிருந்தனர்.

''இறைவா! உன்னுடைய மாயையை என்னென்று சொல் வேன்?'' என்ற இடத்தை எல்லோரும் படித்துக்கொண்டிருந்தனர்.

''இந்தப் பக்கம் நுழையவிடாமல் செய்துவிடுவேன்! என்னிடமா உன் திறமையைக் காண்பிக்கிறாய்?'' முகுந்தீமல் காய்கறி விற்பவ னிடம் கத்தினார்.

''நாலு வீசை பெறாத என்னோடு நீங்க சண்டை போடலாமா? இத்தனை வயதாகியும் இப்படியா நீங்க நடந்து கொள்வீங்க?''

''இவனுடைய கூடையை எடுத்துக் கால்வாயிலே போடுங்கடா! என்னிடமா நீ பகைக்கிறாய்?''

இலங்கை காண் படலம் ராமாயணத்தில் படிப்பானேன்? லாலாவையும் காய்கறி விற்பவனையும் அது சற்றும் கவரவில்லை. அவர்களுடைய போராட்டத்தைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் அவர்கள் ராமாயணம் வாசித்துக்கொண்டிருந்தனர். இரண்டு பெண்மணிகள் அனுமாருக்கு மலர் சார்த்தினர். சிவபிரானுக்குத் தண்ணீர் ஊற்றி மலர் போட்டனர். ஏதோ வீட்டில் வேலைக் காரியைக் கஷ்டப்படுத்திய கதையைப் பேசிக்கொண்டு சென் றனர். ராதேச்யாம் சிகரெட்டை விரல்களில் அழுத்திப் புகையைக் கிளப்பிக் கொண்டு செய்தித்தாளுடன் அங்கு வந்தார். லாலா ஜானகிசரணின் கணக்குப்பிள்ளை குஞ்சீலால் கையில் கணக் குப் புத்தகத்துடன் எங்கோ சென்று கொண்டிருந்தார். லாலா

முகுந்தீமல்லின் 'உக்கா'விலிருந்து, ஒரு மூச்சுப் புகையை இழுத்துக் கொள்ளும் ஆசையில் நின்றுகொண்டார், வேகமாகப் புகையை உள்ளிழுத்ததால் லாலா இருமத் தொடங்கினர். இருமியபடியே அவர் குஞ்சீலாலிடம் புகார் செய்தார்: ''இந்த மடையன் என்ன விலைக்கு விற்கிறன், பாருங்கள்! இவனை உள்ளே வரவிடாமல் செய்துவிடுவேன்! போனால் போகிறது என்று விட்டு வைத்திருக்கிறேன்?''

சஜ்ஜன் தெருவில் நுழைந்தான். ராதேச்யாம் அவனைப் பார்த்தபடி உற்சாகத்துடன் பேசினர்: ''வாருங்கள்! உங்கள் புகழ் எங்கும் பரவி விட்டதே! ஹி ஹி ஹி 'பெண்கள் சேவை மண்டலி'யைப் பகிரங்கப்படுத்தி விட்டீர்களே! எனக்கு இதில் ஒரே மகிழ்ச்சி! உட்காருங்கள்!''

''கன்னேமல்லின் பேரன் வந்திருக்கிறர்!''

''நமஸ்காரம் லாலாஜீ!'' திண்ணையில் அமருவதற்கு முன்பு லாலா முகுந்தீமல்லை, சஜ்ஜன் வணங்கினன்.

"நன்றக இரு, தம்பி! நீ கொடி கட்டிப் பறக்க வேண்டுமப்பா!

சஜ்ஜன் தன்னைபற்றிய புகழுரையை கேட்டுக் கூச்சமடைந்தான்.

கணக்குப்பிள்ளை குஞ்சீலால் ஈட்டிமுனை போன்ற பார்வையைச் சஜ்ஜன்மீது செலுத்தினர். பிறகு லாலாஜீயிடம் கூறினர்: ''நமக்குத் தெரிந்த ஒரு பையனும் இதில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறன், பாவம் நல்ல குடும்பத்தவன். ஆயிரக்கணக்கான ரூபாய் போலீசுக்குக் கொடுத்தான், ஆனல்—''

'யார்? யார்? யாருடைய மகன் அகப்பட்டுக் கொண்டான்?'

"போலீசு வந்து அவனைப் பிடிக்கும்வரை அங்கேயே இருந்தானமே!''

''வினை விதைத்தவன் வினை விதைப்பான்''' என்று கூறியபடியே ராதேச்யாம் சிகரெட்டிலிருந்து புகையை இழுத்துக்கொண்டார்.

''சொல்லிவிடலாம்! ஆனல் யாருடைய மானம் போகிறதோ, அவரைக் கேட்டால் தெரியும்! என்ன லாலா! நான் சொல்வது சரிதானே!''—குஞ்சிலாலிடம் தம் கருத்துக்கு ஆமோதிப்பை லாலா முகுந்தீமல் எதிர்பார்த்தார்.

'தன் கௌரவத்தைக் காத்துக் கொள்ள ஆசாமி படாதபாடு பட்டிருப்பான்! மானம்போனல் அவ்வளவுதான்!...டேய்! வெற்றிலை கொண்டுவா!''

தம் வீட்டை நோக்கிக் கூவினர் முகுந்தீமல். அவர் 'உக்கா'வைப் பத்திரமாகக் கையில் பிடித்துக்கொண்டார்.

சஜ்ஜன் கூறினன்: ''மானந்தான் முக்கியம், லாலாஜீ. அங்கே தனி மனிதனுடைய மானமா, முழுச் சமுதாயத்தின் மானமல்லவா போய்க் கொண்டிருந்தது?''

''நீங்கள் கூறுவது வாஸ்தவம்தான்'' ராதேச்யாம் பேசினார் : ''இப்படிச் சமுதாயத்தின் கௌரவத்துடன்—''

''நீ நேற்றைய பிள்ளை, தம்பி! நான் எவ்வளவு பார்த்திருக்கிறேன் தெரியுமா?''—கணக்குப்பிள்ளை கூறினார் : ''உன் பேட்டையிலுள்ள நல்ல நல்ல வீட்டின் மானத்தை அம்பலப் படுத்தட்டுமா! சொல். நம்மைப்போலத்தான் பிறரும் என்று நாம் நினைக்கிறோம். ஆனால் துணியால் மறைக்கப்பட்டிருக்கும் ஒவ்வோர் உடலும் நிர்வாணமானதுதானே? யார் யாரைச் சொல்வது?''

''மானமும் கௌரவமும் இப்போது எங்கே ? காலம் கெட்டுப் போச்சு! இருபது வருடங்களுக்கு முன்பு எப்படியிருந்தது தெரியுமா? மனிதன் வீட்டில் பட்டினி கிடந்தாலும் கிடப்பான்; உற்றாரிடம் தன் நிலையைப்பற்றிக் குறைத்துச் சொல்லிக் கொள்ள மாட்டான். நான் சொல்வது உண்மையா இல்லையா?''

''உண்மைதான், லாலா!''

''இன்று பார் பிச்சைக்காரனோ லட்சாதிபதியோ செலவிற்குப் போதவில்லை என்று மூக்கால் அழுகிறான். இப்போது மானம்—வெட்கம் ஒன்றும் இல்லை என்பது இதிலிருந்தே தெரியவில்லையா? நம் மானத்தை நாமே இழந்துகொள்வது இந்தக் காலத்துப் பேஷனாகிவிட்டது. என்ன தம்பி நாம் செய்வது?'' முகுந்தீமல் இவ்வளவு பேசிய பிறகு அவருடைய 'உக்கா' புகைய ஆரம்பித்தது.

குஞ்சீலால் எங்கோ செல்லவிருந்த எண்ணத்தை ஒத்திப்போட்டு விட்டுத் திண்ணையில் அமார்ந்தார். அவர் கூறினார் : ''முதலில் எல்லாம் மலிவாக இருந்தன. அப்போது ஒருவாறு வறுமையை மக்கள் பொறுத்துக்கொண்டிருந்தார்கள். சுய கௌரவத்தைப் பற்றிய எண்ணமும் இருந்தது, நம் குழந்தைப் பருவத்தில் பதினைந்து சேர் கோதுமை, இருபத்தைந்து சேர் பருப்பு வகைகள், ஒன்றரை சேர் நெய், பதினாறு சேர் பால்—இப்படியிருந்த காலம் அது! அப்போது கௌரவமும் இருந்தது. இப்போது வறுமை காரணமாகப் பெண்கள் கெட்ட தொழிலில் இறங்கிவிட்டார்கள் என்று செய்தித்தாள்கள் பிரசுரிக்கின்றன. வறுமை பெரிதா, மானம் பெரிதா, நீங்களே சொல்லுங்கள்?''

கணக்குப்பிள்ளையின் பேச்சைத் தொடர்ந்து ராதேச்யாம் கூறினார் : ''நீங்கள் மானத்தைப் பெரிதாகப் பேசுகிறீர்கள், வறுமையையும் பெரிதாகப் பேசுகிறீர்கள். உங்கள் கருத்து உண்மையில் என்ன?''

''இல்லையப்பா! வறுமை காரணமாக ஏதோ இரண்டு காசுகள் சம்பாதித்து வந்த பெண்களைப் பற்றி இப்படி அம்பலப்படுத்துவது

நியாயமா என்று நான் கேட்கிறேன்?'' குஞ்சீலாலின் சரிந்த பேச்சுப் பாறை திடீரென்றுச் சஜ்ஜன்மீது சாய்ந்தது. சஜ்ஜன் கணக்குப்பிள்ளையைப் பார்த்தான்.

அதே ஆவேசத்துடன் ராதேச்யாம் பேசினர் : "சமுதாயத்தில் அப்படித்தான் செய்யவேண்டும்! பணம் படைத்தவர்களின் கைவரிசை இது. உங்கள் லட்சாதிபதி நண்பனின் மகன் பிடிபட்ட ஆத்திரம் உங்களுக்கு! இந்த முதலாளிகள் தம் சுய நலத்திற்காக எப்படிப்பட்ட இழிவான தொழிலையும் புரியத் தயாராகி விடுகின்றனர். பெண்களை விட்டுவைக்க மாட்டார்கள்; பசுக்களைக் கொலை செய்வதை விடமாட்டார்கள் ராம்லீலாவையும் விட மாட்டார்கள்—சனியன்கள்! பிணத்தின் போர்வையிலிருந்து கூடப் பணம் சம்பாதித்து விடுவார்கள்! இந்தச் சமுதாயத்தின் மானத்தைப் போக்கும் அரக்கர்கள் இந்த முதலாளிகள்தாம். இப்படிப்பட்டவர்களுக்கு வேலை செய்துகொண்டு குஞ்சீலால் போன்றவர்கள் அவர்களுக்குத் தகுந்தபடி பேசிக்கொண்டு திரிகிறார்கள்.''

ராதேச்யாமின் ஆவேசம் முதலாளிகளைப்பற்றிப் பேசிக் கொண்டே உணர்ச்சிமிக்க சொற்பொழிவு என்னும் கோட்டை மீது ஏறிவிட்டது. இதற்குள் அவருடைய சிகரெட்டில் நீண்ட சாம்பல் படர்ந்துவிட்டது. ஒரு சிறு துண்டுதான் எஞ்சியிருந்தது. முட்டியை உதறியபடி சாம்பலை அவர் உதிர்த்தார். கடைசியாக இரண்டு இழுப்பு இழுத்துவிட்டுத் துண்டைக் கீழே போட்டு விட்டார்.

தெருக்கோடியில் மஹிபால் வந்துகொண்டிருப்பதைச் சஜ்ஜன் பார்த்தான். குஞ்சீலால் ராதேச்யாமின் பேச்சினுல் தாக்குண்டு கணக்குப் புத்தகத்துடன் எழுந்தார். முகுந்தீமல் அவருடைய தோளை அழுத்தியபடி கூறினர். "யாரைச் சொல்வது குஞ்சீலால்? இந்தக் காலத்துக் கம்யூனிஸ்டுப் போக்கு அப்படி இருக்கிறது. வெற்றிலை போட்டுக்கொண்டு போ! .. டேய்! வெற்றிலை கொண்டு வாடா! 'உக்கா'வுக்குப் புகையிலையும் எடுத்துவா!''

இவனுடைய மகன், இவனுடைய தம்பி, இன்னும் கெட்டுப் போன இருபது பேர், கிழவரின் வாலிபம், இளமையின் ஆட்டம் என்று பல விஷயங்களைப்பற்றிப் பேச்சு நடந்தது. எண்பது வருடத்துச் சமுதாய மறுமலர்ச்சிபற்றிய கண்ணோட்டம் அது! ஒவ்வொன்ருகச் சஜ்ஜன், மஹிபால் இருவருக்கும் பல நினைவுகள் வந்தன. பழைய விஷயங்களைப்பற்றிப் பேசவும் கேட்கவும் ஒருவித ஆசை இருக்கத்தான் செய்கிறது. ராமாயணம் படித்துக்கொண்டிருந்த பக்தர்கள் எப்போது சென்ருர்களோ தெரியாது; எத்தனை பக்தர்களை நாம் கண்டிருக்கிறோம்! 'நலமா?', 'நமஸ்தே!'—

'எல்லாம் அவன் செயல்'—இம்மாதிரி எத்தனை பேச்சுக்கள்!—குச்சியால் பல்துலக்குவதிலிருந்து டூத்பிரஷ்வரை! ஜலேபி சிற்றுண்டிக்குப் பயன்பட்டதிலிருந்து டோஸ்ட் பட்டர்வரை!—தலைப்பாகை, துப்பட்டியிலிருந்து அப்டுடேட் பேஷன்வரை (அன்றுள்ள நாகரிகமோஸ்தர்வரை) எத்தனையோ விஷயங்கள் பேசப்பட்டன.

சூரியபகவான் திண்ணையைவிட்டுச் சுவரில் ஏற ஆரம்பித்துவிட்டார். மூன்றரை மணி நேரத்திற்குப் பிறகு கூட்டம் கலைந்தது. மஹிபால் திண்ணையிலிருந்து எழுந்து அனுமார் சந்நிதியை அடைந்தான். கரங்குவித்து, ''ஸ்ரீ குருசரண சரோஜரஜ'' என ஆரம்பித்து, ''போலே ம்ருத்யுஞ்ஜய ஹர ஹர'' என்பது வரை சொல்லித் துதித்தான். பிறகு சஜ்ஜனைத் திரும்பிப் பார்த்தான். சஜ்ஜன் ஏதோ எண்ணத்தில் மூழ்கியபடி மஹிபாலைப் பார்த்தான். மஹிபால் அந்தப் பார்வைக்குப் பதிலளிக்க இயலாமல் புன்முறுவல் செய்தான்.

சஜ்ஜன் திடீரென்று கடிகாரத்தைப் பார்த்துக் கூறினான்; ''பன்னிரண்டடித்து நாற்பது விநாடிகளாகிவிட்டன. தாயியைப் பார்க்க வந்தவன், அப்படியே உட்கார்ந்துவிட்டேன். இந்தப் பேச்சில் என்னையே நான் மறந்துவிட்டேன்!''

''ஆமாம்! இப்படி மகிழ்ச்சியுடனிருந்து பல நாட்களாகிவிட்டன.''

பிறகு ஒரு கணம் மௌனம் நிலவியது. ஹோலி வண்ணத்துடன் ஒரு பசு சென்று கொண்டிருந்தது. இருவருடைய பார்வையும் அதன்மீது விழுந்தது. பிறகு சஜ்ஜன் கேட்டான்; ''இங்கே ஏன் வந்தாய்?''

''சும்மாத்தான் உன்னைச் சந்திக்க விரும்பினேன்.''

"நான் தாயியின் வீட்டுக்குப் போய்க்கொண்டிருக்கிறேன். உனக்கு அவசர காரியம் ஒன்றுமில்லையானால் என்னோடு வா.''

மஹிபால் ஏதோ சாக்குக் கூறிவிட்டான்: ''இப்போது நீ போய் வா. நான் வேறெப்போதாவது வருகிறேன்,''

சஜ்ஜன் அவனை உற்றுக் கவனித்துவிட்டு மறுபடியும் வற்புறுத்தினான்: "தாயி கூப்பிட்டிருக்கிறாள். பார்த்துவிட்டு நீ எங்கே வேண்டுமானாலும் போகலாம். வாயேன்.''

மஹிபால் சரியென்று ஒப்புக்கொண்டான். இருவரும் மாட்டுக் கொட்டகையின் வாசலை நோக்கிக் கிளம்பினர். சஜ்ஜனுடைய வீட்டின் இந்தப் பகுதியைக் கடந்து சென்று பல தினங்களாகிவிட்டன. அகதியின் சூழ்ச்சி, தாயியின் சூனியப் பொம்மைகள், கள்வர்கள், தாயியைப் படுத்திய பாடு, கன்யாவின் வருகை, 'மூத்தவள்—போர்' இவர்களின் ரோமன்ஸ் (காதல் விவகாரம்) .. திடீரெனச் சஜ்ஜன் கேட்டு வைத்தான்: ''ஏனப்பா, மகாகவி

போர் எங்கே? கண்ணில் தென்பட்டு வெகு நாட்களாகின்றனவே!''

மஹிபால் கூறினன் : ''நானும் பார்க்கவில்லை. வெறுக்கத்தக்க மனிதன்!''

"இன்னும் எத்தனை பேர் அவனைப்போல் இருக்கிறார்களோ? பலவீனங்களின் காரணமாக இப்போதெல்லாம் எனக்கு மனிதர்கள் பேரில் கோபம் வருவதில்லை. சமுதாயமெங்கும் குற்றங் குறைகள் பரவித்தான் இருக்கின்றன,"

''குறைகள் மட்டுமா என்ன, நல்லவைதாம் சமுதாயத்தில் பரவிக்கிடக்கின்றன.''

சஜ்ஜன் தாயியின் வீட்டுக் கதவைத் தட்டினன். மஹிபால் பேச்சைப் பாதியிலேயே நிறுத்திவிட்டான். உள்ளேயிருந்து தாயியின் குரல் வந்தது: ''யாரது? சனியன்!''

''வசையின்றிப் பேச்சுக் கிடையாதுபோல் இருக்கிறது!'' மஹிபால் புன்சிரிப்புடன் கூறினன். சஜ்ஜன் உரக்கப் பதில் பேசினன் : ''நான்தான் தாயி, சஜ்ஜன்!''

"துர்ஜன் என்று சொல்வதுதானே ?''

''சீலா மட்டுந்தான் அப்படிக் கூப்பிடுவாள்.''

சீலாவின் பெயரைக் கேட்டதும் மஹிபால் சிந்தனையில் ஆழ்ந்தான். அதே சமயத்தில் உள்ளேயிருந்து தாழ்ப்பாளின் ஓசை கேட்டது. கதவு திறக்கப்பட்டது. கன்யா நின்று கொண்டிருந்தாள்! அன்புடன் தன் கணவனை அவள் பார்த்தாள். மஹிபாலைக் கரங்குவித்து வரவேற்றாள்.

''இவ்வளவு நேரம் எங்கே தங்கிவிட்டீர்கள்?'' கன்யா தன் கணவனைக் கேட்டாள்.

"இங்கேதான், திண்ணைக்கருகில்."

''சீட்டாட்டம் ஆடிக்கொண்டிருந்தானம்மா! பிடித்து இழுத்து வந்திருக்கிறேன்.''—மஹிபால் கூறினன்.

கன்யா சிரித்துக் கொண்டே பேசினள் : "நீங்களும் அங்கேதான் சென்றிருப்பீர்கள்.''

''நான் சும்மாத்தான் சென்றேன். அதனுல்தானே புகார் செய்கிறேன்.'' நிலைப்படியைத் தாண்டியபடியே மஹிபால் கூறினன்.

''பாபாஜீ வந்திருக்கிறார்.'' கன்யா கூறினள்.

''எங்கே இருக்கிறார்?''

"மாடியில்.'' மாடிக்கு நடந்தபடி கன்யா பதிலளித்தாள்.

மாடியில் சித்திரை மாதத்து வெயில் காய்ந்து கொண்டிருந்தது. சூரியனின் பக்கம் முதுகைக் காண்பித்தபடி தாயி உட்கார்ந்திருந்தாள். கருநிறமுள்ள பாபாஜீ பத்மாசனத்தில் அவளுக்கு முன்னே அமர்ந்திருந்தார். பாபா இருவரையும் அன்புடன்

வரவேற்றார். சஜ்ஜன் அவரைக் கும்பிட்டான். தாயி கேட்டாள். "இத்தனை நாட்கள் வரை எங்கிருந்தாயப்பா?"

"வேலையிருந்ததம்மா!"

"இங்கே வரமுடியாமல் அப்படிப்பட்ட வேலை என்ன இருக்கிறது, சனியன்! இவள் இருந்ததால் அவ்வப்போது செய்தி தெரிய வந்தது, இல்லாவிட்டால்?"

பாபா கூறினார்: "நானும் சாட்சி சொல்கிறேனம்மா உன் மருமகள் இங்கு வேலை செய்கிறாள், மகனுக்கு வெளியில் வேலை, அவ்வளவுதான்!"

"போதுமே! என் மருமகளா அவள்?"

"மகன் உன்னுடையவன் என்றால் மருமகளும் உன்னுடையவள் தானே?"

"கன்னோமல்லின் இந்தப் பேரனிடம் நான் முறையிட்டேன்: நூறு தோலா பொன் நகைகள் தருகிறேன், நல்ல பெண்ணை மணந்துகொள் என்றேன்!"

"அம்மா, நீ என்ன சொன்னாலும் சரி, மகன் உனக்குச் சொந்தமானால், மருமகளும் உனக்குச் சொந்தந்தான். பார்க்க எவ்வளவு அழகாக இருக்கிறாள்! எவ்வளவு நல்ல குணம்! வீட்டில் கணவனுக்கு எப்படிப்பணிவிடை செய்கிறாள். இங்கே உன்னையும் கவனித்துக்கொள்கிறாள். பள்ளிக்கூடமும் போய் வருகிறாள், ஏன் இவளை உனக்குப் பிடிக்கவில்லை?"

தாயி ஒருமுறை வனகன்யாவைப் பார்த்தாள். பிறகு கூறினாள்: "நல்லவள்தான்; ஏன் நான் உறவுக்காரி என்று முதலில் பொய் பேச வேண்டும்?"

சஜ்ஜன் சிரித்தபடி கூறினான்: "அம்மா, யசோதைக்கு அஞ்சி உன் கண்ணன்கூடப் பொய் பேசினான்!"

வனகன்யாவும் பாபாவும் குலுங்கக் குலுங்கச்சிரித்தனர். மஹிபாலும் சிரித்தான். தாயியின் கரிய பற்கள் பளிச்சிட்டன. பாபா கூறினார், "அம்மா! இனி நீ இவர்களை ஒன்றும் சொல்லக் கூடாது! இவர் உன் கண்ணன், இவள் இவருடைய மனைவி, நீ மன்னித்துத்தான் ஆக வேண்டும்."

"மன்னிக்காமல் என்ன செய்து விட்டேன்? இந்தப் பீடையை என் மனசிலிருந்து வெளியே தள்ளப் படாதபாடு படுகிறேன்! என்னைக் கவனித்துக்கொள்ளும் விதத்தைப் பார்த்தால், என்னால் வெறுக்க முடியவில்லையே!"

"அம்மா! உன் நூறு தோலா தங்கத்தை இவளுக்கே கொடுத்து விடேன்".

தாயி இதற்குப் பதில் பேசவில்லை. மஹிபாலை முறைத்துப் பார்த்துக் கேட்டாள்! "இவர் யார்?"

''இவர் மிகப்பெரிய அறிஞர், தாயி.'' சஜ்ஜன் உடனே பதிலளித்தான்.

பாபா கூறினார்: ''புகழ் பெற்றவரம்மா!''

தாயி உடனே குனிந்து மஹிபாலை வணங்கினாள்; பிறகு கூறினாள்: ''என் வீடு தேடி வந்தீர்கள். நான் பாக்கியசாலிதான். இங்கே தானிருக்கிறாரா, அன்றி வெளியூரிலிருந்து வந்திருக்கிறாரா?''

''இங்கிருப்பவர்தான். பல புத்தகங்கள் எழுதியிருக்கிறார்!'' —உற்சாகத்துடன் கன்யா அறிமுகப்படுத்தினாள்.

''மந்திரம் ஓதுவாரோ?''

''வீட்டில் பூஜை செய்வார்.'' சஜ்ஜன் கூறினான்: ''திருமணம் செய்து வைப்பது கிடையாது.''

''பகவானுக்குத் திருக்கல்யாண மஹோற்ஸவம் செய்துவைக்க வேண்டும். அப்படிப்பட்ட பண்டிதர் வேண்டும். பாபாஜீ இங்கே இல்லாவிட்டால் காசியிலிருந்து வரவழையுங்களேன், நான் செலவைத் தந்து விடுகிறேன்''

''ஏற்பாடு செய்கிறேனம்மா!''

''என் சக்களத்தி தன் மகனுக்கு விமரிசையாகத் திருமணம் செய்திருக்கும் போது, பகவானின் திருக்கல்யாணம் இன்னும் பிரமாதமாக நடக்க வேண்டும். கன்னைமல்லின் பேரனைப் பாருங்கள், செவிடனின் காதில் சங்கு ஊதினாற்போல் உட்கார்ந்து கிடக்கிறான். இன்னும் ஒரு மாதங்கூட இல்லை, நாளையிலிருந்து வைகாசி தொடங்கி விடுகிறது, சனியன்! பௌர்ணமிக்குத் திருக்கல்யாணம் நடந்தாக வேண்டுமே, ஓர் ஏற்பாடும் நடக்கவில்லை.''

''அம்மா! ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம்! வரதட்சணை கொடுப்பதற்குப் பதிலாக எனக்கு ஒரு ஆசிரமம் கட்டிக்கொடு.'' பாபா கூறினார்.

''திலகமிடும் உற்சவத்திற்கு தாயி, நீங்கள் என்ன தருவீர்கள்?'' என்று கன்யா கேட்டாள்.

மஹிபால் கூறினான்: ''இப்போதெல்லாம் பெரிய பெரிய பொருள்கள் தரப்படுகின்றன. ரேடியோ, சோபா செட்டு, கடிகாரம்—''

''இதெல்லாம் எனக்கா தரப்போகிறாய்? கண்ணனது திருக்கலியாணத்தை நடத்தி எனக்குக் கோட்டும் சூட்டுமா தரப்போகிறாய்?'' பாபாவின் பேச்சைக்கேட்டு எல்லோரும் சிரித்தனர்.

தாயி கூறினாள்: ''அதனால்தான் இன்று கூப்பிட்டேன். ஐம்பது தட்டுகள் நிறைய சீர்வரிசை தரப்போகிறேன், பாபாஜீ!''

''அதை நான் படித்துறையில் எல்லோருக்கும் விநியோகம்செய்து விடுவேன். மீதியை ரொக்கப் பணமாகக் கொடுத்து விடம்மா!

ஆசிரமத்துக்கு நிலம் வாங்கிவிடுகிறேன். திலகமிட நிலம் வாங்குமளவுபணம்; திருமணத்தின்போது ஆசிரமம் கட்டுமளவு தொகை.''

திருக்கல்யாண ஏற்பாடுகள் பற்றி முடிவாயிற்று. மஹிபால் அவசரப்பட்டதால் சஜ்ஜனும் எழுந்தான். கன்யா உள்ளே சென்றாள். அவளுடைய பள்ளிக்கூடம் இன்னும் நடந்துகொண்டு தான் இருந்தது. கன்யாவுக்கு உதவுவதற்காக மற்றும் இரண்டு பெண்கள் வந்திருந்தனர்; தையல், நெசவு, பூ வேலை எல்லாம் கற்றுக்கொடுத்தனர். கன்யாவின் பள்ளிக்கூடத்திற்கு அப்போது பெண்கள் அதிகமாக வரத்துடங்கினர். தாயியின் வீட்டிலிருந்த சஜ்ஜனுடைய ஸ்டுடியோ அவனது அணைந்த ஆசையை நினைவு படுத்திக் கொண்டிருந்தது. சஜ்ஜன் நல்ல ஓவியம் தீட்டிப்பல நாட்களாகிவிட்டன. ஒரு சிறிது வேலையும் அவனுடைய சொந்த வீட்டில்தான் நடந்தது. அன்று சஜ்ஜன் சற்றுக்கலையில் நாட்டங் கொண்டான். ஆனால் மஹிபால் கூறினான்: "இங்கே பெண்களின் கூச்சல் அதிகமாக இருக்கிறது.''

''தம்பி ராம்ஜீ என் வீட்டுக்கு வா!'' கன்யாவின் பள்ளியைக் கடந்து அவர் சஜ்ஜனையும் மஹிபாலையும் அழைத்துச் சென்றார். அவர்களுடைய முடிவை உறுதிப்படும் வகையில் அவர் கூறினார் : "வாருங்கள், 'பாங்க்' (கஞ்சா) குடிக்கத் தருகிறேன்.''

சஜ்ஜன் சிரித்தபடி கூறினான் : "இன்னும் நான் சாப்பிட்டபாடில்லை, மஹிபாலுந்தான்.''

"ஆமாம், சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டுக் கிளம்பியவன்தான் நானும்.''

''இன்று பழங்கள் சாப்பிடலாம். எல்லாப் பண்டங்களுடனும் பழங்களையும் வாங்கிக்கொள்ளலாம். மூன்று மணிக்குப் பால்காரி பால் கொண்டு வருவாள்; அதையும் வாங்கிக் கொள்ளலாம் என்ன சரிதானே!'' மஹிபாலின் முதுகில் கரம் வைத்தபடி பாபாஜீ பேசினார். ''நீங்களிருவரும் கிடைத்திருக்கிறீர்கள் சற்று ஆலோசிக்கலாமே என்று விரும்புகிறேன். இத்தனை ரூபாய் கிடைத்தால் அதை எப்படிப் பயன்படுத்துவது? இதுபற்றி ஆலோசிக்கலாம்!''

மஹிபால் பதில் பேச முடியாமல் மௌனமாக இருந்து விட்டான்.

## 46

பாபாஜீயின் ஆசிரமத்திலிருந்து அவர்கள் விரைவில் திரும்பி விட்டனர்; மஹிபால் விரும்பியதும் அதுதான். கபூர் ஓட்டலில்

சென்று ஏதாவது பானம் அருந்தலாம் என மஹிபால் பிடிவாதம் செய்தான். சஜ்ஜன் மதுவைத் தன் உள்ளத்தினின்றும் ஒதுக்கி விட்டான். ஆன போதிலும் அவன் மஹிபாலுடன் செல்லச் சம்மதித்தான்.

மஹிபால் கூறினான்: "திடீரென்று ஒரு பொருளை எப்படித்தான் மக்கள் துறக்கின்றனரோ, எனக்குப் புரியவில்லை!"

"ஏன்? நீதான் லட்சியவாதியாயிற்றே, பல பொருட்களைத் துறக்கவும் ஏற்கவும் உபதேசம் அளித்திருக்கிறாயே!"

சஜ்ஜன் குத்தலாகப் பேசியது மஹிபாலின் உள்ளத்தைத் தைத்தது. சற்று நேரம் வரை அவன் மௌனமாக இருந்தான். பிறகு மொழிந்தான்: "நினைப்பது எளிது, செய்வது கடினம். உன்னைப்பற்றியும் நீ இப்படிச் சொல்வதுண்டு இல்லையா?"

"உண்டு—இல்லவும் இல்லை!" சஜ்ஜன் ஆழ்ந்த மனநிலையில் இருந்தான்.

"எப்படி!"

"உன்னைவிட என்னிடம் உறுதி அதிகம் என்பது என் கருத்து. ஒரு முடிவுக்கு வந்த பிறகு நான் அதை என் வாழ்வு முழுவதும் கடைப் பிடிப்பேன்."

"உன் பேட்டையைச் சீர்திருத்த எவ்வளவு துடிப்புடன், எவ்வளவு பெரிய குறிக்கோளுடன் நீ முயற்சி செய்தாய்? அதில் உன் முடிவும் உறுதியும் எப்படி உனக்குக் கை கொடுத்தன?"

சஜ்ஜன் கூறினான்: "ரோமான்சில் புதுமைக் காதற் போக்கில் என்னை நான் மறந்து விட்டேனப்பா! இல்லாவிட்டால் எவ்வளவோ சாதித்திருப்பேன்."

"ரோமான்சில் மறந்தாயா?"

"என் வாழ்க்கையில் குறையிருந்தது."

"என் வாழ்க்கையிலும் எத்தனையோ குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. அதனால் நானும் தோல்வியடைகிறேன்." மஹிபால் பெருமூச்சுடன் பேசினான்.

பிறகு வெகு நேரம் வரை பேச்சுத் தொடரவில்லை. இருவரும் தத்தம் சிந்தனையில் மௌனமாக இருந்தனர். கபூர் ஓட்டல் மானேஜரின் அநுமதி பெற்று மாடியில் ஓர் அறையில் உட்கார்ந்து கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது. மஹிபால் கூறினான்: "இன்று காலையிலிருந்து என் மனம் சலனமுற்றிருக்கிறது."

"ஏன்?"

"என் முடிவு நெருங்குகிறது என்று நினைக்கிறேன்."

"பித்துப்பிடித்துவிட்டதா உனக்கு? கனவு கண்டாயா?"

"ஆமாம்!"

"அதனலா இப்படிக் குழப்பமடைந்திருக்கிறாய்?"

''ஆமாம்.''

''கனவு அறிவின் விளைவுதான்.''

''எப்போதும் அப்படியில்லை. கனவு, வரப்போவதைக் குறிக்கிறது. என் குறையே என்னை அழித்துவிடும் போல் தோன்றுகிறது. என்றால் இனி அத்துடன் போராட முடியாது.''

''என்ன கனவு கண்டாய்?''

''கனவா?—கந்தலையுடுத்திக் கொண்டு, உடைந்த மண் பாத்திரத்தைக் கையில் ஏந்திக்கொண்டு, நான் தெருவைக் கடந்து செல்கிறேன்.''

''இன்னும் ஏதாவது தென்பட்டதா?''

''இல்லை. நான் மட்டுந்தான் இருந்தேன்.''

''பிறகு?''

''நடந்து நடந்து களைத்தும் போகிறேன். வெளியே அந்தத் தெருவைவிட்டு வெளியே வர முயலுகிறேன்; இயலவில்லை. கனவிறைல் என் கலக்கம் அதிகரிக்கிறது, அப்போது நான் பட்ட மனவேதனையை எப்படி எடுத்துக் கூறுவேன்? அது ஓர் அநுபவம்!''

''அப்புறம்?''

''அப்புறம் நான் ஒரு நதிக்கரையை அடைகிறேன். ஒரு படகைப் பார்க்கிறேன். அதில் ஒரே கூட்டம். அவர்கள் என்னை அழைக்கிறார்கள். படகைக் கரைக்குக் கொண்டு வருகிறார்கள். நான் அதில் உட்கார்ந்து கொள்கிறேன். அறிமுகமான பலரும் அதில் இருக்கிறார்கள்.''

''யார்? யார்?''

''சீலா, கல்யாணி, கர்னல்; என் மாமன் மகள், இன்னும் எத்தனையோ பேர்!''

''பிறகு?''

''பிறகு, நதியின் நடுவே சென்று படகு கவிழ்கிறது. எல்லோரும் நீந்துகிறார்கள். என்றால் முடியவில்லை. நீரில் கோபுரங்கள். சிதை பொருட்கள் எல்லாம் தென்படுகின்றன. அவை என்னை இழுத்துச் செல்கின்றன.''

''அப்புறம்?''

''நான் என்னுடன் பலரை இழுத்துச் செல்கிறேன். சிறிது நேரத்தில் எல்லோரும் மறைந்து விடுகிறார்கள்; நான் மட்டும் விடுதலை பெறமல் தத்தளித்துக்கொண்டு நீரில் தடுமாறுகிறேன்.''

''ஏதோ ஃப்ரஸ்ட்ரேஷன் (மனத்தில் குறையும் சலிப்பும்) காரணமாகத்தான் நீ இப்படியிருக்கிறாய், மஹிபால் சிதை பொருள் முதலியன அவற்றைத்தான் குறிக்கின்றன. இவற்றை அனலைஸ் செய்து அலசி ஆராய்ந்து பார். மரணமாவது? அந்தப் பிரச்னைக்கு இடம் இருக்காது.''

மஹிபால் மௌனமாக இருந்தான். சஜ்ஜன் காப்பியைக் குடித்துவிட்டுச் சிகரெட்டைப் பற்ற வைத்தான். மஹிபாலின் முன்பு சிகரெட் கேஸை வைத்தான். போதையில் சற்று உற்றுப் பார்த்துவிட்டு மஹிபால் கூறினான் : "என் உள்ளத்து எண்ணத்தை ஒளிக்காமல் உன்னிடம் கூறிவிட்டால், சுமை குறைந்துவிடும், சஜ்ஜன்...எனக்கு உன் பேரில் பொறாமையாக இருக்கிறது."

சஜ்ஜன் புன்முறுவல் செய்துவிட்டுப் பேசாமல் இருந்தான்.

"இன்னும் ஒரு விஷயம் சொல்லட்டுமா? எனக்கு உன்மீது அன்பும் உண்டு."

"கர்னல் பேரில்?"

"கர்னல் தெய்வப்பிறவியப்பா! நாம் இருவருமே அவனுக்கு இணையாகமாட்டோம். அவனுடைய அறிவு மலர்ச்சியடையாமலிருக்கலாம். ஆனால் பிறருக்காக அவன் தன் உயிரையும் அளிக்கும் ஆற்றலைப்பெற்றவன். இன்னுமொரு விஷயம் கேட்டுக் கொள். சஜ்ஜன், வாழ்க்கையில் ஒருபோதும் தோல்வியடைந்து விடாதே!"

"வெற்றியும் தோல்வியும் நம் கைவசத்தில் இருக்கின்றனவா, மஹிபால்! சூழ்நிலையின் வசத்தில் இருக்கின்றனவா?"

"எப்படி இருந்தாலும் சரி, மனம் சலித்து உட்கார்ந்துவிட்டால் அதுதான் தோல்வி. அதைத்தான் நான் குறிப்பிடுகிறேன். எந்த மிஷனை (உயர் லட்சியத்தை) நீ மனதில்கொண்டு செய்கிறாயோ, அதை நிறைவேற்றிவிடு."

மஹிபாலின் நட்புமிக்க அறிவுரை சஜ்ஜனை உணர்ச்சிவசப் படுத்திற்று. அவன் தழுதழுத்த குரலில் கூறினான் : "நீ உடன் இருந்தால் நாம் இருவரும் எந்த லட்சியத்தையும் நிறைவேற்றி விடலாம்."

"என்னைவிட்டு வெளிக்கிளம்பவும் முடியவில்லை, என்னையே என்னால் புரிந்துகொள்ளவும் இயலவில்லை; சலித்துவிட்டேனப்பா. இந்த உலகத்தையே திருத்தியமைத்துவிடலாம் என்று சுமார் பத்தாண்டுகளுக்கு முன்பு நினைத்தேன். கடவுள் என்னைப் பரீட்சித்துவிட்டாரப்பா, என்னால் என்னையே மாற்றிக்கொள்ள முடியவில்லை. உலகத்தையா மாற்றியமைக்கப் போகிறேன்?"

"இந்தக் கதைகளையெல்லாம் விட்டுத்தள்ளு!" சஜ்ஜன் சலிப்புடன் கூறினான் : "இன்று காலையில் நீ எதற்காக வந்தாய்?"

"சும்மாதான்! மனம் தனிமையை உணர்ந்தது, ஒரு துணை வேண்டும்போல் இருந்தது என்றேனே. கர்னலைக் காணச் செல்லலாம் என்று நினைத்தேன்; ஆனால் அவன் இந்த விஷயங்களையெல்லாம் புரிந்துகொள்ளமாட்டான். பிறகு நினைத்தேன்..." மஹிபால் திடீரென மௌனமாகிவிட்டான்; ஒரு நீண்ட மூச்செறிந்தான்.

சஜ்ஜன் அவனைப் பார்த்துச் சொல்வான். "நீ உன் விஷயத்திலும் சீலா விஷயத்திலும் கடுமையாக இருக்கிறாய், மஹிபால். சீலாவுடன் உன் உறவை முறித்துக்கொள்வதாகப் பிடிவாதம் பிடித்தாயே, அந்த நாளிலிருந்துதான் இந்த ப்ரஸ்ட்ரேஷன் (மனக்குறையுடன் சலிப்பு) ஆரம்பித்திருக்கிறது."

"அந்த விஷயத்தைவிடு சஜ்ஜன்!... விட்டுத்தள்ளு!" மஹிபால் நிமிர்ந்து உட்கார்ந்தான். கையில் டம்ளரை எடுத்து 'ஸ்காட்ச்'சின் தங்க நிறத்தைக் கூர்ந்து பார்த்துக் கொண்டேயிருந்தான்.

சஜ்ஜன் கேட்டான்: "உன் அக்காளுடைய மகளுக்கு எப்போது திருமணம் நடக்கப் போகிறது?"

"ஆடிமாதம், அமாவாசைக்குப் பிறகு நவமியில்."

"திருமணம் என் வீட்டில் நடக்கும் என்று கன்யாவும் அண்ணியும் முடிவு செய்திருக்கிறார்கள்."

"உம்."

"எனக்கு இந்த முடிவு மகிழ்வைத் தருகிறது. நேற்றிரவு நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். பிள்ளைவீட்டார் தங்குவதற்கு, ராஜா சாஹேபின் சிறிய வீட்டைக் காலி செய்துகொள்ளலாம். உங்களில் பிள்ளை வீட்டார் மிகவும் ராங்கியாக இருப்பார்களாமே! படாத பாடுபடுத்துவார்களாமே!"

"படுத்தட்டும், சனியன்கள்!" மஹிபால் ஒரே மூச்சில் இரண்டு விழுங்குகளை உள்ளே தள்ளினான்.

"அவர்களை ஆட்டம்போட நான் விடமாட்டேன். நான் கொடுக்கும் மரியாதையில் உன் சம்பந்திகள் பிரமித்து நின்றுவிடுவார்கள். ஆனால் பையன் மிகவும் அட்வான்ஸ்டு (முன்னேற்றமானவன்) என்று கேள்விப்பட்டேன்."

"உம்."

"ஆனாலும் இதெல்லாம் அறிவுகெட்ட தன்மைதான்!"

"அப்படிச் சொல்லமுடியாது."

"சரி மஹிபால் இன்று நாம் காலையில் ஏதேதோ கேள்விப்பட்டோமே, அவற்றிலிருந்து என்ன தெரிகிறது? சீர்திருத்தம் செய்யும் சமுதாயம் முன்னேறிவிட்டது. இந்த ரியாக்ஷனரிகள் (பத்தாம் பசலிகள்) பின்தங்கிவிட்டார்கள். ஆனாலும் இந்த ரியாக்ஷனரிகள் இன்னும் அட்டகாசம் செய்துகொண்டுதான் இருக்கிறார்கள். அது ஏன்?"

மஹிபால் சிறிது நேரம்வரை மௌனமாக இருந்தான். சஜ்ஜன் பதிலை எதிர்பார்த்தபடி அவனையே உற்று நோக்கிக்கொண்டிருந்தான். பிறகு, நம்பிக்கையை இழக்காத பிச்சைக்காரன் திடீரென ஏமாற்றம் அடைந்ததுபோல் ஜன்னலின் பக்கம் பார்த்தான். சிகரெட்டுச் சாம்பலை ஏஷ்-ட்ரேயில் உதறிவிட்டு மஹிபால்

கூறினுன்; "உன் கேள்விக்கு என்னிடம் பதில் இருக்கிறது, சஜ்ஜன். ஆனுல் உண்மையாகச் சொல்லப்போனுல் அதைக்கூற நான் உரிமை படைத்தவனில்லை."

"ஏன்?"

"அதன்படி நான் நடக்கவில்லை! அதுதான் காரணம்!"

"ஆனுலும் நீ நினைப்பது என்ன?"

"சொல்வது வீண். வாழ்வின் இறுதித் தினங்களில் நான் பொய் பேசமாட்டேன். என்னிடம் சேர்ந்து கிடக்கும் பொய் அவ்வளவையும் வெளியிடச் சக்தி பெறும் வரையில் உண்மையை எடுத்துச் சொல்வது வெறும் டம்பமாகும்!"

சஜ்ஜனுக்கு கோபம் வந்தது: "உன் அறிவின்மை எனக்குப் போரடிக்கிறது. ஒரு கனவு உன் அறிவை மழுங்கச் செய்கிறது. என்னுல் படித்த ஒருவனுக்கு இதைவிட வெட்கப்பட வேண்டிய விஷயம் வேறென்றும் கிடையாது. ஒரு பெரிய உண்மையை உன்னுல் கடைப்பிக்க முடியவில்லை என்று வைத்துக் கொள். ஆனுல் அந்த உண்மையை எடுத்துரைத்து வேறு யாருக்காவது தெம்பு கொடுக்க முடியுமல்லவா?"

"என்னிடம் தெம்பு இல்லாதபோது, பிறருக்கு எப்படி அளிக்க முடியும்? முகம்மதும் வெல்லம் தின்னும் குழந்தைகளும் என்ற கதை உனக்குத் தெரியுமில்லையா? முகம்மதுதான் வெல்லம் தின்று கொண்டிருக்கும்வரை குழந்தைகளிடம் வெல்லத்தைத் தின்னக் கூடாது என்று உபதேசிக்க முடியாமல் தவித்தார். ஆனுல் இங்கு நிலைமையே வேறு. வெல்லமே தின்னுதவர்களில் ஒருவன் நீ!"

"ரகசிய மனிதனைப்போல் பேசாதே!"

"ரகசியமில்லை சுலபமான விஷயம்தான். ஆயிரமாண்டுகளாகியும், முயற்சி செய்து போராடிய போதிலும் பாரதத்தின் சில முறைகளை வேருடன் களைந்தெறிய முடிவதில்லை! என்னென்னமோ சோதனைகள் நடக்கின்றன. ஆனுல் சமுதாயத்தின் பேரில் அவற்றுக்கு ஒருவிதமான உரிமையும் கிடையாது. சீர்திருத்தம் நீயும் தான் செய்தாய்; இல்லை, நீ ஒருவன்தான் செய்தாய்?"

சஜ்ஜன் சலிப்படைந்து விட்டான். மஹிபால் போதையில், ஏதோ வருத்தத்தில் ஆழ்ந்து கிடந்தான். அவன் தன் போக்குப் படியேதான் பேசுவான் என்று அறிந்ததும் சஜ்ஜன் அலட்சியமாக இருந்துவிட்டான். மஹிபால் தன் பேச்சின் சாரத்தை எடுத்துரைத்தான்: "சாதிப் பிரிவினை, பேதம் இவற்றைப் பற்றித் தான் நான் குறிப்பிடுகிறேன். பாரதத்தில் இந்தச் சாதி வேற்றுமை நடமாடும் வரையில் நாம் எவ்வளவு சீர்திருத்தம் செய்தாலும் சமுதாயத்தை மானிட சமுதாயமாக அமைப்பது இயலாத செயல்தான்."

''ஆனுல் இப்போது சாதிப் பிரிவினை முறியத் தொடங்கி விட்டதே!''

''சிவில் லைன்களில்தான், தெருக்களிலும் பேட்டைகளிலுமில்லை. நூற்றுக்கு இரண்டு கேசுகளைப் பார்த்துவிட்டுச் சமுதாயம் மாற்றம் அடைந்துவிட்டது என்று சொல்ல முடியாது.''

''முன்புபோல் தீவிரமான எதிர்ப்பு இப்போது கிடையாது'' என்ற சஜ்ஜன் மேலும் கூறினுன்: ''வர்மா அவருடைய மனைவி யின் விஷயத்தில் தாயியின் மன்னிப்பு மனப்பான்மையைக் கண்டு நான் வியப்படைந்தேன்! கன்யா பேரில்கூட அவளுடைய உள்ளத்திலிருந்த எதிர்ப்பு மறைந்துவிட்டது. தன் தண்ணீர்க் குடத்தைக் கன்யாவைத்தொட அவள் அநுமதிப்பதில்லை என்பது உண்மைதான் ஆயினும்...''

''வர்மாவின் அல்லது உன் மனைவியின் பேரில் தாயியின் உள்ளத்து எதிர்ப்பும், பிறர் தன் பண்டத்தைத் தொடக்கூடாது என்பதும் எதைக் காண்பிக்கிறது? சமுதாயத்தின் போக்கைத் தானே? இன்றிலிருந்து சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன்பு தாயி, நீ, வர்மா, உங்கள் மனைவிமார் எல்லோரும் பிறந்திருப்ப தாக வைத்துக்கொள்வோம். அப்போது தாயி உங்களை மன்னித் திருக்கவே மாட்டாள்! சமூகந்தான் எல்லாம் என்றிருந்துவிடு வாள். இன்னும் கேட்கப்போனுல் உங்களுக்காகச் சூனியப் பொம்மைகளைத் தாயி முதலில் தயாரித்தவளாயிற்றே! இது சமூகத்தின் இதயமற்ற நிலையைத்தான் காண்பிக்கிறது. இன்று சீர்திருத்த வாதிகள் பெருகிவிட்டார்கள். பழைய மூடப்பழக்கங் கள் என்னும் கோட்டைகளைத் தகர்த்து வீழ்த்திவிட்டார்கள். அதனுல்தான் வாய்பேசாமல் உங்களைச் சமுதாயம் ஏற்றுக்கொண் டிருக்கிறது. ஆனுல் உங்களுடைய கோட்பாடுகளை இன்னும் அது ஏற்கவில்லை!''

''அதுதான் நான் சொல்கிறேன். புதுயுகம் புதிய கருத்துக்களைப் பொதுப்படையாக எப்படி அங்கீகரிக்கும் சொல்!''

''சக்தி வாய்ந்த போராட்டம் நடந்தால்தான் இது முடியும்; சாதி பேதங்களைத் தகர்த்தெறியும் போராட்டங்கள் நடக்க வேண்டும். அவற்ருல்தான் இது முடியும்!'' ஒவ்வொரு சொல்லை யும் தீர ஆய்ந்து மஹிபால் பேசினுன்: ''சாதியை எதிர்த்து இதுவரை நடந்த போராட்டங்களின் முழு வரலாறும் போராட் டம் நடத்துவோருக்குத் தெரிந்திருக்க வேண்டும். இந்தச் சாதி பேதம் பாரதத்தின் வலிவுக்கும் நலிவுக்கும் காரணமாக இருந் திருக்கிறது. சாதியைப்பற்றிய கொள்கைகளை விடும்படி யாரிட மாவது நீ கூறிப் பார். உடனே நீ அவனை இந்து மதத்திலிருந்து பிரிக்கப் பார்க்கிருய் என்றுதான் நினைப்பான்.''

பேச்சு முடிந்தது. சஜ்ஜன் ஆழ்ந்து சிந்தனை செய்தான். மஹிபாலும் தன் டம்ளரிலிருந்த திரவத்தையும் தட்டிலிருந்த தின் பண்டத்தையும் காலி செய்வதில் முனைந்து மௌனமாகிவிட்டான். சிறிது நேரத்திற்குப் பிறகு இருவரும் திடீரென்று பேச விழைந்தனர். மஹிபால் பேச ஆரம்பித்து நிறுத்தி, சஜ்ஜனிடம் "நீ பேசு!" என்றான்.

"இந்தச் சமுதாயத்தை மாற்றியமைப்பதில் என் வாழ்க்கையையே செலவிடப் போகிறேன். இதை மாற்றிவிட்டுத்தான் மறு வேலை!" சஜ்ஜனுடைய முகத்தில் பிரதிபலித்த உறுதியை மஹிபால் கவனித்தான், மஹிபாலும் ஏதோ சொல்லத் தொடங்கினனே என்பது திடீரென நினைவிற்கு வரவே சஜ்ஜன் கேட்டான்: மஹிபால், நீ ஏதோ சொல்ல ஆரம்பித்தாயே?"

"அதுவா?"—மஹிபால் சிரித்தான். "ரூப்ரத்தன் எனக்குக் கார் தருவதாக வாக்களித்திருக்கிறான். சகுந்தலாவின் திருமணத்திற்குப் பிறகு வாங்கிக்கொள்ளப்போகிறேன்; இல்லாவிட்டால் மாப்பிள்ளை வீட்டார் வண்டியைக் கண்டதும் இன்னும் அதிகம் வரதட்சணையைக் கொண்டு வா என்று கேட்டால்?"

* * * *

சிறிது நேரங்கழிந்ததும் மஹிபாலும் சஜ்ஜனும் தத்தம் வழியே நடந்தனர், சஜ்ஜன் மஹிபாலை அவனுடைய வீடு வரையிலாவது அல்லது அவன் செல்ல விரும்பும் இடம் வரையிலாவது காரில் விட்டுவரலாம் என்று விரும்பினான். தான் தனித்து நடக்க விரும்பிய மஹிபால் காரில் செல்ல மறுத்து விட்டான். ஒட்டலின் வராந்தாவில் சஜ்ஜனுடைய சிறிய வண்டி நிறுத்தப்பட்டிருந்தது. சஜ்ஜன் தன் வண்டியைப்பற்றி பேசியவுடன் மஹிபாலுக்குத் தன் வண்டி நினைவிற்கு வந்தது. ரூப்ரத்தன் தரவிருக்கும் வண்டியைத் தான் அவன் 'தன் வண்டி' என்று சொல்லிக்கொண்டான். ரூப்ரத்தன் அவனிடம், "நீ பெரிய ஆசிரியரப்பா! உன்னிடம் நிச்சயமாக ஒரு வண்டி இருக்க வேண்டும்" என்று கூறியிருந்தான். இதை மஹிபால் வரவேற்றான். ஆனால் எட்டு அல்லது பத்தாயிரம் ரூபாய் கொடுத்து வண்டிவாங்குவது இயலாத காரியம். தானமாக ரூப்ரத்தனிடம் வண்டியை வாங்கிக்கொள்வதையும் அவனுடைய உள்ளம் ஏற்கவில்லை. ரூப்ரத்தன் இரண்டாயிரத்து ஐந்நூறு அல்லது மூவாயிரம் ரூபாய்க்குத் தன் பழைய வண்டியை விற்க நினைத்தான். மஹிபாலின் மனம் சஞ்சலம் அடைந்தது. வீட்டிற்கு வந்து அவன் கல்யாணியிடம் இதைப்பற்றிக் குறிப்பிட்டான். வண்டி என்றவுடனேயே ரஜ்ஜோ, தப்பு முதலிய எல்லாக் குழந்தைகளும் ஆசையுடன் வந்து சூழ்ந்துகொண்டனர். இனிமேல்

பதிப்பிக்கவிருக்கும் புத்தகங்களுக்கு ராயல்டி தொகையை ரூப்ரத்தன் முன் பணமாக தர இருப்பதாகப் பெருமையடித்துக் கொண்டான், மஹிபால். அதன்பிறகு வெகு விரைவில் வண்டி வீட்டிற்கு வந்தாக வேண்டும் என்று வீட்டில் எல்லோரும் கருதத் தொடங்கினர். மகன் டிரைவிங் கற்றுக்கொள்ளத் திட்டமிட்டான். கல்யாணி காருக்கு மாதாந்தரம் என்ன செலவாகும் என்று கணக்கிடத் தொடங்கினுள். ரூப்ரத்தனின் பதிப்பகத்தில் தான் இரண்டு மணி நேரம் தினசரி வேலே பார்க்கப்போவதாகவும், அதற்காக வண்டிக்கு ஆகவேண்டிய செலவையும் அவனிடமிருந்து வசூல் செய்து விடப் போவதாகவும் மஹிபால் கூறினுன். அதன்பிறகு யோசிக்க இடமேது? குழந்தைகள் கொம்மாளம் போட்டனர். சகுந்தலாவின் திருமணத்திற்கு முன்பே வண்டியைக்கொண்டு வருவது சரியில்லே என்று கல்யாணி கருதினுள். வண்டியைப்பார்த்து வரதட்சணே அதிகம் வேண்டும் என்று பிள்ளே வீட்டார் கேட்டுவிடப் போகிருர்களே என்ற பயம் அவளுக்கு. மஹிபாலும் அப்படியே கருதினுன். ஆனுல் சஜ்ஜன் என் வண்டி என்றதுமே, மஹிபாலுக்கும் தன் வண்டியின் நினைவு வந்துவிட்டது. சஜ்ஜன் எவ்வளவோ வற்புறுத்தியபோதிலும் அவன் தனியாக ரிக்ஷாவில் செல்ல முடிவு செய்துவிட்டான். போதை மயக்கத்தில் தெருவின் எழிலெல்லாம் இவனது சொந்த உடைமைபோல் தோன்றிற்று. ப்ளாசா சினிமா, மற்றும் பக்கத்திலிருக்கும் ப்ரின்ஸ் சினிமாக் கொட்டகைகளில் அலங்காரத்துடன் மக்கள் குழுமியிருந்தனர். வண்டிகள், ரிக்ஷாக்கள், சைக்கிள்கள் இவற்றின் மிகுதி தெருவைக் கோலாகலமாகச்செய்து கொண்டிருந்தது. இந்தக்காட்சி மஹிபாலின் போதையை இருமடங்காக்கியது. ஒரு வெற்றிலேக் கடைக்காரனிடம் மஹிபால் வங்காளி பீடா வாங்கித்தின்றுன். சிகரெட்டும் வத்திப்பெட்டியும் வாங்கி ஜோபியில் போட்டுக்கொண்டான். கடையில் மாட்டப்பட்டிருந்த கண்ணுடியில் தன் எழிலே மஹிபால் பார்த்துக்கொண்டான். அனுமார் கோவிலேக்கடந்து அவன் செல்ல ஆரம்பித்தான். ரிக்ஷாக்காரன் ஒருமுறை மஹிபாலேப் பார்த்துவிட்டு மேலே நடந்தான். மஹிபாலின் மதிப்புக் குறைக்கப்பட்டது போல் இருந்தது. கீழே இறங்கி அவனே அடிக்கலாமா என்று மஹிபால் நினேத்தான். போதையில் நடப்பது சரியல்ல என அவன் கருதினுன். கார் பற்றிய 'மூட்' ஒருபுறம்; மறுபுறம் ரிக்ஷாக்காரன் பார்த்த பார்வை. அவனுடைய கௌரவம் ஆத்திரம் என்னும் சாணேயில் தீட்டப்பட்டது. இப்போதே சென்று ரூப்ரத்தனின் வண்டியை விலே பேசி விட்டால் என்ன என்று அவன் நினேத்தான். டீக்கடைக்கருகே சென்ற அவன் ஒரு காலி ரிக்ஷாவைப் பார்த்தான்; ''சவாரிக்கு வருகிருயா?'' என்றுன். ''இல்லே சாமி.'' மஹிபாலின்

பிடிவாதம் வலுத்தது. ரிக்ஷாக்காரனைத்திட்ட வேண்டும் என்னும் ஆசை மேலிட்டது. ஆனால் எல்லையை மீறிவிடக்கூடாது எனும் பகுத்தறிவும் இருந்தது. தெருவைக்கடந்து நாற்சந்தியை அடைந்த மஹிபால், ரிக்ஷாக்காரர்கள் கூவிக்கொண்டிருந்த போதிலும் ரிக்ஷாக்காரனைப் பழிவாங்கும் எண்ணத்தில் குதிரை வண்டியில் ஏறிக்கொண்டான். இப்போது, முடிவுசெய்தபடி அவன் ரூப்ரத்தனுடைய வீட்டிற்குக் காரை விலைபேசச் சென்று கொண்டிருந்தான்.

வண்டியில் சற்றே சாய்ந்துகொண்டு சென்ற மஹிபாலுக்கு இப்போது அருகில் சென்று கொண்டிருந்த வண்டிகளைப் பார்த்து ஆத்திரம் வரவில்லை, அப்போது எல்லா வண்டிகளின் சொந்தக் காரர்களும் அவனுடைய உறவினரைப்போல் தோன்றினர். இதே தெருக்களில் மஹிபாலின் வண்டியும் ஒரு நாள் செல்லும்...எதிரே வரும் சிறிய வண்டியில் உட்கார்ந்திருக்கிறார்களே அவர்கள் சதிபதிகளாக இருக்கலாம்... நானும் கல்யாணியுடன் இம்மாதிரி...உடனே கல்யாணியுடன் சென்றால் ஒருவித மகிழ்ச்சியும் இருக்காது என்பதும் நினைவிற்கு வந்தது. அவள் ஒரு பட்டிக்காடு. பல தடவைகள் சீலாவும் அவனும் காரில் சென்றிருக்கின்றனர். மஹிபாலுக்குச் சீலாவின் நினைவு வந்தது. சீலா அவனுக்கு ஒரு தீங்கும் இழைக்கவில்லை. அன்று சஜ்ஜனுடைய வீட்டில் சீலா அவனிடம் எப்படிக் கெஞ்சினாள்? சீலாவுடன் உறவை முறித்துக்கொண்டது மாபெரும் அநீதந்தான் என்றும் அவனுக்கு தோன்றிற்று. சீலாவுடன் உறவை வைத்துக்கொண்டால் இந்தச் செல்வமெல்லாம் அவளுடையது தான் என்று உலகம் நினைக்கும். மஹிபால் இப்படி நினைத்ததுமே துடிதுடித்தான்; ரூப்ரத்தனுடன் வேலை பார்த்துப் பணம் சம்பாதிப்பதை யாராவது கண்டித்தால் தவறு கிடையாது. பலர், பலருடன் இம்மாதிரி பொருளாதார உறவை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஒரு பெண்ணுடன் சேர்ந்து பணம் சம்பாதிக்கும் விஷயம் களங்கமாயிற்றே! இதை மஹிபால் ஒரு போதும் விரும்பமாட்டான். அதனால்தான் இனி சீலாவுடன் அவன்தொடர்பு கொள்ள விரும்பவில்லை.

குதிரை வண்டி நிதானமாகச் சென்று கொண்டிருந்தது. மஹிபால் சீலாவைப்பற்றி நினைத்து மனம் சஞ்சலப்பட்டான். புற உலகத்துச் செல்வாக்கை மனிதன் அன்பைவிட அதிகமாக மதிக்கிறானே, இது அநீதம் என்று அவனுக்குத் தோன்றியது. வண்டி, பங்களா, வேலையாட்கள் போன்ற செல்வாக்குகளில் சுகமும் நிம்மதியும் இருந்தாலும், சிறந்த பரந்த எண்ணங்களுக்கெதிரே அவற்றிற்கு மதிப்பே கிடையாது. தன் இளமையில் சில கோட்பாடுகளுக்காக மஹிபால் எத்தனையோ முறை செல்வத்தை

உதறியிருக்கிறன். தன் பாட்டனர் வீட்டுச் செல்வாக்கையே அவன் தன் கோட்பாடுகளுக்காகத்தான் துறந்தான். ரூப்ரத் தனையும் உதறித் தள்ளினன். தம்பியின் திருமணத்தில் வரதட்சணை வாங்கவில்லை; தம்பியின் முன்னேற்றத்திற்காகத் தன் மனைவி யுடைய நகைகளையும் விற்க அவன் தயங்கவில்லை. அதே மஹிபால் இன்று அந்தச் செல்வாக்கிற்காக எவ்வளவு பெரிய சிறந்த கோட்பாடுகளைத் துறக்கச் சித்தமாகிவிட்டான்! அவன் எத் தகைய கடையனுகி விட்டான். பல மாதங்களாகிவிட்டன. அவன் ஓர் எழுத்துக்கூட எழுதவில்லை. தன் வீட்டில் நாற்புறங்களிலும் எங்கும் தன் செல்வத்தைக் காண்பித்துக் கொள்வதிலேயே அவனுடைய நாட்கள் கழிந்து வந்தன. தன் நாவலை ஆரம்பித்த போது இது மிகவும் நூதனமானதொரு படைப்பாக இருக்கும் என்று கருதினன். அது இன்னும் முற்றுப் பெருமல் கிடக்கிறது. பல தடவைகள் அதைத் தொடர்ந்து எழுத அவன் விரும்பினன்; ஆனல் அவனுடைய கற்பனை பஞ்சுபோல் சிதறிவிட்டது. சஜ்ஜன் வெகு விரைவில் முன்னேறத் தொடங்கி விட்டான். இப்போது அவன் அடைந்துள்ள புகழைப் பார்த்தால், மஹிபாலினல் அவனை எட்டிப்பிடிக்க முடியாது போல் இருக்கிறது. மஹிபால் அதனல் பொருமை கொள்கிறன். ஆனல் பொருமைப்படுவது வீண்! முன்னேறும் சமுதாயம் மக்களுடைய பொருமை நிறைந்த கருத்துக்களுக்கு ஒரு போதும் மகத்துவம் அளிப்பதில்லை. சஜ்ஜ னுடைய சமூகப் புரட்சி மனப்பான்மையை எதிர்த்து நேற்று மஹிபால் எழுதிய கட்டுரை தர்க்க ரீதியாகச் சரியாயிருந்தது போல் காணப்படினும், முற்றும் உசிதமற்ற கருத்துக்களைக் கொண் டிருந்தது. இவ்விதம் சமுதாயத்தின் அழுக்குகளை வெளிப்படுத்து வதால் சமுதாயத்தில் அழுக்குகள்தான் அதிகமாகும் என்று மஹிபால் எழுதியிருந்தான். தான் எழுதியது இப்போது சரி என்றுதான் அவன் நினைக்கிறன். ஆயினும் அழுக்கை வெளிப் படுத்துவதுமட்டும் சஜ்ஜனின் குறிக்கோளன்று என்பது மஹிபா லுக்கு நன்ருகத் தெரியும். தற்சமயம் அவன் பாபாராம்ஜீயின் செயல்களால் ஊக்குவிக்கப்பட்டிருந்தான். கன்யாவின் உதவியும் அவனுக்கு அநுகூலமாகவே கிட்டி வந்தது. இன்றைய பேச்சில் சஜ்ஜனுடைய உறுதி, அவனுடைய களங்கமற்ற கோட் பாடுகள் இவை யாவும் தெளிவாகப் புலப்பட்டன. எங்கே குறிக் கோள் கபடமற்ற செயல் வடிவில் கொண்டு வரப்படுகிறதோ, அங்கே அழிவு தலை தூக்க ஒருபோதும் இடம் இராது. மஹிபாலின் உள்ளத்தில் இது தெளிவுபடப் பட அவனுடைய பச்சாத் தாபமும் அதிகரித்தது. அவன் எங்கே சென்று கொண்டிருக்

கிறான்? எங்கே செல்பவன் எந்தப் பக்கம் திரும்பிவிட்டான்? தெய்வமே! இதென்ன நடக்கிறது!

மாறிக் கொண்டிருக்கும் நாட்டில், நேரத்தில், சமுதாயத்தில் இப்போது மோட்டார் வண்டியின் சொந்தக்காரன் மஹிபால் தேவையா? அல்லது எழுதுகோலைப் பிடிக்கும் ஆசிரியர் தேவையா? துளசீதாசர் பொருளாதாரச் சக்கரத்திலேயே சுழன்று கொண்டிருந்தால் இன்று அவரை எவன் நினைவில் வைத்திருப்பான்; அக்பரின் பொருட்குவியலைப் பார்த்து அவர், 'ஒரு கோவணமும் உப்பில்லாக் கஞ்சியும் போதுமே?'' என்று கூறியிருக்க மாட்டாரே! துக்கம் மிகுந்த பல கணங்களில் துளசீதாசரின் இந்த ஈரடிச் செய்யுளில் மஹிபால் மனநிம்மதியை அடைந்திருக்கிறான் :

''ஒரு கோவணமும் உப்பில்லாக் கஞ்சியும் போதுமே எனக்கு இதிலிருக்கும் மன நிறைவு இந்திரனுக்கு ஏது?''

பெரு மூச்சுடன் மஹிபால் முணுமுணுத்தான். மடிந்து போன உற்சாகத்தின் இரங்கல் செய்தி போலத்தான் இந்த ஈரடிச் செய்யுள் தற்சமயம் மஹிபாலுக்குத் தோன்றியது. மஹிபாலின் உள்ளம் நலிவடைந்துவிட்டது. இந்தச் சலிப்பில் வங்கியில் சேர்த்து வைத்துள்ள முப்பத்தெட்டாயிரம் ரூபாய் அவனது நினைவிற்கு வந்தது. அவன் காரின் விலை பேச ரூப்ரத்தனின் வீட்டிற்குச் சென்று கொண்டிருக்கிறான். 'டேம் சமுதாயம்! கோட்பாடம்! நாசமாய்ப் போகட்டும். கடன் வாங்கி நெய்ப் பாயாசம் சாப்பிடப்பா! கோட்பாடுகளில் சாரிவாகரின் இந்தக் கோட்பாடுதான் சிறந்தது. கடன் வாங்கி நெய்யாய்க் குடியப்பா!'

அங்கஹீனமானவனுடைய உள்ளத்தைப்போல் அவன் சலிப்படைந்த தன் உள்ளத்தைச் செலுத்த விரும்பினான். ஆனால் அது செல்லவில்லை. அவனால் முடியாது. காரணம் தற்போது அவனுக்கு ஒரு வண்டி வேண்டும். ஒரு சிறு பங்களாவும் வேண்டும். அந்தஸ்துடன் வாழ்க்கையை நடத்த எல்லாம் வேண்டும். 'ஒரு கோவணமும் உப்பில்லாக்கஞ்சியும்'...அந்த மன நிறைவு வேண்டாம். கோட்பாடுகளைக் கொண்ட ஆசிரியர் மஹிபால் சுக்லாவின் உணர்வு இப்போது செத்துவிட்டது. மஹிபால் இறந்துவிட்டான்; இதை நினைந்து அவனது உள்ளம் விம்மிற்று.

இடது பக்கம் திரும்பிய குதிரை வண்டி ரூப்ரத்தனின் மனைக்குள் நுழைந்தது.

## 47

தாயியின் வீட்டில் ராதாகிருஷ்ணனின் திருமண ஏற்பாடுகள் அமர்க்களமாக நடந்து கொண்டிருந்தன. பாபாராம்ஜீயின்

பக்வான் ராதையை மணக்க வருவார். வெகு தொலைவிலுள்ள தெருக்களிலும் பேட்டைகளிலும் ராதாகிருஷ்ணன் திருக் கல்யாணம் பற்றிய பேச்சில் மக்களின் தினசரி வாழ்க்கை மிகவும் சுவாரஸ்யமாகக் கழிந்தது. சிரித்துக்கொண்டும் பாடிக்கொண்டும் மக்கள் தாயியின் ஏற்பாடுகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். இதில் தாயி ஐம்பதாயிரம் ரூபாய் செலவிடப் போவதாகவும் வதந்தி பரவலாயிற்று. அழுக்குச்சேலையுடன் எப்போதும் சிடு சிடுவென்றிருக்கும் தாயி, சுற்றியுள்ள தெருக்களில் பில்லி சூனியம் போடும் அவள், மக்களின் குழந்தைகளின் சீண்டுதலுக்கும் ஆளாகும் தாயி இதற்காக ஐம்பதாயிரம் ரூபாய் செலவிடுவதா? இந்தச் செய்தி மக்கள் பலரை ஆசையடையச் செய்தது. என்ன செய்தால் நமக்கும் ஐம்பது ரூபாய் கிட்டும் என்று மக்கள் திட்டம் வகுக்கத் தொடங்கினர். ஆனால் யாருடைய தந்திரமும் அங்கே பலிக்க வழி கிடையாது. பண விஷயம் முழுவதையும் சஜ்ஜன் கவனித்து வந்தான். உள்ளே நடக்கும் வேலைகளைத் தாயிக்கு ஈடான வயதுள்ள நான்கு கிழவிகள் கவனித்துக் கொண்டனர். கன்யா, தாரா, இளைய மருமகள் ஒருவருக்கும் உக்கிராண அறை யிலோ சமையலறையிலோ வேலை கிடையாது. காரணம் அவர்கள் சம்பிரதாயத்திற்கு மாறாக நடந்துகொண்டவர்கள். ஆயினும் தாயி கன்யாவிடம் கணக்கு வழக்குப் பொறுப்பு முழுவதையும் ஒப்படைத்திருந்தாள்.

வீடு முழுவதும் திருமண ஏற்பாடுகளால் அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. மணங்குக் கணக்கில் அல்வாவும் பல இனிப்புப் பண்டங்களும் தயார் செய்யப்பட்டன. ஊர்வலத்தில் வரும் பெண்டிர் எல்லோருக்கும் சேலையும், ஆடவருக்கு வேட்டியும் அளிக்கப்படும். துணி மூட்டையை அறைக்குள் பூட்டிச் சாவியைத் தாயிக்குக் கொடுக்க வேண்டிய வேலை வனகன்யாவுடையது. தாயி தன் உறவினர் அனைவரையும் அழைத்திருந்தாள். சக்களத் தியின் வீட்டுக்கும் அழைப்புச் சென்றிருக்கிறது. கன்னிகாதானம் செய்து கொடுக்கும்படி சஜ்ஜனின் வாயிலாக ராஜா சாஹேப் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தார். ஆனால் எல்லா மாயை மோகத்தையும் துறந்து விட்டதால் உலக விவகாரம் எதிலும் தாம் பங்குகொள்ளப் போவதில்லை எனத் தெரிவித்து விட்டார். ராதையைக் கன்னிகாதானம் செய்து கொடுக்க வேண்டும் என்பது தாயியின் பேரவா. அவளுடைய மகள் உயிருடன் இருந்தால் அவளைக் கன்னிகாதானம் செய்து கொடுத்திருப்பாள். ஆனால் மகளில்லாவிட்டால் என்ன, ராதையும் மகளைப் போலத்தான் உலகத்து நாயகியைக் கன்னிகாதானம் செய்து கொடுப்பதை விடப் புண்ணியமான காரியம் வேறு உண்டா? ஆனால் நாளை

சாஹேப் மறுத்துவிட்டார். கணவனில்லாமல் மனைவி மட்டும் எப்படிக் கன்னிகாதானம் செய்து கொடுப்பாள்? இது தாயியை மிகவும் வேதனைக்கு ஆளாக்கியது. 'வராவிட்டால் போகிறான். பாவி மனுசன்! என்னுடைய எந்த வேலைக்கும் அவன் உதவ மாட்டான்! என் அதிருஷ்டத்தால்தான் கோடீசுவரனாகியிருக்கிறான். அந்தப்பீடை சக்களத்தியின் பேச்சைக் கேட்டுக்கொண்டு என்னைப் பாடாய்ப் படுத்துகிறான்! என் போன்ற பத்தினிப் பெண் சபித்தால்?' பயங்கரமாகச் சபிக்கமுற்பட்ட தாயி ஏனோ நிறுத்திக் கொண்டாள். சினத்திற்குப் பதிலாக அவளுடைய கண்கள் நீரைச் சிந்தின. கண்களைத் துடைத்துக்கொண்டு அவள் வேலையில் ஈடுபட்டாள்.

ராஜா சாஹேப் இப்போது சலவைக்கல்லில் ஒரு சிலை செய்ய ஏற்பாடு பண்ணிக்கொண்டிருந்தார். சலவைக்கல் வாங்கியாகி விட்டது. தோட்டத்தில் நடுவிலிருந்த நீர் ஊற்றை எடுத்து விட்டு அங்கு ஒரு திண்ணை செய்யப்படுகிறது. நான்கு புறங்களிலும் மண்டபங்கள் கட்டப்படுகின்றன. அவருடைய ஈமக் கிரியைகள் அங்குதான் நடக்கவேண்டும் என்பது அவரது விருப்பம். அதன்பிறகு ராஜா சாஹேபின் சிலை வைக்கப்படும். மண்டபத்தின் படம் தயாராகிவிட்டது. ராஜாசாஹேபின் உயிலில் அதற்கான செலவும் குறிக்கப்பட்டுவிட்டது. இறந்தபிறகும் அவரது புகழ் மங்காமல் இருக்க வேண்டும் என்பது அவரது அவா. எல்லாச் சடலங்களும் எரிக்கப்படும் இடத்தில் அவரது உடல் எரிக்கப்படக் கூடாது என்பதற்காகத் தம் தோட்டத்தையே அதற்காக அவர் தேர்ந்தெடுத்தார். மாயை, யோகம் இவற்றிலிருந்து விடுபட்டுத் தம் மரணத்திற்குப் பிறகு நடக்க வேண்டிய உற்சவத்திற்கான ஏற்பாடுகளில் அவர் ஈடுபட்டார்.

திலகம் இடும் உற்சவம் நடந்தது. திரளாக மக்கள் கூடினர். லாலா முகந்தீமல்லின் வீட்டிற்கருகில் ஒரு கூட்டம் ஏற்பாடாயிற்று. தன் சக்களத்தியின் மகனுடைய திருமணத்தில் நடந்ததைவிடத் தடபுடலாக இந்த உற்சவம் நடக்க வேண்டும் என்பது தாயியின் அவா. சஜ்ஜனின் மேற்பார்வையில் மிகவும் அழகான மண்டபம் தயாராயிற்று. பனை ஓலைத்தட்டிகள் நாற்புறங்களிலும் சுவர்போல் காட்சியளித்தன. தென்னாட்டுக் கோயில் கோபுர வாயில்களைப்போல் ஜோடனை நடந்தது, உள்ளே பகவானுடைய மண்டபம் அலங்கரிக்கப்பட்டது. ஆயர்பாடியே இங்கு வந்துவிட்டாற் போன்றிருந்தது. ஒருபுறம் பிருந்தாவனத்து மாடலும் மறுபுறம் மதுராவின் மாடலும் தயாரிக்கப்பட்டன. கோகுலம், நந்தக் கிராமம், பர்சானு எல்லாம் உருவாயின. கோவர்த்தனமலை, மானஸீ கங்கையின் பெருக்கம், ராதாகுண்டம், கிருஷ்ண

குண்டம், மலர்க்குளம் எல்லாம் காட்சியளித்தன. கோவர்த்தனத்தின் உச்சியில் ஓர் அழகிய மண்டபம், அதில் கிருஷ்ண பகவான் வீற்றிருந்தார். இந்தத் திருமணத்திற்கு ஆசாரியார் ஸ்ரீதர மகாபாதிரர், ராதா-கிருஷ்ணரின் தங்க விக்கிரஹங்களை அளித்தார். கிருஷ்ணர் அங்கிருந்தார். ராதை தாயியின் வீட்டிலே இருந்தாள். மின்சாரத்தினால் ஆடும் மயில்கள், ஓடும் மான்கள், மைதானத்தில் மேயும் மாடுகள், மதுரா பிருந்தாவனத்தைக் கடந்து பாயும் யமுனை, மலைகளிலிருந்து ஓடும் அருவிகள் எல்லாம் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தன.

இந்த அழகைக்காண மக்கள் ஆயிரக் கணக்கில் வந்தனர். திலகம் இடும் உற்சவம் முடிந்தபிறகு மண்டபத்தில் பஜனை-கீர்த்தனை நடந்தது. நகரத்து எல்லா பஜனை மண்டலிகளும் ஒன்று சேர்ந்து அகண்ட பஜனை நடத்தின. மண்டபத்தையும் நாற்புறத்துப் பந்தலையும் காப்பதற்குப் போலீசை வரவழைக்க வேண்டியிருந்தது.

பாபாஜீ சம்பந்தியாக உட்கார்ந்திருந்தார். அவருடன் யமுனைத்துறையிலிருந்த பண்டாக்கள், குருடர், முடவர், சாதுக்கள், துறவிகள் எல்லோருமே வெற்றிலை மென்று கொண்டு தம்மை ஒரு நாளைக்கு அரசு செலுத்தும் மன்னரென நினைத்துக் கொண்டிருந்தனர். எல்லோரும் நெற்றியில் சந்தனப் பொட்டிட்டிருந்தனர். கழுத்தில் மலர்மாலை. தாயியின் வீட்டிலிருந்து சீர் வரிசைகள் வந்தன. முப்பது தட்டுகளில் லட்டு, பத்துத் தட்டுகளில் திரட்டுப்பால், பத்துத்தட்டுகள் நிறையப் பழங்கள், மாப்பிள்ளைக்கு மாலை, மோதிரம், ஆடைகள், ஆயிரத்து நூற்றொரு ரூபாய் பரிசம், பகவானுக்குப் பொட்டு இடப்பட்டது.

பிறகு திருமணக் கோலாகலம். பெண் வீட்டிலிருந்து மறுபடியும் சீர்வரிசைகள் வந்தன. ஊர்வலத்தன்று தெருக்கள் முழுவதும் மக்கள் திரளாகக் கூடிவிட்டனர். தாயியின் வீட்டிற்குள் நுழைய இடமில்லை. ஷெனாய், பாண்டுகளின் பல ரகங்கள் முதலிய தயாராக இருந்தன. மக்கள் கண்ணனைக் காண ஆவலுடன் காத்திருந்தனர். பலவிதமான பொம்மைகள் அலங்கரிக்கப்பட்டன, கண்ணன் வெண்ணெய் திருடி உண்ணுதல் போன்றவை அழகாக இருந்தன. இதற்காகவே மதுராவிலிருந்து ஒரு கலைஞன் வந்திருந்தான். ஹம்ஸ விமானத்தில் மின் விளக்குகள் பளிச்சிடக் கிருஷ்ண பகவான் ஊர்வலம் கிளம்பினார். மக்கள் ஆங்காங்கே ஆரத்தி எடுத்தனர். தாயியைப் பாராட்டினர். கங்கை-யமுனைக் கரையில் பகவானை வீற்றிருக்கச் செய்து வீடுகளில் மக்கள் மலர்மாரி பொழிந்தனர். பல ஆண்டுகளாக இம்மாதிரியான ஊர்வலம் நடந்ததே கிடையாது.

தாயியின் வீட்டில் ஒருவருடைய பேச்சை மற்றவர் கேட்க முடியாதபடி அவ்வளவு அமர்க்களம். பெண்கள் சாமான்களை எடுத்துக்கொண்டு இங்குமங்கும் ஓடினர். பெண்களுக்கிடையில் கோகுலத்துத் தாடிக்காரக் கிழவனும் தென்பட்டான். கன்யா, தாரா, இளையவள் எல்லோரும் ஓடிக்கொண்டிருந்தனர். தாயி மின்சாரத்தால் ஆனவள்போல் பறந்தாள். வற்றி உலர்ந்த உடலை வைத்துக்கொண்டு பெரிய பெரிய பாத்திரங்களைச் சுமந்து சென்றாள். பூஜையறையிலிருந்த இரண்டு அண்டாக்களை எடுக்கச் சென்ற தாயி ஒரு பூனை அதிலிருந்து குதிக்கவே நடுங்கிப் போனாள்: "சனியனே, எவ்வளவு நேரமாக இங்கு அடைபட்டுக் கிடக்கிறாய்?"

தாயியின் காலில் தலையைத் தேய்த்துக் கொண்டு அவளுடைய வேகத்தை 'கிஸன்' நிறுத்திவிட்டது. ஓரடிகூடத் தாயி வைக்க முடியாமல் தவித்தாள். தாயியையே பின் தொடர்ந்து கிஸன் வந்தது. எதிரே தாடிக்காரக் கிழவன் தென்பட்டான். தாயி அவனிடம் கூறினாள்: "பித்தரியா! யாரிடமாவது கொஞ்சம் பால் கேட்டுவாங்கி வாருங்கள். கிஸன் என் காலைக் கட்டிக்கொண்டு விடமாட்டேன் என்கிறது. வேலை கிடக்கிறது, சனியன்!".

பஜனை பாடுபவர் தாயி அளித்த வேட்டியை உடுத்திக் கொண்டு வந்தார். தாயியையும் பூனைக்குட்டியையும் தம் அகன்ற கண்களால் பார்த்தபடி கூறினார்: "தாயி உன் கண்ணன் பிரமாதம் போ! யசோதையுடன் கிஸன் காணக் கிடைத்துவிட்டானே!" பக்திப்பரவசத்தில் தாயியின் கால்களில் பக்தர் விழுந்தார். தாயி தன் கவலையில் ஈடுபட்டிருந்தாள். திடீரென்று பக்தர் விழுந்து வணங்குவதைக் கண்டு அவள் கத்தினாள்; "சனியன்! யாரடா இது? பஜனை பாடுபவரா? ஏனையா உனக்குக்கூட இந்த வேளையிலா பக்தி வரவேண்டும்? பெண்ணுக்குத் திருமணம் நடக்க விருக்கிறது, ஆயிரம் கவலைகள்! இங்கிருந்து தொலைந்து போ! இந்தா இந்தப் பூனைக் குட்டிக்குப் பாலை வார்த்துவிட்டுப் போ!"

திருமண மண்டபத்தில் பேட்டையின் மற்றுமுள்ள பெரிய மனிதர்கள் உட்கார்ந்திருந்தனர். பண்டிதர் சிவநாத் சாஸ்திரி, லால் முகுந்தீமல், பாபு குலாப்சந்த், தலால், பபூதி, வர்மா, ராதேச்யாம்! லாலா ஜானகிசரண், மஹிபால், கர்னல், சேட் ரூப்ரத்தன், தாயியின் சக்களத்தியினுடைய மூத்தமகன் கிரிதர்தாஸ் ஆகியோர். கிரிதர் அடிக்கடி பாபா ராம்ஜீயைப் பார்த்துக்கொண்டிருந்தார். தாயியிடமிருந்து வரதட்சணையாக இருபதாயிரம் ரூபாய் பாபா பெற்றுக்கொண்டதாக அவர் கேள்விப்பட்டிருந்தார். அதனால் சாதுவின் பேரில் அவருக்கு வெறுப்பு உண்டாயிற்று. அருகில் அமர்ந்திருந்த ஜானகிசரணிடம் கேட்டார்: "இந்த பாபா யார்?"

''பைத்தியம் பிடித்தவர்களுக்கு வைத்தியம் பார்க்கிறவர்.''

"இந்த மனிதன் இருபதாயிரம் ரூபாயை என்ன செய்வான்?''

லாலா ஜானகிசரண் புன்சிரிப்புடன் பேசினார்: ''கிழப்பருவத்தில் பாபாவுக்கு அதிருஷ்டத்தைப் பாருங்கள்! துண்டு உடுத்து வதற்குப் பதிலாகப் பட்டுக்காவியுடை தரிப்பார், மடத்தை நிறுவுவார், பிரமாதமாக நெய்யில் பூரி தின்பார்! என்ன, உனக்குப் பிடிக்கவில்லையா?''

கிரிதர் சங்கோசப்பட்டார். சில கணங்களுக்குப் பிறகு கூறினார்: ''அம்மாவின் செலவைக் குறையுங்கள் என்று எத்தனை தடவை அப்பாவிற்குச் சொல்லியிருக்கிறேன், தெரியுமா? முப்பது ரூபாய்க்கு மேல் அவருக்கு வேண்டாம்.''

''அடே! அத்தனைதான் வாடகையிலிருந்தே கிடைத்து விடுமே.'' லாலா ஜானகிசரண் கூறினார்.

''அப்பா கேட்கமாட்டேன் என்கிறார். நான் என்ன செய்வேன்? நம் காசு தண்ணீர் பட்டபாடு படுகிறது, பாருங்கள்; கஷ்டப் பட்டுச் சேர்த்த பணம் இப்படிப் பறக்கிறது. சஜ்ஜனுடைய மேற் பார்வை வேறு; எப்படித்தான் இவன் பெரியம்மாவைத் தன் கைக்குள் போட்டுக் கொண்டானோ தெரியவில்லை.'' லாலா கிரிதர் தாஸ் கோலாகலத்துடன் காட்சியளிக்கும் கூட்டத்தைப் பெரு மூச்சுடன் வறண்ட பார்வை பார்த்தார்.

ஜானகிசரண் கூறினார்: ''பேட்டையிலுள்ள மக்கள் இவனுடைய அறையைத் தாக்கியபோது பார்க்க வேண்டுமே! கொள்ளிக் கட்டையை எடுத்துக்கொண்டு தாயி அவர்களைத் தாக்க வந்தாள். எல்லோர் பேரிலும் மந்திரத்தை ஏவினாள். இவள் வீட்டை இந்தச் சஜ்ஜன் தாயியிடமிருந்து பிடுங்கிக்கொண்டு விடுவான் பார்!''

''உம், இவனிடம் அவ்வளவு திறமை இருக்கிறதா என்ன? இவ னிடம் அப்படி என்ன சொத்துக்கிடக்கிறது? அதிகமிருந்தால் ஆறு அல்லது ஏழு லட்சம் இருக்கும். நிலம் எல்லாம் போய் விட்டது. இவனால் 'பிசினஸ்' செய்யவே முடியாது. ஆர்ட்டிஸ்ட். மூன்று அல்லது மூன்றரை லட்சம் மதிப்புள்ள சொத்து இருக்கிறது. அதிலிருந்து வரும் வரும்படியில் காலத்தைக் கழிக்கிறான். ஏதோ கொஞ்சம் ரொக்கமும், தங்கம் வெள்ளியும் உண்டு. 'க்யூரியோ' கொஞ்சம் உண்டு. வீட்டின் பேரில் கண்ணைச் செலுத்தினானோ இருபத்தைந்து வழக்குகளில் சிக்கவைத்துவிடுவேன். பத்து வருடங் களில் ஆசாமி புட்பாத்திற்கு வந்துவிடுவேன். 'க்யூரியோ'வை விற்றுச் சாப்பிடும்படி செய்து விடுவேன்.'' கிரிதரின் கண்களில் குரூரம் தெரிந்தது.

ஜானகிசரண் கூறினார்: ''அப்படி நடக்காது. பையன் பக்காப் போக்கிரியாக்கும். பெரிய தலைவனைப் பார்த்துக்கொண்டிருக்

கிறுன். நான்கே நாட்களில் 'பவர்புல்' (சக்திவாய்ந்தவன்) ஆகி விடுவான். உங்கள் வீட்டிவிருந்து அவன் அசைய மாட்டான்.''

''அசைவதாவது? அவனுடைய மனைவி இங்கே பள்ளிக்கூடம் ஆரம்பித்திருக்கிருள். எல்லாரையும் அவமானப்படுத்திவிட்டு அவன் இங்கே சித்திரக் கண்காட்சியையும் திறந்து வைத்திருக் கிருன்! இப்போது பாபாவிடம் வேறு மாட்டிக்கொண்டிருக்கிருன். தேனொழுகப் பேசிக்கொண்டு இங்கே உட்கார்ந்தபடியே யாரையும் அவமானப் படுத்துவான்.''

மஹிபாலும் கர்னலும் சற்றுத்தொலைவில் அமர்ந்தபடி பேச்சில் மூழ்கியிருந்தனர். மஹிபால் ரூப்ரத்தனிடமிருந்து சிறிய மோட்டார் வண்டியை விலை கொடுத்து வாங்கி விட்டான். இன்று முதல்முறையாக அவன் தனி வண்டியில் இங்கு வந்திருந்தான். மஹிபாலும் கர்னலும் அதைப்பற்றித்தான் பேசிக் கொண்டிருந் தனர். சஜ்ஜன் வேலைகளில் மனத்தைச் செலுத்தியவனாய் இங்கு மங்கும் ஓடிக்கொண்டிருந்தான்.

மகளைப்பிரியும் நேரம் வந்தது. மணமகனும்—மணமகளும் விடைபெற்றுச் செல்லும் நேரம். பெண்டிர் பாட ஆரம்பித் தனர். திருமணத்தின் மிக மும்முரமான கணத்தில் தாயி அமைதி யாக நின்றுவிட்டாள். ராதையின் விக்கிரஹத்தை அவள் கையி லெடுத்தாள். தன்னைப்பிரிந்து செல்லப்போகும் மகள் சின்னஞ் சிறு பெண் இவள்—தாயிக்குத் தன் மகளின் நினைவு வந்தது. அவள் மகளை அணைத்துக்கொண்டாள். அவளுக்கு மயக்கம்வந்தது. ஒரே அமர்க்களம்: விசிறி—தண்ணீர் எல்லாவிதமான சேவையும் தொடங்கின. பாபாஜீ. சஜ்ஜன், கன்யா மூவரும் தாயியைக் கவனித்துக்கொண்டனர். தாயி சுய உணர்வை அடைந்தாள். உலர்ந்த எலும்புகளில் மறுபடியும் சக்திவந்துவிட்டது. மறுபடியும் உற்சவம் தொடங்கியது. வெளியே இதற்காக வைக்கப்பட்டிருந்த ரதத்தில் ஆசனம் போடப்பட்டது. சங்கு, மணி, எல்லாம் ஒலிக்க 'ராதாகிருஷ்ணனுக்கு ஜே' என்ற ஒலி கிளம்பியது. பிரிந்து செல்லும் சகோதரியைச் சகோதரர்களுக்குக் குங்குமப்பொட்டிடும் படி தாயி பணிந்தாள். முதலில் சஜ்ஜனுக்குப் பண்டிதர் பொட் டிட்டார். பிறகு தாயியின் உறவினர்களுக்குப் பொட்டிடப் பட்டது. ரதம் சென்றது. பெண்டிர் பாடிக்கொண்டேயிருந்தனர். தாயி ஒரு கணம் ரதத்தைப்பார்த்தாள். கண்ணீர் நிரம்பிய கண் களுடன் அழுதாள். அவளுக்கு மறுபடியும் மயக்கம் வந்துவிட்டது.

தெருக்களில் வெள்ளைக்குதிரை பூட்டிய ரதம் செல்ல, மணமகளை உற்சாகத்துடனும் பக்தியுடனும் மக்கள் திரள் திரளாக நின்று பார்த்தனர்.

*  *  *  *

தாயியின் வீட்டுத் திருமண அமர்க்களம் பழைய கதையாகி விட்டது. தாயியிடமிருந்து பாபுவுக்குச் சுமார் இருபத்தைந் தாயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் கிடைத்தன, அவற்றை அவர் கர்னலிடம் கொடுத்து வைத்திருந்தார். இந்த ரூபாயை எப்படிச் செலவழிப்பது என்பதுபற்றித் தாயியின் வீட்டில் ஒரு நாள் உட்கார்ந்துகொண்டு பாபா, சஜ்ஜன், கன்யா, கர்னல் நால் வரும் சிந்தித்துக்கொண்டிருந்தனர். தாயியிடமிருந்து கிடைக்கும் பணத்தில் பைத்தியக்காரரின் விடுதியைச் சரிப்படுத்தவேண்டும் என்றும், பாவச்செயல்களிலிருந்து காப்பாற்றப்பட்ட பெண்களின் நல்வாழ்விற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் திருமணம் நடப் பதற்கு முன்பு முடிவு செய்யப்பட்டது; ஆனால் இப்போது பாபா வின் கருத்து மாறிவிட்டது, அவர் கூறினார் 'அப்பா! நான் நகரத்தில் வாழ விரும்பவில்லை. கிராமங்களுக்குச் சென்று எளிய மக்களுக்குத் தொண்டாற்ற விரும்புகிறேன்.' போக்குவரத்து வசதிகளின்றி மக்கள் அல்லலுறும் கிராமம் ஒன்றில் நான் இருக்க விரும்புகிறேனப்பா. அங்கு நோய் வாய்ப்பட்ட மக்களுக்கும், சித்த சுவாதீனமில்லாத மக்களுக்கும் சேவை புரிய விழைகிறேன். கிராமத்துப் பெண்கள் கல்விக்காக ஒரு பள்ளியும் திறக்கலாம் என்று கருதுகிறேன்''

சஜ்ஜன் கேட்டான்: ''இங்குள்ள எல்லாத்திட்டங்களையும் தோல்வியடையச் செய்துவிடப்போகிறீர்களா என்ன!''

''நான் யாரப்பா தோல்வியும் வெற்றியும் கொண்டுவருதற்கு? இங்கே பணத்திற்குக் குறைவு கிடையாது. யாரிடமும் பண உதவி கேட்காமலேயே இங்கே நம் திட்டத்தை வெற்றிகரமாக நிறை வேற்றி விடலாம்.''

ஒருகணம் ஆழ்ந்த மனநிலையில் இருந்துவிட்டுச் சஜ்ஜன் மறுபடி யும் கூறினான்: ''பணத்தாசையினின்று நான் இப்போது நிச்சயமாக விடுபட்டு விட்டேன், பாபாஜீ! ஆயினும் சொத்து முழுவதையும் தானமாக அளிக்குமளவு உள்ளத்தில் தெம்பு இன்னும்வரவில்லை.''

''மகிழ்வுடன் நீ எவ்வளவு தர விரும்புவாய்?''

''மூன்று லட்சம்.'' கர்னலும் கன்யாவும் சஜ்ஜனையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

பாபா கூறினார் : ''அதுவே அதிகம்! இந்தப் பணத்தில் சரியாக வேலையை நடத்தினால் மகத்தான சாதனை புரியலாம்.''

''ஆனால் என்ன செய்வது? ஏழைகளை உட்கார வைத்துச் சாப்பாடு போடலாம் என்றால் இந்த மூன்று லட்சமும்''

''உட்காரவைத்துச் சாப்பாடு போடுவது நம் கொள்கைக்கு மாறானது, தம்பி கடமையைச் செய்துவிட்டு வயிறு நிரம்பச் சாப்பிடட்டும். அதற்குத் தகுந்த ஏற்பாடு செய்யுங்கள்.

''அந்த மாதிரி ஏற்பாடு செய்வது மிகவும் கடினம் ராம்ஜீ; மன்னிக்க வேண்டும்'' என்று கர்னல் பணிவுடன் கூறினான்.

''மகனே, ஆரம்பத்தில் எந்த வேலையும் எளிதில்லே. பயிற்சி பெறப் பெற எந்த வேலையும் எளிதாகிவிடும்.''

''அது உண்மைதான், பாபாஜீ காலத்தின் போக்கையும் பார்க்க வேண்டும். இப்போது ஆசிரமத்தின் பேரில் யாருக்கும் நம்பிக்கை கிடையாது.'' கர்னல் இவ்விதம் கூறினான்.

''வேலே செய்யாதவனுக்கு ஊதியம் கிடைக்காது; உழைப்பவன் தான் ஊதியம் பெறுவான். நீங்களும் இப்படி ஓர் ஆசிரமத்தை நிறுவுங்கள். இந்தச் சொல் மக்களுக்குப் பிடிக்காவிட்டால், கூட்டுறவுச் சங்கம் என்று பெயரிடுங்கள், எனக்குப் பெயரில் ஒன்றுமில்லே. செயலுக்கு மகத்துவம் அளிப்பவன் நான். இந்தப் பெண் மெள்ள மெள்ள இந்தப் பேட்டையில் பள்ளிக்கூடத்தைப் புகழ்பெறச் செய்துவிட்டாள் பாருங்கள்! நீங்களும் இப்படிப்பட்ட கல்விக்கூடங்களையாவது அமையுங்களேன். பெண்களுக்கும் சிறுவர் களுக்கும் பல கலேகளேக் கற்றுக் கொடுங்கள். அந்தக் கலேப் பொருட்களேக் கடைகளில் விற்பனே செய்யுங்கள். நான் கிராமங் களிலும் இதைத்தானப்பா செய்யப்போகிறேன். பொருளற்ற ஏழைகளுக்குப் பணம் கிட்ட வேண்டும். இந்த விதமாகப் பார்த் தால் நகரம், கிராமம் இரண்டுமே பசித்துத்தான் கிடக்கின்றன. இரண்டையும் பொருளாதாரத்துறையில் சமமாக்க வேண்டும். அப்படிச் செய்யுங்கள்.''

''ஆனல் இப்போது அது முடியாது போல் தோன்றுகிறது.'' கன்யா கூறினாள்: ''நகரத்தில் மனசை ஈர்க்கும் சாதனங்கள் அதிகம்; தேவைகள் அதிகம், இங்கே பணமும் அதிகமாகத் தேவைப் படுகிறது.''

''மனசை ஈர்ப்பவைதான் அதிகம், மகளே, தேவைகள் அவ்வளவு அதிகம் என்று கூற முடியாது. சரி, இதுபற்றி நான் விவாதிக்கவில்லே. நான் கிராமத்திற்காக இருபத்தைந்து ஆயிரமும், நகரத்திற்காக மூன்று லட்சமும் கொடுக்கப்போகிறேன். இந்த மூன்று லட்சத்தில் குடிசைத் தொழில்களே விருத்தி செய்யலாம். நகரத்து மக்களே நாணயமின்றி நடந்து கொள்வதிலிருந்து காக்க லாம். பெண்கள் நலன் விடுதியில் பொருளாதார நிலேயில் நலிவடைந்த பெண்டிரைச் சேர்த்துக்கொண்டு அவர்களது வாழ் வைச் சீர்ப்படுத்தலாம். அவர்களுடைய வாழ்வில் நேர்மையை நிறுவலாம். மற்றுமொரு விஷயம் மாவுக்கேற்றபடிதான் பணி யாரம் அமையும் என்பது நினேவிருக்கட்டும். நீங்கள் எவ்வித மான சூழ்நிலேயை அமைப்பீர்களோ அப்படித்தான் சமுதாயமும் இருக்கும் என்பதை நினேவில் வைத்துக் கொள்ளுங்கள்.''

தனிமையில் பாபா சஜ்ஜனிடம் கூறினார்: ''உங்களிடம் ஒரு வேண்டுகோள் ராம்ஜீ!''

"நீங்கள் எனக்கு குரு! ஆணையிடுங்கள் பாபாஜீ!''

''அப்படியானால் தட்சணை கேட்கலாமா?''

சஜ்ஜன் சங்கோசமடைந்தான். அவனுடைய தலையை அன்புடன் வருடியபடி பாபா கூறினார்: "அதனால்தான் வேண்டுகோள் என்றேன். முழுமையாக பிரம்மசரியத்தைக் கடைப் பிடிக்க முடியாவிட்டாலும் சரி, இயன்றவரை தன்னடக்கத்துடன் வாழவேண்டும். மனிதனது வீரியம், அறிவு என்னும் ஆலைக்கு விறகு போன்றது; இதை மறக்கக்கூடாது. எந்த வேலையிலாவது மனதைச் செலுத்தினால் அதை வெற்றியுடன் சாதிப்பதற்காக முழுச் சக்தியையும் செலுத்திச் செயல்பட வேண்டும்.''

சஜ்ஜன் தலை குனிந்தபடி பேசினான்: ''முயற்சி செய்கிறேன்.''

"உண்மையான சமுதாயவாதி யார் தெரியுமா? பிறருக்காக உயிர் வாழ்பவன், தானும் வாழ்ந்து பிறரையும் இன்புற்றிருக்கச் செய்பவன்.''

''நிச்சயமாக நான் காலத்துடன் செல்வேன். நல்வழியில் செல்ல எனக்கு மிகுந்த உற்சாகத்தைத் தாங்கள் எனக்கு அளித்திருக்கிறீர்கள்.'' என்று கூறிய சஜ்ஜன் பாபாஜீயின் கழலடிகளில் விழுந்து பணிவுடன் வணங்கினான்.

## 48

சஜ்ஜன் நாளடைவில் எப்போதும் வேலை செய்துகொண்டேயிருக்க ஆரம்பித்தான். தன் மூன்று லட்ச ரூபாயைக் கொண்டு அவன் ஒரு 'டிரஸ்ட்' ஏற்படுத்தினான்; அதைப் பதிவும் செய்து விட்டான். கர்னல், வனகன்யா, தலைமை நீதிமன்றத்தினின்று ஓய்வெடுத்த நீதிபதி ஒருவர், முக்கியமான அரசாங்க உத்தியோகஸ்தர் ஒருவர், சஜ்ஜன் ஆகியோர் டிரஸ்டின் உறுப்பினராயினர். தன் திட்டத்தில் அவன் முதல் முதலாக ஓர் அரசாங்க வங்கியை நிறுவினான். நகரத்து ஒவ்வொரு பகுதியிலும் ஒரு வங்கி இருக்க வேண்டும் என்று அவன் கருதினான். அதில் அங்குள்ளவரின் மூலதனம் சேர வேண்டும். அதன் உதவியைக்கொண்டு பொது மக்களின் நலனுக்காகத் தொழில்களை ஏற்படுத்த முடியும். சஜ்ஜனுடைய திட்டத்தைச் செயல் முறையில் நடத்துவதற்காக ஓய்வு பெற்ற வங்கி நிர்வாகி ஒருவரும், சஜ்ஜனுடைய கணக்குப் பிள்ளையும் நியமிக்கப்பட்டனர்.

வங்கியை நிறுவுவதற்காக நகரத்துப் பிரிவின் பிரமுகர்களை

டாக்டர்கள், வக்கீல்கள், ஆசிரியர்கள், தனவான்கள் ஆகியோரை சஜ்ஜன் அழைத்து ஒரு கூட்டம் நடத்த விரும்பினான். அன்றி லிருந்தே ஜானகிசரண் சஜ்ஜனுடைய கடும் பகைவராகிவிட்டார். மற்றும் சில பணக்காரர்களும் இதனை எதிர்த்தனர். இந்தக் கூட்டுறவு வங்கி நடுத்தர வகுப்பினரைக் கடனிலிருந்து விடுவிப் பதாக அறிவித்திருந்தது. இன்று நகரங்களில் இருக்கும் நடுத்தர வகுப்பினரில் 85 சதவிகித மக்கள் அநீதமான முதலாளிகளை எதிர்பார்த்து வாழ்பவர்கள். திருமணம், பூணூல் அணிவது, காது குத்துதல், நோய்க்குச் சிகிச்சை எல்லாவற்றிற்கும் பணம் தேவை. சிறு வரும்படியில் வாழ்ந்து வரும் நடுத்தரக் குடும்பத்தாருக்குப் பணம் கொடுத்துதவப் 'பணக்காரர்'கள் தேவை. பணக்காரர் களுக்குக் கடன் கொடுக்க முதல் பலமாகத் தங்கம் தேவை. நடுத்தர வகுப்பினரில் பலருடைய தங்கம் இந்தத் தனவந்தர்களின் இரும்புப் பெட்டிக்குள் வந்துவிடுகிறது. அங்கிருந்து கிளம்ப வழியே கிடையாது. கடனென்னும் சேற்றில் கழுத்துக்கும்மேல் வரை மூழ்கிய நடுத்தர வகுப்பினர் ஓயாக்கடன் காரணமாக, விடியாத வறுமைநிலை காரணமாக அவர்களுடைய வசைகளுக்கும், அவமானத்திற்கும் ஆளாகிவிடுகின்றனர். சஜ்ஜன் அவர்களை விடுவிக்க விரும்புகிறான் என்பது அந்தச் செல்வந்தர்களுக்கு எப்படியோ தெரிந்து விட்டது. இது அவர்களுக்குப் பிடிக்கவில்லை, வனகன்யா இந்தக் கருத்தை எதிர்ப்போர்களைத் தாக்கிக் காரசார மாகப் பேசிவிட்டாள். இந்தச் 'சிவந்த' கம்யூனிஸப் பேச்சைக் கேட்ட பலர், ஜானகிசரணும் கூடக் கூட்டத்திலிருந்து எழுந்து சென்றுவிட்டனர்.

இந்தக் கூட்டம் சஜ்ஜனுடைய திட்டத்திற்குப் பலம் அளித்தது. சஜ்ஜன் ஒரு தனவந்தன். மூன்று லட்ச ரூபாய் கொடையளித் துள்ளான். பணக்காரர்களின் எதிர்ப்பையும் பொருட்படுத் தாமல் ஊக்கமாக உழைக்க நிச்சயித்திருக்கிறான். இவை காரண மாக அவன் பொது மக்களின் பெரு மதிப்பைப்பெற்று விட்டான். படித்தவர்களும் சிறு மூலதனத்துடன் கூடிய கூட்டுறவு வங்கியை ஆதரித்துப் பேசினர். ஒவ்வொரு பிரிவில் வாழும் மக்களின் நிதியைக் கொண்டே வங்கியை நடத்தினால், அவர்களுடைய நலனுக்காகத் தொழிற்சாலைகளை நிறுவ முடியும். இவற்றால் மக்களின் வாழ்க்கை மலர்ச்சியுறும். இவ்விதம் சிறு சிறு வங்கிகள் தமக்குள் ஒன்றுக்கொன்று உதவும்படி அமைந்தால் இன்னும் நல மாக இருக்கும். சஜ்ஜனைப் போல் சர்க்காரும் பொருளுதவி நல் கினால், சட்டப்படி தனிப்பட்ட முதலாளிகளை ஒழித்துக் கட்டி விட முடியும். குடிசைக் கைத்தொழில்கள் நிறுவத்திட்டம் வகுக் கலாம். அவமானப்பட்டுக் கொண்டு மங்கி வாழ்ந்து வரும் நடுத்

தர வகுப்பினர் அப்போது தம் பொய் வாழ்க்கையை விட்டுவிட்டு உண்மையான மனிதராய் வாழ முடியும்.

'சௌக் வார்டு கூட்டுறவு வங்கி' பெரியதோர் இயக்கமாகவே தோன்ற ஆரம்பித்தது. தேவைப்பட்டவருக்கெல்லாம் வங்கி கடன் அளித்தது. அதற்குப் பதிலாக அவர்களிடம் வேலையும் பெற்றுக்கொண்டது. இவ்விதம் நாணயமாக வாழ்ந்துகொண்டு கடனிலிருந்து விடுபட ஒவ்வொருவருக்கும் வாய்ப்பளிக்கப்பட்டது. இந்தத் திட்டம் எல்லோருக்கும் பிடித்திருந்தது. கைத்தறி ஆலை, ரப்பர் பொம்மைகள் செய்யும் சாலை, பலூன் செய்யப்படுமிடம், புதிய டிசைன்களில் துணிகளைப் 'பிரின்ட்' செய்து கொடுப்பது போன்ற தொழில்களைச் சஜ்ஜன் இந்த வங்கியுடன் இணைத்து ஆரம்பித்தான். அந்தப் பிரிவிலுள்ள மக்களே அங்கு வேலை பார்க்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. பெண்கள் வீட்டிலிருந்த படியோ, அல்லது தாயியின் வீட்டிற்கு வந்தோ வேலை செய்ய அநுமதிக்கப்பட்டனர்.

ஒவ்வொரு வாரமும், புதன் கிழமை தோறும் விடுமுறை; அப் போது வரலாறு, பண்பாடு, புராணம் முதலியன பற்றிச் சொற் பொழிவாற்ற ஏற்பாடு செய்யப்பட்டது. நாடகங்களின் வாயி லாக மக்களுக்குக் களிப்பூட்டுவதுடன் கல்வியறிவும் வழங்கத் திட்டம் வகுக்கப்பட்டது. இரண்டு மாதங்கள் வரை சஜ்ஜனுக் கும் வனகன்யாவிற்கும் மூச்சுவிடக் கூட நேரமில்லை. இருவரும் பொதுத்துறையில் விசித்திரமான போராட்டத்தில் சிக்கிக் கொண்டனர். சமுதாயத்தில் அவர்களுடைய நிலைமைஅடுப்பில் அரை வேக்காட்டுடன் நின்ற பருப்பைப் போல் ஆகி விட்டது. அவர்களுடன் சமுதாயம் மனம் விட்டுப் பழகவில்லை. வழியில் போகிறவர் அன்புடனும் பழகினார்கள்; கூடவே ஏதோ பேசிக் கொண்டும் சென்றார்கள். எல்லோருடைய நன் மதிப்பையும் சஜ்ஜன் பெற விரும்பினான். மக்கள் தத்தம் பிரச்னைகளைக் கூற அவனிடம் வர ஆரம்பித்தனர். முதலில் உற்சாகமும், மகிழ்ச்சி யும்கொண்ட சஜ்ஜன் மக்களுடைய தொண்டன் என்று நிரூபிப் பதில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தினான். மக்களுடைய நிலைகண்டு அவனுடைய உள்ளத்தில் இரக்கம் தோன்றியது. ஆனால் அந்த இரக்கம் பதிலுக்கு அவர்களிடமிருந்து எதையோ எதிர் பார்த்தது. நாளடைவில் வேலை அதிகரிக்கவே சஜ்ஜனுடைய உற் சாகமும் குறைய ஆரம்பித்தது. அவனுக்கு நேரம் கிடைக்க வில்லை. சிந்தனையிலும் செயலிலுமே அவனுடைய பெரும் பாலான நேரமும் கழிந்தது.

தாயியின் நோய் அதிகமாக ஆரம்பித்தது. மஹிபால் வீட்டுத் திருமணநாளும் நெருங்கிக் கொண்டிருந்தது. சஜ்ஜன், கன்யா

இருவரில் யாராவது ஒருவர் தாயியின் அருகாக எப்போதும் உட்கார்ந்திருக்க நேர்ந்தது. சஜ்ஜன் வேலைகளில் ஈடுபட்ட பிறகு மஹிபால் அவனிடமிருந்து சற்று விலகியே இருக்க ஆரம்பித்தான். கர்னலைப்போல் ஒரு நண்பனுக்குச் செய்ய வேண்டிய உதவியைக் கூடச் செய்ய இயலாதவன் சமூகத் தொண்டு என்ன செய்துவிடப் போகிறுன் என்று மஹிபால் சஜ்ஜனைப் பற்றி நினைத்தான். கல்யாணியும், கன்யாவும் செய்த முடிவைப் புறக்கணித்து விட்டு, சஜ்ஜனுடைய வீட்டில் நடத்துவதற்குப் பதிலாக ரூப்ரத்தனின் வீட்டில் மஹிபால் சகுந்தலாவின் திருமணத்தை நடத்த ஏற்பாடு செய்தான். சேட்ரூப்ரத்தன், ஜானகிசரண் இருவருடைய தூண்டுதலின் பேரிலும் சஜ்ஜனுடைய புதிய திட்டங்களைக் கண்டனம் செய்து ஒரு சிறு புத்தகம் எழுதி மஹிபால் உள்ளத்து விஷத்தை வெளியே கொட்டி விட்டான்! அவன் எழுதியிருந்தான்: ''சஜ்ஜன் வர்மா என் நண்பர்; ஆனுல் நட்பும் பொதுநலனும் ஒன்றுக்கொன்று முரணும் பட்சத்தில், நான் நட்பை உதறித் தள்ளி விட்டுப் பொது நலனுக்குத்தான் மகத்துவம் அளிப்பேன். இது தலையாய கடமையாகும். மனிதாபிமானம் வேண்டுவதும் இதுதான்; பொது மக்களின் நலனைக்கருதும் பொருட்டு வங்கி நடத்துவதாகக் கூறிச் சஜ்ஜன் இடும் திட்டம் அவர்களைத் தன் அடிமையாக்கிக் கொள்ளத்தான். பழைய தலைமுறையைச் சேர்ந்த வட்டிக்கடைக்காரர்களில் சிலர்தாம் சமுதாயத்து மக்களுக்கு நஷ்டம் உண்டாக்குகின்றனர். ஆனுல் இந்தத் திட்டமோ முழுச் சமுதாயத்தையும் விழுங்கிவிடப் போடப்பட்டது. பாரதப் பண்பாட்டைப்பற்றிச் சஜ்ஜனுக்கு என்ன தெரியும்? அவன் கற்றுக்கொண்டதெல்லாம் மஹிபாலிடமிருந்துதான். இப்படிப்பட்ட அரைகுறை அறிவை வைத்துக்கொண்டு சமுதாய நலனுக்காகச் சீர்திருத்தத்தில் இறங்கினுல், பாரத சமுதாயத்தின் நல்ல பரம்பரையையே அடியோடு ஒழிக்கும் வழியாகும். கலை நிகழ்ச்சிகளின் கோரிக்கைகளைச் சாக்கிட்டுக் கொண்டு குடிசைத் தொழில்களின் வாயிலாக மக்களை தன் வசப்படுத்தும் தந்திரம் இது. இப்போதே முளையிலேயே இதனைக் கிள்ளி எறியப்படவேண்டும். இல்லாவிட்டால் இது சமுதாயத்திற்கே ஊறு விளைவிப்பதாகும்.. நெஞ்சகத்தே நஞ்சைக் கொண்டு அன்புடன் கண்ணனுக்குப் பால் கொடுக்க வந்த பூதகியைப் போன்றது இந்தத்திட்டம்! மஹிபாலின் கட்டுரையின் மொத்தக் கருத்து இது.

இந்தச் சிறு புத்தகம் பெருமளவில் எல்லோருக்கும் விநியோகிக்கப்பட்டது. சில தினங்களுக்குப் பிறகு ஜானகிசரணின் வீட்டுத் திண்ணையில் தாயியின் கிருஷ்ணபகவான் அலங்கரித்து வைக்கப்பட்டிருந்தார். அதே இடத்தில் அவர் ஒரு பொதுக்கூட்டத்திற்கு

ஏற்பாடு செய்திருந்தார். அங்கு மற்றப் பேச்சாளர்களுடன் மஹிபாலும் சொற்பொழிவாற்றினன்.

சஜ்ஜன் மஹிபாலின் இந்தப் போக்கைக் கண்டு சிறிதும் வியப் படையவில்லை, ஆனல் வருத்தம் அடைந்தான். ஆன்ம பரிசோத னையில் அவன் தீவிரமாக ஈடுபட்டான். பொய் வாத விவாதங் களைச் சேர்த்து மஹிபால் பேசியிருந்த போதிலும் இந்தத் திட்டத் தில் சஜ்ஜனுடைய ஆசையோ சுயநலமோ இருக்கலாமோ என்னவோ? அப்படியிருந்தால் அவன் எடுத்துக்கொண்ட வேலை வெற்றிகரமாக இயங்காது. பலருடைய விருப்பங்களும் சமமாகச் சேர்ந்தால்தான் ஒரு பொதுச் செயலில் வெற்றி காண முடியும். வேலையில் இங்குமங்கும் அலைந்து திரிந்தபோதிலும் சஜ்ஜன் இடை விடாமல் தன்னைத் தான் பரிசீலனை செய்து வந்தான். தன் மானம் அவனிடம் போதிய அளவு இருந்தது. திறமைக் குறைவு காரண மாகத்தான் எடுத்துக் கொண்ட வேலை பாதிக்கப்பட்டால் அது அவனுக்குச் சிறிதும் பிடிக்காது. பிறரை விட மஹிபாலின் விமர் சனத்தைக் கேட்டு அவன் துடிதுடித்தான். மஹிபாலின் வார்த் தைகளை அர்த்தமற்றவையாக்க அவன் தன் சொந்த ஆசைகளைத் துறந்து தன் செயல் திறனைக் காண்பித்தாக வேண்டும்!

சங்கர்லால், வர்மா போன்ற பல இளைஞர் சஜ்ஜனுடன் இருந் தனர். திட்டங்களை எடுத்துக் கொண்டு பலர் அவனிடம் வந்தனர். அவனுடைய செயல்களைப்பற்றி மக்கள் அறிந்துகொண் டிருந்ததால், அவனிடம் மதிப்புடன் அவர்கள் நடந்துகொள்ள ஆரம்பித்தனர். ஜானகிசரண், மஹிபால் போன்றவர்கள் சஜ்ஜனைப்பற்றி அவதூறுகப் பேசவே, சஜ்ஜனுடைய நண்பர்களில் மாற ஆரம்பித்தனர். இதைப்பற்றிய பேச்சு எங்கும் பரவத் சிலர் தொடங்கியது. தத்தம் அறிவுக்கேற்ப மக்கள் சஜ்ஜனுடைய சார்பிலும் சேர்ந்துகொண்டனர். சஜ்ஜனுடைய நண்பர்கள் அவனை எதிர்ப்பவர்களுக்கு ஒரு பொதுக் கூட்டத்தில் காரசார மாகப் பதிலளித்தாக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தனர்.

சஜ்ஜன் இதுபற்றிச் சிந்தித்த வண்ணம் இருந்தான். அன்றே அவன் ஒரு வீட்டிற்குச் செல்ல நேர்ந்தது, ஒரு பேட்டையில், ஆஸ்பத்திரி ஒன்றை நிறுவ ஏற்பாடு செய்து கொண்டிருந்தான். ஹோமியோபதி, ஆயுர்வேதம், அலோபதி, பரிசோதனைக்கூடம் எல்லாமே ஓரிடத்தில் அமைந்துள்ள ஆஸ்பத்திரி ஒன்று காசியில் இருப்பதாக மக்கள் கூறினர். இத்தகைய சிகிச்சைக் கூட்டத்தால் அருகில் வாழும் மக்களுக்குப் பெரிதும் நன்மையாக இருந்தது. இந்த விருப்பம் சஜ்ஜனுடைய உள்ளத்தில் இருந்தது. நடத்த இடம் கிடைக்காத காரணத்தால் அவனல் ஒன்றும் செய்ய இயல

வில்லை. ஒரு பெரிய வீடு விலைக்கு வந்திருப்பதாக அவன் கேள்வி யுற்றான். அதை விலை பேசி வாங்கிவிட விரும்பினான்.

வீடு மிகப் பெரியதுதான். வீட்டின் சொந்தக்காரர் இரண்டாம் உலகப்போரின்போது லட்சாதிபதியாகிவிட்டார். தம் கௌரவத்தை வெளிக் காண்பித்துக் கொள்வதற்காகவே அவர் சொத்தை ஊதிப்பறக்கவிட்டவர். அருகிலிருந்த மற்றத் தனவந்தரின் வாழ்க்கை முறை, செலவு முதலியவற்றுடன் போட்டியிட்டு வந்தார். பல பெரிய மனிதர்களைத் தம் கைக்குள் போட்டுக் கொண்டார். ஒரு முறை வாழ்க்கையின் போக்கு மாறிவிட்டால், மறுபடியும் வாழ்க்கைத் தரத்தைக் குறைத்துக்கொள்வது சிரமம். ஆகவே, கடன் அதிகமாகிவிட்டது. அதன் சுமை அதிகரிக்கவே குட்டு வெளிப்பட்டுவிட்டது. சிறை, நீதிமன்றம், சட்டப்படி திவால் இவற்றிலிருந்து தப்புவதற்காகவே தம்சொத்தை விற்க முற்பட்டார். தங்கம், வெள்ளி, மோட்டார் வண்டி, பாத்திரங்கள் எல்லாவற்றையும் விற்று ரொக்கமாக்கினார்.

சஜ்ஜனுடைய அநுபவம் நிறைந்த கணக்குப்பிள்ளை வீட்டைப் பார்த்துவிட்டு வந்தார். தாமதமாக்கினால் நல்ல சொத்து கையை விட்டு நழுவி விடப் போகிறதே என்று அவர் அஞ்சினார். சஜ்ஜன், மஹிபாலுக்குப் பதிலளிக்கக் கூட்டத்தில் பேசுவதை விட்டு, ஆஸ்பத்திரிக்காக வீடு வாங்குவதில் முனைந்தான்: ''மஹிபால் கக்கும் நஞ்சிற்கு இந்த அமிழ்தந்தான் பதில். மௌனமான பதில்!''

கூட்டம் நடத்த வேண்டும் என்று வற்புறுத்திய நண்பர்களுக்குச் சஜ்ஜன் அளித்த பதில் இது. திடீரென்று நாம் கூறும் வார்த்தையில் நமக்கே நம்பிக்கையிருக்கிறதா என்று அவன் சிந்தித்தான். நாம் தப்பித்துக்கொள்வதற்காக எதையாவது திட்டமிடுகிறோம். நம் லட்சியம் என்ன என்பதையே, அதில் மூழ்கிய நாம் மறந்துவிடுகிறோம். இந்த அறிவின்மையால் நாம் தேவையற்ற தொல்லைகளில் போய்ச் சிக்குண்டு விடுகிறோம். சஜ்ஜன் மக்களின் நலனுக்காகவே தான் பாடுபடுகிறானா? அவன் புகழை விரும்பவில்லையா? சமூகச் செயலில் ஈடுபடுவதை விட ஓவியத்தில் அவனுக்கு அதிகப் புகழ் கிட்டும். அவனுடைய உள்ளம் இவ்விதம் நினைக்கத்தானே செய்கிறது?

கேள்விகள் அவனைச் சூழ்ந்துகொண்டன. ஒவ்வொரு விஷயத்திலும் ஆமாம்—இல்லை என்று அவனது உள்ளம் கூறிக்கொண்டே வந்தது. சுயநலமற்ற சமூகத்தொண்டு—இல்லை, அவன் புகழை விரும்புகிறான்; ஆனால் புகழடைய விரும்பி ஓவியத்தை விட்டு விட்டுத் தன் பூர்வீகச் சொத்தின் பலத்தால் அவன் பெரிய தலைவனாக விரும்புகிறான் என்பது முற்றும் பொய். இதெல்லாம் அவனுடைய வாழ்வில் சிரமமின்றித் தாமாகவே வந்தவை. எந்தக்

கேள்வியுடன் அவன் பாரத நாட்டுச் சமூகங்களின் நிலைமையைக் கண்டறிய வந்தானே, அந்தக் கேள்வி பொய்யல்ல. அது அவனுடைய ஆத்மாவினின்றும் எழுந்த கேள்வி. பொது மக்களிடமிருந்து தனித்து இருந்தபோது எந்தக் கேள்விக்குப் பதில் கிட்டவில்லையோ, அந்தக் கேள்விக்கு விடையைப் பெறவே அவன் பொதுமக்கள் வாழும் இடத்திற்கு வந்தான். அவனுடைய உற்சாகமும், உணர்ச்சி வேகமும், திரியும் போக்கும் அவனை இங்கே கொண்டு சேர்த்தன. இன்னும் அவன் பொதுமக்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளவில்லை. ஆனால் அவர்களுக்காக அவனது உள்ளத்தில் இராப்பகலாக இரக்கம் சுரந்தது. ஆகையால் அவன் ஈடுபட்டிருக்கும் பொதுச் செயல் முற்றும் சுயநலமற்றது இல்லை என்றாலும், புகழுடைய விழையும் முழுச் சுயநலம் கொண்டது என்றும், அதைக் கூற முடியாது! புகழைவிட அவன் அதிகம் விரும்புவது மக்கள் நலன்தான். எப்போதும் செயலில் ஈடுபட்டிருக்கும் அவனுடைய உள்ளத்தினின்றும் இப்போதெல்லாம் புகழைப் பெறவிருக்கும் ஆசை அழிந்து வந்தது. அப்படியிருக்க மஹிபாலைப்பற்றி அவன் ஏன் தவறாக நினைக்கவேண்டும்? பதிலுக்கு ஒரு கூட்டம், இப்போதும் அவன் விரும்புவது உண்மைதானே! வீட்டைப் பார்க்கச் செல்லாமலிருந்தால், அவனுக்குச் சிறிது ஓய்வு நேரம் கிடைத்திருந்தால், அவன் அதைப்பற்றி இன்னும் தீவிரமாகச் சிந்தித்திருப்பான்.

சஜ்ஜனால் இந்த உண்மையை மறுக்க முடியவில்லை!

## 49

வீடு இருபதாயிரம் ரூபாய்க்கு வாங்கப்பட்டது. ஆஸ்பத்திரிக்கு வேண்டிய சாமான்களை எதிர்பார்த்துக் காத்துக்கிடப்பதை சஜ்ஜன் உசிதமாகக் கருதவில்லை. ஆண் டாக்டர் ஒருவர், லேடி டாக்டர் ஒருத்தி, வைத்தியர், ஹக்கீம், ஹோமியோபதியில் தேர்ந்தவர்—இத்தனை பெயரையும் நியமித்தான். வாரத்தில் இரண்டு தினங்கள் வரும்படி நகரத்துப்புகழ் பெற்ற டாக்டர் ஒருவரையும் டாக்டர் சீலா ஸ்விங்கையும் கேட்டுக்கொண்டான். தன் சொந்த அலுவல் நேரத்தில் பாதி நேரத்தை அவனுடைய ஆஸ்பத்திரிக்கு உதவுவதாகச் சீலா வாக்களித்தாள். சஜ்ஜனும், கன்யாவும் பெரிதும் மகிழ்ச்சியுற்றனர். பரிசோதனைக்கூடம், மருந்துக் கடை இவற்றிற்கு வேண்டிய பொருள்களை வாங்கும் பொறுப்பு கர்னலுக்கு அளிக்கப்பட்டது.

டாக்டர் சீலாவின் தியாக உணர்ச்சியைத் திசையெங்கும்

பாராட்டிப் பரப்புவதில் சஜ்ஜன் ஈடுபட்டான். நகரத்துச்செய்தித் தாட்களிலும் இந்தச் செய்தி பிரசுரமாயிற்று. இதில் சஜ்ஜனுடைய சுயநலம் ஒன்றும் பகிரங்கமாகத் தெரியா விட்டாலும், மஹிபாலின் பேரில் பழிவாங்கும் உணர்ச்சி அவனிடம் இருக்கத்தான் செய்தது. சஜ்ஜன், மஹிபாலை புண்படுத்த முற்பட்டான்.

மஹிபால் உண்மையில் வருத்தமடைந்தான். சீலாவைத் தன் எதிரியின் வட்டாரத்திற்குக் கொண்டுவந்து தன்னைச் சஜ்ஜன் அவமானப்படுத்த விரும்புகிறான். இவ்வாறு மஹிபால் எண்ணினான். சஜ்ஜனை அவன் வெறுக்க ஆரம்பித்தான், சாணக்கியனைப் போல் உள்ளத்தீ கொழுந்து விட்டெரிந்தது. தான் பிறந்த இடத்துத் தனவந்தரின் பண்புகள் அவனுடைய நரம்புகளில் அலை பாய்ந்தோடின; சஜ்ஜனை ஏறி மிதித்துவிட்டால் என்ன, அவன் மீது நாயைக் கடிக்கவிட வேண்டும், குழி வெட்டிப் புதைக்கவேண்டும் என்று அவன் எண்ண ஆரம்பித்தான். சீலாவின் பேரிலும் அவனுக்குச்சினம் மூண்டெழுந்தது. அவள் சஜ்ஜனுடன் ஏன் செல்ல வேண்டும்? இதற்குத்தான் காதல் என்று பெயரா?

வீட்டில் திருமணத்தடபுடல் ஆரம்பமாகி விட்டது. சகுந்தலாவின் தந்தையைச் சேர்ந்தவர், மஹிபாலின் மற்றொரு சகோதரி, அவளுடைய குழந்தைகள் எல்லோரும் திருமணத்தில் பங்கு கொள்ள வந்து விட்டனர். சேட் ரூப்ரத்தன் தன் வீட்டின் ஒரு பகுதியைத் திருமணத்திற்கென ஒதுக்கிவிட்டான்; திருமணத்திற்கு வேண்டிய பொருள்களெல்லாம் சுமந்து செல்லப்பட்டன. எல்லோரும் தத்தம் வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். மஹிபாலின் உள்ளம் மட்டும் பொறாமையால் சிதறுண்டிருந்தது. மிகமிகப் பெரிய நஷ்டத்தை, சஜ்ஜனுக்கு உண்டாக்க அவனது உள்ளம் ஒவ்வொரு கணமும் திட்டமிட்டுக்கொண்டிருந்தது. ஒரு வழியும் புலப்படவில்லை. சிடுசிடுவென்று அவன் எல்லோர்மீதும் சீறி விழுந்தான். காலையில் வண்டியை எடுத்துக்கொண்டு செல்வது, ராஜாசாஹேப், ரூப்ரத்தன், அமைச்சர், துணையமைச்சர் என்று எல்லோரையும் சந்திப்பது, அங்கே சஜ்ஜனைப்பற்றி அவதூறாகப் பேசுவது இப்படி அவனது நேரங்கழிந்தது. கம்யூனிஸ்ட்—மனைவியின் பேச்சைக் கேட்டுக்கொண்டு மக்களையும் கம்யூனிஸ்டாக்கப் பார்க்கிறான் என்று ஒருமுறை கூறுவான். இரவில் அவர்களுடைய வீட்டில் கம்யூனிஸ்ட்டுத் தலைவர்கள் கூட்டம் கூடிப்பேசுகின்றனர் என்பான். கணவன்—மனைவி இருவருமே நடத்தை கெட்டவர்கள் என்ற வதந்தியைக் கிளப்புவான். தன் கணவனுடைய மன மகிழ்ச்சிக்காக அழகிய பெண்களை அளிப்பதுதான் கன்யாவின் 'ஸ்கூல்' கொண்டுள்ள மகத்தான லட்சியம் என்பான். 'நான் பார்த்தேன்' என்றும், 'சஜ்ஜன் என்னிடம் கூறினான்' என்றும் விஷயத்தை

நிரூபிக்கச் சேர்த்துக் கொள்வான். 'சஜ்ஜனுடைய திட்டத்தில் பாபாஜீயும் சேர்ந்திருக்கிறார்: ஜாக்கிரதை?' என்று மக்களுக்கு எச்சரிக்கை விடுப்பான். பசி—தாகம் இல்லாமல், வீட்டுப் பொறுப்புகளை மக்கள் நலன் என்ற சாக்குச்சொல்லி உதறிவிட்டுக் காலை முதல் மாலைவரையில் சஜ்ஜனுக்கு எதிராகப் பிரச்சாரம் செய்வதிலேயே மஹிபால் ஈடுபட்டிருந்தான். அவன் ராஜா சாஹேபின் வாழ்க்கையைச் சரிதம் எழுதி, அவரை அமரராய்த் திகழச் செய்வதாகவும் ஆசைகாட்டினான். தன் தத்துவ ஞானத்தையும் வெளிப்படுத்தித் தன் அறிவுச் செறிவை நிரூபித்து, கன்யாவின் பாடசாலைக்குப் பதிலாக வேதம், புராணம், கீதை, பாகவதம் முதலியவற்றை இடைவிடாமல் ஓத ஏற்பாடு செய்யப்போவதாகக் கூறினான். இதனால் பாரதநாட்டு மக்களிடம் பக்தி வளரும், சஜ்ஜன் போன்ற பயங்கரக் கம்யூனிஸ்டுகளின் மோகத்தினின்றும் அவர்கள் விடுபடுவர் என்றும் தெரிவித்தான். "சஜ்ஜனுடைய சூழ்ச்சிகளைத் தவிடு பொடியாக்கும் வகையில் ஒருநிறுவனத்தை ஆரம்பியுங்கள்" என்று ஜானகிசரண், போன்ற பிரமுகர்களிடம் சென்று மஹிபால் வேண்டிக்கொண்டான். ஜானகிசரண் போன்றவர்களின் வீடுகளைச் சுற்றிலும் சஜ்ஜன் ஒற்றர்களை நியமித்திருப்பதாகவும், "இவன் இங்கு வாழும்வரை எந்த நாணயமுள்ள மனிதரும் மானத்துடன் பிழைக்க முடியாது" என்று பயமுறுத்தினான்.

ஒரு வாரம் உழைத்தற்குப் பலன் கிடைத்து விட்டது. இப்போது அவன் ரூப்ரத்தனுடைய வீட்டிலேயே தங்கினான். ஆகையால் அவனைத் தூண்டிவிட நல்ல வாய்ப்புகள் கிடைத்தன. சேட்ரூப்ரத்தனுடைய உள்ளத்தில் உறங்கிக் கொண்டிருந்த கனவைத்தட்டி எழுப்புவதில் வெற்றி கண்டான். ஒரு பெரிய இயக்கத்தின் உதவியால் சேட்ரூப்ரத்தன் வெகு விரைவில் அரசாங்க மந்திரிக்குழுவிற்கு வந்து விடலாம். இந்த மகாமந்திரம் திறம்பட வேலை செய்தது. ஒரு திட்டம் வகுக்கும்படி ரூப்ரத்தன் மஹிபாலைக் கேட்டுக்கொண்டான். பத்துப்பிரமுகர்கள் சேர்ந்து ஒரு கூட்டுறவுத் திட்டத்தை உருவாக்க வேண்டும். அவர்களுடைய கூட்டுறவு வங்கியின் வாயிலாகக் குடிசைத் தொழில்கள் நடைபெறவேண்டும். அப்போது சூழ்நிலையில் மாறுதல் ஏற்படும். பாடல், பிரவசனம், கதை, காலட்சேபம் என்று எங்கும் கலை நிகழ்ச்சிகள் நடக்கும். இந்தத் திட்டத்தின் தொடக்கத்தில் உலக அமைதிக்காக வேள்வி ஒன்று நடைபெறும். மக்கள் பக்தி பரவசம் அடைவர். இரவோடு இரவாக மஹிபால் ஒரு திட்டம் வகுத்துவிட்டான். இந்த நிகழ்ச்சிகள் யாவும் வகுக்கப்பட்டிருந்தன, ராஜாசாஹேப். சேட்ரூப்ரத்தன் இருவரும் இதனைத் திருவாய் மலர்ந்தருளினர்.

இரண்டு தினங்களுக்குப்பிறகு விக்டோரியா பூங்காவுக்கு அருகி

லிருந்த இடத்தில் மாபெரும் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டது. ராஜாசாஹேப், அந்த கூட்டத்திற்குத் தலைமை தாங்குவார். மக்கள் நலனுக்காக வகுக்கப்பட்டுள்ள திட்டங்களைப்பற்றி மற்றப் பிரமுகர்கள் உரை நிகழ்த்துவார்கள்.

அந்நாட்களில் தாயி மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்தாள். இனி உயிர் பிழைப்போம் என்ற நம்பிக்கை அவளுக்குப் போய்விட்டது. அவளுடைய மரணத்திற்குப் பிறகு கணவனோ, சக்களத்தியின் பிள்ளைகளோ அவளுக்கு ஈமக்கடன்களைச் சரிவரச் செய்ய மாட்டார்கள் என்று அவள் பயந்தாள். ஆகையால் உயிருடன் இருக்கும் போதே அந்தக் கருமங்கள் செய்யப்பட வேண்டும் என அவள் விரும்பினாள். சஜ்ஜன்—கன்யா இருவர் பேரிலும் இந்தப் பொறுப்பு விழுந்தது. அவர்கள் இருவரும் மகனும், மருமகளும் போல் ஆகிவிட்டனர்.

அதுமட்டுமா? ஒருநாள் தாயி கன்னேமல்லின் பேரனுடைய மனைவிக்கு நூறு தோலா எடையுள்ள நகைகளை அணிவித்தாள். பிறகு கூறினாள்: ''இந்தா நீ எந்தச் சாதிப் பெண்ணோ! மருமகளாகிவிட்டாய். எடுத்துக்கொள், நீதான் எனக்கு வேண்டிய உதவி செய்தாய்?'' அப்படியும் கன்யா தொட்ட பாத்திரத்து நீரை அவள் அருந்த மறுப்பாள்! இங்கிலீஷ் மருந்தையும் வேண்டாம் என்று கூறிவிட்டாள். சஜ்ஜனுடைய இரண்டு பணியாட்கள் இருபத்துநான்கு மணிநேரமும் தாயிக்குப் பணிவிடை செய்து வந்தனர். இரவு நேரத்தில் சஜ்ஜன்—கன்யா இவ்விருவரில் யாரேனும் ஒருவர் தாயியுடன் இருப்பர். தாயி, என்ன வகையான தானம் தருமம் செய்ய விரும்பினாலும் அதற்குத் தக்க ஏற்பாடு செய்யப்பட்டு வந்தது.

மாலை நேரத்தில் ராஜாசாஹேப் சொற்பொழிவாற்றும் நாள் அது. அன்றுதான் வீட்டில் தாயிக்குப் பதின்மூன்றும் நாள்; பிரம்ம போஜனம் நடந்தது. ஏற்கனவே ஓய்வில்லாத சஜ்ஜன்—கன்யாவிற்கு இந்த வேலையும் சேர்ந்து கொண்டதால் கண் இமைக்கக்கூடப் பொழுதில்லை. கர்னலும் இவர்களுடன் ஒத்துழைத்து வேலைசெய்ய முற்பட்டான். சஜ்ஜனுக்கும், மஹிபாலுக்குமிடையே கருத்து வேறுபாடு நேர்ந்துவிட்டதைக் கர்னலால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை—அவனுக்குக் கோபம் வரத்தான் செய்தது! ஆனால் அவன் இவ்விருவருடைய விஷயத்திலும் மௌனமாக இருந்துகொண்டு இருவருடனும் பழகி வந்தான். கல்யாணியின் வீட்டில் இடைவிடாமல் வந்து ஏதாவது பொருட்கள் தேவையா என்று விசாரிப்பான்; எந்த முறையில் எந்த வழியில் நடந்தால் இரண்டு சாராருக்கும் இடையூறு நேராதோ அவ்விதம் அவன் நடந்து வந்தான். மஹிபாலையும்

அவன் சந்திப்பான். ஆனால் சஜ்ஜனைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேச மாட்டான். கர்னலைச் சந்திக்கும்போதெல்லாம் வேண்டு மென்றே மஹிபால் சஜ்ஜனைப்பற்றிப் பேச்சை எடுப்பான். ஒரு நாள் கர்னல் தெளிவாகக் கூறிவிட்டான்: "இதோ பாராப்பா! இது முற்றும் உங்கள் சொந்த விஷயம். இரண்டு வித்வான்களுக் கிடையே எனக்கு ஒரு வேலையும் கிடையாது. இனிமேல் இது பற்றி என்னிடம் ஏதும் பேசாதே!'' சஜ்ஜன் ஒரு தடவை கூட மஹிபாலைப் பற்றிக் கர்னலிடம் பேசியது கிடையாது. மஹிபால் கர்னலுடைய மிகப் பெரிய நண்பன். சஜ்ஜனுக்கும் கர்னலுக்கு மிடையே நட்பு ஏற்பட மஹிபால்தான் காரணம்.

அன்று மாலை விக்டோரியா பூங்காவின் அருகே நடந்த கூட்டத்தில் மஹிபால் எல்லையை மீறிவிட்டான். சஜ்ஜனைத் தன் மிகப் பழைய நண்பன் என்று கூறிவிட்டு அவனைச் சுயநலமே உடலெடுத்தவன் என நிரூபிக்க ஆரம்பித்தான். "தன் பணத்தின் பலத்தால் அவன் தன் பேரில் குறை கூறுபவர்களுக்கு விருந்தளித்துப் பொய்ப் புகழ்ச்சி செய்து பெரிய மனிதனாகியிருக்கிறான். அவன் கலைஞனில்லை, சூழ்ச்சிக்காரன், தன் புகழ் எட்டுத் திக்கும் வீச வேண்டும் என்று அவன் பேராசைப்படுகிறான்.''—இவ்விதம் ஆவேசத்துடன் மஹிபால் கண்டபடி பேசிவிட்டான். அவன் பேரில் சட்டப்படிக் குற்றச்சாட்டுக்கூடச் செய்ய முடியும். அப்படி இருந்தது அவனது பேச்சு! சஜ்ஜனைப்பற்றி அவதூறாகப் பேசுவதற்கென்றே மொஹஞ்சதரோ, சிவபிரான், வேதம், சமூக இயல் போன்ற எல்லா விஷயங்களையும்பற்றி மஹிபால் அன்று வருணித்தான். மக்களை மெய்மறக்கச் செய்ததுடன் இடையிடையே சஜ்ஜனைப் பற்றி நஞ்சைக் கக்கினான். அன்றைய அந்திப் பொழுதும், கூட்டத்து மேடையும், அவனுடைய வாழ்வின் மாபெரும் வெற்றியைக் கொண்டாடின. தன் சொத்தைக் கொண்டு சஜ்ஜன் பெருமைப்பட்டால், பிறருடைய செல்வத்திற்கு வழி கண்டு பிடிக்கும் வகையில் மஹிபாலும் பெரிய மனிதனாக முடியும். பெரிய மனிதன் என்ற போதையில் தன்னை மறந்த மஹிபால் சஜ்ஜனுக்கு மாறாகச் சட்ட விரோதமான வார்த்தைகளைப் பேசிவிட்டான்.

சஜ்ஜனை ஆதரிப்பவர்கள் ஆத்திரங்கொண்டனர். ஒரு மாபெருஞ் சக்தி, தளிர்கூடச் சரியாக விடாத அந்தச் சிறு செடியைப் பிடுங்க வந்தது. சஜ்ஜன், கன்யா இருவருக்குமே மஹிபாலின் இந்தப் போக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணியது. டாக்டர் ஸ்விங் அழுதாள். சஜ்ஜன் இந்த வழக்கை வக்கீலிடம் ஒப்படைக்க நிச்சயித்துவிட்டான். மூன்றாம் நாள் சஜ்ஜனுடைய வக்கீல் மஹிபாலுக்கு ஒரு 'ரிஜிஸ்டர்ட்' கடிதத்தையனுப்பினார். கர்னல்

அப்போது மஹிபாலின் வீட்டில், அதாவது—சேட்ரூப்ரத்தனது வீட்டில் இருந்தான். மஹிபால் ஆத்திரத்தில் பொங்கினுன். ''பார்த்து, விடுகிறேன், தீர்த்து விடுகிறேன்'' என்றெல்லாம் கர்ஜித்தபடி கைகளையும், கால்களையும் உதறிக் கொண்டான்.

கர்னல் கூறினுன்: ''இதோ பார் மஹிபால். என்னையும் பொது மக்களைப்போல் எண்ணி 'லெக்சர்' விடாதே! இது திருமணம் நடக்கும் நேரம். நான் வாயைத்தைத்துக்கொண்டு பேசாமல் இருக்கிறேன். ஆயினும் நான் சொல்ல நேரிடுகிறது. உன் பேரில், அவன் வழக்குத் தொடர்வது முற்றிலும் நியாயமானதுதான். நீ தோற்கத்தான் போகிருய். நீ சிறை செல்ல நேரிடும். உன் 'மிகப் பெரிய நண்பர்'களெல்லாரும் உனக்கு உதவியளிக்க வந்தால், என்னை ஏன் என்று கேள்.'' கர்னல் கல்யாணியிடமும் விஷயத்தை விளக்கிக் கூறினுன். மஹிபால் தன் மனைவிக்கும், கர்னலுக்கும் முன்னிலையில் நியாயம், உண்மை எது என்பதுபற்றி உரக்கப் பேசினுன்: ''சஜ்ஜனை நடத்தை கெட்டவன் என்று குறிப்பிட்டான்'' கர்னல் இதைக் கேட்டுச் சினங்கொண்டான். அவன் கூறினுன்: ''நீ மட்டும் மிகவும் யோக்கியமானவனே? பிறருடைய முகத்தில் சேற்றை வாரி இறைத்தால் அது உன் முகத்திலும் வந்து விழும். ஒன்று மட்டும் நான் உன்னிடம் தெளிவு படுத்தி விடுகிறேன். சஜ்ஜன் என்னைச் சாட்சிகூற அழைத்தால்நிச்சயமாகச்சொல்வேன். டாக்டர் சீலாவும் வருவாள் என்பது நினைவிருக்கட்டும்.''

''போங்கள்! எல்லோரும் போங்கள்.'' மஹிபால் கர்ஜித்தான். ஆத்திரத்தில் நாற்காலியை எடுத்து வீசினுன். அதன் ஒரு பிடி உடைந்துவிட்டது. விக்டோரியா காலத்து வேலைப்பாடுகள் அமைந்த நாற்காலி அது. சேட்ரூப்ரத்தனுடைய பொருளைப் பாழாக்கி விட்டோமே என்று திடீரென்று மஹிபால் உணர்ந்தான். அதன் பிறகு அவனுல் ஆத்திரம் அடைய முடியவில்லை. மெதுவாகக் கோபம் தணிந்து முணுமுணுப்பில் வந்துநின்றது.

கர்னலிடம் கல்யாணி கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். ''இவளுக்கு அறிவே மழுங்கிவிட்டது. இந்தக் குழந்தைகள்பேரில் இரக்கம் வையுங்கள் என்று நீங்கள்தான் சஜ்ஜனிடம் கூறிச் சமாதானம் செய்ய வேண்டும்.''

கர்னல், கன்யா, சஜ்ஜன் மூவரும் பேசினர். சஜ்ஜன் தன் முடிவில் உறுதியாக இருந்தான். அவன் கூறினுன்: ''கர்னல், இதோ பார்! வழக்கு என்னுடையதில்லை. என் டிரஸ்டுதான் இதற்குக்காரணம், இந்த விஷயத்தை இப்படியே விட்டுவிட்டால் நஷ்டம் என் டிரஸ்டுக்குத்தான். என் நிறுவனத்தைக்காக்க மஹிபாலுக்குத் தண்டனையளித்தே தீருவேன். நீயும் என் தரப்பில் சாட்சி கூற வேண்டும். எங்களிருவரிடையிலும் எந்தக் குறைபாடு

இருந்தாலும் நீ அதை அப்படியே சொல்ல வேண்டும். நான் உன்னிடம் பாசத்தை எதிர்பார்க்கவில்லை, நியாயத்தை விரும்புகிறேன்'' என்று கூறிச் சஜ்ஜன் எழுந்து சென்று விட்டான்.

கூட்டத்தில் நடந்த நிகழ்ச்சி தாயியின் படுக்கைவரை பரவி விட்டது. ராதேச்யாம் திருமண மகோற்சவமும், தன் ஈமக்கிரியைகளும் நடத்தச்சொல்லித் தானமும், தருமமும் செய்துகொண்டிருந்த தாயியின் படுக்கையைச் சுற்றித் தர்பார் கூடிவிட்டது. கோகுலத்துக் கோவில் அர்ச்சகர், பாடகர், பஜனைக் கோஷ்டியினர், சரஸ்வதிப்பாட்டி, கன்னு, நந்தோ, அவளுடைய தாய், தாரா, இளையவள் எல்லோரும் தினந்தோறும் தாயியைக் காண வருவது வழக்கம். தாயிக்குக் காய்ச்சல் அதிகரித்தது. திடீரென்று அவள் சுய நினைவு இழந்து விடுவாள். நினைவு வந்தபிறகு தன்னைச் சுற்றி இருப்பவர்களை விழித்துப் பார்ப்பாள்! அவர்களுடைய கேள்விகளுக்கு 'உம்' 'இல்லை' என்ற பதிலும் கூறுவாள். ராஜா சாஹேப் பொதுக்கூட்டத்தில் சஜ்ஜனைக் கண்டபடி திட்டியதாகவும் அவரும், ஜானகிசரணும் சேர்ந்து சஜ்ஜனைத் துரத்தி விட்டுத் தாமே பள்ளி நடத்தப் போவதாகவும் தாயிக்குத் தெரிய வந்தது. கடுங்காய்ச்சலிலும் தாயிக்கு இதைக் கேட்டு ஆத்திரம் வந்தது. வெகு நாட்களாக அடங்கிக்கிடந்த அவளது நாக்கு விஷத்தைக்கக்கியது; கைகளை இறுக மூடிக்கொண்டு கோபத்துடன் பார்த்தாள். கழுத்து நரம்புகள் புடைத்துக்கொண்டன. மனத்திற்குள் தாயி தன் கணவனைக் கடிந்துகொண்டாள். ஆத்திரம் அதிகப்படவே உடலை அது பாதித்தது. தாயி உணர்ச்சியிழந்து விட்டாள்.

அன்று மாலை தாயி நந்தோவைத் தன்னருகேயே இருக்கச் செய்தாள். தாயியிடம் தாராவை அமரச் செய்துவிட்டுக் கன்யா மூன்று மணி நேரம் டாக்டர் சீலா ஸ்விங்குடன் தெருக்களிலுள்ள பெண்களையும், குழந்தைகளையும் பரிசோதிக்கச் சென்றாள். தாயி தாராவைச் சற்றுத் தொலைவில் அமரச் செய்துவிட்டு நந்தோவிடம் மெதுவாக ஏதோ பேசினாள். நந்தோவின் முகத்தில் பெரிய பொறுப்புணர்ச்சி தெரிந்தது; விளக்கெரிந்தது. தாயி தாராவைத் தன் குழந்தையுடன் வீட்டிற்குச் செல்லும்படி கூறினாள். தாயியைப் பார்த்துக்கொள்ள வேண்டுமே என்ற காரணத்தால் அவள் அங்கிருந்து செல்லத் தயாராகவில்லை! தாயியின் முகம் கோபத்தால் சுருங்கிற்று. அதிகம் பேச அவளிடம் தெம்பு கிடையாது. நந்தோ தாராவிடம் கூறினாள்: ''இவர்கள் சொற்படி நட. நான் இருக்கிறேன், பார்த்துக்கொள்கிறேன்!'' தாரா புரிந்துகொண்டு விட்டாள். குழந்தையை இடுப்பில் எடுத்துக்கொண்டு பேசாமல் கிளம்பினாள். தாயி தளர்ச்சியடைந்த தன் கையால் குழந்தையை

அருகில் அழைத்தாள். தாயியின் முகத்தில் அன்பு தாண்டவ மாடிற்று. தாரா குழந்தையுடன் குனிந்தாள். தன் இளங்கையால் குழந்தை உள்ளங்கையைத் தொட்டது. தாயி குழந்தையின் கன்னத்தை அன்புடன் வருடினுள். பிறகு தாராவைச் செல்லும் படி சமிக்ஞை செய்தாள். தாரா சென்ற பிறகு நந்தோ கதவைத் தாழிட்டாள். தாயி தலைமாட்டில் இருந்த பொட்டலத்தை எடுக்கும்படி நந்தோவுக்குப் பணித்தாள். நந்தோ எடுத்து அதிலி ருந்து இரண்டு பத்து ரூபாய் நோட்டுகளைத் தாயிக்குக் காண்பித்து விட்டுத் தலைப்பில் முடிந்துகொண்டாள். படி ஏறியவண்ணம் நந்தோ கூறினுள்: "போர்வையை எடுத்துக்கொண்டு இதோ வந்து விடுகிறேன். இளையவளை இங்கு உட்கார வைத்துவிட்டுப் போகிறேன். உன் மருமகள் (கன்யா) வந்ததும் இவளை அனுப்பு கிறேன். இப்போது இளையவள் வரட்டும் மற்றதையெல்லாம் திரும்பிவந்து பார்த்துக் கொள்கிறேன்" என்றுள்.

கன்யா சுமார் எட்டு மணிக்குத் தாயியின் வீட்டை அடைந்தாள். இளையவள், அப்போது அங்கு உட்கார்ந்திருந்தாள். தாயிக்கு அப்போது தூக்கம் வந்தது. நாவல் படிப்பதை விட்டுவிட்டு இளையவள் (சரூப்) தாயியின் உடல்நிலை பற்றிக் கூறினுள். கன்யா வுக்கு நந்தோ இட்டுச் சென்ற கட்டளைபற்றியும் குறிப்பிட்டாள்.

கன்யா கேட்டாள்: "ஏன்?"

முகத்தைச் சுளித்துக்கொண்டு சரூப் கூறினுள் "நந்தோவும் தாயியும் ஏதோ மாஜிக் செய்கிருர்கள் போலும்! யார் பேரிலோ தெரியாது. ஆனுல் தனியாக இருக்க விரும்புகின்றனர்."

"இதென்ன வேடிக்கை! தாயி இந்த நிலைமையில் உடலைச் சிரம படுத்திக்கொள்ளக் கூடாது. நான் அதற்கு ஒரு போதும் சம் மதிக்க மாட்டேன். நான் போக மாட்டேன்."

சற்று நேரம் வரை ஏதேதோ பற்றி இருவரும் பேசிக்கொண் டனர். தாயி விழித்துக் கொண்டாள். கன்யா உடனே எழுந்தி ருந்து தாயியின் நெற்றிக்கட்டைத் தொட்டுப் பார்த்தாள். உடல் நிலைபற்றி விசாரித்தாள். தாயி அன்புடன் அவளுடைய தோளைத் தட்டிக் கொடுத்து, "நன்முக இருக்கிறேன். நீ போம்மா!" என்று கூறினுள்.

"நான் உங்களை விட்டு எங்கும் போகமாட்டேன், அவருக்கு எல்லைமீறின கோபம் வந்துவிடும்."

"என் பேரில் ஆணை! நீ போ!" தன் வேலையாட்களையும் உடன் அழைத்துக் கொண்டு செல்லும்படி கன்யாவிடம் தாயி கூறினுள்.

மறுபடியும் தன் பிடிவாதத்தைக் கவனியாமல் தாயி நடந்து கொள்வதைக் கன்யா பார்த்தாள். வேறு வழியின்றித் தாயிக்குக் கன்யா விட்டுக் கொடுக்க நேர்ந்தது. தாயியிடம் விவாதிக்கவே

முடியாது. அதுவும் இப்போதோ முற்றும் இயலாது. சருப்பிடம் தேவையான கட்டளையை விடுவித்துவிட்டுக் கன்யா விருப்ப மின்றியே தன் பணியாட்களுடன் சென்று விட்டாள்.

இரவு நேரம்; சுமார் பதினொன்றரை மணியிருக்கும். நந்தோ முற்றத்தில் எல்லாச்சாமான்களையும் சீர்ப்படுத்தி வைத்தாள். ஒரு புட்டி மது, நான்கு பன்றிக்குட்டிகள், ஒரு மண்பானை, மாவினால் செய்யப்பட்ட பொம்மை, மாவினாலான விளக்கு, புகையிலை, கொஞ்சம், கஞ்சா முதலிய சாமான்கள்; தாயி தன் கணவன்மீது ஏவுதல் செய்ய முயன்றுகொண்டிருந்தாள். முதலில் செய்ய வேண்டியது முடிந்தவுடன் பானையில் மந்திரம் போடும்படி நந்தோ தாயியை வேண்டினாள்.

தாயி மறுபடியும் சுயநினைவிழந்தாள். தான் பேசியதற்குப் பதிலைக் காணோமே என்று நந்தோ தாயியிடம் வந்தாள்; தீபத்தை எடுத்துத் தாயியைப் பார்த்தாள். பிறகு காதருகே சென்று அழைத்தாள் ''தாயி! தாயி!''

தாயி கண்களைத் திறந்தாள். மலங்க, மலங்க விழித்து நந்தோவைப் பார்த்தாள். நினைவின்றிக் கேட்டாள்! ''என்ன?''

''தாயி, எல்லாம் சரியாக இருக்கிறது?''

''சரியாக வைத்து விட்டாயா?'' சுய நினைவு திரும்பி விட்டது. நலிவடைந்த உடலின் தெம்பை ஒன்று திரட்டியபடி அவள் கூறினாள்: ''என்னை அங்கே எடுத்துப்போ!''

''அது முடியாது, தாயி. எனக்கு மந்திரத்தைச் சொல்லிக் கொடேன்.'' நந்தோ வற்புறுத்தினாள்.

காய்ச்சலினால் உலர்ந்து சுருக்கங்கள் நிறைந்த முகத்தில் சிரிப்புத் தோன்றியது. கரிய பற்கள் பளபளத்தன ''மந்திரத்தைச் சொல்லித்தர முடியுமா? மயானத்தில்... போய்... மந்திரம் ... நீ என்னை அழைத்து... போ!'' தாயிக்குத் தெம்பு வந்துவிட்டது.

நந்தோ தாயியை முற்றத்திற்குக் கொண்டுவந்தாள். தாயி கை கால்களைக் கழுவிக்கொண்டாள். மண் பாத்திரத்தில் பொருள் களை வைத்துவிட்டு மந்திரம் ஓதினாள். தன் கணவனைக் கொல்ல மந்திரம் போடும் அவள் அவருடைய பெயரைச் சொல்லியாக வேண்டும். முதலில் பழைய பண்பாடு காரணமாகத் தயங்கினாள். பிறகு உரத்த குரலில் ராஜாசாஹேபின் பெயரை உச்சரித்தாள். நான்கு முகத்தில் திரிபோட்டு மாவு விளக்கை ஏற்றி வைத்தாள். அவரைக் கொல்லும்படி கட்டளையிட்டாள். தாயியின் உயிரொளி ஒரு கணம் கண்களினூடே விளக்குப்போல் பிரகாசித்தது. பன்றிக் குட்டிகள் கத்தின. ஏவிவிட்ட மந்திரம் திரும்பி வந்து வேறெ வரையும் கொல்லாமலிருக்கப் பன்றி குட்டிகள் வைக்கப்பட்டன.

அவற்றைப் பெற்றுக்கொண்டு பில்லி சூனிய மந்திரம் திருப்தி யடைந்துவிடுமாம்!

நந்தோவின் கண்களில் சூழ்நிலேயின் செப்பிடு வித்தை நிரம்பி விட்டது. திடீரென்று தாயி கூக்குரலிட்டாள். "இல்லே இல்லே"

"தாயி! என்ன?" நந்தோ தாயியருகே வந்தாள்.

"போ, கத்தியைக் கொண்டு வா!" என்று கூறிய தாயி வேக மாக மந்திரத்தை ஓதினுள். ஒன்றரை மாதமாக நோய்வாய்ப் பட்டுக்கிடந்த தாயியின் காய்ச்சலின் பேரில் இந்த ஆன்ம பலம் வெற்றி பெற்றுவிட்டது! விரைந்து மந்திரம் ஓதியபடி தாயி கூறினுள்: "வா, திரும்பி வா! என்மீதுவா!" நந்தோ கத்திக் கொண்டு வந்தாள். தாயி ஆவேசத்தில் தன் இடது கையைக் கத்தியால் குத்திக் கொண்டாள். பானேயின் மீது தாயியின் கையிலிருந்து ரத்தம் சொட்டிற்று.

தாயி ஆவேசத்தில் முணுமுணுத்தாள். பிறகு மௌனமாகி மூர்ச்சையுற்று வீழ்ந்தாள். அவள் விழுந்ததில் பானே கவிழ்ந்தது. அதிலிருந்த பொருட்கள் எல்லாம் சிதறின. நந்தோ பயந்து ஓடினுள்.

மறு நாளிலிருந்து தாயிக்கு ஜன்னி பிறந்துவிட்டது. எத்தனேயோ பிதற்றல்களுக்கிடையே ஒரு வாக்கியம் மட்டும் அடிக்கடி வெளி வந்து கொண்டிருந்தது: "மரணம் நெருங்கி விட்டது. இனி யாருக்கும் தீங்கிழைக்க மாட்டேன்." அன்று தாயியின் நிலேமை மோசமாகிவிட்டது. அன்று காலேதான் சஜ்ஜன் பாபாவைப் பார்க்க அவருடைய கிராமத்திற்குச் சென்றிருந்தான். பிதற்ற லுக்கிடையே தாயி சஜ்ஜனுடைய பெயரையும் உச்சரித்தாள்.

## 50

பாபாவைச் சந்திக்கக் கிராமம் சென்று கொண்டிருந்தான் சஜ்ஜன். எதிர்மாறுன எண்ணங்கள் அவனுடைய உள்ளத்தைக் கவ்விக்கொண்டிருந்தன. கர்னல் மஹிபாலின் பேரில் வழக்குத் தொடர வேண்டாமென்று சஜ்ஜனே வற்புறுத்தினுன். கர்னல் எதிர்பார்த்ததற்கு மாறுகச் சஜ்ஜன் அவனுடைய வேண்டுகோளே மறுத்தான். ஒரு மனிதனே அவமானப்படுத்துவது முக்கியமில்லே; இதில் பலருடைய பொருள் நஷ்டமும் மான நஷ்டமும் இருக் கிறது. சஜ்ஜன் இப்போது தனி நபரில்லே. ஒரு நிறுவனம். காரணமின்றி அவனே அவமானப்படுத்துவது, பலருடைய நன்மைக்காக நிறுவப்பட்டிருக்கும் ஒரு நிறுவனத்திற்கே ஊறு விளேவிக்கக்கூடும். கர்னல், கன்யாவையும் சம்மதிக்க வைத்து

விட்டான். ஆனால் அதையும் சஜ்ஜன் ஒப்புக்கொள்ளவில்லை. அவன் கூறினான்: ''இது என் சொந்தப் பிரச்னையில்லை. நான் ஒரு குறிக்கோளுக்காகப் போராடுகிறேன். எந்த நிலைமை காரணமாக இந்தப் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்கிறேனோ, அதுதான் முக்கியமேயன்றி நான் முக்கியமானவனில்லை.''

கன்யா கூறினாள்: ''சூழ்நிலை இருக்கட்டும்; மஹிபாலின் பேரில் உங்கள் மனசில் சொந்தக்காரணமாகவும் கோபமில்லையா? சமூகத்தில் உங்கள் மதிப்பை எண்ணிப் பாருங்கள்; சொந்த விஷயம் காரணமாக உங்கள் உள்ளத்தில் உங்கள் நண்பர் மஹிபாலின் பேரில் ஏதாவது பழைய பகைமை—''

''அது 'ஆர்டிஸ்ட் க்வாலிடி'யைச் சேர்ந்தது. நட்பிருந்தால் இடையே முரண்பாடும் இருக்கத்தான் செய்யும்.'' கையை உயர்த்திக்கொண்டு கர்னல் கூறினான். மறுகணமே சஜ்ஜனுடைய மனம் வருந்தக்கூடாதே எனக் கருதிப் பேசினான்: ''தவறாக நினைக்காதே, சஜ்ஜன்! பின்னே! நீ பாரிஸ்டராக இருந்திருக்க வேண்டும். பாயிண்டை எங்கே போய்ப் பிடித்திருக்கிறாய், பார்! நியாயம் என்பது இதுதான்!''

சஜ்ஜன் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தான். அவனுடைய முகத்தில் எந்த உணர்ச்சியுமில்லை. கர்னல் பேசி முடிந்தவுடன் அன்புடன் கன்யாவைப் பார்த்துவிட்டுச் சஜ்ஜன் கூறினான்: ''கர்னல், உன் பேச்சு என்னை சைகலாஜிகலாக ஒன்றும் செய்து விடாது. ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். மஹிபாலின் நடத்தை என்னைத் துன்புறுத்துவது உண்மைதான். கர்னலிடம் நான் எவ்விதம் இயற்கையாக எளிய சுபாவத்துடன் நடந்துகொள்கிறேனோ, அவ்விதம் என்னால் மஹிபாலுடன் நடந்துகொள்ள முடிவதில்லை. நான் அவனைப் பெரிதும் மதிக்கிறேன். இதை உங்களிருவரையும் தொட்டு ஆணையிட்டுச் சொல்ல முடியும். அவன் இன்டெலெக்சுவல் (அறிவில் சிறந்த மேதை) இல்லை; உணர்ச்சி வசப்பட்டவன். நிரம்பப் படிக்கிறான். சிந்திக்கிறான். ஆனால் ஆழம் கிடையாது. டம்பம், வெளிப்பகட்டு, செருக்கு இவை அவனிடம் அளவுக்கும் மிஞ்சி இருக்கின்றன.''

கர்னல் கூறினான்: ''அதை நானும் ஒப்புக்கொள்கிறேன். மனிதப் பண்பு, நல்ல குணம் இவற்றைக்கொண்டு பார்த்தால் உன்னையும், அவனையும் ஒப்பிட்டுக் கூற முடியாது சஜ்ஜன். மஹிபால் மிகவும் கீழ்த்தரமான பண்புள்ளவன். ஆயினும் ஆபத்தில் சிக்குண்ட நண்பனுக்காக உயிரையும் கொடுத்துக் காப்பது கடமை. மஹிபால் சஜ்ஜனுடைய பழைய நண்பனாயிற்றே! பின்னே, நான் பொய் பேசவில்லை. மஹிபால் இன்று மிகப் பெரிய மனிதனாக இருந்திருக்கலாம். தன் சின்னத்தனம் காரணமாக

இப்படியிருக்கிறான். இனியாவது சீர்திருந்துவானா என்பதுதான் என் கவலை.''

"இப்போது மஹிபால் பணக்காரராகிவிட்டார். நாற்பது ஐம்பதாயிரம் ரூபாய் ராயல்டியில் கிடைக்கிறது. இவ்வளவு பெரிய ஆசிரியராக இருந்து கொண்டு மட்டமான வேலையில் ஈடுபடுகிறாரே!'' என்றாள் கன்யா.

''மட்டமா! மகா மட்டம்! நாற்பதாவது, ஐம்பதாவது? இருபதாயிரம் கிடைத்திருக்கும். அதில் பத்தாயிரம் திருமணத்தில் எதிர் ஜாமீன் கொடுத்தாகிவிட்டது. மூவாயிரம் திருமணத்து விருந்தில் செலவாகும். சுமார் பதினொன்காயிரம் இப்படியே செலவாகி விட்டது. மீதியில் வீட்டுச் சாமான்கள், சேலை, துணி, நகை என்று இவற்றிற்காக மூவாயிரம் செலவாகியிருக்கும். கல்யாணி இரண்டு புதிய நகைகள் அணிந்திருக்கிறாள். அவற்றின் விலையே அதிகமாக இருக்கும். மோட்டார் வண்டி வாங்கியிருக்கிறானே. அதற்காக ரூப்ரத்தனுக்கு ரூபாய் கொடுத்திருக்க வேண்டும். எஞ்சியிருந்த தொகையும் போய்விட்டது. விரைவில் வண்டியை விற்கும் நிலைமை வந்துவிடும். வெளிப்பகட்டு அதிகம் என்று அதனால்தானே குறிப்பிடுகிறேன்!''

சஜ்ஜன் அமைதியாகப் பேசினான்: ''இதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன், கர்னல். இது அவனுடைய டம்பச் செலவு என்று கூற வேண்டாம். அவன் நன்கு சிந்தித்துத்தான் செய்கிறான். பணமில்லையே என்று என் பேரில் அவன் பொறாமை கொண்டிருந்தான். பணக்காரர்களுடன் சேர்ந்துகொண்டு என் பேரில் விரோதம் பாராட்டியதால் அவனுக்கு நல்ல வாய்ப்புக் கிட்டிவிட்டது. இந்த வாய்ப்பை அவன் நன்கு பயன்படுத்திக் கொள்கிறான். உண்மையாகச் சொல்கிறேன், கர்னல். மஹிபாலின் நடத்தை இப்போது முன்னைவிட அதிகமாகக் கெட்டுவிட்டது. சீலாவுடன் உறவை அறுத்துக்கொண்டு மனைவிக்கு உண்மையாக நடந்துகொள்ள நினைக்கும் அவனுடைய இந்த எண்ணத்திலும் ஏதோ ஆழ்ந்த கருத்து இருக்கிறது.''

கர்னல் உடனே கூறினான்: ''இல்லை, நான் என் கண்களால் பார்த்தேன். இவனுடைய மைத்துனனுக்குத் திருமணம் நடந்தபோது இவனுக்கும், சீலாவுக்குமிடையே உள்ள உறவு காரணமாகப் பேச்சு எழுந்தது. இவன் டாக்டர் சீலாவின் பணத்தைச் சாப்பிட்டு வருகிறான் என்ற அபவாதம் வந்தது. வீட்டில் சண்டை மூண்டது. வீட்டைவிட்டு இவன் சீலாவுடன் இருக்க ஆரம்பித்தான். பிறகு கல்யாணி வந்தாள். இவனைச் சீலாவின் வீட்டிலிருந்து வண்டியில் அழைத்துக்கொண்டு வந்தேன். என்னிடமிருந்து அவனால் எதையும் மறைக்க முடியவில்லை. இதன் பிறகு

தான் அவனுக்கு அதிருஷ்டம் வந்தது. சுமார் இருபதாயிரம் ரூபாய்க்குச் 'செக்' வந்தது. சேட்ரூப்ரத்தனுடைய பதிப்பகத்தில் இலக்கிய அட்வைசராக (ஆலோசகனுக) நியமிக்கப் பட்டான். இப்போது பெரிய தலைவனுக உயரப் பார்க்கிருன்.''

''அதனுல் தானே...''

"ஆமாம்; மஹிபாலின் வண்டி விற்பனைக்கு வராது. இதைவிடப் பெரிய மோட்டார் வாங்கும் நிலைமையை அடைந்து விடுவான். நைனிதாலில் ஒரு வீடுகூட வாங்கி விடுவான்.''

''உனக்கு நிகரில்லை என்று நீ மாற விரும்புகிருயப்பா; இது சரியில்லை.'' சஜ்ஜன் திடீரென்று பாபாஜீயின் இந்த வாக்கியத்தைக் கேட்டான். அவனுக்கு வியப்பாக இருந்தது! பாபா அந்த அறையில் இருக்கவில்லை. குரலும் வெகு தொலைவிலிருந்து வரவில்லை. சஜ்ஜனுடையை உள்ளம் சற்று அஞ்சிற்று. கன்யாவுடன் பேசிக்கொண்டிருந்த கர்னலை நிறுத்திக் கேட்டான்: ''நீங்கள் ஏதாவது குரலைக் கேட்டீர்களா?''

''எந்த மாதிரியான குரல்?''

''எனக்குத்தான் பிரமை தட்டி விட்டது?'' சஜ்ஜன் பேச்சை மாற்றிவிட்டான்.

அன்றே கிராமத்திற்குச் சென்று பாபாவைச் சந்திப்பது என சஜ்ஜன் முடிவு செய்து விட்டான். அங்கிருந்து திரும்பிய பிறகு தான் மஹிபாலின் பேரில் வழக்குத் தொடர்வதா, வேண்டாமா என நிச்சயிப்பான்.

மறுநாள் அதிகாலையிலேயே தன் நண்பனொருவனுடைய ஜீப் காரை எடுத்துக்கொண்டு சஜ்ஜன் பாபாவைச் சந்திக்கப் புறப் பட்டான். அவன் கிளம்பிய சிறிது நேரத்திற்கெல்லாம் தாயியின் உடல் நிலை கவலைக்கிடமாக இருக்கிறது என்று வர்மா ஃபோன் செய்தார். கன்யா தன் டிரைவரை உடனே சஜ்ஜனைத்தொடர்ந்து சென்று அழைத்து வர அனுப்பினுள். ஒரு டாக்டரை உடன் அழைத்துக்கொண்டு வீடுவந்து சேர்ந்தாள். உள்ளே நுழைந்ததுமே பன்றிக் குட்டிகளை கண்டு திடுக்கிட்டாள். தாயி படுக்கையில் ஜன்னி காரணமாகப் பிதற்றிக்கொண்டிருந்தாள். தாரா வர்மா, நந்தோவின் தாய் எல்லோரும் தாயியைக் கவனித்துக்கொண்டிருந்தனர். தாயி திடீரென்று ஓடவும், அருகேயிருப்பவரை அடிக்கவும் ஆரம்பித்தாள். இம் மூவராலும் அவளைக்கட்டிக் காப்பது கடினமாகிவிட்டது. தாயியின் நாடியைப் பரிசோதித்து டாக்டர் இனி இரண்டு அல்லது மூன்று மணி நேரந்தான் உயிருடன் இருப்பாள் என்று கூறி விட்டார். மகரத்துவஜ மாத்திரை தரப் பட்டது. கைகால்களில் ஒத்தடம் கொடுக்கப்பட்டது. கன்யா திகைத்து நின்ருள். இன்றுதான் மஹிபாலின் வீட்டிற்குச் சகுந்த

லாவின் கணவன் வீட்டார் வரவிருந்தனர். கர்னல் அங்கு வேலையில் ஆழ்ந்திருந்தான். சற்றுச் சிந்தித்த கன்யா கர்னலை இங்கு இப்போது அழைத்து வருவது சரியல்ல என முடிவுசெய்தாள். அவள் வர்மாவை அனுப்பி ஃபோன் செய்து கணக்குப்பிள்ளையை வரவழைத்தாள். இதற்குள் சங்கரும், சரூப்பும் வந்து சேர்ந்தனர். தன் சுயநலத்திற்காக நந்தோ ஏதோ சூனிய வேலையில் ஈடுபட்டுத் தாயிக்குக் கஷ்டமளித்துவிட்டாள் என்று நந்தோவின் தாய், வன கன்யாவிடம் கூறினாள். சங்கர்லாலும் தன் சகோதரியின் சின்னத் தனத்தை எண்ணி வெட்கமடைந்தார். கன்யா, ராஜாசாஹே பிற்கும் தெரிவித்தாக வேண்டும் எனக்கருதினாள்.

தாயி மரணமடைந்த செய்தி தெருக்கள்தோறும் மின்சாரம் போல் பரவியது. செய்தி கேட்டதும் பேட்டை மக்கள் தாயியின் இருப்பிடம் வந்து கூடினர். வீட்டிற்குள் பெண்களின் கூட்டம் அதிகரித்துக்கொண்டே வந்தது. சூனியம் செய்யத் தயாரித் திருந்த சாமான்களைக் கன்யா அப்புறப்படுத்தி விட்டாள். தாயி யின் மரணத்தோடு இத்தகைய செய்தியும் இணைய வேண்டாமென அவள் கருதினாள். கன்யா, சஜ்ஜன் இல்லாததால் அஞ்சினாள். கங்கைக்கு விமானம் தயாராக வேண்டும், வழியெங்கும் தானமும், தருமமும் செய்தபடி தாயி கங்கைக்கு எடுத்துச் செல்லப்பட வேண்டும் என்று மக்கள் கூறினர். தேவையான செலவு பற்றிக் கணக்குப்பிள்ளையிடம் கன்யா தெரிவித்திருந்தாள். ஜானகிசரண் வாசல்வரை வந்தார். கர்னலையும் சஜ்ஜனையும் பற்றிக் கேட்டார். இருவரும் இல்லை எனத் தெரியவே அங்கிருந்து சென்று விட்டார்.

மக்கள் தாயியை வாழ்த்தினர். அவளுடைய நற்செயல்கள் பாராட்டப்பட்டன. கங்கை தசரா தினத்தன்று தாயி மரண மடைந்திருந்தாள். அவளுக்கு நேரே வைகுண்டந்தான் என்று மக்கள் சான்றுகளுடன் கூறினர்.

சஜ்ஜன் திரும்பி வந்துவிட்டான். தாயி மரணமடைந்த செய்தி கேட்டு அவன் மிகவும் வருந்தினான். தாயி அவனுடைய வாழ்க்கை யுடன் நெருங்கிப் பழகிவிட்டாள். முற்றத்தில் அவளுடைய சடலத்தை நீராட்டி உடையணிவித்து வைக்கப்பட்டிருந்தது. தாயியின் முகத்தை சஜ்ஜன் பார்க்கத் திறந்து காண்பித்தனர். தாயி மஞ்சள் குங்குமத்துடன் இறந்திருக்கிறாள். ஆதலால் அவளுக்குத் தலையை வாரிப் பொட்டிடப்பட்டிருந்தது. மூக்குத்தி, தோடு இவற்றுடன், சஜ்ஜன் தாயியை இவ்விதம் பார்த்ததே கிடையாது. அவளுடைய முகத்தில் அமைதி குடிகொண்டிருந்தது. வாழ்நாள் முழுவதும் நடந்த அவளது போராட்டம் உயிரற்ற அந்தச் சுருக்கங்களில் ஒடுங்கிவிட்டது. தாயியின் நெற்றியில் கை

வைத்தபடி சஜ்ஜன் விம்மி, விம்மி அழுதான். கன்யா, தாரா வர்மா இவர்களுடைய கண்களிலிருந்து கண்ணீர் இடைவிடாமல் வழிந்து கொண்டிருந்தது.

பகல் வேளை கழிந்து விட்டது. ஃபோன் செய்து அழைத்ததன் பேரில் ராஜா சாஹேபின் மூத்த மகன் வந்து சேர்ந்தான். மணி, சங்கு, கொம்பு எல்லாம் முழங்க, தாயியின் சடலம் எடுக்கப்பட்டது. பாண்டு கூட வாசிக்கப்பட்டது. பேட்டையின் இரண்டு இளைஞர்கள் சாமரம் வீசினர். சஜ்ஜனுடைய கணக்குப் பிள்ளை காசுகளை வாரி இறைத்தார். கீழே விழுந்த காசுகளைப் பொறுக்குவதில் பிச்சைக்காரர்கள் போட்டியிட்டுக்கொண்டனர். மலரை எடுத்துச் செல்வதுபோல் தாயியின் சடலத்தை மக்கள் தாங்கிச் சென்றனர். எல்லோரும் தலையில் வர்ணக் குழம்பு பூசிக் கொண்டிருந்தனர். தாயியைச் சீண்டி அவளிடம் வசைகளைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த சிறியோர், பெரியோர்—யாவரும்கடைசி முறையாக அன்று தாயியுடன் சென்றனர். இப்போது தாயியின் தடியடிக்குப் பயப்பட வேண்டாம்! தாயி அவர்களுடைய தோள் களில் இருந்தாள்; உள்ளங்களில் இருந்தாள். பேச்சுக்களில் இருந் தாள். தெருக்களைக் கடந்து அகன்ற தெருப்பக்கம் வந்ததுமே சஜ்ஜனுடைய கணக்குப்பிள்ளை, தங்க—வெள்ளி மலர்களை வீசினார். ராஜாசாஹேபின் மூத்த மகனும் ஊர் சிரிக்குமே என்று அஞ்சிப் பத்து ரூபாய்க்கு சில்லறை மாற்றி வீசினான். மாலையில் தாயி இறந்த செய்தி கர்னலுக்கு யார் வாயிலாகவோ தெரிய வந்தது. சடலம் கங்கைக்கு — கான்புரில் சென்று கொண்டிருக்கிறது என்றும் அவன் கேள்விப்பட்டான். கர்னல் பெரிதும் வருந்தினான், ஆனால் மஹிபாலிடம் கூறவில்லை. மாலை ஊர்வலத்திற்காக மஹிபால் பெரிய ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தான். எல்லோருக்கும் அழைப்பிதழ் அனுப்பப்பட்டது. ஆனால் சஜ்ஜனும், கன்யாவும் அழைக்கப்படவில்லை.கர்னல் பேரில் தனக்குள்ள உரிமையைக்காண் பித்துக் கொள்வதற்காக அவனைக் காலையிலேயே வரச் சொல்லி யிருந்தான். கர்னலுக்கு அங்கே ஒரு வேலையுமில்லை. பேசாமல் உட்கார்ந்து கொண்டு திருமண வீட்டின் அமளிதுமளியையும் பழக்க வழக்கங்களையும் கவனித்து கொண்டிருந்தான். கர்னலுடன் ஓட்டலின் ஐந்து அறைகளில் மாப்பிள்ளை வீட்டார் தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவர்கள் வந்து சேர்ந்த செய்தி கேட்ட துமே ஒரு பெரிய பாத்திரத்தில் சர்பத் அனுப்பப்பட்டது! நாள் முழுதும், சிற்றுண்டி, பழங்கள், இனிப்புப் பண்டங்கள், உணவுப் பொருட்கள் எல்லாம் சென்று கொண்டிருந்தன. மாலை ஏழு மணிக்கு வரவழைப்பு ஆரம்பமாயிற்று. மஹிபாலின் வீட்டு மக்களும் சேர்ந்துகொண்டனர். சேட் ரூப்ரத்தனுடைய விசால

மான புல்தரையில் விருந்தளிக்கப்பட்டது. நகரத்துப் பிரமுகர் களில் இரண்டு அமைச்சர்களும் இருந்தனர். மஹிபால் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தான். இது நைநீதால் (சுகவாசஸ்தலம் செல்லும்) சீசனுக இல்லாதிருந்தால் பந்த் மகாராஜ், கவர்னர் மோதி போன்றவரும் நிச்சயம் வந்திருப்பர் என்று மஹிபால் மக்களிடம் சொல்லிக்கொண்டான்.

ஊர்வலம் வீட்டையணுகிக்கொண்டிருக்கும் செய்தி வந்தது. வரவேற்புக்காக மக்கள் தெருவில் குழுமிவிட்டனர். லக்னேவைச் சேர்ந்த பாஜ்பேயி, மற்றும் பாலாவைச் சேர்ந்த சுக்லாவும் தத்தம் செல்வாக்குக்கேற்ப வாசலில் நின்றுகொண்டனர். பிள்ளை வீட்டார் ஒரடி முன் வந்து நின்றனர். பெண் வீட்டாரும் நின்று விட்டனர். பிள்ளை வீட்டார் கூட்டமாகத்தான் வந்திருந்தனர்; தன வந்தராக இருந்தனர். ஆனல் பெண் வீட்டாருடன் மிகப் பெரிய பிரமுகர்களும், அதிகாரிகளும், டாக்டர், இலக்கியப் பேராசிரியர், பத்திரிகை ஆசிரியர், அமைச்சர் போன்றவர்கள் அதிகம் இருந்த னர். ஆயினும் பிள்ளை வீட்டார் தம் பெருமையை விட்டுக் கொடுக்காமல் நின்றபடியிருந்தனர். இவ்விதம் அடிக்கு அடி கௌரவமும், பெருமையும் காண்பிக்கப்பட்டன. பிறகு மஹிபா லும் டாக்டர் ஜய்பாலும் சென்று சம்பந்திகளின் முன்னிலையில் தலை வணங்கினர். பிறகு இரு சாராரும் சேர்ந்துகொண்டனர்.

விருந்தின்போது கர்னல் தன் திறமையைக் காண்பித்தான். விருந்தினர் விடை பெற்றுச் சென்றவுடன் கர்னல் மஹிபாலிடம் போய்வர அநுமதி கோரினன், மஹிபால் மிகவும் வற்புறுத்தியதன் காரணமாக அவன் கடித்துக் கொடுத்த பர்பியைக் கர்னல் வாயில் போட்டுக் கொண்டான். ஆயினும் அவனுக்குத் தின்னப் பிடிக்க வில்லை. மஹிபாலுக்கும், சஜ்ஜனுக்குமிடையே ஏற்பட்ட பிளவு காரணமாக அவனுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. மஹிபால் நடந்து கொண்ட முறை அவனைப் பெரிதும் வாட்டியது. திரும்பிச் செல்லும்போது கர்னல் சஜ்ஜனுடைய வீட்டிற்குச் சென்றுன். கர்னல் கன்யாவைச் சந்தித்தான். பகல் முழுதும் தன்னல் வர இயலாமைக் குறித்து கர்னல் வருத்தம் தெரிவித்தான். முதலில் சஜ்ஜன் தாயியின் ஈமக்கடன்களைச் செய்யும்படி கட்டளையிட்ட ராஜாசாஹேபின் மகன், பிறகு அவனை அங்கிருந்து அகலச் சொல்லிவிட்டான் என்பது தெரிய வந்தது. சஜ்ஜனுடைய உள்ளத் தில் ஒரு விதமான களங்கமும் இல்லை. ஆயினும் அந்த நிகழ்ச்சி அவனைப் பெரிதும் வருத்திவிட்டது. சடலத்துடன் கான்புர் கூட அவன் செல்ல விரும்பவில்லை. ஆனல் கன்யா வற்புறுத்தியதன் பேரில் சென்றுன்.

இதைக் கேட்டுக் கர்னல் சிரித்தான்: ''இதில் சட்டப்படி

அவனுக்கு உரிமை இருக்கிறதல்லவா; ''அதனால்தான்! சஜ்ஜன் ஈமக்கடன்களைச் செய்தால் எஞ்சியுள்ள சொத்துக்கு உரிமையாளனாகிவிடப் போகிறானே என்ற பயம். அதனால்தான் முன் எச்சரிக்கையாக இருந்துவிட்டான்!'' என்று கர்னல் கூறினான்.

''எந்த நிலைமையிலும் பணத்திலேயே குறியாயிருக்கிறார்களே; அப்படிப்பட்ட மனிதர் எவ்வளவு கடையர்கள்!'' கன்யா பெருமூச்செறிந்தபடி கூறினாள்.

## 51

தாயி இறந்த இரண்டாம் நாளே சஜ்ஜனுக்கு ராஜாசாஹேபின் வக்கீலிடமிருந்து நோட்டீஸ் வந்தது. உடனே வீட்டைக் காலி செய்யும்படி கட்டளை பிறப்பிக்கப்பட்டிருந்தது. சஜ்ஜன் இப்படி நடக்கும் என்று நினைத்திருந்தான். ஆனால் கன்யா நடத்தும் பாடசாலையை எங்கே கொண்டு செல்வது? ஆஸ்பத்திரிக்காக வாங்கப்பட்ட கட்டிடத்திற்கு எடுத்துச் செல்லலாம். அப்படிச் செய்தால் பிரசவ அறை இல்லாமற் போய்விடும். பாடசாலையின் கலகலப்பு, பிரசவ அறைக்கு ஏற்ற சூழ்நிலையாகாது. சஜ்ஜன் கன்யா இருவரும் இதுபற்றிக் கவலையுற்றனர். நேரே ராஜா சாஹேபிடம் சென்று வீட்டிற்கு வாடகை தருவதாகச் சொல்லலாமே என்று சஜ்ஜன் கருதினான். ''இதை அவர் ஒப்புக்கொள்ள மாட்டார்.'' என்றாள் கன்யா. நடந்ததும் அதுவே. ராஜா சாஹேப் மிகுந்த அன்புடன் க்ஷேமலாபங்களை விசாரித்துவிட்டுக் கூறினார்: ''தம்பி! நான் எல்லா மாயை மோகங்களையும் உதறித் தள்ளிவிட்டேன். கடைசிக் காலத்தில் ராமஸ்மரணைதான் என் சொத்து. நீ ராஜாவிடம் பேசி முடிவு செய்துகொள். அவன் தான் எல்லாவற்றையும் கவனிக்கிறான்.''

சகோதரர் ராஜாவைச் சந்தித்ததன் பயனாக இரண்டு வார்த்தைகள் கடுமையாக சஜ்ஜன் கேட்டுக்கொள்ள நேர்ந்தது. அவர் கூறினார்: ''எங்கள் முன்னோருடைய வீடு, இந்து மதத்தின் சமாதியாக இருக்காது, சஜ்ஜன். பெரியம்மா இருந்தவரை அது அவருடைய உடைமையாக இருந்தது. எங்கள் பாட்டியின் பேரில் வேத பாடசாலை ஆரம்பிக்கப் போவதாக அப்பா முடிவு செய்துவிட்டார்.''

சஜ்ஜன் பேசாமல் இருந்துவிட்டான். அவன் வேறு விஷயத்தைக் கேட்க முற்பட்டான். ஒரு மாதம் வரை இருக்க அநுமதி கேட்டான். ராஜா அன்புடன் பேசினார்: ''நாங்கள் சொல்வதைத் தவறாக நினைக்கக் கூடாது சஜ்ஜன். ஒரு மாதமென்ன

இரண்டு மாதங்கள் இருக்கலாம். நாம் பரம்பரையாக நண்பராய் இருந்தவர்கள். ஆனால் ஒன்று. பொதுமக்கள் உங்களுக்கு மாறாக நடந்துகொள்வார்களே என்று கவலைப்படுகிறேன். உங்கள் மனைவியை, பொதுமக்கள் வெறுக்கின்றனர். இன்னொருவர் குடியிருக்கிறாரே அவரையும் வெளியே போகச் சொல்லப் போகிறோம். அவருடைய மனைவியும், உங்கள் மனைவியைப் போல் வேறு சாதிப் பெண், இல்லையா!''

சஜ்ஜனுக்கு இது பிடிக்கவில்லை. மிகவும் அடக்கத்துடன் பொறுமையைக் கைக்கொண்டபடி அவன் கூறினான்: ''பொது மக்கள் எங்களுக்கு எவ்வளவு மாறாக இருக்கிறார்கள் என்னும் பேச்சை விடுங்கள். கலப்பு மணங்கள் இன்னும் அதிகமாகிக் கொண்டே வரும். உங்கள் ஒரு பாடசாலை என்ன, பத்துக் கோடி வேதபாடசாலைகளாலும், மாறிக்கொண்டு வரும் சமூகத்தைத் தடுத்து நிறுத்த முடியாது. பார்த்துக்கொண்டேயிருங்கள்.''

சகோதரர் ராஜா ஆவேசமடைந்தார்; சினத்துடன் பேசினார்: ''பெரிய பெரிய மன்னர்கள், அலெக்சாண்டர், பாபர், வெள்ளையர் இவர்களாலேயே லட்சக்கணக்கான ஆண்டுகளாக இருந்து வரும் நம் புராதனமான இந்து மதத்தை அசைக்க முடியவில்லை, நீதான்...?''

''நானில்லை, காலம் அதை மாற்றியமைக்கும். நாங்கள் பாரத நாட்டு மதத்தைப் பாழ்படுத்தவில்லையே! அதன் ஆடம்பரத்தைத் தகர்த்தெறிவதோடு நில்லாமல் ஒரேயடியாகத் தீர்த்துக் கட்டி விடுகிறோம், பாருங்கள்.''

''எங்களுடன் பந்தயம் கட்டுகிறீர்களா, சஜ்ஜன்! பசியால் வாடுபவர்கள் எத்தனை பேர் உம் ரொட்டித் துண்டுகளால் திருப்தியடைவர்? லட்சக்கணக்கிலல்லவா இருக்கிறார்கள்!''

''இந்த உண்மையே உங்களை விழுங்கிவிடும்!''

ராஜா உரக்கச் சிரித்தபடி கூறினார்: ''சஜ்ஜன் முழுப்பூசணிக் காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்காதீர்கள்? ஏழைகளைச் சாக்கிட்டுக்கொண்டு நீங்கள் செய்யும் 'பிசினஸ்' என்ன என்பது எனக்குத் தெரியுமப்பா! நண்பர் என்ற முறையில் என் கருத்தையும் ஏற்றுக்கொள்ளுங்கள். நீங்கள் செய்யும் தந்திரம் ஜமீன்தாரின் தந்திரம், வியாபாரத்தந்திரமல்ல. உங்கள் 'பாலிடிக்ஸை' (அரசியல் ரீதியான கோட்பாட்டை) நாங்கள் நான்கு பேர் சேர்ந்தால் ஓராண்டுக்குள் சுவர்க்கத்திற்கு டிக்கட்டு வாங்கி அனுப்பி விடுவோம். (சிரிப்பு) இதோ பார்! உன் எட்டு லட்சம்—இல்லை, பத்து லட்சம்—எங்கள் உபாயத்துக்கெதிரே சில நிமிடங்களில் தவிடு பொடியாகிவிடும். எங்களுக்கு ஒன்றும் குறைந்து விடாது. தொகையைக் கொஞ்சம் அதிகமாக்கிவிடுகிறோம்.''

சஜ்ஜன் அதே போல் அமைதியாகச் சிரித்தபடி கூறினன்; "ஏதோ இதைச் சாக்கிட்டுக்கொண்டாவது உங்கள் பணத்தில் ஒரு பங்கு பொதுமக்களுக்குப் போகட்டும். என் லட்சம் சும்மா தவிடு பொடியாகாது. உங்கள் கோடிக்கணக்கான ரூபாயையும் சேர்த்துக்கொண்டு தான் சாம்பலாகும். இதில் விவாதத்துக்கு இடமில்லை. உங்கள் கண்களால் பார்க்கப் போகிறீர்கள்'' என்று கூறியபடி சஜ்ஜன் எழுந்தான். சென்றுகொண்டே அவன் சொன்னன்: "உங்கள் நோட்டீசுக்குச் சட்டத்தின் வாயிலாகப் பதில் கிடைக்கும். ஆனல் ஒன்று கூறிவிட்டுச் செல்கிறேன். எனக்கு வேறு இடம் கிடைத்தாலன்றி வீட்டை விட முடியாது. ஆமாம், வெகு சீக்கிரம் நல்ல இடமாகப் பார்க்கிறேன்.''

ராஜா கர்ஜனையுடன் பேசினர்: ''வீட்டைப் பதினைந்து நாட்களுக்குள் காலி செய்தாக வேண்டும், சஜ்ஜன்!"

சஜ்ஜன் அலட்சியமாகக் கூறினன்: ''முயற்சி செய்கிறேன்!"

ராஜா நாற்காலியிலிருந்து எழுந்து பேசினர்: ''முயற்சியா செய்யப் போகிருய்? அப்படியானல் மூன்றே தினங்களில் காலி செய்தாக வேண்டும்.''

''முயற்சி செய்து பார்க்கிறேன்'' மறுபடியும் சஜ்ஜன் அவ்விதமே பதிலளித்தான்.

ராஜா இரண்டடி ஆவேசத்துடன் எடுத்து வைத்தார். பிறகு கூறினர்: ''நம் முன்னேர்களின் உறவை அறுத்து விடப் பார்க்கிருயா சஜ்ஜன்? நான் வேறுவிதமாக நடந்துகொண்டால் என்னைக் கேட்காதே!''

சஜ்ஜன் திரும்பி அருகே வந்து கூறினன்: ''நான் உங்களுக்கு வாக்குக் கொடுக்கிறேன். இதில் என் குறிக்கோள் 'பொலிடிகல்' (அரசியல் கோட்பாடு) இல்லை, நான் சமூகத்தின் நலனுக்காகப் பரிசோதனை செய்து பார்க்கிறேன், அவ்வளவுதான்.''

''இதுதான் உன் பெரிய 'பாலிடிக்ஸ்' சரி, வங்கி நடத்தும் எண்ணத்தை விட்டுவிட்டுச் சமூக நலனுக்காகத் தொண்டாற்று என்று நான் கூறுகிறேன். செய்வாயா? நவயுகத்தையே ஸ்தாபிக்க விரும்புகிருயே, கொண்டு வா, பார்க்கலாம். முஸ்லிம், கிறிஸ்தவர் என்று யாருடன் வேண்டுமானலும் திருமணம் செய்துகொள்ளலாம் எனச் சட்டத்தைக்கொண்டு வந்துவிடாதே. உனக்கு வேறு வித உதவிகள் செய்யத் தயாராக இருக்கிறேன். அப்பாவுக்குத் தெரியாமல் செய்கிறேன். பெரிய மனிதர்களின் ஒத்துழைப்பும் கிடைக்கச் செய்கிறேன்''.

ராஜா வெகு நேரம் வரை சொற்பொழிவு செய்தார். ''இது செய்கிறேன், அது செய்கிறேன்'' என்று அவர் கூறியதை சஜ்ஜன்

அமைதியுடன் கேட்டுக்கொண்டிருந்தான். பிறகு பதில் அளித்தான். "வங்கியை மூடிவிட்டால் என் சமூக வேலைகள் எப்படி நடக்கும்?"

''கொஞ்சம் கொஞ்சமாகச் செய். நிதி வசூல் செய்து நான் தருகிறேன்.''

"நிதி வசூலித்தால், அந்தத் தொகையினால் மக்களிடம் ஆன்ம சக்தி எப்படி வரும்? ஒன்று செய்யுங்கள்! நீங்களோ, ஜானகி சரணோ இந்த வங்கியை நடத்துவதால் தங்களுக்கு ஆபத்து வரும் என்று கருதுகிறீர்கள். அப்படியானால் நீங்களும் எங்கள் கூட்டுறவு முதலீட்டில் பங்கு கொள்ளுங்கள். இதையும் உங்கள் தொழி லெனக் கருதி நல்ல லாபம் அடையுங்களேன்.''

ராஜா கூறினார்: ''நான் உங்கள் வங்கியில் சேரத் தயார். ஒரு ரூபாய் ஷேர் இருந்தாலும் சரி, ஆனால் ஒரு நிபந்தனை. குறைந்தது ஐந்நூறு ஷேர் இருந்தால்தான் ஒருவர் டைரக்டர் போர்ட்டில் (குழுவில்) தேர்ந்தெடுக்கப்படலாம்.''

சஜ்ஜன் கூறினான்: ''நீங்கள் பப்ளிக் (பொதுக்) கூட்டுறவில் ப்ரைவேட் (சொந்தத்) தொழிலைப் பரப்பப் பார்க்கிறீர்களா என்ன? தொழிலைப் பரப்புங்கள். ஆனால் பொது மக்கள் என்ற முறையில் டைரக்டர்களின் போர்டில் வருவதற்கு ஒரு ரூபாய் ஷேர் உள்ளவருக்கும் சம உரிமையுண்டு. தொழிலை நடத்துபவர் நமக்குத் தேவையில்லை, பொதுமக்களின் லாபத்துக்காகத்தொழில் நடத்துபவர்தான் டைரக்டர் என்ற முறையில் நமக்குத் தேவை.''

ராஜா தலையை அசைத்தார். சிரித்தபடி கூறினார்: 'கெடுவான் கேடு நினைப்பான்! சரி, வீட்டை மூன்று தினங்களில் காலி செய்யுங் கள், சஜ்ஜன்மல்!''

சஜ்ஜன்மல் என்பது அவனுடைய முழுப்பெயர்தான். ஆயினும் ராஜா இப்படிக் கூப்பிடுவது சஜ்ஜனுக்குப் பிடிக்கவில்லை. அவன் சற்றுக் கோபத்துடன் கூறினான்.

''முயற்சி செய்கிறேன் என்று உங்களிடம் சொல்லியாகிவிட்டது. ஆனால் வாக்குக் கொடுக்க முடியாது. வேறு நல்ல இடம் கிடைத் தாலன்றி என்னை இந்த இடத்திலிருந்து எந்தச் சக்தியாலும் வெளி யேற்ற முடியாது.''

ராஜா சாஹேபின் வீட்டிலிருந்து திரும்பிய சஜ்ஜன் பெரிதும் கவலையுற்றான். எதிராளிகள் தன் கனவைத் தகர்த்தெறியும் திட்டத்தைப் போன்று கன்யாவின் பாடசாலையை வேறு ஓர் இடத்திற்குக்கொண்டு செல்வது அவ்வளவு பயங்கரமான காரிய மில்லை. பிறகு என்ன நடக்கும் என்பது பற்றிய கவலை அவனுக்கு. அவனையும்விட அதிகமான பணபலம் கொண்டு அவனைத் தாக்கச் சக்திகள் ஆயுத்தமாக நின்றன. மக்கள் அவனிடம் வெள்ளமாய் வந்தார்கள். எனினும், மக்களின் பலத்தின் பேரில் இன்னும்

சஜ்ஜனுக்கு முழு நம்பிக்கையும் ஏற்படவில்லை. இப்போது இவனை ஆதரிப்பவர், எதிர்க்கட்சியில் அதிகத் தொகை லஞ்சமாகக் கிடைக்கும் என்றறிந்தால் அங்கு ஏன் செல்ல மாட்டார்கள்? சஜ்ஜனுடைய திட்டம் அமலுக்கு வந்து, மக்கள் அதுபற்றி நன்கு அறிந்திருந்தால், அந்த விஷயமே வேறு. அப்போது அவன் கவலைப்படத் தேவையில்லை. எதிர்க்கட்சியில் சூழ்ச்சியில் ரகசிய மாக வேலை நடக்கும். அது மட்டுமில்லை; தனவந்தர்கள் அரசியல் கட்சியையும் தம் திட்டத்தில் சேர்த்துக்கொண்டு விடுவர். மக்கள் விழிப்புற வேண்டும். அவர்கள் தங்கள் நலனையும் உரிமையை யும் தாமே உணர்ந்து கொள்ள வேண்டும் என்று சஜ்ஜன் இதய பூர்வமாக விரும்பினான். மக்களின் நம்பிக்கையைப் பெற அவன் என்ன செய்ய வேண்டும்? எத்தகைய தியாகம் புரிய வேண்டும்?

''அதற்கு வழியிருக்கிறது. நான் கோமதிக்கரையில் இருக் கிறேன், வா!''

தன் அறையில் தனித்து உட்கார்ந்து சிந்தித்துக்கொண்டிருந்த சஜ்ஜனுக்கு, இரண்டு நாட்களுக்கு முன்பு கேட்டாற்போல், பாபாவின் குரல் கேட்டது. சஜ்ஜன் வியப்படைந்தான். இது பிரமைதானோ என அவன் குழம்பினான். என் உள்ளமே எனக்குத் தெம்பளிக்க இவ்விதம் கூறிற்றோ! பார்க்கலாம். கோமதி நதிக் கரைக்குச் சென்றால் உண்மை புலப்படும் எனக் கருதி சஜ்ஜன் வண்டியை எடுக்கும்படி டிரைவருக்குக் கட்டளை பிறப்பித்தான்.

உண்மையில் சிவன் கோயிலின் மண்டபத்தில் பாபா படுத்துக் கொண்டிருந்தார். சஜ்ஜனைக் கண்டதும் எழுந்து உட்கார்ந்தார். எப்போதும் போல் சிரித்தபடி கூறினார்: "தம்பி! வா வெகு நேரமாகக் காத்திருக்கிறேன்.''

சஜ்ஜன் கூறினான்: "நான் நேற்றைக்கு முந்தியநாள் உங்கள் இருப்பிடத்துக்கு வந்து கொண்டிருந்தேன்.''

''ஆமாம்! அந்த பக்தை இறந்துவிட்டாள், பாவம். மிகப் பெரிய உதவி செய்தாளப்பா! கிராமத்தில் பெரிய ஆசிரமம் நிறுவப்பட்டிருக்கிறது. அதனால் மக்கள் நல்ல பயனைப் பெறுவர். பாடசாலை, உடற்பயிற்சிக்கூடம் எல்லாமே செவ்வனே நடந்து வருகின்றன, அப்பா! நீ எனக்கு ஒரு டிராக்டர் வாங்கிக் கொடு. அதற்காகத்தான் நான் இன்று வந்தேன்...''

சஜ்ஜன் கூறினான்: "நீங்கள் எது கேட்டாலும் வாங்கித் தருகிறேன். என் சந்தேகத்தைத் தீர்த்துவிடுங்கள்.''

பாபா சிரித்தார்: ''இதில் சந்தேகத்திற்கு என்ன இருக்கிறது? உன்னிடம் ஒரு டெலிஃபோன் இருக்கிறது; என்னிடமும் இருக் கிறது'' என்று கூறி பாபா மறுபடியும் சிரித்தார்.

''ஆனால் இதெப்படி முடியும்?''

''தவத்தால்!''

''என்ன தவம்?''

''தன்னடக்கம்—தியாகம்.''

''உள்ளம் எப்படி ஒருமுகப்படும்?''

''எப்போதும் நற்சிந்தனை செய்வதால்!''

''ஒரே ஒரு விஷயத்தைப்பற்றியே சிந்திப்பது கடினம். வாழ்க்கையில் பல விஷயங்கள் இருக்கின்றனவே!''

''சரி; அந்த எல்லா விஷயங்களையும்பற்றிச் சிந்தனை செய். உன் விருப்பத்தை அவற்றில் செலுத்திப் பார்; எங்கே உண்மையான மகிழ்ச்சி இருக்கிறது என்று கவனி. சமூக நலனுக்காக உன் பணத்தைச் செலவிட முதலில் நீ தயங்கினாய்: பிறகு பணத்தை விட மக்களைத் தன் வசமாக்கிக் கொள்ள விருப்பங் கொண்டாய். இப்போதும் உனக்கும் மக்களுக்குமிடையே கருத்து வேறுபாடு வந்துவிட்டது; எந்தப் பொருளிடம் உனக்கு அதிக நாட்டம் உண்டோ அதில்தான் நீ உன் கவனத்தைச் செலுத்துவாய். உள்ளமும் ஒரு முகப்படும்.''

''நான் மக்களுடைய வாழ்க்கையுடன் ஒன்றிவிட விரும்புகிறேன்.''

''நிச்சயம் நடக்கும்.''

''உங்கள் ஆசி வேண்டும். ரகசியம் நிறைந்து அதிசயமாக விளங்கும் உங்கள் போக்கை அறிய என் உள்ளம் இன்னும் ஆவலாகவே இருக்கிறது.''

பாபா பத்மாசனம் போட்டு அமர்ந்து கொண்டார். பிறகு கூறினார்: ''தம்பி, உண்மையாகச் சொல்கிறேன். என்னிடம் அதிசயமோ ரகசியமோ ஏதும் இல்லை. யாவும் பரம்பொருளின் லீலை. ஒவ்வொரு கணமும் நான் மிகவும் சாதாரணமாகத்தான் இருந்து வருகிறேன். உன் மனசில் எல்லோரையும் மீறித் தனக்கு நிகரின்றி வாழ வேண்டும் என்ற விருப்பம் இருக்கிறது, தனித்து இருந்தால் அந்தப்பரம் பொருளை எப்படியப்பா உணர்ந்து கொள்வாய்?''

சஜ்ஜன் தலை குனிந்தான். பாபா கூறினார்: ''என் குரு எனக்குச் சேவை செய்யும் மந்திரத்தை உபதேசித்தார். எல்லோரையும் என் வடிவம் எனக் கருதிச் சேவை செய் என்றார். நான் எழுதப் படிக்கத் தெரியாதவன். அவருடைய உபதேசத்தைத் தெய்வ வாக்காகக் கருதிச் செயல் புரிந்து வருகிறேனப்பா! இந்தத் தொண்டு மனப்பான்மை காரணமாக என்னுள் சூட்சுமமான சக்திகள் பிறந்தன. விரும்பிய மாத்திரத்தில் காற்றாக மாறி எங்கு வேண்டுமானாலும் செல்லலாம் எனக் கூறுகிறார்கள். அந்தச் சக்தியை இன்னும் நான் அடையவில்லை. இறைவன் விரும்பினால்

அதுவும் நடந்துவிடும். இல்லாவிட்டால் ஒரு கவலையும் கிடையாது. பலனை எதிர்பாராமல் சேவை செய்கிறேன். அந்தப் பரம்பொருளைத் தேடி அலைகிறேன் அப்பா. வாழ்க்கையில் எந்த அநுபவம் கிடைத்தாலும் அதைப் பெற்றுக்கொண்டு சென்றபடி யிருக்கிறேன். எனக்கு வேறு எந்த ஆசையும் கிடையாது.''

சஜ்ஜன் பாபா கூறியதைக் கேட்டுப் பெருமூச்செறிந்தான்: ''உங்கள் வார்த்தை எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய ரகசியம்; ஆமாம் அது ரகசியந்தான்.''

''உனக்கு வழக்கமில்லை; ரகசியமாகப்படுகிறது. பழக்கப்பட்டால் தினசரி வேலை போல் ஆகிவிடும். புதிய பாதையில் செல்வதால் கூச்சம் உண்டாகிறது. உன் விருப்பம் என்ன என்று உன்னையே கேட்டுக்கொள். உன் பதிலைச் செவிமடுத்துப் பார். அந்த விருப்பங்களில் எது அதிக நாட்டமுள்ளது. எது அதிக விருப்பமில்லாதது? இதனைச் சிந்தித்துப் பார். உன் விருப்பு, வெறுப்பில் வீட்டு, சமூக—பொருளாதாரத் தொடர்புகள் உண்டா என்றும் பரீட்சித்துப் பார். பிறகு விருப்பம் காரணமாக உன் உள்ளம் எங்கும் சிக்கிக்கொள்ளாது, உன் விருப்பப் படியே எல்லாம் நடக்கும். அதிலிருந்து உன் விருப்பம் எது என்பது புரியும். இன்று ரகசியம் போலத்தோன்றும் பல சக்திகள் உனக்குள் வந்துவிடும். அநுபவமார்க்கம் எளிதானது தம்பி; அதில் பயிற்சி தேவை; அவ்வளவுதான்.''

பாபா மிக எளிது என்று கூறிய விஷயத்தைக் கேட்டு சஜ்ஜன் மௌனமாகிவிட்டான். மனிதன் தூக்கத்தில் கனவு காண்பது போல் அவன் ஆழ்ந்து சிந்தனை செய்தான். உணர்விழந்த தன்மை விழிப்பு இவ்விரண்டும் கலந்த நிலையில் இருந்தான் அவன்.

மஹிபால்மீது தொடர வேண்டிய வழக்கு, அது பற்றிய அவனது பிடிவாதம், ராஜாசாஹேப், லாலா ஜானகிசரண், ரூப்ரத்தன் ஆகியோரின் கூட்டான பகை இவையாவும் அவனுடைய விருப்பம் என்னும் உரைகல்லில் உரைக்கப்பட்டன. இரண்டு தினங்களுக்கு முன்பு கன்யா அவனிடம் கூறியது அவனது நினைவிற்கு வந்தது. இப்போது ஒரு பிடிவாதமுமின்றித் தன்னிடம் பொறுமைக்குணம் இருக்கிறது! இதனை அவன் உணர ஆரம்பித்தான். அவன் தனக்கு நிகரில்லாமல் இருக்க விரும்புகிறான். இது நல்லதுதானா? இது சுயநலம் நிறைந்த, முட்டாள் தனமான விருப்பம். இன்று சமூகத்தில், இவ்வளவு பரந்த வாழ்வில் யாரால்தாம் தனக்கு நிகரின்றி வாழ முடியும்? எல்லாரிடமும் உயிர் உள்ளது. அந்த உயிர் ஒப்பற்றது; இந்த முறையில் அவன் நிகரற்றவன் தான். இந்த நிகரற்ற தன்மையை சஜ்ஜன் புரிந்துகொண்டால், யாரிடமும் அவனுக்குப் பொறுமையோ பகைமையுணர்ச்சியோ

ஏற்படாது! ஆனல் பிறருடைய பகைக்கோ, பொறுமைக்கோ தான் ஆளாகி விட்டால் என் செய்வது? பிறருடைய பொய்மைக் காகத் தான் தூக்குமேடை ஏற நேரிடும். அந்நிலையில் பகையின்றி அவனல் தப்ப முடியுமா? மனிதனுக்கு இயல்பாக உள்ள குறைகள் குணங்கள் அவை. அவற்றிலிருந்து எவ்விதம் விடுபட முடியும்? பாபாஜீ யிடமிருந்து திரும்பிய சஜ்ஜன் சிந்தனைச் சுமையுடன் நடந்தான். சேட்ரூப்ரத்தனின் வீட்டில் கட்டப்பட்டிருந்த தோரணங்களைக் கண்டான். 'நல்வரவு' என்று எழுதித் தொங்க விடப்பட்டிருந்தது, அவனைக் கவர்ந்தது. மஹிபாலின் நினைவு வந்தது. சஜ்ஜனது மனம் நின்றது, மஹிபாலைப் பார்த்துச் 'சகுந்தலாவின் திருமணத்தைப்பற்றி விசாரிக்கலாமா?' என்ற ஆசை தோன்றியது. அவனுக்கு வாழ்த்துக்கூற மனம் விழைந்தது. ஆனல் அழைப்பு?—அழைப்பு எதற்கு? எத்தனை ஆண்டுகளாக இரு வரும் நண்பர்கள்? அவன் ஏன் இதை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்? அவன் வண்டியை நிறுத்தும்படி டிரைவருக்குக்கட்டளை பிறப்பித்தான். மணமகளுக்குப் பரிசு வாங்கிச் செல்ல வேண்டுமே என அவன் நினைத்தான். உடனே வண்டியை ஹஜரத்கஞ்ஜ் ஓட்டிச் செல்லும்படி டிரைவரிடம் கூறினன். பரிசு கொண்டு சென்றல் தன் பெருமையைக் காண்பித்துக்கொள்ள வந்திருக் கிறன் என மஹிபால் சஜ்ஜனைத் தவறக மதிப்பிட்டால்? வண்டி யைச் சஜ்ஜன் திருப்பும்படி கட்டளை பிறப்பித்தான். ஆனல் இப்போது செல்ல வேண்டியது சஜ்ஜனுடைய வீட்டிற்கா, ரூப்ரத் தனின் வீட்டிற்கா என்று டிரைவருக்கு புரியவில்லை. அவன் கேட்டான்; ஆனல் சஜ்ஜன் பேசாமல் இருந்துவிட்டான். மஹிபாலைச்சந்திக்கச் செல்லலாமா வேண்டாமா என்று அவன் நிச்சயிக்கவில்லை. சென்றல் அவமானம் அடையப்போகிறேமோ என்ற பயம். தன் கருத்துப்படியும் அவன் பொறமை கொண்டவன் என நிரூபிக்கலானன்.

வண்டி சஜ்ஜனது வீட்டிற்கருகே வந்துவிட்டது. டிரைவர் வாசலில் வண்டியை நிறுத்தினன். சஜ்ஜன் உடனே கூறினன்: "ரூப்ரத்தனின் வீட்டிற்குச் செல்."

அப்போது அங்கே சிறு விருந்து நடந்துகொண்டிருந்தது. மஹிபாலும் ஜய்பாலும் தேனும் தயிரும் கொண்டு மணமகனின் மாமாவைச் சந்தித்துக் கொண்டனர். அப்போது மஹிபாலின் உள்ளம் பகைமையால் எரிந்து கொண்டிருந்தது. மணமகளின் மாமன்மார் காரணமாகத் திருமணத்தில் அமளிதுமளியாகி விட்டது. ஊர்வலத்தின்போது இவர்கள் பெண் வீட்டாரை ரத்தக்கண்ணீர் வடிக்கச் செய்தனர், நேற்றிலிருந்து இன்றுவரை தொட்டதற்கெல்லாம் மஹிபால் அவமானப் படுத்தப்பட்டான்.

வேளையறியாமல் ஏதேதோ கேட்டு, மாமன்மார்கள் பெண் வீட்டோரைத் தொல்லைப்படுத்தினர். மணமகனின் மூத்த மாமா மஹிபாலின் பாட்டி வீட்டுடன் உறவு கொண்டிருந்ததால் இன்னும் அதிகமாகத் துன்புறுத்தினர். "உன் அம்மா பிறந்தகத்திலிருந்து கொள்ளையடித்துச் சென்ற பொருட்களை இப்போது கீழே வை." "பெரிய தனவந்தருடன் போட்டி போடுகிறாயே! நாங்கள் கேட்கும் சாமான்களை எடு" என்றும் கூறி அவனைத் திணறச் செய்தனர். வாயைத் திறக்காமல் நேற்றிலிருந்து இன்று வரை மஹிபால் எல்லா அவமதிப்புக்களையும் தாங்கியதுபோல் இதுவரை தாங்கியது கிடையாது. டாக்டர் ஜய்பால் எதிரில் இருப்பதில்லை. இருந்தாலும் சீறி விழுவான். ஆனால் மஹிபால் தம்பியை அடிக்கடி சமாதானப்படுத்துவான். தாழ்ந்து கொடுப்பதால் மக்கள் இன்னும் அதிகமாகத் துள்ள ஆரம்பித்தனர்; அவர்களுடைய காலஞ்சென்ற தாயாரையும் பரிகசிக்க முற்பட்டனர்.

மாமன்மார்களுடன் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்த நேரத்தில் சஜ்ஜன் வரும்செய்தி எட்டியது. மஹிபால் வியப்புற்றான். சஜ்ஜன் வந்தது மஹிபாலுக்குப் பிடிக்கவில்லை. அவன் வேண்டுமென்றே தான் சஜ்ஜனை அழைக்கவில்லை. கர்னலுடன் சேட் ரூப்ரத்தனின் அறையில் சஜ்ஜன் இருப்பதாக அவன் அறிந்துகொண்டான்.

ரூப்ரத்தன், சஜ்ஜனை மிகவும் மரியாதையுடன் வரவேற்றார். பிறகு வேண்டுமென்றே அவனுடைய டிரஸ்டு, இயக்கம் இவற்றைப் பற்றி பேசினார்: "பாரத நாட்டில் எண்ணற்ற சாதியினர் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று இருக்கும் வரையில் இவர்களை ஒன்று சேர்த்து ஒரு வேலையும் செய்ய முடியாது. சாதிகளை ஒழிப்பதென்பதும் இயலாதகாரியம், எத்தனையோ பெரிய புயல் கிளம்பியும் பாரத நாட்டுச் சாதிப் பிரிவினையைமட்டும் ஒழிக்க எவராலும் முடியவில்லை. அதன் அட்டகாசத்தை அந்த அந்தச்சாதி செய்து கொண்டேதான் இருந்தது. நாகரிகத்துக்காகச் சோஷலிஸம், சமுகச் சீர்திருத்தம் என்றெல்லாம் நாம் பேசுகிறோம், ஏழை மக்களை இப்படியாவது தேற்றத்தான் வேண்டியிருக்கிறது. ஆனால் அறிவுடைய எந்த பாரத பிரஜையும் இந்த அயல்நாட்டுக் கொள்கைகளில் நம்பிக்கை வைக்கவே கூடாது. வாலிபப்பருவத்தில் நானுந்தான் சோஷலிஸ்டாக இருந்தேன்; இப்போதும் அதே வ்யூஸ் கருத்துதான் கொண்டிருக்கிறேன். ஆனால் இதெல்லாம் பாரத நாட்டு மக்களுக்குப் பயன்படாது என்று அறிந்துகொண்டு விட்டேன். குறைந்த பட்சம் ஐம்பதாண்டுகள்வரை இங்கு ஒரு மாறுதலும் இருக்காது. அதன் பிறகு என்ன நடக்குமோ தெரியாது."

சஜ்ஜனுக்கு இது பிடிக்கவில்லை. உடனே ஏன் பிடிக்கவில்லை

என்று உள்ளம் கேள்விக் கேட்டுக் கொண்டது. இப்படிப்பட்ட சமுதாயத்திலேயே வாழ ரூப்ரத்தன் விரும்புகிறார். ஆனால் ஏற்றத்தாழ்வற்ற சமுதாயத்தில்தான் சஜ்ஜன் வாழ விரும்புகிறான். அவனுடைய விருப்பில் உண்மை இருந்தால், அது நிறைவேறியே தீரும். ராஜாசாஹேப், ரூப்ரத்தன், மஹிபால் ஆகியோரின் பேச்சைத் தவறாக நினைக்கக் கூடாது என்று அவன் தெளிந்தான். இதில் அவனுடைய இச்சாசக்தி பலமுள்ளதாக இருக்க வேண்டும். அவனுடைய விருப்பம் எத்தகையது! என்று பரீட்சிக்கத்தான் இப்படிப்பட்ட விரோதம் மூளுகிறது. அவன் ரூப்ரத்தனிடம் கூறினான்: "உங்கள் பேச்சை நான் தவறெனக் கொள்ளமாட்டேன். ஆனால் அதை உண்மை என்றும் ஒப்புக் கொள்ள முடியாது. நான் உங்கள் எதிர்ப்பைப் பணிவுடன் தாங்க, அத்துடன் போராடச் சித்தமாக இருக்கிறேன்."

"காந்தியடிகளாகி விட்டீரோ?" ரூப்ரத்தன் குத்தலாகப் பேசினார்.

சஜ்ஜன் புன்முறுவலுடன் கூறினான்; "காந்தியடிகள் பாரத பிரஜைதான். நானும் பாரத பிரஜையாக இருக்க இப்போது முயற்சி செய்கிறேன்."

"இது வரை அயல் நாட்டானாகவே இருந்தாய்?"

"ஆமாம், அயல் நாட்டான்மட்டுமா. எதிலும் நாட்டமில்லாதவனாகவும் இருந்தேன். நாம், நம்மவர் என்ற எண்ணமின்றி இருந்தேன். இனி நான் எனக்குரியவன்."

மஹிபால் வந்தான். அவன் அப்போது மிகவும் வருத்தமுற்றிருந்தான். அறையில் வந்து சஜ்ஜனைக் கவனிக்காமலேயே சோபாவில் உட்கார்ந்து கொண்டான். சஜ்ஜன் கூறினான்: "நான் உனக்கு என் பாராட்டுகளைத் தெரிவிக்க வந்தேன்."

"தாங்க்ஸ், நான் உன்னைவிட உன் வக்கீலின் நோட்டீசைத் தான் எதிர்பார்த்திருந்தேன். மான நஷ்டஈடு வாங்க என் பேரில் வழக்குத் தொடரப்போவதாகக் கேள்விப்பட்டேன்."

சஜ்ஜன் அமைதியுடன் பதிலளித்தான்: "எண்ணமிருந்தது வாஸ்தவம்தான். ஆனால் என்னிடம்தான் பொறுமை மிகுந்திருக்கிறது என்று இப்போது உணர்ந்து கொண்டேன். ஆகையால் நான் சொந்தமான நஷ்டஈடு செலுத்திக் கொண்டிருக்கிறேன். உள்ளம் என்னும் நீதி மன்றத்தில் வெற்றியடைந்து விட்டால், பிறகு ஏதாவது செய்யும் தகுதி பெறுவேன்."

கர்னல் குழந்தைபோல் மகிழ்ச்சியுடன் பேசினான்: "சஜ்ஜன், நீ மகான், நண்பனே! மஹிபாலின் முன்னிலையில் கூறுகிறேன், அவனிடம் உன் போன்ற (பெருந்தன்மை) கிடையாது."

மஹிபால் தன்னை மிகவும் தாழ்ந்தவனாக உணர்ந்தான். இது

அவனைப் பெரிதும் துன்புறுத்தியது. தன் சம்பந்திகளிடம் காண்பித்துக்கொள்ள முடியாத ஆத்திரத்தை இப்போது அவன் சஜ்ஜனிடம் காண்பித்துக் கொண்டான். கர்னலின் பேச்சுக்குப் பதில் அளிக்கும் வகையில் அவன் கூறினான் : ''எத்தனையோ பேர்களின் பெருந்தன்மையை நான் பார்த்திருக்கிறேன். இவன் எந்த மூலைக்கு? பெரிய பெரிய கோடீசுவரர்களையும் பார்த்திருக்கிறேன். என் எதிரில் ஒருவரும் வாய் திறந்து பேசமாட்டார்கள். லட்சியத்தை ஒரு மூலையில் நான் வைத்துவிடுபவன். எவனுடைய பணத்தையும் கண்டு நான் அஞ்சுபவனில்லை. எனக்கு எவனுடைய பணமும் வேண்டியதில்லை. நேற்றிலிருந்து இன்றுவரை பணத்தைத் தண்ணீராக வாரி இறைத்திருக்கிறேன்.''

''ஆமாம், சும்மா வருகிறதே, பின்பு இறைக்காமல் என்ன செய்வாய்?'' சேட்ரூப்ரத்தன் ஆத்திரத்துடன் பேசினார்.

சம்பந்திகளின் அவமதிப்பைச் சகித்துக்கொண்டு மனத்திற்குள் குமுறிக் கொண்டிருந்த மஹிபால் அந்த ஆத்திரத்தைச் சஜ்ஜன் பேரில் காண்பித்தான். சேட் ரூப்ரத்தன் இதைத் தவறாக எண்ணி விட்டார். மஹிபால் தனவந்தருடன் போட்டியிடுகிறான் எனக் கருதி அவர் அவனைச் சரிப்படுத்தக் கங்கணம் கட்டிக்கொண்டார். சேட் ரூப்ரத்தன் பெரிதும் உதவியிருந்தார். மஹிபால் விற்க முயன்ற நகைகளைத் தாமே வாங்கிக்கொண்டு அவனுக்கு நாற்பதாயிரம் ரூபாய் கொடுத்திருந்தார். திருமணத்திற்காகத் தம் வீட்டையும் தந்துதவினார். அப்படியிருந்தும் இவனுக்கு இவ்வளவு செருக்கும் நன்றிகெட்டதனமுமா? அவரெதிரே தன்னைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்கிறானே! சேட் ரூப்ரத்தன் சுரீரென்று தைக்கும்படி பேசினார் : ''மாமாவின் வீடு கொள்ளை போயிற்று. மஹிபாலுக்கு வந்தது மகிழ்ச்சி! மிகவும் நல்லவர்போல் கொள்ளைக் காரர்களைக் கொன்றுவிட்டுத் தாமே எல்லாப் பொருளையும் பறித்துக் கொண்டார். இப்போது பெரிய தனவந்தரும் ஆகிவிட்டார்!''

கர்னலும் சஜ்ஜனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர், மஹிபால் பித்தனாகிவிட்டான்; கர்ஜனை புரிந்தான் : ''என்னை அவமானப்படுத்தாதே! நான் கொலை செய்துவிடுவேன்.''

சேட்ரூப்ரத்தன் சிரித்தபடி பேசினார் : ''பெரிய சேட் இல்லையா? ஏன் செய்ய மாட்டாய்? உன் மாமன் மகனையும் கூப்பிடுகிறேன். சற்றுப் பொறு. உன் அம்மாவுடைய மாலை என்றாயே, யாருடையது என்று கேட்கிறேன், இரு!'' ஸ்டூலின் மீதிருந்த மணியை ரூப்ரத்தன் தட்டினார். சஜ்ஜன் கரங்குவித்தபடி ரூப்ரத்தனிடம் கேட்டுக்கொண்டான் : ''இப்படி அவமானப்படுத்தாதீர்கள். மஹிபால் எங்கள் நண்பன்; மிகப் பழைய நண்பன்.'' கர்னலும் கெஞ்சும் பாவனையில் சேட்ரூப்ரத்தனைப் பார்த்துக்

கொண்டிருந்தான். கற்சிலை போல் மஹிபால் அமர்ந்திருந்தான். ரூப்ரத்தன் மஹிபாலை ஒரு முறை பார்த்தபடி கூறினார் : ''அந்தப் பெருமை இப்போது எங்கே போய்விட்டதாம்? உலகம் முழுவதும் செய்வது உபதேசம்! தான் செய்வது அநீதம்!''

சஜ்ஜன் கூறினான் ; ''இருக்கட்டும், விட்டு விடுங்கள், ரூப்ரத்தன்.''

''விட்டுத்தான் விடுகிறேன். இவருடைய செருக்குத்தான் என்னை ஆத்திரம் அடையச் செய்கிறது. இவருடைய மாமன் மகன் என் பழைய பள்ளித் தோழர். அதனால்தான் திருட்டு வெளிப்பட்டது. அவர் வழியாகத்தான் இவனைப்பற்றி எனக்குத் தெரிய வந்தது. நேற்றுத் திடீரென்று சொத்து, நகை முதலிய வற்றைப்பற்றிப் பேச்சு வந்தது. கொள்ளையடித்த விஷயம் பிற கல்லவா தெரிய வந்தது! தாயின் நகையும் மாமன் வீட்டுடை யதுதானே எனக் கருதி எல்லா நகைகளையும் காண்பித்தேன். அவர் வியப்பில் ஆழ்ந்துவிட்டார். அவர் வீட்டில் களவு போன நகைகளாம் அத்தனையும்! கொள்ளையோடு கொள்ளையாக இவன் திருடியிருக்கிறான்! போனால் போகிறான் என்று நினைத்து அவர் களுடைய முன்னிலையில் நான் ஒன்றும் பேசவில்லை. ஆனால் இன்று இவன் அடித்துக்கொள்ளும் பெருமையைக் கேட்டுக்கொண்டு என்னால் சும்மா இருக்க முடியவில்லை. திருடன்! நன்றிகெட்ட வன்! நீயும் உன் பெருமையும்! பெரிய பிராம்மணனும், ஆசிரிய ராம், எழுத்தாளனும்!......சஜ்ஜன் எத்தனைதான் கெட்டவனாகவே இருந்தாலும் தன் பணத்தை லட்சக்கணக்கில் ஏழைகளுக்காக வாரி இறைக்கிறாரே! களவுச் சொத்தில் பெருமை யடித்துக் கொண்டு பணத்தைத் தருமம் செய்வதாக இவன் சொல்லிக் கொள்கிறான்! பெரிய சேட்டுதான்!''

மஹிபாலின் குனிந்த தலை நிமிரவே இல்லை. நிலைமையின் போக்கைப் புரிந்துகொண்டு சஜ்ஜன், மஹிபாலிடம் ஒன்றும் பேசாமல் ரூப்ரத்தனிடம் விடை பெற்றுச் சென்றான். கர்னலும் அவனுடன் கூடவே கிளம்பிவிட்டான்.

மஹிபாலுக்கு உலகமே சுமையாகப் பட்டது. எந்தக் திக்கிலி ருந்தும் ஒவ்வொருவரும் தன்னைத் திருடன் என்று தூற்றுவது போல் இருந்தது அவனுக்கு. ரூப்ரத்தனுடைய அறையிலிருந்து எழுந்து திருமண வீட்டோரின் அறைக்கு அவனால் செல்ல முடிய வில்லை. அவன் வெளியே வந்தான். அவனுடைய படிப்பு, அறிவு, சிந்தனை, லட்சியம், எல்லாம் வீணாகி விட்டன. பணத்தாசை அவனைத் திருடனாக்கிவிட்டது! எந்த ரகசியத்தை உலகத்தவரிடமிருந்து அவன் மறைத்து வைத்திருந்தானோ அந்த ரகசியம், மஹிபாலின் அந்தப்பாவச்

செயல் அநாயாசமாக வெளியாகிவிட்டது. திரைப்படம் போல் நிகழ்ச்சிகள் கண்முன் நின்றன. இரவு நேரம். தாத்தாவின் வீட்டில் திருடர்கள் புகுந்து கொள்ளையடிக்க ஆரம்பித்தனர். எவ்வளவு பயமின்றி வீரத்துடன் அவன் திருடர்களை எதிர்த்தான். தன் குண்டு வீச்சில் ஒரு மூட்டை நகைகளுடன் திருடன் தரையில் வீழ்ந்தான். மூட்டையைப் பார்த்த உடனேயே மஹிபாலின் போக்கு மாறிவிட்டது. மூட்டையைப் பத்திரமாக அவன் ஒளித்து வைத்துக்கொண்டான். யாரும் சந்தேகிக்கவில்லை. இரு திருடர்கள் ஓடி விட்டனர். அவர்களே நகைகளைக் கொண்டோடி விட்டனர் எனப்பழி சுமத்தப்பட்டது. ஒரு திருடனைக் கொன்ற தால் மஹிபால் ஹீரோவாகி விட்டான். அன்று ஹீரோ! ஆனால் இன்று தன் நண்பர்களிடையே அவனே திருடனாக நிரூபிக்கப்பட்டு விட்டான்! இப்போது போராட்டத்தில் சஜ்ஜனை எதிர்த்து அவனால் தலை நிமிர்ந்து நிற்க முடியாது! அவனால் ரூப்ரத்தனைப் பார்த்துச் சரிசமமாகப் பழக முடியாது. கர்னலைப் போல் கல்யாணி குழந்தைகள் எல்லோருக்கும் தெரிந்தால், அவனால் வீட்டில்கூட இருக்க முடியாது.

குனிந்த தலையுடன் அவன் சென்றுகொண்டிருந்தான். அவனுடைய உள்ளத்தில் பலவிதமான வேதனைகள் குமைந்து கொண்டிருந்தன. ''அடடா! நான் ஏன் இப்படிச் செய்தேன்?''

''பணத்தை மஹிபால் பணமென மதிக்கவில்லை, அதன்முன் சிரம் பணிந்தது, கிடையாது'' என்பது உண்மைதான். ஆயினும் இல்லாமை காரணத்தால் அவனது உள்ளம் பணத்திற்கெதிரே தோல்வியுற்றது. அதனால் தான் அவன் களவாடினான். அவனுடைய எல்லாத் திறமைகளையும் காசு விழுங்கிவிட்டது. திருமணம், பூணூல், படிப்பு, துணிமணிகள், கல்யாணியின் பிடிவாதம் எல்லாம் சேர்ந்து அவனை லட்சியத்திலிருந்து உருட்டித்தள்ளி விட்டன. தன் நாட்டின் சமுதாயப் பண்பாட்டு வரலாறுபற்றி அவன் எத்தனை ஆழ்ந்த ஆராய்ச்சி செய்தான்! தன் வாழ்வின் தவம் முழுவதையும் ஒரு கணத்துப் பேராசையில் பலியிட்டு விட்டான். பேதை மனிதனே! உன் பெயரைக் கூட உச்சரிக்க நாக்கு இப்போது அஞ்சுகிறது. தெய்வமே! நான் என்ன காரியம் செய்து விட்டேன்!''

வீடுகளைக் கடந்து நிசப்தமான இடத்தை நோக்கி மஹிபால் நடந்தான். சிகந்தர் பாதையைக் கடந்துவிட்டான். மரப்பாலத்தையும் கடந்து விட்டான். நிஷாத் கஞ்ஜ் பேட்டையின் மக்களிடமிருந்து தப்பிக்கொண்டு மஹிபால் கோமதிக்கரையை நோக்கிச் சென்றான். சென்றுகொண்டேயிருந்தான்.

பகல் கழிந்தது. இரவு வந்தது. மறு நாள் வீட்டிலுள்ளவர்கள்

கவலையுற்றனர். கல்யாணியின் உள்ளம் ஒவ்வொரு கணமும் கணவனின் காலடி ஓசையாக மாறிவிட்டது. அதைத்தவிர அவள் வேறொன்றையும் கேட்கவில்லை. திடீரென்று மஹிபால் எங்குச் சென்று மறைந்தான் என்று யாருக்குமே தெரியவில்லை. திருமண உற்சவம் எப்போதும் போல் நடந்துகொண்டிருந்தது. மூன்றாம் நாள் காலை விருந்து, மாலை விருந்து எல்லாம் முடிவடைந்தன. வந்தவர் விடைபெற்றுத் தட்சணையுடன் திரும்பினர். அப்போது எல்லோருக்கும் மஹிபாலின் நினைவு வந்தது. விடைபெற்றுச் செல்ல விருந்த சகுந்தலா விசித்து விசித்து அழுதாள். வீட்டைச் சுற்றி அழுகையும், கண்ணீருமாக இருந்தன. ஆனால் கல்யாணியின் கண்ணீர் உலர்ந்து போய்விட்டது. நாள் முழுவதும் கணவனுடைய வரவை உள்ளம் எதிர்பார்த்திருந்தபோதிலும் உடல் இயந்திரத்தைப் போல் வேலை செய்துகொண்டிருந்தது. அந்த வேலையும் இப்போது முடிவடைந்து விட்டது. கல்யாணி சூனியமாகிவிட்டாள். காலடியோசையின் நம்பிக்கையும் மறைந்து விட்டது. சம்பந்திகள், மஹிபாலின் மறைவு பற்றிப் பலவிதமாக பேசிக்கொண்டனர்.

சகுந்தலா பிரிந்து செல்லும்போது திடீரென்று கன்யா அங்கு வந்தாள். சிந்தனையில் ஆழ்ந்த அவளது முகத்தைக் கல்யாணி பார்த்துக்கொண்டு நின்றாள். கன்யாவைத் தனியே அழைத்துச் சென்று அவள் கேட்டாள்: ''ஏதாவது செய்தி கொண்டு வந்திருக்கிறாயா?''

''முதலில் மகளுக்குப் பரிசு கொண்டு வந்திருக்கிறேன்'' என்று கூறிய கன்யா, கல்யாணியிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு சகுந்தலாவிடம் சென்றாள். சகுந்தலா 'அண்ணி' கன்யாவைக் கண்டு அழுதாள். கர்னல், சஜ்ஜன், கர்னலின் மனைவி, கன்யா— இவர்களனைவரின் சார்பிலும் கன்யா பரிசு கொண்டு வந்திருந்தாள். பரிசு கொடுக்க அது ஏற்ற நேரமில்லை, எனினும், அது தான் தக்க தருணம் எனக் கருதி அவளுடைய 'மாமன்'மார் இருவரும் மரணமடைந்த தம் அன்பனின் சார்பில் மணமகனுக்கும், மணமகளுக்கும் உயர்ந்த பரிசைக் கொடுத்தனுப்பியிருந்தனர். அந்தப் பரிசைத் தருவதற்காகத்தான் மஹிபால் நொடித்துப் போக நேர்ந்தது. பிறகு இறக்க நேர்ந்தது. விலையுயர்ந்த பர்னிச்சர், பட்டுத்துணிகள், நகைகள், புதிய மோட்டார் வண்டி இரண்டு நண்பர்களும் தம்மால் இயன்ற எல்லாவற்றையும் வாங்கி லாரியில் அனுப்பினர். தம் ஆருயிர்த் தோழன் அங்கு இல்லாததால் அவனது பொறுப்பை இவர்கள் ஏற்றனர். எல்லாம் சேர்ந்து சுமார் நாற்பது ஐம்பதாயிரம் ரூபாய் பெறும். கர்னலின் டிரைவர் புதிய வண்டியை எடுத்து வந்தான். வண்டியை

மலர்களால் அலங்கரித்து அனுப்பியிருந்தார்கள். மணமக்கள் தங்கள் வண்டியிலேயே ஏறிச் சென்றனர். மஹிபாலின் நண்பர்கள் அளித்த சீர்வரிசை காரணமாகப் பேச்சுக்கள் மக்களிடையே மாறிவிட்டன.

சம்பந்தி வீட்டார் சென்றதும் வீட்டில் மற்ற உறவினர்களின் கூட்டம் இருந்தது. ஆனால் வேலையில் அந்தப் பழைய உற்சாகம் இருக்கவில்லை. கன்யா கல்யாணியுடன் அறைக் கதவை தாழிட்டுக் கொண்டு பேசினாள். குழந்தைகள் அதனால் அதிக ஆவலுடன் காணப்பட்டனர். முதல் நாள் பிற்பகலிலிருந்து திடீரெனத் தந்தை காணவில்லை என்றால் குழந்தைகளின் மனநிலை விசித்திர மாகத்தான் இருக்கும். இதற்குள் டாக்டர் ஜய்பால் எங்கிருந்தோ வந்தான். தன் மனைவியைத் தனியாக அழைத்து ஏதோ பேசினான். இந்த விசித்திரமான சூழ்நிலையில் குழந்தைகள் மிகவும் பரிதாப மாகக் காட்சியளித்தனர். மனைவியிடம் பேசிய பிறகு ஜய்பால் குழந்தைகளிடம் வந்தான். தப்பூவிடம் கேட்டான்: ''உன் அம்மா எங்கே?'' பயந்த தப்பூ மூடியக் கதவைத் தட்டினான். கன்யா கதவைத் திறந்தாள். கல்யாணியின் மைத்துனனைப் பார்த்ததும் ஓர் ஓரமாக ஒதுங்கிக்கொண்டாள். கல்யாணி அறையில் உட்கார்ந்துகொண்டு வலது கையால் தன் இடது கையில் போடப்பட்டிருந்த வளையல்களை ஓங்கி ஓர் அடிபோட்டு உடைத்துக் கொண்டிருந்தாள். இப்போதும் அவளுடைய கண் களில் கண்ணீர் இருக்கவில்லை. ஜய்பால் அழுதபடி கூறினான்: ''அண்ணி! அண்ணன் ஏன் இப்படிச் செய்துவிட்டார்!'' தரையில் ஜய்பால் உட்கார்ந்துகொண்டு அழுதான். கன்யாவின் கண்கள் கண்ணீரைப் பொழிந்தன. மூத்த மகனும், மகளும் இதைக் கண்டு அறைக்குள் ஓடி வந்தனர். கன்யா ராஜ்யஸ்ரீயை அணைத் கொண்டாள். மகன் சிற்றப்பாவிடம் கேட்டான்: ''அப்பாவுக்கு என்ன?'' ஜய்பால் இன்னும் அதிகமாக அழுதான். குழந்தைகள் இன்னும் அதிகமாகக் கேள்வி கேட்டனர். பிறகு மஹிபால் என்னும் தந்தை, கணவன், அண்ணன் இனி இந்த உலகில் இல்லை என்பதை எல்லோரும் தெரிந்து கொண்டனர்.

இன்று காலையில், கர்னல் எப்போதும் போல் திருமணம் நடந்த வீட்டிற்கு வராமல் சஜ்ஜனுடைய வீட்டை அடைந்தான். நண்பர்கள் இருவரும் தனியாக உட்கார்ந்து பேசிக்கொண்டிருந் தனர். மஹிபாலின் அறிவு இப்படி மழுங்கிவிட்டதே என்று வருந்திக் கொண்டிருந்தனர். மானத்திற்குப் பயந்து மஹிபால் ஏதாவது செய்துகொண்டுவிடப் போகிறானே என்று சஜ்ஜன் அஞ்சியதுண்டு! ஆனால் திருமணம் முடியும்வரை அப்படி ஒன்றும் செய்துகொண்டுவிடமாட்டான் என்று கர்னல் நம்பிக்கை கொண்

டிருந்தான். மஹிபால் அவமானப்பட்டுக் குன்றிவிடப்போகிருனே எனக் கருதி, கர்னல் இன்று காலே அங்கே செல்லவில்லே, திருமணம் முடிந்ததும் மஹிபால் தற்கொலே புரிந்துகொள்ள முயல்வான் என்ற பயம் கர்னலுக்கும் இருந்தது. மாலேயில் சம்பந்திகள் விடை பெற்றுச் சென்ற பின்னர் மஹிபாலேப் பத்திரமாகக் கண்காணிக்க வேண்டும் என்று அவன் எண்ணியிருந்தான்.

வனகன்யா, கர்னல் வந்த சிறிது நேரத்திற்குப் பிறகு முறைப்படித் தன் வேலேயில் ஈடுபட்டாள். சுமார் பன்னிரண்டரை மணி இருக்கும். ஒரு தினசரிச் செய்தித்தாளின் ஆசிரியரிடமிருந்து சஜ்ஜனுக்கு ஃபோன் வந்தது. உடனே செய்தித்தாளின் அலுவலகத்திற்குச் சஜ்ஜனே வரும்படி அவர் கேட்டுக்கொண்டார்.

சஜ்ஜன் சென்றவுடன் ஆசிரியர் அவனிடம், ஒரு கடிதத்தை நீட்டினர். எழுத்து மஹிபாலுடையது. பள்ளி மாணவரின் கணக்கு நோட்டிலிருந்து கிழிக்கப்பட்ட பழைய தாளில் பென்சிலால் எழுதப்பட்டிருந்தது :—

''ஆசிரியர் அவர்களுக்கு,

கடித உருவில் இது என் கடைசிக் கட்டுரை. இது பிரசுரமாகும் போது, இதனேப் பார்க்க நான் இருக்க மாட்டேன். இறந்துவிட்ட ஒரு மனிதனின் இறுதி ஆசை என்ற முறையில் இதை உங்கள் செய்தித்தாளில் தயைக் கூர்ந்து பிரசுரிக்கும்படி கரங்குவித்து வேண்டிக் கொள்கிறேன். நான் செய்த ஒரு குற்றத்தை இப்போது ஒப்புக் கொள்கிறேன். ஒரே கணத்தில் பேராசை என்னேக் கள்வனுக்கி விட்டது. நான், என் மாமன் மகனின் வீட்டில் வளர்ந்தேன். அங்கே கொள்ளே நடந்தபோது நான் இருந்தேன். ஒரு கொள்ளேக்காரனேக் கொன்று அவனிடமிருந்த நகை மூட்டையை நான் பறித்துக் கொண்டேன். அந்த நகைகள் என் பாட்டி வீட்டுச் சொத்துத் தான். நான் அதை உடனே ஒளித்து வைத்துவிட்டேன். மற்றும் இரு கள்வர்கள் ஓடிவிட்டனர். அவர்களுடன் கொஞ்சம் பணமும், நகையும் போய்விட்டன. இந்த நகைகளேயும் அவர்கள்தாம் கொண்டு சென்றனர் என்று நான் கூறிவிட்டேன். இந்தக் களவைச் செய்யும்போது என் ஆத்மா நடுங்கியது. ஆயினும் இல்லாமை காரணமாக என் ஆத்மாவை உள்ளச் சிறையில் போட்டு நான் அமுத்திவிட்டேன். அந்த நாட்களில் என் அக்காளின் மகளுக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்ற கவலே எனக்கு இருந்தது. நம் பரம்பரை வழக்கப்படி அவளுக்குத் திருமணம் நடத்தியாக வேண்டும் என்று என் மனேவி பிடிவாதம் பிடித்தாள். அவளுடைய பிடிவாதத்தில் சமூகத்தின் நாடி பேசிற்று. நானும், தாய்தந்தையற்ற அந்தப் பெண்ணிற்குத் திருமணம் விமரிசையாக நடத்த வேண்டும் என விரும்பினேன்.

நல்ல அதிகாரிகளின் சூழ்நிலையில் வளர்ந்த எனக்கும் அந்தப் பெருமையும், செருக்கும் உண்டு. திருமணம் மட்டுமில்லை, எந்தக் காரியத்தையும் தடபுடலாகச் செய்ய ஆசைப்படுபவன் நான். கடந்த சில ஆண்டுகளாக என் பொருளாதார நிலை சற்றுக் கவலைக்கிடமாகிவிடவே, என் உள்ளம் சற்றுச் சலிப்படையத் தொடங்கியது. இந்த நிலைமைதான் என் நேர்மையைக் கொலை செய்து விட்டது. இந்தப் பணம் எனக்குக் கடவுளிடமிருந்து கிடைத்தது என நான் கருதினேன். இவ்வளவு சொத்தை இழந்துங்கூட ஒருவர் தனவந்தர் என்று அழைக்கப்படுகிறார்; என்னைப் பொறுத்த வரையில், இது என் அக்காளின் மகளுடைய திருமணத்திற்குப் போதுமானது. அவளைப் பற்றிய பிரச்னை இனி எளிதில் தீர்ந்து விடும் என நினைத்தேன்.

''இன்று இந்த எண்ணம் எவ்வளவு மோசமானது என்பதைப் புரிந்துகொண்டேன். களவு செய்ததும் நான் கோழையாகிவிட்டேன். கோழை பேசும் தர்க்கவாதங்கள் புரட்சிகரமாகக் காணப்பட்டபோதிலும் பலமிழந்து கிடக்கும். நான் என் மனத்தைப் பொய்த் தர்க்கங்களால் தேற்றிக்கொண்டேன்; மகிழ்வூட்டி வந்தேன்.

''எந்தச் சமூகம் என் போன்ற விழிப்படைந்த மனிதனை இல்லாமை காரணமாக உயிருடனேயே வதை செய்யும் சக்தி பெற்றிருக்கிறதோ, அந்தச் சமூகத்தை ஏன் பாதாளத்தில் தள்ளி அழிக்கக் கூடாது? அதற்காகத்தான் பயங்கரமான சமூகத்தில் சிக்குண்டு தவித்த என்னைப்பற்றிய செய்தியை உங்கள் செய்தித் தாளில் பிரசுரிக்க வேண்டும் என நான் விரும்புகிறேன்.

''என் கோழைத்தனத்தைப் போக்கிக் கொள்ளவே என்விருப்பப் படியே நீரில் மூழ்கித் தற்கொலை புரிந்துகொள்கிறேன்.

''இரண்டாவது குற்றம்; நான் என் ஆருயிர்த் தோழனை சஜ்ஜன் வர்மாவைப் பகைத்துக்கொண்டது. அவர் மக்களுக்கு ஆற்றும் தொண்டினைக் கண்டு, அவர் கொடுக்கும் தருமத்தினைக் கண்டு, அவர் பேரில் பொறாமை கொண்டேன். அதனால் பல ஆண்டுகளாக என் கனவாக இருந்த அவருடைய சமூக நலத் திட்டங்களை எதிர்த்தேன். என் நடத்தையின் இந்தக் குறுகிய மனப் பான்மையை, களங்கமென்று சமுதாயம் என்றும் நினைவில் கொள்ளட்டும். இதை நான் களவைவிடப் பெருங்குற்றமாகக் கருதுகிறேன்.

கடையன்

மஹிபால் சுக்லா''

கடிதத்திற்குக் கீழே முன்னுக்குப் பின் தொடர்பற்ற சில வாக்கியங்கள் எழுதப்பட்டிருந்தன. ''மனிதன் தனி மனிதனாக நிச்சயம்

இருக்கட்டும்; ஆனால் மனிதனின் தனிப்பட்ட சிந்தனையிலும், சமுதாயத்தைப்பற்றிய எண்ணம் இருக்க வேண்டும்—நான் தனிப் பட்டவன். ஆனால் பெரும்பாலான மக்களுடன் சேர்ந்தவனுங்கூட. சுகம்—துக்கம்—அமைதி—அமைதியின்மை போன்ற தனிப்பட்ட அநுபவங்கள் இருக்கின்றன. ஆனால் இவை சமூகத்து ஒவ்வொரு மனிதனிடமும் உண்டே! ஆகையால் சமுதாயம் ஒன்று, மனிதர் பலர் என்று நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். சூரியன்—சந்திரன்—நிலம் எல்லாம் ஒன்று. ஒன்றேதான்! பல தத்துவங்களால் இவை நிறுவப்பட்டபோதிலும் ஒன்றேதான்.''

சஜ்ஜன் ஒரு முறை கடிதத்தைப் படித்தான்; பிரமித்து நின்றான். பிறகு படித்தான். படிக்கப் படிக்கக் கடிதம் கையினின்றும் நழுவி விட்டது. பிறகு மேஜைமீது தலையை வைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதான்.

கர்னலுக்குத் தெரிவிக்கப்பட்டது. டாக்டர் ஜய்பாலையும் அழைத்துத் தெரிவித்தார்கள்.

போலீசுக்கும் செய்தி விடுக்கப்பட்டது. கோமதி நதிக்கரையில் சூரியா படித்துறையிலிருந்து பந்தா வரையிலும் தேடப்பட்டது. மஹிபாலின் உடை ஏதாவது இருக்குமோ என்று கருதிப் பரிசோதித்தார்கள். ஆனால் வீண் சிரமந்தான். மஹிபால் எங்கிருந்து காகிதமும், பென்சிலும் பெற்றான், எந்த நேரம் வந்து இந்தக் கடிதத்தை ஆசிரியருடைய அலுவலகத்தின் முன் வைக்கப்பட்டிருந்த கடிதப் பெட்டியில் போட்டுச் சென்றான். எங்கு, எப்போது உயிர் துறந்தான், இந்த ரகசியம் முழுவதையும் மஹிபால் தன்னுடன் கூடவே எடுத்துச் சென்றுவிட்டான்!

## 52

மஹிபாலின் மறைவு அதிர்ச்சியைத்தந்தது. கர்னல், கல்யாணி, சஜ்ஜன், சீலா (இவர்கள் எல்லோருடைய அன்பிற்குப் பாத்திரமாயிருக்கும் காரணத்தால்) கன்யா உள்பட—யாருடைய உள்ளத்திலும் ஆறாத ஒரு புண்ணை ஏற்படுத்திவிட்டது. சில தினங்கள் வரை எல்லோருக்கும் மஹிபால் இறக்கவில்லையென்றும், இங்கேதான் எங்கோ இருக்கிறான், ஒரு நாள் வருவான் என்றும் தோன்றிக் கொண்டிருந்தது. திடீரென அவனது குரல் கேட்பதுபோல் இருக்கும். பிறகு அவர்கள் பெருமூச்செறிந்து கண்ணீர்விடுவார்கள். எல்லோருடைய உள்ளங்களும் தங்களை ஆயிரக்கணக்கான கேள்விகள் கேட்டுக்கொண்டுவிட்டன. இவர்களுடைய வாழ்விலிருந்து மஹிபால் மறைந்ததோடன்றி, ஒரு நிரந்தரமான

வாழ்க்கை முறையையே தகர்த்துச் சென்றுவிட்டான். குரல், உருவம், நிறம், குணம், குற்றம் நிறைந்த ஒரு மனிதன்—அன்புக் குரிய ஒருவன்—இவ்வளவு விரைவில் 'இருக்கிறான்' என்பதிலிருந்து 'இருந்தான்' என்றாகிவிட்டான்!

பிறப்பும், இறப்பும் இயற்கையின் போக்குகள். பிறப்பினால் மகிழ்ச்சியும், இறப்பினால் வருத்தமும் சமுதாயத்தின் இடைவிடாத ஒரு செயலாகிவிட்டது. இது எப்போதும் இருக்கக்கூடிய செயல்தான். காலம், சோகத்தைக் குறைத்துக்கொண்டே வருகிறது. மஹிபால் நோய்வாய்ப்பட்டு, சிகிச்சை பெற்ற பின்பு இறந்திருந்தாலோ, அல்லது முதுமைவரை வாழ்ந்துவிட்டு மறைந்திருந்தாலோ வருத்தம் தோன்றியபோதிலும் இப்படி ஒரு பேரதிர்ச்சி எவருடைய உள்ளத்திற்கும் ஏற்பட்டிராது. மஹிபாலைப் போன்ற அறிஞன், சிந்தனையாளன், இப்படித் தவறான மோக வலையில் சிக்குண்டு தற்கொலை புரிந்துகொண்டது உள்ளத்தை வாட்டும் உண்மை. அந்த உண்மையைப்பற்றி சஜ்ஜனால் சிந்திக்காமல் இருக்க முடியவில்லை. மஹிபாலின் நிலைபோல் சஜ்ஜனுக்கும் ஏற்பட்டிருந்தால், அவனும் ஒருவேளை இப்படித்தான் தன்னை மாய்த்துக்கொண்டிருப்பானோ என்னவோ? தன்னம்பிக்கையும் ஆத்ம பலமும் இழந்து மனிதன் இவ்வாறு படுகுழியில் விழாதபடி எப்படிக் காப்பாற்றப்படலாம் என்று சஜ்ஜன் ஆராயலானான்.

சஜ்ஜனுக்கெதிரே பழைய பிரச்னை மீண்டும் வந்து நின்றது. எந்த நாட்டில் கர்ம யோகத்துச் சித்தாந்தங்கள் உள்ளனவோ, வேதம், உபநிஷதம், இலக்கியம் முதலியவை உள்ளனவோ, வியாசர், வால்மீகி போன்ற காலத்தை மாற்றி அமைத்த மகரிஷிகள் இருந்தனரோ எவ்வளவு அறிவுச் செறிவு, அஜந்தா, எல்லோரா, கோனார்க், தென்னிந்தியாவின் சிறப்பு—நாடு முழுவதும் பரவியுள்ள இணையற்ற சிற்பங்கள், நல்ல நீதி இலக்கியங்கள் உள்ளனவோ. எந்த நாட்டின் வரலாறு மிகவும் பெருமை வாய்ந்ததோ—அந்த நாடு ஜடமாக, அழுக்கில் அமிழ்ந்து கிடக்க ஆசைப்பட்டு இன்றும் அதே பயங்கர நிலையில் தற்கொலையில் இறங்குகிறது. மஹிபாலும் பாரதமும் தம் ஞானம்—அஞ்ஞானம் இரண்டையும் கொண்டு ஒரே மாதிரியாகத் தோற்றம் அளிக்கும் ஒரு நிலை!

மஹிபாலை மறப்பதற்காகச் சஜ்ஜனுடைய மௌனமான பிடிவாதம் அவனை இன்னும் கடினமாக உழைக்கச் செய்தது. அவனும் கன்யாவும், வீடுவீடாகச் சென்று மக்களிடமிருந்து அவரவர்களுடைய பிரச்னைகளைப்பற்றி நேரடியாகக் கேட்டுத் தெரிந்து கொண்டனர். வறுமை நோய்தான் பொதுவாக எங்குமே பரவி

இருந்தது. அது மட்டுமின்றி, நம் நாடு காலத்தை, நேரத்தை அநுசரித்துச் செல்லத் திறமையற்றுக் கிடந்தது. காலத்திற் கேற்றப்படி நடந்து கொள்ள எந்தப் பண்புகள் தேவையோ அவற்றைப் பொறுத்தமட்டில் நம் சமூகம் இன்னும் விழிப்படைய வில்லை.

இதற்குக் காரணம் என்ன?

நம் நாடு எண்ணங்கள், பழக்க வழக்கங்கள், இவையாவும் கொண்ட ஒரு மாபெருங் கண்காட்சிச்சாலை. நூற்றுக்கணக்கான நூற்றாண்டுகளின் நடை—உடை—பாவனைகள், பழக்க வழக் கங்கள், எண்ணங்கள், நம்பிக்கைகள்—இவையாவற்றையும் இன்றைய பௌதிக விஞ்ஞானம் அர்த்தமற்றவை என்று ஒதுக்கி விட்டது! ஆனால் நம் சமூகம் அவற்றை இன்னும் அதே குருட்டு நம்பிக்கையுடன் கடைப்பிடித்து வருகிறது. ஒவ்வொரு யுகத் திலும் ஏற்பட்ட சீர்திருத்தங்கள் வரலாற்றில் இடம்பெற்று இன்றும் அந்தக் குருட்டு நம்பிக்கைகள் தலையை அழுத்திக் கொண் டிருக்கின்றன. நம் வீட்டையும் தெருவையும் சுற்றித் திரிந்து கொண்டிருக்கும் சாதுக்கள், பைராகிகள், பக்கீர்கள், ஒரு புறம்; மறுபுறம் சண்டீ பூஜை செய்யும் புரோகிதர், திருமணம் முதல் சாவு வரை எல்லாவற்றிற்கும் வேண்டிய சடங்குகளைச் செய்யும் சாஸ்திரிகள், பிரவசன கர்த்தாக்கள், தர்க்கம் செய்யும் வித்வான் கள்; பேய் பிசாசு ஓட்டும் தாந்திரிகள், சனீச்வர பகவான் பூஜைக் காகத் தானம் பெறும் பிராம்மணர், சூனிய வேலை செய்யும் மாந்திரிகர்கள், முப்பத்து முக்கோடி தேவதைகள் இப்படிப் பல. இவையாவும் தேவையற்றவை; நம் அறிவைக் குழப்பும் தொல்லை கள். இவற்றின்மீது மூடநம்பிக்கை என்பதே இல்லாமற் போய் விட்டது. பௌதிக விஞ்ஞானம் விரைவில் மலர்ச்சியடையும், இந்த யுகத்தில், பழைய சமூக முறையே அர்த்தமற்றுப் போய் விட்டது. இந்தத் தேவதைகளுடன் ஒன்றிக்கொண்டிருக்கும் மனித சைதன்யம் உடனே விடுபட்டாக வேண்டும். நாம் சிரத்தை யுடன் பக்தி செலுத்த ஒரு சாதனம் தேவைதான். ஆனால் மூட நம்பிக்கையை வளர்க்கும் சின்னங்கள் நமக்குத் தேவையில்லை. இந்நாட்டின் மிகப் பெரிய தெய்வம் நிலமகள்தான்—பூமித்தாய் அவள். பரமேச்வரன் சூனியமான ஆகாய வெளியில் இல்லை என்பதை இந்த நாடு வெகு காலத்திற்கு முன்பே உணர்ந்து விட்டது. அந்த இறைவனை ஒவ்வோர் உயிரினத்திலும் இது கண்டது; மனிதனின் அந்தப் பரம சக்தியைப் புரிந்து கொண்டது. இந்நாடு ஞானத்தையும், கர்மத்தையுமே தன் வேதாந்தத்தின் ஆதாரமெனக் கொண்டது. இவ்விதம் ஆக்க சக்தியில் இதன் நாட்டம் இருந்தது. மரண பயத்தையூட்டிப் பரலோகச்

சிந்தனையில் சிக்கவைக்கும் தத்துவம் மிகவும் உயிரற்றது; நமக்கு நாசமளிக்கக் கூடியது. இந்தப் பரலோகத்தைப்பற்றிப் பாடும் தத்துவத்தையும் சம்பிரதாயத்தையும் மக்களின் வாழ்விலிருந்து சுருட்டி 'ம்யூசிய'த்தில் வைத்து விடுவதுதான் சிறந்தது. இதுதான் நாட்டின் நலனுக்கும், காலத்தின் போக்கிற்கும் உகந்தது. ''தன்னம்பிக்கையை நழுவவிட்டுக் கடவுளின்பேரில், முப்பத்து முக்கோடி தேவதைகளின்மீது நம்பிக்கை கொள்வது தவறு'' என்று சுவாமி விவேகானந்தர் கூறியுள்ளார். தன்னம்பிக்கை தான் புது யுகத்தின் மதம்.

நம்மிடையே பரவி வரும் நம்பிக்கையின்மைக்கு மற்ெருரு காரணம் இன்றைய அரசியல் கட்சிகளாகும். இவற்றைத் தலைமை தாங்குபவர் வேறொருதரப்பட்ட பண்டாக்களும், புரோகிதர்களும், தாந்தரிகர்ளுந்தாம். இன்று இயங்கும் அரசியல் ஒரு சிறிதும் முற்போக்கானதாகக் காணப்படவில்லை. அரசியல் என்பது ஒரு சூழ்ச்சிக்கூடம், மனித நலனுக்கு வேண்டிய லட்சியங்கள் அங்கே கிடையா. சொந்த அகந்தை காரணமாக அரசியல் ஆட்டக்காரர்களின் அறிவும், திறமையும், செயலாற்றும் வழி தவறிக் கிடக்கின்றன. இப்போதைய அரசியல் சாம்ராஜ்ய வாதத்தினின்றும் பிறந்தது. இதன் சூழ்ச்சியின் காரணமாக தொழில் சம்பந்தப்பட்ட முதலாளித்துவம் சக்தி பெற்று விளங்குகிறது. அந்தச் சக்திக்கும், மக்கள் நலனுக்கும் பகை என்பது தெளிவு. இத்தகைய ஏகாதிபத்தியம் நாட்டைச் சேர்ந்ததோ, முதலாளித்துவத்தைச் சேர்ந்ததோ, அல்லது சாதியைச் சேர்ந்ததோ எப்படி இருந்தாலும் இது முற்றும் முறையற்றது. நாட்டின் பழைய—புதிய வரலாற்றின் பல உதாரணங்கள் இதை நிரூபித்துக் காண்பிக்கும்.

காங்கிரஸ், சோஷலிஸ்டு, கம்யூனிஸ்டு, ஜனசங்கம், ஹிந்து மகாசபை, போன்ற கட்சிகள் இன்று நாட்டில் உள்ளன; அவை ஒவ்வொன்றும் ஒன்றைவிட ஒன்று நாணயமற்றது! சின்னத்தனமான கருத்துக் கொண்டது. செருக்கும் மமதையும் கொண்டவர்களால் இயக்கப்பட்டு வருபவை. லட்சியங்களும், கருத்துக்களும் வேட்டையாடப் பயன்படுத்தப்படும் சாதனங்கள், அவ்வளவு தான். இவற்றினுள் இருக்கும் கருத்து வேறுபாடுகளும், போராட்டங்களும் சொந்தக் காரணங்களைக் கொண்டவை. இந்நாட்டின் கருத்து மாறுபாடு கொண்ட அரசியல் சக்திகள் பாரத நாட்டுப் பரம்பரையை மூடக்கருத்துக்களில்தான் காண்கின்றன; முற்போக்குச் சக்திகளும் தம் நாட்டை அவ்விதமே காண்கின்றன. நம் பண்பாட்டின் முற்போக்கான சிறப்பு அம்சங்களை இவற்றால் கண்டு உணர முடிவதில்லை. அயல் நாடுகளில்தான் இவற்றால்

முற்போக்கைக் காண முடிகிறது; அவற்றை நம் நாட்டின் சூழ் நிலையில் வற்புறுத்திச் சுமத்த விரும்புகின்றன.

மக்கள் வாழ்வு மூட நம்பிக்கைகளிலும், பிரமைகளிலும் சிக்குண்டு கிடக்கிறது. இந்நிலையில் அறிவாளிகளால் சும்மா இருக்க முடியுமா?

இன்றும் அவர்கள் முதலாளிகளின், சுயநல வாதிகளின் அட்ட காசத்தால் ஆட் கொள்ளப்பட்டு மக்களைப் பிரமையில் ஆழ்த்துவ திலேயே கை கொடுக்கப் போகிறார்களா? யாருக்குமே தம் நாட்டின் மீது அன்பு கிடையாதா? நாட்டின் எண்ணற்ற ஆக்கச் சக்திகளால் அவர்கள் பெருமிதமடைய மாட்டார்களா?

வங்கப் பஞ்சத்தில் வறுமையைச் சகித்துச் சகித்து மனிதப் பண்புகளையே மக்கள் இழந்துவிட்டனர் என்று மஹிபால் கூறுவது வழக்கம். மக்கள் தம் பெயரைக்கூட மறந்துவிட்டனர். இப் போது பாரத மக்களாகிய நம் நிலைமையும் அப்படித்தான் இருக் கிறது. நாம் பாரதவாசிகள் — என்பதையே மக்கள் மறந்துவிட்டனர். காங்கிரஸ், சோஷலிஸ்டு ஜனசங்கத்தைச் சேர்ந்தவர், கம்யூனிஸ்டு அகாலி கட்சியைச் சேர்ந்தவர் என்று தான் அவர்கள் கருதுகின்றனர்; இப்படிக் கவிஞர், கலைஞர், தலைவர், டாக்டர், பாரிஸ்டர், ஆபீசர் என்ற புகழ் சிலரிடம் இருக் கிறது. ஆனால் பெரும்பாலான மக்கள் பாரதவாசிகளில்லை—மனி தராகவாவது இருக்கிறார்களா?—இல்லை. இவர்கள் நாள் முழுதும் நாடு, மனிதாபிமானம் என்று பேசிக்கொண்டே போவார்கள்; ஆனால் தம் நாடு எது என்று தெரிந்து கொள்ளாதவர்கள். அவர் களுடைய நாடு மனிதாபிமானத்தை எவ்வளவு அழகாகப் புரிந்து கொண்டிருக்கிறது! இப்போது நாட்டில், உலகில் தனி மனிதன் தான் வாழ்கிறான், சமூகம் இல்லை போலத்தான் தோன்றுகிறது. மனிதன் தன் வரம்புக்குள் வாழ்கிறான், எண்ணுகிறான், செயல் புரிகிறான்; ஒவ்வொரு தனி மனிதனும் தனித்தனித் தீவில் வாழ்வதுபோல் வாழ்கிறான் என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது.

இது மனிதனின் இயற்கை நிலையா? இல்லை.

இன்றைய மனிதன், தான் தவறான பாதையில் சென்று கொண் டிருக்கிறான் என்று உள்ளூற உணரத்தான் செய்கிறான். தன்னை மறைத்துக்கொண்டு மனிதன் பிறருடைய போக்கைத் தவறு என்கிறான். இதனால் மனஸ்தாபம் மேலிடுகிறது. குழப்பம் அதிகரிக்கிறது. மனிதனது இந்த நிலை இயற்கைக்கு முரணானது.

மனிதனுக்குள் தன்னம்பிக்கை எழ வேண்டும்; அவனுக்கு வாழ்க்கையின்மீது ஒரு சிரத்தை உதிக்க வேண்டும். பிறருடைய சுகதுக்கங்களில் அவன் தன் சுகதுக்கங்களைக் காண வேண்டும். கருத்துக்கள் வேறுபடலாம். கருத்து மாறுபாட்டால் ஏற்படும்

போராட்டத்தில் நல்லதோர் எதிர்காலம் நிர்மாணம் பெற ஏதுவுண்டு. ஒன்றுடன் ஒன்று இணைந்து மலர்ச்சியடைய வழி பிறக்கும். பரஸ்பர சுகதுக்கங்களில் மனிதன் முறியாத தொடர்பு கொண்டிருக்க வேண்டியது அவசியம்; துளியுடன் துளி சேர்ந்திருப்பது போல அலைகளுடன் அலைகள் இணைந்திருப்பதுபோல—இவ்விதம் துளியில் கடல் அடங்கியிருக்கிறது.

சஜ்ஜனும், கன்யாவும் ஒரு விரதத்தைப் போன்று மனிதப் பண்பைத் தரிசிக்கச் செயலில் ஈடுபட்டனர். மூடப்பழக்கம் தன் அழிவிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள முதலில் கடுமையாகத் தாக்குகிறது. இன்னும் அது தாக்கிக்கொண்டேதான் இருக்கும். ஆனால் கணவனும் மனைவியும் உறுதியுடன் இருப்பர். தனி மனிதனின் சமூக உணர்ச்சி விழிப்படைந்தே தீரும்!

---